சித்தர் பெரிய ஞானக் கோவை என
வழங்கும்

# சித்தர் பாடல்கள்

பதிப்பாசிரியர்: அரு. ராமநாதன்

பாடபேதங்களைப் பரிசோதித்து, திருத்தமாக
விளக்கக் குறிப்புகளுடன்
எழுதியவர்கள்:
வித்வான். நா. தேவநாதன்
அரு. ராமநாதன்

விலை ரூ. 4-50

பிரேமா

பிரசுரம்
சென்னை—24



M. Murugasan



# பொருளடக்கம்

ம. முருகேசன்

# நட்டகல்? உம் பேசும்!

துர்காதாஸ்
எஸ். கே. ஸ்வாமி



நட்டகல்லைத் தெய்வமென்று
நாலுபுஷ்பம் சாற்றியே
சுற்றிவந்து மொண மொணென்று
சொல்லும் மந்திரம் ஏதடா
நட்டகல்லும்? பேசுமோ?
நாதன் உள்ளிருக்கையில்
சுட்ட சட்டி சட்டுவம்
கறிச்சுவை அறியுமோ?

நட்ட கல்லைத் தெய்வம் என்று நம்பி, அந்தக் கல்லின் மேல் மலர்களைத் தூவி, அந்தக் கல்லையே சுற்றிச் சுற்றி வலம் வந்து 'அதன் முன்னே நின்று' அதை நோக்கி, வணங்கி, நாவினால் அதற்குரிய மந்திரங்களை மொண மொணத்துப் பூஜிக்கின்ற தொழுகை முறையானது நமது பாரத நாட்டில்— குறிப்பாகத் தமிழ் நாட்டில் தொன்று தொட்டுக் கடைபிடிக்கப் பட்டு, இன்றும் பக்தகோடிகள் யாவராலும் தொடர்ந்து செய்யப் பட்டு வரும் தெய்வ வழிபாடாகும்.

உயிருள்ள பொருள் எதுவாயினும் அதன் சக்தியை ஜடமான எந்தப் பொருளிலும் மந்திர பூர்வமாக ஆவாஹனம் செய்யும் முறை, இந்திய நாட்டின் தொன்மையான வேதாகம முறையாகும். உதாரணமாக வழி பாட்டுக்கு உரிய தெய்வத்தின் சக்தியைக் குடங்களிலும் கலசங்களிலும் மந்திரப் பூர்வமாக ஆவாஹனம் செய்வதை இன்றும் காண்கிறோம். இத்தகைய முறை, வேதத் தொடர்புடையது. மனிதனின் வைராக்ய திடசித்த, மனோதிட்ப வலிமையை ஆதாரமாகக் கொண்டது. இதன் அடிப்படையில் தான் ஹிந்து மதத்தில், விக்கிரக ஆராதனை சம்பிரதாயமாகியது.

கடைத்தெருவிலும் பொருட்காட்சிச் சாலையிலும் காணப்படும் பொம்மை, கடவுளின் பொம்மையாக, கல், மரம், உலோகம் ஆகிய எந்தப் பொருளில் எத்தகைய அழகோடும் ஆற்றலோடும் செய்யப்பட்டிருந்தாலும் அது கால் விநாடிகூட நம் கவனத்தைக் கவர்வதில்லை. ஆனால்

திருக் கோயில்களில் மூல விக்கிரகமாகவுள்ள கற்சிலையோ அல்லது கல்லோ அது எத்தகைய அகோரமாக இருந்தாலும் அது நமது கவனத்தை மணக் கணக்கில் கவர்ந்து பகுத்தறிவையும் மனத்தையும் மெய்சிலிர்க்க வைத்து மெய்மறக்கச் செய்து விடுகிறது. அதற்குக் காரணம் என்ன? அது மந்திர பூர்வமாகப் பிரதிஷ்டை செய்யப்பட்டிருப்பதேயாகும்.

வேதகாலத்தில் விஷ்ணுவையே பரமாத்மாவாக உபதேசித்த விகனச என்ற அருந்தவ முனிவர் விஷ்ணுவையே சிலாவடிவில் மந்திர பூர்வமா பிரதிஷ்டை செய்வதற்கும் ஆராதனை செய்வதற்கும் வழிவகுத்தார். இத் கைய முறை வைகானச முறை என்று வழங்கப்படுகிறது.

''நான் கடவுளா? நீ கடவுளா?'' என்ற சர்ச்சையில் இறங்கிய பிர னுக்கும் விஷ்ணுவுக்கும் சிவசக்தியின் முக்கியத்துவத்தை உணர்த்துவத காக, ஜோதிலிங்கமாக பிரசன்னமாகிய சிவபெருமான், தனக்கு அவர்க செய்ய வேண்டிய பூஜையைத் தனது ரூபமான சிவலிங்கத்திற்குச் செய் வேண்டும், என்று கற்பித்தருளினர் என்ற வரலாற்றைச் சிவ மஹ புராணம் என்ற நூலிலிருந்து அறியப் பெறுகிறோம்.

கல்லைத் தெய்வமென்று கருதி வழிபடுகின்ற 'கல்வணக்கம்', உலகத்தில் பலநாடுகளிலும் தொன்று தொட்டு நடைபெற்று வருகிறது. கடவுள் என்றால் என்ன? சிவன் என்பதற்குப் பொருள் என்ன? விஷ்ணு என் சொல்லுக்குப் பொருள் என்ன?

மனிதனின் பகுத்தறிவுச் சிந்தனைக்கு எட்டாததாகவும் அறிவையு அன்பையும் கடந்ததாகவும் எதனுள்ளும் அடங்குகிறதாகவும் உள்ள பர பிரமமே 'கடவுள்' என்று தமிழில் வழங்கப்படுகிறது. சத்தியம், சிவம் சுந்தரம் அதாவது உண்மை, அன்பு, அழகு ஆகிய மூன்றும் நிறைந் தத்துவப் பரம்பொருளே சிவம். எங்கும் வியாபகமாக எதிலும் நிறை துள்ள சர்வ வியாபகனே விஷ்ணு என்பதன் பொருள்.

சிவனைப் பூஜிக்க சிவலிங்கமும், விஷ்ணுவைப் பூஜிக்கச் சாளிக்கிராமமு பக்தர்களால் பயன் படுத்தப்படுகின்றன.

எல்லைக்கல், மைல் கல், வீரக்கல், சதிக்கல், பத்தினிக்கல், காணிக் கல் ஆட்சி எல்லைக் கல் இப்படியெல்லாம் கல்லை நட்டு, நட்ட கல்லைக் கொண் விஷயத்தை விளக்கும் முறை நெடுங்காலமாகப் பழக்கத்தில் இருந் வருகிறது.

மேலும், செங்கல், கருங்கல், மாணிக்கக் கல், வைரக்கல், கண்ணடி கல், ஸ்படிகக்கல், சாணைக்கல், சலவைக்கல், காந்தக்கல், அம்மிக்கல் ஆட்டுக்கல், குழைவிக்கல், மலைக்கல், மணற்கல் இப்படி எத்தனையோ வகை வகையான கல், அதனதன் உறுதி, நிறம், குணம், பயன்படும் தன்மை, ஒலி ஒளி அழுத்தம் ஆகியவைகளுக்கு ஏற்ப ... பட்டு ... அறியாதவர்களல்லர்.

அந்தந்த ரகக்கல்லை, அதனதன் தகுதிக்கு ஏற்றக் காரியங்களுக்குப் பயன்படுத்தும் விதிப்படித்தான் தெய்வம் என்ற தத்துவத்தின் உண்மையை நிலைநாட்டவும் அந்தத் தெய்வத்தை வணங்குவதற்கும் உரிய, தகுதி வாய்ந்ததொரு கல்லைத்தான், தெய்வ வழிபாட்டுக்கு உரியதாக்கியுள்ளனர்—நம் முன்னோர்கள். கற்களின் தன்மைகளை நன்றாக ஆராய்ந்தறிந்த கற் சிற்பிகளும் தெய்வத்தன்மையை நன்றாக ஆய்ந்தறிந்த தெய்வீகச் சிந்தனையாளர்களும்தான் தெய்வமென்று ஒரு கல்லை ஓரிடத்தில் நடுகின்றனர். அத்தகையக் கல்லை நாற்புறச் சுவர் எல்லையை நிர்ணயித்து அமைத்து, அதன் நடுமய்யமான இடத்தில் நடுக்கல்லாக வைத்துப் பிரதிஷ்டை செய்வதால் அந்தக்கல் நடுங்கல்லாகி, நட்டகல் என்ற பட்டப் பெயரை நாளடைவில், நாடெங்கும் பெற்றுவிடுகிறது.

தேவாலயங்களில்தான் 'தெய்வம் என்று நட்ட கல்லை'க் காண முடியும்.

ஆலயம் என்றதும் அது பக்திக்குப் பிரதானமாகி, அந்தப் பக்திக்கு ஐம்புலனடக்கம் தேவை என்பதால்தான் நாற்புறமும் மேற்புறமும் சுவர் எழுப்பி, அந்தச் சுவர் சூழ்ந்த எல்லைக் குட்பட்ட இடத்தின் நடுமய்யத்தில் உச்சிக் கலசத்திற்கு நேர் மய்யத்தில், மனம் ஈர்க்கப்பட்ட மூலஸ்தானத்தை வகுத்து. அந்த இடத்தில் பள்ளம் வெட்டி, அந்தப் பள்ளத்தில் யந்திரச் சக்கரத் தகடுகளை வைரம், வெள்ளி, பொன் முதலிய மதிப்பு மிக்க பொருள்களைப் போட்டுக் கெட்டிக்கச் செய்து. அதற்குப் பிறகே பூஜைக்குரிய நடுக் கல்லைத் தெய்வம் என்று மந்திரப் பூர்வமாக நட்டு, அதனை, மூலிகை மருந்துகளால் கெட்டித்து மந்திர ஜபங்களை ஜெபித்தும் உச்சரித்தும் நடுகிறார்கள். மாலைகளையும் மலர்களையும் சூட்டுகிறார்கள். இவ்விதமான உலோக சக்தி, மனோ சக்தி, மந்திர சக்தி, யந்திர சக்தி, ஆன்ம சக்தி ஆகியப் பலவகைச் சக்திகள் இயைவதால் அவ்விதமாகத் தெய்வமென்று நட்ட கல், ஈர்ப்புச் சக்தியும் உயிர்ப்புச் சக்தியும் கவர்ச்சிச் சக்தியும் பெற்றுவிடுகிறது. எனவே அந்த 'நட்ட கல்லையே' தெய்வமென்று மக்கள் வழிபடுகிறார்கள்.

தெய்வம் என்ற கருத்தை மக்கள் உள்ளத்தில் நிலைநாட்ட, கல்லைத் தானா நடவேண்டும்? என்ற கேள்வி எழலாம். உலகப் படைப்பில் முதலாவதாகப் பூமியிலே தோன்றியது—கல். அதுவே உலகப்படைப்பின் ஆதி முதல் அறிகுறிப் பொருள் கல்தோன்றிய பிறகுதான் மண் தோன்றியது கல்தோன்றி, மண்தோன்றாக் காலத்திலேயே தமிழ்மொழியும் தமிழனும் தோன்றி விட்டான் என்பது தமிழ்ப்புலவர் கருத்து! எனவே, கல் தோன்றி, மண்தோன்றாக் காலத்து முன்தோன்றிய மூத்த குடியினராகத் தமிழர்கள் கருதப்படுகின்றனர். மேலும் இயற்கைக் காட்சிகள் எல்லாவற்றையும் விட உயர்ந்த மலைகளின் காட்சியே கண்ணுக்கும் கருத்துக்கும் விருந்தளிக்கும் இனிய காட்சியாக இருக்கும். மேலும் மலையின் காட்சியே இயற்கைக் காட்சிகளில் கம்பீரமானது. மலையே உயர்ந்தது. அதுவே அசைக்க முடியாத பேருருவம் கொண்டது. பூமியில் வாழும் பயிர்களுக்கும், உயிர்களுக்கும் ஆதாரமான மழையைப் பெய்விப்பதும் மலையே ஆகும். எனவே மலையின் ஒரு மிகச்சிறிய பகுதியே—கல்! அதுவே மலையையும் இயற்கையையும் இறைவனையும் நினைவுபடுத்தும்—மலைப்பிஞ்சு!

மந்திர சக்தியோடு நட்ட கல், அதன் அடியில் கெட்டிக்கப்பட்ட மூலக் குப்பொருள்களின் அணுத்துகள் சக்திகளை நாளடைவில் ஈர்த்துக்

கொண்டு, சொல்லப்படும் மந்திர ஒலிகளைத் தாங்கித் தாங்கி, ஒலிதாங் யாக மாறி, ஆரம்பத்தில் பேசப்பட்டதை எதிரொலித்து பிறகு அ நட்ட கல்லே பேசும் சக்தியையும் பெற்றுவிடுகிறது என்பதை மே சொன்ன சித்தர் பாடலால் புரிந்து கொள்ளலாம்.

நட்டகல்லைத் தெய்வம் என்று நாலு புஷ்பம் சாற்றியே சுற்றி வ மொண மொணென்று சொல்லும் மந்திரம் ஏதடா? என்கிறார். ஏது அடா—ஏதடா, என்றுதலால், நட்ட கல்லைப் பேச வைக்க, மொண மொ வென்பது போலச் சொல்லும் மந்திரமானது ஏது—ஹேது என்கிறு அதாவது மார்க்கம், வழி என்கிறார்.

அதே சித்தர் 'நட்ட கல்லும் பேசுமோ நாதன் உள் இருக்கையி என்கிறார். இதிலிருந்து நாதன் என்பது ஒலிமயமானது அந்தக் கல் லுள்ளேயே இருப்பதால் அந்தக் கல் பேச, அல்லது அந்தக் கல்லைப் பே வைக்க மந்திரமும் வழியாகும் மார்க்கம் என்கிறார் சித்தர். அப்படியானு ''நட்ட கல்லும் பேசுமோ?'' என்று கேட்கிறாரே! என்றால் ''அவர் நட் கல் பேசுமோ?'' என்று கேட்கவில்லை. ''நட்ட கல்லும் பேசுமோ?'' என் தான் கேட்கிறார் அதுவும், நட்டகல்லும் பேசுமோ நாதன் உள் இரு கையில் என்கிறார். அந்தக் கல்லின் உள்ளே நாதன் இருப்பதால் அ எழுச்சிபெறச் செய்யாதவரை, நட்ட கல் பேசாது. இதிலே ஒரு பெரி இரகசியம் அடங்கியுள்ளது. கல்லுக்குள்ளே கடவுள் இருக்க முடியுமா அதுபோல 'நாதன்' என்ற 'ஒலிமயம்' கல்லுக்குள் இருக்கும்போது தெய்வமென்று நட்ட கல்லும் பேசுமோ என்று கேட்டு, அதற்குரியச் ச யான பதிலில் கடவுள் கல்லினுள்ளும் இருப்பதையே வலியுறுத்துகிறார்.

மந்திரங்களைச் சொல்லும்போது, தெய்வமென்று நட்ட கல்லின் மீ அந்த மந்திர ஒலிகள் மோதி, அதன் உள்ளே சப்தபிரமம் ஆகிய நாத அடங்கிக் கிடக்கும் நிலையில் அந்தக் கல் பேசுமோ, பேசாது, ஆகவே அ தக் கல்லுக்குச் செய்ய வேண்டிய சகல பூஜைகளையும் முறைப்படி செ தால் அதன் உள்ளே அடங்கிக் கிடக்கும் நாத சக்தியை எழுச்சிபெற செய்யும்போது, அந்த நட்ட கல் பேசுங்கல்லாக மாறிவிடும்! இன்றை விஞ்ஞானத்திலுங் கூட டிரான்ஸிஸ்டர் என்ற வானொலிப் பெட்டியி பேசுவதும் பாடுவதும் கிறிஸ்டல் ஸ்டோன் என்ற ஒருவகைக் கல்லேயாகும் அந்தக் கல்லானது ஒரு குறிப்பிட்ட எல்லைக் நட்டபட்ட பகுதியில் எங்காவ ஒலிபரப்பப்படும் நாதத்தை தன்னிடம் தேக்கிவைத்து, அதனுள்மே மின்னல்களைப் பாய்ச்சும்போது நாம் விரும்பிய இடத்தில் எங்கோ ஒ பரப்பப்பட்ட நாதத்தை அந்தக் கல் மீண்டும் பிரதிபலிக்கிறதல்லவா அதைப் போலத்தான் தெய்வத்தைத் தேடிய ஆதி மனிதன், தெய்வ என்ற நம்பிக்கையோடு ஒரு குறிப்பிட்ட தகுதி வாய்ந்த கல் [மெலோனைட்] நட்டான். அத்தகைய தெய்வீகக் கல்லின் அருகே மந்திர களைச் சொல்லச் சொல்ல, அந்தக் கல் நாத ஒலிகளைச் சேர்த்து, மந்தி சக்தியாலும் மனோ சக்தியாலும் உந்தப்படும்போது பேசுங்கல்லாகி வி கிறது! உதாரணம்—சேலம் பொய்மான் கரடில் ஒரு பாறை நாம் பேசு இரகசியத்தை நம்மிடமே பேசுவதாக அமைந்துள்ளது. இதற்கு தெய் மென்று நடப்படும் கல், நாதம் உடைய கல்லாக இருப்பது அவசிய மென்றால் கிறிஸ்டல் ஸ்டோன் என்ற வானொலிப் பெட்டியில் வால்வுகளோ டயோடுகளோ, கருங்கல்லோ பயன்படுவதில்லை. சுருமாக்கல் என்ற இறி

டலே பயன்படுகிறது. ஆகவே தெய்வமாகப் பேச வேண்டிய கல்லானது. அதனுள்ளே நாதமுடைய கல்லாக நடப்பட வேண்டும் என்பது சித்தரான சிவவாக்கியரின் கருத்து. எனவே அவரே பாடியுள்ள வேறொரு பாடலில்.

ஓசைப்படுங் கல்லை உடைத்து இரண்டாய்ச் செய்துமே
ஒன்றை வாசற்படியில் மழுங்க மிதிக்கிறீர்
பூசைக்குரிய கல்லை பூவும் நீரும் சாற்றுறீர்
ஈசனுக்கு உரிய கல் எந்தக்கல் சொல்லுமே?

என்று பாடியுள்ளார். ஒரே பாறை; ஆனால் அந்தப் பாறை ஓசைப்படும் கல்லாக இருக்க வேண்டும். அதை இரண்டாக உடைத்து ஒன்றை வாசற்படியாக்கி மற்றொன்றை பூஜைக்குரிய கல்லாக்கிப் பூவும் நீரும் சாற்றி தெய்வமாக வழிபடுகிறோம் — இதில் ஈசனுக்குரிய கல் எந்தக் கல் சொல்! என்று கேட்டு, நம்மைக் கொண்டே பதிலைச் சொல்ல வைத்து, உண்மையை நமது திறனாய்வுக்குத் தக்கவாறு தெளிவுபடுத்துகிறார் — சித்தர்.

ஓசைப்படுகின்ற கல்லில் ஓசைப்படும் பகுதியான நாதம் உள்ளிருக்கும் பகுதியான பாகத்தை உளியால் தட்டி உடைத்து விட்டால், அதுவே பேசும் கல்! அதுவே ஓசைப்படுங்கல்! அந்தக் கல் பூசைக்குரிய கல்லாகவும் ஈசனுக்கு உரிய கல்லாகிவிடுகிறது. மற்றொன்று ஓசையில்லாத கல்! வாசற்படியாகச் சேற்றையும் சகதியையும் மூடி மறைக்கும் கல்லாகி விடுகிறது. எனவே ஓசைப்படும் கல்லே, பூஜைக்குரிய கல்! அதுவே ஈசனுக்கு உரிய கல், என்றாகி விடுகிறது.

எனவே ஓசைப்படுங் கல், அதன் உள்ளே நாதமயம் இருப்பதாலேயே, தெய்வமாக வணங்குவதற்கு உரியதொரு கல்லாக, மலர் சாற்றி, மறை கூறி அர்ச்சிக்கப் பயன்படுகிறது. மந்திரச் சக்தியாலும் மனோ சக்தியாலும் ஆன்மச் சக்தியாலும் தெய்வமென்று நட்ட கல் உந்தப்படும்போது அது பேசுங்கல்லாகப் பிரதிபலிக்கும். இதனைத்தான் பதினெண் சித்தரில் ஒருவராகிய சிவவாக்கியர், நடைமுறையில் இருந்து வரும் சாதாரணமான உதாரணத்தைக் கொண்டு விளக்குகிறார். அதாவது காய்ந்துபோன களி மண்ணில் தண்ணீர் விட்டுப் பிசைந்து, அந்தப் பச்சைக் களிமண்ணைக் கொண்டு. குயவன் ஒருவன் பானைகளைச் செய்கிறான். அந்தப் பானை, களியோ, குழம்போ செய்ய உதவும் சட்டியின் உருவத்தோடு இருந்தாலும் சமையல் செய்யப் பயன்படாது. எனவே அந்தப் பானையை, அந்தக் குயவன், சூளை போட்டுச் சுடுகிறான். சுட்ட பிறகு அது சட்டியாகிறது. இப்படிச் சுடப்பட்ட சுட்ட சட்டியில் காய்கறிகள் சமைக்கப்படுகின்றன. தன் மீது பட்ட எதையும் உறிஞ்சிக் கொள்ளும் இயல்பானது. இயற்கையிலேயே அந்த மட்பாண்டத்தில் இருப்பதால், அத்தகைய சுட்ட சட்டியில் எந்தக் கறியைச் சமைத்தாலும், அந்தக் கறியின் சுவையையும் சாரத்தையும் காற்றையும் அந்தச் சுட்ட சட்டி உறிஞ்சிக் கொள்கிறது. ஏனென்றால் சட்டியிலே கண்ணுக்குப் புலனாகாத மிகவும் நுண்ணிய துவாரங்கள் உள்ளன. எனவே, கறி சமைத்த சட்டியை உடைத்து அதில் ஒரு 'சில்லை' வாயிலிட்டுச் சுவைத்தால், அந்தக் கறி சமைத்த சட்டி, அதில் செய்யப் பட்ட கறியின் சாற்றை உறிஞ்சியதால், அந்தக் கறியின் சுவையை நாம் அறிந்து இந்தச் சட்டியில் இந்தக் கறிதான் சமைக்கப்பட்டுள்ளது என்று

சொல்ல முடிவதைப் போல, சட்டுவம் அந்தக் கறியை ஊறுவதால், அதில் ஒட்டிய கறிச்சாறும் அதன் மணமும் கறியை அறிவிக்கவல்லது போல, மந்திர நாத ஒலிகளைத் தாங்கியுள்ள நட்ட கல்லும் மந்திர சக்தியால் உந்தப்படும்போது, பேசும் என்பதைச் சிவ வாக்கியரே சொல்லுகிறார்!

நட்ட கல்லைப் பேச வைக்க. நம்மிடம் இருக்க வேண்டிய, பக்தியும் சிரத்தையும், சக்தியும் புத்தியும், ஞானமும் அனுபவமும், ஒழுக்கமும் உயர்வான எண்ணமும் சிந்தனையாற்றலும் தியானமும் தெய்வத்தின் திருவருளும் பரிபூரணமாக நமக்கு இருக்குமானால் நட்ட கல்? உம் பேசும்! நிச்சயம் பேசும் என்பது திண்ணம்!

—'அமுத சுரபி'யில் வெளியான
ஒரு கட்டுரையின் சுருக்கம்







பிக்ஷாடனர்



தேவி மானஸபூஜைக்கு
பார்வதி, லக்ஷ்மி,
சரஸ்வதி பாவனை



பிராணயாமம்



தியான யோகத்திற்கு
அக்னிஹோத்ர சமாதி பூஜை



பிரத்தியாஹார,
தாரணம்

# பதினெண் சித்தர்

## துதிப் பாடல்



நந்தி அகத்தியர், மூலர், புண்ணாக்கீசர்
நற்றவத்துப் புலத்தியரும், பூனைக்கண்ணர்
நந்திடைக்காடரும், போகர், புலிக்கையீசர்,
கருவூரார், கொங்கணவர், காலாஞ்சி.
சிந்தி எழுகண்ணர், அகப்பேயர் பாம்பாட்டி
தேரையரும் குதம்பையரும் சட்டை நாதர்
செந்தமிழ் சேர் சித்தர் பதினெண்மர் பாதம்
சிந்தையுன்னிச் சிரத்தணியாய்ச்
சேர்த்தி வாழ்வாம்.



# சித்தர்கள் மரபு முதலியன

| பெயர் | மரபு | அடக்கம் பெற்றத் தலம் |
|---|---|---|
| அகத்தியர் | வேளாளர் | அனந்த சயனம் |
| அகப்பேய் | வேளாளர் | அழகர் மலை |
| அழுகண்ணர் | சீனத்து ஆசாரி | அழகர் மலை |
| இடைக்காடர் | இடையர் | திருவண்ணாமலை |
| கமலமுனி | உவச்சர் | திருவாரூர் |
| கருவூரார் | கன்னரர் | கருவூர் |
| காளாங்கிநாதர் | சீனத்து ஆசாரி | காஞ்சிபுரம் |
| குதம்பை | இடையர் | மாயூரம் |
| கொங்கணவர் | கன்னட இடையர் | திருப்பதி |
| கோரக்கர் | கள்ளர் | பேரூர் [கோவை] |
| சட்டநாதர் | சிங்களவர் | திருவரங்கம் |
| சுந்தரானந்தர் | வேளாளர் | மதுரை |
| தன்வந்திரி | குருக்கள் | வைத்தீஸ்வரர் கோயில் |
| திருமூலர் | வேளாளர் | தில்லை [சிதம்பரம்] |
| தேரையர் | பிராமணர் | பொதிகைமலை |
| நந்தி | பிராமணர் | காசி |
| பதஞ்சலியார் | கள்ளர் | ராமேஸ்வரம் |
| பாம்பாட்டி | கோஸாயி | விருத்தாசலம் |
| புண்ணாக்கீசர் | கன்னட இடையர் | நாங்குனேரி |
| புலஸ்தியர் | சிங்களவர் | யாழ்ப்பாணம் |
| பூனைக்கண்ணர் | எகிப்தியர் | எகிப்து |
| போகர் | சீனதேசக் குயவர் | பழனி |
| மச்சமுனி | செம்படவர் | திருப்பரங்குன்றம் |
| வாமதேவர் | ஓதுவார் | அழகர் மலை |
| வான்மீகர் | வேடர் | எட்டிக்குடி |

உ

சிவமயம்



# சித்தர்களைப் பற்றி சில குறிப்புகள்

## அரு. ராமநாதன்



நந்த வனத்தில் ஓர் ஆண்டி-அவன்
நாலாறு மாதமாய்க் குயவனை வேண்டி

கொண்டு வந்தான் ஒரு தோண்டி-மெத்தக்
கூத்தாடிக் கூத்தாடி போட்டுடைத்தாண்டி

இந்தப் பாடலை இயற்றியவர் யார் என்பது தெரியாமலே பலர் பாடி மகிழ்கிறார்கள்; பலர் கேட்டுச் சிரிக்கிறார்கள். ஆனால் இது கடுவளிச் சித்தரின் பாடல் என்பதோ, சிந்தனைக்கு இடியுரை என்பதோ சிலருக்குத்தான் தெரியும். குயவனாக உவமிக்கப்படும் பிரமனிடம் ஜீவன் என்னும் ஓர் ஆண்டி பத்து மாதமாக வேண்டிக் கருப்பையிலிருந்து உடல் என்னும் தோண்டியைக் கொண்டு வந்து, உலகத்தில் பலவாறாகவும் கூத்தாடிக் கூத்தாடிக் கடைசியில் அந்த உடல் தோண்டியைப் போட்டுடைக்கிறான் என்கிற மாபெரும் தத்துவம் இந்தச் சிறு பாடலில் உள்ளடங்கியிருக்கிறது.

நட்ட கல்லைத் தெய்வம் என்று நாலுபுட்பம் சாத்தியே
சுற்றி வந்து முணமுண என்று சொல்லு மந்திரம் ஏதடா!
நட்டகல்லும் பேசுமோ நாதன் உள்ளிருக்கையில்
சுட்டசட்டி சட்டுவம் கறிச்சுவை அறியுமோ?

இந்தப் பாடலை தற்காலத்தில் யாரோ ஒரு பகுத்தறிவுவாதி தான் தோன்றித்தனமாகப் படைத்திருக்கிறானோ என்று நினைக்கத் தோன்றும். ஆனால் இந்தப் புரட்சிகரமான பாடலை முழங்கியவர் முற்காலத்தவரான சிவவாக்கியர் என்னும் சித்தர்! அவர் சிறந்த சிவயோகி!

இவைபோலச் சித்தர்கள் பலர் பாடிய ஆயிரக் கணக்கான பாடல்கள் தமிழ்மொழியில் பன்னெடுங்காலமாகவே தவழ்ந்து வருகின்றன.

அவற்றின் தொகுப்பு 'சித்தர் ஞானக் கோவை' எனவும் 'பதினெண் சித்தர் ஞானக் கோவை' எனவும் தனி இலக்கியமாக வழங்கி வருகின்றது.

பழம் பெரும் சித்தரின் பாடல்கள் பாமரரின் நெஞ்சங்களை உருக்கிப் படிப்பாளரின் சிந்தனைகளையும் ஊடுருவி நிற்பவை. தெருப் பிச்சைக்காரரின் வயிற்றுப் பிழைப்பிற்கும், பெரும் பணக்காரரின் ஆத்ம விழிப்பிற்கும் உரமளிப்பவை. குழந்தைகளும் பாடி மகிழத் தக்க எளிமையும், பெரியவர்கள் சிந்தித்துப் பயிலத் தக்க பொருட் திண்மையும் நிறைந்தவை.

சித்தர்கள் தங்கள் ஆத்ம சாதனைகளின் மூலம் அரும் பெரும் சித்திகள் பெற்று வீட்டுப்பேறு என்னும் அழிவற்ற அமரநிலை எய்தியவர்கள். அவர்கள் தாங்கள் கண்ட ஆத்மசுக அனுபவங்களையும், சத்திய சோதனைகளையும், யோக சாதனைகளையும், உலகியல் உண்மைகளையும், அதன் ஆசாபாசங்களையும் நேரே பாமரர்களின் நாவிலும் நெஞ்சிலும் பதியும் படி பாடல்களாக வழங்கி மறைந்திருக்கிறார்கள். அப்பாடல்களெல்லாம் மக்களின் பழகு தமிழிலே வழங்கி வந்ததால் அவ்வப்போது அவை அச்சுவாகனம் ஏறினாலும், பழைய பிரதிகளில் பாட பேதங்களும், சில பாடல்களில் பிழைகளும் பதப் பிரயோகங்களில் மாறுபாடுகளுங்கூட குடியேறியிருக்கின்றன. அப்பிழைகளைக் கூடியவரை சீர்திருத்தி பல பிரதிகளிலும் சுவடிகளிலுமுள்ள பாட பேதங்களைப் பரிசோதித்து, சித்தர் பாடல்கள் அனைத்தும் 36 நூல்களாகப் பிரிக்கப்பட்டு அவற்றின் தொகுப்பாக இந்தப் பதிப்பு தரப்பட்டுள்ளது.

தமிழகத்தில் சித்தர் பாடல்கள் ப்ரவிய அளவிற்கு அச் சித்தர்களைப் பற்றிய விவரங்களும் ஆராய்ச்சிகளும் எட்டவில்லை.

சித்தர்களைப் பற்றி 'கலைக் களஞ்சியம்' நான்காவது தொகுதியில் தமிழ்ப் பேராசிரியர் திரு தெ. பொ. மீனாட்சிசுந்தரனார். எம். ஏ. பி, எல்., எம். ஓ. எல். அவர்கள் நன்கு ஆராய்ந்து அருமையான விளக்கங்களுடன் ஒரு கட்டுரை வழங்கியிருக்கிறார்கள். அக்கட்டுரையிலிருந்து சில கருத்துக்கள்:—

"கடவுளைக் காண முயல்கின்றவர்களை பக்தர்கள் என்றும், கண்டு தெளிந்தவர்களைச் சித்தர்கள் என்றும் தேவாரம் வேறு பிரித்துக் கூறும். அனுபூதி ஞானம் பெற்றவர்களை மிஸ்ட்டிக்ஸ் (Mystics) என்ற ஆங்கிலச் சொல் குறிக்கும். சித்தர் என்ற சொல்லும் அப்பொருளில் தமிழில் வழங்கக் காண்கிறோம். சித்தர்களின் அனுபூதி அனுபவத்தில் வேற்றுமை இல்லை. அதைக் கூறும் வருணனையிலேயே வேற்றுமை உளது. ஆதலின் சித்தர்கள் எல்லாச் சமயத்திற்கும் அப்பாற்பட்ட சர்வ சமய சமரச சன்மார்க்கத்தினைப் பாடக் காண்கிறோம்...

"அணுவைப் போலச் சிறிதாதல் (அணிமா) மேருவைப் போல பெரிதாதல் (மகிமா) காற்றுப் போல் இலேசாதல் (இலகுமா) பொன் போலப் பளுவாதல் [கரிமா] எல்லாவற்றையும் ஆளுதல் (பிராப்தி) எல்லாரையும் வசப்படுத்தல் (வசித்துவம்] கூடுவிட்டுக் கூடு பாய்தல் [பிராகாமியம்], விரும்பியதனையெல்லாம் செய்து முடித்து அனுபவித்தல் [ஈசத்துவம்] என்ற எட்டுவகைப் பெரும் பேறுகளை அஷ்டமா சித்திகள்

என்பர். இந்தச் சித்திகள் கைவரப் பெற்றவரே சித்தர்கள் என்ற வழக்கமு முண்டு.

''வாசி என்ற மூச்சினை அடக்கி ஆண்டு, யோக சக்தியினால் உடலில் உள்ள மூலாதாரம், கொப்புழ்.இதயம், இரைப்பையின் நடு, கழுத்து, தலை முடி என்ற ஆறு இடங்களிலும் மனத்தை முறையாக நாட்டிக் குண்டலியை எழுப்பிப் பல பல அனுபவமும் வெற்றியும் கண்டு, அப்பால் உள்ள எல்லாம் ஆன பொருளில் நிலைத்துச் சித்தி பெறுபவரே சித்தர் என்ற வழக்கம் பரவியுள்ளது...

'இவர்கள் எல்லாம் காய சித்தி பெற்றுச் சாவை வெல்ல முயன்று வெற்றி பெறுவதே வீடென்பர். இயம நியமாதி வழியில் ஒரு சிறிதும் தவறாது வாழ்ந்து, சட உணவைக் குறைத்துக் கொண்டு, நாடிகளைத் தூய்மையாக்குவதால் உடலிலுள்ள ஒவ்வோர் உயிரணுவையும் தூய்மையாக்கிப் பின்னர் மனன வழிபாட்டால் அணுவியக்கம் முற்றி, ஒளி வடிவம் என்னும் திவ்ய வடிவம் வளர்ந்து வரும்போது, மாறிமாறி வரும் சவிகற்ப நிலையும் பின்னர் நிலையாக ஒளிரும் நிர்விகற்ப சகஜ நிலையும் தோன்ற உடலினை இவ்வாறு ஞான ஒளிமயமாக்கி, நாத தத்துவத்தோடு இணைத்துச் சாவினை வெல்வோம் என்பர் ரசேஸ்வரவாதிகளாம் நாத சித்தர்கள். இதுவே கால தகனமாகும், சடவுடலைச் சடம் நீக்கிப் படிப்படியாய்ச் சித்தாக்கு முறையில் அதனைப் பிரணவ தனுவாக்கியும், ஞான தனுவாக்கியும் பரத்தில் வாழ்வது மகேஸ்வர சித்தாகும்...

''சித்தர்கள் உடல் வருத்தி வாடி உயர்நெறி சேர்வர், ஒளி ஒன்று தோன்றி மறையும். உலகத்துன்பம் பெரிதாய்த் தோன்றும், ஒளியைப் பிரிந்த நிலை மிக மிக வாட்டும். சித்தர்களது நினைவு வலுப்பெறப் பேரின்பப் பேரொளி விட்டு விட்டன்றி முற்ற முடியத் தொடர்ந்து தோன்றும். அப்பேரின்பத்தின் முடிவாக ஆழ்ந்து ஒன்றி விடுவர். இந்த நான்கு நிலைகளையும் சித்தர் பாடல்களில் பார்க்கலாம்.

''இவர்கள் யோகப் பயிற்சியையும் மருத்துவக் கலையையும் வளர்த்து வந்திருக்கிறார்கள்...

''வட நாட்டில் 84 சித்தர்கள் இருந்ததாகச் சொல்லுகிறார்கள். இவர்கள் பயின்ற யோக மார்க்கத்தை நாத மார்க்கம் என்று கூறுவார்கள்...''

மேற்கூறிய கருத்துக்கள் சித்தர்களின் பொதுத் தன்மையை நாம் அறிந்துணர்வதற்குப் பெரிதும் உதவும்.

ஒவ்வொரு சித்தரைப் பற்றியும் நாம் தனித்தனியாக அறிந்துணர்வதற்கு அவரவரின் பாடல்களைத் தவிரப் பூரணமான வரலாறோ ஆதார பூர்வமான செய்திகளோ கிடைக்கவில்லை. எனினும் கிடைத்த விபரங்களைக் கீழே தருகிறேன்.

## பட்டினத்தார்

''மாடுண்டு கன்றுண்டு மக்களுண்டு என்று மகிழ்வதெல்லாங்
கேடுண்டு எனும்படி கேட்டு விட்டோம் இனிக் கேண்மனமே'
ஓடுண்டு கந்தையுண்டு உள்ள எழுத்து ஐந்தும் ஓதவுண்டு
தோடுண்ட கண்டனடியார் நமக்குத் துணையும் உண்டே!''

இதனைப் பாடிய பட்டினத்தார் பெருஞ் செல்வந்தராக விளங்கியவர்' இவரது வரலாறு என வழங்கி வரும் கதைகளின் சுருக்கம்;

இவர் காவிரிப்பூம் பட்டினத்தில், தன வணிகர் குலத்தில், சிவநெறிச் செல்வரான சிவநேசச் செட்டியாருக்கும் ஞானகலை ஆச்சிக்கும் திருமகனுய்ப் பிறந்து, திருவெண்காட்டு சுவேதாரண்யப் பெருமானின் திருவருளை முன்னிட்டு சுவேதாரண்யர் என்று பெயரிடப்பட்டு திருவெண்காடர் என்று எல்லோராலும் அழைக்கப்பட்டார், சிவபெருமானின் அருளினுல் குபேரனே இவ்வாறு பிறந்ததாகக் கூறுவதும் உண்டு.



இவருக்கு ஐந்து வயதானபோது தந்தையார் சிவ பதவி அடைந்தார். இவர் ஆறுவயதுப் பிள்ளையாக இருக்கும் போது சிவபெருமான் இவருடைய கனவில் தோன்றி, ''நாளைய தினம் சோமவாரமாகையால் நீ அதிகாலையில் சுவேதாரண்யர் கோவிலுக்கு வா'' என்று கூறி மறைந்தார். அவ்வாறே இவர் மறுநாள் கோவிலுக்குச் சென்றபோது, சிவபெருமானே ஞானசிரியர் வடிவம் கொண்டு வந்து இவருக்கு சிவ தீட்சை செய்வித்து ஒரு தங்க பெட்டகத்தையும் கொடுத்தார். அதனுள் கண்களை கூசச் செய்யும்படியான பிரகாசத்தோடு ஸ்படிக லிங்கமும் மரகதப் பிள்ளையாரும் இருப்பதைக் கண்டு இவர் வியப்பும் ஆனந்தக்களிப்பும் அடைந்தார். அவ்விரண்டையும் பீடத்தில் இருத்தி, ஸ்படிக லிங்கத்தில் சுவேதாரண்ய மஹேஸ்வரரை ஆவாஹனம் செய்து பூஜைகள் நடத்தினர். சிவனடியார்களுக்கு குறைவின்றி அன்னதானமிட்டு வந்தார். இத்தகைய சிவபூஜை காரியங்களினுல் இவருடைய செல்வமெல்லாம் செலவாகி விடவே, அடுத்த குரு பூஜைக்குப் பொருளின்மை கண்டு தம் தாயாரிடம் கூறி மனம் வருந்தியவராய் நித்திரையில் ஆழ்ந்தார். அப்போது சிவபெருமான் இவருடைய கனவில தோன்றி, ''நீ வருந்தாதே! உன் வீட்டில் வேண்டிய திரவியம் சேமித்து வைக்கப்பட்டிருக்கிறது!'' என்று கூறி மறைந்தார். அத்திரவியங்களைக் கொண்டு இவர் சிவநெறியுடன் அறங்கள் பல புரிந்து வரலானுர்.

இவருக்குப் பதினுறு வயதாகி மணப் பருவம் வந்தடைந்தது. சிவ சிதம்பரம் செட்டியாரின் மனைவி சிவகாமி ஆச்சி பெற்ற தவச் செல்வியான சிவகலை என்னும் குணவதியை இவர் மணந்து, இல்லறக் கடமைகளைக் குறைவின்றி இயற்றி, தம் குலத் தொழிலான வாணிபத்தில் பெரும் பொருளீட்டி, காவிரிப்பூம்பட்டினத்து தனவணிகர் அனைவருள்ளும் தலை சிறந்தவராக விளங்கி, ஊர் உலகெங்கும், 'பட்டினத்துச் செட்டியார்' என்றும் பட்டினத்தார் என்றும் கூப்பிடுமளவிற்கு உயர்ந்து விட்டார்!

பட்டினத்தாருக்கு முப்பது வயதாயிற்று. இன்னும் தமக்கு ஒரு குழந்தை பிறக்கவில்லையே என்று குறைப்பட்டு, அக்குறை தீர்க்க வேண்டுமென்று திருவிடை மருதூர் பெருமான் சந்நிதியில் விண்ணப்பித்துக் கொண்டார்.



திருவிடை மருதூரில் சிவசருமர் என்னும் ஆதிச்சைவர் சிவனடியார்களின் பூசையில் தம் செல்வமனைத்தையும் செலவிட்டு, கடைசியில் தம் மனைவியான சுசீலையின் திருமாங்கல்யத்தையும் விற்று அதனால் கிடைத்த பொருளைக் கொண்டு சிவனடியார்களுக்கு அன்னமிட்டு வரலானர். அத்தம்பதிகளின் கனவில் மருதூர் பெருமான் தோன்றி, ''நான் காருண்யாமிர்த தீர்த்தக் கரையின் கிழண்டை வில்வ விருட்சத்தினடியில் ஒரு ஆண் குழந்தையாக உருக்கொண்டிருப்பேன். நீங்கள் அக்குழந்தையை எடுத்துச் சென்று காவிரிப்பூம் பட்டினத்தில் புத்திரனில்லாக் குறையால் வாடும் பட்டினத்துச் செட்டியிடம் கொடுங்கள். அவன் அக்குழந்தையின் எடைக்குச் சமமான பொன் கொடுப்பான். அதைக் கொண்டு உங்கள் வறுமை தீர்க!'' என்று கட்டளையிட்டார்.

அவ்வாறு கிடைத்த பிள்ளைக்கு மருதபிரான் என்று பெயரிட்டு பட்டினத்தார் அருமை பெருமையாக வளர்த்து வந்தார். அந்தப்பிள்ளை வாலிபனானதும் தன் குலத்தொழிலை யொட்டி 'கடல்தாண்டித் திரவியம் தேடுவதற்காக மரக்கலம் ஏறிச்சென்று சிறிது நாளில் கப்பல் நிறைய எருமுட்டை மூட்டைகளும் தவிட்டு மூட்டைகளுமாக நிரப்பிக்கொண்டு திரும்பி வந்தான். அதனால் அவனுக்கு மூளை கலங்கி விட்டது என்று நினைத்த பட்டினத்தார் தமது பிள்ளையை வீட்டில் ஓர் அறைக்குள் இறுத்தி காவல் வைத்துவிட்டு, கடற்கரைக்குச் சென்று கப்பலிலுள்ள எரு மூட்டையைப் பார்த்து ஆத்திரப்பட்டு ஒரு விராட்டியை எடுத்து வீசியெறிந்தார். அந்த விரட்டி உடைந்து, பிரகாசமான நவரத்தின மணிகளாகச் சிதறியது. தவிட்டு மூட்டைகளிலுள்ள தவிடெல்லாம் பொன் மணலாக மாறின.

பட்டினத்தார் திகைப்படைந்தவராய் தம் வீட்டிற்கு வந்து பார்த்தார். அங்கே குமாரனைக் காணவில்லை. குமாரன் கொடுக்கச் சொன்னதாக ஒரு சிறு பெட்டியை மட்டும் பட்டினத்தாரின் மனைவியார் கொடுத்தார்.

அந்தச் சிறு பெட்டிக்குள் காதற்ற ஓர் ஊசியும் ஓர் ஓலைச் சீட்டும் இருந்தன.

அந்த ஓலைச் சீட்டில், ''காதற்ற ஊசியும் வாராது காண்கடை வழிக்கே'' என்று எழுதப்பட்டிருந்த ஒரே வாசகம் பட்டினத்தாருக்கு அறிவு நிலையை உணர்த்தி, துறவு உள்ளம் பூணச் செய்து, எல்லாச் செல்வச் சிறப்பினையும் உதறித் தள்ளி, ஒன்றிலும் பற்றற்ற துறவியாக ஞான மார்க்கத்தில் செல்ல வைத்தது!

அதன் பின்னர் பட்டினத்தார் ஊர் பொது மண்டபத்தில் ஞான நிஷ்டையில் அமர்ந்தும், பசி வந்தபோது ஊருக்குள் சென்று பிச்சை வாங்கி உண்டும், குப்பை மேட்டில் புரண்டும், தெரு மண்ணில் உருண்டும், [illegible]கை தரைப்போல் உலகத்தவரின் கண்ணில் திரியலானர். அவருடைய [illegible]டைகிற களால் அவருடைய சுற்றத்தார் தங்கள் குலகௌரவம் இழி[illegible] தடுக்க தென் நினைத்து, அவ்வூரில் யாரும் அவருக்குப் பிச்சையிடாத[illegible] கொள்ளி முற்பட்டனர். பட்டினத்தாரோ, குடியிருந்த மனைக[illegible]

வைப்போம்!'' என்று சொல்லித் திரிந்தார். அவருடைய தமக்கை அதைப் பொறுக்க முடியாமல், தன் குடும்பப் பெயரைக் கெடுக்கும் தம்பி இருப்பதைவிடச் செத்து விடுவதே மேலென்று தீர்மானித்து, நஞ்சு கலந்த ஓட்டப்பமொன்றைச் சமைத்து அவருண்ணக் கொடுத்தாள். அதைப் பட்டினத்தார் திருவருளால் அறிந்து, ''தன் வினை தன்னைச் சுடும்! ஓட்டப்பம் வீட்டைச் சுடும்!'' என்று கூறி அந்த அப்பத்தைத் தம் தமக்கையின் வீட்டுக் கூரையில் சொருகினர். உடனே அவ்வீட்டில் தீப்பற்றி உயிர்ச் சேதம் ஏதுமின்றி ஊர் முழுவதையும் சுட்டெரித்தது.

அதன் பின்னர் பட்டினத்தார் துறவியாக அலைந்து திரிந்து கொண்டிருந்த நாட்களில் அவருடைய தாயார் இறந்த செய்தி கேட்டு, தாயாருக்கு ஈமக்கடன் செய்ய வருவதாகக் கொடுத்த வாக்கைக் காப்பதற்கு மயானக் கரைக்கு விரைந்தார். அங்கு சுற்றத்தார் அடுக்கியிருந்த சிதையைத் தள்ளிவிட்டு, பச்சை வாழை இலைகளைக் கொண்டே சிதையடுக்கி, ''ஐயிரண்டு திங்களாயங்கமெலா நொந்து பெற்று'' என்று இவர் பாடத் தொடங்கி, தம் தாயாரை தீயுண்ணச் செய்து தம் தாய்க்குரிய கடனைக் கழித்தார்.

பின்னர் இவர் ஸ்தல யாத்திரை புறப்பட்டு சிவபெருமானின் திருப்பதிகள் தோறும் சென்று பாடல்கள் இயற்றினர்.

ஒரு சமயம் இவர் உஞ்சேனை மாகாளபுரத்திற்குச் சென்று மாகாளேசுவரை வணங்கி விட்டு, ஊர்ப்புறத்திலுள்ள காட்டுப் பிள்ளையார் கோயிலை அடைந்து அங்கு ஞான நிஷ்டையில் அமர்ந்திருந்தார். அப்போது அந்நாட்டின் அதிபதியான பத்திரகிரி ராஜரின் அரண்மனையில் கள்வர் சிலர் கொள்ளையிட்டுத் திரும்பி வரும் வழியில், அவர்களில் ஒருவன் திருட்டுப் பொருள்களில் பிள்ளையாருக்குக் காணிக்கையாக முத்தாரமொன்றை வீசி விட்டு ஓடினன். அந்த முத்தாரம் பட்டினத்தாரின் கழுத்தில் போய் விழுந்து கிடந்தது. அதை அரண்மனைச் சேவகர்கள் வந்து பார்த்து இவரைக் கள்வர் கூட்டத்தைச் சேர்ந்தவர் என்றெண்ணிப் பிடித்துச் சென்றனர். பத்திரகிரி மன்னர் கொதித்தெழுந்து, ''உடனே கள்வனைக் கழுவேற்றுக'' என்று கட்டளையிட்டார். பட்டினத்தடிகளோ கழுமரத்தை ஏறிட்டு நோக்கி, ''என் செயலாவதியா தொன்றுமில்லை. இனித் தெய்வமே உன் செயலே யென்று உணரப்பெற்றேன்'' என்று தொடங்கும் பதிகத்தைப் பாடவே கழுமரம் தீப்பிடித்து எரிந்தது.

அதைக் கண்டு வியந்த பத்திரகிரி மன்னர், தவத்தின் சக்தியை உணர்ந்து, தம் மணிமுடி அரச போகங்களை யெல்லாம் உதறித் தள்ளி, துறவு பூண்டு, பட்டினத்தாரையே தம் ஞான குருவாகக் கொண்டு அவருடைய கட்டளைப்படி திருவிடைமருதூருக்குச் சென்று சட்டியில் பிச்சை வாங்கித் தம் குருவிற்கும் உண்பித்து சேடத்தை தாம் உண்டு சிவயோகம் எய்தி இருந்து வரலானர்.

ஒரு நாள் பத்திரகிரியார் வழக்கம்போல மேற்குக் கோபுர வாசலில் வீற்றிருந்து பிச்சைச் சட்டியில் தம் குரு உண்டு மிகுந்த சேடப் பிரசாதத்தைச் சாப்பிடும்போது ஒரு பெட்டை நாய்க்குட்டி வாலைக் குழைத்துக் கொண்டு வந்து தன் முகத்தைக் காட்டி நின்றது. அது அன்பு இரங்கிய பத்திரகிரியார் அந்நாய்க்கும் சிறிது பிரசாதமிடவே, அது வரலாயிற்று முதலாக அவரை விட்டுப் பிரியாமல் நிழல் போல் அவருடன் இருந்து



அந்நாட்களில் சிவபெருமான் ஒரு சித்தரைப் போல் வேடமெடுத்து, கிழக்குக் கோபுர வாசலில் வீற்றிருக்கும் பட்டினத்தாரிடம் சென்று, ''ஐயா! என் பசிக்கு அன்னமிடுவீரோ?'' என்று கேட்டார். பட்டினத்தாரோ தம் சீடரான பத்திரகிரியார் ஒரு சட்டியும் நாயும் வைத்துக் கொண்டிருப்பதை நினைத்து, ''நானே கோவணம் தாங்குவதையே பாரமாகக் கொள்ளும் சந்நியாசி; அதனால் மேற்கு கோபுர வாசலில் சோற்றுச் சட்டியும் ஒரு நாயும் வைத்துக் கொண்டு உட்கார்ந்திருக்கிறான் ஒரு சம்சாரி; அவனிடம் போய்க் கேளுங்கள்!'' என்றார்.

இவ்வார்த்தைகளை சித்தர் வேடர் மூலம் கேள்வியுற்ற பத்திரகிரியார் தம் குருவின் கருத்திலுள்ள குறிப்பையுணர்ந்து, ''ஆகா! சந்நியாசியான என்னை இந்தச் சோற்றுச் சட்டியும் நாய்க்குட்டியுமோ சமுசாரியாக்கி உலகப் பந்தத்தில் அழுத்துகின்றன?'' என்று சினந்தெழுந்து சோற்றுச் சட்டியை வீசியெறிந்தார். அந்தச் சட்டி நாயின் தலை மீது பட்டதால் நாய் செத்து விழுந்து, ஞானிகள் உண்ட மிச்சலை உட்கொண்ட தன் மகிமையால் காசி ராஜனுக்கு மகளாய் பிறந்தது.

பத்திரகிரியார் பற்றனைத்தையும் துறந்ததும், மெய்ஞ்ஞானப் புலம்பல் முதலான தமிழ் கண்ணிகள் பாடியும், சிவயோகம் எய்தியும் சமாதி நிஷ்டைகளில் ஆழ்ந்துமிருந்தனர்.

காசி ராஜனுக்குப் பெண்ணாகப் பிறந்த நாய் அருமையாக வளர்ந்து அழகான கன்னிப் பருவமடைந்ததும், காசிராஜன் தன் செல்விக்குத் திருமணம் பேசப் புரோகிதர்களை வரவழைத்தான். அதையறிந்த அந்தக் கன்னிகை திடுக்கிட்டு, ''நான் எந்த மணாளனுக்கும் உரியவளல்ல! தட்சிண தேசத்திலே திருவிடைமருதூரில் மேற்கு கோபுர வாசலில் என் குருநாதர் வீற்றிருக்கிறார். அவரிடம் என்னைக் கொண்டுபோய் ஒப்படையுங்கள்'' என்று கூறி பத்திரகிரியாரிடம் வந்து சேர்ந்து ''என் குருபெருமானே! அடி நாய் மீண்டும் தங்கள் திருவடியை நாடி வந்திருக்கிறது!'' என்றாள்.

அவளைப் பத்திரகிரியார் பட்டினத்தாரிடம் அழைத்துச் சென்று ''என் குருவே! உம் மிச்சலை உண்ட இந்நாய்க்கு இப்பிறவி நோய் வரலாமா?'' என்று விண்ணப்பமிட்டார். பட்டினத்தார், ''அவன் செயலன்றி யாவதொன்றில்லை'' என்று அருள் கூர்ந்து திருவருளை நாடினார். உடனே ஒரு பெருஞ் சோதி தோன்றி, அதில் அப்பெண்ணுடன் பத்திரகிரியார் கலந்து மறைந்து அவ்விருவரும் முக்தி பெற்றனர்.

அப் பெருஞ்சோதி மறைந்ததும் பட்டினத்தார், ''என்னையும் என்னிறைவன் இன்னும் எடுத்தாட் கொள்ளவில்லையே!'' என்று மனங் கலங்கினார். சிவபெருமான் அவர் மனதில் தோன்றி, ''வருந்தாதே! நீ தலங்கள் பல சென்று திருவொற்றியூருக்கு வந்து சேர்ந்த சில நாட்களுக்குள் நீ எம்மை வந்தடைவாய்!'' என்று அருள் சுரந்தார்.

பட்டினத்தார் அவ்வாணையை மேற்கொண்டு உடனே புறப்பட்டு திருவெண்காடு, சீர்காழி, சிதம்பரம் முதலான பல சிவத் தலங்களுக்கும் யாத்திரை சென்று ஞானப்பாடல்களும் திருக்கழுமலமும் மணிக்கோவை, கோயினுன் மணிமாலை போன்ற நூல்கள் பலவும் இயற்றி, திருவொற்றி யூருக்கு வந்து சேர்ந்தார். அங்கு 'முதல்வன் முறையீடு' 'அருட்புலம்பல்' முதலான பாக்கள் இயற்றி இறைவனைத் துதித்தார். இடைச் சிறுவர் களுடன் கூடி விளையாடி மரமேறிக் குதித்தும், நீரில் அழுந்தியும், ஓடி யொளிந்தும், திண்ணையில் புரண்டும், தெருவில் கிடந்தும் ஆடிப்பாடினுர். அச்சிறுவர்களைக் கொண்டு தம்மை மணலுக்குள் புதைக்கச் செய்து வெளிப்பட்டு நின்றும், இலைசருகு முதலியவற்ருல் தம்மை மூடச் செய்து மணற் குன்றின் மேல் தன் தோற்றத்தை எழுந்து நிற்கச் செய்தும் அற்புத சித்துகள் பலகாட்டி அச்சிறுவர்களை மகிழ்வித்தார். அந்நாட்களில் இவர் தமக்கு முக்தி எய்தும் காலம் நெருங்கியதை அறிந்து, ஒரு நாள் சிறுவர்கள் விளையாட்டாக இவருடைய உடலை மூடி மறைத்து வைத்திருந்த இடத்தி லேயே சமாதி நிலை அடைந்து, சிவலிங்க வடிவமானுர்.

இவர் சமாதி இன்றும் திருவொற்றியூரில் இருப்பதைக் காணலாம்.

இவர் பாடிய ஞானப் பாடல்கள் இப்புத்தகத்தில் முதலாவது நூலா கத் தரப்பட்டுள்ளது. இவர் இயற்றியதாகக் கூறப்படும் நூற்கள், கோயில்நான்மணிமாலை, திருக்கழுமலமும், மணிக்கோவை, திருவேகம்ப முடையார் திருவந்தாதி, திருவொற்றியூர் ஒருபா ஒருபஃது முதலியன வாகும், இவை பதினேராம் திருமுறையில் சேர்க்கப்பட்டுள்ளன.

இவருடைய காலம் 10 ஆம் நூற்ருண்டு அல்லது 11 ஆம் நூற்ருண் டாக இருக்கலாம். இவர் பெயர் கொண்ட மற்றொரு பட்டினத்தார் 15ஆம் நூற்ருண்டில் இருந்ததாகத் தெரிகிறது.

## பத்திரகிரியார்

''ஆங்காரம் உள்ளடக்கிஐம்புலனைச் சுட்டறுத்து
தூங்காமல் தூங்கிச் சுகம் பெறுவது எக்காலம்?''



இவ்வாறு தொடங்கும் இந்தச் சித்தரின் மெய்ஞ்ஞானப் புலம்பல் பாடல்கள் மனித நெஞ் சத்தை ஈர்த்து இறையருளின் இன் சுகத்தில் இல யிக்கச் செய்வன. இப்பாடல்கள் இப்புத்தகத் தில் இரண்டாவது நூலாகத் தரப்பட்டுள்ளன.

இவர் மன்னர் குலத்தில் பிறந்து, பட்டினத் தாரின் தொடர்பு ஏற்பட்ட பின்பு அரச போகங் களைத் துறந்து பட்டினத்தாரையே தம் குரு வாகக் கொண்டு அவரோடு துறவியாகத் தொடர்ந்து அவருக்குத் திருத்தொண்டுகள் புரிந்து முக்தி அடைந்தவர். இவரைப் பற்றிய விபரங்கள் பட்டினத்தார் எனும் தலைப்பின் கீழ் அவருடைய வரலாற்றினூடே தரப்பட்டுள்ளன. அதில் காண்க.

இவருடைய காலம் பட்டினத்தாரின் காலமாகும்.

விக்கிரமாதித்தன் கதையில் வரும் பத்திரகிரி ராஜனும் வடமொழியில் நூல்கள் இயற்றிய பத்ருஹரியும் இவரினும் வேறுவார்.

## சிவவாக்கியர்

''ஊரிலுள்ள மனிதர்காள் ஒரு மனதாய்க் கூடியே
தேரிலே வடத்தைவிட்டு செம்பை வைத்து இழுக்கிறீர்
ஆரினாலும் அறியொணாத ஆதிசித்தநாதரை
பேதையான மனிதர் பண்ணும் பிரளிபாரும் பாருமே!''

இவ்வாறு உருவ வழிபாட்டையும் தேர் திருவிழா போன்ற வெறும் சமய சம்பிரதாயங்களையும் இகழ்ந்துரைக்கும் இந்தச் சித்தர், ''சாத்திரங்கள் ஓதுகின்ற சட்டநாதப் பட்டரே, வேர்த்து இரைப்பு வந்தபோது வேதம் வந்து உதவுமோ?'' என்று வேத சாத்திரங்கள் ஓதுதலாகிய வெறும் வாய் முணுமுணுப்பையும், ''பறைச்சியாவது ஏதடா, பணத்தியாவது ஏதடா? இறைச்சி தோல் எலும்பினும் இலக்கமிட்டு இருக்குதோ? பறைச்சி போகம் வேறதோ, பணத்தி போகம் வேறதோ?'' என்று சாதி பேதங்களையும் ஏளனம் செய்து, சமயச் சடங்குகள், ஆசார அனுஷ்டானங்கள், தவ வேடச் சின்னங்கள், தலயாத்திரை, தீர்த்தமாடல், யாகம், மதவாதம் முதலான பலவற்றையும் பல பாடல்களின் மூலம் பரிகாசம் செய்து, 'ஒன்றே குலம், ஒருவனே தெய்வம்; உள்ளமே கோயில், ஆத்ம லயிப்பே தேவானந்தம்' என்ற உன்னத தத்துவத்தையும் உண்மையான பக்தியையும் 'சிவவாக்கியம்' என்னும் தம் பெரு நூலில் எடுத்துக் காட்டி வலியுறுத்தியிருக்கிறார், அந்நூல் இத் தொகுப்பில் மூன்றுவது நூலாகத் தரப்பட்டுள்ளது.




இந்த யோக சித்தர் சிவயோகியரில் தலை சிறந்தவர். தாயுமானவரால் குறிப்பிடப்படும் பெருமை பெற்றவர். இவரது காலம் கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டாக இருக்கலாம்.

இவருடைய வரலாறு பற்றி ஆதார பூர்வமான செய்திகள் எதுவும் கிடைக்கவில்லை. இவரது இயற் பெயரும் தெரியவில்லை. இவர் இயற்றிய நூலுக்கு, சிவவாக்கியம், என இவரே முதற் காப்புச் செய்யுளில் பெயரிட்டிருக்கிறார். அதனால் நூலின் பெயரைக் கொண்டு இவருக்கு 'சிவவாக்கியர் எனும் பெயர் ஏற்பட்டு வழங்கி வருகின்றது. இவர் இந்த உலகத்தில் வந்து பிறக்கும் போது 'சிவ' என்ற வாக்கியத்தைச் சொல்லிக் கொண்டே விழுந்ததால் இவருக்கு இப்பெயர் ஏற்பட்டது எனக் கூறுவோரும் உண்டு!

இவரது பாடல்களை திரு. டி, எஸ், கந்தசாமி முதலியார் எம். ஏ, அவர்கள் ஆராய்ந்து கலைக் களஞ்சியத்தில் ஒரு கட்டுரையில் பின்வருமாறு குறிப்பிட்டுள்ளார்கள்.

"இவர் செய்யுள் நடை பல விடங்களில், திருமூலரின் திருமந்தி நடையை ஒத்திருக்கின்றது-உருவ வழிபாட்டை இவர் இகழ்வதுண்டு. பி மம் எனப் பரம் பொருளைச் சில இடங்களிற் பேசுவர். இவர் பிற சமய களில் வெறுப்பில்லாத சைவர், சிவனே பரம் பொருள் என்பர். கடவு உயிரின் வேருக உளது என்பர். எனினும் கடவுளன்றி உயிரில்லை என்ப உலகு, உயிர், கடவுள் எனப் பொருள்கள் மூன்றென்பர். சாயுச்சிய குறிக்கோள் என்றும், அதை ஞானத்தால் அடையலாம் என்றும் கூறுவ கடவுள் ஆன்மாவின் உள்ளத்தில் ஞான மயனுக நிலவுகிருர்; அவரை அ தன்மையரென அனுபூதியாற் காணலே ஞானம் என்பர், "திருவுமாய் சிவனுமாய்த் தெளிந்துளோர்கள் சிந்தையால் மருவிலே எழுந்து வீசு வாசனையதாகுவன்" எனத் தெளிந்த ஞான நிட்டையுடையோர் திருவு ளத்தில், மலரின் மணம் போல் தோன்றுவான் இறைவன் என்பர். இ கொள்கை, "உற்ற வாக்கையினுறு பொருள் நறுமலர் எழுதரு நாற்ற போல், பற்றலாவதோர் நிலையிலாப் பரம் பொருள்" என்னும் திருவாசக தோடு ஒத்திருக்கின்றது, இறைவனே குருபரனுக வந்து தன்னைத் தெ விப்பன் என்பர். இவை போன்ற சித்தாந்த சைவக் கொள்கைகள் இவ நூலில் காணப் பெறுதலால் இவர் சித்தாந்த சைவர் என்று கொள்ளவு இடம் உண்டு. சமயச் சடங்குகளிலும், கரணங்களிலும் இவர் பற் லாதவர்."

இவரைப் பற்றி, 'அபிதான சிந்தாமணி' என்னும் நூலில் ஒரு கதை குறிப்பு காணப்படுகின்றது, இவர் வேதியர் குலத்தில் பிறந்து காசியாத் திரை சென்று இல்லறத்தில் ஆசை கொண்டார் எனவும். ஞானியான ஒ சக்கிலியன் இவரிடம் காசும் பேய்ச் சுரக்காயும் கொடுத்து, "எந்த பெண் இந்தச் சுரக்காயையும் மணலையும் உமக்கு சமைத்து இடுகின்றளோ அவளே உமக்கு மனைவி!" என்று கூறியதாகவும், அவ்வாறே சமைத்து இவ ருக்கு உணவிட்ட ஒரு குறப் பெண்ணை இவர் மணந்து இல்லறத்தில் இரு தார் எனவும், ஒரு சமயம் மூங்கில் வெட்டும் போது அது பொன் பொழிய அதை நீத்து இவர் ஒரு கீரையைப் பிடுங்கும்போது அது தன்னிலையிலே நிற்கக் கண்டு திகைத்தார் எனவும், கொங்கணரால் இவர் திருந்தி சித் ரானுர் எனவும் அக் கதை குறிப்பிடுகின்றது.

## பாம்பாட்டிச் சித்தர்

"ஊத்தை குழிதனிலே மண்ணை எடுத்தே
 உதிரப் புனலினிலே உண்டை சேர்த்தே
வாய்த்த குயவனுர் அவர் பண்ணும் பாண்டம்
 வரையோட்டுக்கும் ஆகாதென்று ஆடுபாம்பே!"

பிறவியைப் பரிகாசம் செய்யும் இந்தப் பாடல் பல இடங்களிலும் முழங்குகிறது. இதைப் பாடிய பாம்பாட்டிச் சித்தரின் பாடல்கள் அனைத் தும் இத்தொகுப்பில் நான்காவது நூலாகத் தரப்பட்டுள்ளது. இவர் வனுந் திரத்தில் பாம்பைப் பிடித்தாட்டிக் கொண்டிருந்த காலத்தில் ஒரு முறை நவரத்னப் பாம்பொன்றைப் பிடிக்கச் சென்றுர். அப்போது சட்டைமுனிவர் எனும் சித்தர் அங்கு வரவே, அவரால் அறிவு நிலை புகட்டப்பட்டு, அவரி டம் தீக்ஷையும் பெற்று அவர் சமாதியிலிருந்து மீண்டும் எழுந்து சித்துகள் பல செய்தார். ஒர் அரசன் மாண்டு விழுந்தபோது இவர், கூடுவிட்டுக்

கூடு பாயும் வித்தையின் மூலம் அவ்வரசனின் உடலில் புகுந்துஅவன் மனைவியுடன் இருந்து, செத்த பாம்பொன்றை ஆட வைத்துக் காட்டினார். அதனால் பாம்பாட்டிச் சித்தரெனப் பெயர் பெற்றார் என ஒரு கதை வழங்கி வருகிறது. இவர் இந் நூலிலுள்ள ஞானப் பாடல்களைத் தவிர, சித்தராரூடமும் சில வைத்திய நூல்களும் இயற்றியிருக்கிறார் எனவும் இவர் பாண்டி நாட்டில் இருந்ததாகவும் கூறுகின்றனர், இவர் கொங்கு நாட்டில் மருதமலை அடிவாரத்தில் தவஞ் செய்திருந்தவர் எனவும் சிலர் கூறுவதுண்டு,

## இடைக் காட்டுச் சித்தர்

''தாம் திமிதிமி தந்தக் கோனாரே,
 தீம் திமி திமி திந்தக் கோனாரே''

இவ்வாறு குதித்தாடும் இந்தச் சித்தர், ஆனந்தக் கோனாரையும், ஆட்டையும், பசு மாட்டையும், அன்னத்தையும், புல்லாங்குழலையும், அறிவையும் நெஞ்சையும், மயிலையும் குயிலையும் தம் முன் நிறுத்தி பல உலகியல்புகளையும் உண்மைகளையும் பாடி, கிடை கட்டி, ஜீவன் எனும் பசுவிலிருந்து ஞானப்பால் கறக்கும்படி தூண்டியிருக்கிறார், இவரது பாடல்களின் திரட்டு ஐந்தாவது நூலாகத் தரப்பட்டுள்ளது.

இவர் கொங்கணச் சித்தரின் சீடர். கி. பி, 15-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவர். இவர் இடையர்களையும் ஆடுமாடுகளையும் முன்னிறுத்தி பெரிதும் பாடியிருப்பதாலோ, அன்றி மலையாளப் பிரதேசத்தைச் சேர்ந்த இடைக்காடு எனும் ஊரினராக இருந்த காரணத்தாலோ இடைக்காடர் என்னும் பெயர் பெற்றாரா என்பது திட்டமாகத் தெரியவில்லை.

இவரைப் பற்றி வழங்கிவரும் கதைகள்:—இவர், தொண்டை மண்டலத்தில் இடையன் திட்டில் ஓர் இடையராக வாழ்ந்து வந்தார். ஒரு சமயம் இவர் பொதிக மலைச் சாரலில் வழக்கம் போல் ஆடு மேய்த்துக் கொண்டிருக்கும் போது நவசித்தரில் ஒருவர் வந்து இவரிடம் பால் கேட்க, அவருக்கு பால் முதலியன கொடுத்து உபசரித்ததினால் அவர் ஞானோபதேசம் செய்து விட்டுப் போனார். அதனால் இவர் சகல சித்திகளும் அடைந்து சித்தரானார், ஒரு முறை நாட்டில் மழையில்லாது பன்னிரெண்டு வருஷகாலம் பஞ்சம் தலைவிரித்தாடுமென்பதை இவர் அறிந்து தம் ஆடுகளுக்கு எருக்கிலை முதலியன கொடுத்துப் பழக்கி குரு விரகு எனும் தானியத்தை சேற்றோடு கலக்கி சுவர் வைத்து குடிசை யொன்று கட்டி அதில் தம் ஆடுகள் எருக்கிலை தின்னும் ஊறலால் சுவரில் தேய்க்க அப்போது உதிரும் சிறிது தானியத்தைப் புசித்து வாழ்ந்து வந்தார். நாட்டில் பஞ்சம் ஏற்பட்டு உயிர்களெல்லாம் அழிந்து போயின, இவரும் இவருடைய ஆடுகள் மட்டும் பிழைத்திருப்பதை அறிந்து நவக்கிரகங்கள் இவரிடம் வந்தன. அவர்களை இச்சித்தர் வரவேற்று உபசரித்து ஆட்டின் பாலில் குருவிரகை பாகம் செய்து கிரக தேவர்களுக்கு விருந்திட, அதைப்புசித்து மயக்கத்தால் உறங்கினர். அந்தச் சமயம் இந்தச் சித்தர், ஒன்றுடன் ஒன்று மாறு கொண்டு உலகத்தைப் பஞ்சத்தால் வருத்தும் கிரகங்களை மழை பெய்தற்கு வேண்டியவாறு மாற்றி வைத்து விட்டார். உடனே நல்ல மழை பெய்து,, கிரக தேவர்கள் மயக்கத்திலிருந்து விழித்துத் தம் நிலைமை அறிந்தனர்.



இவரை விஷ்ணுவின் அவதா மென்று கருதுவோரும் உண்டு. ஒ சமயம் இவரிடம் சித்தர்கள் சில வந்து விஷ்ணுவின் தசாவதார களில் மிகவும் வணங்கத் தக்கவை எவை எனக் கேட்டபோது "ஏவை இடையன் இளிச்சவாயன்" என் இவர் கூறிச் சிரித்தாராம்.

இவர் சாரிரம் என்னும் வைத்தி நூல் இயற்றினர் எனவும் போக ரின் மாணுக்கரெனவும் மதுரைக்கு கிழக்கிலுள்ள இடைக்காட்டில்பிற தவரெனவும் சிலர் கூறுவர்.

இடைக்காடர் என்னும் பெயரில் சங்ககாலத்திலும் ஒரு புலவ இருந்து அகநானூறு, குறு தொகை, திருவள்ளுவ மாலை மு லான நூல்களில் சில பாடல்கள் இயற்றியிருக்கிறார்.

## அகப்பேய்ச் சித்தர்

"நஞ்சுண்ண வேண்டாவே - அகப்பேய்
நாயகன் தாள் பெறவே
நெஞ்சு மலையாதே, -அகப்பேய்
நீ ஒன்றும் சொல்லாதே!"

இவ்வாறு பாடத் தொடங்கிய இந்தச் சித்தர், பேயாக அலையும் தன்மையுள்ள மனதை அகப் பேய் என்று பெண்ணாக உருவகப்படுத்தி அதனை முன்னிறுத்தி அறிவுபுகட்டிப் பாடினாராதலின் அகப்பேய்ச் சித்தர் எனப் பெயர் பெற்றார். அந்தப் பெயர் மருவி 'அகப்பைச்' சித்தர் எனவும் வழங்குவதும் உண்டு.

## குதம்பைச் சித்தர்

"வெட்டவெளிதன்னை மெய்யென்று இருப்போர்க்குப்
பட்டயம் ஏதுக்கடி ?—குதம்பாய்!
பட்டயம் ஏதுக்கடி!"

இவ்வாறு பாடத் தொடங்கிய இந்தச் சித்தர், உலக வியவகாரங்களை யெல்லாம் தாண்டிப் பற்றற்ற நிலையில் அப்பால் நிற்கும் அறிஞர்களின் அரும்பெரும் இயல்புகளைப் பல பாடல்களின் மூலம் வலியுறுத்தி, "பத்தாக வும் தானும் பதியோடு இருப்பார்க்கு உத்தாரம் ஏதுக்கடி, குதம்பாய்! உத்தாரம் ஏதுக்கடி?" என்று முடித்திருக்கிறார். இப்பாடல்களில் இரண்டு ஏழாவது நாலாயத் தொகுக்கப்பட்டுள்ளது.

குதம்பை என்பது ஒரு காதணி, அதை அணிந்த பெண்ணையும் அச்சொல் குறிக்கும். மனதைப் பெண்ணாக இவர் உவமித்து, அதை முன்னிறுத்தி, ''குதம்பாய்! குதம்பாய்!'' என்று விளித்துப் பாடியதால் குதம்பை சித்தர் என்று பெயர் பெற்றார்.

## கடுவெளிச் சித்தர்

''பாபம் செய்யாதிரு மனமே நாளைக்
கோபம் செய்தே யமன் கொண்டோடிப் போவான்''

இந்த அறநெறிப் பல்லவியுடன் ஆனந்தக் களிப்பின் சரணங்களை இந்தச் சித்தர் பாடியருளியிருக்கிறார்.

கடுவெளி என்பது சுத்த வெளி. அதாவது பிரமம். இந்த சித்தர் பிரபஞ்சத்தைக் கடுவெளி என்று கண்டு தம் ஆத்மானுபவத்தைப் பிறரும் அறிந்து அவ்வழி நடந்து சீர்பெறுவதற்காகப் பாடல்கள் இயற்றினராகையால் கடுவெளிச் சித்தர் எனப் பெயர் பெற்றார்.

இவரது பாடல் திரட்டு எட்டாவது நூலாகத் தரப்பட்டுள்ளது.

## அழகுணிச் சித்தர்

முத்து முகப்படியோ முச்சந்தி வீதியிலே
பத்தாம் இதழ்பரப்பிப் பஞ்சணையின் மேலிருத்தி
அத்தை டக்கிய நிலை ஆருமில்லா வேளையிலே
குத்து விளக்கேற்றி என் கண்ணம்மா!
கோலமிட்டுப் பாரேனே?

இதனைப் பாடிய இந்த சித்தரின் பாக்களில் அழகும், அணியும், ஆத்மலயமும், தமிழ் சொற்களின் இனிமையும், நெஞ்சை அள்ளும் ஓர் உருக்கமும் நிறைந்திருக்கின்றன. இவரை அழகணிச் சித்தர் என அறிஞர்கள் கூறுவதே வழக்குப் பெயரைவிட பொருத்தமெனத் தோன்றுகிறது. இவரது பாடல்களின் திரட்டு ஒன்பதாவது நூலாகத் தரப்பட்டுள்ளது.

## கொங்கண நாயனார்

அஞ்சிலே பிஞ்சிலே வஞ்சியரே நிதம்
கொஞ்சி விளையாடும் வஞ்சியரே!
நெஞ்சிலே ருத்திரன் சூழிருப்பான் அவன்
நேருடனமடி வாலைப் பெண்ணே!

இவ்வாறு வாலைப்பெண்ணை முன்னிறுத்தி இச்சித்தர் பலபல பாடிக் களித்து 'கும்மியடியுங்கடி' என்று ஆத்மாக்களைக் கும்மியடிக்கத் தூண்டும் 'வாலைக்கும்மி' என்னும் நூல் இத்தொகுப்பில் பத்தாவது நூலாகத் தரப்பட்டுள்ளது.



இவர் திருமழிசை ஆழ்வார் காலத்தவ கி. பி. ஏழாவது நூற்றுண்டின் பிற்பகுதிய வாழ்ந்தவர். மருத்துவ நூல்களும், ரசவா நூல்களும் யோக நூல்களும் இயற்றியவ எனக் கூறப்படும் கொங்கண சித்தர், கொ கண நாதர், கொங்கண தேவர், கொங்கண நாயகர் எனும் பல பெயருடைய பலரு இந்தச் சித்தரும் ஒருவரா என்பது ஆராய தக்கது.

இவரது நாடு கொங்கு நாடாயிருக்க லாம். இவர் வடக்கிலிருந்து தெற்கி வந்து தஞ்சாவூரில் தம் பெயரால் சிவலி கம் ஸ்தாபித்து பூஜித்து முத்தி பெற் தாகக் கூறுவர். இவரை அகத்தியர் மாணு கர் என சிலரும், போகர்முனிவரின் மாணு கர் என வேறு சிலரும் கூறுகின்றனர்.

போகர் என்பவர் சிறந்த மருத்துவர். மருந்து செடிகளுக்காக ரோமாபுரி வரை போகர் சென்றதாகவும், முதுமைப் பருவத்தில் பழனியில் வசித் ததாகவும் கூறுவார்கள். பழனியில் போகர் சமாதி காணப்படுகிறது. அப்படி போகரின் மாணுக்கராகிய இந்தக் கொங்கண சித்தரைப் பற்றி வழங்கி வரும் கதைகள்:—

இவர் பளிக்கிச் ஜாதியினர். இவர் வீரட்டகாச மூர்த்தியின் சிரசில் தமது குளிகையை. வைக்க அச் சிவலிங்க மூர்த்தம் அக்குளிகையை நீராக்காமல் மறைத்ததால் அச்சிவமூர்த்தியைப் பூசித்து இவர் குளிகை பெற்ருர்.

இவர் ஒரு சமயம் தம் குருவான போகர் விரும்பிய பெண் அகப்படா மல் மிகவும் வருந்தி ஒரு பிரதிமையைப் பெண்ணுக்கி தம் குருவிடம் கொண்டு சென்ருர்.

இவர் ஒரு சமயம் திருமழிசை ஆழ்வாரிடம் சென்று குளிகை யொன்றைக் கொடுத்து ''இது காணி கோடியைப் பேதிப்பது!'' என்று கூற, திருமழிசை ஆழ்வார் தம் தேகத்தின் அழுக்கையே உருட்டிக் கொடுத்து. ''இது காணி கோடியாக்கும்!'' என்று கூறினர். அதை இவர் பரீட்சித்து அறிந்து களிப்புற்று ஆழ்வாரிடம் நட்புக் கொண்டார்.

இவர் கோயமுத்தூருக்கு அருகில் இருந்ததாகவும் கூறுவார்கள். இவர் காலம் திருவள்ளுவர் காலமாகவும் இருக்கலாம். திருவள்ளுவரின் மனைவி வாசுகியம்மையைப் பற்றிய கதைகளில் இவரைப் பற்றிய ஒரு குறிப்பும் காணப்படுகிறது, ஒரு நாள் கொங்கணர் பிச்சைக்காக ஒரு ஊருக்குச் செல்லும்போது உச்சி வெயிலில் ஒரு மரத்து நிழலில் தங்கினர். அப்போது கொக்கு ஒன்று இட்ட எச்சம் இவர் மீது விழுந்தது. இவர் அந்தக் கொக்கை ஆத்திரத்துடன் பார்த்தவுடனேயே அது இவருடைய தவ வன்மையால் எரிந்து சாம்பலாகி விட்டது. அதைக் கண்டு இவர் அள விலாத தற்பெருமை கொண்டு எழுந்து சென்ருர். பிறகு இவர் திருவள்ளு

தரின் வீட்டிற்குச் சென்று பிச்சை கேட்டார். வாசுகி அம்மையார் வம் கணவருக்குச் செய்ய வேண்டிய கடமைகளை யெல்லாம் செய்துவிட்டு சிறிது நேரங் கழித்து வந்து பிச்சையிட்டார். அதனால் கோபமுற்று வாசுகி அம்மையாரை சினந்து நோக்க அந்த அம்மையார் புன்சிரிப்புடன், "கொக் கென்று நினைத்தாயோ கொங்கணவா?" என்றார். வழியில் நடந்த இச்செயலை அந்த அம்மையார் அறிந்தது எப்படியென வியந்த இவர் அந்த அம்மையார் மகா பதிவிரதை என்பதை உணர்ந்து தம் பெருமைக்காக மிகவும் வெட்க முற்றார். பிறகு வாசுகி அம்மையாரின் சொற்படி இவர் ஒரு வேடனிடம் சென்று தம் தவத்தைவிட தாய்தந்தையரை வழிபடுதலே சிறந்தது என் பதைக் கண்டுணர்ந்தார்.

இவர் இயற்றியதாகக் கூறப்படும் நூல்களாவன: கொங்கணர் கடை காண்டம், திரிகாண்டம், ஞானம்நூறு, குளிகை, கொங்கணதேவர் ஐந் நூற்றிரண்டு, கொங்கண தேவர் கலை, கொங்கணநாதர் சூத்திரம், கொங்கணர் கலைஞர் சூத்திரம், துருசுகுரு முப்பத்தொன்று, தலைக் காண்டம், நடுக்காண்டம், முப்பூதீட்சை, கொங்கணர் வாக்கியம், கொங்கணர் தியானம் முதலியன.

## பீரு முகம்மது

ஆதிக்கு முன்னம் அநாதியும் என்னடி சிங்கி?
அந்தக் கருக்குழி மூந்த இருளறை சிங்கா!

இவ்வாறு கண்ணிகள் அமைத்துத் தொடங்கும் ஞானரத்தினக் குறவஞ்சி என்னும் நூல்—இப்புத்தகத்தில் பதினோராவது நூலாகத் தரப் பட்டுள்ளது. இதை இயற்றிய பீரு முகம்மது என்ற சித்தர் இஸ்லாமியப் பெரியார் ஆவார். அரேபிய நாட்டுத் தொடர்பினால் தமிழ் நாட்டின் சித்த மருத்துவ முறை மேலும் ஓங்கி வளர்ந்தது மட்டுமின்றி, ரூமி முதலிய இஸ்லாமிய சூபிகளின் போக்கும் தமிழ் சித்தர் பாடல்களில் புகுந்து வளம் பெறச் செய்தது.

## மதுரை வாலை சாமி

"பூட்டைத் திறப்பதுங் கையாலே மனப்
பூட்டைத் திறப்பது மெய்யாலே
வீட்டைத் திறக்க முடியாமல் விட்ட
விதி இது என்கிறார் ஞானப்பெண்ணே!"

மனப் பூட்டைத் திறப்பதற்கும் பேரின்ப வீட்டைத் திறப்பதற்கும் வழிதெரியாமல் விதியின் மீது பழிபோடும் விந்தை மனிதரை இப் பாடலின் வாயிலாக இடித்துரைக்கும் இப்பெரியார், ஞானத்தை ஒரு பெண்ணாக உருவகப்படுத்தி தம் முன் நிறுத்தி, ஒன்பது ஓட்டையுள்ள உடல் கூட்டுக்குள் பஞ்சேந்திரிய சேட்டையர்கள் நடத்தும் விளையாட் டையும், உடல் கூட்டைத் தாண்டி உயிர் தேட வேண்டிய வீட்டையும் பல பாடல்களின் மூலம் உணர்த்தி நயமும் நகைச்சுவையும் குதித்தாடும் நடையில் ஞானக்கும்மி என்னும் நூலை இயற்றியிருக்கிறார். அது பன்னிரண் டாவது நூலாகத் தரப் பட்டுள்ளது.

## சட்டை முனி

"பூணப்பா சிலபேர் தான் தீப
வைத்து
புகழாகப் பூசை செய்வார்
பெண்ணை வைத்து
நாளப்பா சக்கரத்தைப் பூசை
செய்வார்"

இவ்வாறு பூஜா விதிகளைப் பற்றி இந்தச் சித்தர் பாடிய ஞானப் பாடல் பதினன்காவது நூலாகத் தரப்பட்டுள்ளது.

இவர் அகத்தியர் காலத்தில் இருந்த தாகக் கூறுவர். இவர் உரோம ரிஷியுடன் மாறு கொண்டவர். சணியர் குலத்தில் பிறந்தவர். இவர் வைத்தியத்திலும் சிறந்தவர். இவரைப் போகர் முனிவரின் மாணக்கர் என்றும் கூறுவார்கள்.

இவர் இயற்றியதாகக் கருதப்படும் நூல்கள், சட்டைமுனி ஆயிரத்து இருநூறு, திரிகாண்டம், சரக்கு வைப்பு, நவரத்தின வைப்பு முதலியன வாகும்.

## கணபதி தாசர்

"மின்மினிப் பூச்சி தன்னுள் மெய்யொளி கண்டாற்போல
உன் மனம் ஒடுங்கியே உன் உள்ளொளி கண்டாற் பின்னை
சென்மமுமில்லை; அந்தச் சிவத்துள்ளே சேர்வாய்..."

இந்த உள்ளொளி தத்துவத்தை நிலைநாட்டும் கணபதிதாசர், தாம் இயற்றிய நெஞ்சறி விளக்கம் என்னும் நூலில் நெஞ்சை முன் நிறுத்தி பல உண்மைகளைப் பாடி, நாகை நாதரின் அடியினைச் சேர்வதற்கு வழி காட்டியிருக்கிருர். அந்நூல் இத்தொகுப்பில் பதினருவது நூலாகத் தரப் பட்டுள்ளது.

இவர் ஐக்கியவாதி எனத் தெரிகிறது.

## அகஸ்தியர்

"தான் என்ற தானே தான் ஒன்றே தெய்வம்
தகப்பனும் தாயும் அங்கே புணரும் போது
நான் என்று கருப் பிடித்துக் கொண்டு வந்த
நாதனை நீ எந்நாளும் வணங்கி நில்லு."

இவ்வாறு பாடிய இந்தச் சித்தர், "மாடுதாளுனலும் ஒரு போக் குண்டு. மனிதனுக்கோ அவ்வளவுந் தெரியாதப்பா!" என்று இடித் துரைத்து, "உடல் உயிரும் [illegible] உலகத்தோ

அறியாமல் மயங்கிப் போனுர்; உடல் உயிரும் பூரண அடி முடியுமாச்சே'' என்று ஒரு தத்துவத்தை நிலை நிறுத்தி, உலகியல்புகளையும் மனச்செம்மை முதலான அறநெறிகள் பலவற்றையும் எடுத்துரைத்திருக்கிருர். இவரது ஞானப்பாமாலை பதினேழாவது நூலாகத் தரப்பட்டுள்ளது.

அகஸ்தியர் என்னும் பெயரில் வேத புராண காலங்களிலும், பழந் தமிழ் சங்க காலத்திலும், மத்திய காலத்திலும் முனிவர்களாகவும், புல வர்களாகவும், மருத்துவர்களாகவும், சோதிடர்களாகவும் பலர் இருந் திருக்கின்றனர். அவர்களைப் பற்றிய கதைகளும் பல உண்டு! அவர்களில் இந்த அகஸ்தியர் என்ன தொடர்புடையவர் என்பது தெரியவில்லை, இவர் அட்டமாசித்தி பெற்ற பதினெண் சித்தர்களில் ஒருவர். இவர் போக முனிவரின் காலத்தவராக இருக்கலாம். கருவூர் தேவருக்குப் போக முனிவர் குருவெனக் கூறப்படுவதால் பதினொன்ரும் நூற்ருண்டாக இருக்கலாம். சித்த மருத்துவ முறையை வகுத்தவர்களில் இவர் தலையான வர் எனவும், ஆயுர்வேத சூத்திரங்களுக்கு இவர் விரிவுரை எழுதியிருக்கி ருர் எனவும் கூறுவர்.

இவரது கிருபை பொருந்திய ஸ்தலம் அனந்தசயனம் என்று அருணு சலக் குரு தம் நிஜானந்த போதத்தில் குறிப்பிட்டுள்ளார்.

## உரோம ரிஷி

''காலவட்டம் தங்கி மதி அமுதப் பாலைக்
கண்டு பசியாற்றி மனக்கவடு நீக்கி
ஞால வட்டம் சித்தாடும் பெரியோர் பாதம்
நம்பினதால் உரோமன் என்பேர் நாயன் தானே''

இவ்வாறு தம்மை அறிமுகப் படுத்திக் கொள்ளும் இந்தச் சித்தர், ''சொரூபமுத்திக்கு அடையாளம் ஏதென்றக்கால் சுடர் போலக் காணு மடா தூலதேகம்'' என்று குறிப்பிட்டிருக்கிருர். அட்டமா சித்தி பெற்ற பதினெண் சித்தர்களில் இவரும் ஒருவர். இவரது ஞானப் பாடல்கள் இந்தப் புத்தகத்தில் பதினெட்டாவது நூலாகத் தரப்பட்டுள்ளது.

உரோமரிஷி என்ற இவர் பெயர் உரோமபுரியோடு தொடர்புடை யதா என்பது தெரியவில்லை. போகரைப் போன்ற சித்த மருத்துவர்கள் சிலர் மருந்துச் செடிகளுக்காக உரோமாபுரி வரை சென்றிருக்கிருர்கள் என்பது மட்டும் தெரிகிறது.

இவரைப் பற்றி அபிதான சிந்தாமணி நூலில் ஒரு குறிப்பு காணப் படுகிறது. ''இவர் புசுண்ட மா முனிவரின் குமாரர். இவர் செய்த தீக்ஷை என்னும் நூலைச் சட்டை முனி கிழிக்காதபடி புசுண்டர் தம் சடையில் ஒளித்து வைத்து அகத்தியருக்குக் காட்ட அவர் நெடுநாள் பொறுத்து மீண்டும் கொடுத்தனர். இவருக்கு உடம்பெல்லாம் மயிர் (ரோமம்). ஒரு பிரமன் இறந்தால் ஒரு மயிர் உதிரும். அப்படி மூன்றரைக் கோடி பிர மாக்கள் இறந்தால் ஆயுள் முடிவு, இவர் இறக்கின் அட்டகோண ரிஷிக்கு ஒரு கோணம் நிமிருமாம்'' என்று கூறுகிறது அக்குறிப்பு.

# திருமூல நாயனர்

''ஈசானே ஆசானுய்க் காணும் பேர்க்கு
இங்கு இன்பமுடன் கயிலாசம் எய்தலாமே''

இவ்வாறு பாடிய இந்தச் சித்தர், ''அடியோடு மூலமதே அகாரமாகி அவன் அவ்வாய் நின்ற நிலை அனுவதாமே'' என்று அனுதத்துவம் முதல் அகண்ட தத்துவம் வரை பரிணும வளர்ச்சியைச் சுருக்கி யுரைத்து, பாவனைகள் விட்டு நீங்கி பகலிரவு மற்ற இடத்தில் கருத்து வைத்துப் பதம் பெறும் நிலையையும் சுட்டிக் காட்டியிருக்கிருர். இவரது ஞானப் பாடல்கள் பத்தொன்பதாவது நூலாகத் தரப்பட்டுள்ளது.



இவர் சிவயோகியும் ஆவார். அறுபத்து மூன்று நாயன்மார்களில் ஒருவர். நந்தியின் அருள் பெற்றவர். அணிமா முதலிய அட்டமாசித்திகளில் வல்லவர். இவர் பொதிக மலையில் இருந்த அகத்தியரைக் காண விரும்பி கைலாயத்திலிருந்து புறப்பட்டார். வழியில் பல சிவத் தலங்களைத் தரிசித்துக் காவிரியாற்றில் நீராடி திருவாவடு துறையை அடைந்தார். அவ்வூரில் மாடு மேய்த்துக் கொண்டிருந்த மூலன் என்ற ஓர் இடையன் இறந்து கிடப்பதையும், பசுக்கள் பிரிவாற்ருமையுடன் அவ்விடையனின் உடலை முகர்ந்து கொண்டிருப்பதையும் கண்ட திருமூலர்மனமிரங்கி, பசுக்களின் துன்பத்தைப் போக்குவதற்காகத் தம் உடலை ஒருபுறம் வைத்து விட்டுக் கூடு விட்டுக் கூடுபாயும் வித்தையின் மூலம் மூலனின் உடம்பில் புகுந்து பசுக்களை வீடு நோக்கி ஓட்டிச் சென்ருர். அவரை மூலனின் மனைவி தன் கணவன் என்று நினைத்துத்தொட முயல, இவர் எட்டி நின்று, ''என்னைத் தொடுவது நீதியல்ல'' என்று கூறவே, மூலனின் மனைவி அவ்வூர் நீதிமான்களிடம் முறையிட்டு வழக்காடினுள். நீதிமான்கள் மூலரைப் பெரிய சிவயோகி என்று தெளிந்து கூறியதும் அவள் நீங்கிச் சென்ருள். ஆனுல் மூலர் தம் சொந்த உடம்பை விட்ட இடத்தில் தேடிய போது அது அகப்படவில்லை, அப்போது இவர், ''நான் சிவாகமப் பொருளைத் தமிழில் பாடவேண்டும் என்பதற்காகத்தான் இறைவன் என் உடம்பை மறைத்து விட்டான் என்று உணர்ந்தார். உடனே திருவாவடுதுறைக் கோவிலின் மேற்குப் பக்கத்திலுள்ள அரசமரத்தடியில் அத்துவிதமாக யோகத்தில் அமர்ந்து மூவாயிரம் பாடல்களைக் கொண்ட திருமந்திரத்தை இயற்றினுர், இவரது இயற்பெயர் தெரியவில்லை. இடையன் மூலனின் உடலில் புகுந்ததால் திருமூலர் என்னும் பெயர் பெற்ருர். திருவாவடு துறையில் இவருக்கு ஒரு கோவில் எழும்பியது.

# இராம தேவர்

இவர் நாகப்பட்டினத்தில் வீற்றிருந்து சிவ பூஜா விசேஷத்தால் சகல சித்திகளும் அடைந்த சித்தர். இவர் இயற்றிய பூஜா விதிப் பாடல் இருபத்து மூன்ருவது நூலாக இணைக்கப்பட்டுள்ளது. இவர் வைத்திய நூல் எழுதியிருப்பதாகவும், அதற்கு இராம தேவர் வைத்தியம் என்று

பெயர் எனவும், இவர் காசிமா நகரிலிருந்து சட்டை நாதரை எழுந்தருளச் செய்து நாகப்பட்டினத்தில் ஸ்தாபித்தவர் எனவும் கூறுவர்.

## கருவூரார்

''ஆதியந்தம் வாலையவள் இருந்த வீடே
ஆச்சரியம் மெத்த மெத்த அதுதான் பாரு''

இவ்வாறு பூஜா விதி நூலைப் பாடத் தொடங்கிய இந்தச் சித்தர், ஆதி பராசக்தியை வாலைப் பெண்ணாக முன் வைத்து, அவளது மாயை முதலான கூறுகளைப் பல வடிவங்களாக்கி, அவளைச் சிறு பிள்ளைக் கன்னியாகவும், சித்தர்களின் மனவடக்கத்தையும் சோதிக்கும் சிவகாமிரூபியாகவும், விளையாட்டு வம்பியாகவும் சித்தரித்துக் காட்டிப் பூஜை செய்யும் முறைகளையும் கூறி இப் பூஜா விதி இருபத்து நான்காவது நூலாகத் தரப்பட்டுள்ளது.

இவர் கொங்கு நாட்டில் கருவூரில் பிறந்தவர். தஞ்சாவூரில் இராஜ ராஜ சோழன் கட்டிய கலைக் கோயிலில் சிவலிங்கப் பிரதிஷ்டைக்கு இவரே அஷ்ட பந்தனம் செய்வித்தார். இவரது காலம் கி. பி. 11-ம் நூற்றாண்டு,

இவர் போக ரிஷியின் மாணுக்கர் எனவும், ஒன்பதாம் திருமுறையில் திருவிசைப்பா என்னும் பகுதியில் இவருடைய பாக்கள் உள்ளன எனவும், இவர் வைத்திய நூல்கள் பல எழுதியிருக்கிறார் எனவும் கூறுவாரும் உண்டு.

இவரைப் பற்றிக் கர்ண பரம்பரையான கதையொன்று அபிதான சிந்தாமணி நூலில் காணப்படுகிறது. அந்தக் கதையின் சாரம்:— கருவூர் தேவர் என்னும் பெயருள்ள இவர் கருவூரில் வேதியர் குலத்தில் பிறந்து ஞான நூல்களை ஆராய்ந்து சைவ சமயத்தைக் கடைப்பிடித்துச் சிவயோக சித்தி அடைந்தார். சாதி குலம் நீத்துச் சிவத்தல யாத்திரை செய்து திருவிசைப்பா பதிகங்கள் பாடி வந்தார்.

சாதி சம்பிரதாயங்களைப் புறக்கணித்த இவரிடம் வெறுப்புக்கொண்ட வேதியர் சிலர் இவரை மது மாமிசப் பக்ஷணி என்று பழிதூற்றி அருவெறுத்துப் பேசினர்கள். அவ்வேதியருக்கு அறிவூட்ட இவர் அகாலத்தில் அடை மழை பெய்யச் செய்தும், ஆற்றில் வெள்ளம் பெருகச் செய்தும், பூட்டியிருந்த கோயில் திருக்கதவும் திறக்கச் செய்தும், தமக்குப் பூதங்கள் குடை பிடித்து வரச் செய்தும் பலஅற்புதங்கள் காட்டினர்.

இவர் பல புண்ணியத் தலங்களை வணங்கிச் சென்று கஜேந்திர மோக்ஷம் என்னும் தலத்தை அடைந்து, அங்கு இருந்த முன்றீசரை அழைக்க, அவர் தரிசனம் தந்து, ''என்ன வேண்டும்?'' என்று கேட்டார். இவர் ''மது வேண்டும்'' என்று கேட்கவே, முன்றீசர் காளிக்குக் கட்டளையிடக் காளி மதுக்குடமளித்தாள். இவர் காளியிடம் ''மீனும் வேண்டும்'' என்று கேட்டார். காளி, கோட்ட வாசிகளைக் கேட்க, அவர்கள் எங்கு தேடியும் மீன் அகப்படாததைக் கண்டு இவர் அங்கிருந்த வன்னி மரத்தை நோக்கினர். உடனே அம் மரம் மீன் மாரி பொழிந்தது!

பிறகு கருவூர் தேவர் அவ்வூரை விட்டுப் புறப்பட்டுச் சென்று ஒரு விஷ்ணுவாலயத்தை அடைந்து அங்குள்ள பெருமாளைக் கூவியழைத்தார். பெருமாள் வராமலிருக்கவே, அக் கோயில் பூஜை இல்லாமல் இருக்கக் கடவது என்று தேவர் சபித்து விட்டுச் சென்று, திருக் குற்றாலத்தை அடைந்து சிவதரிசனம் செய்து திருவிசைப்பா பாடிப் பொதிகையில் எழுந் தருளியிருந்தார்.

ஒரு சமயம் இவர் நெல்வேலியப்பரின் சந்நிதானத்து முன்னின்று நிவேதன காலமென்றறியாமல், ''நெல்லையப்பா! நெல்லையப்பா!! நெல்லை யப்பா!!!'' என்று மூன்று முறை கூவியழைத்தும் மறுமொழி பெறாததால், கடவுள் அங்கில்லை என்று நீங்கிச் செல்ல, அந்த ஆலயத்தில் எருக்கு முதலி யன முளைத்தன. நெல்லையப்ப பெருமான் ஓடிவந்து கருவூர் தேவரை மானூரில் சந்தித்துத் தரிசனம் தந்து அடிக்கொரு பொன்னும் கொடுத்து இவரை நெல்வேலிக்கு அழைத்து வந்து காட்சி தந்தார். அதனால் முன் முளைத்த எருக்கு முதலிய பூண்டுகள் ஒழிந்து பழைய பிரகாசம் உண்டா யிற்று.

இவரை அநாசாரமுள்ளவர் என்று பழித்துரைத்த மானூர் வேதியர் களுக்கு அவ்வூரில் வீடில்லாமல் போகவென்று சபித்தார்.

இவர் அவ்வூரில் இருக்கும் நாட்களில் தஞ்சை மன்னன் கட்டிய கோயிலில் சிவப் பிரதிஷ்டையில் அஷ்ட பந்தனம் பலமுறை இளகிப் பந்தன மாகாமற் போயிற்று. அதனால் சோழ மன்னன் வருந்தியபோது ஓர் அசரீரி தோன்றி, ''கருவூர்த்தேவர் வரின் பந்தனமாகும்'' என்று கூறியது. அந்தச் சமயம் போகநாதர் எனும் சித்தர் உருமறைந்து அவ்விடம் வந் திருந்தாரானதால், அச் செய்தியை அவர் ஓலையில் எழுதிக் காக்கை யொன்றின் கழுத்தில் கட்டியனுப்பி கருவூர்த் தேவரை வரவழைத்தார். தேவர் அக்கோயிலினுட் சென்று சிவலிங்கத்தை அஷ்ட பந்தனம் செய்தார்.

பிறகு தேவர் அங்கிருந்து புறப்பட்டு திருவரங்கத்திற்குச் சென்றார். அவ்வூரில் ஒரு தாசி இவருடைய தேகப் பொலிவையும் ஞான தேஜஸையும் கண்டு கவர்ச்சியுற்று இவரை தன் வீட்டிற்கு அழைத்துச் சென்று பெரிதும் உபசரித்தாள். இவர் அரங்கநாதப் பெருமாளைத் தரிசித்து, பெருமாள் அன்பளிப்பாய்த் தந்த இரத்தினப் பதக்கத்தை தாசியிடம் கொடுத்து, ''நீ எப்போது நினைக்கினும் வருவேன்'' என்று கூறிப் பிரிந்து தல யாத்திரை சென்றார். தாசி அந்த இரத்தினப் பதக்கத்தைத் தன் மார்பில் அணிந்து கொண்டு ஒருநாள் வெளிவந்தபோது கோயில் தனிகர் அவளைத் திருடி என்று சந்தேகித்து அவளுடைய வீட்டைக் காவலிட்டு, அவளை விசாரித்தார். அவள், ''எனக்கு இந்தப் பதக்கத்தை ஒரு வேதியர் கொடுத்தார்!'' என்று கூறி கருவூர் தேவரை நினைக்கவே இவர் வந்து, ''எனக்கு இந்தப் பதக்கத்தை திருவரங்கத்துக் கோயில் பெருமாளே கொடுத்தார்!'' என்று கூறி அதற்குச் சாட்சியாக பெருமாளையே கூவி யழைத்து ஆகாயவீதியில் பிரசன்னமாகிச் சொல்லச் செய்தார்.

பிறகு இவர் கருவூரை அடைந்து அங்கிருக்கும்போது இவர் மீது துவேஷமுள்ள வேதியரெல்லாம் ஒருங்கு கூடி இவருக்குத் துன்பம் செய்யத் தொடங்கினார்கள். இவர் பயந்தவர்போல் திரு ஆனிலைக்கோயிலை அடைந்து சிவ மூர்த்தியை அடைந்து சிவமூர்த்தியைத் தழுவிக்கொள்ளவே இவரைச் சிவமூர்த்தி தம்மில் ஒடுக்கினார்.

## கைலாயக் கம்பிளிச் சட்டை முனி நாயனார்

''பொங்குகின்ற காமம் என்ன? சிவத்தின் கூறு!
பொல்லாத ஆசை என்ன? மாலின் கூறு!
மயங்குகின்ற மோகம் என்ன? மகேசன் கூறு!''

இவ்வாறு ஆராய்கிற இந்தச் சித்தர், முன் ஞானம் நூறு பின் ஞானம் நூறு என இருநூறு பாடல்கள் இயற்றியிருக்கிறார். அவற்றின் திரட்டு 25-வது நூலாகத் தரப்பட்டுள்ளது.

இவர் நவநாதர்களில் ஒருவராகத் தம்மைக் குறிப்பிட்டிருக்கிறார்.

## காக புசுண்டர்

இந்த சித்தர் பாடிய ஞானப் பாடல்கள், உபநிடதங்கள், குறள் இவையெல்லாம் 26-வது நூல் எனும் தலைப்பின் கீழ் தரப்பட்டுள்ளது

இந்தச் சித்தர் புசுண்டராக இருக்கலாம். இவரை உரோம ரிஷியின் தந்தை எனவும், இவர் வசிட்டமுனிவரை சந்தித்து, ''என் காலத்திற்குள் உம்மைப் போல் எட்டு வசிட்டர்களைக் கண்டேன்'' என்று சொன்னதாகவும் கூறுவர்.

## இராமலிங்க சுவாமிகள்

''தன்னையறிந்து இன்பமுற வெண்ணிலாவே!-ஒரு
தந்திரம் நீ சொல்ல வேண்டும் வெண்ணிலாவே!''

இராமலிங்க சுவாமிகள் இயற்றிய இந்தப் பாடலை இசைத் தட்டுகள் இன்னிசை மேடைகளில் மட்டுமல்ல, நம் வீடுகளில் குழந்தைகள் கூட இனிமையாகப் பாடுவதை நாம் கேட்டு இன்புறலாம். இது போன்ற சிறந்த பாடல்களின் திரட்டு இப் புத்தகத்தில் 'இராமலிங்க சுவாமிகள் திருவருட்பா திரட்டு' என்னும் தலைப்பின் கீழ் 29-வது நூலாகத் தரப்பட்டுள்ளது. சிவநாமாவளித் திரட்டு எனவும் இதற்குப் பெயர் வழங்குவதுண்டு.

'அருட்பெருஞ் சோதி! தனிப் பெரும் கருணை!' என்று கூறிய இவரைத் திருவருட்பிரகாச வள்ளலார் என்பார்கள். வேதாந்த சித்தாந்தம் வடமொழி தென் மொழி நூல்கள் ஆகியவற்றில் இவர் தெளிவான புலமையும் தேர்ந்த அனுபவமும் பெற்றவர். சித்துகள் பல செய்தவர்.

இவரது வரலாறு:- இவர், தென்னாற்காட்டில், சிதம்பரத்திற்கு அருகிலுள்ள மருதூரில், கருணீகர் குலத்தில், இராமையா பிள்ளை என்பவருக்கும் சின்னம்மையார் என்பவருக்கும் அருமைப் புதல்வனாக கி. பி. 1823-ஆம் ஆண்டில் பிறந்தார். இவருடைய சிறு பிராயத்திலேயே இவரது தந்தை காலமாகி சிவபதவி அடைந்து விட்டதால், இவரது தமையனாரான சபாபதி பிள்ளை தம் தாய் தம்பியர் முதலானவர்களோடு சென்னைக்கு வந்து குடியேறி ஒரு வித்தியாலயத்தில் போதகாசிரியராகப்

பணியாற்றி, அதில் கிடைக்கும் வருமானத்தைக் கொண்டு குடும்பத்தை நடத்தி வந்தார். இராமலிங்கர் கல்வி பயின்று முருகன் திருவருளைப் பரிபூரணமாகப் பெற்று ஞான முதிர்ச்சி அடைந்தார். பிறகு இவருக்கு இல்லறத்தில் விருப்பமில்லாதிருக்கையில், இவர் அண்ணனார் தம் தமக்கை மகளை இவருக்கு மணம் செய்து வைத்தார். இவர் பற்றற்றவராய், சதானந்த சகஜ நிஷ்டை சாதனமுடையவராகப் பல பாடல்களை இயற்றிக் கொண்டிருந்தார். பிறகு சிதம்பரத்தின் நான்கு கோபுரமும் தோன்றும் எல்லையாசய வடலூரில் சத்திய தருமசாலை, சத்திய ஞான சபை, சமரச வேத பாடசாலை, சன்மார்க்க சங்கத் திருக்கோவில், நிருத்த சித்தி விநாயகராலயம் முதலானவற்றை ஸ்தாபிக்கும் திருப்பணிகளில் ஈடுபட்டார். பின்பு இவர் வடலூரையடுத்த கருங்குழி அருகில் மேட்டுக்குப்பமென்னும் சிற்றூரில் சித்திவளாகத் திருமாளிகையில் சிவத்தியானத்துடன் எழுந்தருளி இருந்து, சிவஞான யோக முதிர்ச்சியால் தோன்றிய சோதி வடிவமான அருட் பெருஞ்சோதியை தரிசித்தார். பிறகு செயற்கையுடல் இயற்கையுடலாகத் திரிவுபடும் சின்மாத்திர சகஜ சமாதியில் இவர் அசைவற இருந்து, சற்குருவைச் சந்தித்து, தாம் அமர்ந்திருந்த அறைக் கதவைப் பூட்டிச் செல்லும்படி தம் அன்பர்களுக்கு குறிப்பால் உணர்த்தி, தாமும் தமது இந்திரியக் கதவை மூடி, மௌன நிஷ்டை கூடி, தம் உடலின் ஐம்பொறிகளையும் இயற்கையின் ஐம்பெரும் பூதங்களோடு கலந்து மறைவித்து நித்தியானந்த நிலை அடைந்தார். இவர் அவ்வப்போது பாடிய பாடல்களை ஆறு திருமுறைகளாகத் தொகுத்து வெளியிட்டிருக்கின்றனர்.

திருவருட்பாவைத் தவிர, மனுமுறை கண்டவாசகம், ஜீவகாருண்ய ஒடுக்கம் முதலான பல வசன நூல்களும் இவர் இயற்றியிருக்கிறார்.

## பொதுக் குறிப்புகள்

இப் புத்தகத்தில் 21-வது நூலாகத் தரப்பட்டுள்ள வால்மீகர் சூத்திர ஞானம் என்பதனைப் பாடிய சித்தர் வடமொழியில் இராமாயணம் இயற்றிய வால்மீகி என்பாரின் வேறானவர்.

திருவள்ளுவர் ஞானம் என்னும் நூலை இயற்றிய சித்தரும் திருக்குறள் இயற்றிய திருவள்ளுவரும் ஒருவரா என்பது தெரியவில்லை.

28வது நூலான பூரணானந்தர் சிவயோக சாரம் உரை நடையில் அமைந்து ராஜயோக மார்க்கத்தையும் அட்டமா சித்திகள் பெறும் வழிகளையும் யோகாப்பியாச முறைகளையும் விளக்க முற்படுகிறது.

30வது நூலான ஞானசர நூல் பாடல்களுடன் உரை நடையில் பொருள் விளக்கங்களும் உடையது.

31-வது நூலான சிவானந்த போதம் அறிவுக்கும் மனத்துக்கும் வாக்கு வாதமாக அமைக்கப்பட்டுப் பாக்களும் உரையாடல்களும் உடையது.

34-வது நூலான அருணாசல குருவின் நிஜானந்த போதம் ஆத்ம தத்துவங்களையும், மறை பொருளான சொற்களின் உட்கருத்தையும், பலவற்றின் பலாபலன்களையும் விரிவான முறையில் விளக்க முற்பட்டு இடையிடையே பல மேற்கோள்களையும் எடுத்துக் காட்டுகின்றது.

சித்தர் பாடல்களில் ஆங்காங்கே வரும் தத்துவச் சொற்களும், எளிதில் பொருள் விளங்கா உவமைகளும், குழூஉ குறிகளுக்கும், ஒலி எழுத்துக்களுக்கும் மேற்கூறிய நூற்களில் விளக்கம் உணரலாம். இப்புத்தகத்தின் இறுதிப் பகுதியில் பொருள் விளக்க அகராதி ஒன்றும் இணைக்கப் பட்டுள்ளது- முற்பகுதியில் பாடல்களில் வரும் அருஞ்சொற்களுக்கு அந்தந்தப் பாட்டு இருக்கும் பக்கத்தின் அடியிலேயே தனியாகக் கோடிட்டுப் பதவுரை குறிப்புரைகளும் தரப்பட்டுள்ளன.

சித்தர் என்றும் சிறியர் என் றும் அறியொணாத சீவர்காள்!<br>
சித்தர் இங்கு இருந்த போது பித்தர் என்று எண்ணுவீர்,<br>
சித்தர் இங்கு இருந்தும் என்ன பித்தன் நாட்டிருப்பரே:<br>
அத்தன் நாடும் இந்த நாடும் அவர்களுக்கு எலாம் ஒன்றே.

—சிவவாக்கியர் பாடல்



# தத்துவங்கள் பற்றி சில விளக்கங்கள்

அரு. ராமநாதன்



தத்துவ உலகில், விஞ்ஞானம் என்பது இன்று மேலை நாட்டில் 'சயின்ஸ்' என்ற பெயரில் பூதாகாரமாய் வளர்ந்து, மனிதனைத் தாண்டி, மனித தத்துவத்திற்கு அப்பால் உள்ள இயற்கையின் சக்திகளையெல்லாம் ஆராய்ந்து, ஜடஇயல் கருவிகளைக் கண்டுபிடித்து, அவற்றின் சாதனைகளை ஆக்கப் பணியைவிட அழிவு வெறிக்கே அதிகம் பயன்படுத்தி வருகிறது. ஆனல் நம் பாரதநாட்டுப் பழம்பெரும் விஞ்ஞானமோ ஆத்ம ஞானம் என்ற பெயரால் முழுமையான வளர்ச்சியுற்று, மனிதனின் உடலுக்குள்ளேயே இயற்கையின் சக்திகளையெல்லாம் கண்டு பிடித்து, அவற்றை அகக் கருவிகளைக் கொண்டே ஒழுங்காக இயக்கி உன்னத நிலைக்கு உயர்த்தி, அந்த உன்னத நிலையில் இறைவனையும் தன் இருதயத்திற்குள்ளேயே இருத்தி, அந்த இறைவனேடு இரண்டறக் கலக்கும் எல்லையில்லா ஆனந்தமான பேரானந்தமான நிலை அடைவதற்கு வழிகாட்டுவதாகும். இந்த வழியில் நம் தமிழ் நாட்டுச் சித்தர்கள் தாங்கள் கண்ட அனுபவங்களையும், அறிவுரைகளையும், அறநெறிகளையும், அப்பியாச யோகங்களையும், யுக்தி முறைகளையும் நாடோடிப் பாடல்களாக வழங்கியிருக்கிறர்கள். அப்பாடல்கள் எல்லாம் பாமரர்களின் நெஞ்சங்களிலும் பதியும்படியும் பாலர்களின் வாய்களிலும் எதிரொலிக்கும்படியும் சுவையோடு மிகவும் எளிய தமிழிலே அமைந்திருக்கிறது என்றுலும், பாடல்களினூடே ஆங்காங்கே நுட்பமான தத்துவங்களும், இருபொருட் சொற்களும் இலைமறை காய்கள் போல் குலுங்குகின்றன. அவற்றையும் புரிந்து கொள்வதற்கு அந்தந்தப் பாடல்கள் வரும் பக்கங்களின் அடியில் அருஞ்சொற்களுக்குப் பாடல்

களின் வரி எண்களைக் குறிப்பிட்டு பொருள் தந்திருப்பதோடு, புத்த கத்தின் இறுதியில் தத்துவ விளக்கங்களுக்கும், அருஞ் சொற்களுக்கும் அகர வரிசையில் தொகுக்கப்பட்டு, பொருள் அகராதி ஒன்றும் சேர்க்கப் பட்டுள்ளது. இவை தவிர இப்புத்தகத்திலுள்ள ஞானசுர நூல். குருஞான சம்பந்த சுவாமிகளின் சிவபோக சாரம், அருணாசல குருவின் நிஜானந்த போதம் முதலியனவற்றிலும் தத்துவ விளக்கங்களைப் படித்துணரலாம். அவற்றோடு பொதுவான தத்துவம் பற்றிப் பின்வரும் சில தத்துவக் குறிப்பு களும் வாசகர்களுக்கு உதவும் என நம்புகிறேன்.

## பிரபஞ்சத் தத்துவம்

இறைவன் படைக்கும் முன் இந்தப் பிரபஞ்சம் பெயர் உருவமற்று சுத்த வெளியாய், நிர்க்குணமாய், சின்மாத்திரப் பரப்பிரம்மமாக இருந்தது.

அதிலிருந்து பிரமையினால் கானல் நீர் தோன்றுவது போல் மூலப் பிர கிருதி என்னும் இல் மாயை ஒன்று தோன்றியது. அந்த மூலப் பிரகிருதி வெண்மை, சிகப்பு, கறுப்பு என்னும் மூன்றுவித நிறங்களோடு மூன்று விதச் சக்திகளாயிற்று. வெண்மை நிறத்ததே மாயா சக்தி. சிகப்பு நிறத்தது அவித்யா சக்தி. கறுப்பு நிறுத்தது ஆவரண விக்ஷேப சக்தி. இவற்றை முறையே மாயை, அறியாமை [அஞ்ஞானம்]; முனைப்பு [அகங்காரம்] எனச் சொல்லலாம்:

மாயா சக்தி சத்துவ குணத்தை முதன்மையாகக் கொண்டு விளங்கும் அதில் பரப் பிரம்மம் பிரதிபலிப்பதினால் தோன்றிய பிரதிபிம்பமே ஈஸ்வரன் என்று கூறப்படும். ஈஸ்வரன் அந்த மாயையைத் தன் வசப் படுத்திக் கொண்டு பிருமா விஷ்ணு ருத்திர வடிவமாக நின்று உலகங்கள் யாவையும் படைத்தல், காத்தல், அழித்தல் [சிருஷ்டி, ஸ்திதி, சம்காரம்] என்னும் முத்தொழில்களையும் இயற்றி விளையாடி வருகிறான்.

எனவே, பரப் பிரம்மத்திலிருந்து மாயையும், மாயையிலிருந்து அவித்தை எனப்படும் அறியாமையும் [அஞ்ஞானமும்,] அந்த அவித்தை யிலிருந்து ஆவரண விக்ஷேப சக்தி எனப்படும். அகங்கார ஆற்றலும், அந்த அகங்காரத்திலிருந்து ரஸம், ரூபம், ஸ்பரிசம், சப்தம், கந்தம் [சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம்] எனப்படும் ஐந்து நுண்பொருட் களான பஞ்ச தன் மாத்திரைகளும், அவற்றிலிருந்து நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் [பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம்] எனப்படும் பருப் பொருள்களான ஐம்பெரும் பூதங்களும், அப்பஞ்ச பூதங்களினால் பிரபஞ்சமும் பிராணிகளும் உண்டாயின. மாயையினால் உண்டான பிர பஞ்சமும் மாயா சரீரமும் தோன்றி மறைந்து தோன்றி மறைந்து ஜீவன்களை மீண்டும் மீண்டும் பிறப்பு இறப்புகளுக்கு ஆளாக்கிக் கொண்டே வரும். முடிவில், எல்லாம் அழிவுறும் பிரளய காலத்தில், எல்லா நதிகளும் கடல் நீரிலே உண்டாகிக் கடைசியில் கடலிலே விழுந்து ஒன்றாகக் கலந்து விடுவது போலவே, பிருமா முதல் மனிதர் மிருகங்கள் முதலான சராசரப் பொருட்களெல்லாம் எந்தப் பரப்பிரம்மத்திலிருந்து உண்டா யினவோ அந்தப் பரம் [illegible] ஒன்று கலந்து ஏகமாய் ஐக்கியமாகிவிடும்,

## நம் உடல்

மனித உடலானது அவரவர் கையினல் எட்டு சாண் அளவு நீளமும், நான்கு சான் அளவு பருமனும், 96 விரற்கடைப் பிரமாணமும் உள்ளதாகும். இந்த மனித உடம்பில் 96 தத்துவங்கள் அடங்கியிருக்கின்றன.

## உடலின் தத்துவங்கள்: 96

அவையாவன: உடலின் வாசல்கள் 9ம், ஆன்ம தத்துவங்கள் 24ம் தாதுக்கள் 7ம், கோசங்கள் 5ம், குணங்கள் 3ம், மலங்கள் 3ம், பிணிகள் அல்லது வியாதிகள் 3ம், ராகங்கள் அல்லது விகாரங்கள் 8ம், ஆதாரங்கள் 6ம், மண்டலங்கள் 3ம், நாடிகள் 10ம், வாயுக்கள் 10ம், அவத்தைகள் 5ம் ஆக தத்துவங்கள் 96.

## உடலின் வாசல்கள் ஒன்பது

கண்கள் இரண்டு; செவிகள் இரண்டு; மூக்குத் துவாரங்கள் இரண்டு, வாய் ஒன்று; குய்யம் எனப்படும் கருவாயான ஆண் குறி அல்லது பெண் குறி ஒன்று; குதம் எனப்படும் மலவாய் ஒன்று ஆக வாசல்கள் ஒன்பது.

## ஆன்ம தத்துவங்கள் 24

அவையாவன: பூதங்கள் 5; ஞானேந்திரியங்கள் 5; கர்மேந்திரியங்கள் 5; தன் மாத்திரைகள் 5; அந்தக் கரணங்கள் 4 ஆக 24.

## பூதங்கள் 5

இவை பஞ்ச பூதங்கள் எனப்படும். அவையாவன: 1. பிருதிவி [பூமி] 2. அப்பு, [ஜலம்] 3. தேயு, [அக்னி] 4. வாயு, 5, ஆகாயம். இவை முறையே தமிழில் 1. நிலம் [மண்], 2. நீர் [புனல்] 3, நெருப்பு [அனல்] 4. காற்று [கால்], 5. விசும்பு என வகுக்கப்பட்டு ஐம்பெரும் பூதங்கள் ஐந்து பருப்பொருள்கள் எனவும் வழங்கப்படும்.

## ஐம்பூதங்களால் உடல் உண்டாதல்

நிலம், நீர், நெருப்பு, காற்று, விசும்பு எனப்படும் ஐந்து பருப்பொருட்களில், அதாவது பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் எனப்படும் ஐம்பெரும் பூதங்களில் ஒவ்வொன்றும் சமஷ்டி வியஷ்டி என இரண்டு பாகங்களாகி இரண்டு பூதங்களாயிற்று. சமஷ்டி என்ருல் ஒன்ருயிருத்தல். இதற்கு உதாரணம் தோப்பு. வியஷ்டி என்ருல் வெவ்வேருக இருத்தல். இதற்கு உதாரணம்:—மரம். இவற்றில் முதற்பாகப் பஞ்ச பூதங்களே பிரபஞ்சமாயிற்று. இரண்டாவது பாகப் பஞ்ச பூதங்கள் இருபத்தைந்து தத்துவங்களாகி, அவை ஒருங்கு சேர்ந்து மனித உடல் உண்டாயிற்று.

அதன் விளக்கம்:—முதலில் ஆகாயம் இரண்டு பாகங்களானபோது, முதற் பாதிப் பாகமான சமஷ்டி ஆகாயம் ஞாதாவாயிற்று. அதாவது அதில் தோன்றிய பிரம்மமும், பிரம்மத்தின் பிரதிபிம்பமும் கூடியதே ஞாதாவாகும். இந்த ஞாதாவை அக்ஷரன், எனவும், க்ஷேத்ரஞ்ஞன் எனவும், புருஷன் எனவும், ஜீவன் எனவும் சொல்வார்கள்.

ஆகாயத்தின் இரண்டாவது பாதிப் பாகமான வியஷ்டி ஆகாசத்தை நான்கு பாகங்களாக்கி, அவற்றில் முதற்பாக வியஷ்டி ஆகாசத்தை காற்றோடு [வாயுவோடு] சேர்த்தபோது சங்கல்பம் [மனஸ்] என்னும் மனத் தத்துவம் பிறந்தது. இரண்டாவது பாக வியஷ்டி ஆகாசத்தை நெருப்போடு [தேயுவோடு] சேர்த்தபோது புத்தி [அறிவு] என்னும் தத்துவம் பிறந்தது. மூன்றாவது பாக வியஷ்டி ஆகா த்தை நீரோடு [அப்புவோடு] சேர்த்தபோது சித்தம் [நினைவிறுத்தல்] என்னும் தத்துவம் பிறந்தது. நான்காவது பாக வியஷ்டி ஆகாசத்தை நிலத்தோடு [பிருதிவியோடு] சேர்த்தபோது அகங்காரம் [முனைப்பு] என்னும் தத்துவம் பிறந்தது. இந்நான்கும் அந்தக்கரணங்கள் அல்லது அகக் கருவிகள் எனக் கூறப்படும்.

அடுத்ததாக வாயு [காற்று] இரண்டு பாகங்களாகி அவற்றில் முதற் பாதிப்பாகமான சமஷ்டி வாயுவானது வியான வாயுவாக [தொழிற் காற்றாக] மாறியது. இரண்டாவது பாதிப் பாகமான வியஷ்டி வாயுவோ நான்கு பாகங்களாகப் பிரிந்து, முதற்பாக வியஷ்டி வாயுவை ஆகாசத்தோடு சேர்த்தபோது சமான வாயு (நிரவுக்காற்று) பிறந்தது, இரண்டாவது பாக வியஷ்டி வாயுவை நெருப்போடு சேர்த்த போது உதான வாயு (ஒலிக் காற்று) பிறந்தது, மூன்றாவது பாக வியுஷ்டி வாயுவை நீரோடு சேர்த்த போது பிராண வாயு (உயிர்க் காற்று) பிறந்தது. நான்காவது பாக வியஷ்டி வாயுவை பிருதிவியோடு (நிலத்தோடு அல்லது மண்ணோடு) சேர்த்தபோது அபானவாயு (மலக் காற்று) பிறந்தது. இவ்வைந்து வாயுக் களும் எல்லா ஜீவராசிகளுக்கும் பஞ்ச பிராணன்களாக இருந்து வருகின்றன.

அடுத்ததாக தேயு அக்கினி (நெருப்பு) இரண்டு பாகங்களாகி அவற்றில் முதற்பாதிப் பாகமான சமஷ்டி அக்கினியோ கண்களாயின. இரண்டாவது பாதிப் பாகமான வியஷ்டி அக்கினி நீயா நான்கு பாகங்களாகப் பிரிந்து, அவற்றில் முதற்பாக வியஷ்டி அக்கினியை ஆகாசத்தோடு சேர்த்தபோது செவிகள் தோன்றின. இரண்டாவது பாக வியஷ்டி அக்கினியை வாயுவோடு சேர்த்தபோது உடல் பிறந்தது. மூன்றாவது பாக வியஷ்டி அக்னியை நீரோடு சேர்த்த போது வாய் அல்லது நாக்கு தோன்றியது. நான்காவது பாக வியஷ்டி அக்கினியை பிருதிவியோடு (மண்ணோடு) சேர்த்தபோது மூக்கு தோன்றியது.

அடுத்ததாக அப்பு (நீர் அல்லது ஜலம்) இரண்டு பாகங்களாகி, அவற்றில் முதற்பாதிப் பாகமான சமஷ்டி ஜலமோ ரசம் (சுவை) என்னும் தன்மாத்திரை ஆயிற்று. அதாவது ருசி அறிவதாயிற்று. இரண்டாவது பாதிப் பாகமான வியஷ்டி ஜலமோ நான்கு பாகங்களாகி, அவற்றில் முதற்பாகத்தை ஆகாசத்தோடு சேர்த்தபோது சப்தம் (ஓசை) பிறந்தது. இரண்டாவது பாகத்தை வாயுவோடு சேர்த்த போது ஸ்பரிசம் (ஊறு) தோன்றியது. மூன்றாவது பாகத்தை நெருப்போடு சேர்த்தபோது ரூபம் [ஒளி—பார்வை] பிறந்தது. நான்காவது பாகத்தை பிருதிவியோடு [மண்ணோடு] சேர்த்த போது கந்தம் [நாற்றம்—வாசனை நுகர்தல்] பிறந்தது.

அடுத்ததாக பிருதிவி [நிலம், பூமி, மண் எனப்படுவது] இரண்டு பாகங்களாகி, அவற்றில் முதற் பாதிப் பாகமான சமஷ்டி பிருதிவி யானது குதம் [மலத்தைத் தள்ளும் மலவாய்] ஆயிற்று. பிறகு இரண்டாவது பாதிப் பாகமான வியஷ்டிப் பிருதிவ்யோ மேலும் நான்கு பாகங்களாகப் பிரிந்து, அவற்றில் முதற் பாகத்தை ஆகாசத்தோடு சேர்த்தபோது வாக்கு [பேசுவதற்குரிய வாய்] தோன்றியது.

இரண்டாவது பாகத்தை வாயுவோடு [காற்றோடு] சேர்த்தபோது பாணி [கொடுப்பதற்கும் வாங்குவதற்கும் உரிய கை] தோன்றியது. மூன்றாவது பாகத்தை நெருப்போடு சேர்த்தபோது பாதம் [நடப்பதற்கும் நிற்பதற்கும் உரிய கால்] தோன்றியது, நான்காவது பாகத்தை நீரோடு சேர்த்தபோது குய்யம [அதாவது ஆண் பெண் இன்பத்திற்குரிய மர்மக் குறி] தோன்றியது.

மேற்கூறிய இருபத்தைந்து தத்துவங்களும் சேர்ந்து உடல் பிறக்கிறது.

ரஸம், ரூபம், ஸ்பரிசம், சப்தம், கந்தம் [சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம்] என்னும் ஐந்து குணங்களையுடைய பிருதிவியினால் [மண் தத்துவத்தினால்] தாவர ஜங்கம உருவங்களான பிரபஞ்சம் அனைத்தையும் பிரும்மதேவன் படைக்கிறார். சப்த ஸ்பரிச ரூப ரசம் என்னும் நான்கு குணங்களை உடைய அப்புவினால் [நீர்த் தத்துவத்தினால்] பிரபஞ்சங்கள் அனைத்தையும் மகாவிஷ்ணு காத்தருள்கிறார். சப்த ஸ்பரிச ரூபம் என்னும் மூன்று குணங்களை உடைய தேயுவினால் [நெருப்புத் தத்துவத்தினால்] பிரபஞ்சங்கள் அனைத்தையும் ருத்திரர் அழிக்கிறார், சப்த ஸ்பரிசம் என்னும் இரண்டு குணங்களை உடைய வாயுவினால் [காற்றுத் தத்துவத்தினால்] மகேஸ்வரர் மாயா சம்பந்தமுள்ள ஜீவன்களுக்கெல்லாம் பிரமையை உண்டாக்குகிறார், சப்தம் என்னும் ஒரே குணமுள்ள ஆகாசத்தினால் ஜீவன்களுக்கு ஞானத்தை [அறிவை] சதாசிவம் உண்டாக்குகிறார்,

## பஞ்ச ஞானேந்திரியங்கள் (ஐம்பொறிகள்)

1. தொக்கு, 2. சிங்குவை, 3. சட்சு, 4. ஆக்கிராணம், 5. சோத்திரம், இவை தமிழில் முறையே 1 மெய், 2. வாய், 3. கண், 4. மூக்கு, 5. செவி என வகுக்கப்பட்டு ஐம்பொறிகள் என வழங்கப்படும்.

இவற்றின் இயல்பு:— 1 மெய் [உடம்புத் தோல்] வாயுவின் அம்சமாகையால் அதன் தன்மைகளான குளிர்ச்சி, வெப்பம், மென்மை, வன்மை என்னும் நான்கு வித ஸ்பரிசங்களையும் உணர்ந்தறியும்.

2. வாய் அல்லது நாக்கு அப்புவின் [நீரின்] அம்சமாகையால் அதன் தன்மைகளான உப்பு, புளிப்பு, இனிப்பு, கைப்பு, கார்ப்பு, துவர்ப்பு என்னும் அறுசுவைகளையும் [ரசத்தை] ருசித்தறியும்.

3. கண்: தேயுவின் [நெருப்பின்] அம்சமாகையால் அதன் ஒளியை அதாவது கறுப்பு, சிகப்பு, பச்சை, நீலம், மாசிர நிறம், நீளம், குட்டை, பருமன், மெலிவு முதலான பத்துவித குணங்களையும் [ரூபத்தை] பார்த்தறியும்.

4. மூக்கு:— பிருதிவியின் [மண்ணின்] அம்சமாகையால் அதன் தன்மைகளான சுகந்தம், துர்க் கந்தம் என்னும் வாசனைகளை நுகர்ந்தறியும்.

5, செவி:— ஆகாசத்தின் [விசும்பின்] அம்சமாகையால் அதன் குணங்களான பலவித சப்தத்தையும் [ஓசையையும்] கேட்டறியும்!

இவை ஐந்தில் ஒவ்வொன்றும் ஒவ்வொன்றை அறிவதால் பஞ்ச ஞானேந்திரியங்கள் எனக் கூறப்படுகிறது.

## பஞ்ச கர்மேந்திரியங்கள்

1. வாக்கு: 2, பாணி: 3. பாதம்; 4. பாயுரு: 5. உபஸ்தம். கன்மேந்திரியங்கள் எனப்படும். இவை தமிழில் முறையே. 1. வாய்: 2. கை; 3. கால்; 4. மலவாய்; [குதம்] 5. கருவாய் என வகுக்கப்பட்டு ஐந்து தொழில் உறுப்புக்கள் என வழங்கப்படும்.

இவற்றின் செயல்கள்:— முறையே 1. வசனம்; 2. தானம், 3. கமனம்: 4. விசர்ச்சனம் 5. ஆனந்தம். இவை தமிழில் முறையே 1. சொல்லல், 2. நடத்தல்; 3. ஏற்றல், கொடுத்தல்; 4. விடுதல், 5. மகிழ்தல் என வழங்கப்படுகின்றன.

1. வாக்கு—வாய். இது ஆகாசத்தின் அம்சமாகையால், அதன் குணமாக நின்று வசனிப்பது வாக்கு ஆகும்!

2. பாணி— கை. இது வாயுவின் காற்றின், அம்சமாகையால் கொடுத்தல், வாங்கல், பிடித்தல், விடுதல் முதலானவற்றைச் செய்யும்.

3. பாதம்—கால். இது தேயுவின் [நெருப்பின்] அம்சமாகையால், நடத்தல், நிற்றல், அமர்தல், எழுந்திருத்தல் முதலானவற்றைச் செய்யும்.

4. பாயுரு—குதம், மலவாய். இது பிருதிவியின் [மண்ணின்] அம்சமாகையால் மலஜலங்களை வெளியே தள்ளும்.

5. உபஸ்தம்—கருவாய் அல்லது ஆண் பெண் மர்மக்குறி. இது அப்புவின் [நீரின்] அம்சமாகையால் சிறு நீர் கழிப்பதோடு ஆணின் இன்பச் சுரப்பான சுக்கிலத்தையும் பெண்ணின் இன்பச் சுரப்பான சுரோணிதத்தையும் வெளிப்படுத்தி போகானந்தம் விளைவிக்கும்.

இவை ஐந்தில் ஒவ்வொன்றும் ஒவ்வொரு காரியம் செய்வதால் கர்மேந்திரியங்கள் என வழங்கப்படுகின்றன.

## பஞ்ச தன்மாத்திரைகள்

1. ரசம்; 2. ரூபம்; 3. ஸ்பரிசம்; 4. சப்தம்; 5 கந்தம். இவை தமிழில் முறையே 1. சுவை; 2. ஒளி; 3. ஊறு; 4, ஓசை; 5. நாற்றம் என வகுக்கப்பட்டு ஐந்து நுண்ணிய பொருள்கள் என வழங்கப்படும்.

இவற்றின் இயல்புகள்:—

1. ரஸம்—நீரின் தன் மாத்திரையான இது நாவில் நீர் ஸம்பந்தமிருப்பதால் அந்த நாவிலிருந்து அறு சுவைகளின் பேதங்களை உணர்விக்கும்.

2. ரூபம்—தேயுவின் [நெருப்பின்] தன் மாத்திரையான இது, கண்களில் நெருப்பின் இயல்பு சம்பந்தப்பட்டிருப்பதால் பத்து விதமான உருவங்களையும் விழிவழியே காண்பிக்கும்.

3. ஸ்பரிசம்—வாயுவின் தன் மாத்திரையான இது, உடலில் பிராணன் முதலான வாயுக்கள் அனைத்தோடும் வியாபித்திருப்பதால் தொட்டுக் காட்டும் ஸ்பரிச குணத்தை உடலிலிருந்து உணர்த்தும்.

4. சப்தம்—ஆகாயத்தின் தன் மாத்திரையான இது காதின் உட்புறத்திலுள்ள மெல்லிய ஜவ்வின் வழியாக ஓசையை உணர்விக்கும்.

5. கந்தம்— பிருதிவியின் [மண்ணின்] தன் மாத்திரையான இது மூக்கில் பிருதிவியின் ஸம்பந்த மிருப்பதால் அந்த மூக்கின் வழியே நறுமணம் துர்க்கந்தமான வாசனைகளை அறிவிக்கும்.

ஸப்தமானது ஆகாயத்திலும் செவியிலும் ஒடுங்கும்,
ஸ்பரிசமானது காற்றிலும் உடம்பிலும் ஒடுங்கும்.
ரூபமானது நெருப்பிலும் கண்ணிலும் ஒடுங்கும்.
ரஸமானது நீரிலும் நாவிலும் ஒடுங்கும்;
கந்தமானது மண்ணிலும் மூக்கிலும் ஒடுங்கும்.
வசனமானது வாக்கிலும் ஆகாயத்திலும் ஒடுங்கும்.
கமனமானது காற்றிலும் காலிலும் ஒடுங்கும்,
தானமானது நெருப்பிலும் கையிலும் ஒடுங்கும்.
விசர்க்கமானது நீரிலும் குதத்திலும் ஒடுங்கும்.
ஆனந்தமானது மண்ணிலும் குய்யத்திலும் ஒடுங்கும்.

## அந்தக்கரணங்கள் (அகக்கருவிகள்)

1. மனஸ்; 2. புத்தி; 3. சித்தம்; 4. அகங்காரம் இவை தமிழில் முறையே, 1. மனம்; 2. அறிவு; 3. நினைவு; 4. முனைப்பு என வகுக்கப்பட்டு அகக் கருவிகள் நான்கு என வழங்கப்படும்.

இவற்றின் இயல்புகள்:—

மனம் நினைக்கும்; புத்தி நிச்சயிக்கும்; அகங்காரம் கொண்டெழுப்பும்; சித்தம் மூன்றுக்கும் காரணமாக இருக்கும்.

1. மனம்—இது வாயுவின் அம்சமாகையால் தன் சொரூப குணமான நினைப்பு மறப்பு என்னும் ஸங்கல்ப விகல்பங்களைச் செய்து கொண்டு வாயுவைப் போலவே அலைந்து திரியும். இதற்கு அதிதேவதை-சந்திரன்; ஸ்தானம்—நாபி. [கொப்பூழ், உந்தி]

2. புத்தி—இது தேயுவின் [நெருப்பின்] அம்சமாகையால் பொருட்களின் சுய உருவை நிச்சயிக்கும் [illegible] விருத்தியே புத்தியாகும். மேலும் இது செயல்களையும் பொருள் வகைகளையும் நன்மை தீமைகளையும்

ஆராய்ந்து நிச்சயித்து உணரும், இதற்கு அதிதேவதை—பிரமன். ஸ்தானம்—முகம்.

3. சித்தம்—இது அப்புவின் [நீரின்] அம்சமாகையால் பொருளின் நினைப்பே சித்தமாகும், இது பொறிகளுக்கு சலனத்தை விளைவித்து அதன் வழியே விஷயங்களுக்கு இழுத்துச் செல்லும். சித்தமே மனம். இவ்விரண்டும் ஒரே பொருளாக இருப்பதால் இதற்கும் ஸ்தானம் நாபியாகும். இதற்கு அதிதேவதை திருமால்.

4. அகங்காரம்—இது பிருதிவியின் [மண்ணின்] அம்சமாகையால் ஊனுடலை 'நான்' என்று அபிமானிக்கும் வடிவவிருத்தியே அகங்காரமாகும். இது செயல்களை ஆழ்ந்தாலோசிக்காமல் 'நான்' 'எனது' என்று அபிமானித்து முனைப்புக் கொண்டு புண்ணிய பாபங்களைச் செய்து கொண்டிருக்கும். இதற்கு அதிதேவதை—ருத்திரன், ஸ்தானம்—இருதயம்.

இந்நான்கும் உடலில் வியாபித்து ஞானேந்திரியங்களையும் கர்மேந்திரியங்களையும் அவ்வவ் விருத்திகளில் புகுத்துகின்றன.

## தாதுக்கள் 7

1. இரசம்; 2. இரத்தம் [உதிரம்]; 3. மாமிசம்; 4. மேதஸ்; 5, அஸ்தி 6. மச்சை; 7. ஆணின் சுக்கிலம் அல்லது பெண்ணின் சுரோணிதம் [ஆண் பெண் இன்பச் சுரப்பு. இவை தமிழில் முறையே, 1. சாரம்; 2: செந்நீர்; 3. ஊன்; 4. கொழுப்பு; 5. எலும்பு அல்லது என்பு; 6. மூளை; 7 வெண்ணீர் என வழங்கும்.

## பஞ்ச கோசங்கள் (ஐவுடம்புகள்)

1. அன்னமய கோசம்; 2. பிராணமய கோசம்; 3. மனோமய கோசம்; 4. விஞ்ஞானமய கோசம்; 5. ஆனந்தமய கோசம். இவை தமிழில் முறையே, 1. உணவுடம்பு அல்லது பருவுடம்பு; 2. காற்று உடம்பு அல்லது வளியுடம்பு; 3. மனவுடம்பு; 4. அறிவுடம்பு: 5. இன்ப உடம்பு என வகுக்கப்பட்டு ஐந்து உடம்புகள் என வழங்கப்படும்.

## இவற்றின் இயல்புகள்

ஏழு தாதுக்களால் எடுத்தது அன்னமயகோசமாகும். அன்ன சாரத்தினுல் பிராணனும் பலமும் அடங்கியிருப்பது பிராணமய கோசமாகும். பிராண பலத்தினுல் வந்து தோன்றியிருப்பது மனோமய கோசமாகும். அந்த மனதில் [வித்தை] விஞ்ஞானம் தோன்றுவதினுல் ஏற்படுவது விஞ்ஞான மய கோசமாகும். அந்த விஞ்ஞானத்தால் [வித்தையால்] ஆனந்தம் தோன்றும் போது ஆனந்தமய கோசமாகும்.

1. அன்னமய கோசம்—தாய் தந்தையர் அருந்திய அன்னத்தினுல் ஆண் பெண் இன்ப உறவு சுரப்பிகளான சுக்கில சோணிதங்கள் உண்டாகி அவற்றுல் தாயின் உதிரத்தில் கருத்தரித்து குழந்தை பிறந்து அன்னம் பால் முதலான உணவுகளால் நாள் தோறும் வளர்ந்து தூலமான கை கால்கள் நீண்டு. உடல் அவ்வப்போது மாறுபாடுகள், வளர்ச்சி குன்றல் குற

தல், நலிதல், நசித்தல் முதலான விகாரங்களுக்கு இலக்காகி சப்த தாது மயமாய் தோன்றும். ஆதலின் இந்த தூலசரீரம் [பருவுடல்] அன்னமய கோசம் என வழங்கப்படுகிறது. இது மரணமடைந்த பிறகு அன்னமய மான பிருதிவியில் [மண்ணில்] ஒடுங்கும். இதற்கு இஷ்டமானவை ஜீவாத்ம மனுஷ்யத்வம் முதலான தர்மங்கள்.

2. பிராணமயகோசம்—வாக்கு, பாணி, பாதம், பாயுரு, உபஸ்தம் என்னும் பஞ்சகர்மேந்திரியங்களும், அபானன், உதானன், சமானன், வியானன் என்னும் பஞ்ச பிராணன்களும் சேர்ந்தது பிராணமய கோசம் பிராணவாயு முதலான பத்துவித வாயுக்களும் அன்னமய கோசத்தில் சஞ்சரிக்கும்போது பிராணமய கோசத்திற்கும் பரமாத்மாவிற்கும்சேர்க்கை உண்டாகும், பரமாத்மாவில் உள்ள சத்து, சித்து, ஆனந்தம் என்னும் குணங்கள் பிராணமய கோசத்தில் உண்டாகியிருப்பதால் மனிதன் பிராணன் உடையவனுகிருன். 'நான் பசியும் தாபமும் ஆசையும் சாமர்த்தியமும் பலமும் வீரதீரமும் உள்ளவன், நான் வாயாடி, ஊமை, மூடவன், குருடன் என்னும் இவை போன்றவை பிராணமய கோசத்தின் குணங்களாகும். இது உடலில் உச்சிமுதல் உள்ளங்கால் வரை எங்கும் அந்தரங்கமாய் வியாபித்து கண் முதலான இந்திரியங்களுக்கு பலத்தை உண்டாக்கி அவற்றை நல் வழி யிலோ தீய வழியிலோ நடத்திச் செல்கிறது.

3. மனோமய கோசம்— மனதோடு மெய், வாய், கண், மூக்கு, செவி எனும் பஞ்சஞானேந்திரியங்களும் சேர்ந்து சப்தம் முதலான விஷயசங்கல்ப தர்மங்களைச் செய்யும் போது மனோமய கோசம் என வழங்கப்படும். இதன் விருப்பம்—சங்கற்பம் முதலான தர்மங்களாகும். ஆத்மா என்னும் சச்சிதானந்தம் மனோமய கோசத்திலும் சேர்ந்திருப்பதால் இந்த மனோமய கோசத்திற்கும் ஆத்மாவிற்கும் சேர்க்கை உண்டாகிறது. இது பிராணமய கோசத்திற்கு வேருக இருந்து காமக்குரோதம் முதலான வியாபாரங்களை உண்டாக்கி, 'நான்' 'எனது' என்னும் விகாரங்களை உடையதாக விளங்கு கிறது.

4. விஞ்ஞானமய கோசம்—புத்தியோடு ஞானேந்திரியங்களான ஐம் பொறிகளும் சேர்ந்து அன்னமய பிராணமய மனோமய கோசங்களோடு கூடி, அந்தக்கரணத்திலுள்ள தியானம் மனம் முதலானவற்றின் விருத்தி எப்போது உண்டாகிறதோ அப்போது விஞ்ஞானமய கோசம் எனப்படும். 'நான் புத்திசாலி, பக்தன், செயலாற்ற வல்லவன், ஆசையற்றவன்' என் பன போன்றவை யெல்லாம் இந்தக் கோசத்தின் கர்த்துருத்துவாதி குணங் களாகும்.

மேற்குறிப்பிட்ட பிராணமயம் மனோமயம் விஞ்ஞானமயம் என்னும் மூன்று கோசங்களாலும் சூக்ஷ்ம சரீரம் [நுண்ணுடல்] நிலைத்து நிற்கும்.

5. ஆனந்தமய கோசம்—மேற்கூறிய நான்கு கோசங்களும் அஞ் ஞானத்தோடு [அறியாமையோடு] சேர்ந்து நுட்பமான ஆல விதைக்குள் பெரிய ஆலமரம் அடங்கியிருப்பது போல் சொரூப சுகத்தில் தன் காரண ஞானம் அடங்கியிருக்கும் போது ஆனந்த மய கோசம் என வழங்கப்படும். பிரியம், மோதம், பிரமோதம் என்னும் விருத்திகளோடு கூடிய அஞ்ஞானம் முதன்மையாகவுள்ள அந்தக்கரணமாகும். இது பிரியம் என்பதுவிருப்பமான பொருளைப் பார்த்ததும் உண்டாகும் ஆனந்தம். மோதம் என்பது அப்

பொருள் தன் கைக்குக் கிடைத்ததும் உண்டாகும் ஆனந்தம். பிரமோதம் என்பது தன் கைக்குக் கிடைத்த பொருளை தான் அனுபவித்ததும் உண்டாகும் ஆனந்தம். ஆத்மா சச்சிதானந்தத்தோடு இருப்பதால் ஆனந்தம் தோன்றுகிறது. எனவே ஆனந்தமய கோசத்திற்கும் பரமாத்மாவுக்கும் சேர்க்கை உண்டாகிறது. இதற்கு இஷ்டமானவை போகத்துருத்வாதி விகாரங்களாகும்.

இவ்வைந்து கோசங்களோடு ஆத்மா சேர்ந்திருந்தாலும் பஞ்சகோசங்களுக்கு ஆத்மா வேறானதாகும். புளியை அதன் ஓடு மூடிக்கொண்டிருப்பது போல் இவ்வைந்து கோசங்களும் பரமாத்மாவையும் ஜீவாத்மாவையும் மூடிக் கொண்டு அவற்றைக் காணப்படாமல் செய்வதினால் இவை கோசங்கள் எனப்படுகின்றன.

## குணங்கள் 3 (திரிகுணங்கள்)

1. ராஜஸம்; 2. தாமஸம்; 3. ஸாத்விகம் அல்லது சத்துவம் இவை தமிழில் முறையே 1. மனவெழுச்சி; 2. மயல் அல்லது மயக்கம்; 3- நன்மை அல்லது அமைதி என வகுக்கப்பட்டு மூன்று குணங்கள் என வழங்கப்படும்,

இவற்றின் இயல்புகள்:—

மாயையினால் உண்டான இம்மூன்று குணங்களும் உடலைமூடிக் கொண்டு எந்த விகாரமுமற்ற நாசரஹிதனான ஆத்மாவை மறைக்கின்றன. [கீதை]

1. ராஜஸம்—நானே கர்த்தா, நானே பிரபு என்று அகங்காரம் கொண்டிருப்பவன் ராஜஸன். அதிகக் களிப்பு, அகங்காரம், போகம், இடும்பை, சுவிதசேதம், புகழ், வீரம், ஈகை முதலானவை இதன் தன்மைகளாகும்,

2. தாமஸம்—தூக்கம், சோம்பல், அலட்சியம்; ஆலஸ்யம், மோகம், சம்போகம் [ஆண் பெண் கலவியின்பம்], திருட்டுத்தனம், கள்ளுண்ணல், மோசம், கோபம் முதலான குணங்களை உடையவன் தாமஸனாவான்.

3. ஸாத்வீகம் [சத்துவம்]—வாய்மை [சத்தியம்], கருணை, பொய்யாமை, கொல்லாமை [அஹிம்சை] களவின்மை, கோபமின்மை, ஆடம்பரமின்மை, பொறுமை, ஜீவகாருண்யம், விரதம், அடக்கம், ஆனந்தம் முதலான குணங்களை உடையவன் ஸாத்வீகன்.

இவற்றில் ஸாத்வீகக் குணம், உத்தமம், ராஜஸ குணம் மத்திமம்; தாமஸகுணம் அதமம்.

ஸாத்வீகக்குணம்—பரிசுத்தம், குணம் உண்டாகி நிவர்த்தி மார்க்கத்தில் செலுத்தும். சலிக்காத பகவத் பக்தியும், குருபக்தியும், நல்லவர்களிடம் பற்றுதலும், அபேத [பேதமற்ற] பிரமஞானமும் உண்டாக்கும்.

ராஜஸ குணம்—பிரவர்த்தி மார்க்கத்தில் செலுத்தும். அதாவது காமிய கர்மா அனுஷ்டானங்கள் அதன் சம்பந்தப்பட்ட தேவதா உபாசனை கள் முதலானவற்றை உண்டாக்கும்.

தாமஸ குணம்—இறைவனை மறுக்கும் நாஸ்திக புத்தி, தீய அகங்காரம் அறியாமை, அந்தகாரம் முதலானவற்றை உண்டாக்கும்.

இவை ஒவ்வொன்றும் மும்மூன்று குணங்களாகவும் விரியும். அவை யாவன:

தாமஸ ராஜஸம்; தாமஸதாமஸம்; தாமஸ ஸாத்வீகம்;—இவை தாமஸ குணத்தின் விரிவுகள்.

ஸாத்வீக தாமஸம், ஸாத்வீக ராஜயம், ஸாத்வீக ஸாத்வீகம், இவை ஸாத்வீகக் குணத்தின் விரிவுகள்.

ராஜஸ தாமஸம்; ராஜஸ ராஜஸம், ராஜஸ ஸாத்வீகம்; இவை ராஜஸ குணத்தின் விரிவுகள்.

### மலங்கள் 3 (திரிமலம்)

1. ஆணவம்; 2. மாயை; 3. கன்மம் அல்லது காமியம். இவை திரிமலம் எனப்படும். தமிழில் முறையே 1. ஆணவம்; 2. மாயை; 3. வினை என வகுக்கப்பட்டு மும்மலம் என வழங்கப்படும்.

இவற்றின் இயல்புகள்——

1. ஆணவம்—ஆத்மாவின் அறிவை மறந்து 'நான்', 'எனது' என்னும் அறியாமைகளை [அஞ்ஞானங்களை] விளைவித்து, தன்னுடைமையிலும் மனைவி மக்கள் முதலானவர்களிடமும் பிரியமூட்டி. அவற்றில் மயங்குகி ரேும் என்பதை ஆத்மா அறியாதபடி சிதைத்து ஆசைகளை உண்டாக்கிக் கொண்டே தன்னது என்று இருந்து வரும்.

2. மாயை— பிறர் உடமைகளை தனதென்று இடையூறு விளைவிப்பதும்; தொல்லைகள் புரிய முயல்வதும் இதன் தன்மைகளாம்.

3. கன்மம் [காமியம்], முன் இரண்டு மலங்களுக்கும் அனுசரித்திருக்கும். இதாகிதத்தினுல் புண்ணிய பாவங்களை விளைவிக்கும்,

இம் மூன்று மலங்களைத்தவிர மகா மாயை என்றும் திரோதானம் என்னும் இரண்டு மலங்கள் உண்டு.

மகாமாயை—தனு கரண புவன போகங்களை [உடம்பு, உறுப்பு, உலகம், நுகர் பொருள்களைக்] கொடுத்து ஒன்ருேடு ஒன்று ஒவ்வாதபடி செய்து புசிப்புகளும் வெவ்வேருகி அனுதியாக இருக்கும். ஆத்மாவுக்கு என்ன போகம் தவிர்த்தாலும் இத்தன்மை இரண்டு காலங்களிலும் ஒத்திருக்கும். ஆத்மாவை தன்னிடத்திலும் களைப்பாற்றிக் கொள்ள இடந் தந்து பிறகு ஜீவன்களுக்குப் பக்தியாகவும் விளங்கும்.

திரோதானம்— சிவசக்தியின் பதவியைத் திரோபவித்து [மறைத்துக் கொண்டு] நின்று ஆத்மாக்களுக்குப் புண்ணிய பாவங்களை மட்டும் ஊட்டி சிவசக்தியோடு கூட்டுவிக்கும்.

### பிணிகள் 3 (ரோகங்கள்)

1. வாதம்; 2. பித்தம்; 3. சிலேத்துமம் [கபம்]. இவை திரி

தோஷங்கள் [முக் குற்றங்கள்] எனவும் வழங்கப்படும்.

வாதம்—வாயுவினுல் உற்பத்தியாகி, பிராணவாயு மிகுந்து வலிவுற்று நீரும் நெருப்பும் [அப்புவும் தேயுவும்] கலந்தால் அது வாதமாகும்.

பித்தம்—அக்னி திசையில் வாயுக்களும் ஆதாரத்தைப் பற்றிப் பெரிதும் அனுசரித்து இருதய கமலத்தில் ஊன்றினுல் அது பித்தமாகும்.

சிலேத்துமம்—அப்பு, வாயு, தேயு [நீர், காற்று, நெருப்பு] இம்மூன்றும் உடலில் கலவாமல் கலங்கினுல் அது சிலேத்துமமாகும்.

## ராகங்கள் அல்லது விகாரங்கள் 8

1. காமம்; 2, குரோதம்; 3, லோபம்; 4. மோகம்; 5. மதம்; 6. மாற்சரியம். இவை மாயா சக்திகள் ஆறு எனவும் கூறப்படும் இவை தமிழில் முறையே 1. அவா அல்லது ஆசை; 2. வெகுளி அல்லது சினம்; 3. பற்றுள்ளம் அல்லது கருமித்தனம்: 4. மருள் அல்லது மயக்கம்; 5. செருக்கு அல்லது வெறி; 6, பொருமை என வகுக்கப்பட்டு உட்பகைகள் ஆறு என வழங்கப்படும், இவற்ருேடு இடம்பம், அகங்காரம் என்னும் இரண்டையும் சேர்த்து விகாரங்கள் எட்டு என்பார்கள். இவற்ருேடு தர்ப்பம், ஈர்ஷை என்னும் இரண்டையும் சேர்த்து தசவர்க்கம் என்றும் கூறுவதுண்டு.

## நம் மூச்சு

நாம் தினந்தோறும் நிமிஷத்திற்கு பதினைந்து மூச்சுகள் வீதம் மூச்சு விடுகிருேம். மூக்கின்வலது துவாரம்வழியாகவும் இடதுதுவாரம்வழியாகவும் நம்சுவாசம் நடந்துகொண்டிருக்கும்: உள்ளுக்கு இழுக்கும் மூச்சுக்கு நிஸ்வாஸம் [பூரகம்] என்றும் வெளிவிடும்மூச்சுக்கு உஸ்வாஸம் [ரேசகம்] என்றும் பெயர் வழங்கப்படுகின்றன. மூச்சைக் கட்டுதல் அல்லது மூச்சை அசைவற நிறுத்துதல் கும்பகம் எனப்படும். பூரகம், ரேசகம் என்னும்மூச்சுகள் இரண்டையும் யோகவலிமையால் எவரால் நிறுத்தி வைக்க முடிகிறதோ,அவருக்கு மனம், புத்தி, சித்தம், அகங்காரம்என்பனவற்றின் விகாரங்கள்ஒடுங்கிவிடும். இவ்வாறு இருப்பதே லயம் எனப்படும். இந்தலயம் யோகாப்பியாச சித்தி பெற்றவர்களுக்கு ஏற்படுமேஒழிய, மற்றவர்களுக்கு ஏற்படாது. நாம் மூச்சு வாங்கி விடும் நிஸ்வாஸ, உஸ்வாஸங்களுக்கு ஹம்ஸ என்ற பெயரும் வழங்கப்பெறும். இந்த நிஸ்வாஸ, உஸ்வாஸங்கள் [பூரக ரேசகங்கள்]ஒவ்வொரு ஜீவனின் உடம்பிலும் உள்ள மூலாதாரம், சுவாதிஷ்ட்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தம், ஆக்ஞேயம் என்னும் ஆறு ஆதாரங்களிலும் ஸஹஸ்ராரம் என்பதிலும் ஆக ஏழு சக்கரங்களிலும் திரிந்து கொண்டு அந்தந்த ஜீவனின் ஆயுள் பிரமாணத்தைக் காட்டிக் கொண்டு வருகின்றன.

## ஆறு ஆதாரங்கள்

1. மூலாதாரம்; 2. சுவாதிஷ்டானம்; 3. மணிபூரகம்; 4. அநாகதம்; 5. விசுத்தம்; 6. ஆக்ஞேயம். இவை தமிழில் முறையே, 1. மூலம்; 2. கொப்பூழ்; 3. மேல் வயிறு; 4. நெஞ்சம்; 5. மிடறு; 6. புருவநடு என வகுக்கப்பட்டு ஆறு நிலைகள் என வழங்கப்படுகிறது.

## மூலாதாரம்

இது குதஸ்தானம். குதம் என்றால் உடம்பிலுள்ள மலவாய். இது உடலுக்கு முதல் ஆதாரம் ஆனதால் மூலாதாரம் என்ற பெயர் உண்டாயிற்று. இது பிருதிவி [மண்] தத்துவமாகும். கால் எலும்புகள் இரண்டும் கதிரெலும்பும் கூடும் குய்யத்திற்கும். [அதாவது ஆண்குறி அல்லது பெண்குறி எனப்படும் உடம்பின் மர்மஸ்தானத்திற்கும்] குதத்திற்கும் [மலவாய்க்கும்] நடுவே, குண்டலி வட்டமாய், அந்த வட்டத்துக்கு நடுவே திரிகோண வடிவமாய், அந்தத் திரிகோணத்துக்கு நடுவே நான்கு இதழ்களுள்ள ஒரு மலர்வட்டமாக கடப்பம்பூ போல் அமைந்திருக்கும். அந்த மலருக்கு நடுவில் ஓங்கார எழுத்து மலர்ந்து நிற்கும். அந்த ஓங்காரத்தின் நடுவே விக்கினேஸ்வரரும், வல்லபை சக்தியும் வீற்றிருப்பார்கள். இதைப் பொன்னிறமும், நான்கு அட்சரங்களோடு கூடிய நான்கு இதழ் கமலமாகவும் தியானிக்கவேண்டும்.

---




குண்டலி வட்டம்
முக்கோணம்
நான்கு இதழ் கமலம்
மாணிக்க நிறம்
கணபதி
குண்டலினி சக்தி
ஓங்காரம்



இவையெல்லாம் அவ்வவ்விடத்தில் தோன்றுவது போலிருக்கும்.

## சுவாதிஷ்டானம்

மூலாதாரத்திற்குஇரண்டுவிரற்கடைக்குமேலே நெருப்பைப்போல் செந்நிறம்உடையதாய்ஆறு இதழ்களோடு சுவாதிஷ்டானம் என்ற கமலம் ஒன்று இருக்கிறது. இது பிரஜாபதியைக் குறிக்கும். பிரஜாபதி என்றால் பிரஜைகளை உற்பத்தி செய்வது. இது அக்கினித் தத்துவமாகும். ஸ்வ என்கிற சொல் பரமான லிங்கம் என்னும் அர்த்தத்தைக் கொடுப்பதாலும், தான் அனுஷ்டிப்பதற்கு இடமாக விளங்குகிறதாகையாலும், இது சுவாதிஷ்டானம் என்னும் பெயர் பெறும். இது நாற் சதுரமும், அச்சதுரத்தின் நடுவே ஆறு இதழ்களுள்ள ஒரு மலர் வட்டமும் கொண்டு, அதன் மத்தியிலே லிங்க பீடமும் வீணாத் தண்டின் அடியுமாகப் பிரகாசித்து, அதன் நடு மத்தியில் நகார எழுத்து நிற்கும். அந்த நகாரத்தின் நடுவில் பிரும்மாவும் சரஸ்வதியும் வீற்றிருப்பார்கள், இதை ஆறு அட்சர உருவங்களோடு ஆறு தளங்கள். உடையதாய்த் தியானிக்கவேண்டும்.

## சுவாதிஷ்டானம்




ब भ म य र ल

நாற் சதுரம்,
ஆறு இதழ் கமலம்

நெருப்பைப் போல் செந்நிறம்

வஜ்ரகாந்தியைப் போன்ற பிரகாசம்

பிரும்மா

சரஸ்வதி

நகாரம்

இவையெல்லாம் அவ்வவ்விடத்தில் தோன்றுவது போலிருக்கும்.



## மணிபூரகம்

சுவாதிஷ்டானத்திற்கு எட்டு விரற்கடைக்கு மேலே அதாவது நாபிஸ்தானத்தில் [கொப்பூழ் அல்லது தொப்புளின் இடத்தில்] இருப்பது மணிபூரகமாகும். இது ஆயிரத்து எட்டு நரம்பு நாடிகளும் சூழ, நாடிக்கெல்லாம் வேராக உள்ளது. இதை உந்திக் கமலம் என்றும் சொல்லுவார்கள். இது அப்புவின் [நீரின்] தத்துவமாகும். இது பீளவுபட்ட ரத்தினம் போல் பிரகாசிப்பதால் மணிபூரகம் எனப் பெயர் பெற்றது. மின்னலைப் போல் மிகவும் பிரகாசத்தோடும், பத்து இதழ்களோடும் விளங்கும் இந்தக் கமலத்தில் பத்து அட்சரங்களோடு தியானிக்க வேண்டும். இதன் சக்கர அமைப்பு; பெட்டியில் பாம்பு சுருணையாய் சுருட்டிப் படுத்திருப்பது போல், மணிபூரகம் என்னும் சக்கரத்தில் மூச்சுக்குத் தாயான பெரும் பாம்பு அந்தக் கொப்பூழில் படுத்திருக்கும், அந்த இடத்தில் ஜலம் இருப்பதாலும், சாந்த குணரான மகாவிஷ்ணு நீர் இருக்குமிடத்தில் வசிப்பவராகையாலும் அந்த ஸ்தானத்திற்கு அதிபதியாக விளங்குகிறார், அவரைக் காண்பதற்கு அந்த ஸ்தானம் ஏற்ற இடமாகும். இதன் சக்கர அமைப்பு; தொப்புளுக்கு நேரே அப்பு ஸ்தானத்தில் பத்து இதழ்களுள்ள ஒரு கமலம் வட்டமாக இருக்கும். அந்தக் கமலத்தின் நடுவில் மகார எழுத்து நிற்கும். அந்த மகாரத்திற்கு நடுவில் மகாவிஷ்ணுவும் மகாலக்ஷ்மியும் வீற்றிருப்பார்கள்.

மணிபூரகம்




ड ढ ण त थ द ध न प फ

மூன்றாம் பிறை
பத்து இதழ் கமலம்
மரகத நிறம்
திருமால்

திருமகள்
மகாரம்

இவையெல்லாம் அவ்வவ்விடத்தில் தோன்றுவது போலிருக்கும்.

## அநாகதம்

மணிபூரகத்திற்குப் பத்து விரற்கடை அளவு மேலே உதயசூரியன் போன்ற பிரகாசத்தோடு உள்ளது அநாகதமாகும். இதை இருதய கமலம் என்பார்கள். இது வாயுவின் [காற்றின்] தத்துவமாகும். வாயுஸ்தானமான இருதயத்தின் இடத்தில், அதாவது மார்பில் லிங்கஹாரம் போன்ற ஒரு கமலம் தலைகீழாய்த் தொங்கிக் கொண்டிருக்கும். இந்தக் கமலம் பன்னிரண்டு இதழ்கள் உடையதாக விளங்கி அவ்விதழ்களில் பன்னிரண்டு அட்சர சரங்கள் சப்த சொரூபமாய் உருவங்களற்று இருக்கும். இது அட்சர உருவங்களற்று சப்த பிரும்மமயமாய் இருப்பதால் அநாகதம் எனப் பெயர் பெறும். இதன் மத்தியில் பதினாயிரம் சூரிய காந்தியோடு கூடிய பாண லிங்கம் இருப்பதோடு ஆனந்தத்திற்கும் இடமாக விளங்குகிறது- இந்தக் கமலத்தின் மத்தியில் சோதி சொரூபமான ருத்திரர் எல்லாவற்றையும் பஸ்மம் செய்பவராகையால் எல்லா ஜீவன்களின் இருதய கமலத்தில் இருந்து கொண்டு உண்ணும் ஆகாரங்களை யெல்லாம் பஸ்மம் செய்கிறார். இதன் சக்கர அமைப்பு; வாயு [காற்று] ஸ்தானத்தில் முக்கோணமாய் இருக்கும். அம்முக்கோணத்தின் நடுவில் பன்னிரண்டு இதழ்களையுடைய ஒரு கமல வட்டம் இருக்கும். அந்தக் கமல வட்டத்தின் நடுவில் சிகார எழுத்து நிற்கும். அந்தச் சிகாரத்தின் நடுவில் ருத்திரனும் பார்வதியும் வீற்றிருப்பார்கள்.




பன்னிரண்டு இதழ் கமலம்
முக்கோணம்
ஸ்படிக நிறம்
ருத்திரன்
பார்வதி
சிகாரம்



வையெல்லாம் அவ்வவ்விடத்தில் தோன்றுவது போல் இருக்கும்.

## விசுத்தம்

அநாகதத்திற்கு மேலே, கண்டஸ்தானம் எனப்படும் நெஞ்சுக்குழி இடத்தில், தூம்பரவர்ணமான பெரும் ஒளியோடு விசுத்தம் என்னும் கமலம் இருக்கிறது. ஆத்மஸ்தானமான இதில் ஜீவன் இருந்து வலது நாசி யிலும் இடது நாசியிலும் சுழுத்தி என்கிற நாடியிலும் மூச்சை உள்ளுக்குள் இழுக்கும் படியும் மறுபடி வெளிவிடும்படியும் செய்கிறூர். இது ஆகாசத் தின் தத்துவமாகும். இது பிரமதரிசனத்தால் ஜீவாத்மாவுக்கு சுகத்தை தரு வதால் விசுத்தம் என்று பெயர் பெறும். இதன் சக்கர அமைப்பு:—ஆறு கோணமாய், அதன் நடுவே பதினூறு இதழ்கள் உள்ள ஒரு கமல வட்டமாய் இருக்கும். அந்தக் கமலத்தின் நடுவே வகார எழுத்து நிற்கும். அந்த வகாரத்தின் நடுவில் மகேஸ்வரனும், மகேஸ்வரியும் வீற்றிருப்பார்கள். கருநிறமுள்ள இந்தக் கமலத்தின் பதினூறு தளங்களிலும் வடமொழி அ என்கிற அட்சரம் முதல் அஹ் என்கிற அட்சரம் வரை பதினூறு உயிரெழுத்து களும் உருவங்களாக அமைந்திருக்கும்.




அகாரம் முதல் அ: என்கிற அக்ஷரம் இறுதியாகவுள்ள '6 உயிர் எழுத்துகள்.

ஆறு கோணம்
பதினூறு இதழ்களுள்ள கமலம்
மேகநிறம்
மகேஸ்வரன்
மகேஸ்வரி
வகாரம்

இவையெல்லாம் அவ்வவ்விடத்தில் தோன்றுவது போலிருக்கும்.

## ஆக்ஞேயம்

விசுத்தத்திற்கு மேலே, லலாடபீடத்தில், இரண்டு கண் புருவங்களுக்கு மத்தியில் ஞானக் கண் தீபம் போல் ஒளி வீசிக் கொண்டிருக்கும். இது வீணாத்தண்டின் முடியாகவும் ஊடுருவி நிற்கும். இது மனோதத்துவமாகும். இது ஆஞ்ஞையின் சம்பந்தம் உடையதாகையால்' ஆஞ்ஞா சக்கரம் எனப் பெயர் பெறும். இதன் அமைப்பு: மூன்று இதழ்களுள்ள கமலத்தின் நடுவே யகார எழுத்தோடு இணங்கி நிற்கும். அந்த யகாரத்தின் நடுவே சதாசிவமும் மனோன்மணியும் வீற்றிருப்பார்கள். இது ஹ, க்ஷ என்னும் அக்ஷரங்களோடு கூடியது.

ஆக்ஞா சக்கரம்

க்ஷ

ய

ஹ

உ

வட்டம்
மூன்று இதழ்களுள்ள கமலம்
படிக நிறம்
சதாசிவம்
மனோன்மணி
யகாரம்.

இவையெல்லாம் அவ்வவ்விடத்தில் தோன்றுவது போலிருக்கும்.

## ஏழு சக்கரங்கள்

ஆறு ஆதாரங்களோடு ஸஹஸ்ராரம் என்பதையும் சேர்த்து ஏழு சக்கரங்கள் என்பார்கள். ஸஹஸ்ராரம் என்பது ஆக்ஞேய சக்கரத்திற்கு மேலே, தலையில் பிரம்ம கபாலத்தில், ஆயிரம் இதழ் கமலமுள்ள பிந்து ஸ்தானமாக இருப்பது. இதைப் பிந்துசக்கரம் என்று கூறுவதுண்டு. இது சிவசக்தி ஐக்கிய பாவனைக்கு உரியது. 'பூரகயோகத்தினால் வாயுவை ஆதாரத்தில் சேர்த்து, குதத்திற்கும் [மலவாயுக்கும்] குறிக்கும் நடுவேயுள்ள சக்தியை சிவக்குறியினால் கிரமமாகத் தட்டியெழுப்பி பிந்து சக்கரத்தை அடைவிக்கும்போது பரமசிவனையும் பராசக்தியையும் ஒன்று சேர்ந்திருப்பதாகப் பாவிக்க வேண்டும். அப்போது உண்டாகும் திராட்சாரஸம் போன்ற அமுதத்தை அச்சக்திக்கு ஊட்டி விட்டு ஆறு ஆதார சக்திகளையும் அந்த அமுதத்தினால் திருப்தி செய்து, அதே வழியில் மூலாதாரத்தை திரும்பி அடையச் செய்ய வேண்டும்' என்று [illegible] கூறுகிறது.

## ஏழு சக்கரங்களில் சுவாச நடப்பு:

நம் உடம்பிலுள்ள இவ்வேழு சக்கரங்களிலே நம்முடைய மூச்சு சுற்றிக் கொண்டிருப்பதால், அதன் நடப்பையும் அவ்வவ் சக்கரத்திற்குரிய அதிதேவதைகளையும் உணர வேண்டும். மூலாதாரத்திற்கு அதிதேவதை விக்கினேஸ்வரரான கணபதி. அவருக்காக காலை 6 மணி முதல் 6 மணி 40 நிமிடங்கள் வரை 600 மூச்சுகள் [ஸட்ஸதம்] நம்முள்ளே மூலாதாரத்தில் நடந்து, கணபதியின் பசியை ஆற்றி அவரைத் திருப்திப் படுத்தும். பிறகு அந்த மூச்சு சுவாதிஷ்டான சக்கரத்திற்கு சென்று அதன் அதிதேவதையான பிரஜாபதி எனும் பிரும தேவருக்காக காலை மணி 6-41 முதல் பகல் 1-20 மணி வரை ஆறுயிரம் மூச்சுகளாக [ஷட்ஸஹஸ்ரமாக] நடந்து அவருடைய பசியை ஆற்றி அவரைத் திருப்திப் படுத்தும். பிறகு மூச்சு அந்த இடத்திலிருந்து நாபி ஸ்தானத்திற்கு [கொப்பூழின் இடத்திற்கு] சென்று அங்குள்ள மணிபூரகச் சக்கரத்தினுள் நுழைந்து, அதன் அதிதேவதையான மகாவிஷ்ணுவிற்காகப் பகல்மணி 1-20 முதல் இரவு மணி 8 வரை ஆறுயிரம் மூச்சுகள் நடந்து அவருடைய பசியை ஆற்றி அவரைத் திருப்தி செய்யும். பிறகு அந்த மூச்சு அவ்விடத்திலிருந்து இருதய கமலமான அனாகதச் சக்கரத்திற்கு சென்று அதன் அதிதேவதையான ருத்திரருக்காக இரவு மணி 8-1 முதல் இரவு மணி 2-40 வரை ஆறுயிரம் மூச்சுகள் நடந்து அவரைத் திருப்திப் படுத்தும். பிறகு மூச்சு அவ்விடத்திலிருந்து கண்ட ஸ்தானத்திலுள்ள விசுத்தி சக்கரத்திற்கு சென்று அதன் அதிதேவதையான மகேஸ்வரருக்காக இரவு மணி 2-41 முதல் 3-46 வரை ஆயிரம் மூச்சுகளாக [ஸஹஸ்ரமாக] நடந்து அவரைத் திருப்திப்படுத்தும். பிறகு மூச்சு அவ்விடத்திலிருந்து புருவங்களின் மத்தியிலுள்ள ஆக்ஞேய சக்கரத்திற்கு சென்று அதன் அதிதேவதையான ஜீவன் அல்லது ஈஸ்வரனுக்காக இரவு மணி 3-47 முதல் 4-53 வரை ஆயிரம் மூச்சுகள் நடந்து அவரைத் திருப்தி செய்யும். பிறகு மூச்சு அவ்விடத்திலிருந்து தலையின் பிரம கபாலத்திலுள்ள ஸஹஸ்ராரச் சக்கரத்திற்கு சென்று அதன் அதிதேவதை



யான பரமாத்மாவாவிற்காக காலை மணி 4-54 முதல் 6 மணி வரை ஆயிரம் மூச்சுகள் நடந்து அவரைத் திருப்தி செய்யும். பிறகு அந்த மூச்சு மறுபடியும் மூலாதாரத்திலுள்ள கணபதியைத் திருப்தி செய்யச் செல்லும். இவ்வாறு வாழ்நாள் தோறும் நடந்துகொண்டிருக்கும்.

நம் உடம்பிலுள்ள இந்த ஏழுச்சக்கரங்களையும் சுட்டிக் காட்டுவதற்கே ஸ்ரீரங்கத்திலுள்ள கோவிலுக்கு ஏழு சுற்றுப் பிரகாரங்கள் கட்டப்பட்டதாகக் கூறுவார்கள். திருப்பதியை ஏழுமலை என்பதும் நம்முள் இருக்கும் இவ்வேழு சக்கரங்களைச் சுட்டிக் காட்டுவதற்கேயாகும். மேலும் சிவத்தலங்களான காஞ்சி, திருவண்ணாமலை, ஜம்புகேச்வரம், காளஹஸ்தி, சிதம்பரம், காசி, மதுரை—என்னும் க்ஷேத்திரங்களை நம் உடம்பினுள்ளே முறையே மூலாதாரம், சுவாதிஷ்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்ஞேயம், ஸஹஸ்ராரம் என்னும் ஏழு சக்கரங்களிலும் காணலாம் என்றும் கூறுவார்கள்.

## மூன்று மண்டலங்கள்

1. அக்கினி மண்டலம்; 2. ஆதித்த [சூரிய] மண்டலம்; 3. சந்திர மண்டலம், இவற்றை தமிழில் முறையே தீமண்டிலம், ஞாயிற்று மண்டிலம், திங்கள் மண்டிலம் என வழங்கலாம். இவை நம் உடலிலேயே இருப்பவை.

அக்கினி மண்டலம்;—மூலாதாரத்திற்கு இரண்டு விரலளவு மேலே, பிருதிவியும் அப்பும் [மண் தத்துவமும் நீர்த்தத்துவமும்] கூடின இடத்தில் முக்கோணமாய் நான்கு இதழ் கமலமாக இருக்கும்.

ஆதித்த [சூரிய] மண்டலம்—உந்திக்கு மேலே, இருதய கமலத்தில் அறுகோணமாய் எட்டு இதழ்க் கமலமாக இருக்கும். இது வாழைப் பூப்போல் கீழ்நோக்கியிருக்கும்.

சந்திரமண்டலம்—மூலாதாரம் முதலாக ஒவ்வொரு எழுத்தை மூன்னிட்டுக் கொண்டு தலையின் நடுவே, அக்கினி மண்டலத்தை நோக்கியவாறு கோடிச் சந்திரர்கள் உதித்ததுபோல் பிரகாசத்தோடு நிலையாக இருக்கும். இதை அமிர்தகலை என்றும் சொல்வார்கள். அமிர்தம் மேல் நோக்கியும் அக்கினி கீழ்நோக்கியும் சரியாக இருக்கும். இதன் மத்தியில் பராசக்தி வீற்றிருப்பாள்.

## நாடிகள் 10--(தசநாடிகள்)

1. இடைகலை; 2. பிங்கலை; 3. சுழுமுனை; 4. சிகுவை; 5. புருடன்; 6. காந்தாரி; 7. அத்தி; 8. அலம்புடை; 9. சங்கினி; 10. குகு. இவற்றைத் தமிழில் முறையே, 1. இடது மூச்சு அல்லது இடப்பக்க நரம்பு; 2. வலது மூச்சு அல்லது வலது பக்க நரம்பு; 3. நடுமூச்சு அல்லது நடு நரம்பு; 4. உள் நாக்கு நரம்பு, 5. வலக்கண் நரம்பு; 6. இடக்கண் நரம்பு; 7. வலச் செவி நரம்பு; 8. இடச் செவி நரம்பு; 9. கருவாய் நரம்பு; 10. மலவாய் நரம்பு என வழங்குவார்கள்.

இடைகலை—இடது மூக்கில் நடக்கும் மூச்சு. இதைச் சந்திர நாடி, என்றும் சத்திநாடி என்றும் சொல்வதுண்டு.

பிங்கலை—வலது மூக்கில் நடக்கும் மூச்சு. இதைச் சூரிய நாடி என்றும் சிவன் நாடி என்றும் சொல்வதுண்டு. இந்த நாடியும் இடைகலை நாடியும் நெற்றிச் சக்கரம் முதல் மூலாதாரம் வரை வலம் இடமாக வியாபித்து அதன் மத்தியின் சுழுமுனையை அனுசரித்து திரியும். புருவ மத்தியில் இவை இருந்து கொண்டு வலது நாசி இடது நாசிகளில் பிராணவாயுவை உஸ்வாஸ நிஸ்வாஸங்களாக நடத்திக் கொண்டிருக்கும்.

சுழுமுனை—இதை ஸுஷும்நா நாடி என்றும் சொல்வார்கள். இது மூலாதாரம் [மலவாயான குதஸ்தானம்] முதல் தலையிலுள்ள பிரம்ம கபாலம் வரையில் திரிந்து கொண்டிருக்கும் நாடி.

இவை மூன்று நாடிகளும் மூலாதாரம் முதலாக ஆறு ஆதாரங்களிலும், மூன்று மண்டலங்களிலும் ஊடுருவி முட்டி நிற்கும். இடைகலை பிங்கலை இரண்டும் சுழுமுனையிலே இயங்கிக் கத்திரிக்கோலின் பாகமாகி வீணைத் தண்டு என்னும் வில்லிற்கு நாணிட்டதுபோல் கபாலத்தை முட்டிக் குதிரை முகமாய் மூக்களவு வரை பற்றி நிற்கும். இவ்விரண்டும் மாறும் இடமான புருவங்களின் நடுவே நெற்றயிடத்தில் தாமரைக் கொடியிலுள்ள நூல்போல் சின்னஞ் சிறு ரந்திரம் உண்டு. அது தான் இடை கலை, பிங் கலை, சுழுமுனை என்னும் மூன்று நாடிகளும் கலக்குமிடமான திரிவேணி சங்கமமாகும். அதுதான் சச்சிதானந்தம் [மெய்யறிவின்பம்] இருக்கும் இடம்.

சிகுவை [உள் நாக்கு நரம்பு]—இந் நாடி மூலாதாரத்தில் தொடங்கி, உண்ணாக்கிலே நின்று, அன்னபானங்களை விழுங்கச் செய்யும்.

புருடன் [வலக்கண் நரம்பு]—இந்த நாடி மூலாதாரத்தில் தொடங்கி வலது கண் வரை வந்து நிற்கும்.

காந்தாரி [இடக்கண் நரம்பு]—இந்த நாடி மூலாதாரம் தொடங்கி இடக்கண் வரை வந்து நிற்கும்.

காந்தாரி, ஹஸ்தி ஜிஹ்வா என்னும் இரண்டு நாடிகளும் கண்களில் இருந்து கொண்டு பொருட்களைத் தெரியச் செய்யும். இருதயத்திலிருந்து மேலே வியாபித்திருக்கும்.

அத்தி—இந்த நாடி மூலாதாரம் தொடங்கி வலது காது வரை வந்து நிற்கும்.

அலம்புடை—இந்த நாடி மூலாதாரம் முதல் இடது காது வரை வந்து நிற்கும். அலம்புஷா என்ற இந்த நாடியும் பூஷா என்னும் நாடியும் செவி ஸ்தானத்திலிருந்து பற்பல சப்தங்களைக் கேட்கச் செய்யும்.

சங்கினி—இது மூலாதாரம் முதல் கருவாய் [ஆண் பெண் இனக் குறி] வரை வந்து நிற்கும்.

குகு—இது மலவாய் வரை வந்து நிற்கும். குரு எனப்படும் இந்த குகு நாடியும் சினிவாலி என்னும் நாடியும் மலஜலங்களை விடச் செய்து, அநா கதச் சக்கரம் முதல் லிங்க குத ஸ்தானம் வரை வியாபித்திருக்கும்.

ரக்தவியானன் என்னும் நாடி அநாகதம் [இருதயம்] முதல் சுவாதிஷ் டானம் [லிங்கம்] வரை வியாபித்து இனக் குறியான மர்மஸ்தானத்தில்

குரு நாடியோடு கலந்து ஆண் பெண் இன்பச் சுரப்புகளான சுக்கில சோணிதங்களை அதிகமாய் வெளியே தள்ளச் செய்யும்.

## வாயுக்கள் 10 (தசவாயுக்கள்)

1. பிராணன்; 2. அபானன்; 3. வியானன்; 4. உதானன்; 5. சமானன்; 6. நாகன்: 7. கூர்மன்; 8. கிருகரன்; 9. தேவதத்தன்; 10. தனஞ்சயன். இவை தமிழில் முறையே 1. உயிர்க் காற்று; 2. மலக் காற்று; 3. தொழிற் காற்று: 4. ஒலிக் காற்று; 5. நிரவுக் காற்று: 6. விழிக் காற்று; 7. இமைக் காற்று; 8. தும்மல் காற்று; 9. கொட்டாவிக் காற்று; 10. வீங்கல் காற்று என வகுப்பட்டு பத்து வளிகள் என வழங்கப்படும். முதல் ஐந்தும் பிரதான வாயுக்கள். மற்ற ஐந்தும் உபவாயுக்கள்.

1. பிராண வாயு—இது இருதய ஸ்தானத்திலிருந்து நாசி [மூக்கு] ரேந்திரங்களின் வழியாக மேல் நோக்கி உஸ்வாஸமாக [ரேசகமாகச்] சஞ்சரித்து பசி தாகங்களை உண்டாக்கி உண்ணும் உணவுகளை ஜீரணிக்கச் செய்யும். இது லலாட மத்தியிலே தோன்றி சந்திர நாடியிலே விழுந்து மூலாதாரத்திலே ஓம் என்று உதித்து நாபியிலுள்ள மணிபூரகச் சக்கரத்தில் ரீம் என்று மூட்டி இடை கலை பிங்கலைகளிலே ஓடி, சுபாலத்தைச் சுற்றி மூக்கு வழியாகப் புறப்பட்டு, நான்கு விரற்கடையளவு கழிந்து சென்று எட்டு விரற்கடை பிரமாணமீந்து தான் நின்ற ஸ்தானத்திலேயே தாக்கும் என்றும் கூறுவார்கள்.

2. அபானன்—மலக் காற்று. இது குதத்தையும் [மலவாயையும்] குய்யத்தையும் [கருவாயையும், மர்மக் குறியையும்] பற்றி நின்று மல மூத்திரங்களையும் ஆண் பெண் இன்பச் சுரப்புகளான சுக்கில சோணிதங்களையும் வெளியே தள்ளும்படி செய்து நிஸ்வாஸ ரூபமாக [பூரக வடிவமாகச்] சஞ்சரிக்கும்.

3. வியானன்—தொழிற் காற்று. இது உடலின் பாகங்கள் அனைத்திலும் வியாபித்து ஸ்பரிசங்களை கிரகித்துணர்த்தி கலைகளை நிறைவிக்கும். மேலும் உண்ட சோற்றைத் திப்பி வேறு சாறு வேருகச் செய்து கொண்டிருக்கும்.

4. உதானன்—ஒலிக் காற்று. இது உதாரக்கினியை எழுப்பி, கண்ட ஸ்தானத்திலிருந்து அன்னத்தை விழுங்கி, அதன் சாரத்தை நாடிகளுக்கு வியாபிக்கச் செய்து ஓசையோடு கலந்து குரல் ஒலி எழுப்பும். தூங்கும் போது கண், மூக்கு, வாய், காது. மேல் தோல் என்னும் ஐம்பொறிகளையும் அஞ்ஞானம் [அறியாமை] எனும் இருளில் அழுந்தச் செய்து, தூங்கி எழுந்தவுடன் அந்தந்தப் பொறிகளை அதனதன் ஸ்தானத்தில் இருக்கும் படி செய்யும்.

5. சமானன் [நிரவுக் காற்று]—இது நாபி ஸ்தானத்திலிருந்து உதான வாயுவினுல் அனுப்பப்படும் உணவின் சாரத்தை நாடி [நரம்பு]களுக்கு சமமாகப் பங்கிட்டு நிரவலாக்கி உடலை வளர்க்கும்.

இவை ஐந்தும் உடலில் சஞ்சரிப்பதால்தான் மனிதன் உயிரோடு சஞ்சரிக்கிறுன். அதனுல் இவை பஞ்ச பிராணன்கள் எனப்படும்.

6. நாகன்—விழிக் காற்று. இது கண்டத்தில் இருந்து வாந்தியை உண்டு பண்ணும். கண்களினால் பார்க்கச் செய்யும். மூக்கல், சோம்பல், திமிரல் முதலானவற்றையும் உண்டாக்கும்.

7. கூர்மன்—இமைக்காற்று. இது கண்களிலிருந்து திறக்கவும் மூடவும் செய்யும். மயிர்க் கூச்சல், புளகம், சிரிப்பு, முகலட்சணம் முதலானவற்றை உண்டாக்கும்.

8. கிருகரன்—தும்மற்காற்று—இது மூக்கிலிருந்து குருகுருத்து தும்மலை உண்டாக்கி அழவைத்துத் திரியும்.

9. தேவதத்தன்—[கொட்டாவிக் காற்று] இது மார்பிலிருந்து கபத்தை சேர்த்துக் கட்டிக் கொட்டாவியையும் விக்கலையும் உண்டாக்கும்.

10. தனஞ்சயன்—வீங்கல் காற்று. இது கருப்பத்திலுள்ள பிண்டத்தை வெளியே தள்ளும். பிராணன் போய் மனிதன் மாண்ட பிறகும் இது அவனுடைய உடலை விடாமல் பற்றி நின்று உடம்பை வீங்கச் செய்தும் விரிவித்தும் புழுவித்தும் நாற்றமெடுக்கும்படி செய்தும், தகனம் செய்யும் வரை உடம்பிலேயே இருந்து இறுதியில் கபாலத்தைப் பிளந்து கொண்டு போகும்:

இப்பத்து வாயுக்களும் பத்து நாடிகளில் திரிந்து கொண்டிருக்கும்.

இவற்றோடு வயிரவன், முக்கியன், அந்தரியாமி. பிரவஞ்சனன் என்னும் நான்கு வாயுக்களையும் சேர்த்து பதினான்கு வாயுக்கள் என்றும் கூறுவார்கள்.

11. வயிரவன்—கால் எலும்பும் கதிரெலும்பும் கூடியிருக்கும் இடத்திலே நின்று உடலில் அவஸ்தைகளை உண்டாக்கி ஈளை இருமல் முதலான பிணிகளை உண்டாக்கும்.

12. முக்கியன்—கை எலும்புகள் இரண்டும் கதிரெலும்பும் கூடிய இடத்தில் நின்று உடலின் யாக்கைகளைச் சிறக்க நிறுத்தும்.

13. அந்தரியாமி—ஜீவிதனுக்கு வாகனமாய் இருந்து பிராண வாயுவைத் தோற்றுவிக்கும்.

14. பிரவஞ்சனன்—பிரணவத்திற்கு இருப்பிடமாக இருக்கும். இந்தப் பிரவஞ்சனனும் மேற்கூறிய அந்தர்யாமியும் உடலுக்கு அடையாணியாகவும் அச்சாணியாகவும் விளங்குவன.

## அவத்தைகள்-6 (பஞ்சாவஸ்தைகள்)

1. சாக்கிரம்; 2. சொப்பனம்; 3. சுழுத்தி [ஸுஷுப்தி]; 4, துரியம்; 5. துரியாதீதம். இவை தமிழில் முறையே 1. நனவு; 2. கனவு; 3. உறக்கம்; 4, பேருறக்கம் [நிட்டை]; 5. உயிர்ப்படக்கம் என வகுக்கப்பட்டு ஐவகை நிலைகள் என வழங்கப்படும்.

1. சாக்கிரம் [நனவு]—புருவ மத்தியில் சதுரங்க பலத்துடன் ராஜாவைப் போல் கொலு வீற்றிருப்பது. சுவை, ஒளி முதலான ஐம்புலன்கள். வாக்கு முதலான ஐந்து கருமேந்திரியங்களின் செயல்கள்;

மனம் முதலான நான்கு அந்தக்கரணங்கள் (அகக் கருவிகள்) இவற்ருேடு பராசக்தியின் அருளால் சுகதுக்கங்களை அறிந்து நிற்கும் போது சாக்கிரம் எனப்படும்.

"கண்டன ஐந்தும் கலந்த வோரைந்தும்
உண்டன நான்கும் ஓங்கியது உணர்ந்துபின்
பண்டைபினுதி பரந்தது சாக்கிரம்
அண்டமும் தானுய் அமர்ந்தது காணே."

—திருமந்திரம்

2. சொப்பனம் [கனவு]—புருவ மத்தியில் நடுச் சக்கரத்தில் இரண்டங்குலப் பிரமாணத்திலே இருப்பது. பஞ்சேந்திரியங்களும் ஐந்து கர்மேந்திரியங்களும் கண்டத்திலே நிற்கும் கனவு நிலையே சொப்பனமாகும்.

3. சுழுத்தி [உறக்கம்]—அந்தக்கரணங்கள் நான்கும் சுழுத்தியோடு ஜீவாத்மாவைக் கூடி சுவாச இருதயத்திலே நின்று, கண்டவை கேட்டவை எதுவும் பிறருக்குச் சொல்லப் புலப்படாத நித்திரை நிலையே சுழுத்தியாகும்.

"ஆன மனமும் அறிகின்ற புத்தியும்
ஊனையிழந்து நின்றுள்ளே உயிர்ப் பெய்தி
தானமிழந்து தயங்கியவாறு போல்
ஊனையிழந்த சுழுத்தியதாமே"

—திருமந்திரம்

4. துரியம் [பேருறக்கம்]—இது நிஷ்டை நிலையாகும். சுழுத்தியை விட்டுக் கரணம் ஒன்றுடனே ஜீவாத்மா நாபிஸ்தானத்தில் நிற்கும் போது உஸ் வாஸ நிஸ் வாச மூச்சுகள் உண்டாகும். ஆகையால் இதற்குத் துரியம் என்று பெயர்.

"தானத்தெழுந்து திரியுந் துரியதானம்,
வானத்தெழுந்து போய் வையம் பிறக்கிட்டுக்
கானத்தெழுந்து கருத்தின் தலையிலே
ஊனைத் தவிர்த்து ஒளிந்திருந்தானே!"

—திருமந்திரம்

5. துரியாதீதம்—இந்திரியங்கள் பத்தும் அந்தக்கரணங்கள் நான்கும் பற்றற்று ஜீவாத்மா தானே மூலாதாரத்தில் சென்ருேங்கி, மலம், மதம், மாயை, ஸ்பரிசங்கள் எதையும் அறியாமல் நிற்கும் உயிர்ப் படக்க நிலையே துரியாதீதமாகும்.

இவற்றில் முன் நான்கு அவத்தைகளும் ஒன்ருேடு ஒன்று கலந்து மேலும் பதினறு அவத்தைகளாக வழங்கப்படும்.

1. சாக்கிரத்தில் சாக்கரம்—வார்த்தைகளைக் கேட்கும் போதாவது, விஷயத்தில் ஈடுபடும் போதாவது, மனதை வெளிவியவகாரங்களில் சிறிது

கூடப் போக விடாமல் நிலையாக நிறுத்தி, சொற்களைச் சிரத்தையுடன் கேட்டு அவற்றை மறவாதிருத்தல்.

2. சாக்கிரத்தில் சொப்பனம்—சரியாகக் கவனிக்காமல் மனதை இடையிடையே அலைய விடுவதால் சில மட்டும் நினைவில் தங்கியும் சில மறைந்து மறந்தும் போய் விடும் நிலை.

3. சாக்கிரத்தில் சுழுத்தி—விஷயங்களில் மனதை நிலை நிறுத்தாமல் முற்றிலும் வேறு பக்கம் அலைய விடுவதால் விஷயங்கள் முற்றிலும் மறந்து போய் விடும் நிலை.

4. சாக்கிரத்தில் துரியம்—விஷயங்களை ஆழ்ந்து சிந்திக்கும் நிலை.

5. சொப்பனத்தில் சாக்கிரம்—கனவு கண்டு எழுந்த பிறகு கனவில் கண்டது முழுவதையும் ஒன்று கூட விடாமல் பிறருக்குச் சொல்லும் நிலை.

6. சொப்பனத்தில் சொப்பனம்—கனவில் கண்டனவற்றில் சில மட்டும் நினைவில் தங்கியும் சில மறந்தும் போய் இருக்கும் நிலை.

7. சொப்பனத்தில் சுழுத்தி—கனவில் கண்டனவற்றை முற்றிலும் மறந்திருக்கும் நிலை.

8. சொப்பனத்தில் துரியம்—கனவில் கண்டனவற்றையெல்லாம் ஆராய்ந்து பார்த்து ஆனந்தப்படாமலும் துக்கப்படாமலும் இவையெல்லாம் மனதின் வியாபாரங்கள் எனத் தெளிந்துணர்ந்து ஆத்ம ஞானத்தை விசாரித்திருக்கும் நிலை.

9. சுழுத்தியில் சாக்கிரம்—உறங்கியெழுந்த பிறகு அந்த உறக்கத்தின் சுகம் முதலான தன்மைகள் இவ்விதமெனப் பிறருக்கு எடுத்துரைக்கும் நிலை.

10. சுழுத்தியில் சொப்பனம்—உறங்கி யெழுந்த பிறகு அந்த உறக்கத்தின் தன்மை இன்னதெனத் தோன்றியும் தோன்றாமலும் இருக்கும் ஐயுறவு நிலை.

11. சுழுத்தியில் சுழுத்தி—உறங்கியெழுந்த பிறகு உறக்கத்தின் சுகம் முற்றிலும் மறந்து போய் விடும் நிலை.

12. சுழுத்தியில் துரியம்—உறங்கியெழுந்த பிறகு உறக்கத்தின் தன்மை அஞ்ஞான விஷயம் என்றும், அதற்குச் சாட்சியான ஆத்மாவே சத்தியம் என்றும் தெரிந்து கொள்ளும் நிலை.

13. துரியத்தில் சாக்கிரம்—நிஷ்டையில் இருக்கும் போது சாக்கிர வியவகாரங்களான பிரபஞ்ச விருத்தி உண்டாதல்.

14. துரியத்தில் சொப்பனம்—நிஷ்டையில் இருக்கும் போது பிரபஞ்ச விருத்தி தோன்றியும் தோன்றாமலும் இருத்தல்.

15. துரியத்தில் சுழுத்தி—நிஷ்டையில் இருக்கும்போது எவ்வித எண்ணங்களும் ஏற்படாமல் இருத்தல்.

16. துரியத்தில் துரியம்—மேற் கூறிய பதினைந்து அவஸ்தைகளும் இல்லாமல் அகண்ட பரிபூரணமான பரப்பிரம்மமே நான் என்று அறிந்

துணர்ந்து தானுகவே இருத்தல். இதுவே எல்லாவற்றிற்கும் மேலான உன்னத நிலை என்பதைத் தெளிந்துணர்ந்தால் எல்லாம் பிரம்ம மயம் என்பதைக் காணலாம்.

### மூன்று உடல்கள் (சரீரத் திரயம்)

1. ஸ்தூல சரீரம்; 2. சூக்ஷ்ம சரீரம்; 3. காரண சரீரம். இவை தமிழில் முறையே 1. பருவுடல்; 2. நுண்ணுடல்; 3. காரண உடல் என வழங்கப்படும்.

பருவுடல்—கண்களுக்குப் புலனுகும் மாமிச உடல். இது ஆதி பிருதிவியினுல் [மண்ணியல் பால்] உருவானது.

நுண்ணுடல்: பருவுடலுக்குள் கண்ணிற்குப் புலப்படாமல் நுட்பமாய் அமைந்திருப்பது. ஞானேந்திரியங்கள் ஐந்தும், கர்மேந்திரியங்கள் ஐந்தும் அந்தக்கரணங்கள் நான்கும் பிராண வாயு ஒன்றும் கூடியதே நுண்ணுடல். இதை 'லிங்க சரீரம் என்றும் கூறுவார்கள்.

காரண உடல்: பருவுடல் நுண்ணுடல் ஆகிய இரண்டிற்கும் காரண வித்தாக விளங்குவது. இதைச் சஞ்சித கன்மம் [தொகை வினை] என்று கருதலாம்.

### பற்றுகள் மூன்று (மூவேடணை)

1. அர்த்த வேடணை [பொருட்பற்று]; 2. புத்திர வேடணை [புதல்வர்ப் பற்று]; 3. லோக வேடணை [உலகப் பற்று]. வேறு சிலர் தாரேஷணை [மனைவி மீது ஆசை]; புத்திரரேஷணை [தன் மக்கள் மீது ஆசை]; தனேஷணை [பொருளாசை] என்று கூறுவார்கள்.

### பஞ்ச ரசயங்கள்

1. அமர்வாசயம்; 2. பகிர் வாசயம்; 3. சலவாசயம்; 4. மலவாசயம்; 5. சுக்கிலவாசயம். இவை தமிழில் முறையே 1. இரைக்குடல்; 2. செரிகுடல்; 3. நீர்க்குடல்; 4. மலக்குடல்; 5. வெண்ணீர்க்குடல் என வகுக்கப்பட்டு ஐந்து குடல்கள் என வழங்கப்படுகின்றன.

### மாயைகள் மூன்று

1. சுத்த மாயை; 2, அசுத்த மாயை; 3. பிரகிருதி மாயை. இவை தமிழில் முறையே 1. தூமாயை; 2. தூவாமாயை; 3. பகுதிமாயை என வகுக்கப்பட்டு மாயைகள் மூன்று என வழங்கப்படுகின்றன.

### கர்மங்கள் மூன்று

1. சஞ்சித கன்மம்; 2. பிராரத்த கன்மம்; 3. ஆகாமிய கன்மம். இவை தமிழில் முறையே 1. [illegible] இருப்பு வினை; 2. [illegible]

வினை, நுகர் வினை; 3. நிகழ்வினை என வகுக்கப்பட்டு, கர்மங்கள் மூன்று என வழங்கப்படுகின்றன.

### கன்மேந்திரிய விஷயங்கள்

1. வசநம்; 2. கமநம்; 3. தாநம்; 4. விசர்ச்சனம்; 5. ஆநந்தம். இவை தமிழில் முறையே 1. சொல்லல்; 2. நடத்தல்; 3. கொடுத்தல்; 4. விடுதல்; 5. மகிழ்தல் என்று வகுக்கப்பட்டு தொழிலுறுப்புக்களின் செயல்கள் என வழங்கப்படுகின்றன.

### இரு கன்மங்கள்

1. புண்ணியம்; 2. பாவம். இவை தமிழில் முறையே 1. நல்வினை; 2. தீவினை என வகுக்கப்பட்டு இரு வினைகள் என்று வழங்கப்படுகின்றன.

### வாக்குகள்

1. வைகரி வாக்கு; 2. மத்திமை வாக்கு; 3. பைசந்தி வாக்கு; 4. சூக்குமை வாக்கு. இவை தமிழில் முறையே, 1. செவியோசை; 2. மிடற்றோசை; 3. நினைவோசை; 4. நுண்ணோசை என வகுக்கப்பட்டு வாக்குகள் என்று வழங்கப்படுகின்றன.

### சக்திகள்

1. பரிக்கிரகசக்தி; 2. திரோதான சக்தி. ஆதி சக்தி; 3. இச்சா சக்தி; 4. ஞான சக்தி; 5. கிரியா சக்தி; 6. சிற்சக்தி இவை தமிழில் முறையே, 1 வைப்பாற்றல்; 2. மறைப்பாற்றல்; 3. விழைவாற்றல்; 4. அறிவாற்றல்; 5. செயலாற்றல்; 6. அறிவாற்றல் என வகுக்கப்பட்டு, ஆற்றல்கள் என வழங்கப்படுகின்றன.

### சுத்தவித்தியா தத்துவங்கள்

1. காலம்; 2. நியதி; 3. கலை; 4. வித்தை; 5. அராகம்; 6. புருடன்; 7. மாயை. இவை தமிழில் முறையே 1. காலம்; 2. பிறழா நிகழ்ச்சி; 3. கலை; 4. நினைப்பு; 5. விருப்பு; 6. மகன்; 7. மாயை என வகுக்கப்பட்டு ஏழு உணர்வு நிகழ்ச்சிப் பொருள்கள் என வழங்கப்படுகின்றன.

### ஓம் என்னும் மகாமந்திரம்

ஓம் என்னும் மகாமந்திரம் பிராணிகளை பரமாத்ம சொருபத்தில் லயிக்கச் செய்யும் சாமர்த்தியம் கொண்டிருப்பதால், அது பிரணவ மந்திரம் என்றும் சொல்லப்படும். ஏகாட்சரமான ஓம் என்பதில் 'அ', 'உ', 'ம' என்ற மூன்று ஒலிகளும் சேர்ந்துள்ளன. அந்த அகார உகார மகாரங்களை

மாத்திரைகள் என்றும் சொல்லுவார்கள். அம்மூன்றைத் தவிர நான்காவது மாத்திரையாக அ மாத்திரை என்று ஒரு அர்த்த மாத்திரையும் உள்ளடங்கியிருக்கிறது.

'அ' என்றால் சூரியன். 'உ' என்றால் சந்திரன். 'ம்' என்றால் அக்கினி. அதாவது ஓம் என்பது எல்லாப் பிரகாசங்களும் உள்ள பொருட்களின் சுய வடிவாகும்.

இந்த அகாரம், உகாரம், மகாரம் மூன்றும் முறையே ஸ்தூலம் [பரு உடல்] சூட்சுமம் [நுண்ணுடல்], காரணம் [லிங்க உடல்] என்னும் மூன்று உடல்களாக இருந்தும், பெண், ஆண், அலி என்னும் மூன்றுமாக இருந்தும், ருக்வேதம், யஜுர் வேதம், சாம வேதம் என்னும் மூன்று வேதங்களாக இருந்தும், கார்ஹபத்யாக்னி, தக்ஷிணாக்னி, ஆஹவனீயாக்னி என்னும் மூன்று அக்கினிகளாக இருந்தும், ஹ்ரஸ்வம் தீர்க்கம், ப்லுதம் என்னும் மூன்று ஸ்வரங்களாக இருந்தும், பாதம், நாபி, சிரசு என்னும் மூன்று ஸர்வ அவயவங்களாக இருந்தும், புத்தி மனம், அஹங்காரம் என்னும் மூன்று ஸர்வ அந்தக்கரண ஸமஷ்டியாக இருந்தும், ரஜோ குணம், ஸத்வ குணம், தமோ குணம் என்னும் மூன்று குணபேதங்களாக இருந்தும், சிவப்பு, கபிலம், கறுப்பு என்னும் மூன்று வர்ணங்களாக இருந்தும், பூரகம், கும்பகம், ரேசகம் என்னும் மூன்று ப்ராணாயாமாப்பியாசமாக இருந்தும், நாதம், பிந்து, கலை என்னும் மூன்றுமாக இருந்தும், கிரியா சக்தி, பிந்து, ஞானசக்தி என்னும் மூன்றுமாகவும், ப்ராஹ்மணீ, வைஷ்ணவி, ரௌத்ரி என்னும் மூன்றுமாக இருந்தும், பிரும்மா, விஷ்ணு, ருத்திரன் என்னும் திரிமூர்த்திகளாக இருந்தும், சென்ற காலம், நிகழ் காலம், எதிர்காலம் என்னும் மூன்று காலங்களாக இருந்தும், ஜீவாத்மா, அந்தராத்மா, கூடஸ்தன் என்னும் மூன்றுமாக இருந்தும், விராட் புருஷன் ஹிரண்யகர்ப்பன், ஈஸ்வரன் என்னும் மூன்றுமாக இருந்தும் எல்லாம் 'ஓம்' என்பதில் அடங்கும் என்பதைக் குறிக்கும்.

## ஐந்தெழுத்து (பஞ்சாட்சரம்)

இது சிவயநம அல்லது நமசிவய என்பதாகும். இவ் எழுத்துக்களில் 'ய' என்னும் மந்திரம் ஜீவனாக இருக்கிறது. நம் உடலில் 'ய' போல் அடி பெருத்து நுனி சிறுத்து லிங்க வடிவாய் இருப்பது மூக்குத் தண்டு ஆகும். அந்த மூக்குத் தண்டில் சிவபெருமான் ஜீவனாக நின்று சிவயநம என்னும் ஐந்தெழுத்தையே [பஞ்சாட்சரத்தையே] தம் திருவுருவமாகக் கொண்டு ஆத்மாக்களின் பிறவியறுக்கத் தக்க யோக நிலையை நடனம் செய்து காட்டுகிறார்.

இதன் மந்திரங்கள்:—'ய' என்னும் ஜீவனால் மூக்கின் வழியே நம என்னும் மந்திரத்தை மூச்சுடன் சேர்த்து உள்ளுக்கிழுத்து மூச்சை வெளி விடாமல் சிறிது நேரம் உள்நிறுத்தி மறுபடியும் மூச்சை வெளியிடும்போது சிவ என்னும் மந்திரத்தை மூச்சுடன் சேர்த்து வெளிவிட வேண்டும்! இது தான் நமசிவ என்னும் மந்திரங்களை ஜெபிக்கும் முறையாகும். இந்தப் பஞ்சாட்சர மந்திரமே பிருதிவி [நிலம்], அப்பு [நீர்], தேயு [நெருப்பு] வாயு [காற்று], ஆகாயம் [விசும்பு] என்னும் ஐம்பூதங்களாகும். இந்த ஐவரும் பிரும்மா, விஷ்ணு, ருத்திரர், மகேசுவரர், சதாசிவம். இந்த ஐவரும் முறையே நம் உடலிலுள்ள சுவாதிஷ்டானம், ...

அநாகதம், விசுத்தம், ஆக்ஞேயம் என்பனவற்றிற்கு அதிதேவதைகளாக இருந்து மூச்சை நடத்திக் கொண்டு வருகிருர்கள். பிருதிவி [நிலம் அல்லது பூமி] என்பது நகாரம். இந்த நகாரமே பிரும்மா. அப்பு [நீர்] என்பது மகாரம். இந்த மகாரமே விஷ்ணு. தேயு [நெருப்பு அல்லது அக்கினி] என்பது சிகாரம். இந்த சிகாரமே ருத்திரர். வாயு [காற்று] என்பது வகாரம். இந்த வகாரமே மகேசுவரர். ஆகாயம் [விசும்பு அல்லது வெளி] என்பது யகாரம். இந்த யகாரமே சதாசிவம்.

## பஞ்ச முத்திரை

1. கேசரி; 2. பூசரி; 3. மத்திய லக்ஷணம்; 4. ஷண்முகி; 5. சாம்பவீ.

1. கேசரி—விழிகளை நடுவில் நிறுத்தி மேல் நோக்கி சிதாகாசத்தை [அருள் வெளியை] பார்த்துக் கொண்டிருத்தல்.

2. பூசரி—விழிகளை அசைக்காமல் தன் மூக்கு நுனிக் குறியில் நோக்கு வைத்துப் பார்த்துக் கொண்டிருத்தல்.

3. மத்திய லக்ஷணம்—கண்களை அரைப் பார்வையோடு மூடிக் கொண்டு, மூக்கு மத்தியில் நோக்கை நிறுத்திப் பார்த்துக் கொண்டிருத்தல்.

4. ஷண்முகி—காதுகளையும், கண்களையும், மூக்கையும், வாயையும் விரல்களால் மூடி, வெளிப்பார்வையையும் மனதையும் உள்முகமாகத் திருப்பிக் கண் விழிகளை நடுவே நிறுத்தி நாத [பிராணன்], பிந்து [மனம்] களை [புத்தி] என்பனவற்றை ஒன்ருய் சேர்த்தல்.

5. சாம்பவீ—விழிகளை இமை கொட்டாமல் திறந்து பார்வையை அருள் வெளியான சிதாகாசத்தில் நிறுத்தி அங்குள்ள விந்தை மண்டலங் களைப் பார்த்துச் சொக்கியிருத்தல்.

## பஞ்ச சிவ தத்துவங்கள்

1. சுத்த வித்தை; 2. ஈசுரம்; 3. சாதாக்கியம் 4. சக்தி; 5. சிவம்; இவை தமிழில் முறையே 1. தூய நினைவு; 2. தலைமை; 3. அருள் நிலை; 4. அன்னை; 5. அத்தன் என வகுக்கப்பட்டு ஐந்து சிவநிலையப் பொருள்கள் என வழங்கப்படுகின்றன.

## அட்டமா சித்திகள்

1. அணிமா; 2. மகிமா; 3. கரிமா; 4. இலகிமா; 5. பிராப்தி; 6. பிராகாமியம்; 7. ஈசத்துவம்; 8. வசித்துவம். இவை தமிழில் முறையே 1. நுண்மை [அணுத்தன்மை]; 2. பருமை; 3. விண்டன்மை; 4. மென்மை; 5. விரும்பியதெய்தல்; 6. நிறைவுண்மை; 7. ஆட்சியனுதல்; 8. கவர்ச்சி; என வகுக்கப்பட்டு எண்பெரும் பேறுகள் என வழங்கப்படுகின்றன.

# மோட்சம்

ஞானேந்திரியங்கள் ஐந்து; கர்மேந்திரியங்கள் ஐந்து; தன் மாத்திரைகள் ஐந்து; பிராணங்கள் ஐந்து; அந்தக்கரணங்கள் நான்கு ஆக இருபத்திநான்கு தத்துவங்களும் சேர்ந்திருப்பது உடல். அந்த உடலினுள் வசிக்கும் ஜீவன் 25வது தத்துவமாகும். 26வது தத்துவம் பரப்பிரும்மம் ஆகும். அந்தப் பரப்பிரும்மத்தில் ஜீவாத்மாவைச் சேர்ப்பித்து இரண்டற ஒன்று கலந்து ஒன்றிப்பதே மோட்சமாகும். அதாவது, மோட்சமென்றால் விடுதலை.





# பட்டினத்தார்

## திருப் பாடல் திரட்டு

### கோயில் திரு அகவல்-1



நினைமின் மனனே! நினைமின் மனனே
சிவபெருமானைச் செம்பொனம் பலவனை
நினைமின் மனனே! நினைமின் மனனே!
அலகைத் தேரின் அலமரு காலின்
உலகப்பொய் வாழ்க்கையை உடலொடும் பற்க!

பிறந்தன இறக்கும், இறந்தன பிறக்கும்;
தோன்றின மறையும், மறைந்தன தோன்றும்;
பெருத்தன சிறுக்கும், சிறுத்தன பெருக்கும்;
உணர்ந்தன மறக்கும், மறந்தன உணரும்;
புணர்ந்தன பிரியும், பிரிந்தன புணரும்;

அருந்தின மலமாம், புனைந்தன அழுக்காம்;
உவப்பன வெறுப்பாம், வெறுப்பன உவப்பாம்;
என்றிவை அனைத்தும் உணர்ந்தனை; அன்றியும்,
பிறந்தன பிறந்தன பிறவிகள் தோறும்
கொன்றனை அனைத்தும், அனைத்து நினைக் கொன்றன;

தின்றனை அனைத்தும், அனைத்து நினைத் தின்றன;
பெற்றனை அனைத்தும், அனைத்து நினைப் பெற்றன;
ஓம்பினை அனைத்தும், அனைத்து நினை ஓம்பின;
செல்வத்துக் களித்தனை, தரித்திரத்து அழுங்கினை;
சுவர்க்கத்து இருந்தனை, நரகில் கிடந்தனை;

#### அருஞ்சொற் பொருள்

4 வது வரியில்: அலகைத் தேர்-பேய்த்தேராகிய கானல் நீர்; அலமரு கால்-சுழன்று சுழன்றடிக்கும் காற்று. 11. அருந்தின மலமாம்-உண்ட உணவு மலமாக மாறும்; 18. ஓம்பின-பாதுகாத்தன. 19. அழுங்கினை-வருத்தம் அடைந்தாய்.



இன்பமும் துன்பமும் இருநிலத்து அருந்தினை;
ஒன்றொன்று ஒழியாது உற்றனை; அன்றியும்,
புற்புதக் குரம்பைத் துச்சில் ஒதுக்கிடம்
என்ன நின்றியங்கும் இருவினைக் கூட்டைக்
கல்லினும் வலிதாகக் கருதினை; இதனுள்

பீளையும் நீரும் புறப்படும் ஒருபொறி;
மீளுங் குறும்பி வெளிப்படும் ஒருபொறி
சளியும் நீரும் தவழும் ஒருபொறி;
உமிழ்நீர் கோழை ஒழுகும் ஒருபொறி;
வளியும் மலமும் வழங்கும் ஒருவழி;

சலமும் சீயும் சரியும் ஒருவழி;
உள்ளூறத் தொடங்கி வெளிப்பட நாறும்
சட்டகம் முடிவில் சுட்டெலும் பாகும்
உடலுறு வாழ்க்கையை உள்ளுறத் தேர்ந்து,
கடிமலர்க் கொன்றைச் சடைமுடிக் கடவுளை,

ஒழிவருஞ் சிவபெரும் போகஇன் பத்தை,
நிழலெனக் கடவா நீர்மையொடு பொருந்தி,
எனதற நினைவற இருவினை மலமற
வரவொடு செலவற மருளற இருளற
இரவொடு பகலற இகபரம் அற ஒரு

முதல்வனைத் தில்லையுள் முனைத்தெழுஞ் சோதியை
அம்பலத் தரசனை ஆனந்தக் கூத்தனை
நெருப்பினில் அரக்கென நெக்குநெக் குருகித்
திருச்சிற் றம்பலத்து ஒளிருஞ் சிவனை,
நினைமின் மனனே! நினைமின் மனனே!

சிவபெரு மானைச் செம்
பொனம்பலவனை

நினைமின் மனனே! நினை
மின் மனனே!



---

21. இருநிலம்—பெரிய பூமியில்; 23. புற்புதம்—நீர்க்குமிழி; குரம்பை—சிறு குடிசை. 24. இருவினைக் கூட்டை-நல்வினை தீவினையாகிய பறவைகள் தங்கும் கூட்டை; 26. பொறிகள்— கண், காது, மூக்கு, வாய் மெய்; 33. சட்டகம்-உடல்; 38, எனதற-புறப்பற்று நீங்குதல்; நினைவற—அகப்பற்று நீங்குதல்; மலமற-ஆணவம், காமம், மாயை எனும் மும்மலம் நீங்குதல்; 41. தில்லை—சிதம்பரம்; 44. திருச்சிற்றம்பலம்-சிதம்பர நடனசபை.

## கோயில் திரு அகவல்—2



காதள வோடிய கலகப் பாதகக்
கண்ணியர் மருங்கில் புண்ணுடன் ஆடும்
காதலும் கருத்தும் அலலால்நின் இருதாள்
பங்கயம் சூடப் பாக்கியம் செய்யாச்
சங்கடம் சூர்ந்த தமியேன் பாங்கிருந்து

அங்கோடு இங்கோடு அலமருங் கள்வர்
ஐவர் கலகமிட்டு அலைக்குங் கானகம்
சலமலப் பேழை; இருவினைப் பெட்டகம்;
வாதபித் தம் கோழை குடிபுகுஞ் சிறார்;
ஊத்தைப் புன்தோல் உதிரக் கட்டளை;

நாற்றப் பாண்டம்; நான் முழத்து ஒன்பது
பீற்றல் துண்டம்; பேய்ச்சுரைத் தோட்டம்
அடலைப் பெரிய சுடலைத் திடருள்;
ஆசைக் கயிற்றில் ஆடும் பம்பரம்;
ஓயா நோய்க்கிடம்; ஓடும் மரக்கலம்;

மாயா விகாரம்; மரணப் பஞ்சரம்;
சோற்றுத் துருத்தி; தூற்றும் பத்தம்;
காற்றில் பறக்கும் கானப் பட்டம்;
விதிவழித் தருமன் வெட்டுங் கட்டை;
சதுர்முகப் பாணன் தைக்குஞ் சட்டை;

ஈமக் கனலில் இடுசில விருந்து;
காமக் கனலில் கருகும் சருகு;
கிருமி கிண்டுங் கிழங்கஞ் சருமி,
பவக்கொழுந்து ஏறுங் கவைக் கொழு கொம்பு;
மணமாய் நடக்கும் வடிவின் முடிவில்



பிணமாய்க் கிடக்கும் பிண்டம்; பிணமேல்
ஊரில் கிடக்க வொட்டா உபாதி;

---

1. கலகப் பாதகக் கண்ணியர்-காமப்போர் விளைவிக்கும் பாதகக்
கண்களையுடைய பெண்கள்; 6. கள்வர் ஐவர்-பஞ்சேந்திரியங்கள்; 8. பெட்
டகம்—பெட்டி 11. ஒன்பது பீற்றல்—உடலின் ஒன்பது வாசல்கள்;
13. அடலை-சாம்பல் நிறைந்த; சுடலை-சுடுகாடாகிய; திடருள்-மேட்டுள்ளி
டம்; 16. மரணப் பஞ்சரம்-சாவு அடையும் கூண்டு; 17. துருத்தி-கொல்
லன் உலைக்களத்தில் ஊதும் தோற்கருவி; தூற்றும் பத்தம்-காற்றில் தூற்
றும் ஒரு கருவி; 20-சதுர் முகப் பாணன்-நான் முகன், பிரமன்; 21. ஈமக்
கனல்-சுடுகாட்டு நெருப்பு; 22. சருகு-உலர்ந்த இலை; 24. பவக்கொழுந்து-
பாவமாகிய பிறவிக் கொழுந்து.

கால் எதிர் குவித்தபூளை; காலைக்
கதிர் எதிர்ப் பட்ட கடும்பனிக் கூட்டம்;

அந்தரத்து இயங்கும் இந்திர சாபம்;
அதிரும் மேகத்து உருவின் அருநிழல்;
நீரில் குமிழி; நீர்மேல் எழுத்து;
கண்துயில் கனவில் கண்ட காட்சி;
அதனினும் பொல்லா மாயக் களங்கம்;
அமையும் அமையும் பிரானே! அமையும்;

இமைய வல்லி வாழிஎன் றேத்த
ஆனந்தத் தாண்டவம் காட்டி
ஆண்டுகொண் டருள்கை நின் அருளினுக்கு அழகே!

## கோயில் திரு அகவல்—3

பால்கடல் கடையப் படுங்கடு வெண்ணெயைத்
திருமிடற்று அடக்கிய சிவனே அடைக்கலம்!
அடங்கலும் அடக்கிடும் கடுங்கொலைக் காலனைக்
கால்எடுத் தடக்கிய கடவுள் நின் அடைக்கலம்
உலகு அடங் கலும்படைத்து உடையவன் தலைபறித்து

இடக்கையில் அடக்கிய இறைவ! நின் அடைக்கலம்!
செய்யபொன் னம்பலச் செல்வ! நின் அடைக்கலம்;
ஐய! நின் அடைக்கலம்; அடியன் நின் அடைக்கலம்;
மனவழி அலைத்திடும் கனவெனும் வாழ்க்கையும்;
விழுப்பொருள் அறியா வழுக்குறு மனனும்;

ஆணவ மலத்துதித்து அளைந்ததில் உளைந்திடும்
நிணவைப் புழுவென நெளிந்திடு சிந்தையும்;
படிறும் பாவமும் பழிப்புறு நினைப்பும்,
தவறும் அழுக்காறும் இவறுபொச் சாப்பும்
கவடும் பொய்யும் சுவடும் பெருஞ்சின

இகலும், கொலையும், இழிப்புறு புன்மையும்,
பகையும், அச்சமும், துணிவும், பனிப்பும்,
முக்குண மடமையும், ஐம்பொறி முயக்கமும்,

---

28 கால் எதிர் குவித்த பூளை - காற்றிற்கு எதிரே குவித்து வைத்த பூளைமலர் 30. இந்திர சாபம் - இந்திரவில், வானவில்; 35. அமையும், பிரானே; போதும், போதும் இந்தச் சரீர வாழ்வு, இறைவனே! 36. இமையவல்லி-மலைமகளான பார்வதி. 1. படுங்கடு வெண்ணெய்-ஆலகாலமாகிய விஷம்; 2. மிடறு-கழுத்து; 5. தலைபறித்து- பிரமன் தலையொன்றைப் பறித்து; 12. நிணம்-கொழுப்பு; 14, அழுக்காறு-பொறாமை பொச்சாப்பு-மறதி; 15. சுவடு-வஞ்சகம்; 17. பனிப்பும்-நடுக்கமும்; 18. முக்குணமடமை-இராசத, தாமத, சாத்வீகமாகிய முக்குணத்தினால் அறியாமை.

இடும்பையும் பிணியும் இடுக்கிய ஆக்கையை;
உயிர் எனுங் குருகுவிட்டு ஓடும் குரம்பையை

எலும்பொடு நரம்புகொண்டு இடையில் பிணித்துக்
கொழுந்தசை வேய்ந்தும் ஒழுக்கு விழுங் குடிலைச்
செழும்பெழு உதிரச் சிறுபுழுக் குரம்பையை,
மலவுடல் குடத்தைப், பலவுடல் புட்டிலைத்
தொலைவிலாச் சோற்றுத் துன்பக் குழியைக்

கொலைபடைக் கலம்பல கிடைக்கும் கூட்டை;
சலிப்புறு வினைப் பலசரக்குக் குப்பையைக்
கோள்சரக்கு ஒழுகும் பீறல் கோணியைக்
கோபத்தீ மூட்டுங் கொல்லன் துருத்தியை,
ஐம்புலப் பறவை அடையும்பஞ் சரத்தை,

புலராக் கவலை விளைமரப் பொதும்பை,
ஆசைக் கயிற்றில் ஆடும்பம் பரத்தைக்
காசிற் பணத்திற் சுழலுங் காற்றாடியை,
மக்கள் வினையின் மயங்குந் திகிரியைக்,
கடுவெளி உருட்டிய சகடக் காலைப்

பாவச் சரக்கொடு பவக்கடல் புக்குக்
காமக் காற்றெடுத்து அலைப்பக்
கெடுவழிக் கரைசேர் கொடுமரக் கலத்தை
இருவினை விலங்கொடும் இயங்குபுற் கலனைக்,
நடுவன்வந் தழைத்திட நடுங்கும் யாக்கையைப்

பிணமெனப் படுத்தியான் புறப்படும் பொழுதுநின்
அடிமலர்க் கமலத்துக்கு அபயம் நின் அடைக்கலம்;
வெளியிடை உரும்இடி இடித்தென வெறித்தெழுங்
கடுநடை வெள்விடைக் கடவுள் நின் அடைக்கலம்;
இமையா நாட்டத்து இறையே! அடைக்கலம்;

அடியார்க்கு எளியாய்! அடைக்கலம் அடைக்கலம்;
மறையவர் தில்லை மன்றுள் நின் முடிக்



19. இடும்பை—துன்பம்; 20. குருகு-பறவை. 28. பீற்றல் கோணி-கிழிந்த கோணிப்பை; (கோணி-சாக்கு, கித்தான்) 30. ஐம்புலன்-சுவைத்தல், காணுதல், உணர்தல், கேட்டல், முகர்தல், ஆகிய ஐம்பொறிகளின் சக்தி; 31. மரப்பொதும்பை-மரப்பொந்து; 34. திகிரி-சக்கரம்; 35. கடுவெளி-வெட்டவெளி; சகடக்கால்-வண்டிச் சக்கரம்; 39. புற்கலனை-உயிரை; 40. நடுவன்-யமன்; 44. விடை-எருது; 45. நாட்டம்-கண்-நெற்றிக்கண்;



கருணை மொண்டு அலைபெறி கடலே!
அடைக்கலம்,
தேவரும் முனிவரும் சென்றுநின் றேத்தப்
பாசிழைக் கொடியொடு பரிந்து அருள் புரியும்
எம்பெருமான் நின் இணை அடிக்கு அபயம்;
அம்பலத் தரசே அடைக்கலம் உனக்கே! 52

## கச்சித் திரு அகவல்

திருமால் பயந்த திசைமுகன் அமைத்து
வரும் ஏழ் பிறவியும் மானுடத் துதித்து
மலைமகள் கோமான் மலர் அடி இறைஞ்சிக்
குலவிய சிவபதங் குறுகாது அவமே
மாதரை மகிழ்ந்து காதல் கொண்டாடும்

மானிடர்க் கெல்லாம் யானெடுத் துரைப்பேன்
விழிவெளி மாக்கள் தெளிவுறக் கேண்மின்;
முள்ளும் கல்லும் முயன்று நடக்கும்
உள்ளங் காலைப் பஞ்சென உரைத்தும்,
வெள்ளெலும் பாலே மேவிய கணைக்கால்

துள்ளும் வரால் எனச் சொல்லித் துதித்தும்,
தசையும் எலும்புந் தக்கபுன் குறங்கை
இசையுங் கதலித் தண்டென இயம்பியும்,
நெடும் உடல் தாங்கி நின்றிடும் இடையைத்
துடிபிடி யென்று சொல்லித் துதித்தும்,

மலமும் சலமும் வழும்புந் திரையும்
அலையும் வயிற்றை ஆலிலை யென்றும்,
சிலந்தி போலக் கிளைத்துமுன் னெழுந்து
திரண்டு விம்மிச் சீப்பாய்ந்து ஏறி
உகிரால் கீறல் உலர்ந்து உள் உருகி

நகுவார்க்கு இடமாய் நான்று வற்றும்
முலையைப் பார்த்து முளரிமொட் டென்றும்,

---

50. பாசிழைக் கொடி-பார்வதியைக் குறிக்கும்.

கச்சித் திரு அகவல்

4. சிவபதம் குறுகாதவமே-சிவபதவியை அடையாமல் வீணாக; 12. குறங்கு-தொடை; 13. கதலி-வாழை; 15. துடி-உடுக்கை; 16. வழும்பும்-கொழுப்பும்; 20. உகிரால்-நகத்தால்; 21. நான்று-தொங்கி; 22. முளரி மொட்டு-தாமரை மொட்டு;



குலையுங் காமக் குருடர்க்கு உரைப்பேன்;
நீட்டவும் முடக்கவும் நெடும் பொருள் வாங்கவும்

ஊட்டவும் பிசையவும் உதவி இங் கியற்றும்
அங்கையைப் பார்த்துக் காந்தள் என் றுரைத்தும்,
வேர்வையும் அழுக்கும் மேவிய கழுத்தைப்
பாரினில் இனிய கமுகெனப் பகர்ந்தும்,
வெப்பும் ஊத்தையும் மேவிய வாயைத்

துப்பு முருக்கின் தூய்மலர் என்றும்,
அன்ன முங் கறியும் அசைவிட் டிறக்கும்
முன்னிய பல்லை முத்தென மொழிந்தும்
நீரும் சளியும் நின்று நின்று ஒழுகும்
கூறிய மூக்கைக் குமிழ் எனக் கூறியும்

தண்ணீர் பீளை தவிராது ஒழுகும்
கண்ணைப் பார்த்துக் கழுநீர் என்றும்
உள்ளுங் குறும்பிஒழுகுங் காதை
வள்ளைத் தண்டின் வளம் என வாழ்த்தியும்,
கையும் எண்ணெயும் கலவாது ஒழியில்

வெய்ய வதரும் பேனும் விளையத்
தக்க தலை யோட்டில் முளைத்து எழுந்த
சிக்கின் மயிரைத் திரள் முகி லென்றும்
சொற்பல பேசித் துதித்து நீங்கள்
நச்சிச் செல்லும் நரக வாயில்

தோலும் இறைச்சியும் துதைந்து சீப்பாயும்
காமப் பாழி; கருவிளை கழனி;
தூமைக் கடவழி; தொளைபெறு வாயில்;
எண்சாண் உடம்பும் இழியும் பெருவழி!
மண்பால் காமம் கழிக்கும் மறைவிடம்;

நச்சிக் காமுக நாய்தான் என்றும்
இச்சித் திருக்கும் இடைகழி வாயில்;
திங்கள் சடையோன் திருவருள் இல்லார்
தங்கித் திரியும் சவலைப் பெருவழி;
புண் இது என்று புடவையை மூடி



---

26. காந்தள்-காந்தள் மலர்; [சிவந்த நிறத்தோடு ஐந்து விரல்கள் போல் அமைந்துள்ள மலர்] 28. கமுகு-பாக்கு மரம்; 30. துப்பு-பவளம்; 36. கழுநீர்-குவளைப்பூ; 40. வதரும்-சுண்டும்; [தலை அழுக்கும்] 42. முகில்-மேகம்; [கருமேகம்] 45. இறைச்சி-தசை; சீப்பாயும்-சீழ் வடிகின்ற; 46. காமப்பாழி-காமக்குகை; 47. தூமை-இரத்தம் [சூதகம்]; 53. சவலை-மெலிவு

உள் நீர் பாயும் ஓசைச் செழும்புண்;
மால் கொண்டு அறியா மாந்தர் புகும்வழி;
நோய் கொண் டொழியார் நுண்ணியர் போம்வழி;



தருக்கிய காமுகர் சாரும் படுகுழி;
செருக்கிய காமுகர் சேருஞ் சிறுகுழி;

பெண்ணும் ஆணும் பிறக்கும் பெருவழி;
மலம் சொரிந்து இழியும் வாயிற்கு அருகே
சலம்சொரிந்து இழியும் தண்ணீர் வாயில்;
இத்தை நீங்கள் இனிது என வேண்டா;
பச்சிலை இடினும் பத்தர்க்கு இரங்கி

மெச்சிச் சிவபத விடருள் பவனை
முத்தி நாதனை மூவர் முதல்வனை
அண்ட ரண்டமும் அனைத்துள புவனமும்
கண்ட அண்ணலைக் கச்சியிற் கடவுளை,
ஏக நாதனை இணையடி யிறைஞ்சுமின்
போக மாதரைப் போற்றுதல்ஒழிந்தே!

## திரு ஏகம்ப மாலை

[திருக்கச்சி ஏகாம்பரநாதரைத் துதித்துப் பாடிய மாலை]

அறந்தான் இயற்றும் அவனிலுங் கோடி அதிகம் இல்லம் 1
துறந்தான்; அவனின் சதகோடி உள்ளத் துறவுடையோன்;
மறம் தான் அறக்கற்று அறிவோ டிருந்துஇரு வாதனையற்று;
இருந்தான் பெருமையை என் சொல்லுவேன்? கச்சி ஏகம்பனே!

கட்டி யணைத்திடும் பெண்டிரும் மக்களும் காலத்தச்சன் 2
வெட்டி முறிக்கும் மரம்போல் சரீரத்தை வீழ்த்திவிட்டால்
கொட்டி முழக்கி அழுவார்; மயானம் குறுகி அப்பால்
எட்டி அடிவைப்பரோ? இறைவா கச்சி ஏகம்பனே!

கைப்பிடி நாயகன் தூங்கையிலே அவன் கையையெடுத்து 3
அப்புறந் தன்னில் அசையாமல் முன் வைத்து அயல்வளவில்
ஒப்புடன் சென்று துயில்நீத்துப் பின் வந்து உறங்குவளை
எப்படி நான் நம்பு வேன்? இறைவா! கச்சி ஏகம்பனே!

---

56. மால்-மயக்கம்; 64. பச்சிலை இடினும்-பச்சிலையைக் கிள்ளி அர்ச்சித்தாலும்; 68. அண்ணல்-அன்பினால் தலைமை கொண்டவன்; கச்சி-காஞ்சிபுரம்.

[திரு ஏகம்ப மாலை செய்யுள் எண்] 1. சதகோடி-நூறுகோடி; மறம்-பாவம்; இருவாதனை-நல்வினை தீவினை எனப்படும் இரண்டு சங்கிலிகள்; கச்சி-காஞ்சிபுரம்; 2. காலத் தச்சன்-யமனாகிய தச்சன்; 3 அயல்வளவு-பக்கத்து வீடு;

நன்னூரில் பூட்டிய சூத்திரப் பாவை நல் நார் தப்பினல் 4
தன்னாலும் ஆடிச் சலித்திடு மோ? அந்தத் தன்மையைப் போல்
உன்னா லியானுந் திரிவதல் லால் மற்றுனைப் பிரிந்தால்
என்னாலிங் காவதுண்டோ? இறைவா! கச்சி ஏகம்பனே!

நல்லார் இணக்கமும் நின்பூசை நேசமும் ஞானமுமே 5
அல்லாது வேறு நிலையுள தோ? அகமும் பொருளும்
இல்லாளும் சுற்றமும் மைந்தரும் வாழ்வும் எழில் உடம்பும்
எல்லாம் வெளிமயக்கே இறைவா கச்சி ஏகம்பனே!

பொல்லா தவன், நெறிநில்லா தவன், ஐம் புலன்கள் தமை 6
வெல்லா தவன், கல்வி கல்லாத வன், மெய் யடியவர்பால்
செல்லாதவன், உண்மைசொல்லா தவன், நின் திருவடிக்கன்பு
இல்லா தவன், மண்ணில் ஏன் பிறந்தேன்? கச்சி ஏகம்பனே!

பிறக்கும் பொழுது கொடுவந்த தில்லை; பிறந்துமன்மேல் 7
இறக்கும் பொழுது கொடுபோவ தில்லை; இடை நடுவில்
குறிக்குமிச் செல்வஞ் சிவன் தந்த தென்று கொடுக்கறியா[து]
இறக்குங் குலாமருக்குஎன்சொல்லு வேன்? கச்சி ஏகம்பனே!

அன்ன விசாரம் அதுவே விசாரம் அதுஒழிந்தால் 8
சொன்ன விசாரம் தொலையா விசாரம்நல் தோகையரைப்
பன்ன விசாரம் பலகால் விசாரம்இப் பாவிநெஞ்சுக்[கு]
என்ன விசாரம் வைத்தாய் இறைவா! கச்சி ஏகம்பனே!

கல்லாப் பிழையும், கருதாப் பிழையும், கசிந்துருகி 9
நில்லாப் பிழையும் நினையாப் பிழையும், நின் அஞ்செழுத்தைச்
சொல்லாப் பிழையும், துதியாப் பிழையும், தொழாப் பிழையும்
எல்லாப் பிழையும் பொறுத்தருள் வாய் கச்சி ஏகம்பனே!

'மாயநட் போரையும் மாயா மலமெனும் மாதரையும் 10
வீயவிட் டோட்டி வெளியே புறப்பட்டு மெய்யருளாம்
தாயுடன் சென்றுபின் தாதையைக் கூடிப் பின் தாயைமறந்
தேயும தேநிட்டை' என்றான் எழிற்கச்சி ஏகம்பனே!

வரிக்கோல வேல்விழி யார் அநுராக மயக்கில் சென்று 11
சரிக்கோது வேன் எழுத்து அஞ்சுஞ் சொலேன்! தமியேனுடலம்
நரிக்கோ? கழுகு பருந்தினுக்கோ? வெய்ய நாய் தனக்கோ?
எரிக்கோ? இரையெதுக்கோ? இறைவா! கச்சி ஏகம்பனே!

காதென்று மூக்கென்று கண்ணென்று காட்டி என் கண்ணெதிரே 12
மாதென்று சொல்லி வருமாயை தன்னை மறலிவிட்ட

---

4. சூத்திரப்பாவை-கயிற்றால் அசையும் பதுமை [சூத்திரம்—கயிறு]; 7. குலாமர்-கீழ்மக்கள்; 8. சொன்ன விசாரம்—பொருள் கவலை; [சொர்ணம்—பொன்]: 9. அஞ்செழுத்து—சிவாயநம; 10. வீய—அழிய; தாதையை—தந்தையை; 11. அநுராக மயக்கம்—காம மயக்கம்; இரை—உணவு; 12. மறலி—யமன்;

தூதென் றெண்ணாமல் சுகமென்று நாடும்இத் துற்புத்தியை
ஏதென் றெடுத்துரைப்பேன்? இறைவா! கச்சி ஏகம்பனே!



ஊருஞ் சதமல்ல; உற்றார் சதமல்ல; உற்றுப் பெற்ற
பேருஞ் சதமல்ல; பெண்டிர் சதமல்ல; பிள்ளைகளுஞ்
சீருஞ் சதமல்ல; செல்வஞ் சதமல்ல; தேசத்திலே
யாருஞ் சதமல்ல; நின்தாள் சதம் கச்சி ஏகம்பனே!

சீறும் வினையது பெண்உருவாகித் திரண்டுருண்டு
கூறும் முலையும் இறைச்சியும் ஆகிக் கொடுமையினால்
பீறும் மலமும் உதிரமுஞ் சாயும் பெருங்குழிவிட்டு
ஏறுங் கரைகண்டிலேன்; இறைவா! கச்சி ஏகம்பனே!

பொருளுடை யோரைச் செயலினும் வீரரைப் போர்க்களத்தும் 15
தெருளுடை யோரை முகத்தினுந் தேர்ந்து தெளிவதுபோல்
அருளுடைய யோரைத் தவத்தில் குணத்தில் அருளில் அன்பில்
இருளறு சொல்லிலுங் காணத் தகும் கச்சி ஏகம்பனே!

பருத்திப் பொதியினைப் போல் வயிறு பருக்கத் தங்கள் 16
துருத்திக்கு அறுசுவை போடுகின்றார்; துறந்தோர்தமக்கு
இருத்தி அமுதிடமாட்டார், அவரை இம் மாநிலத்தில்
இருத்திக்கொண்டு ஏன் இருந்தாய் இறைவா! கச்சி ஏகம்பனே!

பொல்லா இருளகற்றும் கதிர் கூகையென் புண்கண்ணினுக்கு 17
அல்லா இருந்திடு மாறொக்கு மேஅறி வோருளத்தில்
வல்லார் அறிவார் அறியார் தமக்கு மயக்கங் கண்டாய்!
எல்லாம் விழிமயக்கே இறைவா! கச்சி ஏகம்பனே!

வாதுக்குச் சண்டைக்குப் போவார்; வருவார்; வழக்குரைப்பார்; 18
தீதுக்கு உதவியும் செய்திடு வார், தினந் தேடி ஒன்றும்
மாதுக் களித்து மயங்கிடு வார்விதி மாளுமட்டும்;
ஏதுக் கிவர்பிறந் தார்? இறைவா! கச்சி ஏகம்பனே!

ஓயாமல் பொய்சொல்வர்; நல்லோரை நிந்திப்பர்; உற்றுப்பெற்ற 19
தாயாரை வைவர்; சதி ஆயிரஞ் செய்வர்; சாத்திரங்கள்
ஆயார்; பிறர்க்குப காரஞ்செய் யார்; தமை அண்டினர்க்கொன்று
ஈயார் இருந்தென்ன போயென்ன? காண் கச்சி ஏகம்பனே!

அப்பென்றும் வெண்மைய தாயினும் ஆங்கு அந் நிலத்தியல்பாய்த் 20
தப்பின்றி யேகுண வேற்றுமை தான் பல சார்தலினால்
செப்பில் அபக்குவம் பக்குவ மாயுள்ள சீவனிலும்
இப்படி யேநிற்பன் எந்தை பிரான் கச்சி ஏகம்பனே!

---

13. சதம்-நிலை, உறுதி, ஆதரவு; 14. இறைச்சி-தசை, சதை; 15. தெருள்-தெளிவு; 16. பருத்திப் பொதி-பஞ்சு மூட்டை; அறு சுவை-ஆறு வகைச் சுவை [உப்பு, துவர்ப்பு, காரம், கசப்பு, புளிப்பு, தித்திப்பு; கலந்த உணவுப் பகுதிகள்] 17. கூகை என் புள்-கோட்டான் என்கின்ற பறவை; அல்-இரவு,; விழி-கண்; 20. அப்பு-நீர்;

நாயாய்ப் பிறந்திடில் நல்வேட்டை யாடி நயம்புரியும், 21
தாயார் வயிற்றில் நாராய்ப் பிறந்துபின் சம்பன்னராய்க்
காயா மரமும் வறளாங் குளமும் கல்ஆவும் என்ன
ஈயா மனிதரை ஏன் படைத்தாய்? கச்சி ஏகம்பனே!

ஆற்றில் கரைத்த புளியாக்கிடாமல் என் அன்பை எல்லாம் 22
போற்றித் திருவடி ம் பற்றுமை யாபுரம் மூன்றெரித்துக்
கூற்றைப் பணிகொளுந் தாளுடையாய்! குன்றவில் உடையாய்
ஏற்றுக் கொடியுடையாய்! இறைவா! கச்சி ஏகம்பனே!

பெண்ணாகி வந்தொரு மாயப்பி சாசம் பிடித்திட் டென்னைக் 23
கண்ணால் வெருட்டி முலையால் மயக்கிக் கடிதடத் துப்
புண்ணாங் குழியிடைத் தள்ளி, என் போதப்பொருள் பறிக்க
எண்ணா துனைமறந்தேன் இறைவா! கச்சி ஏகம்பனே!

நாவார வேண்டும் இதஞ்சொல்லு வார், உனை நான் பிரிந்தால் 24
சாவேன் என் றேயிருந்தொக்க உண்பார்கள்கை தான் வறண்டால்
போய்வாரும் என்று நடுத்தலைக்கே குட்டும் பூவையர்க்கு
ஈவார் தலைவிதியோ இறைவா! கச்சி ஏகம்பனே!

கல்லார் சிவகதை; நல்லோர் தமக்குக் கனவிலும்மெய் 25
சொல்லார்; பசித்தவர்க் கன்னங் கொடார்; குருசொன்னபடி
நில்லார்; அறத்தை நினையார்; நின்நாமம் நினைவில் சற்றும்
இல்லார் இருந்தென்? இறந்தென்? புகல் கச்சி ஏகம்பனே!

வானமு தத்தின் சுவையறி யாதவர் வண்கனியின் 26
தானமு தத்தின் சுவையெண்ணல் போலத் தனித்தனியே
தேனமு தத்தின் தெளிவாய ஞானஞ் சிறிதுமில்லார்க்கு
ஈனமு தச்சுவை நன்றல்ல வோ? கச்சி ஏகம்பனே!

ஊற்றைச் சரீரத்தை ஆபாசக் கொட்டிலை ஊன் பொதிந்த 27
பீற்றல் துருத்தியைச் சோறிடுந் தோற்பையைப் பேசரிய
காற்றிற் பொதிந்த நிலையற்ற பாண்டத்தைக் காதல் செய்தே
ஏற்றுத் திரிந்துவிட்டேன் இறைவா! கச்சி ஏகம்பனே!

சொல்லால் வருங்குற்றஞ் சிந்தனையால்வருந்தோடம் செய்த
பொல்லாத தீவினை பார்வையிற் பாவங்கள் புண்ணியநூல்
அல்லாத கேள்வியைக் கேட்டிடுந் தீங்குகள் ஆயவும்மற்று
எல்லாப் பிழையும் பொறுத்தருள் வாய்! கச்சி ஏகம்பனே!



முட்டற்ற மஞ்சளை எண்ணெயிற் கூட்டி முகமினுக்கி
மெட்டிட்டுப் பொட்டிட்டுப் பித்தளை ஓலை விளக்கியிட்டுப்
பட்டப் பகலில் வெளிமயக்கே செய்யும் பாவையர்மேல்
இட்டத்தை நீ தவிர்ப்பாய்! இறைவா! கச்சி ஏகம்பனே!

---

21. வறள் ஆம் குளம்-நீர் வறண்ட குளம்; கல் ஆ-கல்லினால் செய்த பசு; 22. கூற்று-யமன் [உடலையும் உயிரையும் கூறுபடுத்துபவன்]; குன்றவில்-மேருமலையாகிய வில்; 23. போதப் பொருள்-ஞானப் பொருள்; 26. வானமுதம்-தேவாமிருதம்; 27. கொட்டில்-ஒதுக்கிடம், பீற்றல்-துளை; 28. தோடம்-தோஷம்;

பிறந்துமண் மீதில் பிணியே குடிகொண்டு பேரின்பத்தை 30
மறந்துசிற் றின்பத்தின் மேல்மய லாகிப்புன் மாதருக்குள்
பறந்துழன் றேதடு மாறிப்பொன் தேடிஅப் பாவைர்க்கீந்து
இறந்திட வோபணித் தாய் இறைவா! கச்சி ஏகம்பனே!

பூதங்க ளற்றுப் பொறியற்றுச் சார்ஐம் புலன் களற்றுப் 31
பேதங் குணமற்றுப் பேராசை தானற்றுப் பின் முன் அற்றுக்
காதங் கரணங் களுமற்ற ஆனந்தக் காட்சியிலே
ஏதங் களைந்திருப் பேன் இறைவா கச்சி ஏகம்பனே!

நல்லாய் எனக்கு மனுவொன்று தந்தருள்! ஞானமிலாப் 32
பொல்லா எனைக்கொன்று போடும் பொழுதியல் பூசைசெபஞ்
சொல்லார்நற் கோயில்நியமம் பலவகைத் தோத்திரமும்
எல்லாம் முடிந்தபின் கொல்லுகண் டாய் கச்சி ஏகம்பனே!

சடக்கடத் துக்கு இரை தேடிப் பலவுயிர் தம்மைக்கொன்று 33
விடக்கடித் துக்கொண் டிறுமாந் திருந்து மிகமெலிந்து
படக்கடித் தின்றுழல் வார்கள் தமைச்கரம் பற்றிநமன்
இடக்கடிக் கும்பொழு தேதுசெய்வார்? கச்சி ஏகம்பனே!



நாறும்உடலை நரிப்பொதி சோற்றினை நான் தினமும்
சோறுங் கறியும் நிரப்பிய பாண்டத்தைத்தோகையர்தம்
கூறும் மலமும் இரத்தமுஞ் சோருங் குழியில்விழாது
ஏறும் படியருள் வாய் இறைவா! கச்சி ஏகம்பனே!

சொக்கிட்டு அரண்மனைப் புக்குள் திருடிய துட்டர்வந்து 35
திக்குற்ற மன்னரைக் கேட்பது போல், சிவ நிந்தைசெய்து
மிக்குக் குருலிங்க சங்கமம் நிந்தித்து, வீடிச்சிக்கும்
எக்குப் பெருத்தவர்க்கு என்சொல்லு வேன்? கச்சி ஏகம்பனே!

விருந்தாக வந்தவர் தங்களுக்கு அன்ன மிகக்கொடுக்கப் 36
பொருந்தார் வளம்பெற வாழ்வார்நின் நாமத்தைப் போற்றி நித்தம்
அருந்தா முலைப்பங்கர் என்னாத பாதகர் அம்புவியில்
இருந்தாவ தேது கண்டாய்? இறைவா! கச்சி ஏகம்பனே!

எல்லாம் அறிந்து படித்தே இருந்தெமக் குள்ளபடி 37
வல்லான் அறிந்துளன் என்றுண ராது மதிமயங்கிச்
சொல்லான் மலைந்துறு சூழ்விதி யின்படி துக்கித்துப் பின்
எல்லாம் சிவன்செயலே என்பர் காண்கச்சி ஏகம்பனே!

பொன்னை நினைந்து வெகுவாகத் தேடுவார்; பூவை அன்னாள் 38
தன்னை நினைந்து வெகுவாய் உருகுவர்; தாரணியில்

---

31. பூதங்கள்-நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயமாகிய பஞ்ச பூதங்கள். 33. சடக் கடம்-சடமயமான உடல்; விடக்கு-மாமிசம்; இறுமாப்பு-செருக்கு, கர்வம்; 35. சொக்கிட்டு-சொக்குப்பொடி தூவி மயக்கி; 36. அருந்தாமுலை-உண்ணாமுலை, 38. பூவை-நாகணவாய்ப் பறவை! தாரணி-உலகம்.

உன்னை நினைத்திங் குனைப் பூசியாத உலுத்தரெல்லாம்
என்னை யிருந்து கண்டாய்? இறைவா! கச்சி ஏகம்பனே!

கடுஞ்சொலின் வம்பரை ஈனரைக் குண்டரைக் காமுகரைக் 39
கொடும்பவமேசெய்யும் நிர்மூடர் தம்மைக் குவலயத்துள்
நெடும்பனை போல வளர்ந்து நல்லோர் தம் நெறியறியா
இடும்பரை ஏன்வகுத் தாய்? இறைவா! கச்சி ஏகம்பனே!

கொன்றேன் அனேகம் உயிரை எல்லாம் பின்பு கொன்று கொன்று 40
தின்றேன் அதன்றியுந் தீங்குசெய்தேன் அது தீர்கஎன்றே
நின்றேன் நின் சன்னதிக்கே அதனால் குற்றம் நீ பொறுப்பாய்
என்றே உனை நம்பினேன் இறைவா! கச்சி ஏகம்பனே!

ஊர் இருந்தென்? நல்லோர் இருந்தென்? உபகாரமுள்ள 41
பேர் இருந்தென்? பெற்றதாய் இருந்தென்? மடப் பெண்கொடியாள்
சீரிருந்தென்ன? நற்சிறப்பிருந்தென்ன: இத் தேயத்தினி
லேறுருந்தென்ன? வல்லாய் இறைவா கச்சி ஏகம்பனே!

வில்லாலடிக்கச் செருப்பாலுதைக்க வெகுண்டொருவன் 42
கல்லாலெறியப் பிரம்பாலடிக்கக் களிவண்டுகூர்ந்
தல்லாற்பொழிற்றில்லை அம்பலவாணர்க் கோர் அன்னை பிதா
இல்லாததாலல்லவோ இறைவா கச்சி ஏகம்பனே?

அன்னை எத்தனை எத்தனை அன்னையோ? 43
அப்பன் எத்தனை எத்தனை அப்பனோ?
பின்னை எத்தனை எத்தனை பெண்டிரோ?
பிள்ளை எத்தனை எத்தனை பிள்ளையோ?
முன்னம் எத்தனை எத்தனை சன்மமோ?
மூடனாயடி யேனும் அறிந்திலேன்!
இன்னம் எத்தனை எத்தனை சன்மமோ?
என்செய் வேன்? கச்சி ஏகம்ப நாதனே!



## திருத் தில்லை

காம்பிணங் கும்பணைத் தோளார்க்கும் பொன்னுக்குங் காசினிக்கும் 1
தாம்பிணங் கும்பல ஆசையும் விட்டுத் தனித்துச்செத்துப்
போம்பிணந் தன்னைத் திரளாகக் கூடிப் புரண்டு இனிமேற்
சாம்பிணங் கத்துது ஐயோ! என் செய்வேன் தில்லைச் சங்கரனே!

சோறிடும் நாடு, துணிதருங் குப்பை, தொண்டன் பரைக்கண் 2
டேறிடுங்கைகள் இறங்கிடுந் தீவினை, எப்பொழுதும்
நீறிடும் மேனியர் சிற்றம் பலவர் நிருத்தங்கண்டால்
ஊறிடும் கண்கள் உருகிடும் நெஞ்சம்என் உள்ளமுமே!

---

செய்யுள் எண்:

1. காம்பிணங்கும்—மூங்கிலைப் போன்ற; பணைத்தோள்-பருத்ததோள்; காசினி-பூமி; 2. நீறு-திருநீறு;

அழலுக்குள் வெண்ணெய் எனவே உருகிப்பொன் னம்பலத்தார் 3
நிழலுக்குள் நின்று தவமுனுற் ருமல்நிட் டூரமின்னுர்
குழலுக்கிசைந்த வகைமாலை கொண்டுகுற் றேவல்செய்து
விழலுக்கு முத்துலை இட்டிறைத் தேன்என் விதிவசமே.

ஓடாமல் பாழுக்கு உழையாமல் ஓரம் உரைப்பவர்பால் 4
கூடாமல் நல்லவர் கூட்டம் விடாமல்வெங் கோபம் நெஞ்சில்
நாடாமல் நன்மை வழுவாமல் இன்றைக்கு நாளைக்கென்று
தேடாமல் செல்வம் தருவாய்! சிதம்பர தேசிகனே!

பாராமல் ஏற்பவர்க் கில்லையென் னுமல் பழுதுசொல்லி 5
வாராமல் பாவங்கள் வந்தணு காமல் மனம் அயர்ந்து
பேராமல், சேவை பிரியாமல் அன்புபெ ருதவரைச்
சேராமல் செல்வம் தருவாய்! சிதம்பர தேசிகனே!

கொல்லாமல், கொன்றதைத் தின்னுமல், குத்திரங் கோள்களவு
கல்லாமல், கைதவ ரோடுஇணங் காமல்கனவி லும்பொய்
சொல்லாமல், சொற்களைக் கேளாமல், தோகையர் மாயையிலே
செல்லாமல், செல்வந் தருவாய் சிதம்பர தேசிகனே!

முடிசார்ந்த மன்னரும் மற்றுமுள் ளோரும் முடிவிலொரு 7
பிடிசாம்ப ராய்வெந்து மண்ணுவ துங்கண்டு பின்னும் இந்தப்
படிசார்ந்த வாழ்வை நினைப்பதல் லால்பொன்னின் அம்பலவர்
அடிசார்ந்து நாம்உய்ய வேண்டுமென்றே அறி வாரில்லையே!

காலை உபாதி மலஞ்சலமாம் அன்றிக் கட்டுச்சியிற்
சால உபாதி பசிதாகம் ஆகும்முன் சஞ்சிதமாம்
மாலை உபாதி துயில்காமமாம் இவை மாற்றிவிட்டே
ஆலம் உகந்தருள் அம்பலவா, என்னை ஆண்டருளே !



ஆயும் புகழ்த்தில்லை அம்பலவாணர் அருகில் சென்ருல்
பாயும் இடபம், கடிக்கும் அரவம், பின்பற்றிச் சென்ருல்
பேயுங் கணமும் பெருந்தலைப் பூதமும் பின்தொடரும்;
போயென்செய் வாய்மனமே பிணக் காடவர் போமிடமே?

ஓடும் எடுத்து அதள் ஆடையும் சுற்றி, உலாவிமெள்ள 10
வீடுகள் தோறும் பலிவாங்கியே, விதி யற்றவர்போல்
ஆடும் அருள் கொண்டு இங்கு அம்பலத்தே நிற்கும் ஆண்டிதன்னைத்
தேடுங் கணக்கென்ன காண்! சிவ காம சவுந்தரியே.

ஊட்டுவிப் பானும் உறங்குவிப்பானும் இங்கு ஒன்ருேடொன்றை 11
மூட்டுவிப் பானும் முயங்குவிப் பானும் முயன்றவினை
காட்டுவிப் பானும் இருவினைப் பாசக் கயிற்றின் வழி
ஆட்டுவிப் பானும் ஒருவன்உண் டேநில்லை அம்பலத்தே!

---

3. உஞற்றுதல்-தீவிரமாகச் செயலாற்றுதல்; விழல்-வீணுன ஒரு வகைப் புல்; முத்துலை-மூன்று துளையிட்டு; 4 ஓரம்-நடுநிலை இல்லாமல் பேசுதல்; 6 குத்திரம்-வஞ்சனை: கைதவர்-வஞ்சகர்; 8. உபாதி-துன்பம்; 10. அதள்-தோல்;

அடியார்க்கு எளியவர் அம்பலவாணர் அடிபணிந்தால் 12
மடியாமல் செல்வ வரம்பெற லாம், வையம் ஏழளந்த
நெடியோனும் வேதனுங் காணாத நித்த நிமலன் அருள்
குடிகாணும் நாங்கள்! அவர்காணும் எங்கள் குலதெய்வமே!

தெய்வச் சிதம்பர தேவா! உன் சித்தம் திரும்பிவிட்டால் 13
பொய்வைத்த சொப்பன மாமன்னர் வாழ்வும் புவியுமெங்கே?
மெய்வைத்த செல்வமெங்கே? மண்ட லீகர்தம் மேடையெங்கே?
கைவைத்த நாடக சாலையெங் கே? இது கண்மயக்கே!

உடுப்பானும் பாலன்னம் உண்பானும் உய்வித் தொருவர் தம்மைக் 14
கெடுப்பானும் ஏதென்று கேள்விசெய் வானும் கதியடங்கக்
கொடுப்பானும் தேகிஎன்று ஏற்பானும் ஏற்கக் கொடாமல்நின்று
தடுப்பானும் நீயல்லயோ தில்லை ஆனந்தத் தாண்டவனே!

வித்தாரம் பேசினும் சோங்கேறி னும் கம்ப மீதிருந்து 15
தத்தாஎன் றேகுதிப் பவுரிகொண்டாடினும் தம்முன்தம்பி
ஒத்தாசை பேசினும் ஆவதுண்டோ? தில்லையுள் நிறைந்த
கத்தாவின் சொற்படி யல்லாது வேறில்லை கன்மங்களே,

பிறவா திருக்க வரம்தரல் வேண்டும்; பிறந்துவிட்டால் 16
இறவா திருக்க மருந்துண்டு காண்இது எப்படியோ
அறமார் புகழ்த்தில்லை அம்பல வாணர் அடிக்கமலம்
மறவா திருமன மே! அதுகாண் நல் மருந்தெனக்கே!



தவியா திரு நெஞ்சமே தில்லை மேவிய சங்கரனைப்
புவியார்ந் திருக்கின்ற ஞான கரனைப் புராந்தகனை
அவியா விளக்கைப் பொன்னம்பலத் தாடியை
ஐந்தெழுத்தால்
செவியாமல் நீசெபித் தால்பிறவா முத்தி சித்தக்குமே!

நாலின் மறைப்பொருள் அம்பல வாணரை நம்பியவர் 18
பாலில் ஒருதரம் சேவிக்கொ ணாதிருப் பார்க்கருங்கல்
மேலில் எடுத்தவர் கைவிலங்கைத்தைப்பர்: மீண்டுமொரு
காலில் நிறுத்துவர்; கிட்டியும் தாம்வந்து கட்டுவரே.

ஆற்றெடு தும்பை அணிந்தாடும் அம்பல வாணர்தம்மைப் 19
போற்று தவர்க்கு அடையாளம் உண்டே இந்தப் பூதலத்தில்
சோற்றுவி அற்றுச்சுகமற்றுச் சுற்றத் துணியும் அற்றே
ஏற்றாலும் பிச்சை கிடையாமல் ஏக்கற் றிருப்பர்களே

அத்தனை, முப்பத்து முக்கோடி தேவர்க் கதிபதியை 20
நித்தனை, அம்மை சிவகாம சுந்தரி நேசனை, எம்
கத்தனைப், பொன்னம்பலத் தாடும் ஐயனைக் காணக்கண்கள்
எத்தனை கோடி யுகமோ தவஞ்செய் திருக்கின்றனவே!

---

15. வித்தாரம்-விரிவு (தற்பெருமையை விரிவாகப் பேசுதல்); சோங்கு-மரக்கலம்; பவுரி-ஒரு வகைக் கூத்து; தம்முன்-அண்ணன் (தனக்கு முன் பிறந்தவன்); கத்தா-கர்த்தா, தலைவன்; 18, பால்-பக்கம்; 19, ஆற்றெடு-கங்கைநதியோடும்; 20, கத்தன்-கர்த்தன்;

## திருச்செங்காடு

நெருப்பான மேனியர் செங்காட்டில் ஆத்தி நிழல் அருகே 1
இருப்பார் திருவுளம் எப்படியோ இன்னம் என்னை அன்னைக்
கருப்பா சயக்குழிக்கே தள்ளு மோகன்னன் காணரிய
திருப்பாத மேதரு மோதெரி யாது சிவன்செயலே.

## திருவொற்றியூர்

ஐயுந்தொடர்ந்து, விழியுஞ் செருகி, அறிவழிந்து, 1
மெய்யும் பொய்யாகி விடுகின்ற போதொன்று வேண்டுவன்யான்
செய்யுந் திருவொற்றி யூர்உடையீர்! திரு நீறுமிட்டுக்
கையுந் தொழப் பண்ணி ஐந்தெழுத் தோதவுங் கற்பியமே.

சுடப்படு வார் அறி யார். புரம் மூன்றையுஞ் சுட்டபிரான் 2
திடப்படு மாமதில் தென்ஒற்றி யூரன் தெருப்பரப்பில்
நடப்பவர் பொற்பதம் நந்தலை மேற்பட நன்குருண்டு
கிடப்பது காண்மன மே விதி ஏட்டைக் கிழிப்பதுவே!

## திருவிடை மருதூர்

காடே திரிந்தென்ன? காற்றே புசித்தென்ன? கந்தைசுற்றி 1
ஓடே எடுத்தென்ன? உள்ளன்பி லாதவர் ஓங்குவிண்ணோர்
நாடேயிடைமரு தீசர்க்கு மெய்யன்பர் நாரியர்பால்
வீடே யிருப்பினும் மெய்ஞ்ஞான வீட்டின்பம் மேவுவரே.

தாயும் பகை; கொண்ட பெண்டீர் பெரும்பகை; தன்னுடைய 2
சேயும் பகை;உற வோரும் பகை, இச் செகமும்பகை;
ஆயும் பொழுதில் அருஞ்செல்வம் நீங்கில்! இங் காதலினால்
தோயுநெஞ்சே மரு தீசர்பொன் பாதஞ் சுதந்தரமே

## திருக்கழுக்குன்றம்

காடோ? செடியோ? கடல்புற மோ? கனமே மிகுந்த 1
நாடோ? நகரோ? நகர்நடு வோ? நலமே மிகுந்த
வீடோ? புறந்திண்ணை யோ? தமி யேன் உடல் விழுமிடம்?
நீள்தோய் கழுக்குன் றிலீசா! உயிர்த்துணை நின்பதமே!

## திருக்காளத்தி

பத்தும் புகுந்து பிறந்து வளர்ந்து பட்டாடைசுற்றி,
முத்தும் பவளமும் பூண்டுஓடி ஆடி முடிந்தபின்பு
செத்துக் கிடக்கும் பிணத்தருகே இனிச் சாம்பிணங்கள்
கத்துங் கணக்கென்ன? காண் கயிலாபுரிக் காளத்தியே!

பொன்னால் பிரயோசனம்பொன் படைத்தார்க்குண்டு; பொன் படைத்தோன்
தன்னால் பிரயோசனம் பொன்னுக்கங் கேதுண்டு அத்தன்மையைப்போல்
உன்னால்பிர யோசனம் வேணதெல் லாம்உண் டுனைப்பணியும்
என்னால்பிர யோசனம்ஏ துண்டு? காளத்தி யீச்சுரனே!



1. ஐ-கோழை; மெய்-உடம்பு;

வாளால் மகவரிந்துஊட்டவல்லேன் அல்லன்; மாதுசொன்ன 3
சூளால் இளமை துறக்கவல்லேன் அல்லன்; தொண்டு செய்து
நாளாறில் கண்இடந்து அப்பவல்லேன் அல்லன் நான் இனிச்சென்று
ஆளாவது எப்படியோ திருக்காளத்தி யப்பருக்கே?

முப்போது அன்னம் புசிக்கவும் தூங்கவும் மோகத்தினுல் 4
செப்போது இளமுலை யாருடன் சேரவும் சிவன்விடும்
அப்போது கண்கலக் கப்படவும் வைத்தாய் ஐயனே!
எப்போது காணவல் லேன்? திருக் காளத்தி ஈச்சுரனே!

இரைக்கே இரவும் பகலும் திரிந்திங்கு இளைத்துமின்னுர் 5
அரைக்கே அவலக் குழியருகே அசும் புஆர்ந்தொழுகும்
புரைக்கே உழலும் தமியேனை ஆண்டருள்! பொன்முகலிக்
கரைக்கேகல் லாலநிழற்கீழ் அமர்ந்தருள் காளத்தியே!

நாறும் குருதிச் சலதாரை; நாள் தொறும்சீ
யூறும் மலக்குழி: காமத்துவாரம் ஒளித்திடும்புண்
தேறுந் தசைப்பிளப் பந்தரங் கத்துள சிற்றின்பம்விட்டு
ஏறும் பதந்தருவாய்! திருக் காளத்தி ஈச்சுரனே!



## கைலாயம்

கான்சாயும் வெள்ளி மலைக்கரசே! கழல்நம்பினேன்
ஊன்சாயும் சென்மம் ஒழித்திடு வாய்!கர வூரனுக்காய்
மான்சாயச் செங்கை மழுவலஞ் சாய வனைந்த கொன்றைத்
தேன்சாய நல்ல திருமேனி சாய்த்த சிவக் கொழுந்தே!

இல்லம் துறந்து பசிவந்த போது அங்கு இரந்து நின்று
பல்லும் கரையற்று, வெள்வாயு மாய்ஒன்றில் பற்றுமின்றிச்
சொல்லும் பொருளும் இழந்து சுகானந்தத் தூக்கத்திலே
அல்லும் பகலும் இருப்பதென் றோ? கயி லாயத்தனே!

சினந்தனை யற்றுப் பிரியமும் தான் அற்றுச் செய்கையற்று 3
நினைந்தது ம்அற்று, நினையா மையுமற்று, நிர்சிந்தனுய்த்
தனந்தனி யேயிருந்து ஆனந்த நித்திரை தங்குகின்ற
அனந்தலில் என்றிருப் பேன் அத்தனே! கயிலாயத்தனே!

கையார ஏற்றுநின் றுஅங்ஙனந் தின்று, கரித்துணியைத் 4
தையா துஉடுத்து, நின் சந்நிதிக்கே வந்து சந்ததமும்
மெய்யார நிற்பணிந்து உள்ளே உரோமம் விதிர்விதிர்ப்ப
ஐயா என்று ஓலம் இடுவது என்றோ? கயிலாயத்தனே!

---

3. மகவரிந்துட்ட-மகனையறுத்துப் பிள்ளைக் கறியூட்டியவர் சிறுத் தொண்டர்; சூள்-சபதம்; வஞ்சினம்-திருநீலகண்ட நாயனுர் கதை; இடந்து-பெயர்த்து; (கண்ணப்ப நாயனுர் கதை) 5. அசும்பு-வழுக்குகின்ற நிலம்; (தூய்மையற்ற இடத்தைக் குறிக்கும்); புரை-துளை. குழிப்புண்: பொன் முகலி-திருக்காளத்தியில் உள்ள பொன்முகலி என்ற ஆறு; 3. ஆனந்த நித்திரை-சிவானந்தமாகிய நித்திரை; அனந்தல்-தூக்கம்.

நீருர்த்த மேனி உரோமம் சிலிர்த்து உளம் நெக்குநெக்குச் 5
சேருய்க் கசிந்து கசிந்தே யுருகி, நின்சீரடிக்கே
மாருத் தியானமுற்று ஆனந்த மேற்கொண்டு, மார்பில் கண்ணீர்
ஆருய்ப் பெருகக் கிடப்பதென்ருே? கயிலாயத்தனே!

செல்வரைப் பின்சென்று சங்கடம்பேசித் தினந்தினமும் 6
பல்லினைக் காட்டிப் பரிதவியாமல் பரமானந்தத்தின்
எல்லையில் புக்கிட ஏகாந்த மாய் எனக் காமிடத்தே
அல்லல் அற்று என்றிருப் பேன் அத்த னே! கயிலாயத்தனே!

மந்திக் குருளையொத் தேன்இல்லை; நாயேன் வழக்கறிந்தும் 7
சிந்திக்கும் சிந்தையை யான்என் செய் வேன்எனைத் தீதகற்றிப்
புந்திப் பரிவில் குருளையை ஏந்திய பூசையைப்போல்
எந்தைக் குரியவன் காண் அத்த னே!கயி லாயத்தனே!

வருந்தேன் பிறந்தும் இறந்தும் மயக்கும் புலன்வழிப்போய்ப 8
பொருந்தேன் நரகில் புகுகின்றி லேன், புகழ்வாரிடத்தில்
இருந்தேன் இனியவர் கூட்டம் விடேன்இயல் அஞ்செழுத்தாம்
அரும்தேன் அருந்துவன் நின் அரு ளால்கயி லாயத்தனே!

## மதுரை

விடப்படு மாஇப் பிரபஞ்ச வாழ்க்கையை? விட்டுமனம்
திடப்படு மோ? நின் அருளின்றி யேதினமே அலையக்
கடப்படு மோ? அற்பர் வாயிலில் சென் றுகண்ணீர்த்ததும்பிப்
படப்படு மோ? சொக்க நாதா!சவுந்தர பாண்டியனே!

## பொது

1. உடைகோ வணம் உண்டு, உறங்கப் புறந்திண்ணை யுண்டு. உணவிங்கு
அடைகாய் இலையுண்டு. அருந்தத்தண்ணீர் உண்டு. அருந்துணைக்கே
விடையேறும் ஈசர் திருநாமம்உண்டு இந்தமேதினியில்
வடகோடு உயர்ந்தென்ன தென்கோடு சாய்ந்தென்ன வான்பிறைக்கே?

2. வீடு நமக்குத் திருவாலங் காடு; விமலர் தந்த
ஓடு நமக்குண்டு வற்ருத பாத்திரம்; ஓங்குசெல்வ
நாடு நமக்குண்டு கேட்பதெல்லாம்தர; நன்னெஞ்சமே!
ஈடு நமக்குச் சொலவோ ஒருவரும் இங்கில்லையே!

3. நாடிக்கொண்டு ஈசரை நாட்டமுற் ருயிலை; நாதரடி
தேடிக்கொண்டாடித் தெளிந்தாயிலை; செக மாயைவந்து
மூடிக் கொண்டோமென்றும், காமாயுதங்கள் முனிந்தவென்றும்
பீடிப்பையோ நெஞ்ச மேயுனைப் போலஇல்லை பித்தர்களே!

---

7. மந்தி-பெண் குரங்கு; குருளை-குட்டி; பூசை-பூனை; எந்தை-என் தந்தை

**செய்யுள் எண்** பொது

1. வான்பிறை-ஆகாயத்தில் உள்ள சந்திரனின் பிறை; 3. நாட்டம், குறி, நோக்கம்;

4. கையொன்று செய்ய, விழியொன்று நாடக் கருத்தொன்று எண்ணப்
பொய்யொன்று வஞ்சக நாவொன்று பேசப் புலால் கமழும்
மெய்யொன்று சாரச், செவியொன்று கேட்க, விரும்புமியான்
செய்கின்ற பூசைஎவ் வாறுகொள்வாய்? வினை தீர்த்தவனே!

5. கண்ணுண்டு காணக் கருத்துண்டு நோக்கக் கசிந்துருகிப்
பண்ணுண்டு பாடச் செவியுண்டு கேட்கப் பல்பச்சிலையால்
எண்ணுண்டு சாத்த எதிர்நிற்க ஈசன் இருக்கையிலே
மண்ணுண்டு போகுதை யோ! கெடுவீர் இந்த மாஉடமே!

6. சொல்லினும் சொல்லின் முடிவிலும் வேதச் சுருதியிலும்
அல்லிலு(ம்) மாசற்ற ஆகாயம் தன்னிலும் ஆய்ந்து விட்டோர்
இல்லிலும் அன்பரிடத்திலும் ஈசன் இருக்கு மிடம்!
கல்லிலும் செம்பிலு மோ இருப்பான் எங்கள் கண்ணுதலே?

7. வினைப்போகமே ஒரு தேகங்கண்டாய்! வினை தான்ஒழிந்தால்
தினைப்போ தளவும்நில் லாதுகண் டாய்! சிவன் பாதம்நினை!
நினைப்போரை மேவு; நினையாரை நீங்கி இந்நெறியில் நின்றால்
உனைப்போல் ஒருவருண்டோ மன மே எனக்கு உற்றவரே?

8. பட்டைக் கிழித்துப் பருஊசி தன்னைப் பரிந்தெடுத்து,
முட்டச் சுருட்டி என்மொய்குழ லாள்கையில் முன்கொடுத்து
கட்டியிருந்த கனமாயக்காரி தன் காமம் எல்லாம்
விட்டுப் பிரியஎன் றோ இங்ங னேசிவன் மீண்டதுவே?

9. சூதுற்ற கொங்கையும் மானார் கலவியும் சூழ்பொருளும்,
போதுற்ற பூசலுக்கு என்செய லாம்? செய்த புண்ணியத்தால்
தீதுற்ற மன்னவன் சிந்தையில் நின்று தெளிவதற்கோ
காதற்ற ஊசியைத் தந்து விட்டான் என்றன் கைதனிலே?

10. வாதுற்ற திண்புயர் அண்ணாமலையர் மலர்ப் பதத்தைப்
போதுற்ற எப்போதும் புகலுநெஞ் சே! இந்தப் பூதலத்தில்
தீதுற்ற செல்வமென்? தேடிப் புதைத்த திரவியமென்?
காதற்ற ஊசியும் வாராது காணுங் கடைவழிக்கே!

11. வேதத்தின் உட்பொருள் மன்னுசை மங்கையை விட்டு விடப்
போதித்த வன்மொழி கேட்டிலையோ? செய்த புண்ணியத்தால்
ஆதித்தன் சந்திரன் போல வெளிச்சம் அதாம் பொழுது
காதற்ற ஊசியும் வாராது காணுங் கடை வழிக்கே!

12. மனையாளும் மக்களும், வாழ்வும், தனமும் தன் வாயில்மட்டே
இனமான சுற்றம் மயானம் மட்டே, வழிக்கேது துணை?
தினையா மளவு எள்ளளவாகிலும் முன்பு செய்ததவம்
தனையாள என்றும் பரலோகம் சித்திக்கும் சத்தியமே.

---

8. குழல்-கூந்தல்; 9. மானார்-மான்போல்மருட்சி கொண்ட கண்களை உடைய மங்கையர்; பூசல்-சண்டை 11. ஆதித்தன்-சூரியன்.



13. அத்தமும் வாழ்வும் அகத்த மட்டே! விழியம் பொழுக
மெத்திய மாதரும் வீதிமட்டே; விம்மி விம்மி இரு
கைத்தலம் மேல்வைத்து அழும் மைந்தரும் சுடு காடு மட்டே!
பற்றித் தொடரும் இருவினைப் புண்ணிய பாவமுமே!

14. சீயும் குருதிச் செழுநீர் வழும்பும்
செறிந்தெழுந்து
பாயும்; புடவை ஒன்றில்லாத போது
பகல் இரவாய்
ஈயும் எறும்பும் புகுகின்ற யோனிக்கு இரவுபகல்
மாயும் மனிதரை மாயாமல் வைக்க மருந்
தில்லையே!



15. சீதப் பனிக்குண்டு சிக்கெனக் கந்தை; தினம் இரந்து
நீ துய்க்கச் சோறு மனைதோறும் உண்டு, நினைவெழுந்தால்
விதிக்கு நல்ல விலைமாதர் உண்டு; இந்த மேதினியில்
ஏதுக்கு நீசலித்தாய் மனமே என்றும் புண்படவே?

16. ஆறுண்டு; தோப்புண்டு; அணிவீதி அம்பலம் தானு முண்டு;
நீறுண்டு; கந்தை நெடுங்கோ வண முண்டு; நித்தம் நித்தம்
மாறுண்டு உலாவி மயங்கும் நெஞ்சே! மனைதோறும் சென்று
சோறுண்டு தூங்கிப் பின் சும்மா இருக்கச் சுகமும் உண்டே!

17. உடுக்கக் கவிக்கக் குளிர்காற்று, வெய்யில் ஒடுங்கி வந்தால்
தடுக்கப் பழைய வொரு வேட்டி யுண்டு; சகம் முழுதும்
படுக்கப் புறந்திண்ணை யெங்கெங்கு முண்டு; பசித்து வந்தால்
கொடுக்கச் சிவனுண்டு; நெஞ்சே! நமக்குக் குறைவில்லையே!

18. மாடுண்டு; கன்றுண்டு) மக்களுண்டு என்று மகிழ்வ தெல்லாம்
கேடுண்டு எனும்படி கேட்டு விட்டோம் இனிக் கேள்மனமே!
ஓடுண்டு; கந்தையுண் டுள்ளேயெழுத் தைந்தும் ஓதவுண்டு
தோடுண்ட கண்டன் அடியார் நமக்குத் துணை யு முண்டே!

19. மாத்தா னவத்தையும் மாயா புரியின் மயக்கத்தையும்
நீத்தார் தமக்கொரு நிட்டையுண்டோ? நித்தன் அன்பு கொண்டு
வேர்த்தால் குளித்துப், பசித்தால் புசித்து, விழி துயின்று
பார்த்தால் உலகத் தவர்போல் இருப்பர் பற்று அற்றவரே!

20. ஒன்றென்றிரு! தெய்வம் உண்டென்றிரு! உயர் செல்வமெல்லாம்
அன்றென் றிரு! பசித்தோர் முகம் பார்! நல்லறமும் நட்பும்
நன்றென் றிரு! நடு நீங்காமலே நமக்கு இட்டபடி
என்றென் றிரு! மனமே உனக்கே உபதேச மிதே.

21. நாட்டமென் றேயிரு! சற்குரு பாதத்தை நம்பு! பொம்ம
லாட்டமென் றேயிரு! பொல்லா வுடலை அடர்ந்த சந்தைக்
கூட்டமென் றேயிரு! சுற்றத்தை வாழ்வைக் குடங்கவிழ்நீர்
ஓட்டமென் றேயிரு! நெஞ்சே உனக்கு உபதேசமிதே!

---

19. மாத்தான வத்தையும்-மகத்துவமான வஸ்துவையும் (மகத்துவமான பொருள்கள்: மேலுலகத்தில் உள்ள சிந்தாமணி, கற்பகம், காமதேனு, ரம்பை.)

22. என் செய லாவது யாதொன்றும் இல்லை; இனித் தெய்வமே!
உன் செய லேயென்று உணரப்பெற்றேன்; இந்த ஊனெடுத்த
பின் செய்த தீவினை யாதொன்றும் இல்லைப் பிறப்பதற்கு
முன் செய்த தீவினையோ இங்ஙனமே வந்து மூண்டதுவே!

23. திருவேடம் ஆகித் தெருவில் பயின் றென்னைத் தேடிவந்து
பரிவாகப் பிச்சை பகருமென் னூனைப்பதம் பணிந்தேன்;
கருவாகும் ஏதக் கடற்கரை மேவக் கருதும் என்னை
உருவாக்கிக் கொள்ள வல்லோ இங்ஙனேசிவன் உற்றதுவே!

24. விட்டேன் உலகம்; விரும்பேன் இருவினை; வீணருடன்
கிட்டேன்; அவர் உரை கேட்டும் இரேன்; மெய் கெடாத நிலை
தொட்டேன்; சுகதுக்கம் அற்றுவிட்டேன்; தொல்லை நான் மறைக்
எட்டேன் எனும்பரம் என்னிடத்தே வந்து இங்கு எய்தியதே! [கும்

25. அட்டாங்க யோகமும் ஆதாரம் ஆறும் அவத்தை ஐந்தும்
விட்டேறிப் போன வெளிதனிலே வியப் பொன்று கண்டேன்
வட்டாகிச் செம்மதிப் பாலூறல் உண்டு மகிழ்ந் திருக்க
எட்டாத பேரின்பம் என்னை விழுங்கி யிருக்கின்றதே.

26. எரி எனக்கென்னும், புழுவோ எனக் கென்னும் இந்த மண்ணும்,
சரி எனக் கென்னும், பருந்தோ எனக்கென்னும் தான் புசிக்க
நரி எனக் கென்னும், புன்னாய் எனக்கென்னும், இந்நாறுடலைப்
பிரியமுடன் வளர்த்தேன்; இதனால் என்ன பேறு எனக்கே?

27. அண்ணல்தன் வீதி அரசிருப் பாகும், அணி படையோர்
நண்ணொரு நாலொன்பதாம்; அவர் ஏவலும் நன்னும் இவ்வூர்
துண்ணென் பசிக்கு மடைப்பள்ளியான சுகமுமெல்லாம்
எண்ணிவி காலம் அவமே விடுத்தனம், எண்ணரிதே!

28. என்பெற்ற தாயாரும் என்னைப் 'பிண' மென்று இகழ்ந்து விட்டார்;
பொன்பெற்ற மாதரும் 'போ'மென்று சொல்லிப் புலம்பி விட்டார்!
கொன்பெற்ற மைந்தரும் பின்வலம் வந்து குடம் உடைத்தார்;
உன்பற்று ஒழிய ஒருபற்றும் இல்லை உடையவனே!

29. கறையற்ற பல்லும் கரித்துண் ஆடையும் கள்ளமின்றிப்
பொறையுற்ற நெஞ்சமும் பொல்லாத ஊனும் புறந்தின்னையும்
தரையில் கிடப்பும் இரந்துண்ணும் ஓடும் சுகமறியக்
குறைவற்ற செல்வமென் றேகோல மாமறை கூப்பிடுமே.

---

22. இங்ஙன்-இங்ஙனம், இவ்வாறு; 23. ஏதம்-குற்றம், துன்பம்; 25. அட்டாங்கம்-அஷ்டாங்கம்! [அஷ்டாங்க யோகம்: இயமம், நியமம் ஆதனம், தாரணம், பிராணாயாமம், பிரத்தியாகாரம்; தியானம் சமாதி.] ஆதாரம்-ஆறு ஆதாரங்கள் [அவை மூலாதாரம், சுவாதிஷ்டானம், மணி பூரகம், அனாகதம், விசுத்தி, ஆக்கினை] அவத்தை-ஐந்து அவத்தைகள் [அவை சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம்; துரியாதீதம்] வட்டு-வண்டு; 26. பேறு-பயன்; 27. அவம்-வீண்; 28. கொன்-வலிமை; 29. பொறை-பொறுமை; கோலம்-அழகு.

30. எட்டுத் திசையும் பதினாறு கோணமும் எங்கும் ஒன்றாய்
முட்டித் ததும்பி முளைத்தோங்கு சோதியை மூடரெல்லாம்
கட்டிச் சுருட்டித்தம் கக்கத்தில் வைப்பர், கருத்தில் வையார்
பட்டப் பகலை இரவென்று கூறிடும் பாதகரே.

31. வாய்நாறும் ஊழல்; மயிர்ச்சிக்கு நாறிடும்; மையிடுங்கண்
பீ நாறும்; அங்கம் பிணவெடி நாறும்; பெருங்குழி வாய்ச்
சீ நாறும்; யோனி அழல்நாறும்; இந்திரியச் சேறு சிந்திப்
பாய்நாறும் மங்கையர்க் கோஇங்ஙனே மனம் பற்றியதே?

32. உரைக்கைக்கு நல்ல திருவெழுத்து ஐந்துண்டு உரைப்படியே,
செருக்கித் தரிக்கத் திருநீறு முண்டு; தெருக்குப்பையில்
தரிக்கக் கரித்துணி ஆடையும் உண்டு எந்தச் சாதியிலும்
இரக்கத் துணிந்துகொண்டேன்; குறை ஏதும் எனக்கில்லையே!

33. ஏதப்பட்டாய் இனி மேற்படும் பாட்டைஇ தென்றறிந்து
போதப்பட்டாயில்லை நல்லோரிடம் சென்று; புல் லறிவால்
வாதைப்பட்டாய்; மட மானார் கலவி மயக்கத்திலே,
பேதப்பட்டாய்; நெஞ்சமே! உனைப்போல் இல்லை பித்தருமே!

34. சுரப்பற்று வல்வினை சுற்றமும் அற்றுத் தொழில்களற்று
கரப்பற்று மங்கையர் கையிணைக் கற்றுக் கவலையற்று
வரப்பற்று நாதனை வாயார வாழ்த்தி மன மடங்கப்
பரப்பற்றி ருப்பதென் றோ? பர மா! பரமானந்தமே!

35. பேய்போல் திரிந்து பிணம்போல் கிடந்து இட்ட பிச்சையெல்லாம்
நாய்போல் அருந்தி நரிபோல் உழன்று நன்மங்கை யரைத்
தாய்போல் கருதித் தமர்போல் அனைவர்க்கும் தாழ்மை சொல்லிச்
சேய்போல் இருப்பர்கண் டீர் உண்மை ஞானம் தெளிந்தவரே!

36. விடக்கே! பருந்தின் விருந்தே! கமண்டல வீண னிட்ட
முடக்கே! புழுவந்து உறையிடமே! நலம் முற்றும் இலாச்
சடக்கே! கருவி தளர்ந்துவிட் டால்பெற்ற தாயுந்தொடாத்
தொடக்கே! உனைச்சுமந் தேன் நின்னின் ஏது சுகமெனக்கே?

37. அழுதால் பயனென்ன? நொந்தால் பயனென்ன? ஆவதில்லை
தொழுதால் பயனென்ன? நின்னை ஒருவர் சுடவுரைத்த
பழுதால் பயனென்ன? நன்மையும் தீமையும் பங்கயத் தோன்
எழுதாப்படி வருமோ? சலியாதுஇரு என்ஏழை நெஞ்சே!

38. செல்வரைப் பின்சென் றுபசாரம் பேசித் தினந் தினமும்
பல்லினைக் காட்டி பரிதவி யாமல் பரமா னந்தத்தின்
எல்லையில் புக்குநல் ஏகாந்த மாய் எனக் காமிடத்தே
அல்லல் அற்றுஎன் றிருப் பேன் ஆலநீழல் அரும் பொருளே!

---

30. கக்கம்-அக்குள்; 31. ஊழல்-ஊத்தை; 33, புல்லறிவு-தாழ்ந்த அறிவு; வாதை-துன்பம்; 36. விடக்கு-தசைப்பிண்டம்; கமண்டல வீணன் இட்டமுடக்கே-கமண்டலமேந்திய வீணனான பிரமன் செய்து வைத்த இறு குடிலே; 38. அல்லல்-துன்பம்;

39. ஊரீர் உமக்கோர் உபதேசம் கேளும் உடம் படங்கப்
போரீர் சமணைக் கழுவேற்று நீற்றைப் புறந்திண்ணையில்
சாரீர் அனந்தலைச் சுற்றத்தை நீங்கிச் சகம்நகைக்க
ஏரீர் உமக்கு அவர் தாமே தருவர் இணையடியே!

40. நீற்றைப் புனைந்தென்ன? நீராடப் போயென்ன?
நீ மனமே!
மாற்றிப் பிறக்க வகையறிந் தாயில்லை;
மாமறைநூல்
ஏற்றிக் கிடக்கும் எழுகோடி மந்திரம் என்ன
கண்டாய்?
ஆற்றில் கிடந்தும் துறையறியாமல்
அலைகின்றையே!



41. ஓங்கார மாய்நின்ற வத்துவி லேஒரு வித்துவந்து
பாங்காய் முளைத்த பயன் அறிந்தால் பதி னுலகும்
நீங்காமல் நீங்கி நிறையா நிறைந்து நிறையுருவாய்
ஆங்கார மானவர்க் கெட்டாக் கனிவந் தமர்ந்திடுமே

42. விதியார் படைப்பும் அரியார் அளிப்பும் வியன் கயிலைப்
பதியார் துடைப்பும் நம் பால் அணுகாது; பரமானந்தமே
கதியாகக் கொண்டுமற் றெல்லாம் துயிலில் கனவென நீ
மதியா திருமனமே! இது காண் நல் மருந்துனக்கே!

43. நாய்க்குண்டு தெண்டு; நமக்குண்டு பிச்சை; நமனைவெல்ல
வாய்க்குண்டு மந்திர பஞ்சாட் சரம் மதி யாமல்வரும்
பேய்க்குண்டு நீறு; திகைப்புண்டு நின்ற பிறவிப்பிணி
நோய்க்குண்டு தேசிகன் தன் அருள் நோக்கங்கள் நோக்குதற்கே!

44. நேமங்கள் நிட்டைகள் வேதங்கள் ஆகம நீதிநெறி
ஓமங்கள் தர்ப்பணம் சந்தி செபமந்த்ர யோகநிலை
நாமங்கள் சந்தனம் வெண்ணீறு பூசி நலமுடனே
சாமங்கள் தோறும் இவர் செய்யும் பூசைகள் சர்ப்பனையே.

45. நான் எத்தனை புத்தி சொன்னாலும் கேட்கிலை நன்னெஞ்சமே!
ஏன் இப்படிகெட் டுழலுகின்றாய்? இனி ஏதமில்லா
வானத்தின் மீனுக்கு வன் தூண்டில் இட்ட வகையதுபோல்
போனத்தை மீள நினைக்கின்றனை; என்ன புத்தியிதே!

46. அஞ்சக் கரமெனுங் கோடாலி கொண்டிந்த ஐம்புலனும்
வஞ்சப் புலக்கட்டை வேர் அறவெட்டி வளங்கள் செய்து
விஞ்சத் திருத்திச் சதாசிவம் என்கின்ற வித்தையிட்டுப்
புஞ்சக் களை பறித்தேன் வளர்த்தேன் சிவ போகத்தையே!

---

39. சமண்-சமணர்; அனந்தல்-தூக்கம் (யோக நித்திரை) சகம்-உலகம், நகைக்க-சிரிக்க; 40. மாமறை நூல்-பெரிய வேதம்; 41. வத்து-வஸ்து; பொருள்; பாங்காய்-முறையாக, பக்குவமாக; 42. விதியார்-பிரமன்-அரியார்-திருமால்; 43. தெண்டு-எச்சில் இலை; 44. நேமம்-நியமம்; சாமம், மூன்று மணி நேரம்; சர்ப்பனை-வஞ்சம்; 46. அஞ்சக்கரம்-ஐந்து அக்ஷரம். ஐந்தெழுத்து; புஞ்சம்-கூட்டம்;

47. தாயாரும் சுற்றமும் பெண்டிரும் கைவிட்டுத் தாழ்ந்திடுநாள்
''நீயாரு? நானுர்?'' எனப்பகர் வார் அந்த நேரத்திலே
நோயாரும் வந்து குடிகொள்வரே; கொண்ட நோயும் ஒரு
பாயாரும் நீயுமல்லாமல் பின்னையேது நட் பாமுடலே!

48. ஆயும் பொழுது மயிர்க்கால்கள் தோறும் அரும் கிருமி
தோயும் மலக்குட்டையாகிய காயத்தைச் சுட்டுவிட்டால்,
பேயும் நடனம் இடும் கடமாம் என்று பேசுவதை
நீயும் அறிந்திலையோ? பொருள் தேட நினைந்தனையே!

49. பூணும் பணிக்கல்ல பொன்னுக்குத் தானல்ல பூமிதனைக்
காணும் படிக்கல்ல மங்கையர்க்கல்ல நம் காட்சிக்கல்ல
சேணுங் கடந்த சிவனடிக் கல்ல என் சிந்தை கெட்டுச்
சாணும் வளர்க்க அடியேன் படுந்துயர் சற்றல்லவே!

50. வெட்டாத சக்கரம் பேசாத மந்திரம் வேறொருவர்க்கு
எட்டாத புட்பம் இறையாத தீர்த்தம் இனி முடிந்து
கட்டாத லிங்கம் கருதாத நெஞ்சம் கருத்தினுள்ளே
முட்டாத பூசையன்றோ குருநாதன் மொழிந்தது வே?

51. எரு முட்டை பிட்கில் உதிர்ந்திடும் சொல்லுக்கு எவர் அழுவார்?
கருமுட்டை புக்குக் கழலகன் றீர்கன துக்கமதாய்ப்
பெருமுட்டுப் பட்டவர் போல் அழும் பேதையீர்! பேத்துகிறீர்;
ஒரு முட்டும் வீட்டும் அரன் நாமம் என்றைக்கும் ஓதுமினே!

52. மையாடு கண்ணியும், மைந்தரும், வாழ்வும், மனையும் செந்தீ
ஐயா! நின்மாயை உருவெளித் தோற்றம் அகிலத்துள்ளே
மெய்யாயிருந்தது; நாட்செல நாட்செல வெட்டவெறும்
பொய்யாய்ப் பழங்கதையாய்க் கனவாய் மெல்லப் போனதுவே!

53. ஆயாய் பலகலை; ஆய்ந்திடும் தூய அருந்தவர்பால்
போயாகிலும் உண்மையைத் தெரிந்தாயில்லை; பூதலத்தில்
வேயார்ந்த தோளியர் காமவிகாரத்தில் வீழ்ந்தழுந்திப்
பேயாகி விழிக்கின்றனை, மனமே! என்ன பித்துனக்கே?

54. அடியார் உறவும் அரன் பூசை நேசமும் அன்புமன்றிப்
படி மீதில் வேறு பயனுளதோ? பங்கயன் வகுத்த
குடியான சுற்றமும் தாரமும் வாழ்வும் குயக்கலங்கள்
தடியால் அடியுண்ட வாறொக்கும் என்றினஞ் சார்ந்திலரே.

55. ஆங்காரப் பொக்கிசம்; கோபக் களஞ்சியம்; ஆணவத்தால்
நீங்கா அரண்மனை; பொய்வைத்த கூடம்; விண் நீடிவளர்
தேங்கார் பெருமதில் காமவிலாசம் இத்தேகம் கந்தல்;
பாங்காய் உனைப்பணிந்து எப்படி ஞானம் பலிப்பதுவே?

---

48. கடம்-காடு [சுடுகாடு]; 51. எருமுட்டை-வராட்டி; 53. வேய்-மூங்கில்; 54. குயக்கலம்-குயவன் செய்த மண்பாண்டங்கள்;

56. ஒழியாப் பிறவி எடுத்து ஏங்கி ஏங்கி உழன்ற நெஞ்சே!
அழியாப் பதவிக்கு அவுடதம் கேட்டி! அநாதியனை
மழுமான் கரத்தனை மால்விடை யானை மனத்தில் உன்னி
விழியால் புனல் சிந்தி விம்மியழு 'நன்மை வேண்டு'மென்றே!

57. நாய்க்கொரு சூலும் அதற்கோர் மருத்துவம் நாட்டில் உண்டோ?
பேய்க்கொரு ஞானம் பிடிபடுமோ? பெரும் காஞ்சிரங்காய்
ஆக்குவர் ஆர்? அருந்துவர் ஆர்? அதுபோல் உடம்பு
நிக்கிரை யாவதல்லால் ஏதுக்கு ஆம்? இதைச் செப்புமினே!

58. கச்சில் கிடக்கும் கனதனத்தில் கடைக் கண்கள் பட்டே
இச்சித் திருக்கின்ற ஏழை நெஞ்சே! இமவான் பயந்த
பச்சைப் பசுங்கொடி உண்ணு முலை பங்கர் பாதத்திலே
தைச்சுக் கிடமனமே! ஒரு காலும் தவறில்லையே

59. மானார் விழியைக் கடந்தேறி வந்தனன்; வாழ்குருவும்
கோனாகி என்னைக் குடியேற்றிக் கொண்டனன்; குற்றமில்லை
போனாலும் பேறு இருந்தாலும் நற்பேறிது; பொய் யன்றுகாண்,
ஆனாலும் இந்த உடம்போடு இருப்பது அருவருப்பே!

60. சற்றாகிலும் தன்னைத் தானறியாய்! தனை ஆய்ந்தவரை
உற்றாகிலும் உரைக்கப் பொருந்தாய்! உனக்கான நிலை
பற்றாய்! குருவைப் பணியாய்! பரத்தையர் பாலில் சென்று என்
பெற்றாய்? மடநெஞ்சமே? உனைப் போல் இல்லை பித்தனுமே!

61. உளியிட்ட கல்லையும் ஒப்பிட்ட சாந்தையும் ஊத்தையறப்
புளியிட்ட செம்பையும் போற்றுகிலேன் உயர் பொன்னெனவே
ஒளியிட்ட தாள் இரண்டுள்ளே யிருத்துவதுள் இன்மையென்று
வெளியிட்டு அடைத்து வைத்தேன் இனிமேல் ஒன்றும் வேண்டிலனே

62. கல்லால் எறியுண்டும் காலால் உதையுண்டும் காளைகையில்
வில்லால் அடியுண்டு முன்னால் விடமுண்டு மேலளித்துப்
பல்லால் புரமெரியே கம்பவாணர் பாதாம்புயத்தின்
சொல்லால் செவியினில் கேளாதிருந்ததென தொல்வினையே.

63. ஒரு நான்குசாதிக்கும் மூவகை தேவர்க்கும் உம்பருக்கும்
திருநாளும் தீர்த்தமும் வேறுளதோவத் திசை முகனால்
வருநாளில் வந்திடு மந்தக்கண்ணாளன் வகுப்பொழியக்
குருநாதனைக் கண்டேர் பின்னையேதுக் குவலயத்தே?

64. பாரோ நீரோ தீயோ வளியோ படர்வானோ
ஆரோ நானென்று ஆய்வுறுகின்றேன் அறிவில்லேன்

---

56. மழு-சூலம்; மால்விடை-பெரிய எருது; 57. சூல்-கருப்பம்

பாரோ நீரோ தீயோ வெளியோ படர்வானோ
ஆரோ நானென்று ஆய்வுறுகின்றவது நீயே!

## தாயாருக்குத் தகனக்கிரியை செய்யும்போது பாடியவை

1. ஐயிரண்டு திங்களாய் அங்கமெலாம் நொந்து பெற்றுப்
பையலென்ற போதே பரிந்தெடுத்துச்—செய்ய இரு
கைப்புறத்தில் ஏந்திக் கனகமுலை தந்தாளை
எப்பிறப்பில் காண்பேன் இனி?

2. முந்தித்தவம் கிடந்து முந்நூறு நாள் அளவும்
அந்திபகலாச் சிவனை ஆதரித்துத்—தொந்தி
சரியச் சுமந்து பெற்ற தாயார் தமக்கோ
எரியத் தழல் மூட்டுவேன்?

3. வட்டிலிலும் தொட்டிலிலும் மார்மேலும், தோள்மேலும்
கட்டிலிலும் வைத்தென்னைக் காதலித்து—முட்டச்
சிறகிலிட்டுக் காப்பாற்றிச் சீராட்டும் தாய்க்கோ
விறகிலிட்டுத் தீமூட்டுவேன்?

4. நொந்து சுமந்து பெற்று நோவாமல் ஏந்திமுலை
தந்து வளர்த்தெடுத்துத் தாழாமே—அந்தி பகல்
கையிலே கொண்டென்னைக் காப்பாற்றும் தாய் தனக்கோ
மெய்யிலே தீமூட்டுவேன்?

5. அரிசியோ நான் இடுவேன் ஆத்தாள் தனக்கு
வரிசையிட்டுப் பார்த்து மகிழாமல்—'உருசியுள்ள
தேனே அமிர்தமே செல்வத் திரவியப்பூ
மானே' என அழைத்த வாய்க்கு?

6. அள்ளி இடுவது அரிசியோ? தாய் தலைமேல்
கொள்ளிதனை வைப்பேனோ? கூசாமல்மெள்ள
முகமேல் முகம்வைத்து முத்தாடி 'என்றன்
மகனே' என அழைத்த வாய்க்கு?



7. முன்னை இட்ட தீ முப்புரத்திலே;
பின்னை இட்ட தீ தென் இலங்கையில்;
அன்னை இட்ட தீ அடிவயிற்றிலே
யானும் இட்ட தீ மூள்க! மூள்கவே!

8. வேகுதே தீயதனில்; வெந்து பொடி சாம்பல்
ஆகுதே பாவியேன் ஐயகோ!—மாகக்
குருவி பறவாமல் கோதாட்டி என்னைக்
கருதி வளர்த்தெடுத்த கை.

---

**செய்யுள் எண் : (தாயாருக்குத் தகனக் கிரியை)**

1. திங்கள்-மாதம்; கனகமுலை-பொன்னாபரணம் படிந்துள்ள முலை; 2. அந்தி-இரவு; தழல்-நெருப்பு; 3. வட்டில்-ஏணை; 4. மெய்-உடம்பு; 5. ஆத்தாள்-தாயாரை ஆத்தாள் என அழைப்பது செட்டிமார் மரபு. 8. மாகம்-ஆகாயம்;

9. வெந்தாளோ சோணகிரி வித்தகா! நின்பதத்தில்
வந்தாளோ! என்னை மறந்தாளோ—சந்ததமும்
உன்னையே நோக்கி உகந்துவரம் கிடந்துஎன்
தன்னையே ஈன்றெடுத்த தாய்?

10. வீற்றிருந்தாள் அன்னை: வீதிதனில் இருந்தாள்!
நேற்றிருந்தாள்; இன்று வெந்து நீறானாள்:—பால்தெளிக்க
எல்லீரும் வாருங்கள்! ஏதென்று இரங்காமல்
எல்லாம் சிவமயமே யாம்!

## வெளிப்பட்டபின் பாடிய தலப்பாடல்கள்

1. மென்று விழுங்கி விடாய்க்கழிக்க நீர்தேடல்
என்று விடியும் எனக்கு எங்கோவே—நன்றி
கருதார் புரமூன்றும் கட்டழலால் செற்ற
மருதா உன் சந்நிதிக்கே வந்து!

2. கண்டம் கரியதாம்: கண் மூன்று உடையதாம்;
அண்டத்தைப் போல் அழகியதாம்;—தொண்டர்
உடல் உருகத் தித்திக்கும் ஓங்கு புகழ் ஒற்றிக்
கடலருகே நிற்கும் கரும்பு.

3. ஓடு விழுந்து சீப்பாயும் ஒன்பதுவாய்ப் புண்ணுக்கு
இடு மருந்தை யான் அறிந்து கொண்டேன்—கடு அருந்தும்
தேவாதி தேவன் திருவொற்றியூர்த் தெருவில்
போவார் அடியிற் பொடி!

4. வாவிஎல்லாம் தீர்த்த(ம்); மணல் எல்லாம் வெண்ணீறு;
காவனங்கள் எல்லாம் கணநாதர்:—பூவுலகில்
ஈது சிவலோகம் என்றென்றே மெய்த்தவத்தோர்
ஓதும் திருவொற்றியூர்!

5. ஆரூரர் இங்கிருக்க அவ்வூர்த் திருநா
ளென்(று)
ஊரூர்கள் தோறும் உழலுவீர்!—நேரே
உளக்குறிப்பை நாடாத ஊமர்காள் நீவிர்
விளக்கிருக்கத் தீத்தேடுவீர்.

6. எருவாய்க்கு இருவிரல்மேல் ஏறுண்டிருக்கும்
கருவாய்கோ கண்கலக்கப் பட்டாய்!—திரு
வாரூர்த்
தேரோடும் வீதியிலே செத்துக் கிடக்கின்றாய்
நீரோடும் தாரைக்கே நீ!

---

9. சந்ததம்-எப்பொழுதும்: 10, நீறு—பொடி. சாம்பல்; இரங்குதல்—வருத்தப்படுதல்;

தலப் பாடல்கள்

கடு-விஷம்: 4 வாவி—தடாகம்; கண—கோஷ்டி; வனம்—நந்தவனம்; 6. எரு வாய்-மலத்துவாரம்;

7. எத்தனை ஊர்? எத்தனை வீ(டு) எத்தனை தாய்? பெற்றவர்கள்
எத்தனை பேர் இட்டழைக்க ஏன் என்றேன்—நித்தம்
எனக்குக் களையாற்றாய் ஏகம்பா! கம்பா!
உனக்குத் திருவிளையாட்டோ?



8. அத்திமுதல் எறும்பீ ருனவுயிர் அத்தனைக்கும்
சித்தமகிழ்ந் தளிக்கும் தேசிகா!—மெத்தப்
பசிக்குதையா! பாவியேன் பாழ்வயிற்றைப்பற்றி
இசிக்குதையா! காரோணரே.

9. பொய்யை ஒழியாய்; புலாலை விடாய்; காளத்தி
ஐயரை எண்ணாய்; அறம் செய்யாய்;—வெய்ய
சினமே ஒழியாய்; திருவெழுத்தைந்து ஓதாய்;
மனமே உனக்கென்ன மாண்பு?

10. மாதா உடல் சலித்தாள்; வல்வினையேன் கால்சலித்தேன்;
வேதாவும் கைசலித்து விட்டானே—நாதா!
இருப்பையூர் வாழ் சிவனே! இன்னம்ஓர் அன்னை
கருப்பையூர் வாராமற்கா!



11. மண்ணும் தணல் ஆற; வானும் புகை ஆற
எண்ணரிய தாயும் இளைப்பாறப்—பண்ணுமயன்
கையாறவும் அடியேன் கால் ஆறவும் காண்பார்
ஐயா! திருவை யாறு!

12. காலன் வருமுன்னே. கண் பஞ்சடை முன்னே
பாலுண் கடைவாய்ப்படுமுன்னே-மேல்விழுந்தே
உற்றார் அழுமுன்னே ஊரார் சுடுமுன்னே
குற்றாலத் தானையே கூறு!

## பொது

1. சிற்றம் பலமும் சிவனும் அருகிருக்க
வெற்றம் பலம் தேடி விட்டோமே—நித்தம்
பிறந்த இடத்தைத் தேடுதே பேதை மட நெஞ்சம்
கறந்த இடத்தை நாடுதே கண்.

2. தோடவிழும் பூங்கோதைத் தோகை உனை இப்போது
தேடினவர் போய்விட்டார் தேறியிரு—நாடி நீ
என்னை நினைத்தால் இடுப்பில் உதைப்பேன் நான்
உன்னை நினைத்தால் உதை.

---

8. அத்தி-யானை; 10. வேதா-பிரமன்; 11. தணல்-நெருப்பு;

பொது

4. கறந்த இடம்-தாய்ப்பால் கறந்த இடம், ஸ்தனம்;

3. வாசற் படிகடந்து வாராத பிச்சைக்குஇங்
காசைப் படுவதில்லை அண்ணலே!—ஆசைதனைப்
பட்டிறந்த காலமெல்லாம் போதும் பரமேட்டி
சுட்டிறந்த ஞானத்தைச் சொல்.

4. நச்சரவம் பூண்டானை நன்றாய்த் தொழுவதுவும்
இச்சையிலே தான் அங் கிருப்பதுவும்—பிச்சைதனை
வாங்குவதும் உண்பதுவும் வந்துதிரு வாயிலிலே
தூங்குவதும் தானே சுகம்.

5. இருக்கும் இடம்தேடி என்பசிக்கே அன்னம்
உருக்கமுடன் கொண்டுவந்தால் உண்பேன்—பெருக்க
அழைத்தாலும் போகேன் அரனே! என்தேகம்
இளைத்தாலும் போகேன் இனி.

6. விட்டுவிடப் போகுதுயிர்!
விட்ட உடனே உடலைச்
சுட்டுவிடப் போகின்றார் சுற்றத்தார்
பட்டது பட்(டு)
எந்நேரமும் சிவனை ஏந்துங்கள்!
போற்றுங்கள்!
சொன்னேன் அதுவே சுகம்.



7. ஆவியொடு காயம் அழிந்தாலும்
மேதினியில்
பாவி என்று நாமம் படையாதே!
—மேவியசீர்
வித்தாரமும் கடம்பும் வேண்டா மடநெஞ்சே!
செத்தாரைப் போலே திரி.

8. வெட்ட வெளியான வெளிக்கும் தெரியாது!
கட்டலையும் கைப்பணமும் காணாதே!—இட்டமுடன்
பற்றென்றால் பற்றாது; பாவியே நெஞ்சில் அவன்
இற்றெனவே வைத்த இனிப்பு.

9. இப்பிறப்பை நம்பி இருப்பாரோ? நெஞ்சமே!
வைப்பிருக்க வாயில் மனை இருக்கச்—சொப்பனம்போல்
விக்கிப் பற்கிட்டக் கண் மெத்தபஞ் சிட்டு அப்பைக்
கக்கிச்செத் துக்கொட்டக் கண்டு.

10. மேலும் இருக்க விரும்பினையே! வெள்விடையோன்
சீலம் அறிந்திலையே! சிந்தையே!—கால்கைக்குக்
கொட்டை இட்டு மெத்தை இட்டுக் குத்திமொத்தப் பட்ட உடல்
கட்டை இட்டுச் சுட்டுவிடக் கண்டு.

11. ஒன்பதுவாய்த் தோல்பைக்கு ஒருநாளைப் போலவே
அன்புவைத்து நெஞ்சே அலைந்தாயே!—வன்கழுக்கள்
தத்தித்தத் தித்தட்டை தட்டிக்கட் டிப்பிட்டுக்
கத்திக் குத்தித் தின்னக் கண்டு.

12. இன்னம் பிறக்க இசைவையோ நெஞ்சமே?
மன்னர் இவர் என்றிருந்து வாழ்ந்தாரை—முன்னம்
எரிந்தகட்டை மீதில் இணைக்கோ வனத்தை
உரிந்துருட்டிப் போட்டது கண்டு!

13. முதற்சங்கம் அமுதூட்டும்; மொய்குழலார் ஆசை
நடுச்சங்கம் நல்விலங்கு பூட்டும்—கடைச்சங்கம்
ஆம்போ தநுஊதும்; அம்மட்டோ? இம்மட்டோ?
நாம்பூமி வாழ்ந்த நலம்.

14. எத்தனை நாள்கூடி எடுத்த சரீரம் இவை?
அத்தனையும் மண்திண்ப தல்லவோ!—வித்தகனார்
காலைப் பிடித்து மெள்ளக் கங்குல்பகல் அற்ற இடத்தே
மேலைக் குடியிருப்போமே!

15. எச்சிலென்று சொல்லி இதமகிதம் பேசாதீர்!
எச்சில் இருக்கும் இடம் அறியீர்—எச்சில்தனை
உய்த்திருந்து பார்த்தால் ஒருமை
வெளிப்படும்; பின்
சித்த நிராமயமா மே.

16. எத்தனை பேர் நட்டகுழி? எத்தனை
பேர் தொட்ட முலை
எத்தனை பேர் பற்றி இழுத்த இதழ்?
நித்தநித்தம்
பொய்யடா பேசும் புவியில்மட
மாதரைவிட்டு
உய்யடா! உய்யடா! உய்!

---

13. முதல் சங்கு-பாலாடை; இடைச் சங்கு திருமணக் காலத்தில் வாத்தியங்களில் ஒன்ருய் அமைந்துள்ள சங்கு; கடைச் சங்கு; இறந்தபின்பு ஊதப்படும் ஈமச்சடங்கு சங்கு
14. கங்குல்-இரவு; 15. எச்சில்-வெறுப்புப் பொருள்;



17. இருப்பதுபொய் போவதுமெய் என்றெண்ணி நெஞ்சே!
ஒருத்தருக்கும் தீங்கினை உன்னாதே!—பருத்ததொந்தி
நம்மதென்று நாமிருப்ப, நாய்நரிகள் பேய்கழுகு
தம்மதென்று தாமிருக்கும் தான்!

18. எத்தொழிலைச் செய்தாலும் ஏதவத்தைப் பட்டாலும்,
முத்தர் மனம் இருக்கும் மோனத்தே—வித்தகமாய்க்
காதிவிளை யாடிஇரு கைவீசி வந்தாலும்
தாதிமனம் நீர்க்குடத்தே தான்!

19. மாலைப் பொழுதில்நறு மஞ்சள் அரைத் தேகுளித்து
வேலை மினுக்கிட்டு விழித்திருந்து—சூலாகிப்
பெற்றாள்; வளர்த்தாள்; பெயரிட்டாள்; பெற்ற பிள்ளை
பித்தானால் என்செய்வாள் பின்?

20. நாப்பிளக்கப் பொய் உரைத்துநவநிதியம்
தேடி
நலன் ஒன்றும் அறியாத நாரியரை கூடிப்,
பூப்பிளக்க வருகின்ற புற்றீசல் போலப்
புலபுலெனக் கலகலெனப் புதல்வர்
களைப் பெறுவீர்
காப்பதற்கும் வகையறியீர்; கைவிடவும்
மாட்டீர்;
கவர்பிளந்த மரத்துளையில் கால்
நுழைத்துக் கொண்டே
ஆப்பதனை அசைத்துவிட்ட குரங்கதனை போல
அகப்பட்டீர்; கிடந்துழல அகப்பட்டீரே!



21. மத்தளை தயிர்உண்டானும் மலர்மிசை மன்னி னானும்
நித்தமும் தேடிக் காணு நிமலனே நீஇன் றேகிச்

---

20. கவர் பிளந்த—இரு பிள
வாகப் பிளந்த;



செய்தகளை கயல்பாய நாங்கூர் சேந்தனை வேந்தன் இட்ட
கைத்தளை நீக்கி என்முன் காட்டு வெண் காட்டு ளானே!

22. வடிவந்தானும் வாலிபம்; மகளும்தாயும் மாமியும்
படிகொண்டாரும் ஊரிலே பழிகொண்டால் நீதியோ
குடிவந்தானும் ஏழையோ? குயவன் தானும் கூழையோ?
நடுநின்றானும் வீணனோ? நகரம் சூறை ஆனதே.

23. மண்ணும் உருகும் மரம் உருகும் மாயை உருகும் மால்உருகும்
பெண்ணும் உருகும் ஆண்உருகும் பேதாபேத வகை உருகும்
அண்ணல் உருகும் இடத்தமர்ந்த ஆத் தாள் உருகும் அரவணையான்
எண்ணி உருகும் குருநாதன் என்பால் உரைத்த ஓர் மொழியே.

## முதல்வன் முறையீடு

கன்னி வனநாதா—கன்னி வனநாதா



1. மூலம் அறியேன்; முடியும் முடிவறியேன்
ஞாலத்துள் பட்டதுயர் நாட நடக்குதடா!

2. அறியாமை யாம்மலத்தால் அறிவுமுதல் கெட்டனடா!
பிறியா வினைப்பயனால் பித்துப் பிடித்தனடா!

3. தனுவாதிய நான்கும் தானாய் மயங்கினன்டா!
மனுவாதி சத்தி வலையில் அகப்பட்டனடா!

4. மாமாயை என்னும் வனத்தில் அலைகிறண்டா!
தாமாய் உலகனைத்தும் தாது கலங்கிறண்டா!
(கன்னி வனநாதா!-கன்னி வனநாதா)

5. மண்ணாசைப் பட்டேனை மண்ணுண்டு போட்டதடா!
பொன்னாசை பெண்ணாசை போகேனை என்குதே.

6. மக்கள் சுற்றத் தாசை மறக்கேனே என்குதே;
திக்கரசாம் ஆசையது தீரேனே என்குதே.

7. வித்தை கற்கும் ஆசையது விட்டொழியேன் என்குதே;
சித்துகற்கும் ஆசை சிதையேனே என்குதே,

8. மந்திரத்தில் ஆசை மறக்கேனே என்குதே;
சுந்தரத்தில் ஆசை துறக்கேனே என்குதே.

9. கட்டுவர்க்கத்து ஆசை கழலேனே என்குதே;
செட்டுதனில் ஆசை சிதையேனே என்குதே;

---

22. படி-பூமி; குடிவந்தான்-சிவன்; குயவன்-பிரமன்; கூழை-வன்மை இல்லாதவன்; நடுநின்றான்-யமன்; நகரம்-உடல்,

1. கன்னி-மீனாட்சி; கன்னி வனம்-மதுரை; கன்னி வனநாதன்-சிவபெருமான் 4. தாது-மனச்சஞ்சலம்; 8. சுந்தரம்—அழகு;

10. மாற்றும் சலவை மறக்கேனே என்குதே;
சோற்றுக் குழியும் இன்னம் தூரேமேன என்குதே.
(கன்னி வனநாதா!-கன்னி வனநாதா!)

11. ஐந்து புலனும் அடங்கேனே என்குதே;
சிந்தை தவிக்கிறதும் தேறேனே என்குதே.

12. காமக் குரோதம் கடக்கேனே என்குதே!
நாமே அரசென்று நாள்தோறும் எண்ணுதே

13. அச்சம் ஆங்காரம் அடங்கேனே என்குதே;
கைச்சும் இன்னுமானங் கழலேனே என்குதே;

14. நீர்க்குமிழி ஆம்உடலை நித்தியமாய் எண்ணுதே!
ஆர்க்கும் உயராசை அழியேனே என்குதே.

15. கண்ணுக்குக் கண்ணெதிரே கட்டையில் வேகக்கண்டும்
எண்ணும் திரமாய் இருப்போம் என்றெண்ணுதே.

16. அநித்தியத்தை நித்தியம் என்றுதவராய் எண்ணுதே.
தனித்திருக்கேன் என்குதே தனை மறக்கேன் என்குதே.

17. நரகக் குழியும் இன்னும் நான் புசிப்பேன் என்குதே.
உரகப் படத்தல்குல் உனைக் கெடுப்பேன் என்குதே.

18. குரும்பை முலையும் குடிகெடுப்பேனே என்குதே;
அரும்பு விழியும் என்றன் ஆவி உண்பேன் என்குதே.

19. மாதர் உருக் கொண்டு மறலி வஞ்சம் எண்ணுதே.
ஆதரவும் அற்று இங்கு அரக்காய் உருகிறண்டா!

20. கந்தனை ஈன்றருளுங் கன்னி வனநாதா!
எந்த விதத்தில் நான் ஏறிப் படருவண்டா!

(கன்னி வனநாதா!-கன்னி வனநாதா!)



புல்லாகிப் பூடாய்ப் புலந்தநாள் போதாதோ?
கல்லாய் மரமாய்க் கழிந்தநாள் போதாதோ?

கிரியாய்க் கிடமாய்க் கெட்டநாள் போதாதோ?
நீரியாய் ஊர்வனவாய் நின்றநாள் போதாதோ?

பூதமொடு தேவருமாய்ப் போனநாள்
போதாதோ?

வேதனை செய் தானவராய் வீந்தநாள்
போதாதோ!

அன்னை வயிற்றில் அழிந்தநாள் போதாதோ?
மன்னவனாய் வாழ்ந்து மரித்தநாள்
போதாதோ?

---

17. உரகம்-பாம்பு; 18. குரும்பை-தென்னங்குரும்பை; 22. கிடம்-புழு;
23. தானவர்-இராட்சதர்; 24. மரித்தல்-இறத்தல்;



25. தாயாகித் தாரமாய்த் தாழ்ந்தநாள்
போதாதோ?
சேயாய்ப் புருடனுமாய்ச்
சென்றநாள் போதாதோ?

26. நோய்உண்ண வேமெலிந்து
நொந்தநாள் போதாதோ?
பேய்உண்ணப் பேயாய்ப்
பிறந்தநாள் போதாதோ?

27. ஊனவுடல் கூன்குருடாய்
உற்றநாள் போதாதோ?
ஈனப் புசிப்பில் இளைத்தநாள்
போதாதோ?

28. பட்டகளையும் பரதவிப்பும் போதாதோ?
கெட்டநாள் கெட்டேன் என்று கேளாதும் போதாதோ?

29. நில்லாமைக்கே அழுது நின்றநாள் போதாதோ?
எல்லாரும் என்பாரராம் எடுத்தநாள் போதாதோ?

30. காமன் கணையால் கடைபட்டல் போதாதோ?
ஏமன் கரத்தால் இடியுண்டல் போதாதோ?

31. நான்முகன் பட்டோலை நறுக்குண்டல் போதாதோ?
தேன் துளபத்தான் நேமி தேக்குண்டல் போதாதோ?

32, உருத்திரனுர் சங்காரத்து உற்றநாள் போதாதோ?
வருத்தம் அறிந்தையிலை! வாவென்று அழைத்தையிலை!

(கன்னி வனநாதா! கன்னி வன நாதா)

33. பிறப்பைத் தவிர்த்தயிலை; பின்னுகக் கொண்டையிலை;
இறப்பைத் தவிர்த்தையிலை; என்னென்று கேட்டுடையிலை

34. பாசம் எரித்தையிலை; பரதவிப்பைத் தீர்த்தையிலை;
பூசிய நீற்றைப் புனைஎன்று அளித்தையிலை;

35. அடிமை என்று சொன்னையிலை; அக்கமணி சந்தையிலை;
விடும் உலகம் நோக்கி உன்றன் வேடம் அளித்தையிலை;

36. உன்னில் அழைத்தயிலை; ஒன்றுகிக் கொண்டையிலை;
நின் அடியார் கூட்டத்தில் நீ அழைத்து வைத்தையிலை;

37. ஓங்கும் பரத்துள் ஒளித்த அடியார்க்கு அடியான்
ஈங்கோர் அடியான் எமக்கென்று உரைத்தையிலை,

---

30. கணை-அம்பு; 31. நேமி-சக்கரம்; தேக்குண்டல்-அலைப்புறுதல்;
35. அக்கமணி-உருத்திராட்சம்;

38. நாமம் தரித்தையிலே; நான் ஒழிய நின்றையிலே;
சேம அருளில் எனைச் சந்தித்து அழைத்தையிலே;

39. முத்தி அளித்தையிலே; மோனம் கொடுத்தையிலே;
சித்தி அளித்தையிலே; சீராட்டிக் கொண்டையிலே.

40. தவிப்பைத் தவிர்த்தையிலே; தானுக்கிக் கொண்டையிலே;
அவிப்பரிய தீயாம்என ஆசை தவிர்த்தையிலே;

41. நின்ற நிலையில் நிறுத்தி எனை வைத்தையிலே;
துன்றங் கரண மொடு தொக்கழியப் பார்த்தையிலே,

42. கட்ட உல கக்காட்சிக் கட்டொழியப் பார்த்தையிலே;
நிட்டையிலே நில் என்று நீ நிறுத்திக் கொண்டையிலே,

(கன்னி வனநாதா!-கன்னி வனநாதா!)

43. கடைக்கண் அருள் தாடா! கன்னி வனநாதா!
கெடுக்கும் மலம் ஒறுக்கிக் கிட்டிவரப் பாரேடா!

44. காதல் தணியேனே! கண்டு மகிழேனே!
சாதல் தவிரேனே! சங்கடம் தான் தீரேனே!

45. உன்னைத் துதியேனே! ஊர்நாடி வாரேனே!
பொன் அடியைப் பாரேனே! பூரித்து நில்லேனே!

46. ஓங்காரப் பொன் சிலம்பின் உல்லாசம் பாரேனே!
பாங்கான தண்டை பலமணியும் பாரேனே!

47. வீரகண்டா மணியின் வெற்றிதனைப் பாரேனே!
சூரர் கண்டு போற்றும் அந்த சுந்தரத்தைப் பாரேனே!

48. இடையில் புலித்தோல் இருந்தநலம் பாரேனே!
விடையில் எழுந்தருளும் வெற்றியினைப் பாரேனே!

49. ஆனை உரிபோர்த்த அழகுதனைப் பாரேனே!
மானைப் பிடித்து ஏந்தும் மலர்க்கரத்தைப் பாரேனே!

50. மாண்டார் தலைபூண்ட மார்பழகைப் பாரேனே!
ஆண்டார் நமக்கென்று அறைந்து திரியேனே!

51. கண்டம் கறுத்துநின்ற காரணத்தைப் பாரேனே!
தொண்டார் குழுவில் நின்ற தோற்றமதைப் பாரேனே!

52. அருள் பழுத்த மாமதியாம் மான் அனத்தைப் பாரேனே!
திருநயனச் சடை ஒளிரும் செழுங்கொழுமை பாரேனே!

53. செங்குமிழின் துண்டம்வளர் சிங்காரம் பாரேனே!
அங்கனியை வென்ற அதரத்தைப் பாரேனே!

54. முல்லை நிலவெறிக்கும் மூரல்ஒளி பாரேனோ!
அல்லார் புருவத்து அழகுதனைப் பாரேனோ!
55. மகரம் கிடந்தோளிரும் வண்மைதனைப் பாரேனோ!
சிகர முடி அழகும் செஞ்சடையும் பாரேனோ!
56. கங்கையொடு திங்கள் நின்ற காட்சிதனைப் பாரேனோ!
பொங்கு அரவைத் தான் சடையில் பூண்ட விதம் பாரேனோ!
57. சரக்கொன்றை பூத்த சடைக்காட்டைப் பாரேனோ!
எருக்கறு கூமத்தை அணி ஏகாந்தம் பாரேனோ!

58. கொக்கிற்கு சூடிநின்று கொண்டாட்டம் பாரேனோ!
அக்கினியை ஏந்திநின்ற ஆனந்தம் பாரேனோ!

59. தூக்கிய காலும் துடி இடையும் பாரேனோ!
தாக்கும் முயலகன் மேல் தாண்டவத்தைப் பாரேனோ!

60. வீசும் கரமும் விகசிதமும் பாரேனோ!
ஆசை அளிக்கும் அபயகரம் பாரேனோ!

61. அரிபிரமர் போற்ற அமரர் சயசயெனப்
பெரியம்மை பாகம் வளர் பேரழகைப் பாரேனோ!

62. சுந்தர நீற்றின் சொகுசுதனைப் பாரேனோ!
சந்திர சேகரனுய்த் தயவு செய்தல் பாரேனோ!

(கன்னி வனநாதா!-கன்னி வனநாதா!)

63- கெட்டநாள் கெட்டாலும் கிருபை இனிப் பாரேடா!
பட்டநாள் பட்டாலும் பதம் எனக்குக் கிட்டாதோ!

64. நற்பருவம் ஆக்கும் அந்த நாள் எனக்குக் கிட்டாதோ?
எப்பருவமும் சுழன்ற ஏகாந்தம் கிட்டாதோ?

65. வாக்கிறந்து நின்ற மவுனமது கிட்டாதோ?
தாக்கிறந்து நிற்கும் அந்தத் தற்சுத்தி கிட்டாதோ?

66. வெந்துயரைத் தீர்க்கும் அந்த வெட்ட வெளி கிட்டாதோ?
சிந்தையையும் தீர்க்கும் அந்தத் தேறலது கிட்டாதோ?

67. ஆன அடியார்க்கு அடிமை கொளக் கிட்டாதோ?
ஊனம்அற என்னை உணர்த்து வித்தல் கிட்டாதோ?

68. என்னென்று சொல்லுவன்டா? என்குருவே! கேளேடா!
பின்னை எனக்குநீ யல்லாமல் பிறிதிலையே.

(கன்னி வனநாதா!-கன்னி வனநாதா!)

---

60. விகசிதம்-வணங்கு, வாழ்த்தருளும். வலக்கையின் அமைப்பு; 66 தேறல் தேன்.

69. அன்ன விசாரமது அற்ற இடம் கிட்டாதோ?
சொர்ண விசாரம் தொலைந்த இடம் கிட்டாதோ?

70. உலக விசாரம் ஒழிந்த இடம் கிட்டாதோ?
மலக்குழுவின் மின்னார் வசியாதும் கிட்டாதோ?

71. ஒப்புவமை பற்றோடு ஒழிந்த இடம் கிட்டாதோ?
செப்புதற்கும் எட்டா தெளிந்த இடம் கிட்டாதோ?

72. வாக்குமனாதீத வகோசரத்தில் செல்ல எனைத்
தாக்கும் அருள்குருவே! நின் தாள் இணைக்கே யான் போற்றி!

## மகளை முன்னிலையாகக் கொண்ட

## அருள் புலம்பல்

1. ஐங்கரனைத் தெண்டனிட்டே அருளடைய வேண்டுமென்று
தங்காமல் வந்து ஒருவன் தன் சொரூபம் காட்டிஎனை,

2. கொள்ளைப் பிறப்பு அறுக்கக் கொண்டான் குருவடிவம்;
கள்ளப் புலன் அறுக்கக் காரணமாய் வந்தான்டி!

3. ஆதாரம் ஓராறும் ஐம்பத்தோர் அட்சரமும்
சூதான கோட்டை எல்லாம் சுட்டான் துரிசு அறவே!

4. மெத்த விகாரம் விளைக்கும் பலபலவாம்
தத்துவங்கள் எல்லாம் தலைகெட்டு வெந்ததடி!

5. என்னோடு உடன் பிறந்தார் எல்லாரும் பட்டார்கள்;
தன்னம் தனியே தனித்திருக்க மாட்டேன்டி!

6. எல்லாரும் பட்டகளம் என்று தொலையுமடி
சொல்லி அழுதால் துயரம் எனக்கு ஆறுமடி!

7. மண்முதலாம் ஐம்பூதம் மாண்டு விழக் கண்டேன்டி!
விண்முதலாம் ஐம்பொறிகள் வெந்துவிழக் கண்டேன்டி!

8. நீங்காப் புலன்கள் ஐந்தும் நீறாக வெந்ததடி;
வாக்காதி ஐவரையும் மாண்டுவிழக் கண்டேன்டி!

9. மனக்கரணம் அத்தனையும் வகைவகையே பட்டழிய
இனக்கரணத் தோடே எரிந்துவிழக் கண்டேன்டி!

10. ஆத்தும தத்துவங்கள் அடுக்கு அழிய வெந்ததடி!
போற்றும் வகை எப்படியோ போதம் இழந்தானே?

11. வித்தியா தத்துவங்கள் வெந்துவிழக் கண்டேன்டி!
சுத்தவித்தை ஐந்தினையும் துரிசு அறவே,

---

மகளை முன்னிலையாகக் கொண்ட அருள் புலம்பல்

5. பட்டார்கள்-அழிந்தார்கள்; 6. களம்-இடம்; 11. துரிசுஅற- தலைமை கேட

12. மூன்று வகைக் கிளையும் முப்பத் தறுவரையும்
கான்றுவிழச் சுட்டுக் கருவேர் அறுத்தாண்டி!
13. குருவாகி வந்தானோ? குலம் அறுக்க வந்தானோ?
உருவாகி வந்தானோ? உரு அழிக்க வந்தானோ?
14. கேடுவரும் என்றறியேன்; கெடுமதிகண் தோற்றாமல்
பாடுவரும் என்றறியேன்; பதியாண்டு இருந்தேண்டி;
15. எல்லாரும் பட்டகளம் இன்ன இடம் என்றறியேன்;
பொல்லாங்கு,தீர்க்கும் பொறியிலியைக் கண்டேண்டி!
16. உட்கோட்டைக் குள்ளிருந்தார் ஒக்க மடிந்தார்கள்;
அக்கோட்டைக் குள்ளிருந்தார் அறுபது பேர் பட்டார்கள்.
17. ஒக்க மடிந்ததடி! ஊடுருவ வெந்ததடி!
கற்கோட்டை எல்லாம் கரிக்கோட்டை ஆச்சுதடி!
18. தொண்ணூற்று அறுவரையும் சுட்டான் துரிசு அறவே;
கண்ணேறு பட்டதடி கருவேர் அறுத்தாண்டி!
19. ஓங்காரம் கெட்டதடி! உள்ளதெல்லாம் போச்சுதடி!
ஆங்காரம் கெட்டதடி! அடியோடு அறுத்தாண்டி!
20. தரையாம் குடிலை முதல் தட்டுருவ வெந்ததடி!
இரையும் மனத்து இடும்பை எல்லாம் அறுத்தாண்டி!
21. முன்னை வினையெல்லாம் முழுதும் அறுத்தாண்டி!
தன்னை அறியவே தான் ஒருத்தி யானேண்டி!
22. என்னையே நான் அறிய இருவினையும் ஈடழித்துத்
தன்னையறியத் தலம் எனக்குச் சொன்னாண்டி!
23. தன்னை அறிந்தேண்டி! தனிக்குமரி ஆனேண்டி!
தன்னம் தனியே தனி இருக்கும் பக்குவமோ?
24. வீட்டில் ஒருவரில்லை வெட்ட வெளி ஆனேண்டி!
காட்டுக்கு எரித்தநிலா கனவாச்சே கண்டதெல்லாம்
25. நகையாரோ கண்டவர்கள்? நாட்டுக்குப் பாட்டலவோ?
பகையாரோ கண்டவர்கள்? பார்த்தாருக்கு ஏச்சலவோ?
26. இந்நிலைமை கண்டாண்டி! எங்கும் இருந்தாண்டி!
கன்னி அழித்தாண்டி! கற்பைக் குலைத்தாண்டி.
27. கற்புக் குலைத்தமையும், கருவோ அறுத்தமையும்,
பொற்புக் குலைத்தமையும், போதம் இழந்தமையும்.
28. என்ன வினைவருமோ! இன்னம் எனக்கு என்றறியேன்!
சொன்ன சொல் எல்லாம் பலித்ததடி! சோர்வறவே.



29. கங்குபகல் அற்றிடத்தைக் காட்டிக் கொடுத்தாண்டி!
பங்கம் அழித்தாண்டி! பார்த்தானைப் பார்த்திருந்தேன்.
30. சாதியில் கூட்டுவாரோ? சாத்திரத்துக்கு உள்ளாமோ?
ஓதி உணர்ந்ததெல்லாம் உள்ளபடி ஆச்சுதடி!
31. என்ன குற்றம் செய்தேனோ எல்லாரும் காணாமல்,
அன்னை சுற்றம் எல்லாம் அறியாரோ அம்புவியில்?

12. கான்று விழ-கழன்று விழ; 20. குடிலை-சுத்தமாயை; 27 பொற்பு-அழகு.

32. கொன்றுரைத் தின்றேனே? தின்றுரைக் கொன்றேனே?
எண்ணுத எல்லாம் என்னும் இச்சை மறந்தேனே?

33, சாதியில் கூட்டுவரே? சமயத்தோர் எண்ணுவரோ?
பேதித்துவாழ்ந்ததெல்லாம் பேச்சுக்கு இடமாச்சுதடி!

34, கண்டார்க்குப் பெண்ணலவோ? காணுர்க்கும் காமமடி!
உண்டார்கள் உண்டதெலாம் ஊனல்ல துண்டார்களோ?

35, கொண்டவர்கள் கொண்டதெல்லாம் கொள்ளாதார் கொள்ளுவரோ?
விண்டவர்கள் கண்டவரோ? கண்டவர்கள் விண்டவரோ?

36. பண்டாய நான்மறைகள் பாடும் பரிசலவோ?
தொண்டாய தொண்டர்உளம் தோற்றி ஒடுங்குமதோ?

37. ஓத எளிதோ? ஒருவர் உணர்வரிதோ?
பேதம்அற எங்கும் விளங்கும் பெருமையன் காண்.




38. வாக்கும் மனமும் கடந்த
மனேலயன் காண்!
நோக்க அரியவன் காண்;
நுண்ணியரில் நுண்ணியன் காண்!

39. சொல்லுக்கு அடங்கான் காண்!
சொல்லிறந்து நின்றவன் காண்!
கல்லுள் இருந்த கனல் ஒளிபோல்
நின்றவன் காண்!

40. சுட்டிறந்த பாழ் அதனில்
சுகித்திருக்கச் சொன்னவன் காண்!
ஏட்டில் எழுத்தோ? எழுதினவன்
கைப்பிழையோ?

41, சும்மா இருக்கவைத்தான்
சூத்திரத்தை நான் அறியேன்;
அம்மா! பொருள் இதுஎன அடைய
விழுங்கினண்டி!

42. பார்த்த இடம் எல்லாம் பரமாகக்
கண்டேனடி!
கோத்த நிலைகுலைத்த கொள்கை
அறியேனடி!

43. மஞ்சனம் ஆட்டி மலர் பறித்துச் சாத்தாமல்
நெஞ்சு வெறும் பாழானேன் நின்றநிலை காணேனடி!

44. பாடிப் படித்திருந்தும் பன்மலர்கள் சாத்தாமல்;
ஓடித் திரியாமல் உருக்கெட்டு விட்டேனடி!

45. மாணிக்கத் துள்ஒளிபோல் மருவி இருந்தாண்டி!
பேணித் தொழும் அடியார் பேசாப் பெருமையன் காண்!

---

35. விண்டவர்கள்-பேசுபவர்கள்; 36. பரிசு-தன்மை; 43. மஞ்சனம்-அபிஷேகம்; 45. பேண-விரும்ப.

46. அன்றுமுதல் இன்றளவும் அறியாப் பருவமதில்
என்றும் பொதுவாய் இருந்த நிராமயன் காண்!

47. சித்த விகாரத்தால் சின்மயனைக் காணமல்
புத்தி கலங்கிப் புகுந்தேன் பொறிவழியே.

48. பத்தி அறியாமல் பாழில் கவிழ்ந்தேனடி!
ஒத்தஇடம் நித்திரை என்று ஒத்தும் இருந்தேனடி!

49. செத்தாரை ஒத்தேனடி! சிந்தை தெளிந்தேனடி!
மற்ருரும் இல்லையடி! மறுமாற்றம் காணேனடி!

50. கல்வியல்ல; கேள்வியல்ல; கைகாட்டும் காரணம்காண்
எல்லையள வற்றதடி! எங்கும் நிறைந்ததடி!

51. வாசா மகோசரத்தை மருவிஇடம் கொண்டானடி;
ஆசுசம் இல்லானடி! அறிவுக்கு அறிவானடி!

52. பத்துத் திசைக்கும் அடங்காப் பருவமடி!
எத்திசைக்கும் எங்கும் இடைவிடாத ஏகமடி!

53. தித்திக்க ஊறுமடி! சித்தம் உடையார்க்குப்.
பத்திக் கடலுள் பதித்தபரஞ் சோதியடி!

54. உள்ளுணர்வாய் நின்றவர் தம்உணர்வுக்கு உணர்வானடி!
எள்ளளவும் உள்ளத்தில் ஏறிக்குறையானடி!

55. தூரும் தலையும் இலான்; தோற்றம் ஒடுக்கம் இலான்;
ஆரும் அறியாமல் அகண்டமாய் நின்ருனடி!

56. எத்தனையோ அண்டத்து இருந்தவர்கள் எத்தனை பேர்
அத்தனைபேர் உண்டாலும் அணுவும் குறையானடி!

57. வாக்கும் மனமும் வடிவும் இலா வான் பொருள் காண்!
போக்கும் வரவும் இலான்; பொருவரிய பூரணன் காண்!

58. காட்சிக்கு எளியான் காண்! கண்டாலும் காணன்காண்!
மாட்சி மனம் வைத்தார்க்கு மாணிக்கத்துள் ஒளி காண்!

59. வாழ்த்தி அவனை வழிபட்டால் மன்னுயிர்கள்
தோற்றம் அறியான் காண்! சொல் இறந்த சோதியன் காண்!

60. ஐயம் அறுத்தவனை ஆராய்வார் உண்டானல்
வையகத்தே வந்து மலர்ப்பாதம் வைத்திடுவான்.

61. அணுவுக்கும் மேருவுக்கும் அகம்புறமாய் நின்ருன் காண்!
கணுமுற்றும் ஞானக் கரும்பின் தெளிவான் காண்!

62. எந்நாளும் இந்நாளும் இப்படியாய் அப்படியாய்ச்
சொன்னலும் கேளான் காண்! தோத்திரத்தில் கொள்ளான் காண்!

---

55. தூர்-அடி, முதல்; 60. ஐயம்-சந்தேகம்; 61. தெளிவு-சாரம்;

63. ஆத்தாளுக்கு ஆத்தாளாம்; அப்பனுக்கும் அப்பனுமாம்;
கோத்தார்க்குக் கோத்தநிலை கொண்ட குணக்கடல்காண்;

64. இப்போ புதிதோடி! எத்தனை நாள்
உள்ளதடி!
அப்போதைக்கு அப்போது அருளறிவும்
தந்தாண்டி!



65. பற்றற்றார் பற்றாகப் பற்றி இருந்தாண்டி!
குற்றம் அறுத்தாண்டி! கூடி இருந்தாண்டி!

66. வெட்ட வெளியில் எனைமேவி
இருந்தாண்டி!
பட்டப் பகலிலடி! பார்த்திருந்தார்
எல்லோரும்.

67. வாழ்வான வாழ்வெனக்கு வந்ததடி! வாழாமல்
தாழாமல் தாழ்ந்தேண்டி! ஈற்றும் குறையாமல்.

68. பொய்யான வாழ்வு எனக்குப் போதுமெனக் காணேண்டி!
மெய்யான வாழ்வு எனக்கு வெறும் பாழாய் விட்டதடி!

69. கன்னி அழித்தவனைக் கண்ணாரக் கண்டேண்டி!
என் இயல்பு நான் அறியேன்; ஈதென்ன மாயமடி!

70. சொல்லாலே சொல்லுதற்குச் சொல்லவாய் இல்லையடி!
எல்லாரும் கண்டிருந்தும் இப்போது அறியார்கள்!

71. கண்மாயம் இட்டாண்டி! கருத்தும் இழந்தேண்டி!
உள்மாயம் இட்டவனை உரு அழியக் கண்டேண்டி!

72. என்ன சொல்லப் போறேன் நான் இந்த அதிசயத்தைக்.
கன்னி இளங்கமுகு காய்த்ததடி கண்ணாரை.

73. ஆர்ந்த இடம் அத்தனையும் அருளாய் இருக்குமடி!
சார்ந்த இடம் எல்லாம் ஈவ்வாது மணக்குதடி!

74. இந்தமணம் எங்கும் இயற்கை மணம் என்றறிந்து
அந்தசுகா தீதத்து அரும்கடலில் மூழ்கினண்டி!

75. இரும்பின் உறை நீர் போல எனைவிழுங்கிக் கொண்டாண்டி!
அரும்பில்உறை வாசனை போல் அன்றே இருந்தாண்டி!

76. அக்கினிகற் பூரத்தை அற விழுங்கிக் கொண்டாற்போல்
மக்கினம் பட்டுள்ளே மருவி இருந்தாண்டி!

77. கடல்நீரும் ஆறும்போல் கலந்துகரை காணேண்டி!
உடலும் உயிரும் போல் உள்கலந்து நின்றாண்டி!

78. பொன்னும் உரை மாற்றும்போல் பொருவு அரிய பூரணன்காண்
மன்னுமனு பூதியடி மாணிக்கத் துள்ஒளிபோல்,

79. கங்குகரை இல்லாண்டி! கரைகாணாக் கப்பலடி!
எங்கும் அளவில்லாண்டி! ஏகமாய் நின்றாண்டி.

---

78. பொருவு—ஒப்பு; பூரணம்—நிறைவு

80. தீவகம்போல் என்னைச் சேர்ந்தபர சின்மயன் காண்;
பாவகம் ஒன்று இல்லாண்டி! பார்த்த இடம் எல்லாப் பரன்காண்!

81. உள்ளார்க்கும் உள்ளாண்டி! ஊருமில்லான்! பேருமில்லான்!
கள்ளப்புலன் அறுக்கக் காரணமாய் வந்தாண்டி!

82. அப்பிறப்புக்கு எல்லாம் அருளாய் அமர்ந்தாண்டி!
இப்பிறப்பில் வந்தான் இவனுகும் மெய்ப்பொருள்காண்!

83. நீர் ஒளிபோல் எங்கும் நிறைந்த நிராமயன்காண்!
பார் ஒளிபோல் எங்கும் பரந்த பராபரன் காண்!

84. நூலால் உணர்வரிய நுண்மையினும் நுண்மையன்காண்!
பாலூறு சர்க்கரைபோல் பரந்தபரி பூரணன் காண்

85. உளக்கண்ணுக்கு அல்லால் ஊன் கண்ணுல் ஒருமதோ?
விளக்குத் தடர் ஒளிபோல் மேவிஇருந்தாண்டி!

86. கல்லுள் இருந்த கனல் ஒளிபோல் காரணமாய்ப்
புல்லி இருந்தும் பொருவு அரிய பூரணன்காண்!

87. பொற்பூவும் வாசனைபோல் போதம் பிறந்தார்க்குக்
கற்பூவுப் வாசனை போல் காணுக்கயவருக்கு.

88. மைக்குழம்பும் முந்தும்போல் மருவி, மறவா தவர்க்குக்
கைக்குள் கனியாகும் கரு அறுத்த காரணர்க்கு.

89. பளிங்கில் பவளமடி! பற்று அற்ற பாவலர்க்குக்,
கிளிஞ்சிலை வெள்ளி என்பார் கிட்டாதார் கிட்டுவரோ?

90. எட்டுக்கு அடங்காண்டி! எழுத்தில் பிறவாண்டி!
நாட்டில் நரிகளெல்லாம் நல்புரவி செய்தாண்டி

91. பஞ்சப் பிரளயத்து மிஞ்சி இருப்பாண்டி!
நஞ்சு பொதிமிடற்றன் நயனத்து அழல்விழியான்.



92. அகம்காக்கும்: புறம்காக்கும்!
அளவிலா அண்டமுதல்
செகம்காக்கும்; காணுத்திசை
பத்தும் காக்குமடி!

93. பேசாப் பிரமமடி! பேச்சிறந்த
பேரொளிகாண்!
ஆசா பாசங்கள் அணுகாத
பேரொளிகாண்!

94. தேசம் இறந்தவன் காண்!
திசைஇறந்த தென்கடல்காண்!
ஊசி முனை இன்றி இல்லா
உருபொருள்காண்!

---

80. தீவகம்-மானைக்காட்டி மற்றொரு மானைப் பிடிப்பதுபோல் ஒரு பொருளை அதன் இனமான பொருளைக்கொண்டே பிடிக்கும் முறை; 86. புல்லியிருத்தல் கலந்திருத்தல்! 89. பளிங்கு-கண்ணுடி;

95. சிப்பியில் முத்தொளிகாண்! சின்மய நோக்கு இல்லார்க்கு
அப்பில் ஒளிபோல் அமர்ந்த அரும் பொருள்காண்!

96. ஆல விருட்சமடி! அளவிலாச் சாகையடி!
மேலாம் பதங்கள் விசும்பு ஊடுருவும் மெய்ப்பொருள்காண்!

97. வங்கிஷம் எல்லாம் கடந்து மருவா மலர்ப்பதம்காண்!
அங்கிஷமாய் எங்கும் ஆழ்ந்த அரும்பொருள்காண்!

98. நாமநட்டம் ஆனதடி! நவில இடம் இல்லையடி!
காமனைக் கண்ணால் எரிக்கக் கனல் விழித்த காரணன் காண்!

99. கொட்டாத செம்பொனடி! குளியாத் தரளமடி!
எட்டாத கொம்பிலடி ஈப்புகாத் தேனமுதம்.

100. காணிப்பொன் நுணியுடன் கல்லுரைமாற்று இன்னதென்றே
ஆணியுடன் கூட்டி அடங்கலிட்டுக் கொண்டாண்டி!

101. அளவிறந்த அண்டத்தார் அத்தனைபேர் உண்டாலும்
பிளவளவும் தான்சற்றும் பேசாப் பிரமமடி!

102. கல்நெஞ்சின் உள்ளே கழுநீலம் பூத்தாற்போல்,
என்நெஞ்சின் உள்ளே இணை அடிகள் வைத்தாண்டி!

103. வேதப் புரவியடி! விரைந்தோடியும் அறியார்;
காதற்ற ஞானமடி! காண்பார் கருத்துடையோன்.

104. பாச வினையைப் படப்பார்த்த பார்வையுடன்
நேசத்தைக் காட்டி நில் என்று சொன்னாண்டி!

105. ஓசை ஒடுங்கும் இடம் ஓங்காரத்து உள் ஒளிகாண்!
பேசாது இருக்கும் பிரமம் இது என்றாண்டி!

106. சின்மய நல்நோக்கால் சிற்சொரூபம் காட்டி எனைத்
தன் மயமாய் ஆக்கியே தான் அவனாய் நின்றாண்டி!

107. தான் என்னைப் பார்த்தாண்டி! தன்னைத்தான் அல்லாமல்
நான் என்ன சொல்லுவண்டி! நயில இடம் இல்லையடி!

108. இன்றிருந்து நாளைக்கு இறக்கிறபேர் எல்லாரும்
என்றும் பரிபூரணத்தில் இனிது இருக்கச் சொன்னாண்டி!

109. பார்க்கில் எளிது அலவோ? பற்றற்ற பற்று அலவோ?
ஆர்க்கும் இடம் காட்ட அவனிதனில் வந்தாண்டி!



110. இத்தனை காலமடி இறந்து பிறந்ததெல்லாம்
இத்தனையும் இல்லையடி இரும்பில்உறை நீரானேன்,

111. எக்காலம் பட்டதடி! இறந்து பிறந்ததெல்லாம்
அக்காலம் எல்லாம் அழுந்தினேன் நான் நரகில்.

112. காலம் கழிந்ததடி! கர்மம் எல்லாம் போச்சுதடி!
[illegible] ஆச்சுதடி!

113. முப்பாழுக்கு அப்பால் முதற்பாழ் முழு முதலாய்
இப்போது வந்தான் காண்! எனை விழுங்கிக் கொண்டான்காண்.

114. பாலின்கண் நெய் இருந்தாற் போலப் பரஞ்சோதி
ஆலிங்கனம் செய்து அறவிழுங்கிக் கொண்டான்டி!

115. செத்தபடம் ஆனேன்டி! தீ இரும்பில் நீரானேன்;
ஒத்தவிட நித்திரை என்று ஓதும் உணர்வறிந்தேன்.

116. ஒப்பும் உவமையும் அற்ற ஒத அரிதாய பொருள்
இப்புவி நில்தருவே என்னவந்தோன் தாள் வாழி.

117. ஒப்பாரி சொல்லிடினும், உவமை பிழைத்திடினும்.
முப்பாழும் கற்றுணர்ந்தோர் முன்னோர் பொறுத்தருள்வார்.

## இறந்த காலத்து இரங்கல்

1. வார்த்தைத் திறமில்லா மனிதருக்குப் புன் சொல்லாம்
சாத்திரங்கள் சொல்லிச் சதுர் இழந்து கெட்டேனே.

2. மெத்த மெத்தச் செல்வாக்கில் வேறு மருள் எடுத்துத்
தத்தித் தலை கீழாய்த் தான் நடந்து கெட்டேனே:

3. வழக்கத் தலங்களினும் மண் பெண் பொன் ஆசையினும்
பழக்கம் தவிராமல் பதி இழந்து கெட்டேனே.

4. ஆணி பொருந்தும் அரும்பூமி அத்தனையும்
காணில் நமது என்று கனம் பேசிக் கெட்டேனே.



5. ஆசாரம் இல்லாத அசடருடன் கூடிப்
பாசாங்கு பேசிப் பதி இழந்து கெட்டேனே.

6. குருமார்க்கம் இல்லாக் குருடருடன் கூடிக்
கருமார்க்கத்துள்ளே கருத்தழிந்து கெட்டேனே

7. ஆலம் அருந்தும் அரன்பெருமை எண்ணாமல்
பாலர் பெண்டிர் மெய் என்று பதி இழந்து கெட்டேனே.

8. பிணவாசம் உற்ற பெரும்காயம் மெய்யென்று
பண ஆசையாலே பதி இழந்து கெட்டேனே.

9. கண்ட புலவர் கனக்கவே தான் புகழ
உண்ட உடம்பெல்லாம் உப்பரித்துக் கெட்டேனே.

10. எண்ணிறந்த ஜென்மம் எடுத்துச் சிவபூசை
பண்ணிப் பிழையாமல் பதி இழந்து கெட்டேனே.

11. சிற்றெறும்பு சற்றும் தீண்டப் பொறுஉடம்பை
உற்றுருக்கவும் சுடவும் ஒப்பித்து மாண்டேனே.

---

1. சதுர்-சாமர்த்தியம். 4. ஆணி-முதன்மை; 8. பெரும்காயம்-பெரிய உடம்பு;

12. தன் உடம்பு தானே தனக்கும் பகையாம் என்று
எண்ணும் உணர்வு இல்லாமல் இன்பம் என்று மாண்டேனே,

13. தோல் எலும்பு மாங்கிஷமும் தொல் அன்னத்தால் வளரும்
மேல் எலும்பும் சுத்தமென்று விருப்பாய் மாண்டேனே.

14, போக்கு வரத்தும் பொருள் வரத்தும் காணுமல்
வாக்கழிவு சொல்லி மனம்மறுகிக் கெட்டேனே,

## நெஞ்சொடு புலம்பல்

1. மண் காட்டிப் பொன் காட்டி மாய இருள் காட்டிச்
செங்காட்டில் ஆடுகின்ற தேசிகனைப்
போற்ருமல்
கண் காட்டும் வேசியர் தம் கண் வலையில்
சிக்கிமிக
அங்காடி நாய் போல் அலைந்தனையே
நெஞ்சமே.



2. புட்பாசன அணையில் பொன்பட்டு
மெத்தையின் மேல்
ஒப்பா அணிந்த பணி யோடாணி நீங்காமல்!
இப்பாய்க் கிடத்தி இயமன் உயிர் கொள்ளும் முன்னே
முப்பாழைப் போற்ற முயங்கிலையே நெஞ்சமே!

3. முப்பாழும் பாழாய் முதற்பாழ் வெறும் பாழாய்
அப்பாழுக்கு அப்பால் நின்ருடும் அதைப் போற்ருமல்
இப்பாழாம் வாழ்வை நம்பி ஏற்றவர்க்கு ஒன்று ஈயாமல்
துப்பாழாய் வந்தவினை சூழ்ந்தனையே நெஞ்சமே!

4. அன்னம் பகிர்ந்து இங்கு அலைந்தோர்க்கு உதவி செயும்
சென்மம் எடுத்தும் சிவன் அருளைப் போற்ருமல்
பொன்னும் மனையும் எழில் பூவையரும் வாழ்வும் இவை
இன்னும் சதமாக எண்ணினையே நெஞ்சமே!

5. முன் தொடர்பில் செய்த முறைமையால் வந்த செல்வம்
இற்றைநாள் பெற்ரேம் என்று எண்ணுது பாழ்மனமே!
அற்றவர்க்கும் ஈயாமல் அரன் பூசை ஓராமல்
கற்றவர்க்கும் ஈயாமல் கண் மறைந்து விட்டனையே.

6. மாணிக்கம் முத்து வயிரப் பணி பூண்டு
ஆணிப்பொன் சிங்காதனத்தில் இருந்தாலும்
காணித்துடலை நமன் கட்டியே கைப்பிடித்தால்
காணிப்பொன் கூடவரக் காண்கிலமே நெஞ்சமே!

7. கற்கட்டும் மோதிரம் நல்கடுக்கன் அரை ஞாண் பூண்டு
திக்கு எட்டும் போற்றத் திசைக்கு ஒருத்தர் ஆனுலும்
பற்கிட்ட எமனுயிர் பந்தாடும் வேளையிலே
கைச்சட்டம் கூடவரக் காண்கிலமே நெஞ்சமே!

---

13. ... 1. அங்காடி—கடைத்தெரு

8. முன்னம் நீ செய்த தவம் முப்பாலும் சேரும் அன்றிப்
பொன்னும் பணிதிகழும் பூவையும் அங்கேவருமோ?
தன்னைச் சதமாகச் சற்குருவைப் போற்ருமல்
கண்ணற்ற அந்தகன்போல் காட்சியுற்ருய் நெஞ்சமே!

9. பை அரவம் பூண்ட பரமர் திருப் பொன்தாளைத்
துய்ய மலர் பறித்துத் தொழுது வணங்காமல்
கையில் அணிவளையும், காலில் இடும் பாடகமும்
மெய் என்று இறுமாந்து விட்டனையே நெஞ்சமே

10. மாதுக்கு ஒரு பாகம் வைத்த அரன் பொன்தாளைப்
போதுக்கு ஒரு போதும் போற்றி வருந்தாமல்,
வாதுக்குத் தேடி இந்த மண்ணில் புதைத்து வைத்தே
ஏதுக்குப் போக நீ எண்ணினையே நெஞ்சமே!

11. அஞ்சருளைப் போற்றி ஐந்து புலனைத் துறக்க
நெஞ்செ உனக்கு நினைவு நான் சொல்லுகிறேன்;
வஞ்சகத்தை நீக்கி மறுநினைவு வாராமல்
செஞ்சரணத்தானைச் சிந்தை செய்வாய் நெஞ்சமே!

12. அற்புதமாய் இந்த உடல் ஆவி அடங்கு முன்னே
சற்குருவைப் போற்றித் தவம் பெற்று வாழாமல்
உற்பத்தி செம்பொன் உடைமை பெருவாழ்வை நம்பிச்
சர்ப்பத்தின் வாயில் தவளைபோல் ஆனேனே.

13. உற்ருர் ஆர்? பெற்ருர் ஆர்? உடன்பிறப்பு ஆர்? பிள்ளைகள் ஆர்?
மற்ருர் இருந்தால் என்? மாளும்போது உதவுவரோ?
கற்ரு இழந்த இளம் கன்றது போலே உருகிச்
சிற்ருகிச் சிற்றின்பம் சேர்ந்தனையே நெஞ்சமே!

14. வீடிருக்க தாயிருக்க வேண்டும் மனையாள் இருக்க
பீடிருக்க ஊன் இருக்கப் பிள்ளைகளும் தாம் இருக்க
மாடிருக்கக் கன்றிருக்க வைத்த பொருளிருக்கக்
கூடிருக்க நீபோன கோலமென்ன கோலமே?

15. சந்தனமும், குங்குமமும், சாந்தும், பரிமளமும்
விந்தைகளாகப் பூசிமிகு வேடிக்கை
ஒய்யாரக்
கந்த மலர் சூடுகின்ற கன்னியரும்
தாம் இருக்க
எந்தவகை போனுய் என்று எண்ணிலை
யே நெஞ்சமே!



16. காற்றுத் துருத்தி கடியவினைக் குள்ளான
ஊற்றைச் சடலத்தை உண்டென்று இறுமாந்து
பார்த்திரங்கி அன்னம் பசித்தோருக்கு ஈயாமல்
ஆற்று வெள்ளம் போல அளாவினையே நெஞ்சமே!

---

9. பை-படம்; அரவம்-பாம்பு; 13. கற்ரு-கன்றுடைய [கன்று ஈன்ற பசு]

17. நீர்க்குமிழி வாழ்வைநம்பி நிச்சயம் என்றே எண்ணிப்
பாக்களவாம் அன்னம் பசித்தோர்க்கு அளியாமல்
போர்க்குள் எமதூதன் பிடித்திழுக்கும் அப்போது
ஆர்ப்படுவார் என்றே அறிந்திலையே நெஞ்சமே!



18. சின்னஞ் சிறுநுதலாள் செய்த
பல வினையால்
முன் அந்த மார்பின் முளைத்த
சிலந்தி விம்மி
வன்னம் தளதளப்ப மயங்கி
வலைக்குள்ளாகி
அன்னம் பகிர்ந்துண்ண அறிந்
திலையே நெஞ்சமே

19 ஓட்டைத் துருத்தியை,
உடையும் புழுக்கூட்டை
ஆட்டும் சிவசித்தர் அருளை
மிகப்போற்றியே
வீட்டைத் திறந்து வெளியைஒளியால் அழைத்துக்
காட்டும் பொருள் இதென்றுகருதிலையே நெஞ்சமே!

20. ஊன்பொதிந்த காயம், உளைந்த புழுக்கூட்டைத்
தான் சுமந்த தல்லால்நீ சற்குருவைப் போற்ருமல்
கான் பரந்த வெள்ளம் கரைபுரளக் கண்டு ஏகி
மீன் பரந்தாற் போலே விசாரமுற்ருய் நெஞ்சமே!

21. உடக்கை ஒருக்கி உயிரை அடைத்துவைத்த
சடக்கைச் சதம் என்று சார்ந்து அங்கு இறுமாந்தை!
உடக்கைத் தகர்த்தே உயிரை எமன் கொள்கையிலே
அடக்கமாய் வைத்த பொருள் அங்குவர மாட்டாதே.

22. தித்திக்குப் தேனைத் தெவிட்டாத தெள்ளமுதை,
முத்திக்கு வித்தான முப்பாழைப் போற்ருமல்,
பற்றிப் பிடித்து இயமன் பாசத்தால் கட்டும் வண்ணம்
சுற்றி இருக்கும்வினை சூழ்ந்ததனையே நெஞ்சமே!

23. அஞ்செழுத்தாய் எட்டெழுத்தாய் ஐம்பத்தோர் அட்சரமாய்ப்
பிஞ்செழுத்தாய் நின்ற பெருமானைப் போற்ருமல்
வஞ்சகமாய் உற்றமுலை மாதர்வலைக் குள்ளாகிப்
பஞ்சரித்துத் தேடிப் பாழுக்கு இறைத்தோமே!

24. அக்கறுகு கொன்றைதும்பை அம்புலியும் சூடுகின்ற
சொக்கர் திருத்தாளைத் தொழுது வணங்காமல்
மக்கள் பெண்டிர் சுற்றமுடன் வாழ்வை மிக நம்பி அன்பாய்
எக்காலமும் உண்டென்று எண்ணினையே நெஞ்சமே!

---

21. உடக்கு-சுள்ளாணி; ஒருக்கி-முறுக்கி; சடக்கு-தேகம்;
23. பஞ்சரித்து-கெஞ்சிப்பேசி. 24. அக்கு-உருத்திராட்சம்.

25. ஆண்ட குருவின் அருளை மிகப்போற்றி
வேண்டும் கயிலாய வீட்டுவழி பாராமல்
பூண்டகுழல் மாதுநல்லார் பொய்மாய்கைக்கு உள்ளாகித்
தூண்டில் அகப்பட்டுத் தடிகெண்டை ஆனேனே!

26. ஏணிப் பழுஆம் இருளை அறுத் சாளமுற்றும்
பேணித் தொழும் கயிலை பேறுபெற மாட்டாமல்
காண' அரும் பொருளாய்க் கண்கலக்கப் பட்டடியேன்
ஆணிஅற்ற மாமரம்போல் ஆகினனே நெஞ்சமே!

27. கோத்துப் பிரகாசம் கொண்டுருகி அண்டமெல்லாம்
காத்தப் படியே கயிலாயம் சேராமல்
வேற்றுருவப் பட்டடியேன் வெள்ளம்போல் உள்ளுருகி
ஏற்றும் கழுவில் இருந்த பிணம் ஆனேனே!

28. நிலைவிட்டு உடலை உயிர் நீங்கி அகலுமுன்னே
சிலைதொட்ட வேடன் எச்சில் தின்றானைச் சேராமல்,
வலைபட்டு உழலுகின்றமான் போல் பரதவித்துத்
தலைகெட்ட நூல் அது போல் தட்டழிந்தாய் நெஞ்சமே



29. முடிக்குமயிர்ப் பொல்லா புழுக்குரம்பை
மின்னாரின்
இடைக்கும் நடைக்கும் இதம்கொண்ட
வார்த்தைசொல்லி.
அடிக்கொண்ட தில்லைவனத்து ஐயனே!
நாய் அனையேன்
விடக்கை இழந்த மிருகமது ஆனேனே!

30. பூவாணர் போற்றும்
புகழ்மதுரைச் சொக்கரது
சீர்பாதம் போற்றிச்
சிவலோகம் சேராமல்,
தாவாரம் தோறும் தலைபுகுந்த நாய்போலே
ஆகாத நெஞ்சமே அலைந்து திரிந்தாயே.

31. பத்தெட்டாய் ஈரைந்தாய்ப் பதின்மூன்று இரண்டொன்றாய்,
ஒத்திட்டு நின்றதோர் ஓவியத்தைப் போற்றாமல்;
தெத்திட்டு நின்ற திரிகண்ணுக் குள்ளாகி
வித்திட்டாய் நெஞ்சே! விடவும் அறியாயே!

32. அஞ்சும் உருவாகி ஐம்மூன்றும் எட்டும் ஒன்றாய்
மிஞ்சி இருந்த விளக்கொளியைப் போற்றாமல்,
பஞ்சிலிடு வன்னியைப்போல் பற்றிப் பிடியாமல்
நஞ்சுண்ட கெண்டையைப்போல் நான் அலைந்து கெட்டேனே.

33. ஊனம் உடனே அடையும் புழுக்கூட்டை
மான முடனேசுமந்து மண்ணுலகில் மாளாமல்,
ஆனதொரு பஞ்சவர்கள் ஆண்டிருந்த தேசம்விட்டுப்
போனதுபோலேநாம் போய்பிழைத்தோம் இல்லையே

---

26. ஏணிப்பழு-ஏணிப்பழு மரம்; 28. சிலை-வில்; வேடன்-கண்ணப்பன்; தலை கெட்ட நூல்-நுனி அகப்படாத நூல்; 29. விடக்கை -மாமிசம்; 32. வன்னி-நெருப்பு.

34. ஊறை இறைக்கின்ற உப்பிருந்த பாண்டத்தை,
நாறுமல் நாறி நழுவும் புழுக்கூட்டை,
வீறும் புறத்தை விரும்புகின்றது எப்படியென்
றுறுத நாட்டில் அகன்றிருந்தேன் இல்லையே.

35. அரிய அரிதேடி அறியா ஒரு முதலைப்
பரிவுடனே போற்றும் பரஞ்சுடரைப் போற்றுமல்
கரியபெரு வாழ்வை நம்பிக் காமத்து அழுந்தியே
அரிவாயில் பட்ட கரியது போல் ஆனேனே!

36. தந்திரத்தை உன்னித் தவத்தை மிகநிறுத்தி,
மந்திரத்தை உன்னி மயங்கித் தடுமாறி
விந்துருகி நாதமாம் மேல் ஒளியைக் காணுமல்
அந்தரத்தே கோல் எறிந்த அந்தகன் போல் ஆனேனே.

37. விலையாகிப் பாணனுக்கு வீறடிமைப் பட்டதுபின்
சிலையார் கை வேடன் எச்சில் தின்றுனைப் போற்றுமல்,
அலைவாய்த் துரும்பதுபோல் ஆணவத்தினுல் அழுங்கி,
உலைவாய் மெழுகதுபோல் உருகினையே நெஞ்சமே!

## பூரண மாலை

1. மூலத்து உதித்தெழுந்த முக்கோணச் சக்கரத்துள்
வாலைதனைப் போற்றுமல் மதிமறந்தேன் பூரணமே!

2. உந்திக்கமலத்து உதித்துநின்ற பிருமாவைச்
சந்தித்துக் காணுமல் தட்டழிந்தேன் பூரணமே!

3. நாவிக் கமல நடுநெடுமால் காணுமல்
ஆவிகெட்டு யானும் அறிவழிந்தேன் பூரணமே!



4. உருத்திரனை இருதயத்தில் உண்மையுடன் பாராமல்
கருத்தழிந்து நானும் கலங்கினேன் பூரணமே!

5. விசுத்தி மகேசுவரனை விழிதிறந்து பாராமல்
பசித்துருக் நெஞ்சம் பதறினேன் பூரணமே!

6. நெற்றி விழியுடைய நிர்மல சதாசிவத்தைப்
புத்தியுடன் பாராமல் பொறி அழிந்தேன்பூரணமே!

7. நாதவிந்து தன்னை நயமுடனே பாராமல்
போதம் மயங்கிப் பொறி அழிந்தேன் பூரணமே!

8. உச்சி வெளியை உறுதியுடன் பாராமல்
அச்சமுடன் நானும் அறிவழிந்தேன் பூரணமே!

---

34. ஊறை-சவ்வரிசி 35. அரி-திருமால்; அரி-சிங்கம்; கரி-யானை;
பூரணமாலை: 1. மூலாதாரச் சக்கரப்-வாலை-சிறுபெண்-வல்லபை: சக்தி
2. உந்திக்கமலம்—சுவாதிட்டானம் 3. நாவிக்கமலம்-மணி பூரகம் 7.
நாதவிந்து-முதல் [illegible] போதம்-அறிவு

9. மூக்கு முனையை முழித்திருந்து பாராமல்
ஆக்கைகெட்டு நானும் அறிவழிந்தேன் பூரணமே!

10. இடைபிங் கலையின் இயல்பறிய மாட்டாமல்
தடையுடனே யானும் தயங்கினேன் பூரணமே!

11. ஊனுக்குள் நீ நின்று உலாவினதைக் காணுமல்
நான் என்றிருந்து நலன் அழிந்தேன் பூரணமே!

12. மெய் வாழ்வை நப்பி விரும்பி மிக வாழாமல்
பொய் வாழ்வை நம்பிப் புலம்பினேன் பூரணமே!

13. பெண்டுபிள்ளை தந்தை தாய் பிறவியுடன் சுற்றம் இவை
உண்டென்று நம்பி உடல் அழிந்தேன் பூரணமே!



14, தண்டிகை பல்லக்குடனே சகல சம்பத்துகளும்
உண்டென்றுநம்பி உணர்வழிந்தேன் பூரணமே!

15. இந்த உடல் உயிரை எப்போதும்தான் சுத
மாய்ப்
பந்தமுற்று நானும் பதம் அழிந்தேன் பூரணமே!

16. மாதர் பிரபஞ்ச மயக்கத்திலே விழுந்து
போதம் மயங்கிப் பொறி அழிந்தேன் பூரணமே!

17. சரியை கிரியா யோகம்தான் ஞானம் பாராமல்
பரிதிகண்ட மதியதுபோல் பயன் அழிந்தேன்
பூரணமே!

18. மண் பெண் பொன் ஆசை மயக்கத்திலே விழுந்து
கண்கெட்ட மாடதுபோல் கலங்கினேன்
பூரணமே!

19. தனிமுதலைப் பார்த்துத் தனித்திருந்து வாழாமல்
அநியாயமாய்ப் பிறந்திங்கு அலைந்து நின்றேன் பூரணமே!

20. ஈராறு தன் கலைக்குள் இருந்து கூத்து ஆடினதை
ஆராய்ந்து பாராமல் அறிவழிந்தேன் பூரணமே!

21. வாசிதனைப் பார்த்து மகிழ்ந்து உனைத்தான் போற்றுமல்
காசிவரை போய்த்திரிந்து கால் அலுத்தேன் பூரணமே!

22. கருவிகள் தொண்ணூற்றுறில் கலந்து விளையாடினதை
இருவிழியால் பாராமல் ஈடழிந்தேன் பூரணமே!

23. உடலுக்குள் நீ நின்று உலாவினதைக் காணுமல்
கடல்மலை தோறும் திரிந்து கால் அலுத்தேன் பூரணமே!

24. எத்தேச காலமும் நாம் இறவாது இருப்பம் என்று
உற்றுனைத்தான் பாராமல் உருவழிந்தேன் பூரணமே!

25. எத்தனை தாய் தந்தை இவர்களிடத்தே இருந்து
பித்தனுய் யானும் பிறந்து இறந்தேன் பூரணமே!

---

9. ஆக்கை-உடம்பு 21. வாசி-பிராணவாயு; 22. கருவிகள்—தத்துவங்கள்

26. பெற்று அலுத்தார் தாயார்; பிறந்து அலுத்தேன் யானும்; உன்றன்
பொன் துணைத்தாள் தந்து புகல் அருள்வாய் பூரணமே!

27. உற்றார் அழுது அலுத்தார், உறன்முறையார் சுட்டலுத்தார்:
பெற்று அலுத்தார் தாயார்; பிறந்து அலுத்தேன் பூரணமே!

28. பிரமன் படைத்து அலுத்தான்; பிறந்து இறந்து நான் அலுத்தேன்;
உரமுடைய அக்கினிதான் உண்டு அலுத்தான் பூரணமே!

29. எண்பத்து நான்கு நூறாயிரம் செனனமும் சனித்துப்
புண்பட்டு நானும் புலம்பினேன் பூரணமே!



30. என்னை அறியாமல் எனக்குள்ளே நீ
இருக்க
உன்னை அறியாமல் உடல் இழந்தேன்
பூரணமே!

31. கருவாய் உருவாய்க் கலந்து உலகெலாம்
நீயாய்
அருவாகி நின்றது அறிகிலேன் பூரணமே!

32. செம்பொன் கமலத் திருவடியைப்
போற்றாமல்
பம்பை கொட்ட ஆடும் பிசாசானேன்
பூரணமே!

33. எனக்குள்ளே நீ இருக்க, உனக்குள்ளே நான் இருக்க,
மனக்கவலை தீர வரம் அருள்வாய் பூரணமே!

34. எழுவகைத் தோற்றத்து இருந்து விளையாடினதைப்
பழுதறவே பாராமல் பயன் இழந்தேன் பூரணமே!

35. சாதி பேதங்கள் தனை அறிய மாட்டாமல்
வாதனையால் நின்று மயங்கினேன் பூரணமே!

36. குலம் ஒன்றாய் நீ படைத்த குறியை அறியாமல் நான்
மலபாண்டத் துள்ளிருந்து மயங்கினேன் பூரணமே!

37. அண்டபிண்டம் எல்லாம் அணுவுக்கு அணுவாய் நீ
கொண்ட வடிவின் குறிப்பறியேன் பூரணமே!

38. சகத்திரத்தின் மேல் இருக்கும் சற்குருவைப் போற்றாமல்
அகத்தினுடை ஆணவத்தால் அறிவழிந்தேன் பூரணமே!

39. ஐந்து பொறியை அடக்கி உனைப் போற்றாமல்
நைந்துருகி நெஞ்சம் நடுங்கினேன் பூரணமே!

40. என்னைத் திருக்கூத்தால் இப்படி நீ ஆட்டுவித்தாய்,
உன்னை அறியாது உடல் அழிந்தேன் பூரணமே!

41. நரம்பு தசை தோல் எலும்பு நாற்றத்துக்குள்ளிருந்து
வரம்பறிய மாட்டாமல் மயங்கினேன் பூரணமே!

42. சிலந்தியிடை நூல்போல் சீவசெந்துக் குள்ளிருந்து
நலந்தனைத்தான் பாராமல் நலம் அழிந்தேன் பூரணமே!

32. பம்பை-முல்லைப் பறை.

43. குருவாய், பரமாகிக் குடிலை, சத்தி நாதவிந்தாய்,
அருவாய் உருவானது அறிகிலேன் பூரணமே!

44. ஒளியாய்க் கதிர்மதியாய் உள் இருளாய் அக்கினியாய்
வெளியாகி நின்ற வியன் அறியேன் பூரணமே!

45. இடையாகிப் பிங்கலையாய் எழுந்த சுழு முனையாய்
உடல் உயிராய் நீ இருந்த உளவறியேன் பூரணமே!

46. மூலவித்தாய் நின்று முளைத்து உடல்தோறும் இருந்து
காலன் என அழிக்கும் கணக்கு அறியேன் பூரணமே!

47. உள்ளும் புறம்புமாய் உடலுக்குள் நீயிருந்தது
எள்ளளவும் நான் அறியாது இருந்தேனே பூரணமே!

48. தாயாகித், தந்தையாய்த் தமர்கிளைஞர் சுற்றம் எல்லாம்
நீயாகி நின்ற நிலை அறியேன் பூரணமே!

49. விலங்கு புள்ளூர் வன அசரம் விண்ணவர் நீர்ச் சாதிமனுக்
குலங்கள் எழு வகையில் நின்ற குறிப்பறியேன் பூரணமே!

50. ஆணாகிப், பெண்ணாய், அலியாகி, வேற்றுருவாய்,
மாணாகி நின்ற வகையறியேன் பூரணமே!

51. வாலையாய்ப், பக்குவமாய், வளர்ந்து கிழம் தானாகி,
பாலையாய் நின்ற பயன் அறியேன் பூரணமே!

52. பொய்யாய்ப் புவியாய்ப், புகழ்வாரிதியாகி
மெய்யாகி நின்ற வியன் அறியேன் பூரணமே!

53. பூவாய் மணமாகிப், பொன்னாகி, மாற்றாகி,
நாவாய்ச் சொல்லான நயம் அறியேன் பூரணமே!

54. முதலாய் நடுவாகி, முப்பொருளாய், மூன்றுலகாய்,
இதமாகி நின்ற இயல் அறியேன் பூரணமே!

55. ஊனாய் உடல் உயிராய், உள் நிறைந்த கண்ணொளியாய்த்
தேனாய் ருசியான திறம் அறியேன் பூரணமே!

56. வித்தாய், மரமாய், விளைந்த கனியாய்ப், பூவாய்ச்
சித்தாகி நின்ற திறம் அறியேன் பூரணமே!

57. ஐவகையும் பெற்றுலக அண்டபகிரண்டம் எலாம்
தெய்வமென நின்ற திறம் அறியேன் பூரணமே!

58. மனமாய்க் கனவாகி, மாய்கையாய், உள்ளிருந்து
நினைவாகி நின்ற நிலை அறியேன் பூரணமே!

59. சத்திசிவம் இரண்டாய்த், தான் முடிவில் ஒன்றாகிச்
சித்திரமாய் நின்ற திறம் அறியேன் பூரணமே

60. பொறியாய்ப், புலன் ஆகிப், பூதபேதப் பிரிவாய்,
அறிவாகி நின்ற அளவறியேன் பூரணமே!

51. வாலை-பாலப்பருவம்

61. வானில் கதிர்மதியாய் வளர்ந்துபின் ஒன்று
ஆனது போல்,
ஊன் உடலுக் குள்ளிருந்த உயிர்ப்பறியேன்
பூரணமே!



62. பொய்யும் புலையும் மிகப் பொருந்திவீண்
பேசலன்றி
ஐயோ உனை உரைக்க அறிகிலேன் பூரணமே!

63. நிரந்தரமாய் எங்கும் நின்று விளையாடினதைப்
பரம் அதுவே என்னப் பதம் அறியேன்
பூரணமே!

64. கொல்வாய்; பிறப்பிப்பாய்; கூட இருந்தே சுகிப்பாய்;
செல்வாய் பிறர்க்குள் செயல் அறியேன் பூரணமே!

65. வாரிதியாய், வையம் எல்லாம் மன்னும் அண்டபிண்டம் எலாம்
சாரதியாய் நின்ற தலம் அறியேன் பூரணமே!

66. வித்தாய், மரமாய், வெளியாய், ஒளியாய் நீ
சத்தாய் இருந்த தரம் அறியேன் பூரணமே!

67. தத்துவத்தைப் பார்த்து மிகத் தன்னை அறிந்த அறிவால்
உய்த்து உனைத்தான் பாராமல் உய்வாரோ பூரணமே!

68. ஒன்றாய் உயிராய் உடல்தோறும் நீ இருந்தும்
என்றும் அறியார்கள் ஏழைகள் தாம் பூரணமே!

69. நேற்றுஎன்றும் நாளை என்றும் நினைப்புமறப் பாய்ப்படைத்தும்
மாற்றமாய் நின்ற வளம் அறியேன் பூரணமே!

70. மனம்புத்தி சித்தம்மகிழ் அறிவு ஆங்காரமதாய்
நினைவாம் தலமான நிலை அறியேன் பூரணமே!

71. உருப்பேதம் இன்றி உய்ந்தசப்த பேதமதாய்ச்,
குருப்பேத மாய்வந்த குணம் அறியேன் பூரணமே!

72. சட்சமய பேதங்கள் தான்வகுத்துப், பின்னும்ஒரு
உட்சமயம் உண்டென்று உரைத்தனையே பூரணமே!

73. முப்பத்திரண்டு உறுப்பாய் முனைந்துபடத்து உள்ளிருந்த
செப்பிடு வித்தைத் திறம் அறியேன் பூரணமே!

74. என்னதான் கற்றால்என்? எப்பொருளும் பெற்றால் என்?
உன்னை அறியாதார் உய்வரோ? பூரணமே!

75. கற்றறிவோம் என்பார், காணார்கள் உன்பதத்தைப்
பெற்றறியார் தங்களுக்குப் பிறப்பு அறுமோ பூரணமே!

76. வான்என்பார்; அண்டம்என்பார்; வாய்ஞான மேபேசித்
தான் என்பார் வீணர்; தனை அறியார் பூரணமே!

77. ஆதி என்பார்: அந்தம் என்பார்; அதற்குண்டுவாய் இருந்த
சோதிஎன்பார்; நாதத் தொழில் அறியார்; பூரணமே!

---

72. சட்சமயம்: ஆறு வகைச் சமயங்கள்,

78. மூச்சென்பார்; உள்ளம் என்பார்; மோனம்எனும் மோட்சம்என்பார்
பேச்சென்பார்: உன்னுடைய பேர் அறியார்; பூரணமே!

79. பரம்என்பார்; பானுஎன்பார்;
பாழ்வெளியாய் நின்ற
வரம்என்பார்; உன்றன் வழி அறியார்; பூரணமே!



80. எத்தனை பேரோ எடுத்தெடுத்துத்தான் உரைத்தார்;
அத்தனை பேர்க்கு ஒன்ருனது அறிகிலேன்; பூரணமே!

81. நகாரமகாரம் என்பார்; நடுவே சிகாரம் என்பார்:
வகாரயகாரம் என்பார்; வகை அறியார் பூரணமே!

82. மகத்துவமாய்க் காம மயக்கத்துக் குள்ளிருந்து
பகுத்தறிய மாட்டாமல் பயன்
இழந்தேன் பூரணமே!

83. உண்மைப் பொருளை உகந்திருந்து பாராமல்
பெண் மயக்கத்தாலே பிறந்து
இறந்தேன், பூரணமே!

84 வாயார வாழ்த்தி மகிழ்ந்து உனைத்தான் போற்ருமல்
காயம் எடுத்துக் கலங்கிலேன்! பூரணமே!

85. சந்திரனை மேகமது தான் மறைத்த வாரது போல்
பந்தமுற யானும்உனைப் பார்க்கிலேன்; பூரணமே!

86. செந்தா மரைத்தாளைத் தினந்தினமும் போற்ருமல்;
அந்தரமாய் நின்றங்கு அலைந்தேன்நான் பூரணமே!

87. நீர்மேல் குமிழிபோல் நிலையற்ற காயம் இதைத்
தாரகம் என்றெண்ணி நான் தட்டழிந்தேன்; பூரணமே!

88. நெஞ்சம் உருகி நினைந்து உனைத்தான் போற்றிநெடு
வஞ்சகத்தைப் போக்க வகை அறியேன்; பூரணமே!

89, எள்ளுக்குள் எண்ணெய் போல் எங்கும் நிறைந்திருந்து
உள்ளம் அறியாது உருகினேன்; பூரணமே!

90. மாயாப் பிரபஞ்ச மயக்கத்தி லேவிழுந்தே!
ஓயாச் சனனம் ஒழிந்திலேன்; பூரணமே!

91· பூசையுடன் புவன போகம்எனும் போக்கியத்தால்
ஆசையுற்றே நானும் அறிவழிந்தேன் பூரணமே!

92. படைத்தும் அழித்திடுவாய்; பார்க்கில் பிரமாவெழுத்தைத்
துடைத்துச் சிரஞ்சீவியாய்த் துலங்குவிப்பாய்; பூரணமே!

93. மந்திரமாய்ச், சாத்திரமாய் மறைநான்காய் நீ இருந்த
தந்திரத்தை நான் அறியத் தகுமோ தான்! பூரணமே!

94. அல்லாய்ப், பகலாய் அனவரத காலம் எனும்
சொல்லாய்ப், பகுத்த தொடர்பறியேன்; பூரணமே'

---

79. பானு-சூரியன் 87. தாரகம்-ஆதாரம்

95. நரகம் சுவர்க்கம்என நண்ணும் இரண்டு உண்டாயும்
அரகரா என்பது அறிகிலேன்; பூரணமே!

96. பாவபுண்ணியம் என்னும் பகுப்பாய்ப் படைத்து அழித்திங்கு
ஆவலையுண்டாக்கி வைத்த அருள் அறியேன்; பூரணமே!

97. சாந்தம் என்றும், கோபம் என்றும், சாதிபேதங்கள் என்றும்
பாந்தம் என்றும், புத்தியென்றும் படைத்தனையே; பூரணமே!

98. பாசம் உடலாய்ப் பசு அதுவும்தான் உயிராய்
நேசமுடன் நீ பொருளாய் நின்றனையே, பூரணமே!

99. ஏதில் அடியார் இரங்கி இகத்தில் வந்துன்
பாதம் அதில் தாழப் பரிந்தருள்வாய்; பூரணமே!

100. நானே நீ நீயே நான் நாம் இரண்டும் ஒன்றானால்
தேனின் ருசியது போல் தெவிட்டாய் நீ பூரணமே!

101. முடிவில் ஒரு சூனியத்தை முடித்து நின்று பாராமல்
அடியில் ஒரு சூனியத்தில் அலைந்தேனே; பூரணமே!

102. புரண மாலை தனை புத்தியுடன் ஓதினர்க்கு
தாரணியில் ஞானம் தழைப்பிப்பாய்; பூரணமே!

## நெஞ்சொடு மகிழ்தல்

1. அன்று முதல் இன்றளவும் ஆக்கையொடு சூட்சியுமாய்
நின்ற நிலை அறிய நேசமுற்றாய், நெஞ்சமே!

2, அங்கங்கு உணர்வாய் அறிவாகியே நிரம்பி
எங்கெங்கும் ஆனதிலே ஏகரித்தாய்; நெஞ்சமே!

3, அலையாத பேரின்ப ஆனந்த வெள்ளத்தில்
நிலையாய் உரு இருந்து நின்றனையே; நெஞ்சமே!

4. பாராமல் பதையாமல் பருகாமல் யாதொன்றும்
ஓராது உணர்வுடனே ஒன்றினையே; நெஞ்சமே!

5. களவிறந்து, கொலையிறந்து, காண்பனவும் காட்சியும் போய்
அளவிறந்து நின்றதிலே அன்புற்றாய்; நெஞ்சமே!

6. பேச்சிறந்து, சுட்டிறந்து, பின்னிறந்து, முன்னிறந்து,
நீச்சிறந்து நின்றதிலே நேசமுற்றாய் நெஞ்சமே!

7. விண்ணிறந்து, மண்ணிறந்து, வெளியிறந்து, ஒளியிறந்து
எண்ணிறந்து நின்றநிலை ஏகரித்தாய்; நெஞ்சமே!

8, பார்த்த இடம் எங்கும் பரம் எனவே உள் புறம்பும்
கோத்தபடி உண்மையெனக் கொண்டனையே, நெஞ்சமே!

---

101. சூனியம்—ஆதாரம் அற்ற பொருள், மாயை; 2. ஏகரித்தாய்—கலந்தாய்;

9. ஊரிறந்து, பேரிறந்து, ஒளியிறந்து, வெளியிறந்து,
சீரிறந்து நின்றதிலே சேர்ந்தனையே; நெஞ்சமே!

10. ஆண்பெண் அலியென்று அழைக்க அரிதாய் நிறைந்து
காண்ப அரி தாய இடம் கண்ணுற்ருய் நெஞ்சமே!

11. ஆங்காரம் அச்சம் அகற்றி அறிவினெடு
தூங்காமல் தூங்கிச் சுகம் பெற்ருய் நெஞ்சமே!

12. ஆதியாய் நின்ற அகண்டாிபரி பூரணத்தைச்
சாதியா நின்ற இடம் சார்வுற்ருய் நெஞ்சமே!

13. விருப்புவெறுப்பு இல்லாத வெட்டவெளி யதனில்
இருப்பே சுகம் என்று இருந்தனையே நெஞ்சமே!

14. ஆரும் உருப் பேரண்டத்து அப்புறத்தும் இப்புறத்தும்
நீரும் உப்பும் என்ன நிலை பெற்ருய் நெஞ்சமே!

15. உடனுகவே இருந்து உணர அரி யானேடு
கடல் நீரும் ஆறும்போல் கலந்தனையே; நெஞ்சமே!

16. நெடியகத்தைப் போக்கி. நின்ற சழக்கறுத்துப்
படிகத்துக் கும்பம்போல் பற்றினையே; நெஞ்சமே!

17. மேலாகி எங்கும் விளங்கும் பரம் பொருளில்
பாலூறும் மென் சுவைபோல் பற்றினையே; நெஞ்சமே!

18. நீரொடுதண் ஆலிவிண்டு நீரான வாறுபோல்
ஊரொடுபேர் இல்லானேடு ஒன்றினையே; நெஞ்சமே!

19. இப்பிறப்பைப் பாழ்படுத்தி இருந்தபடி யேஇருக்கச்
செப்ப அரிதாய இடம் சேர்ந்தனையே; நெஞ்சமே!

20. மேலாம் பதங்கள் எல்லாம் விட்டுவிட்டு ஆராய்ந்து
நாலாம் பதத்தில் நடந்தனையே; நெஞ்சமே!

21. கடங்கடங்கள் தோறும் கதிரவன் ஊடாடி
அடங்கும் இடம்தான் அறிந்து அன்புற்ருய்; நெஞ்சமே!

22. கற்றவனுய்க், கேட்டவனுய்க், காணுனுய்க், காண்பவனுய்
உற்றவனுய் நின்றதிலே ஒன்று பட்டாய் நெஞ்சமே!

23. நாலு வகைக் கரணம் நல்குபுலன் ஐந்தும் ஒன்ருய்
சீலமுற்று நின்றதிலே சேர்ந்தனையே நெஞ்சமே!

24. விட்டிடமும், தொட்டிடமும், விண்ணிடமும் மண்ணிடமும்
கட்டும்ஒரு தன்மை எனக் கண்ணுற்ருய்; நெஞ்சமே!

25. எந்தெந்த நாளும் இருந்தபடி யேஇருக்க
அந்தச் சுகாதீதம் ஆக்கினையே; நெஞ்சமே!

---

16. நெடியகம்-அகங்காரம்; சழக்கு-குற்றம்; கும்பம்-குடம்; 18: ஆலி-ஆலங்கட்டி மழை; விண்டு-வெளிப்பட்டு; 25. சுகாதீதம்-இன்ப மயம்; மோட்சம்.

26. வாக்கிறந்து நின்ற மனோகோச ரம்தனிலே
தாக்கறவே நின்றதிலே தலைசெய்தாய்; நெஞ்சமே!

27. எத்தேசமும் நிறைந்தே எக்கால மும்சிறந்து,
சித்தாய சித்தினிடம் சேர்ந்தனையே: நெஞ்சமே!

28. தாழாதே நீளாதே தன்மய மாய்நிறைந்து
வாழாதே வாழ மருவினையே; நெஞ்சமே!

29. உள்ளும் புறம்பும் உவட்டாத ஆனந்தக்
கள்ளருந்தி நின்றதிலே கண்ணுற்றாய்; நெஞ்சமே!

30. வாதனை போய், நிட்டையும்போய், மாமௌன ராச்சியம்போய்
பேதம்அற நின்ற இடம் பெற்றனையே; நெஞ்சமே!

31. இரதம் பிரிந்துகலந்து ஏகமாம் ஆறேபோல்
விரகம் தவிர்ந்து அணல்பால் மேவினையே, நெஞ்சமே!

32, சோதியான் சூழ்பனிநீர் சூறைகொளும் ஆறேபோல்
நீதிகுரு வின்திருத்தாள் நீபெற்றாய்; நெஞ்சமே!

## உடல் கூற்று வண்ணம்



தனதன தான தனதனதான
தந்ததனந்தன தந்ததனந்தன
தனன தனந்த தனனதனந்த
தானன தானன தானனதந்த—
தந்ததனதான தனதானனா.

1. ஒருமடமாதும் ஒருவனும்ஆகி இன்பசுகம்
தரும்
அன்புபொருந்தி உணர்வுகலங்கி
ஒழுகியவிந்து
ஊறுசுரோணிதம் மீதுகலந்து—

2. பனியில்ஓர் பாதி சிறுதுளிமாது பண்டியில்வந்து
புகுந்துதிரண்டு பதும அரும்பு கமடம்இதென்று
பார்வைமெய்வாய்செவி கால்கைகள் என்ற—

---

31. இரதம்-இரசம், பழரசம்; விரகம்-மோகம்; அணல்-அண்ணல்

### உடல் கூற்று வண்ணம்

1—2 ஒருத்தியும் ஒருவனும் கூடி மகிழும்போது உண்டாகும் ஆண் உயிரணுவும் பெண் உயிரணுவும் ஒன்று கலந்து பாதிப்பனித்துளியளவு சிறுதுளியாகி பெண்ணின் கருப்பையில் புகுந்து கரு உருவாகிறது. பண்டி-கருப்பை: பதும அரும்பு-தாமரை மொட்டு [கருதரிக்கும் போதுள்ள கருப்பையின் அமைப்பு] கமடம்-ஆமை; [வடிவம் போல் கரு வளர்ந்து]



3. உருவமும்ஆகி உயிர்வளர்மாதம் ஒன்பதும்
ஒன்றும்
நிறைந்துமடந்தை உதரம் அகன்று
புவியில்விழுந்து
போகமும்வாரமும் நாளும்அறிந்து—
4. மகளிர்கள் சேனை தரவணையாடை
மண்படஉந்தி
உதைந்துகவிழ்ந்து மடமயில்கொங்கை
அமுதம்அருந்தி
ஓரறிவீரறி வாகிவளர்ந்து—
5. ஒளிநகைஊறல் இதழ்மடவாரும்
உவந்துமுகந்திட
வந்துதவழ்ந்து மடியில் இருந்து
மழலைமொழிந்து
வாஇருபோவென நாமம்விளம்ப—

6. உடைமணிஆடை அரைவடம் ஆட உண்பவர் தின்பவர்
தங்களொடுஉண்டு தெருவில் இருந்து புழுதி அளைந்து
தேடியபாலரொ டோடிநடந்து
அஞ்சுவயதாகி விளையாடியே—

7. உயர்தருஞான குருஉபதேசம் முத்தமிழின் கலை
யும்கரைகண்டு வளர்பிறைஎன்று பலரும்விளம்ப
வாழ்பதினாறு பிராயமும்வந்து—

8. மயிர்முடிகோதி அறுபதநீல வண்டிமிர்
தண்தொடை
கொண்டைபுனைந்து மணிபொன் இலங்கும்
பணிகள் அணிந்து
மாகதர்போகதர் கூடிவணங்க—

---

4—6. தரவணை—ஆடை-ஏணை; அரைவடம்—அரைஞாண்; அளைந்து-பூசிக்கொண்டு; அறுபதம்-ஆறு கால்கள்; பணிகள்-ஆபரணங்கள்; மாகதர்-உட்கார்ந்து புகழ்பவர்; போகதர்-நின்று கொண்டு புகழ்பவர்;



9. மதன சொரூபன் இவன் எனமோக மங்கையர் கண்டு
மருண்டு திரண்டு வரி விழிகொண்டு சுழிய எறிந்து
மாமல் போல் அவர் போவது கண்டு—

10. மனது பொருமல் அவர் பிறகோடி மங்கல செங்கல
சந்திகழ் கொங்கை மருவமயங்கி இதழ் அமுதுண்டு
தேடியமாமுதல் சேரவழங்கி—

11. ஒரு முதலாகி முதுபொருளாய் இருந்ததனங்களும்
வம்பில் இழந்து மதனசுகந்த விதனம்இதென்று
வாலிபகோலமும் வேறு பிரிந்து—

12. வளமையும்மாறி இளமையும்மாறி வன்பல்விழுந்து இரு
கண்கள் இருண்டு வயது முதிர்ந்து நரைதிரை வந்து
வாதவிராத குரோதம் அடைந்து—
செங்கையினில் ஓர் தடியும் ஆகியே—



13. வருவதுபோவது ஒருமுதுகூனும் மந்தியெனும்படி
குந்தி நடந்து மதியும் அழிந்து செவிதிமிர்வந்து
வாயறியாமல் விடாமல் மொழிந்து—

14. துயில் வரும்நேரம் இருமல் பொருது தொண்டையும் நெஞ்சமும்
உலர்ந்து வறண்டு துகிலும் இழந்து சுணையும் அழிந்து
தோகையர் பாலர்கள் கோரணி கொண்டு

15. கலியுகமீதில் இவர் மரியாதை கண்டிடும் என்பவர்
சஞ்சலம் மிஞ்ச கலகல என்று மலசலம் வந்து
கால்வழி மேல்வழி சாரநடந்து—



16. தெளிவும் இராமல் உரை தடுமாறி சிந்தையும் நெஞ்சமும்
உலைந்து மருண்டு திடமும் உலைந்துமிகவும் அலைந்து
தேறிநல் ஆதரவு ஏதெனநொந்து—

---

11. மதன சுகந்தம்-இன்பலீலை; விதனம்-விசனம், துன்பம்; 13. மந்தி-பெண் குரங்கு; 14. கோரணி—கோளாறு, ஆசியம்.



17. மறையவன் வேதன் எழுதியவாறு வந்தது கண்டமும்
என்று தெளிந்து இனி என கண்டம் இனியென தொந்தம்
மேதினி வாழ்வு நிலாதினி நின்ற—

18. கடன் முறை பேசும் என உரைநாவுறங்கி விழுந்துகை
கொண்டு மொழிந்துகடைவழிகஞ்சி ஒழுகிட வந்து
பூதமும் நாலுசு வாசமும் நின்று—
நெஞ்சுதடுமாறி வரும்நேரமே—



19. வளர்பிறை போல எயிறும் உரோமமும் சடையும் சிறு
குஞ்சியும் விஞ்ச மனதும் இருண்ட வடிவும் இலங்க
மாமலே போல்யம தூதர்கள் வந்து—

20. வலேகொடுவீசி உயிர்கொடு போக மைந்தரும் வந்து
குனிந்தழ நொந்து மடியில் விழுந்து மனேவி புலம்ப
மாழ்கினரே இவர் காலம் அறிந்து—

21. பழையவர்காணும் எனுமயலார்கள் பஞ்சு பறந்திட
நின்றவர் பந்தர் இடுமென வந்து பறையிட முந்த
வேபிணம் வேக விசாரியும் என்று—

22. டலரையும் ஏவி முதியவர் தராமிருந்தசவம் கழு
வும் சிலரென்று பணிதுகில் தொங்கல் களபமணிந்து
பாவகமே செய்து நாறும் உடம்பை—

23. வரிசை கெடாமல் எடுமென ஓடி வந்திளமைந்தர்
குனிந்து சுமந்து கடுகி நடந்து சுடலே அடைந்து
மானிடவாழ்வென வாழ்வென நொந்து—

24. விறகிடமூடி அழல்கொடு
போட வெந்து விழுந்து
முறிந்து நிணங்கள் உருகி
எலும்பு கருகி அடங்கி
ஓர்பிடி நீறும் இலாத
உடம்பை—
நம்பும் அடியேனே இனி
ஆளுமே!







## நூல் : இரண்டு

# பத்திரகிரியார் மெய்ஞ்ஞானப் புலம்பல்

காப்பு

முத்திதரும் ஞான மொழியாம் புலம்பல் சொல்ல
அத்தி முகவன்தன் அருள்பெறுவது எக்காலம்?

நூல்

1. ஆங்காரம் உள்ளடக்கி ஐம்புலனைச் சுட்டறுத்துத்,
தூங்காமல் தூங்கிச் சுகம் பெறுவது எக்காலம்?

2. நீங்காச் சிவயோக நித்திரை கொண்டே இருந்து,
தேங்காக் கருணைவெள்ளம் தேக்குவதும் எக்காலம்?

3. தேங்காக் கருணைவெள்ளம் தேக்கியிருந்து உண்பதற்கு
வாங்காமல் விட்டகுறை வந்தடுப்பது எக்காலம்?

4. ஓயாக் கவலையினால் உள்ளுடைந்து வாடாமல்,
மாயாப் பிறவி மயக்கு அறுப்பது எக்காலம்?

5. மாயாப் பிறவி மயக்கத்தை ஊடறுத்துக்,
காயா புரிக்கோட்டை கைக் கொள்வது எக்காலம்?

6. காயா புரிக்கோட்டை கைவசமாய்க் கொள்வதற்கு
மாயா அனுபூதி வந்து அடுப்பது எக்காலம்?

7. சேயாய்ச் சமைந்து, செவிடு ஊமை போல் திரிந்து
பேய்போல் இருந்து உன் பிரமை கொள்வது எக்காலம்?



அத்தி முகவன்-விநாயகன் [அத்தி-யானை;முகவன்-முகத்தை உடையவன்;]

8. பேய்போல் திரிந்து, பிணம்போல் கிடந்து பெண்ணைத்
தாய்போல் நினைத்துத் தவம் முடிப்பது எக்காலம்?

9. கால்காட்டிக், கைகாட்டிக், கண்கள் முகம்காட்டி,
மால்காட்டும் மங்கையரை மறந்து இருப்பது எக்காலம்?



10. பெண்ணினல்லார் ஆசைப்பிரமையினை
விட்டொழிந்து
கண்ணிரண்டும் மூடிக்கலந்திருப்பது
எக்காலம்?

11. வெட்டுண்ட புண்போல் விரிந்த அல்குல்
பைதனிலே
தட்டுண்டு நிற்கை தவிர்வதுவும் எக்காலம்?

12. ஆருத புண்ணில் அழுந்திக் கிடவாமல்
தேருத சிந்தைதனைத் தேற்றுவதும் எக்காலம்?

13. தந்தை, தாய், மக்கள், சகோதரரும் பொய்யெனவே
சிந்தைதனில் கண்டு திருக்கறுப்பது எக்காலம்?

14. மன்னுயிரைக் கொன்று வதைத்து உண்டு உழலாமல்
தன்னுயிர்போல் எண்ணித் தவம் முடிப்பது எக்காலம்?

15. பாவி என்ற பேர்படைத்துப் பாழ்நரகில் வீழாமல்,
ஆவி என்ற சூத்திரத்தை அறிவது இனி எக்காலம்?

16. உளியிட்ட கல்லும், உருப்பிடித்த செஞ்சாந்தும்,
புளியிட்ட செம்பும் பொருளாவது எக்காலம்?

17. வேடிக்கையும் சொகுசும் மெய்ப் பகட்டும் பொய்ப்பகட்டும்,
வாடிக்கை எல்லாம் மறந்திருப்பது எக்காலம்?

18. பட்டுடை பொற்பணியும் பாவனையும் தீவினையும்
விட்டுவிட்டு உன் பாதம் விரும்புவதும் எக்காலம்?

19. ஆமை வரும் ஆள்கண்டு ஐந்தடக்கம் செய்தாற்போல்
ஊமை உருக்கொண்டு ஒடுங்குவதும் எக்காலம்?

20. தண்டிகையும், சாவடியும், சாளிகையும், மாளிகையும்
கண்டு களிக்கும் கருத்தொழிவது எக்காலம்?

21. அத்தன் இருப்பிடத்தை ஆராய்ந்து பார்த்து நிதம்
செத்த சவம்போல் திரிவதினி எக்காலம்?

22. ஒழிந்த தருமத்தினை வைத்துள்ளெலும்பு வெள்ளெலும்பாய்க்
கழிந்த பிணம் போல் இருந்து காண்பதினி எக்காலம்?

23. அற்ப சுகம் மறந்தே அறிவை அறிவால் அறிந்து,
கெர்ப்பத்தில் வீழ்ந்து கொண்ட கோளறுப்பது எக்காலம்?

24. கருப்படுத்தி என்னை யமன் கைப்பிடித்துக் கொள்ளாமுன்
உருப்படுத்தி ஆள உடன்படுவது எக்காலம்?

---

11. அல்குல்-பெண்குறி 13. திருக்கு-மயக்கம்; 20. தண்டிகை-பல்லக்கு; சாளிகை-பணப்பை;

25. தூண்டு விளக்கணைய தொடர்ந்து இருள்முன் சூழ்ந்தாற்போல்
மாண்டு பிழைத்துவந்த வகைதெரிவது எக்காலம்?

26. தூரியினின் மீன்போல் சுழன்றுமனம் வாடாமல்,
ஆரியனைத் தேடி அடிபணிவது எக்காலம்?

27. எண்ணூறு யுகமிருந்தும் எய்தாத வீடுபெற
வெண்ணீறு பூசி விளங்குவதும் எக்காலம்?

28. அவ்வேடம் பூண்டு இங்கு அலைந்து திரியாமல்
சிவவேடம் பூண்டு சிறந்திருப்பது எக்காலம்?

29. அண்டருக்காய் நஞ்சருந்தி அம்பலத்தில் ஆடுசிவன்
தொண்டருக்குத்தொண்டன் எனத்தொண்டு செய்வது எக்காலம்?

30. பன்றி வடிவெடுத்துப் பார்இடந்து மால்காணுக்
குன்றில் விளக்கொளியைக் கூறுவதும் எக்காலம்?

31, தித்திக்கும் தெள்ளமிர்தை, சித்தாந்தத்து உட்பொருளை,
முத்திக்கு வித்தை முதல்நினைப்பது எக்காலம்?

32. வேதாந்த வேதம்எல்லாம் விட்டொழிந்தே நிட்டையிலே
ஏகாந்தமாக இருப்பதினி எக்காலம்?

33. மற்றிடத்தைத் தேடி என்றன் வாழ்நாளைப் போக்காமல்
உற்றிடத்தைத் தேடி உறங்குவதும் எக்காலம்?

34. இன்றுளோர் நாளை இருப்பதுவும் பொய்யெனவே
மன்றுளோர் சொல்லும் வகையறிவது எக்காலம்?

35. கஞ்சா அபினியுடன் கள்ளுண்டு வாடாமல்
பஞ்சா மிர்தம் பருகுவதும் எக்காலம்?

36. செஞ்சலத்தினுல் திரண்ட ஜெனன மோக்ஷம்பெறவே
சஞ்சலத்தை விட்டு உன் சரண் அடைவது எக்காலம்?

37. கும்பிக்கு இரைதேடிக் கொடுப்பார் இடம்தோறும்
வெம்பித் திரிகை விடுப்பது இனி எக்காலம்?

38. ஆடுகின்ற சூத்திரம் தான் அறுமளவு மேதிரிந்து
போடுகின்ற நாள்வருமுன் போற்றுவதும் எக்காலம்?

39. நவசூத் திரவீட்டை நான்என்று அலையாமல்
சிவசூத் திரத்தைத் தெரிந்தறிவது எக்காலம்?

40. மறந்து மல சலங்கள் மாயும் புழுக் கூட்டைவிட்டுக்
கரந்துன் அடிஇணைக்கீழ்க் கலந்துநிற்பது எக்காலம்?

41. இம்மைதனில் பாதகனைய் இருவினைக்கிடாய்எடுத்த
பொம்மைதனைப் போட்டு உன்னைப் போற்றிநிற்பது எக்காலம்?

---

26. தூரி-வலை; ஆரியன்—ஆசிரியன், குரு; 30, மால்—திருமால்;

42. உப்பிட்ட பாண்டம் உடைந்து கருக் கொள்ளுமுன்னே
அப்பிட்ட வேணியனுக்கு ஆட்படுவது எக்காலம்?

43. சேவை புரிந்து, சிவரூபக் காட்சிகண்டு,
பாவைதனைக் கழித்துப் பயன் அடைவது எக்காலம்?

44. காண்டத்தை வாங்கிக் கருமேகம் மீண்டதுபோல்
பாண்டத்தை நீக்கிப் பரம்அடைவது எக்காலம்?

45. சோற்றுத் துருத்திதனைச் சுமந்து அலைந்து வாடாமல்
ஊத்தைச் சடம்போட்டு உனை அடைவது எக்காலம்?

46. தொடக்கைச் சதம் எனவே சுமந்து அலைந்து வாடாமல்
உடக்கை கழற்றி உனை அறிவது எக்காலம்?

47. ஆசைவலைப் பாசத்து அகப்பட்டு மாயாமல்
ஓசைமணித் தீபத்தில் ஒன்றி நிற்பது எக்காலம்?

48. கூற அரிய நால்வேதம் கூப்பிட்டும் காணாத
பார ரகசியத்தைப் பார்த்திருப்பது எக்காலம்?

49. புல்லாய்; விலங்காய்ப், புழுவாய், நரவடிவாய்,
எல்லாப் பிறப்பின் இருள் அகல்வது எக்காலம்?

50. தக்கும்வகைக்கு ஒர்பொருளும் சாராமலேநினைவில்
பக்குவம்வந்து உன் அருளைப் பார்த்திருப்பது எக்காலம்?

51. பருவத் தலைவரொடும் புல்கிஇன்பம் கொள்வதற்குத்
தெரிவைப் பருவம்வந்து சிக்குவதும் எக்காலம்?

52. தெரிவையுறும் பக்குவத்தின் சீராட்டு எல் லாம்அறிந்து
குருவை அறிந் தேநினைத்துக் கும்பிடுவது எக்காலம்?

53. வம்படிக்கும் மாதருடன் வாழ்ந்தாலும் மன்னுபுளி
யம்பழமும் ஓடும்போல் ஆவதினி எக்காலம்?

54. பற்றற்று நீரில் படர்தா மரை இலைபோல்
சுற்றத்தை நீக்கிமனம் தூரநிற்பது எக்காலம்?



55. சல்லாப லீலையிலே தன்மனைவி செய்தசுகம்
சொல்லாரக் கண்டு எனக்குச் சொல்வதினி எக்காலம்?

56. மருவ அயல்புருடன் வரும் நேரம் காணாமல்
உருகுமனம் போல்என் உளம் உருகுவதும் எக்காலம்?

57. தன்கணவன் தன்சுகத்தில் தன்மனம்வே ரூனதுபோல்
என்கருத்தில் உன்பதத்தை ஏற்றுவதும் எக்காலம்?

58. கூடிப் பிரிந்துவிட்ட கொம்பனையைக் காணாமல்
தேடித் தவிப்பவன் போல் சிந்தை வைப்பது எக்காலம்?

---

42. அப்பு-நீர்; வேணி-சடை; 46. தொடக்கு-உடல்; உடக்கு-தத்துவம்;



59. எவ்வனத்தின் யோகம் எப்படி
யுண் டட்டபடிபோல்
கவ்வனத் தியானம் கருத்து வைப்
பது எக்காலம்?
60. கண்ணால் அருவி கசிந்து மூத்துப்
போல் உதிரச்
சொன்ன பரம் பொருளைத்
தொகுத்தறிவது எக்காலம்?
61. ஆக மிகவுருக, அன்புருக, என்
புருகப் போக அனுபூதி பொருந்
தவதும் எக்காலம்?
62. நீரில் குமிழி போல் நிலையற்ற
வாழ்வை, விட்டுன்
பேரில் கருணை வெள்ளம் பெருக்
கெடுப்பது எக்காலம்?
63. அன்பை உருக்கி, அறிவை
அதன் மேல் புகட்டித்;
துன்ப வலைப்பாசத் தொடக்
கறுப்பது எக்காலம்?
64. கருவின் வழி அறிந்து கருத்தைச் செலுத்தாமல்
அருவி விழிசொரிய அன்பு வைப்பது எக்காலம்?
65. தெள்ளத் தெளிய தெளிந்த சிவானந்தத்தேன்
பொழியப் பொழியமனம் பூண்டிருப்பது எக்காலம்?
66. ஆதார மூலத் தடியில் கணபதியைப்
பாதார விந்தம் பணிந்து நிற்பது எக்காலம்?
67. மண்வளை ந்த நற்கீற்றில் வளை ந்திருந்த வேதாவைக்
கண்வளர்த்து பார்த்துள்ளே கண்டிருப்பது எக்காலம்?
68. அப்புப் பிறை நடுவே அமர்ந்திருந்த விட்டுணுவை,
உப்புக் குடுக்கையுள்ளே உணர்ந்தறிவது எக்காலம்?
69. மூன்று வளையம் இட்டு மூளைத்தெழுந்த கோணத்தில்
தோன்றும் உருத்திரனைத் தொழுது நிற்பது எக்காலம்?
70. வாயு அறு கோணம் அதில் வாழும் மகேச்சுரனைத்,
தோயும் வகை கேட்கத் தொடங்குவதும் எக்காலம்?
71. வட்ட வழிக்குள்ளே மருவும் சதாசிவத்தைக்
கிட்ட வழிதேடக் கிருபை செய்வது எக்காலம்?
72. உச்சிக் கிடை நடுவே ஓங்கும் குருபதத்தை
நிச்சயித்துக் கொண்டிருந்து நோவதினி எக்காலம்?
73. பாராகிப் பார்மீதில் பஞ்சவர்னம் தானாகி
வேராகி நீ மூளைத்த வித்தறிவது எக்காலம்?
74. கட்டறுக்க வொண்ணாக் கருவிகரணாதி எல்லாம்
சுட்டறுத்து நிட்டையிலே தூங்குவதும் எக்காலம்?
75. கள்ளக் கருத்தை எல்லாம் சுட்டோடு வேரறுத்து இங்கு
உள்ளக் கருத்தை உணர்ந்திருப்பது எக்காலம்?
76. அட்டகாசம் செலுத்தும் அவத்தைச் சடலத்துடனே
பட்டபாடு அத்தனையும் பகுத்தறிவது எக்காலம்?

---

68. உப்புக் குடுக்கை-உப்பு மயமான உடம்பு 67-72 தத்துவ விளக்கக் குறிப்புகளில் ஆறு ஆதாரப் படங்களையும் விளக்கக் குறிப்புகளையும் காண்க.

77. அறிவுக் கருவியுடன் அவத்தைபடும் பாட்டை எல்லாம்
பிரிய உடன் இருத்திப் பெலப்படுவது எக்காலம்?

78. பூதம் பொறிகரணம் போந்தவிந்து நாதமுமாய்ப்
பேதம் பலவிதமும் பிரித்தறிவது எக்காலம்?

79. தோன்ருசை மூன்றும் தொடர்ந்து வந்து சுற்ருமல்
ஊன்ருசை வேரை அடி ஊடறுப்பது எக்காலம்?

80. புன்சனனம் போற்றுமுன்னே புரிவட்டம் போகில் இனி
என் சனனம் ஈடேறும் என்றறிவது எக்காலம்?

81. நட்ட நடுவில் நின்று நல்திரோ தாபி அருள்
கிட்டவழி காட்டிக் கிருபை செய்வது எக்காலம்?

82. நானே நான் என்றிருந்தேன் நடுவினில் கட்டழகி
தானே வெளிப்படுத்தித் தருவன் என்பது எக்காலம்?

83. அடர்ந்த மனக்காட்டை அஞ்செழுத்தாம் வாளாலே
தொடர்ந்து தொடர்ந்து வெட்டிச் சுடுவது இனி எக்காலம்?

84. ஐந்து பொறிவழிபோய் அலைத்தும் இந்தப் பாழ்மனதை
வெந்து விழப் பார்த்து விழிப்பது இனி எக்காலம்?

85. இனம்மாண்டு, சேர்ந்திருந்தோர் எல்லோரும் தான் மாண்டு
சினம்மாண்டு, போக அருள் சேர்ந்திருப்பது எக்காலம்?

86. அமையா மனது அமையும் ஆனந்த வீடுகண்டு அங்கு
இமையாமல் நோக்கி இருப்பது இனி எக்காலம்?

87. கூண்டுவிழும் சீவன் மெள்ளக் கொட்டாவி கொண்டாற்போல்
மாண்டுவிழும் முன்னே நான் மாண்டிருப்பது எக்காலம்?

88. ஊன் நிறைந்த காயம் உயிர் இழந்து போகுமுன்னம்
நான் இறந்து போக இனி நாள் வருவது எக்காலம்?

89. கெட்டுவிடும் மாந்தர் கெர்விதங்கள் பேசிவந்து
சுட்டு விடுமுன் என்னைச் சுட்டிருப்பது எக்காலம்?

90. தோல் ஏணி வைத்தேறித் தூரநடந் தெய்க்காமல்,
நூல் ஏணி வைத்தேறி நோக்குவதும் எக்காலம்?

91. வாயோடு கண்மூடி மயக்கமுற்று நில்லாமல்,
தாயோடு கண்மூடி தழுவி நிற்பது எக்காலம்?

92. காசினியெலாம் நடந்து கால் ஓய்ந்து போகாமல்
வாசிதனில் ஏறிவருவது இனி எக்காலம்?

93. ஒலிபடரும் குண்டலியை உன்னி உணர்வால் எழுப்பிச்
சுழுமுனையின் தாள்திறந்து தூண்டுவதும் எக்காலம்?

94. இடைபிங் கலைநடுவே இயங்கும் சுழு முனையில்
தடை அறவே நின்று சலித்திருப்பது எக்காலம்?

95. மூல நெருப்பை விட்டு மூட்டி நிலா மண்டபத்தில்
பாலை இறக்கி உண்டு பசி ஒழிவது எக்காலம்?

96. ஆக வெளிக்குள்ளே அடங்காப் புரவிசெல்ல
ஏக வெளியில் இருப்பது இனி எக்காலம்?

97. பஞ்சரித்துப் பேசும்பல கலைக்கு எட்டாப் பொருளில்
சஞ்சரித்து வாழ்ந்து தவம் பெறுவது எக்காலம்?

98. மலமும் சலமும் அற்று, மாயை அற்று, மானம் அற்று,
நலமும் குலமும் அற்று, நான் இருப்பது எக்காலம்?

99. ஓடாமல் ஓடி உலகை வலம் வந்து சுற்றித்
தேடாமல் என்னிடமாய்த் தெரிசிப்பது எக்காலம்?

100. அஞ்ஞானம் விட்டே, அருள்ஞானத்து எல்லைதொட்டு,
மெய்ஞ்ஞான வீடு பெற்று வெளிப்படுவது எக்காலம்?

101. வெல்லுமட்டும் பார்த்து, வெகுளியெலாம் விட்டு அகன்று,
செல்லுமட்டும் சிந்தைசெலுத்துவது எக்காலம்?

102. மேலாம் பதம்தேடி, மெய்ப் பொருளை உள்இருத்தி,
நாலாம் பதம் தேடி, நான் பெறுவது எக்காலம்?

103. எண்ணாத தூரம் எல்லாம் எண்ணி எண்ணிப் பாராமல்,
கண்ணாடிக்குள் ஒளிபோல் கண்டறிவது எக்காலம்?

104. என்னை அறிந்து கொண்டே எங்கோமானோடு இருக்கும்
தன்மை அறிந்து சமைந்திருப்பது எக்காலம்?

105. ஆறு ஆதாரம் கடந்த ஆனந்தப் பேரொளியை
பேறாகக் கண்டு நான் பெற்றிருப்பது எக்காலம்?

106. ஆணவ மாயத்தால் அழிந்து உடலம் போகாமுன்
காணுதலால் இன்பமற்றுக் கண்டறிவது எக்காலம்?

107. மும்மலமும் சேர்த்து முளைத்தெழுந்த காயம் இதை
நிர்மலமாய்க் கண்டு வினை நீங்கி இருப்பது எக்காலம்?

108. முன்னை வினை கெடவே, மூன்று வகைக் காட்சியினால்
உன்னை வெளிப்படுத்தி உறுவது இனி எக்காலம்?

109. கண்ணின் ஒளி பாய்ந்ததுவும், கருத்தறிந்து கொண்டதுவும்
விண்ணின் ஒளி கண்டதுவும், வெளிப்படுவது எக்காலம்?

110. கனவு கண்டால் போல் எனக்குக் காட்டி மறைத்தே இருக்க
நினைவைப் பரவெளிமேல் நிறுத்துவது எக்காலம்?

111. ஆர் என்று கேட்டதுவும், அறிவுவந்து கண்டதுவும்,
பார் என்று சொன்னதுவும், பகுத்தறிவது எக்காலம்?

112. நினைக்கும் நினைவுதொறும் நிறைந்த பரிபூரணத்தை
முனைக்கு மேல் கண்டு கண்ணில் முளைந்தெழுப்பது எக்காலம்?

113. முப்பாழும் பாழாய், முதற்பாழும் சூனியமாய்,
அப்பாழும் பாழாய் அன்பு செய்வது எக்காலம்?

114. சீ என்று எழுந்து தெளிந்து நின்ற வான் பொருளை
நீ என்று கண்டு நிலை பெறுவது எக்காலம்?

115. வவ்வெழுத்தும் அவ்வெழுத்தும் வாளாகும் சிவ்வெழுத்தும்
யவ்வெழுத்தின் உள்ளே அடங்கி நிற்பது எக்காலம்?

116. எழுத்தெல்லாம் மாண்டிறந்தே ஏகமாய் நின்றநிலே
அழுத்தமாய்ச் சிந்தையை வைத்து அன்புகொள்வது எக்காலம்?

117. அருவாய் உருவாகி, ஆதி அந்தம் ஆகின்ற
குருவாக வந்து எனை ஆட்கொண்டு அருள்வது எக்காலம்?

118. நான் என்று அறிந்தவனை நான் அறியாக் காலம் எல்லாம்
தான் என்று நீ இருந்ததனை அறிவது எக்காலம்?

119. என் மயமாய்க் கண்டதெல்லாம் எண்ணி எண்ணிப் பார்த்த பின்பு
தன் மயமாய்க் கொண்டநிலே சார்ந்து நிற்பது எக்காலம்?

120. ஒளியில் ஒளியாம் உருப்பிறந்த வாறதுபோல்
வெளியில் வெளியான விதம் அறிவது எக்காலம்?

121. ஒளிஇட்ட மெய்ப்பொருளை உள் வழியிலே அடைத்து
வெளியிட்டுச் சாத்திவைத்து வீடு உறுவது எக்காலம்?

122. காந்தம் வலித்து இரும்பைக் கரத்திழுத்துக் கொண்டதுபோல்
பாய்ந்து பிடித்திழுத்து உன் பதத்தில் வைப்பது எக்காலம்?

123. பித்தாயம் கொண்டு பிரணவத்தை ஊடறுத்துச்
செத்தாரைப் போலே திரிவது இனி எக்காலம்?

124. ஒழிந்த கருத்தினை வைத்து உள் எலும்பு வெள் எலும்பாய்க்
கழிந்த பிணம் போல் இருந்து காண்பது இனி எக்காலம்?

125. ஆதிகபிலர் சொன்ன ஆகமத்தின் சொற்படியே
சாதிவகை இல்லாமல் சஞ்சரிப்பது எக்காலம்?

126. சூதும் களவும் தொடர்வினையும் சுட்டிடக் காற்று
ஊதும் துருத்தியைப் போட்டு உனை அடைவது எக்காலம்?

127. ஆசைவலைப் பாசத்து அகப்பட்டு மாயாமல்
ஓசைமணித் தீபத்தில் ஒன்றி நிற்பது எக்காலம்?

128. கல்லாய், மரமாய்க், கயலாய்ப், பறவைகளாய்ப்
புல்லாய்ப் பிறந்த சென்மம் போதும் என்பது எக்காலம்?

129. தக்கும் வகைக்கோர் பொருளும் சாராமலே நினைவில்
பக்குவமாய் நின் அருளைப் பார்த்திருப்பது எக்காலம்?

130. தூரோடு இசைந்து சுழன்று வரும் தத்துவத்தை
வேரோடு இசைந்து விளங்குவதும் எக்காலம்?

131. பாசம் நடு ஏறிப் பயந்தெழுந்த சித்திரத்தை
ஏக நடு மூலத்து இருத்துவதும் எக்காலம்?

2. ஓரின்பம் காட்டும் உயர்ஞான வீதிசென்று
பேரின்ப வீடுகண்டு பெற்றிருப்பது எக்காலம்?

3. காரணமாய் வந்து என் கருத்தில் உரைத்த
தெல்லாம்
பூரணமாக் கண்டு புகழ்ந்திருப்பது எக்காலம்

4. ஆயும் கலைகள் எல்லாம் ஆராய்ந்து
பார்த்ததன்பின்
நீ என்றும் இல்லா நிசம்காண்பது எக்காலம்?



5. குறியாகக் கொண்டு குலம்அளித்த நாயகனைப்
பிரியாமல் சேர்ந்து பிறப்பறுப்பது எக்காலம்?

6. மத்தடுத்து நின்று மருள் ஆடு வார்போல
பித்தடுத்து நின் அருளைப் பெற்றிருப்பது எக்காலம்?

7. சாவாமல் செத்திருந்து சற்குருவின் பொன் அடிக்கீழ்
வேகாமல் வெந்திருக்க வேண்டுவதும் எக்காலம்

8. என்னை அறியாமல் இருந்துஆட்டும் சூத்திரநின்
தன்னை அறிந்து தவம் பெறுவது எக்காலம்?

9. உள்ளம் அறியாது ஒளித்திருந்த நாயகனை
கள்ள மனம் தெளிந்துகாண்பது இனி எக்காலம்?

140. வாசித்தும் காணுமல், வாய்விட்டும் போகாமல்
பூசித்தும் தோன்றுப் பொருள்காண்பது எக்காலம்?

141. பன்னிரண்டு கால்புரவி பாய்ந்துசில்லம் தப்பாமல்
பின்இரண்டு சங்கிலிக்குள் பிணைப்பதுஇனி எக்காலம்?

2. நாட்டுக்கரல் இரண்டும்விட்டு, நடுவுக்கால் ஊடேபோய்.
ஆட்டுக்கால் இரண்டினுள்ளே அமர்ந்திருப்பது எக்காலம்!"

3. பாற்பசுவைப் பூட்டிப் பதியில்வைத்துச் சீராட்டிக்
காற்பசுவை ஓட்டி அதில் கட்டிவைப்பது எக்காலம்?

4. பலஇடத்தே மனதைப் பாயவிட்டுப் பாராமல்
நிலவரையின் ஊடேபோய் நேர்படுவது எக்காலம்?

5. காமக் கடல்கடந்து கரைஏறிப் போவதற்கே
ஓமக் கனல்வளர்த்தி உள்ளிருப்பது எக்காலம்?

6. உதயச் சுடர்மூன்றும் உள்வீட்டி லேகொளுத்தி
இதயத் திருநடனம் இனிக்காண்பது எக்காலம்?

7. வேதாந்த வேதம்எல்லாம் விட்டேறி யேகடந்து
நாதாந்த மூல நடுஇருப்பது எக்காலம்?

8. பட்டம்அற்றுக் காற்றில் பறந்தாடும் சூத்திரம்போல்
விட்டு வெளியாக விசுவசித்தல் எக்காலம்?

9. அட்டாங்க யோகம் அதற் கப்பாலுக் கப்பாலாய்
கிட்டாப் பொருள் அதனைக் கிட்டுவதும் எக்காலம்?

150. ஒட்டாமல் ஒட்டி நிற்கும் உடலும் உயிரும்பிரித்தே
எட்டாப் பழம்பதிக்கு இங்கு ஏணிவைப்பது எக்காலம்?

151. பாசத்தை நீக்கிப் பசுவைப் பதியில்விட்டு
நேசத்தின் உள்ளே நினைந்திருப்பது எக்காலம்?

2. ஆசார நேச அனுட்டானமும் மறந்து
பேசாமெய்ஞ் ஞானநிலை பெற்றிருப்பது எக்காலம்?

---

141- கால்புரவி-காற்றுகிய குதிரை; இரண்டு சங்கிலி-இடைகலை, பிங்கலை; 142, ஆட்டுக்கால்-நடனம் ஆடுகின்ற பாதங்கள்; 143. கால் பசு-பிராணவாயு; 144, நிலவரை-குகை; 149. அட்டாங்க யோகம்-தாண்க-இறுதியிலுள்ள பொருள் அகராதியில்.

3, பல்லாயிரம்கோடிப் பகிரண்டம் உன்படைப்பே
அல்லாது வேறில்லென்று அறிவதுஇனி எக்காலம்?
4. ஆதிமுதல் ஆகிநின்ற அரிஎன்ற அட்சரத்தை
ஓதி அறிந்துள்ளே உணர்வது இனி எக்காலம்?
5, சாத்திரத்தைச் சுட்டுச் சதுர்மறையைப் பொய்யாக்கிச்
சூத்திரத்தைக் கண்டு துயர்அறுப்பது எக்காலம்?
6. அல்லும் பகலும்என்றன் அறிவைஅறி வால்அறிந்து
சொல்லும் உரைமறந்து தூங்குவதும் எக்காலம்?
7. இயங்கும் சராசரத்தில் எள்ளும்எண்ணெ யும்போல
முயங்கும்அந்த வேத முடிவுஅறிவது எக்காலம்?
8. ஊனாகி ஊனில் உயிராகி எவ்வுலகும்
தானாகி நின்றதனை அறிவது எக்காலம்?
9. என்னைவிட்டு நீங்காமல் என்னிடத்து நீஇருக்க
உன்னைவிட்டு நீங்காது ஒருப்படுவது எக்காலம்?
160. இன்னதென்று சொல்லஒண்ணா எல்லையற்ற வான்பொருளைச்
சொன்னதென்று நான் அறிந்து சொல்வதுஇனி எக்காலம்?

161. மனதைஒரு வில்லாக்கி, வான்பொறியை நாணாக்கி
என தறிவை அம்பாக்கி எய்வதுஇனி எக்காலம்?

2. என்னை இறக்க எய்தே என்பதியை ஈடழித்த
உன்னை வெளியில்வைத்தே ஒளித்துநிற்பது எக்காலம்?

3. கடத்துகின்ற தோணிதனைக் கழைகள்குத்தி விட்டாற்போல்
நடத்துகின்ற சித்திரத்தை நான்அறிவது எக்காலம்?

4. நின்றநிலை பேராமல், நினைவில்ஒன்றும் சாராமல்
சென்றநிலை முத்திஎன்று சேர்ந்தறிவது எக்காலம்?

5. பொன்னும்வெள் ளியும் பூண்ட பொற்பதத்தை உள் அமைத்து
மின்னும் ஒளிவெளியே விட்டு அடைப்பது எக்காலம்?

6. கூட்டில் அடைப் பட்டபுழு குளவி உருக் கொண்டதுபோல்
வீட்டில் அடைப் பட்டு அருளை வேண்டுவதும் எக்காலம்?

7. கடலில் ஒளித்திருந்த கனல் எழுந்து வந்தாற்போல்
உடலில் ஒளித்தசிவம் ஒளிசெய்வது எக்காலம்?

8. அருணப் பிரகாசம் அண்டம் எங்கும் போர்த்தது போல்
கருணைத் திருவடியில் கலந்து நிற்பது எக்காலம்?

9. பொன்னில் பல விதமாம் பூஷணம் உண்டானதுபோல்
உன்னில் பிறந்துஉன்னில் ஒடுங்குவதும்எக்காலம்?
170. நாயில் கடைப் பிறப்பாம் நான் பிறந்த
துன்பம் அற
வெயில் கனல் ஒளிபோல் விளங்குவதும்எக்காலம்?
171. சூரியகாந்திஒளி சூழ்ந்து பஞ்சைச் சுட்டதுபோல்
ஆரியன் தோற்றத்து அருள்பெறுவது எக்காலம்?



156. சூத்திரம்-சிவஞான சூத்திரங்கள்; 162. பதி-உலகம்;

2. இரும்பில் கனல்மூட்டி இவ்வுருபோய் அவ்வுருவாய்க்
கரும்பில் சுவைரசத்தைக் கண்டறிவது எக்காலம்?

3. கருக்கொண்ட முட்டைதனைக் கடல் ஆமைதான் நினைக்க
உருக்கொண்ட வாறதுபோல் உனை அடைவது எக்காலம்?

4. வீடுவிட்டுப் பாய்ந்து வெளியில் வருவார்போல்
கூடுவிட்டுப் பாயும் குறிப்பறிவது எக்காலம்?

5. கடைந்த வெண்ணெய் மோரில் கலவாத வாறதுபோல்
உடைந்து தமியேன் உனைக்காண்பது எக்காலம்?

6. இருளை ஒளி விழுங்கி ஏகஉருக் கொண்டாற்போல்
அருளை விழுங்கும் இருள் அகன்று நிற்பது எக்காலம்?

7. மின் எழுந்து மின் ஒடுங்கி விண்ணில் உறைந்தாற்போல்
என்னுள் நின்றது என்னுள்ளே யான் அறிவது எக்காலம்?

8. கண்ட புனல்குடத்தில் கதிர் ஒளிகள் பாய்ந்தாற்போல்
கொண்ட சொருபமதைக் கூர்ந்தறிவது எக்காலம்?

9. பூணுகின்ற பொன் அணிந்தால் பொன் சுமக்கு மோஉடலைக்
காணுகின்ற என் கருத்தில் கண்டறிவது எக்காலம்?

180. செம்பில் களிம்புபோல் சிவத்தை விழுங்கு மிக
வெம்பிநின்ற மும்மலத்தை வேறு செய்வது எக்காலம்?

181. ஆவியும் காயமும் போல் ஆத்துமத்து நின்றதனை
பாவி அறிந்துமனம் பற்றி நிற்பது எக்காலம்?

2. ஊமை கனுக்கண்டு உரைக்கஅறியா இன்பம் அதை
நாம் அறிந்து கொள்வதற்கு நாள் வருவது எக்காலம்?

3. சாகாச் சிவனடியைத் தப்பாதார் எப்போதும்
போகா உடல் அகன்று போவர் என்பது எக்காலம்?

4. நிட்டைதனை விட்டு, நினைவறிவு தப்ப விட்டு,
வெட்ட வெளியில் விரவி நிற்பது எக்காலம்?

5. வெட்ட வெளிதன்னில் விளைந்தவெம் பாதத்தை
திட்டமுடன் கண்டு தெளிவது இனி எக்காலம்?

6. எங்கும் பரவடிவாய் என் வடிவு
நின் வடிவாய்க்
கங்குல்பகல் இன்றி உனைக் கண்டிருப்பது
எக்காலம்?



7. உண்டதுவும் மாதருடன் கூடிச்சேர்ந்து
இன்பம்
கண்டதுவும் நீயெனவே கண்டு
கொள்வது எக்காலம்?

8. ஈம் என்று கேட்டதுவும் என்னுள்ளே நின்றதுவும்
ஓம் என்று சொன்னதுவும் உற்றறிவது எக்காலம்?

9. சத்தம் பிறந்த இடம்தன் மயமாய் நின்றஇடம்
சித்தம் பிறந்தஇடம் தேர்ந்தறிவது எக்காலம்?

190. போக்கு வரவும் புறம்புள்ளும் ஆகிநின்றும்
தாக்கும் ஒருபொருளைச் சந்திப்பது எக்காலம்?

191. நான் எனவும் நீ எனவும் நாம் இரண்டு மற்றொன்றும்
நீ எனவே சிந்தைதனில் நேர்படுவது எக்காலம்!

2. அறிவை அறிவால் அறிந்தே அறிவும் அறிவுதனில்
பிறிவுபட நில்லாமல் பிடிப்பது இனி எக்காலம்?

3. நீடும் புவனம் எல்லாம் நிறைந்துசிந் தூரம் அதாய்
ஆடும் திருக்கூத்தை அறிவது இனி எக்காலம்?

4. தித்தி என்ற கூத்துத் திருச்சிலம்பின் ஓசைகளும்
பத்தியுடனே கேட்டுப் பணிவதுஇனி எக்காலம்?

5. நயனத்திடை வெளிபோய் நண்ணும் பர வெளியில்
சயனித் திருந்து தலைப்படுவது எக்காலம்?

6. அருவி மலைநடுவே ஆயிரக்கால் மண்டபத்தில்
திருவிளையாடல்கண்டு தெரிசிப்பது எக்காலம்?

7. மீனை மிக உண்டு நக்கி விக்கி நின்ற கொக்கது போல்
தேனை மிக உண்டு தெவிட்டிநிற்பது எக்காலம்?

8. பொல்லாத காயம் அதைப் போட்டு விடுக்குமுன்னெ
கல் ஆவின் பால்கறப்பக் கற்பது இனி எக்காலம்?

9. வெட்ட வெளிக்குள்ளே விளங்கும் சதாசிவத்தைக்
கிட்டவரத் தேடிக் கிருபை செய்வது எக்காலம்?

200. பேரறிவிலே மனதைப் பேராமலே இருத்தி
ஓரறிவில் என்னாளும் ஊன்றி நிற்பது எக்காலம்?

201. அத்துவிதம் போலும் என்ற ஆத்துமத்தின் உள்ளிருந்து
முத்தி தான் நின்ற முறை அறிவது எக்காலம்?

2. நான் நின்ற பாசம் அதில் நான் இருந்து மாளாமல்
நீ நின்ற கோலம் அதில் நிறைவி நிற்பது எக்காலம்?

3. எள்ளும் கரும்பும் எழு மலரும் காயமும் போல்
உள்ளும் புறம்புநின்று உற்றறிவது எக்காலம்?

4. அன்னம் புனலை வகுத்து அமிர்தத்தை உண்பதுபோல்
என்னை வகுத்து உன்னை இனிக்காண்பது எக்காலம்?

5. அந்தரத்தில் நீர் பூத்து அலர்ந்தெழுந்த தாமரை போல்
சிந்தை வைத்துக் கண்டு தெரிசிப்பது எக்காலம்?

6. பிறப்பும் இறப்பும் அற்றுப், பேச்சும் அற்று, மூச்சும் அற்று,
மறப்பும் நினைப்பும் அற்று மாண்டிருப்பது எக்காலம்?

---

198. கல் ஆவின் பால்-உயிர் என்னும் பசுவினிடம் கறக்கின்ற ஞானப் பால்;

7. மன்னும் பரவெளியை மனவெளியில் அடைத்து அறிவை
என்னும் ஒரு நினைவை எழுப்பி நிற்பது எக்காலம்?

8. ஆசை கொண்ட மாதர் அடைகனவு நீக்கி உன்மேல்
ஓசை கொண்டு நானும் ஒடுங்குவதும் எக்காலம்?

9. தன் உயிரைக் கொண்டு தான் திரிந்த வாறது போல்
உன் உயிரைக் கொண்டு இங்கு ஒடுங்குவதும்
எக்காலம்?

210. சேற்றில் கிளை நாட்டும் திடமாம் உடலை இனிக்
காற்றில் உழல் சூத்திரமாய்க் காண்பது இனி
எக்காலம்?

1. என் வசமும் கெட்டு இங்கிருந்த வசமும் அழிந்து
தன்வசமும் கெட்டு அருளைச் சார்ந்து இருப்பது எக்காலம்?

2. தன்னை மறந்து தலத்து நிலைமறந்து
கன்மம் மறந்து கதிபெறுவது எக்காலம்?

3. என்னை என்னிலே மறைந்தே இருந்த பதியும் மறந்து
தன்னையும் தானே மறந்து தனித்து இருப்பது எக்காலம்?

4. தன்னையும் தானே மறந்து தலைவாசல் தாழ்போட்டே
உன்னை நினைந்துள்ளே உறங்குவதும் எக்காலம்?

5. இணை பிரிந்த போதில் அன்றி இன்பமுறும் அன்றிலைப்போல்
துணை பிரிந்தபோது அருள் நூல் தொடர்ந்து கொள்வது எக்காலம்?

6. ஆட்டம் ஒன்றும் இல்லாமல் அசைவு சற்றும் காணமல்
தேட்டம் அற்ற வான் பொருளைத் தேடுவதும் எக்காலம்?

7. முன்னை வினையால் அறிவு முற்றாமல் பின் மறைந்தால்,
அன்னை தனைத் தேடி அழுதுண்பது எக்காலம்?

8. கள்ளுண்டவர் போல் கனிதரும் ஆனந்தம் அதால்
தள்ளுண்டு நின்றாடித் தடைபடுவது எக்காலம்?

9. தான் என்ற ஆணவமும் தத்துவமும் கெட்டொழிந்தே
ஏன் என்ற பேச்சும் இலாது இலங்குவதும் எக்காலம்?

220. நான் அவனைக் காண்பதெல்லாம் ஞானவிழியால் அறிந்து
தான் அவனைப் நின்று சரண் அடைவது எக்காலம்?

1. தான் அந்தம் இல்லாத தற்பரத்தின் ஊடுருவில்
ஆனந்தம் கண்டே அமர்ந்திருப்பது எக்காலம்?

2. உற்ற வெளிதனிலே உற்றுப் பார்த்து அந்தரத்தே
மற்றமற மாய்கை மாள்வது இனி எக்காலம்?

3. ஏடலர்ந்த பங்கயமும் இருகருணை நேத்திரமும்
தோடணிந்த குண்டலமும் தோன்றுவதும் எக்காலம்?

4. ஐயாறும் ஆறும் அகன்று வெறுவெளியில்
மை இருளில் நின்ற மனம் மாள்வது இனி எக்காலம்?

5. காட்டும் அருள் ஞானக் கடலில் அன்பு கப்பல் விட்டு
மூட்டும் கருணைக் கடலில் மூழ்குவதும் எக்காலம்?

6. நான் யாரோ நீயாரோ நன்றும் பரமான
தான் யாரோ என்று உணர்ந்து தவம் முடிப்பது எக்காலம்?

7. எவர் எவர்கள் எப்படிக் கண்டு எந்தப்படி நினைத்தார்
அவர் அவர்க்கு அப்படி நின்றான் என்பது எக்காலம்?

8. உற்றுற்றுப் பார்க்க ஒளிதரும் ஆனந்தம் அதை
நெருநிசகு நேர்க்கண்டு நிலைப்பது இனி எக்காலம்?

9. விளங்குகின்ற தாரகையை வெய்யோன் மறைத்தாற்போல்
களங்கமற உன்காட்சி கண்டறிவது எக்காலம்.

230. என்னையே நான் அறியேன் இந்த வண்ணம் சொன்னதெல்லாம்
முன்னையோர் கைக்கொள்ள முன்பணிவது எக்காலம்?

231. ஐஞ்சு கரத்தானை அடி இணையைப் போற்றிசெய்து
நெஞ்சில் பொருத்தி நிலைபெறுவது எக்காலம்?



224. ஐயாறும் ஆறும்-முப்பத்தாறு தத்துவங்களும்; மை இருள்-ஆணவ மலம்;

## நூல்: மூன்று



# சிவவாக்கியர்

## பாடல்

[சிவவாக்கியரின் பாடல்களில் புரட்சிகர மான சிந்தனைகள் பல நிறைந்துள்ளன. உருவ வழிபாடு, தல யாத்திரை, மத வாதம், வேதம் ஓதல், சாதியாசாரம் முதலானவற்றை எதிர்த்து, "ஒன்றே குலம்! ஒருவனே தேவன்! உள்ளமே கோயில்" என்னும் கொள்கையை அவர் உலகிற்கு உணர்த்துகிறார்.]

காப்பு

1. அரியதோர் நமச்சிவாயம் ஆதியந்தம் ஆனதும்
   ஆறிரண்டு நூறுதேவர் அன்றுரைத்த மந்திரம்

   சுரியதோர் எழுத்தை உன்னி சொல்லுவேன் சிவவாக்கியம்
   தோஷ தோஷ பாவமாயை தூர தூர ஓடவே

   கரியதோர் முகத்தையுற்ற கற்பகத்தைக் கைதொழக்
   கலைகள் நாற்கண் ஞானமும் கருத்தில் வந்து திக்கவே

   பெரியபேர்கள் சிறியபேர்கள் கற்றுணர்ந்த பேரெலாம்
   பேயனாகி ஓதிடும் பிழை
   பொறுக்க வேண்டுமே.

அக்ஷர நிலை




2. ஆன அஞ்செழுத்துளே
   அண்டமும் அகண்டமும்

   ஆன அஞ்செழுத்துளே
   ஆதியான மூவரும்

   ஆன அஞ்செழுத்துளே
   அகாரமும் மகாரமும்

   ஆன அஞ்செழுத்துளே
   அடங்கலாவ லுற்றவே.

சரியை விலக்கல்

3. ஓடி ஓடி ஓடி ஓடி உட்கலந்த சோதியை
   நாடி நாடி நாடி நாடி நாட்களும் கழிந்து போய்
   வாடி வாடி வாடி வாடி மாண்டுபோன மாந்தர்கள்
   கோடி கோடி கோடி கோடி எண்ணிறந்த கோடியே.

### யோக நிலை

4. உருத்தரித்த நாடியில் ஒடுங்குகின்ற வாயுவைக்
கருத்தினால் இருத்தியே கபாலம் ஏற்ற வல்லிரேல்
விருத்தரும் பாலராவர் மேனியும் சிவந்திடும்
அருள் தரித்த நாதர் பாதம் அம்மைபாதம் உண்மையே.

### தேக நிலை

5, வடிவுகண்டு கொண்ட பெண்ணை மற்றொருவன் நத்தினால்
விடுவனோ அவனை முன்னர் வெட்ட வேண்டும் என்பனே
நடுவன் வந்து அழைத்தபோது நாறும் இந்த நல்லுடல்
சுடலை மட்டும் கொண்டுபோய்த் தோட்டிகைக் கொடுப்பரே.

### ஞான நிலை

6. என்னிலே இருந்த ஒன்றை யான் அறிந்தது இல்லையே
என்னிலே இருந்த ஒன்றை யான் அறிந்து கொண்டபின்
என்னிலே இருந்த ஒன்றை யாவர் காண வல்லரோ
என்னிலே இருந்திருந்து யான் உணர்ந்து கொண்டேனே.

7. நினைப்பதொன்று கண்டிலேன் நீயலாது வேறிலை
நினைப்புமாய் மறப்புமாய் நின்றமாயை மாயையோ
அனைத்துமாய் அகண்டமாய் அனாதிமுன் அனாதியாய்
எனக்குள் நீ உனக்குள் நான் நினைக்குமாற தெங்ஙனே



8. மண்ணும் நீ விண்ணும் நீ மறிகடல்கள்ஏழும்நீ
எண்ணும் நீ எழுத்தும் நீ இசைந்தபண்
எழுத்தும் நீ
கண்ணும் நீ மணியும் நீ கண்ணுள் ஆடும்
பாவை நீ
நண்ணும் நீர்மை நின்றபாதம் நண்ணுமாறு
அருளிடாய்.

9. அரியும் அல்ல அயனும் அல்ல அப்புறத்தில்
அப்புறம்
கருமை செம்மை வெண்மையைக்
கடந்து நின்ற காரணம்
பெரியதல்ல சிறியதல்ல பற்றுமின்கள்
பற்றுமின்கள்
துரியமும் கடந்து நின்ற தூரதூர தூரமே

10. அந்தி மாலை உச்சி மூன்றும் ஆடுகின்ற
தீர்த்தமும்
சந்திதர்ப் பணங்களும் தபங்களும்
செபங்களும்
சிந்தைமேவு ஞானமும் தினம் செபிக்கு மந்திரம்
எந்தைராம ராமராம ராம என்னும் நாமமே!

11. கதாவுபஞ்ச பாதகங்களைத் துரந்த மந்திரம்
இதாம்இதாம் இதல்லஎன்று வைத்துழலும் ஏழைகாள்
சதாவிடாமல் ஓதுவார் தமக்குநல்ல மந்திரம்
இதாம்இதாம் இராமராம ராம என்னும் நாமமே.

---

சிவவாக்கியர் பாடல்; 5, நத்துதல்-இச்சை கொள்ளுதல்; 7. நடுவன்-யமன்.

12. நானதேதது? நீயதேதது? நடுவில் நின்றது ஏதடா?
கோனதேதது? குருவதேதது? கூறிடும் குலாமரே!
ஆனதேதது? அழிவதேதது? அப்புறத்தில் அப்புறம்
ஈனதேதது? ராமராம ராமஎன்ற நாமமே!

## யோக நிலை

13. சாத்திரங்கள் ஓதுகின்ற சட்டநாத பட்டரே
வேர்த்து இரைப்பு வந்தபோது
வேதம் வந்து உதவுமோ?
மாத்திரைப்போதும்முளே மறிந்து
நோக்க வல்லிரேல்
சாத்திரப்பை நோய்கள் ஏது? சத்திமுத்தி
சித்தியே!



14. நாலுவேதம் ஓதுவீர் ஞானபாதம் அறிகிலீர்
பாலுள்நெய் கலந்தவாறு பாவிகாள்
அறிகிலீர்
ஆலம்உண்ட கண்டனார் அகத்துளேஇருக்கவே
காலன் என்று சொல்லுவீர் கனவிலும்
அதில்லையே

15. வித்தில்லாத சம்பிரதாயம் மேலும் இல்லை, கீழும் இல்லை!
தச்சில்லாத மாளிகை சமைந்தவாற தெங்ஙனே?
பெற்ற தாயை விற்றடிமை கொள்ளுகின்ற பேதைகாள்!
சித்தில்லாத போது சிவன் இல்லை இல்லை இல்லையே!

16. அஞ்சும் மூன்றும் எட்டதாம் அநாதியான மந்திரம்
நெஞ்சிலே நினைந்து கொண்டு நூறுருச் செபிப்பிரேல்
பஞ்சமான பாதகங்கள் நூறு கோடி செய்யினும்
பஞ்சுபோல் பறக்கும் என்று நான்மறைகள் பன்னுமே.

17. அண்டவாசல் ஆயிரம் ப்ரசண்டவாசல் ஆயிரம்
ஆறிரண்டு நூறுகோடி யான வாசல் ஆயிரம்
இந்த வாசல் ஏழைவாசல் ஏகபோகமான வாசல்
எம்பிரான் இருக்கும் வாசல் யாவர்காண வல்லரே?

18. சாமநாலு வேதமும் சகல சாத்திரங்களும்
சேமமாக ஓதிலும் சிவனைநீர் அறிகிலீர்
காமநோயை விட்டுநீர் கருத்துளே உணர்ந்தபின்
ஊமையான காயமாய் இருப்பன் எங்கள் ஈசனே!

19. சங்கிரண்டு தாரை ஒன்று சன்ன பின்னல் ஆகையால்
மங்கிமாளு தேஉலகில் மானிடங்கள் எத்தனை
சங்கிரண்டையும் தவிர்த்து தாரைஊத வல்லிரேல்
கொங்கை மங்கை பங்கரோடு கூடிவாழல் ஆகுமே!

20. அஞ்செழுத்திலே பிறந்து அஞ்செழுத்திலேவளர்ந்து
அஞ்செழுத்தை ஓதுகின்ற பஞ்சபூத பாவிகாள்
அஞ்செழுத்தில் ஓர் எழுத்து அறிந்துகூற வல்லிரேல்
அஞ்சல் அஞ்சல் என்றுநாதன் அம்பலத்தில் ஆடுமே!

21. அஞ்சும் அஞ்சும் அஞ்சுமே அனாதியானது அஞ்சுமே
பிஞ்சுபிஞ்சது அல்லவோ பித்தர்காள் பிதற்றுறீர்
நெஞ்சில் அஞ்சு கொண்டுநீர் நின்றுதொக்க வல்லிரேல்
அஞ்சும்இல்லை ஆறும்இல்லை அனாதியானது ஒன்றுமே!

22. நீளவீடு கட்டுறீர் நெடுங்கதவு சாத்துறீர்
வாழவேண்டும் என்றலோ மகிழ்ந்திருந்த மாந்தரே
காலன்ஓலை வந்தபோது கையகன்று நிற்பிரே
ஆலம்உண்ட கண்டர்பாதம் அம்மை பாதம் உண்மையே!

23. ஓடம்உள்ள போதலோ ஓடியே உலாவலாம்
ஓடம்உள்ள போதலோ உறுதிபண்ணிக் கொள்ளலாம்
ஓடம் உடைந்தபோதில் ஒப்பிலாத வெளியிலே
ஆடும்இல்லை கோலும் இல்லை யாரும் இல்லை ஆனதே!

கிரியை நிலை

24. வீடெடுத்து வேள்விசெய்து மெய்யினோடு பொய்யுமாய்
மாடுமக்கள் பெண்டிர்சுற்றம் என்றிருக்கும் மாந்தர்காள்
நாடுபெற்ற நடுவர் கையில் ஓலைவந்து அழைத்திடில்
ஓடுபெற்ற அவ்விலை பெறுமோகாண் இவ்வுடலமே!

உற்பத்தி நிலை

25. அண்ணலை அநாதியே அநாதிமுன் அநாதியே
பெண்ணும் ஆணும் ஒன்றலோ பிறப்பதற்கு முன்னெலாம்
கண்ணிலாநீர்ச் சுக்கிலம் கருதிஓங்கும் நாளிலே
மண்ணுளோரும் விண்ணுளோரும் வந்தவாறு எங்ஙனே?

அறிவு நிலை

26. பண்டுநான் பறித்தெறிந்த பன்மலர்கள் எத்தனை?
பாழிலே செபித்துவிட்ட மந்திரங்கள் எத்தனை?
மிண்டனாய்த் திரிந்தபோது இரைத்தநீர்கள் எத்தனை?
மீளவும் சிவாலயங்கள் சூழவந்தது எத்தனை?
அண்டர்கோன் இருப்பிடம் அறிந்து உணர்ந்த ஞானிகள்
பண்டறிந்த பான்மைதன்னை யார்அறிய வல்லரே?
விண்டவேத பொருளை அன்றி வேறுகூற வகையிலா
கண்டகோயில் தெய்வம் என்று கையெடுப்பது இல்லையே!

27. தூரம் தூரம் தூரம் என்று சொல்லுவார்கள் சோம்பர்கள்;
பாரும் விண்ணும் எங்குமாய்ப் பரந்த இப் பராபரம்
ஊருநாடு காடுதேடி உழன்றுதேடும் ஊமைகாள்!
நேரதாக உம்முளே அறிந்துணர்ந்து நில்லுமே!

28. தங்கம் ஒன்று ரூபம் வேறு தன்மையான வாறுபோல்
செங்கண்மாலும் ஈசனும் சிறந்திருந்த தம்முளே
விங்களங்கள் பேசுவீர் விளங்குகின்ற மாந்தரே
எங்குமாகி நின்ற நாமம் நாயம் இந்த நாமமே!

யோக நிலை

29. நெருப்பை மூட்டி நெய்யைவிட்டு நித்தம்நித்தம் நீரிலே
விருப்பமோடு நீர்குளிக்கும் வேதவாக்யம் கேளுமின்
நெருப்புநீரும் உம்முளே நினைந்துகூற வல்லிரேல்
சுருக்கம் அற்ற சோதியை தொடர்ந்துகூடல் ஆகுமே!

30. பாட்டிலாத பரமனைப் பரமலோக நாதனை
நாட்டிலாத நாதனை நாரிபங்கர் பாகனை
கூட்டிமெள்ள வாய்புதைத்து குணுகுணுத்த மந்திரம்
வேட்டகாரர் குசுகுசுட்பை கூப்பிடா முடிந்ததே.

தரிசனம்

31. செய்யதெங்கிலே இளநீர் சேர்ந்த காரணங்கள் போல்
ஐயன் வந்து என்னுளம் புகுந்து கோயில் கொண்டனன்
ஐயன்வந்து என்னுளம் புகுந்து கோயில் கொண்டபின்
வையகத்தில் மாந்தர் முன்னம் வாய் திறப்பது இல்லையே.

அறிவு நிலை

32. மாறுபட்ட மணி துலக்கி வண்டின் எச்சில் கொண்டுபோய்
ஊறுபட்ட கல்லின்மீதே ஊற்றுகின்ற மூடரே
மாறுபட்ட தேவரும் அறிந்து நோக்கும் என்னையும்
கூறுபட்டு தீர்க்கவோ குருக்கள்பாதம்
வைத்ததே

33. கோயிலாவது ஏதடா குளங்களாவது ஏதடா
கோயிலும் குளங்களும் கும்பிடும் குலாமரே
கோயிலும் மனத்துளே குளங்களும் மனத்துளே
ஆவதும் அழிவதும் இல்லைஇல்லை இல்லையே

34. செங்கலும் கருங்கலும் சிவந்தசாதி லிங்கமும்
செம்பிலும் தராவிலும் சிவன்இருப்பன் என்கிறீர்
உம்பதம் நிந்துநீர் உம்மைநீர் அறிந்தபின்
அம்பலம் நிறைந்த நாதர் ஆடல்பாடல் ஆகுமே!

35. பூசைபூசை என்றுநீர் பூசைசெய்யும் பேதைகாள்
பூசையுன்ன தன்னிலே பூசை கொண்டது எவ்விடம்
ஆதிபூசை கொண்டதோ அனாதிபூசை கொண்டதோ
ஏதுபூசை கொண்டதோ இன்னதென்று இயம்புமே!

36. இருக்குநாலு வேதமும் எழுத்தை அறவோதிலும்
பெருக்கநீறு பூசிலும் பிதற்றலும் பிரான் இரான்
உருக்கி நெஞ்சை உட்கலந்த உண்மை கூற
வல்லீரேல்
சுருக்கம்அற்ற சோதியைத் தொடர்ந்து கூட
லாகுமே!

37. கலத்தின் வார்த்து வைத்தநீர் கடுத்ததீ
முடுக்கினால்
கலத்திலே கரந்ததோ கடுத்ததீ குடித்ததோ
நிலத்திலே கரந்ததோ நீள்விசும்பு கொண்
டதோ
மனத்தின் மாயை நீக்கிலே மனத்துளே
கரந்ததே

38. பறைச்சியாவது ஏதடா பணத்தியாவது ஏதடா
இறைச்சிதோல் எலும்பினும் இலக்கமிட்டு
இருக்குதோ
பறைச்சிபோகம் வேறதோ பணத்திபோகம் வேறதோ
பறைச்சியும் பணத்தியும் பகுந்து பாரும் உம்முளே

30. வேட்டகாரா-வேட்டைக்காரரான், குசுகுசுப்பை-சுருக்குமுனை.

39. வாயிலே குடித்தநீரை எச்சில்என்று சொல்லுறீர்
வாயிலே குதப்புவேத மெனப்படக் கடவதோ
வாயில் எச்சில் போகஎன்று நீர்தனைக் குடிப்பீர்காள்
வாயில்எச்சில் போனவண்ணம் வந்திருந்து சொல்லுமே!

40. ஓதுகின்ற வேதம்எச்சில் உள்ளமந்திரங்கள் எச்சில்
போதகங்களானது எச்சில் பூதலங்கள் ஏழும்எச்சில்
மாதிருந்த விந்து எச்சில் மதியும் எச்சில் ஒலியும் எச்சில்
ஏதில்எச்சில் இல்லதில்லை இல்லைஇல்லை இல்லையே.

41. பிறப்பதற்கு முன்னெல்லாம் இருக்குமாற தெங்ஙனே
பிறந்து மண்ணிறந்தபோய் இருக்குமாறு தெங்ஙனே
குறித்துநீர் சொலாவிடில் குறிப்பில்லாத மாந்தரே
அறுப்பனே செவிஇரண்டும் அஞ்செழுத்து வாளினால்!

42. அம்பலத்தை அம்புகொண்டு அசங்கென்றால் அசங்குமோ
கம்பமற்ற பாற்கடல் கலங்கென்றால் கலங்குமோ
இன்பமற்ற யோகியை இருளும்வந்து அணுகுமோ
செம்பொன் அம்பலத்துளே தெளிந்ததே சிவாயமே.

43. சித்தம் ஏது சிந்தை ஏது சீவன் ஏது சித்தரே
சத்திஏது சம்புஏது சாதிபேதம் அற்றேது
முத்திஏது மூலம்ஏது மூலமந்திரங்கள் ஏது
வித்தில்லாத வித்திலே இன்னதென்று இயம்புமே

ஒடுக்க நிலை

44. சித்தமற்று சிந்தையற்று சீவனற்று
நின்றிடம்
சத்தியற்று சம்புவற்று சாதிபேத மற்றுநன்
முத்தியற்று மூலமற்று மூலமந்திரங்களும்
வித்தைஇத்தை ஈன்றவித்தில் விளைந்ததே
சிவாயமே!



கிரியை விலக்கிச் சாதி ஒன்றெனல்

45. சாதியாவது ஏதடா சலம் திரண்ட நீரலோ
பூதவாசல் ஒன்றலோ பூதம் ஐந்தும் ஒன்றலோ
காதில்வாளி காரைகம்பி பாடகம் பொன் ஒன்றலோ
சாதிபேதம் ஓதுகின்ற தன்மை என்ன தன்மையே?

அறிவு நிலை

46. கறந்தபால் முலைப்புகா கடைந்த வெண்ணெய் மோர்புகா
உடைந்துபோன சங்கின் ஓசை உயிர்களும் உடற்புகா
விரிந்தபூ உதிர்ந்தகாயும் மீண்டுபோய் மரம்புகா
இறந்தவர் பிறப்பதில்லை இல்லைஇல்லை இல்லையே.

47. அறையினில் கிடந்தபோது அன்று தூமை என்கிறீர்
துறை அறிந்து நீர்குளித்த அன்று தூமை என்கிறீர்
பறையறைந்து நீர்பிறந்த அன்று தூமை என்கிறீர்
புறையிலாத ஈசரோடு பொருந்துமாறது எங்ஙனே?

48. தூமைதூமை என்றுளே துவண்டு அலையும் ஏழைகாள்
தூமையான பெண்ணிருக்க தூமைபோனது எவ்விடம்
ஆமைபோல மூழ்கிவந்து அநேக வேதம் ஓதநீர்
தூமையும் திரண்டுருண்டு சொற்குருக்கள் ஆனதே.

49. சொற்குருக்கள் ஆனதும் சோதிமேனி ஆவதும்
மெய்க்குருக்கள் ஆனதும் வேணபூசை செய்வதும்
சற்குருக்கள் ஆனதும் சாத்திரங்கள் சொல்வதும்
செய்க்குருக்கள் ஆனதும் திரண்டுருண்ட தூமையே.

50. கைவடங்கள் கொண்டுநீர் கண்சிமிட்டி நிற்கிறீர்
எவ்விடங்கள் கண்டுநீர் எண்ணிஎண்ணிப் பார்க்கிறீர்
பொய்இறந்த சிந்தையைப் பொருந்தி நோக்க வல்லிரேல்
மெய்கடந்தது உம்முளே விரைந்துகூடல் ஆகுமே.

51. ஆடுகாட்டி வேங்கையை அகட்படுத்து மாறுபோல்
மாடுகாட்டி என்னைநீ மதிமயக்கல் ஆகுமோ
கோடுகாட்டி யானையைக் கொன்றுரித்த கொற்றவா
வீடுகாட்டி என்னைநீ வெளிப்படுத்த வேணுமே

52. இடதுகண்கள் சந்திரன் வலதுகண்கள் சூரியன்
இடக்கைசங்கு சக்கரம் வலக்கைசூல மான்மழு
எடுத்தபாத நீள்முடி எண்திசைக்கும் அப்புறம்
உடல்கலந்து நின்றமயம் யாவர்காண வல்லரோ.



53. நாழிஉப்பு நாழிஉப்பு நாழியான வாறுபோல்
ஆழியோனும் ஈசனும் அமர்ந்து
வாழ்ந்திருந்திடம்
எருதில்ஏறும் ஈசனும் இயங்குசக்ர தரனையும்
வேறுவேறு பேசுவார் வீழ்வர்வீண் நரகிலே.

54. நில்லைநாயகன் அவன் திருவரங்கனும் அவன்
எல்லையான புவனமும் ஏகமுத்தியும் அவன்
பல்லுநாவும் உள்ளபேர் பகுந்துகூறி
மகிழுவார்
வல்லபங்கள் பேசுவார் வாய்புழுத்து
மாய்வரே.

55. எத்திசைக்கும் எவ்வுயிர்க்கும் எங்கள் அப்பன்
எம்பிரான்
சத்தியான வித்துளே முளைத்தெழும் தவச்சுடர்
சித்தமும் தெளிந்துவேத கோயிலும்
திறந்தபின்
அத்தன் ஆடல் கண்டபின் அடங்கல் ஆடல்
காணுமே.

56. உற்றநுல்கள் உம்முளே உணர்ந்துணர்ந்து பாடுவீர்
பற்றறுத்து நின்றுநீர் பராபரங்கள் எய்திலீர்
செற்றமாவை யுள்ளரைச் செருக்கறுத்து இருத்திடில்
சுற்றமாக உம்முளே சோதிஎன்றும் வாழுமே.

57. போததாய் எழுந்ததும் புனலதாகி வந்ததும்
தாததாய்ப் புகுந்ததும் தணலதாய் விளைந்ததும்
ஓதடா அஞ்சுமூன்றும் ஒன்றதான அக்கரம்
ஓதடாநீ இராமராம ராமவென்னும் நாமமே.

---

48; தூமை—தூய்மையற்றது

58. அகாரம் என்ற அக்கரத்துள் அவ்வுவந்து உதித்ததோ
உகாரம்என்ற அக்கரத்தில் உவ்வுவந்து உதித்ததோ
அகாரமும் உகாரமும் சிகாரமன்றி நின்றதோ
விகாரமற்ற யோககாள் விரித்துரைக்க வேணுமே.

59. அறத்திறங்க ளுக்கும்நீ அகண்டம்எண் திசைக்கும்நீ
திறத்திறங்க ளுக்குநீ தேடுவார்கள் சிந்தைநீ
உறக்கம்நீ உணர்வுநீ உட்கலந்த சோதிநீ
மறக்கொணாத நின்கழல் மறப்பினும் குடிகொளே.

60. அண்டம்நீ அகண்டம்நீ ஆதிமூல மானனேன்நீ,
கண்டம்நீ கருத்தும்நீ காவியங்கள் ஆனனேன்நீ
புண்டரீக மற்றுளே புணருகின்ற புண்ணியர்
கொண்டகோல மானநேர்மை கூர்மை என்ன கூர்மையே.

61. மைஅடர்ந்த கண்ணினார் மயக்கிடும் மயக்கிலே
ஐஇறந்து கொண்டுநீங்கள் அல்லல்உற்று இருப்பீர்காள்
மெய்அறிந்த சிந்தையாய் விளங்குஞான மெய்தினால்
உய்யறிந்து கொண்டுநீங்கள் ஊழிகாலம் வாழ்விரே.

62. கரு இருந்த வாசலால் கலங்குகின்ற ஊமைகாள்
குரு இருந்து சொன்ன வார்த்தை குறித்துநோக்க வல்லிரேல்
உரு இலங்கு மேனியாகி உம்பராகி நின்றநீர்
திரு இலங்கு மேனியாகச் சென்றுகூடல் ஆகுமே.

63. தீர்த்தம் ஆடவேண்டுமென்று தேடுகின்ற தீனர்காள்
தீர்த்தம்ஆடல் எவ்விடம் தெளிந்துநீர் இயம்பிலீர்
தீர்த்தமாக உம்முளே தெளிந்துநீர் இருந்தபின்
தீர்த்தமாக உள்ளதும் சிவாயஅஞ் செழுத்துமே.

64. கழுத்தையும் நிமிர்த்திநல்ல கண்ணையும் விழித்துநீர்
பழுத்துவாய் விழுந்துபோன பாவம் என்ன பாவமே
அழுத்தமான வித்திலே அனாதியாய் இருப்பதோர்
எழுத்திலா எழுத்திலே இருக்கலாம் இருத்துமே.



65. கண்டுநின்ற மாயையும் கலந்துநின்ற பூதமும்
உண்டுறங்கு மாறுநீர் உணர்ந்திருக்க வல்லிரேல்
பண்டைஆறும் ஒன்றுமாய்ப் பயந்த வேதசுத்தராய்
அண்டமுத்தி ஆகிநின்ற ஆதிமூலம் ஆவிரே.

அறிவு நிலை

66. ஈன்றவாசலுக்கு இரங்கி எண்ணிறந்து போவீர்காள்
கான்றவாழை மொட்டலர்ந்த காரணம் அறிகிலீர்
நான்றவாசலைத் திறந்து நாடிநோக்க வல்லிரேல்
தோன்றுமாயை விட்டொழிந்து சோதி வந்து தோன்றுமே.

67. உழலும்வாச லுக்குஇரங்கி ஊசலாடும் ஊமைகாள்
உழலும்வாச லைத்துறந்து உண்மைசேர எண்ணிலீர்
உழலும்வாச லைத்துறந்து உண்மைநீர் உணர்ந்தபின்
உழலும்வாசல் உள்ளிருந்த உண்மைதானும் ஆவிரே.

68. மூலநாடி தன்னிலே முளைத்தெழுந்த சோதியை
நாலுநாழி உம்முளே நாடியே இருந்தபின்

பாலனாகி வாழலாம் பரப்பிரமம் ஆகலாம்
ஆலம்உண்ட கண்டர்ஆணை அம்மைஆணை உண்மையே.

69. இருக்கவேண்டும் என்றபோது இருத்தலாய் இருக்குமோ
மரிக்கவேண்டும் என்றலோ மண்ணுளே படைத்தனர்
சுருக்கமற்ற தம்பிரான் சொன்ன அஞ்செழுத்தையும்
மரிக்குமுன் வணங்கிடீர் மருந்தெனப் பதம்கெடீர்,

70. அம்பத்தொன்றில் அக்கரம் அடக்கம்ஓர் எழுத்துளோ
விண்பரந்த மந்திரம் வேதம்நான்கும் ஒன்றலோ
விண்பரந்த மூலஅஞ் செழுத்துளே முளைத்ததே
அங்கலிங்க பீடமாய் அமர்ந்ததே சிவாயமே.

71. சிவாயம் என்ற அக்ஷரம் சிவன் இருக்கும் அக்ஷரம்
உபாயம் என்று நம்புதற்கு உண்மையான அக்ஷரம்
கபாடம்உற்ற வாசலைக் கடந்துபோன வாயுவை
உபாயம்இட்டு அழைக்குமே சிவாய அஞ் செழுத்துமே.

72. உருவும்அல்ல வெளியும் அல்ல ஒன்றைமேவி நின்றதல்ல
மருவும்அல்ல காதம் அல்ல மற்றதல்ல அற்றதல்ல
பெரியதல்ல சிறியதல்ல பேசும் ஆவி தானும்அல்ல
அரியதாகி நின்ற நேர்மை யாவர்காண வல்லரே.

73. அத்தமா அனாதியோ ஆத்துமா அனாதியோ?
மீத்திருந்த ஐம்பொறி புலன்களும் அனாதியோ?
தர்க்கமிக்க நூல்களும் சதாசிவமும் அனாதியோ?
வீக்கவந்த யோகிகாள் விரைந்து உரைக்க வேணுமே!

74. அறிவிலே பிறந்திருந்த ஆகமங்கள் ஓதுநீர்
நெறியிலே மயங்குகின்ற நேர்மை ஒன்று அறிகிலீர்
உறியிலே தயிர் இருக்க ஊர்புகுந்து வெண்ணெய்தேடும்
அறிவிலாத மாந்தரோடு அணுகுமாறது எங்ஙனே.

## அன்பு நிலை

75. இருவர் அரங்க மும்பொருந்தி என் புருகி நோக்கிலீர்
உருவரங்கம் ஆகிநின்ற உண்மை ஒன்றை ஓர்கிலீர்
கருஅரங்கம் ஆகிநின்ற கற்பனை கடந்துபின்
திருஅரங்கம் என்றுநீர் தெளிந்திருக்க வல்லிரே.

## தன்னைத் தான் அறியவேண்டும் எனல்

76. கருக்குழியில் ஆசையாய்க் காதலுற்று நிற்கிறீர்
குருக்கிடுக்கும் ஏழைகாள் குலாவுகின்ற பாவிகாள்
திருத்தருத்தி மெய்யினால் சிவந்தஅஞ் செழுத்தையும்
உருக்கழிக்கும் உம்மையும் உணர்ந்துணர்ந்து கொள்ளுமே.

## சமயவாதிகள் செய்கையை மறுத்தல்

77. மண்ணிலே பிறக்கவும் வழக்கலாது உரைக்கவும்
எண்ணிலாத கோடிதேவர் என்னது உன்னது என்னவும்
கண்ணிலே மணிஇருக்கக் கண்மைறந்த வாறுபோல்
எண்ணில்கோடி தேவரும் இதின்கணார் இயம்பதே.

அறிவு நிலை

78. மண்கலம் கவிழ்ந்தபோது வைத்துவைத்து அடுக்குவார்
வெங்கலம் கவிழ்ந்தபோது வேணும்என்று பேணுவார்
நம்கலம் கவிழ்ந்தபோது நாறும்என்று போடுவார்
எண்கலந்து நின்றமாயம் என்னமாயம் ஈசனே.

79. மிக்கசெல்வம் நீர்படைத்த விறகுமேவிப் பாவிகாள்
விறகுடன் கொளுத்திமேனி வெந்துபோவது அறிகிலீர்
மக்கள் பெண்டிர் சுற்றம்என்று மாயைகாணும் இவையெலாம்
மறலிவந்து அழைத்தபோது வந்துகூட லாகுமோ
ஒக்கவந்து மாதுடன் செறிந்திடத்தில் அழகியே
ஒருவராகி இருவராகி இளமைபெற்ற ஊரிலே
அக்கணிந்து கொன்றைசூடி அம்பலத்தில்
ஆடுவார்
அஞ்செழுத்தை ஓதிடில் அனேக பாவம்
அகலுமே



80. மாடு கன்று செல்வமும் மனைவி மைந்தர் மகிழவே
மாடமாளி கைப்புறத்தில் வாழுகின்ற
நாளிலே
ஓடிவந்து காலதூதர் சடுதியாகவே மோதவே
உடல்கிடந்து உயிர்கழன்ற உண்மை கண்டும் உணர்கிலீர்
பாடுகின்ற உம்பருக்கு ஆடுபாதம் உன்னியே
பழுதிலாத கர்ம கூட்டம் இட்டஎங்கள் பரமனே
நீடுசெம்பொன் அம்பலத்துள் ஆடுகொண்ட அப்பனே
நீலகண்ட காளகண்ட நித்தியகல்லி யாணனே.

81. கானமற்ற காட்டகத்தில் வெந்தெழுந்த நீறுபோல்
ஞானம்உற்ற நெஞ்சகத்தில் வல்லபேதம் இல்லையே
ஊனமற்ற சோதியோடு உணர்வுசேர்ந்து அடக்கினால்
தேன் அகத்தின் ஊறல்போல் தெளிந்ததே சிவாயமே.

82. பருகி ஓடி உம்முளே பறந்துவந்த வெளிதனை
நிரவியே நினைந்து பார்க்கில்நின்மலம் அதாகுமே
உருகிஓடி எங்குமாய் ஓடும்சோதி தன்னுளே
கருதுவீர் உமக்குநல்ல காரணம் அதாகுமே.

83. சோதிபாதி ஆகி நின்று சுத்தமும் பலித்துவந்து
போதியாத போதகத்தை ஓதுகின்ற பூரணா
வீதியாக ஓடிவந்து விண்ணடியில் ஊடுபோய்
ஆதிநாதன் நாதன்என்று அனந்தகாலம் உள்ளதே.

84 இறைவனால் எடுத்தமாடத் தில்லையம் பலத்திலே
அறிவினால் அடுத்த காயம் அஞ்சினால் அமைந்ததே
கருவு நாதம் உண்டுபோய் கழன்றவாசல் ஒன்பதும்
ஒருவராய் ஒருவர்கோடி உள்ளுளே அமர்ந்ததே.

85. நெஞ்சிலே இருந்திருந்து நெருங்கி ஓடும் வாயுவை
அன்பினால் இருந்துநீர் அருகிருத்த வல்லிரேல்

---

79. விறகு-கர்வம்.

அன்பர்கோயில் காணலாம் அகலும் என் திசைக்குளே
துப்பிஒடி ஓடியே சொல்லடா சுவாமியே!

86. தில்லையை வணங்கி நின்ற தெண்டனிட்ட வாயுவே
எல்லையைக் கடந்து நின்ற ஏகபோக மாய்கையே
எல்லையைக் கடந்துநின்ற சொர்க்கலோக வெளியிலே
வெள்ளையும் சிவப்புமாகி மெய் கலந்து நின்றதே!

87. உடம்புஉயிர் எடுத்ததோ உயிர் உடப்பு எடுத்ததோ
உடம்புஉயிர் எடுத்தபோது உருவம்ஏது செப்புவீர்
உடம்புஉயிர் எடுத்தபோது உயிர் இறப்பது இல்லையே
உடம்புமெய் மறந்து கண்டு உணர்ந்து ஞானம் ஓதுமே!

88. அவ்வெனும் எழுத்தினுல் அகண்டம் ஏழும் ஆகினுய்
உவ்வெனும் எழுத்தினுல் உருத்தரித்து நின்றனே
மவ்வெனும் எழுத்தினுல் மயங்கினுர்கள் வையகம்
அவ்வும் உவ்வும் மவ்வுமாய் அமர்ந்ததே சிவாயமே!

89. மந்திரங்கள் உண்டுநீர் மயங்குகின்ற மானிடர்
மந்திரங்கள் ஆவது மறத்தில் ஊறல் அன்றுகாண்
மந்திரங்கள் ஆவது மதத்தெழுந்த வாயுவை
மந்திரத்தை உண்டவர்க்கு மானம்ஏதும் இல்லையே!

90. என்னஎன்று சொல்லுவேன் இலக்கணம் இலாததை
பன்னுகின்ற செந்தமிழ்ப் பதம்கடந்த பண்பென
மின்னகத்தில் மின்ஒடுங்கி மின்னதான வாறுபோல்
என்னகத்துள் ஈசனும் யானும் அல்லது இல்லையே!

91. ஆலவித்தில் ஆல்ஒடுங்கி ஆலமான வாறுபோல்
வேறுவித்தும் இன்றியே விளைந்துபோகம் எய்திடீர்
ஆறுவித்தை ஓர்கிலீர் அறிவிலாத மாந்தரே
பாரும் இத்தை உம்முளே பரப்பிரமம் ஆவீரே!

92. அவ்வுதித்த மந்திரம் அகாரமாய் உகாரமாய்
எவ்வெழுத்து அறிந்தவர்க்கு எழுபிறப்பது இங்கில்லை
சவ்வுதித்த மந்திரத்தைத் தற்பரத்து இருத்தினுல்
அவ்வும் உவ்வும் மவ்வுமாய் அமர்ந்ததே சிவாயமே!

93. நவ்விரண்டு காலதாய் நவின்றமவ் வயிறதாய்
சிவ்விரண்டு தோளதாய் சிறந்தவவ்வு வாயதாய்
யவ்விரண்டு கண்ணதாய் அமர்ந்துநின்ற நேர்மையில்
செவ்வைஒத்து நின்றதே சிவாயம் அஞ்செழுத்துமே!

94. இரண்டுமொன்று மூலமாய் இயங்குசக்கரத்துளே
சுருண்டுமூன்று வளையமாய் சுணங்குபோல் கிடந்ததி
முரண்டெழுந்த சங்கின் ஓசை மூலநாடி ஊடுபோய்
அரங்கன் பட்டணத்திலே அமர்ந்ததே சிவாயமே!

95. கடலிலே திரியும் ஆமை கரையிலே ஏறி முட்டையிட்டுக்
கடலிலே திரிந்தபோது ரூபமான வாறுபோல்
மடலுளே இருக்கும் எங்கள் மணியரங்க சோதியை
உடலுளே நினைத்துநல்ல உண்மையானது உண்மையே!

---

93. தற்பரம்—சுழிமுனை ஸ்தானம்;

96. மூன்று மண்டலத்தினும் முட்டிநின்ற தூணிலும்
நான்ற பாம்பின் வாயிலும் நவின்றெழுந்த அட்சரம்
ஈன்றதாயும் அப்பனும் எடுத்துரைத்த மந்திரம்
தோன்றும்ஓர் எழுத்துளே சொல்ல எங்கும் இல்லையே!

97. மூன்றுமூன்று மூன்றுமே மூவர்தேவர் தேடிடும்
மூன்றும் அஞ்செழுத்துமாய் முழங்கும் அவ் வெழுத்துளே
ஈன்றதாயும் அப்பனும் இயங்குகின்ற நாதமும்
தோன்றும் மண்டலத்திலே சொல்லஎங்கும் இல்லையே!

98. சோருகின்ற பூதம்போல் சுணங்குபோல் கிடந்தநீர்
நாறுகின்ற கும்பியில் நயந்தெழுந்த மூடரே
சீறுகின்ற ஐவரைச் சிணுக்கறுக்க வல்லிரேல்
ஆறுகோடி வேணியார் ஆறில் ஒன்றில் ஆவிரே!

99. வட்டமென்று உம்முளே மயக்கிவிட்ட
திவ்வெளி
அட்டரக் கரத்துளே அடக்கமும் ஒடுக்கமும்
எட்டும் எட்டும் எட்டுமாய் இயங்கு சக்
கரத்துளே
எட்டலாம் உதித்தது எம்பிரானை நாம்
அறிந்தபின்



100. பேசுவானும் ஈசனே பிரம ஞானம்உம்முளே
ஆசையான ஐவரும் அலைத்தலைகள்
செய்கிறார்
ஆசையான ஐவரை அடக்கி ஓர் எழுத்திலே
பேசிடாது இருப்பிரேல் நாதன் வந்து
பேசுமே!

1. நமசிவாய அஞ்செழுத்தும் நல்குமேல் நிலைகளும்
நமசிவாய அஞ்சில் அஞ்சும் புராணமான மாயையும்
நமசிவாய அஞ்செழுத்து நம்முளே இருக்கவே
நமசிவாய உண்மையை நன்கு உரைசெய் நாதனே!

2. பரம் உனக்கு எனக்கு வேறு பயம் இலை பராபரா
கரம் எடுத்து நித்தலும் குவித்திடக் கடவதும்
சிரம் உருகி ஆர்த்தலும் சிவபிரானே என்னலும்
உரம் எனக்கு நீ அளித்த ஓம் நமசிவாயவே!

3. பச்சைமண் பதுப்பிலே புழுப்பதிந்த வேட்டுவன்
நிச்சலும் நினைந்திட நினைந்தவண்ணம் ஆயிடும்
பச்சை மண் இடிந்துபோய் பறந்ததும்பி ஆயிடும்
பித்தர்காள் அறிந்துகொள் பிரான் இயற்று கோலமே!

4. ஒளியதான காசிமீது வந்துதங்கு வோர்க்கெலாம்
வெளியதான சோதிமேனி விஸ்வநாதனானவன்
தெளியு மங்கை உடன்இருந்து செப்புகின்ற தாரகம்
எளியதோர் இராமராம ராமவிந்த நாமமே!

5. விழியினோடு புனல் விளைந்த வில்லவல்லி யோனியும்
வெளியிலே பிதற்றலாம் விளைவு நின்றது இல்லையே

வெளிபரந்த தேசமும் வெளிக்குள் மூல வித்தையும்
தெளியும் வல்ல ஞானிகள் தெளிந்திருத்தல் திண்ணமே!

6. ஓம் நமசிவாயமே உணர்ந்துமெய் உணர்ந்தபின்
ஓம் நமசிவாயமே உணர்ந்து மெய் தெளிந்தபின்
ஓம்நமசி வாயமே உணர்ந்து மெய் உணர்ந்தபின்
ஓம்நமசிவாயமே உட்கலந்து நிற்குமே!

7. அல்லல் வாசல் ஒன்பதும் அடைத்தடைந்த வாசலும்
சொல்லும் வாசல் ஓர் ஐந்தும் சொம்பி விம்மிநின்றது
நல்லவாசலைத் திறந்து ஞானவாசல் ஊடுபோய்
எல்லை வாசல் கண்டவர் இனிப் பிறப்பது இல்லையே!

8. ஆதியானது ஒன்றுமே அநேக அநேக ரூபமாய்
சாதிபேதமாய் எழுந்து சர்வஜீவன் ஆனது
ஆதியோடு இருந்து மீண்டு எழுந்து ஜென்மம் ஆனபின்
சோதியான ஞானியாகிச் சுத்தமாய் இருப்பனே!

9. மலர்ந்ததாது மூலமாய் வையகம் மலர்ந்ததும்
மலர்ந்தபூ மயக்கம் வந்து அடுக்கடும் விடுத்ததும்
புலன்கள் ஐந்தும் பொறிகலங்கி பூமிமேல் விழுந்ததும்
இலங்கலங்கி நின்ற மாயம் என்ன மாயம் ஈசனே!

110. பாரடங்க உள்ளதும் பரந்தவானம் உள்ளதும்
ஓரிடமும் இன்றியே ஒன்றிநின்ற ஒண்சுடர்
ஆரிடமும் இன்றியே அகத்துளும் புறத்துளும்
சீரிடங்கள் கண்டவன் சிவன் தெரிந்த ஞானியே!

## தலயாத்திரை நீக்கல்

1. மண்கிடார மேசுமந்து மலையுள் ஏறி மறுகுறீர்
எண்படாத காரியங்கள் இயலும் என்று கூறுகிறீர்
தம்பிரானை நாள்தோறும் தரையிலே தலைபடக்
கும்பிடாத மாந்தரோடு கூடிவாழ்வது எங்ஙனே!

## ஞான நிலை

2. நாவினால் அழிந்ததும் நலம்குலம் அழிந்ததும்
மேவுதேர் அழிந்ததும் வாரமும் குறைந்ததும்
பாவிகாள் இதென்ன மாயம் வாமநாடு பூசலார்
ஆவியார் அடங்குநாளில் ஐவரும் அடங்குவார்!

3. இல்லை இல்லை என்று நீர் இயம்புகின்ற ஏழைகாள்
இல்லை என்று நின்றதொன்றை இல்லை என்னலாகுமோ
இல்லை அல்ல ஒன்றுமல்ல இரண்டும் ஒன்றி நின்றதை
எல்லைகண்டு கொண்டபேர் இனிப்பிறப்பது இல்லையே!

4. காரகார காரகார காவல் ஊழி காவலன்
போரபோர போரபோர போரில் நின்ற புண்ணியன்
மாரமார மாரமார மரங்கள் ஏழும் எய்தஸ்ரீ
ராமராம ராமராம ராம என்னும் நாமமே!

7 எள்ளகத்தில் எண்ணெய்போல எங்குமாகி எம்பிரான்
உள்ளகத்தி லேயிருக்க ஊசலாடும் மூடர்காள்
கொள்ளை நாயின் வாலினைக் குணக்கெடுக்க வல்லிரேல்
வள்ளலாகி நின்றசோதி காணலாகும் மெய்ம்மையே.

8 வேணுமென்ற ஞானமும் விரும்புகின்ற நூலிலே
தாணுஉண்டு அங்குஎன்கிறீர் தரிக்கிலீர் மறக்கிலீர்
தாணுவொன்று மூலநாடி தன்னுள்நாடி உம்முளே
காணுமன்றி வேறியாவும் கனாமயக்கம் ஒக்குமே,

9 வழக்கிலே உரைக்கிறீர் மனத்துளே தவிக்கிறீர்
உழக்கிலாது நாழியான வாறுபோலும் ஊமைகாள்
உழக்குநாலு நாழியான வாறுபோலும் உம்முளே
வழக்கிலே உரைக்கிறீர் மனத்துள் ஈசன் மன்னுமே,

400 ஆடுகின்ற எம்பிரானை அங்கும்இங்கும் நின்றுநீர்
தேடுகின்ற வீணர்காள் தெளிவதொன்றை ஓர்கிலீர்
நடுநாடி உம்முளே நவின்றுநோக்க வல்லிரேல்
கூடொணாத தற்பரம் குவிந்துகூடல் ஆகுமே,

1 சுற்றிஐந்து கூடம்ஒன்று சொல்லிறந்த தோர்வெளி
சத்தியும் சிவமுமாகி நின்றதன்மை ஓர்கிலீர்
சத்தியாவது உம்முடல் தயங்குசீவன் உட்சிவம்
பித்தர்காள் அறிந்துகொள் பிரான்இருந்த கோலமே..

2 அகாரமானது அம்பலம் அனாதியானது அம்பலம்
உகாரமானது அம்பலம் உண்மையானது அம்பலம்
மகாரமானது அம்பலம் வடிவமானது அம்பலம்
சிகாரமானது அம்பலம் தெளிந்ததே சிவாயமே,

3 சக்கரம் பறந்ததோடி சக்கரமேல் பலகையாய்
செக்கிலாமல் எண்ணெய்போல சிங்குவாயு தேயுவு
முக்கிலே ஒளிகலந்து உகங்களும் கலக்கமாய்
புக்கிலே புகுந்தபோது போனவாறது எங்ஙனே.

4 வளர்ந்தெழுந்த கொங்கைதன்னை மாயமென்று எண்ணிநீர்
அருள்கொள்சீவ ராருடம்பு உடைமையாகத் தோர்வீர்காள்
விளங்குஞானம் மேவியே மிக்கோர் சொல்லைக் கேட்பிரேல்
களங்கமற்று நெஞ்சுளே கருத்துவந்து புக்குமே.

5 நாலுவேதம் ஓதுகின்ற ஞானம்ஒன்று அறிவீரோ
நாலுசாமம் ஆகியே நவின்றஞான போதமாய்
ஆலம்உண்ட கண்டனும் அயனும் அந்த மாலுமாய்ச்
சாலஉன்னி நெஞ்சுளே தரித்ததே சிவாயமே

6 சுற்றம்என்று சொல்வதும் சுருதிமுடிவில் வைத்திடீர்
அத்தன் நித்தம் ஆடியே அமர்ந்திருந்தது எவ்விடம்
பத்திமுற்றி அன்பர்கள் பரத்தில் ஒன்றுபாழது
பத்தரே இதைக்கருதி பேசலாவது எங்ஙனே.

7 எங்ஙனே விளக்கதுக்குள் ஏற்றவாறு நின்றுதான்
எங்ஙனே எழுந்தருளி ஈசன்நேசர் என்பரேல்
அங்ஙனே இருந்தருளும் ஆதியான தற்பரம்
சிங்கம் அண்மி யானைபோலத் திரிமலங்கள் அற்றவே.

8 அற்றவுள் அகத்தையும் அலகிடும் மெழுக்கிடும்
மெத்ததீபம் இட்டதில்பிற வாதபூசை ஏத்தியே
நற்றவம் புரிந்துஏக நாதர் பாதம் நாடியே
கற்றிருப்ப தேசரிதை கண்டுகொள்ளும் உம்முளே.

9 பார்த்துநின்றது அம்பலம் பரமன் ஆடும் அம்பலம்
கூத்துநின்றது அம்பலம் கோரமானது அம்பலம்
வார்த்தையானது அம்பலம் வன்னியானது அம்பலம்
சீற்றமானது அம்பலம் தெளிந்ததே சிவாயமே.

410 சென்றுசென்று இடந்தொறும் சிறந்தசெம்பொன் அம்பலம்
அன்றும் இன்றும் நின்றதோர் அனாதியான அம்பலம்
என்றும்என்றும் இருப்பதோர் உறுதியான அம்பலம்
ஒன்றிஒன்றி நின்றதுள் ஒழிந்ததே சிவாயமே.

1 தந்தைதாய் தமரும்நீ சகலதேவதையும்நீ
சிந்தைநீ தெளிவுநீ சித்திமுத்தி தானும்நீ
விந்துநீ விளைவுநீ மேலதாய வேதம்நீ
எந்தைநீ இறைவன்நீ என்னைஆண்ட ஈசனே.

2 எப்பிறப்பி லும்பிறந்து இறந்து அழிந்த ஏழைகாள்
இப்பிறப் பிலும்பிறந்து என்னநீறு பூசுநீர்
அப்புடன் மலம்அறுத்து ஆசைநீக்க வல்லிரேல்
செப்புநாத ஓசையில் தெளிந்துகாணல் ஆகுமே.

3 எட்டு யோகம் ஆனதும் இயங்குகின்ற நாதமும்
எட்டுஅக்கரத்துளே உகாரமும் மகாரமும்
விட்டலர்ந்த மந்திரம் வீணதண்டின் ஊடுபோய்
அட்டஅக்ஷரத்துளே அமர்ந்ததே சிவாயமே.

4 பிரான்பிரான் என்றுநீர் பினத்துகின்ற மூடரே
பிரானைவிட்டு எம்பிரான் பிரிந்தவாறது எங்ஙனே
பிரானுமாய் பிரானுமாய் பேருலகு தானுமாய்
பிரானிலே முளைத்தெழுந்த பித்தர்காணும் உம்முடல்.

5 ஆதியில்லை அந்தமில்லை ஆனநாலு வேதமில்லை
சோதியில்லை சொல்லுமில்லை சொல்லிறந்த தூவெளி
நீதியில்லை நேசமில்லை நிச்சயப் படாததும்
ஆதிகண்டு கொண்டபின் அஞ்செழுத்தும் இல்லையே.

416 அம்மையப்பன் அப்பநீர் அமர்ந்தபோது அறிகிலீர்
அம்மையப்பன் ஆனநீர் ஆதியான பாசமே

---

410. ஒன்றி-நெருங்கி; 411. தமர்-சுற்றத்தினர்; எந்தை-என் தந்தை;
412. அப்பு-நீர்; 415. அந்தம்-முடிவு.

அம்மையப்பன் நின்னை அன்றி யாருமில்லை ஆனபின்
அம்மையப்பன் நின்னை அன்றி யாருமில்லை இல்லையே.

7 நூறுகோடி மந்திரம் நூறு கோடி ஆகமம்
நூறுகோடி நாளிருந்து ஊடாடினாலும் என் பயன்
ஆறும்ஆறும் ஆறுமாய் அகத்திலோர் எழுத்ததாய்
சீரைஓத வல்லிரேல் சிவபதங்கள் சேரலாம்.

8 முந்தஓர் எழுத்துளே முளைத்தெழுந்த செஞ்சுடர்
அந்தஓர் எழுத்துளே பிறந்துகாயம் ஆனதும்
அந்தஓர் எழுத்துளே ஏகமாகி நின்றதும்
அந்தஓர் எழுத்தையும் அறிந்துணர்ந்து கொள்ளுமே.

9 கூட்டம் இட்டு நீங்களும் கூடிவேதம் ஓதுநீர்
ஏட்டகத்துள் ஈசனும் இருப்பதென் எழுத்துளே
நாட்டம்இட்டு நாடிடும் நாலுமூன்று தன்னுளே
ஆட்டகத்துள் ஆடிடும் அம்மை ஆணை உண்மையே.

420 காக்கை மூக்கை ஆமையர் எடுத்துரைத்த காரணம்
நாக்கை ஊன்றி உள்வளைத்து ஞானநாடி ஊடுபோய்
ஏக்கைநோக்க அட்சரம் இரண்டெழுத்தும் ஏத்திடில்
பார்த்தபார்த்த திக்கெல்லாம் பரப்பிரமம் ஆனதே.

1 ஓசைஉள்ள கல்லைநீர் உடைத்து இரண்டாய் செய்துமே
வாசலில் பதித்த கல்லை மழுங்கவே மிதிக்கிறீர்
பூசனைக்கு வைத்த கல்லில் பூவும்நீரும் சாத்துறீர்
ஈசனுக்கு உகந்தகல் எந்தக்கல்லு சொல்லுமே.?

2 ஓட்டுவைத்து கட்டிநீர் உபாயமான மந்திரம்
கட்டுபட்டபோதிலும் கர்த்தன் அங்கு வாழுமோ
எட்டும்எட்டும் எட்டுளே இயங்கின்ற வாயுவை
வட்டம்இட்ட யவ்விலே வைத்துணர்ந்து பாருமே.

3 இந்த ஊரில் இல்லை என்று எங்குநாடி ஓடுறீர்?
அந்தஊரில் ஈசனும் அமர்ந்து வாழ்வது எங்ஙனே
அந்தமான பொந்திலாரில் மேவி நின்ற நாதனை
அந்தமான சீயில் அவ்வில் அறிந்துணர்ந்து கொள்ளுமே.

4 புக்கிருந்த தும்முளே பூரியிட்ட தோத்திரம்
தொக்குசட்சு சிங்குவை ஆக்கிராணன் சூழ்ந்திடில்
அக்குமணி கொன்றைசூடி அம்பலத்துள் ஆடுவார்
மிக்கசோதி அன்புடன் விளம்பிடாது பின்னையே.

5 பின்னெழுந்த மாங்கிசத்தை பேதையர் கண்பற்றியே
பின்புமாங் கிஷத்தினால் போகமாய்கை பண்ணினால்
துன்புறும் வினைகள்தான் சூழ்ந்திடும்பின் என்றலோ
அன்பராய் இருந்தபேர்கள் ஆறுநீந்தல் போல்விடே.

---

419. ஆட்டகம் - ஆனந்தத் தாண்டவம் ஆடுகின்ற இடம். 420. ஏக்கை -ஏக்கம்; 424, விளம்பிடாது-சொல்லாது;

6 விட்டிருந்த தம்முளே விதனமற்று இருக்கிறீர்
கட்டிவைத்த வாசல் மூன்று காட்சியான வாசல் ஒன்று
கட்டிவைத்த வாசலும் கதவு தாள் திறந்துபோய்த்
திட்டமான ஈசனைத் தெளியுமாங் கிஷத்துளே

7 ஆகும்ஆகும் ஆகுமே அனாதியான அப்பொருள்
ஏகர்பாதம் நாடிநாடி ஏத்திநிற்க வல்லிரேல்
பாகுசேர் மொழி உமைக்குப் பாலனாகி வாழலாம்
வாகுடனே வன்னியை மருவியே வருந்திடீர்.

8 உண்மையான தொன்றதொன்றை உற்றுநோக்கி உம்முளே
வண்மையான வாசியுண்டு வாழ்த்திஏத்த வல்லிரேல்
தண்மைபெற்று இருக்கலாம் தவமும் வந்து நேரிடும்
கன்மதன்மம் ஆகும் ஈசர் காட்சிதானுங் காணுமே.

9. பாலகனாக வேணும் என்று பத்திமுற்றும் என்பரே
நாலுபாதம் உண்டதில் நனைந்திரண்டு அடுத்ததால்
மூலநாடி தன்னில் வன்னி மூட்டி அந்த நீருண
ஏலவார் குழலியோடே ஈசர்பாதம் எய்துமே.

430. எய்துநின்னை அன்பினால் இறைஞ்சி ஏத்த வல்லிரேல்
எய்தும் உண்மை தன்னிலே இறப்பிறப்பு அகற்றிடும்
மைஇலங்கு கண்ணிபங்கன் வாசிவானில் ஏறிமுன்
செய்தவல் வினைகளும் சிதறும்அது திண்ணமே.

1. திண்ணம் என்று சேதி சொன்ன செவ்வியோர்கள் கேண்மினோ
அண்ணல் அன்பு என்புருகிஅறிந்து நோக்கலாயிடும்
மண்ணதிர விண்ணதிர வாசியை நடத்திடில்
நண்ணி எங்கள் ஈசனும் நமதுடலில் இருப்பனே.

2. இருப்பன் எட்டெட் டெண்ணிலே இருந்துவேறது ஆகுவன்
நெருப்புவாயு நீருமண்ணும் நீள்விசும்பும் ஆகுவான்
கருப்புகுந்து காலமே கலந்தசோதி நாதனைக்
குருப்புனலில் மூழ்கினர் குறித்துணர்ந்து கொள்வரே.

3. கொள்ளுவார்கள் சிந்தையில் குறிப்புணர்ந்த ஞானிகள்
விள்ளுவார்கள் பக்குவத்தில் வேண்டிவேண்டி ஏத்தினால்
உள்ளுமாய் புறம்புமாய் உணர்வதற்கு உணர்வுமாய்த்
தெள்ளிதாக நின்றசோதி செம்மையைத் தெளிந்திடே,

4. தெளிந்தநற் சரியை தன்னில் சென்றுசா லோகம்பெறும்
தெளிந்தநற் கிரியைபூசை சேரலாம் சாமீபமே
தெளிந்தநல்ல யோகம் தன்னில் சேரலாகும் சாரூபம்
தெளிந்தஞானம் நான்கிலும் சேரலாம் சாயுச்யமே.

5. சேருவார்கள் ஞானம் என்று செப்புவார் தெளிவுளோர்
சேருவார்கள் நாலுபாதச் செம்மை என்றது இல்லையே

---

427. வாகு-வலிமை; 429.ஏலம்-வாசனை நெய்; குழலி-கூந்தலை உடையவள்; 430. கண்ணி-கண்களை உடையவள்; பங்கன்-பார்வதியை இடப்பாகத்தில் உடையவன்; வாசி-காற்று; 432. குருப்புனல்—ஆசிரிய அபிஷேகம்;

சேருவார்கள் சிவகதி திருவருளைப் பெற்றபேர்
சேருமாறு கண்டுநாலும் செய்தொழில் திடப்படே.

6. திறமலிக்கு நாலுபாதம் செம்மையும் திடப்படார்
அறிவிலிகள் தேசநாடி அவத்திலே அலைவதே
குறியதனைக் காட்டிஉள் குறித்து நோக்க வல்லிரேல்
வெறிகமழ் சடையுடையோன் மெய்ப்பதம் அடைவரே.

7. அடைவுளோர்கள் முத்தியை அறிந்திடாத மூடரே
படையுடைய தத்துவமும் பாதகங்கள் அல்லவோ
மடைதிறக்க வாரியின் மடையில் ஏறு மாறுபோல்
உடலில்மூல நாடியை உயர ஏற்றி ஊன்றிடே.

8. ஊன்றிஏற்றி மண்டலம் உருவிமூன்று தாள்திறந்து
ஆன்றுதந்தி ஏறிடில் அமுர்தம் வந்து இறங்கிடும்
நான்றிதென்று தொண்டருக்கு நாதனும் வெளிப்படும்
ஆன்றியும் உயிர்பரம் பொருந்திவாழ்வ தாகவே.

9. ஆகமூல நாடியில் அனல்எழுப்பி அன்புடன்
மோகமான மாயையில் முயல்வதும் ஒழிந்திடில்
தாகமேரு நாடி ஏகர் ஏகமான வாறுபோல்
ஏகர்பாதம் அன்புடன் இறைஞ்சினுர் அறிவரே.

440. அறிந்து நோக்கி உம்முளே அயன் தியானம் உம்முளே
இருந்திராமல் ஏகர்பாதம் பெற்றிருப்பது உண்மையே
அறிந்துமீள வைத்திடா வகையுமரணம் ஏத்தினுர்
செறிந்துமேலை வாசலைத் திறந்து பாரும் உம்முளே.

1. சோதியாக உம்முளே தெளிந்து நோக்க வல்லிரேல்
சோதிவந்து உதித்திடும் துரியாதீதம் உற்றிடும்
ஆதிசக் கரத்தினில் அயர்ந்து தீர்த்தம் ஆடுவன்
பேதியாது கண்டுகொள் ப்ராணனைத திருத்தியே.

2, திருவுமாய் சிவனுமாய் தெளிந்துளோர்கள் சிந்தையில்
மருவிலை எழுந்து வீசும் வாசனைய தாகுவன்
கருவிலே விழுந்தெழுந்த கன்மவாதனை யெலாம்
பருதிமுன் இருளதாய் பறியும் அங்கி பாருமே.

3. பாரும் எந்தை ஈசர் வைத்த பண்பிலே இருந்துநீர்
சேருமே நடுவறிந்து செம்மையான அப்பொருள்
வேரையும் முடியையும் விரைந்து தேடி மால்அயன்
பார் இடந்து விண்ணிலே பறந்தும் கண்டது இல்லையே.

4. கண்டிலாது அயன்மால் என்று காட்சியாகச் சொல்லுநீர்
பிண்டினுல் அரனுடன் மேவலாய் இருக்குமோ

---

436, வெறிகமழ்சடை-மணம் வீசுகின்ற சடை; 437. வாரி-கடல் 438. தந்தி-நாடி; 442. பருதி-சூரியன், அங்கி-நெருப்பு; 443 மால்-திருமால்; பார்-உலகம்; இடந்து-தோண்டி.

தொண்டுமட்டும் அன்புடன் தொழுது நோக்க வல்லிரேல்
பண்டுமுப் புரம் எரித்த பத்திவந்து முற்றுமே.

5. முற்றுமே அவன் ஒழிந்து முன்பின் ஒன்றும் காண்கிலேன்
பற்றிலாத ஒன்றுதன்னை பற்றிநிற்க வல்லது
கற்றதாலே ஈசர்பாதம் காணலா யிருக்குமோ
பெற்றபேரை அன்புடன் பிரியமாகக் கேளுமே.

6. கேட்டுநின்ற உன்னிலை கிடைத்த காலத்துளே
வாட்டம் உள்ள தத்துவ மயக்கமும் அகற்றிடும்
வீட்டிலே வெளியதாகும் விளங்க வந்து நேரிடும்
கூட்டி வன்னி மாருதம் குயத்தை விட்டு எழுப்புமே.

7. எழுப்பிமூல நாடியை இதப்படுத்த லாகுமே
மழுப்பிலாத சபையை நீர் மலித்துவாங்க வல்லிரேல்
சுழுத்தியும் கடந்துபோய் சொப்பனத்தில் அப்புறம்
அழுத்திஓர் எழுத்துளே அமைப்பது உண்மை ஐயனே.

8. அல்லதில்லை என்றுதான் ஆவியும் பொருளுடல்
நல்லஈசர் தாள் இணைக்கு நாதனுக்கும் ஈந்திலை
என்றும்என்னுள் நேசமும் வாசியை வருந்தினால்
தொல்லையாம் வினைவிடென்று தூரதூரம் ஆனதே.

9. ஆனதே பதியது அற்றதே பசுபாசம்
போனதே மலங்களும் புலன்களும் வினைகளும்
கானகத்தில் இட்டதீயில் காற்றுவந்து அடுத்ததோ
ஊனகத்தில் வாயுஉன்னி ஒன்றியே உலாவுமே.

450. உலாவும் உவ்வும் மவ்வுமாய் உதித்தடர்ந்து நின்றதும்
உலாவிஐம் புலன்களும் ஒருதலத்து இருந்திடும்
நிலாவும் அங்கு நேசமாகி நின்றமூர்தம் உண்டுதாம்
குலாவும் எங்கள் ஈசனைக் குறித்துணர்ந்து கும்பிடே.

1. கும்பிடும் கருத்துளே குகனை ஐங்கரனையும்
நம்பியே இடம் வலம் நமஸ்கரித்து நாடிட
எம்பிரானும் அம்மையும் இருத்தியே நடுவணைத்
தும்பிபோல வாசகம் தொடர்ந்து சோம்பி நீங்குமே.

2. நீங்கும்ஐம் புலன்களும் நிறைந்த வல் வினைகளும்
ஆங்காரமாம் ஆசையும் அருந்தடர்ந்த பாவமும்
ஓங்காரத்தின் உள்ளிருந்த ஒன்பதொழிந்தொன்றிலத்
தூங்காஈசர் சொற்படி துணிந்திருக்க சுத்தமே.

3. கருக்கலந்த காலமே கண்டு நின்ற காரணம்
உருக்கலந்த போதலோ உன்னை நான் உணர்ந்தது
விரிக்கில்என் மறைக்கில்என் வினைக்கிசைந்த போதெலாம்
உருக்கலந்து நின்றபோது நீயும் நானும் ஒன்றலோ.

4. ஞான நூல்கள் தேடிபே நவின்றஞான போகிகாள்
ஞானமான சோதியை நாடிஉள் அறிகிலீர்

ஞானம்ஆகி நின்றதோர் நாதனை அறிந்தபின்
ஞானம்அல்லது இல்லைவேறு நாம் உரைத்தது உண்மையே,

5 கருத்தரிப்ப தற்குமுன் காயம்நின்றது எவ்விடம்
உருத்தரிப்ப தற்குமுன் உயிர்ப்பு நின்றது எவ்விடம்
அருட்பொதிந்த சிந்தையில் மயக்கம் நின்றது எவ்விடம்
உருப்புணர்ந்த ஞானிகள் விரித்துரைக்க வேணுமே,

6 கருவினில் கருவதாய் எடுத்த ஏழு தோற்றமும்
இருவினைப் பயத்தினால் பிறந்திறந்து உழன்றிடும்
மருவினைப் பிறவிமூன்று காலமும் வகுத்தபின்
உருவினைப் பயல் இதென்று உணர்ந்த ஞானி சொல்லுமே.

7 வாயில்எச்சில் போகவே நீர்குடித்துத் துப்புவீர்
வாயிருக்க எச்சில்போன வாறதென்ன எவ்விடம்
வாயில்எச்சில் அல்லவோ நீர்உரைத்த மந்திரம்
நாதனை அறிந்தபோது நாடும் எச்சில் ஏதுசொல்

8 தொடக்கதென்று நீர்விழத் தொடங்குகின்ற ஊமர்காள்
தொடக்கிருந்தது எவ்விடம் சுத்தியானது எவ்விடம்
தொடக்கிருந்த வாறறிந்து சுத்திபண்ண வல்லிரேல்
தொடக்கிலாத சோதியைத் தொடர்ந்து காணலாகுமே,

9 மேதியோடும் ஆவுமே விரும்பியே புணர்ந்திடில்
சாதிபேதமாய் உருத்தரிக்கும் ஆறு போலவே
வேதம்ஓது வானுடன் புலைச்சிசென்று மேவிடில்
பேதமாய்ப் பிறக்கிலாத வாறதென்ன பேசுமே.

460 வகைக்குலங்கள் பேசியே வழக்குரைக்கும் மாந்தர்காள்
தொகைக்குலங்கள் ஆன நேர்மை நாடியே உணர்ந்தபின்
மிகைத்தசுக்கிலம் அன்றியே வேறு ஒன்று கண்டிலீர்,

1 ஓதும்நாலு வேதமும் உரைத்தசாஸ்திரங்களும்
பூததத் துவங்களும் பொருந்தும் ஆகமங்களும்
சாதிபேத வன்மையும் தயங்குகின்ற நூல்களும்
பேதபேதம் ஆகியே பிறந்து உழன்று இருந்ததே.

2 உறங்கில் என் விழிக்கில்என் உணர்வு சென்று ஒடுங்கில்என்,
திறம்பில்என் திகைக்கில்என் சிலதிசைகள் எட்டில்என்,
புறம்பும் உள்ளும் எங்கணும் பொதிந்திருந்த தேகமாய்,
நிறைந்திருந்த ஞானிகள் நினைப்பதும் ஏதும் இல்லையே,

3 அங்கலிங்கம் பூண்டு நீர் அகண்ட பூசை செய்கிறீர்
அங்கலிங்கம் பூண்டு நீ அமர்ந்திருந்த மார்பனை
எங்கும்ஓடி எங்கும் எங்கும் ஈடழிந்து மாய்கிறீர்
செங்கல் செம்பு கல்லெலாம் சிறந்துபார்க்கும் மூடரே.



4 தீட்டம் தீட்டம் என்றுநீர் தினம்முழுகும் மூடரே
தீட்டமாகி அல்லவோ திரண்டுகாயம் ஆனது

---

459, மேதி—எருமை;

பூட்டகாயம் உம்முளே புகழுகின்ற பேயரே
தீட்டுவந்து கொண்டலோ தெளிந்ததே சிவாயமே.

5 உந்திமேலே நாலு மூன்று ஓம் நமசி வாயமாம்
சந்திசந்தி என்றுநீர் சாற்றுகின்ற பேயரே
மூந்தவந்து நம்முளே மூலநாடி ஊடுபோய்
அந்திசந்தி அற்றிடம் அறிந்துணர்ந்து பாருமே.

6 வன்னிமூன்று தீயினில் வாழும் எங்கள் நாதனும்
கன்னியான துள்ளிருக்கக் காதல் கொண்டது எவ்விடம்
சென்னிநாலு கையிரண்டு சிந்தையில் இரண்டில்ஒன்று
உன்னிஉன்னி நம்முளே உய்த்துணர்ந்து பாருமே.

7 தொண்டுசெய்து நீங்களும் சூழஓடி மாள்கிறீர்
உண்டுஉழன்று நம்முளே உற்றுணர்ந்து பார்க்கிலீர்
வண்டுளாடு சோலைசூழ் வாழும்எங்கள் நாதனும்
பண்டுபோல நம்முளே பகுத்திருப்பன் ஈசனே.

8 பரம்உனக்கு எனக்குவேறு பயமும்இல்லை பாரைய
கரம்உனக்கு நித்தமும் குவித்திடக் கடமையாம்
சிரமுருக்கி அமுதளித்த சீருலாவும் நாதனே
உரம்எனக்கு நீ அளித்த உண்மை உண்மை உண்மையே

9 மூலவட்ட மீதிலே முளைத்த ஐந்து எழுத்திலே
கோலவட்டம் மூன்றுமாய்க் குளிர்ந்தலர்ந்து நின்றதி
ஞாலவட்ட மன்றுளே நவின்றஞானி மேலதாய்
ஏலவட்டம் ஆகியே இருந்ததே சிவாயமே.

470 முச்சதுர மூலமாகி மூன்றதான பேதமாய்
அச்சதுரம் உம்முளே அடங்கவாசி யோகமாம்
மெய்ச்சதுர மெய்யுளே விளங்குஞான தீபமாய்
உச்சரித்த மந்திரம் ஓம்நமசி வாயமே.

1 இடங்கள்பண்ணி சுத்திசெய்தே இட்டபீட மீதிலே
அடங்கநீறு பூசல்செய்து அருந்தவங்கள் பண்ணுவீர்
ஒடுங்குகின்ற நாதனுர் உதிக்கும் ஞானம் எவ்விடம்
அடங்குகின்றது எவ்விடம் அறிந்துபூசை செய்யுமே.

2 புத்தகங்களைச்சுமந்து பொய்களைப் பிதற்றுவீர்
செத்திடம் பிறந்திடம் அது எங்ஙன்என்று அறிகிலீர்
அத்தனைய சித்தனை அறிந்துநோக்க வல்லிரேல்
உத்தமத் துள்ஆயசோதி உணரும்போகம் ஆகுமே.

3 அருளிலே பிறந்துதித்து மாயைரூபம் ஆகியே
இருளிலே தயங்குகின்ற ஏழைமாந்தர் கேண்மினோ
பொருளிலே தவம்புனைந்து பொருந்திநோக்க வல்லிரேல்
மருள் அதுஏது வன்னியின் மறைந்ததே சிவாயமே.

4 தன்மசிந்தை ஆம்அளவும் தவமறியாத் தன்மையாய்க்
கன்மசிந்தை வெயில்உழன்று கருத்தமிழ்ந்த கசடரே

சென்மசென்மம் தேடியும் தெளிவொணாத செல்வனை
நன்மையாக உம்முளே நயந்துகாண வேண்டுமே.

5 கள்ளவுள்ள மேயிருக்க கடந்த ஞானம் ஓதுவீர்
கள்ளம்உள் அறுத்தபோது கதிஇதன்றிக் காண்கிலீர்
உள்ளமே விளக்கிநித்தம் ஒளியணுக வல்லிரேல்
தெள்ளுஞானம் உம்முளே சிறந்ததே சிவாயமே.

6 காணவேண்டும் என்றுநீர் கடல்மலைகள் ஏறுவீர்
ஆணவம் அதல்லவோ அறிவில்லாத மாந்தரே
வேணும்என்றவ் வீசர்பாதம் மெய்யுளே தரிப்பிரேல்
தாணுவாக நின்றசிவன் தான்சிவம் அதாகுமே.

7 அணுவினோடு அகண்டமாய் அளவிடாத சோதியைக்
குணமதாக உம்முளே குறித்து நோக்கின் முத்தியாம்
மிணமிணென்று விரலைஎண்ணி மீளொணாத மயக்கமாய்
துணிவிலாத படியினால் தொடர்ந்துபூசை செய்குவீர்.

8 எச்சில்எச்சில் என்றுநீர் இடைந்திருக்கும் ஏழைகாள்
துச்சில்எச்சில் அல்லவோ தூயகாயம் ஆனதும்
வைத்தஎச்சில் தேனலோ வண்டின்எச்சல் பூவலோ
கைச்சுதாவில் வைத்துடன் கறந்தபாலும் எச்சிலே.

9 தீர்த்தலிங்க மூர்த்திஎன்று தேடிஓடும் தீதரே
தீர்த்தலிங்கம் உள்ளில்நின்ற சிவனைத் தெளியுமே
தீர்த்தலிங்கம் உம்முளே தெளிந்துகாண வல்லிரேல்
தீர்த்தலிங்கம் தான் அதாய்ச் சிறந்ததே சிவாயமே.

480 ஆடுகொண்டு கூறுசெய்து அமர்ந்திருக்கும் ஆறுபோல்
தேடுகின்ற செம்பினைத் திடப்படப் பரப்பியே
நாடுகின்ற தம்பிரானும் நம்முளே இருக்கவே
போடுதர்ப்ப பூசைஎன்ன பூசை என்ன பூசையே.

1 என்னைஅற்ப நேரமும் மறக்கிலாத நாதனே
ஏகனே இறைவனே இராசராச ராசனே
உன்னைஅற்ப நேரமும் ஒழிந்திருக்க லாகுமோ
உனது நாட்டம் எனதுநாவில் உதவிசெய்வீர் ஈசனே.

2 எல்லையற்று நின்றசோதி ஏகமாய் எரிக்கவே
எந்தைபூரணப்பிரகாசர் ஏகபோகம் ஆகியே
நல்லஇன்ப மோனசாக ரத்திலே அழுத்தியே
நாடொணாத அமிர்தம் உண்டு நான் அழிந்து நின்றநாள்.

3 ஆனவாற தாயிடும் அகண்டமான சோதியை
ஊனைகாட்டி உம்முளே உகந்துகாண வல்லிரேல்
ஊனகாயம் ஆளலாம் உலகபாரம் ஆளலாம்
வானநாடும் ஆளலாம் வண்ணநாடார் ஆணையே.

---

476, தாணு-பரம்பொருள். 479 சுதா-பசுவின் முலைக்காம்பு
481, ஏகன்-தனி முதன்மை ஆனவன். 483, உகந்து-விரும்பி;

4 நித்தமும் மணிதுலக்கி நீடுமூலை புக்கிருந்து
கத்தியே கதறியே கண்கள்மூடி என்பயன்
எத்தனைபேர் எண்ணினும் எட்டிரண்டும் பத்தலோ
அத்தனுக்குஇது ஏற்குமோ அறிவிலாத மாந்தரே.

5 எட்டிரண்டும் கூடியே இலிங்கமான தேவனை
மட்டதாக உம்முளே மதித்துநோக்க வல்லிரேல்
கட்டமான பிறவிஎன் கருங்கடல் கடக்கலாம்
இட்டமான வெளியினோடு இசைந்திருப்பீர் காண்மினே.

6 உண்மையான மந்திரம் ஒளியிலே இருந்திடும்
தண்மையான மந்திரம் சமைந்து ரூபம் ஆகியே
வெண்மையான மந்திரம் விளைந்து நீற தானதே
உண்மையான மந்திரம் அதொன்றுமே சிவாயமே

7 பன்னிரண்டு நாள்இருத்திப் பஞ்சவன்னம் ஒத்திட
மின்னிஅவ் வெளிக்குள் நின்று வேறெடுத்து அமர்ந்தது
சென்னியான தலத்திலே சீவன் நின்று இயங்கிடும்
பன்னிஉன்னி ஆய்ந்தவர் பரப்பிரமம் ஆவரே.

8 தச்சுவாயில் உச்சிமேல் ஆயிரம் தலங்களாய்
முச்சுடரும் மூவிரண்டு மூண்டெழுந்த தீச்சுடர்
வச்சிரம் அதாகியே வளர்ந்து நின்றது எவ்விடம்?
இச்சுடரும் இந்திரியமும் ஏகமானது ஏங்ஙனே?

9 முத்திசித்தி தொந்தமாய் முயங்குகின்ற மூர்த்தியை
மற்றுஉதித்த ஐம்புலன்கள் ஆகும்மத்தி அப்புலன்
அத்தனித்த காளகண்டர் அன்பினால் அனுதினம்
உச்சரித்து உளத்திலே அறிந்துணர்ந்து கொண்மினே.

490 வல்லவாசல் ஒன்பதும் மருத்தடைத்த வாசலும்
சொல்லும்வாசல் ஓர் ஐந்தும் சொல்ல விம்மி நின்றதும்
நல்லவாசலைத்திறந்து ஞானவாசல் ஊடுபோய்
எல்லைவாசல் கண்டபின் இனிப்பிறப்பது இல்லையே.

1 வண்டுபூ மணங்களோடு வந்திருந்த தேன்எலாம்
உண்டுளே அடங்கும் வண்ணம் ஒதுலிங்க மூலமாய்க்
கண்டுகண்டு வேரிலே கருத் தொடுங்க வல்லிரேல்
பண்டுகொண்ட வல்வினை பறந்திடும் சிவாயமே

2 ஓரெழுத்தி லிங்கமாக ஓதும் அக் கரத்துளே
ஓரெழுத்து இயங்குகின்ற உண்மையை அறிகிலீர்

---

489. அத்தனித்த-அந்தத் தனித்த

மூவெழுத்தும் மூவராய் முளைத்தெழுந்த சோதியை
நாலெழுத்து நாவுளே நவின்றதே சிவாயமே.

3 தூரதூர தூரமும் தொடர்ந்தெழுந்த தூரமும்
பாரபார பாரம்என்று பரிந்திருந்த பாவிகாள்!
நேரநேர நேரமும் நினைந்திருக்க வல்லிரேல்
தூரதூர தூரமும் தொடர்ந்துகூடல் ஆகுமே.

4 குண்டலங்கள் பூண்டுநீர் குளங்கள்தோறும் மூழ்குறீர்;
மண்டுகங்கள் போலநீர் மனத்தின்மா சறுக்கிலீர்;
மண்டைஏந்து கையரை மன்த்திருத்த வல்லிரேல்
பண்டைமால் அயன்தொழப் பணிந்து வாழ லாகுமே.

5 கூடுகட்டி முட்டையிட்டுக் கொண்டிருந்த வாறுபோல்
ஆடிரண்டு கன்றைஈன்ற அம்பலத்துள் ஆடுதே;
மாடுகொண்டு வெண்ணெய்உண்ணும் மானிடப் பசுக்களே!
வீடுகண்டு கொண்டபின்பு வெட்டவெளியும் காணுமே.

6 நட்டகல்லைத் தெய்வம்என்று நாலுபுட்பம் சாத்தியே
சுற்றிவந்து முணமுணென்று சொல்லுமந்திரம் ஏதடா!
நட்டகல்லும் பேசுமோ நாதன்உள் ளிருக்கையில்?
சுட்டசட்டி சட்டுவம் கறிச்சுவை அறியுமோ?

7 நானும்அல்ல நீயும் அல்ல நாதன் அல்ல ஓதுவேன்
வானில்உள்ள சோதி அல்ல சோதிநம்முள் உள்ளதே
நானும்நீயும் ஒத்தபோது நாடிக்காண லாகுமோ
தானதான தத்ததான நாதனான தானனு.

8 நல்லதல்ல கெட்டதல்ல நடுவில்நிற்பது ஒன்றுதான்
நல்லதென்ற போதது நல்லதாகி நின்றுபின்
நல்லதல்ல கெட்டதென்றால் கெட்டதாகும் ஆதலால்
நல்லதென்று நாடிநின்று நாமம் சொல்ல வேண்டுமே.

9 பேய்கள்கூடிப் பிணங்கள்தின்னும் பிரியமில்லாக் காட்டிலே
நாய்கள்சுற்ற நடனமாடும் நம்பன் வாழ்க்கை ஏதடா!
தாய்கள்பால் உதிக்குப் இச்சை தவிரவேண்டி நாடினால்
நோய்கள் பட்டு உழல்வது ஏது நோக்கிப்பாரும் உம்முளே,

500 உப்பைநீக்கில் அழுகிப்போகும் ஊற்றையாகும் உடலில்நீ
அப்பியாசை கொண்டிருக்கல் ஆகுமோசொல் அறிவிலா
தப்பிலிப்பொய் மானம் கெட்ட தடியனாகும் மனமேகேள்;
ஒப்பிலாசெஞ் சடையனாதும் ஒருவன் பாதம் உண்மையே.

---

494. மண்டுகம்-தவளை; மாசு—குற்றம் 496. சட்டுவம்-சட்டியில் கிளறும் பொருள்கள் [அகப்பை, கரண்டி முதலியன.] 499. நம்பன்-பரமேசுவரன். 500. அழுகி-அழுகி, திப்பிலி-தவறுமல்;

1 பிறப்பதெல்லாம் இறப்பது உண்டு பேதைமக்கள் தெரிகிலாது
இறப்பது இல்லை என மகிழ்ந்து எங்கள் உங்கள் சொத்தெனக்
குறிப்புப்பேசித் திரிவரன்றிக் கொண்டகோலம் என்னவோ
நிறப்பும் பொந்தி அழிந்தபோத நேசமாமோ ஈசனே?

2 சுட்டெரித்த சாந்துபூசும் சுந்தரப்பெண் மதிமுகத்
திட்டநெட்டு எழுத்தறியாது ஏங்கிநோக்கு மதவலீர்
பெட்டகத்துப் பாம்புறங்கும் பித்தாட்டம் அறியீரோ?
கட்டவிழ்த்துப் பிரமன் பார்க்கில் கதிஉமக்கும் ஏதுகாண்.

3 வேதம்ஓத வேலையோ வீணதாகும் பாரிலே
காதகாத தூரம்ஓடிக் காதல்பூசை வேணுமோ?
ஆதிநாதன் வெண்ணெயுண்ட அவனிருக்க நம்முளே
கோதுபூசை வேதம்ஏது குறித்துப்பாரும் உம்முளே.

4 பரம் இலாதது எவ்விடம்? பரம் இருப்பது எவ்விடம்?
அறம் இலாத பாவிகட்குப் பரம்இலை அது உண்மையே;
கரம் இருந்தும் பொருளிருந்தும் அருளிலாத போதது
பரம் இலாத சூன்யமாகும் பாழ் நரகம் ஆகுமே.

5 மாதர் தோள்சேராத தேவர் மானிலத்தில் இல்லையே!
மாதர் தோள் புணர்ந்தபோது மனிதர்வாழ் சிறக்குமே,
மாதராகுஞ் சத்தியொன்று மாட்டிக்கொண்ட தாதலால்
மாதராகும் நீலிகங்கை மகிழ்ந்து கொண்டான் ஈசனே.



6 சித்தர் என்றும் சிறியர் என்றும் அறியொணாத சீவர்காள்!
சித்தர் இங்கு இருந்த போது பித்தர் என்று எண்ணுவீர்,
சித்தர் இங்கு இருந்தும் என்ன பித்தன் நாட்டிருப்பரே;
அத்தன் நாடும் இந்தநாடும் அவர்களுக் கெலாமொன்றே.

7 மாந்தர் வாழ்வ மண்ணிலே மறந்தபோது விண்ணிலே
சாந்தனான ஆவியைச் சரிப்படுத்த வல்லிரேல்
வேந்தன் ஆகி மன்றுளாடும்விமலன் பாதம் காணலாம்
கூந்தலம்மை கோணல் ஒன்றும் குறிக்கொணாதுஇது உண்மையே.

8 சருகருந்தி நீர் குடித்துச் சாரல்வாழ் தவசிகாள்!
சருகருந்தில் தேகங்குன்றிச் சஞ்சலம் உண்டாகுமே;
வருவிருந்தோடு உண்டுஉடுத்தி வளர்மனை சுகிப்பிரேல்
வருவிருந்தோன் ஈசனாகி வாழ்வளிக்கும் சிவாயமே.

9 காடுமேடு குன்றுபள்ளம் கானின் ஆறகற்றியும்
நாடு தேசம் விட்டலைவர் நாதன் பாதம் காண்பரோ?

---

502. பெட்டகம்-பெட்டி; 505. நீலிகங்கை—நீலநிறம் உடைய கங்கை. 507. மன்று—மன்றம் சபை. விமலன்—மலம், அற்றவன். கடவுள். 508. சருகு—உதிர்ந்த இலை,

கூடுவிட்டு அகன்றுஉன் ஆவி கூத்தனூர்க்கே நோக்கலால்
வீடுபெற்று அரன் பதத்தில் வீற்றிருப்பர் இல்லையே.

510 கட்டையால் செய் தேவரும் கல்லினால் செய் தேவரும்
மட்டையால்செய் தேவரும் மஞ்சளால்செய் தேவரும்
சட்டையால்செய் தேவரும் சாணியால் செய் தேவரும்
வெட்ட வெளிய தன்றிமற்று வேறுதெய்வம் இல்லையே.

1 தங்கள் தேகம் நோய் பெறின் தனைப்பிடாரி கோயிலில்
பொங்கல் வைத்து ஆடு கோழிப் பூசைப்பலியை இட்டிட
நங்கச் சொல்லு நலிமகுந்து நாளுப் தேய்ந்து மூஞ்சூராய்
உங்கள் குலதெய்வம் உங்கள் உருக்குலைப்பது உண்மையே.

2 ஆசைகொண்டு அனுதினமும் அன்னியர் பொருளினை
மோசம் செய்து அபகரிக்க முற்றிலும் அலைபவர்
பூசையோடு நேமநிட்டை பூரிக்கச் செய் பாதகர்
காசினியில் ஏழுநரகைக் காத்திருப்பது உண்மையே.

3 நேசமுற்றுப் பூசைசெய்து நீறுபூசிச் சந்தனம்
வாசமோடு அணிந்து நெற்றி மைதிலர் தம் இட்டுமே
மோசம் பொய்புனை சுருட்டு முற்றிலும்செய் மூடர்காள்!
வேசரிகளம்புரண்ட வெண்ணீறுரும் மேனியே.

4 வாதம் செய்வேன் வெள்ளியும் பொன் மாற்றுயர்ந்த தங்கமும்,
போதவே குருமுடிக்கப் பொன் பணங்கள் தாவெனச்,
சாதனை செய் தெத்திச் சொத்து தந்ததைக் கவர்ந்துமே,
காததூரம் ஓடிச்செல்வர் காண்பதும் அருமையே.

5 யோகசாடை காட்டுவார் உயரவும் எழும்புவார்
வேகமாக அட்டசித்து வித்தைகற்று நெட்டுவார்
மோகம் கொண்டு மாதரின் மூத்திரப்பை சிக்கிப்பின்
பேயது பிடித்தவர் போல் பேருலகில் சாவரே.

6 காயகாயம் உண்பதாகக் கண்டவர் மதித்திட
மாயவித்தை செய்வது எங்கு மடிப்பு மோசம் செய்பவர்
நேயமாக் கஞ்சா அடித்து நேர் அபினைத் தின்பதால்
நாயதாக நக்கிமுக்கி நாட்டினில் அலைவரே.

7 நீரினில் குமிழிஒத்த நிலையிலாத காயம்என்று
ஊரினில் பறை அடித்த உதாரியாய்த் திரிபவர்
சீரினில் உனக்கு ஞான சித்திசெய்வேன் பாரென
நேரினில் பிறர் பொருளை நீளவும் கைப்பற்றுவார்.

8 காவியும் சடைமுடி கமண்டலங்கள் ஆசனம்
தாவுருத்தி ராட்சப் யோகத் தண்டு கொண்ட மாடுகள்
தேவியை அலையவிட்டுத் தேசம் எங்கும் சுற்றியே
பாவியென்ன வீடெலாம் பருக்கை கேட்டு அலைவரே.

9 முத்திசேரச் சித்திஇங்கு முன்னளிப்பேன் பாரெனக்
சத்தியங்கள் சொல்லி எங்கும் சாமிவேடம் பூண்டவர்
நித்தியம் வயிறு வளர்க்க நீதி ஞானம் பேசியே
பத்தியாய்ப் பணம்பறித்துப் பாழ்நரகில் வீழ்வரே.

520 செம்மைசேர் மரத்திலே சிலைதலைகள் செய்கிறீர்
கொம்மையற்ற கிளையில்லாத குறடு செய்து அழிக்கிறீர்
நும்முளே விளங்குவோனை நாடி நோக்க வல்லிரேல்
இம்மளமும் மும்மளமும் எம்மளமும் அல்லவே.

1 எத்திசை எங்கு எங்குமோடி எண்ணிலாத நதிகளில்
சுற்றியும் தலைமுழுகச் சுத்தஞானி யாவரோ?
பத்தியோடு அரன்பதம் பணிந்திடாத பாவிகாள்!
முத்திஇன்றி பாழ்நரகில் மூழ்கிநொந்து அலைவரே

2 கல்லு வெள்ளி செம்பிரும்பு காய்ந்திடும் தராக்களில்
வல்லதேவ ரூபபேதம் அங்கமைத்துப் போற்றிடில்
தொல்லைஅற் றிடப்பெரும் சுகந்தருமோ சொல்லுவீர்
இல்லை இல்லை இல்லை இல்லை ஈசன் ஆணை இல்லையே

3 இச்சகம் சனித்ததுவும் ஈசன்ஐந்து எழுத்திலே
மெச்சவும் சராசரங்கள் மேவும் ஐந்து எழுத்திலே
உச்சிதப் பலஉயிர்கள் ஓங்கல் அஞ்செழுத்திலே
நிச்சயமெய்ஞ் ஞானபோதம் நிற்கும் ஐந்தெழுத்திலே.

4 சாத்திரங்கள் பார்த்துப் பார்த்து தான் குருடு ஆவதால்
நேத்திரங்கெட வெய்யோனை நேர்துதிசெய் மூடர்கள்!
பாத்திரம் அறிந்து மோன பக்திசெய்ய வல்லிரேல்
சூத்திரப்படி யாவரும் சுத்தர் ஆவர் அங்ஙனே.

5 மனவுறுதி தானிலாத மட்டிப்பிண மாடுகள்
சினமுறப் பிறர்பொருளைச் சேகரித்து வைத்ததைத்
தினந்தினம் ஊர் எங்கும் சுற்றி திண்டிக்கே அலைபவர்
இனமதில் பலர்கள் வையும்: இன்பம் அற்ற பாவிகள்.

6 சிவாயவசி என்னவும் செபிக்க இச்சகம் எலாம்
சிவாயவசி என்னவும் செபிக்கயாவும் சித்தியாம்
சிவாயவசி என்னவும் செபிக்கவானம் ஆளலாம்
சிவாயவசி என்பதே இருதலைத்தீ ஆகுமே.





நூல்: நான்கு

# பாம்பாட்டி சித்தர்

## பாடல்

1 தெளிந்து தெளிந்துதெளிந்து ஆடுபாம்பே! சிவன்
சீர்பாதங்கண்டு தெளிந்து ஆடுபாம்பே!
ஆடுபாம் பே! தெளிந்து ஆடுபாம் பே! சிவன்
அடியிணை கண்டோமென்று ஆடு பாம்பே!

2 நீடுபதம் நமக்கென் றுஞ்சொந்தம் என்றே
நித்தியம்என் றேபெரிய முத்தியென்றே
பாடுபடும் போதும் ஆதிபாதம் நினைந்தே
பன்னிப்பன்னிப் பரவி நின்று ஆடுபாம்பே!

3 பொன்னில்ஒளி போலவெங்கும் பூரணமதாய்ப்
பூவின்மணம் போலத் தங்கும் பொற்புடையதாய்
மன்னும் பலஉயிர்களில் மன்னிப் பொருந்தும்
வள்ளலடி வணங்கி நின்று ஆடுபாம்பே!

4 எள்ளில் எண்ணெய் போலவுயிர் எங்கும் நிறைந்த
ஈசன்பத வாசமலர் எண்ணி யெண்ணியே
உள்ளபடி அன்புபத்தி ஓங்கி நிற்கவே
ஒடுங்கி யடங்கித் தெளிந்து ஆடுபாம்பே!

5 அண்டபிண்டம் தந்தஎங்கள் ஆதிதேவனை
அகலாம லேநினைத்தே அன்புடன் பணிந்து
எண்திசையும் புகழ்ந்திட ஏத்தி மேத்தியே
ஏகமன மாகநாடி ஆடு பாம்பே!

### அருஞ்சொற் பொருள்

2, பன்னிப் பன்னி—மீண்டும்:மீண்டும் 3. பொற்பு—அழகு; 4. பத்தி—பக்தி;

6 சோதிமயமான பரி சுத்தவத்துவைத்
தொழுதழு தலற்றித் தொந் தோம்தோம் எனவே
நீதி தவரு வழியில் நின்று நிலையாய்
நினைந்து நினைந்துருகி ஆடுபாம்பே;

7 அருவாயும் உருவாயும் அந்தி யாயும்
அந்தமாயும் ஒளியாயும் ஆகம மாயும்
திருவாயும் குருவாயும் சிவனுயும்
செறிந்தவத் துவைப் போற்றி ஆடுபாம்பே!

8 சுட்டிக்காட்ட ஒண்ணுதபாழ்ச் சூனியம் தன்னைச்
சூட்சமதியால் அறிந்து தோஷம் அறவே
எட்டிப் பிடித்தோ மென்ருனந்த மாகப்பை
எடுத்து விரித்துநின்று ஆடுபாம்பே!

9 எவ்வுயிரும் எவ்வுலகும் ஈன்று புறம்பாய்
இருந்து திருவிளையாட்டு எய்தியும் பின்னர்
அவ்வுயிரும் அவ்வுலகும் ஆதியும் நின்ற
ஆனந்த வெள்ளங்கண்டு ஆடு பாம்பே!

குரு வணக்கம்

10 காற்று உடன் பொருள் ஆவி தத்த மாகவே
தானம் வாங்கி நின்ற எங்கள் சற்குருவினைப்
போற்றிமனம் வாக்குக்காயம் மூன்றும் பொருந்தப்
புகழ்ந்து புகழ்ந்து நின்று ஆடு பாம்பே!

11 பொய்ம் மதங்கள் போதனை செய் பொய்க் குருக்களைப்
புத்தி சொல்லி நன்னெறியில் போக விடுக்கும்
மெய்ம் மதந்தான் இன்னதென்று மேவ விளம்பும்
மெய்க் குருவின் பதம் போற்றி ஆடுபாம்பே!

12 வேதப் பொருள் இன்னதென்றும் வேதம் கடந்த
மெய்ப் பொருளைக் கண்டு மனம் மேவி விரும்பிப்
போதப் பொருள் இன்னதென்றும் போதனை செய்யும்
பூரண சற்குருதாள் கண்டு ஆடுபாம்பே!

13 உள்ளங்கையிற் கனிபோல உள்ள பொருளை
உண்மையுடன் காட்டவல்ல உண்மைக் குருவைக்
கள்ளமனந் தன்னைத் தள்ளிக் கண்டு கொண்டு அன்பாய்க்
களித்துக் களித்து நின்று ஆடுபாம்பே!

14 அங்கையிற் கண்ணுடிபோல ஆதி வத்துவை
அறிவிக்கும் எங்கள் உயிரான குருவைச்

8. பை-படம்: 14-சங்கை-சந்தேகம்: தமனியம்-பொன்

சங்கையறச் சந்ததமும் தாழ்ந்து பணிந்தே
தமனியப் படம் எடுத்து ஆடுபாம்பே!

15 காயம் நிலை அழிகையைக் கண்டு கொண்டு பின்
கற்பு நிலை யுள்ளிற் கொண்டு எக்காலமும் வாழும்
தூய நிலை கண்ட பரிசுத்தக் குருவின்
துணையடி தொழுது நின்று ஆடு பாம்பே!

16 கூடு விட்டுக் கூடு பாயும் கொள்கை யுடைய
குருவின் வல்லபம் எவர் கூற வல்லவர்?
வீடு பெறும் வகையை மேன்மேலுங் காட்டும்
மெய்க் குருவைப் பணிந்து நின்று ஆடு பாம்பே!

17 அட்ட திக்கும் அண்ட வெளியான விடமும்
அடக்கிய குளிகையோடு ஆடி விரைவாய்
வட்டமிட்டு வலம்வரும் வல்ல குருவின்
மலரடி தஞ்சம் என்று ஆடு பாம்பே!

18 கற்பகாலம் கடந்தாதி கர்த்தா வோடும்
கடமழி யாது வாழுங் காரணக் குரு
பொற்பதமே தஞ்சமென்று போற்றுதல் செய்து
பூரணச் சிந்தையோடு ஆடு பாம்பே!

19 வச்சிரத்திற் கோர் பழுது வாய்க்கு மாயினும்
வல்லுடம்புக் கொருகுறை வாய்த்திடாது
மெச்சுகட முள்ள எங்கள் வேத குருவின்
மெல்லடி துதித்து நின்று ஆடு பாம்பே!

பாம்பினது சிறப்பு:

20 நாதர்முடி மேல் இருக்கும் நாகப் பாம்பே!
நச்சுப் பையை வைத்திருக்கும் நல்ல பாம்பே!
பாதலத்திற் குடிபுகும் பைகொள் பாம்பே!
பாடிப்பாடி நின்று விளையாடு பாம்பே!

21 வளைபுகும் போதேதலை வாங்கும் பாம்பே!
மண்டல மிட்டுடல் வளை வண்ணப் பாம்பே!
தளைக்கஞ்சி நின்றிடும் சத்தியப் பாம்பே!
தலையெடுத்தே நீ விளையாடு பாம்பே!

22 குற்றமற்ற சிவனுக்குக் குண்டலமானாய்;
கூறுந்திரு மாலினுக்குக் குடையுமானாய்;

---

16. வல்லபம்-சாமர்த்தியம்; 21. தளை-கட்டு; 22. கரவாமல்-ஒளியாமல்; 23. மாயன்-திருமால்;

கற்றைக் குழல் பார்வதிக்குக் கங்கணமானாய்;
கரவாமல் உளங்களித்து ஆடுபாம்பே!

23 மண்டலத்தைத் தாங்குமிக வல்லமை கொண்டாய்;
மாயனுக்குப் படுக்கைக்கு வண்ணப் பாயானாய்!
கண்டபடை நடுங்கிடக் காட்சியும் பெற்றாய்;
கண்ணே செவியாகக் கொண்டாய் ஆடு பாம்பே!

24 சந்திரனைச் சூரியனைத் தாவித் தீண்டினாய்;
சங்கரனுக்கு ஆபரணந் தானு மாகினாய்;
மந்திரத்துக் கடங்கினாய் மண்டலமிட்டாய்;
வளைந்து வளைந்து நின்று ஆடு பாம்பே!



சித்தர் வல்லபம்

25 எட்டு நாகம் தம்மைக் கையால் எடுத்தே
ஆட்டுவோம்
இந்திரனார் உலகத்தை இங்கே காட்டு
வோம்
கட்டுக்கு அடங்காத பாம்பைக் கட்டி விடுவோம்;
கடு விஷந் தன்னைக் கக்கி ஆடு பாம்பே!

26 ஆதிசேடன் ஆயினுமெம் மங்கையினாலே
ஆட்டி விடுவோ மெங்கள் ஆக்கினைக்குள்ளே;
நீதியோடு மடங்கியே நின்றிடச் செய்வோம்;
நின்ற நிலை தவறாமல் ஆடு பாம்பே!

27 தூணைச் சிறு துரும்பாகத் தோன்றிடச் செய்வோம்;
துரும்பைப் பெருந்தூணாகத் தோற்றச் செய்குவோம்;
ஆணைப் பெண்ணும் பெண்ணை ஆணும் ஆகச் செய்குவோம்;
ஆரவாரித்து எதிராய் நின்று ஆடு பாம்பே!

28 எட்டு மலைகளைப் பந்தாய் எடுத்து எறிகுவோம்;
ஏழு கடலையுங் குடித்து ஏப்பமிடுவோம்;
மட்டுப் படா மணலையும் மதித்து விடுவோம்;
மகாராசன் முன்பு நீ நின்று ஆடு பாம்பே!

29 மண்டலமுற்று மெங்கையால் மறைத்து விடுவோம்;
வானத்தையுமே வில்லாக வளைத்து விடுவோம்;
தொண்டருக்குச் சூனியஞ் சொல்லிக் காட்டுவோம்;
தோன்றலுக்கு முன்பு நீ நின்று ஆடு பாம்பே!

30 மூண்டெரியும் அக்கினிக்குள் மூழ்கி வருவோம்;
முந்நீருள் இருப்பினும் மூச்சடக்குவோம்;

30. முந்நீர்-கடல்;

தாண்டி வரும் வன்புலியைத் தாக்கி விடுவோம்;
தார்வேந்தன் முன்பு நீ நின்று ஆடு பாம்பே!

31 செப்பரிய மூன்றுலகுஞ் செம்பொன் ஆக்குவோம்;
செங்கதிரைத் தண்கதிராய்ச் செய்து விடுவோம்;
இப்பெரிய உலகத்தை இல்லாமற் செய்வோம்;
எங்கள் வல்ல பங்கண்டு நீ ஆடு பாம்பே!

32 வேதன் செய்த சிருட்டிகள் போல் வேறு செய்குவோம்;
வேதனையும் எங்கள்கீழே மேவச் செய்குவோம்;
நாதனுடன் சமமாக நாங்களும் வாழ்வோம்;
நாங்கள் செய்கை யாம்இது வென்று ஆடு பாம்பே!

33 அறுபத்து நாலு கலை யாவும் அறிந்தோம்;
அதற்குமேல் ஒரு கலை யான தறிந்தோம்;
மறுபற்றுச் சற்றுமில்லா மனமும் உடையோம்;
மன்னனே ஆசான் என்று ஆடு பாம்பே!



34. சீறுபுலி யானையாளி சிங்க முதலாய்ச்
சிற்றடிக்குக் குற்றேவல் செய்யச் சொல்லு
வோம்;
வீறுபெருங் கடவுளை எங்களுடனே
விளையாடச் செய்குவோமென்று ஆடுபாம்பே!

35. வாசுகியை ஒரு பக்கம் மன்ன நிறுத்தி
மகத்தான பதுமனை மறுபக்கம் வைத்தே
தேசுலவு தக்கனைத்தன் திக்கினிற் சேர்த்துச்
செய்யபது மனைக்கொள்ளும் சித்தனாரே!

36. அனந்தனை யொருபக்கமாக நிறுத்தி
அதன் பக்கங் குளிகனை யண்டச் சேர்த்துக்
கனங்கொண்ட கார்க்கோடகன் காணக் காட்டுங்
கடுஞ்சங்க பாலனைத்தான் சித்தனாரே!

37. அட்டதிக்குஞ் சக்கரங்களாகக் கீறி
அக்கோண நிலைகளி லக்கரஞ் சேர்த்துத்
திட்டமுடன் மந்திரத்தைச் செபித்து நில்லும்
சித்தந்தடு மாறுதீர் சித்தனாரே!

38. அட்டதிக்குஞ் சக்கரங்கள் அமைத்துவிட்டோம்;
அவ்வவற்றில் சக்கரங்கள் அமைத்து விட்டோம்;
எட்டுநாகம் இருக்கின்ற இடத்தில் விட்டோம்;
இனியென்ன செய்வம் சொல்லும் சித்தனாரே!

---

31. தண்-குளிர்ந்த; 32. வேதன்-பிரமன்; 35 36. வாசுகி, பதுமன், தக்கன், அனந்தன். குளிகன், கார்க்கோடகன் சங்கபாலன், என்பவை அஷ்டமா நாகங்கள், 37. அட்ட திக்கு—எண் திசை;

39. நடுவாக ஆதிசேடன் தன்னை நாட்டும்:
நான்கு திக்கும் மந்திரித்த நீறு தூவும்:
கடுவிடங் கக்க வேயக் கட்செவிகளைக்
கையிலெடுத் தாடுங்கள் சித்தனாரே!

## பொருளாசை விலக்கம்

40. நாடுநகர் வீடுமாடு நற்பொருள் எல்லாம்
நடுவன்வ ரும்பொழுது நாடி வருமோ?
கூடுபோன பின்பு அவற்ருல் கொள்பயன் என்னே?
கூத்தன் பதங் குறித்துநின்று ஆடு பாம்பே!

41. யானை சேனை தேர்பரி யாவும் அணியாய்
யமன்வரும் போது துணை யாமோ அறிவாய்:
ஞானஞ்சற்றும் இல்லாத நாய்கட் குப்புத்தி
நாடிவரும்படி நீ நின்று ஆடுபாம்பே!

42. மாணிக்கமா மணிமுடி வாகு வலயம்
மார்பில் தொங்கும் பதக்கங்கள் மற்றும் பணிகள்
ஆணிப்பொன் முத் தாரம் அப்பொன் அந்தக் கடகம்
அழிவான பொருளென நின்று ஆடுபாம்பே!

43. மாடகூட மாளிகைகள் வண்ண மண்டபம்
மதில்சூழ்ந்த அரண்மனை மற்றும் உள்ளவை
கூடவாரா வென்று அந்தக் கொள்கை அறிந்தோர்
குலவாமல் வெறுப்பாரென்று ஆடு பாம்பே!

44. மலைபோன்ற செம்பொற்குவை வைத்தி ருப்பவர்
மறலிதான் வருகையில் வாரிச் செல்வரோ?
அலையாமல் அகத்தினை அத்தன் பால்வைத்தோர்
அழியார்என் றேநீ துணிந்து ஆடுபாம்பே!

45. பஞ்சணையும் பூவணையும் பாய லும்வெறும்
பாழ்ச்சுடு காட திலே பயனைப் பெறுமோ?
மஞ்சள்மணம் போய்ச் சுடுநாறு மணங்கள்
வருமென்று தெளிந்துநின்று ஆடுபாம்பே!



46. முக்கனியுஞ் சர்க்கரையும் மோதகங்களும்
முதிர் சுவைப் பண்டங்களும் முந்தி உண்டவாய்
மிக்க உயிர் போன பின்பு மண்ணை விழுங்க
மெய்யாகக் கண்டோம் என்று ஆடு பாம்பே!

47. வண்ணப்பட்டும் வாசனையும் வாய்த்த கோலமும்
வண்கவிதை ஆலவட்டம் மற்றுஞ் சின்னமும்

---

39. கட்செவி-பாம்பு; 40. நடுவன்-யமன்; கூத்தன்-சிவன்:- 41. பரி-குதிரை; 44. மறலி-யமன்: அத்தன்-தந்தை. 47 கவிகை-குடை;

திண்ணமுடன் யமபுரஞ் செல்லுங் காலத்தில்
சேரவர மாட்டாயென்று ஆடுபாம்பே!

48. மக்கள் பெண்டிர் சுற்றமரு மக்கள் மற்றவர்
மாளும்போது கூடஅவர் மாள்வ தில்லையே!
தக்கவுல கனைத்தையும் தந்த கர்த்தனைத்
தாவித்தாவித் துதித்துநின்று ஆடு பாம்பே!

49. கானலைமான் நீரெனவே கண்டு செல்லல்போல்
காசினிவாழ் வினைமூடர் கண்டு களிப்பார்;
மேனிலை கண்டார்கள் வீணாய் வீம்பு பேசிடார்;
மெய்யன்பதம் நாடுவாரென்று ஆடுபாம்பே!

## பெண்ணாசை விலக்கம்

50. வெயில்கண்ட மஞ்சள் போன்ற மாதர் அழகை
விரும்பியே மேல்விழுந்து மேவு மாந்தர்
ஒயில்கண்டே இலவு காத்து ஓடும் கிளிபோல்
உடல்போனால் ஓடுவாரென்று ஆடுபாம்பே!

51. செண்டுமுலை வண்டுவிழி கொண்ட தோகையைச்
சித்தப்பால் விழுங்கியே சீயென்று ஒறுத்தோம்;
குண்டுகட்டெ ருமையேறுங் கூற்றுப் பருந்தைக்
கொன்றுதின்று விட்டோம் நாம் என்று ஆடுபாம்பே!

52. வட்டமுலையென்றுமிக வற்றுந் தோலை
மகமேரு என்று உவமை வைத்துக் கூறுவார்.
கெட்ட நாற்ற முள்ளயோனிக் கேணியில் வீழ்ந்தார்
கெடுவர் என்றேநீர் துணிந்து ஆடுபாம்பே!

53. மலஞ்சொரி கண்ணைவடி வாளுக் கொப்பாக
வருணித்துச் சொல்வார்மதி வன்மை இல்லாதார்;
குருநலம் பேசுகின்ற கூகை மாந்தர்கள்
கும்பிக்கே இரையாவர் என்று ஆடுபாம்பே!

54. சிக்குநாறுங் கூந்தலையே செழுமை மேகமாய்ச்
செப்புவார்கள் கொங்கைதனைச் செப்புக் கொப்பதாய்.
நெக்குநெக்கு உருகிப்பெண்ணை நெஞ்சில் நினைப்பார்
நிமலனை நினையார் என்று ஆடுபாம்பே!

55. நாறிவரும் எச்சில்தனை நல்லமுதென்றும்
நண்ணுஞ்சளி நாசிதனை நற்கு மிழ்என்றும்
கூறுவார்கள் புத்தியில்லாக் கூகை மாந்தர்கள்;
கோன் நிலையை அறியார் என்று ஆடுபாம்பே!

---

49. காசினி-பூமி; மெய்யன்-தெய்வம்; 50, ஒயில்-ஒய்யாரம்; 51. ஒறுத்தோம்-தண்டித்தோம்; 53 கூகை-கோட்டான்; கும்பி.வயிறு; ஒரு நரகம். 54. செப்பு-பொற்கலசம். நெக்கு நெக்கு-மிக நெகிழ்ந்து; நிமலன்-கடவுள். 55. கோன்-தலைவன்;

56. மயில்என்றும் குயில்என்றும் மாணிக்கம்என்றும்
மானேயென்றும் தேனேயென்றும் வான் அமுதென்றும்
ஒயிலான வன்னமயிற் கொத்தவ ளென்றும்
ஓதாமற் கடிந்துவிட்டு ஆடு பாம்பே!

57. மின்னற்கொடி யென்றுஞ்சோதி விளக்கம் என்றும்
மெல்லியென்றும் வல்லியென்றும் மேனகையென்றும்
கன்னற்கட்டி யென்றுஞ்சீனிக் கற்கண்டு என்றும்
கழறுமல் கடிந்தோம்என்று ஆடு பாம்பே!

58. பூவையென்றும் பாவையென்றும் பொன்னேயென்றும்
பூந்திருவே என்றும் என்றன் பொக்கிஷம் என்றும்
கோவையென்றுங் கோதையென்றுங் கோகிலம் என்றும்
கூறுமல்து றந்தோம்நாம் என்று ஆடுபாம்பே!

59. மலக்குடம் மீதினிலே மஞ்சள் பூச்சென்றும்
மல்கும்புழுக் கூட்டின் மேல் வண்ணத் தோல்என்றும்
சலக்குழிக் குள்ளே நாற்றஞ் சார்ந்த சேறென்றும்
தான் அறிந்து தள்ளினேம் என்று ஆடு பாம்பே!

## சரீரத்தின் குணம்

60 ஊத்தைக் குழிதனிலே மண்ணை எடுத்தே
உதிரப்பு னலினிலே உண்டை சேர்த்தே
வாய்த்த குயவனார் அவர் பண்ணும் பாண்டம்
வறையோட்டுக்கும் ஆகாதென்று ஆடு பாம்பே!

61 இருவர்மண் சேர்த்திட ஒருவர் பண்ண
ஈரைந்து மாதமாய் வைத்த சூளை
அருமையாய் இருப்பினும் அந்தச் சூளை
அரைக் காசுக்கு ஆகாதென்று ஆடு பாம்பே!

62 பரியாசம் போலவே கடித்த பாம்பு
பலபேர் அறியவே மெத்த வீங்கிப்
பரியாரம் ஒருமாது பார்த்த போது
பையோடே கழன்றதென்று ஆடு பாப்பே!

63 சீயுமல முஞ்செறி செந் நீரும் நிணமும்
சேர்நதிடுதுர் நாற்றமுடைக் குடம் அது உடைந்தால்
நாயும்நரி யும்பெரிய பேயுங் கழுகும்
நமதென்றே தின்றிடும்என்று ஆடு பாம்பே!

64 நீரில்எழும் நீர்க்குமிழி நிலைகெடல் போல
நில்லாது உடல் நீங்கிவிடும் நிச்சயம் என்றே
பாரிற்பல உயிர்களைப் படைத்த வந்தனைப்
பற்றவேநீ பற்றித் தொடர்ந்து ஆடு பாம்பே!

---

57. கன்னல்-கரும்பு: 58, பூந்திரு—இலக்குமி; கோகிலம்—குயில்;
60. ஈரைந்து மாதம்— பத்து மாதம்;

65 நாறுமீனைப் பலதரம் நல்ல தண்ணீரால்
நாளுங் கழுவினும் அதன் நாற்றம் போமோ?
கூறும் உடல் பலநதி யாடிக் கொண்டதால்
கொண்டமலம் நீங்காதென்று ஆடு பாம்பே!

66 காய்த்த மரம் அதுமிக்க கல்லடி படும்;
கன்ம வினை கொண்ட காயம் கண்டனை பெறும்;
வாய்த்த தவம் உடையவர் வாழ்பவர் என்றே
வத்துத் திருவடி தொழுது ஆடுபாம்பே!

67 பேசரிய நவவாயில் பீற்றல் துருத்தி
பெருங்காற்றுள் புகுந்ததாற் பேச்சுண் டாச்சே!
ஈசன்நிலை அறியாருக்கு இந்தத் துருத்தி
எரிமண்ணிற்கு இரையாம் என்று ஆடு பாம்பே!

68 மரப்பாவை போலவொரு மண்ணுருச் செய்து
வளமான சீவன் என்னுஞ் சூத்திரம் மாட்டித்
திரைக்குள் இருந்தசைப்போன் தீர்ந்த பொழுதே
தேகம்விழும் என்று தெளிந்து ஆடுபாம்பே!

69 தசநாடி தசவாயு சத்த தாது
சார்ந்தமரக் கப்பல் அது தத்தி விழுமே
இசைவான கப்பலினை ஏக வெள்ளத்தில்
எந்நாளும் ஓட்டத் துணிந்து ஆடு பாம்பே!

## அகப்பற்று நீக்கல்

70 தாமரையின் இலையிலே தண்ணீர் தங்காத
தன்மைபோலச் சகத்தாசை தள்ளி விட்டெங்கும்
தூமணியாய் விளங்கிய சோதி பதத்தைத்
தொழுது தொழுது தொழுது ஆடு பாம்பே!

71 கள்ளங்கொலை காமமாதி கண்டித்த வெல்லாம்
கட்டறுத்து விட்டுஞானக் கண்ணைத் திறந்து
தெள்ளிதான வெட்டவெளி சிற்சொரூபத்தைத்
தேர்ந்து பார்த்துச் சிந்தை தெளிந்து ஆடுபாம்பே!

72 சொல்லும்புளி யம் பழத்தின் தோடு போலவே
சுற்றத்திருந்தாலும் அவர் தொந்தங்கள் அற்று

---

66, வத்து—பரம் பொருள்; 67 நவவாயில்-ஒன்பது துவாரம். 68. சூத்திரம்—தந்திரம், நூற்கயிறு. 69. தசநாடி-இடைகலை, பிங்கலை, சுழுமுனை, காந்தாரி. அத்திசிங்குவை சங்கினி. பூடா, குகு, கன்னி, அலம்புடை என்னும் பிராணவாயு இயங்கும் பத்து நாடிகள்; தசவாயு-பிராணன், அபானன், உதானன், வியானன், சாமனன், நாகன், கூர்மன், கிருகரன், தேவதத்தன், தனஞ்செயன் என்னும் பத்து வாயுக்கள்: சத்தாது-இரசம், உதிரம், எலும்பு, தோல், இரைச்சி, மூளை, சுக்கிலம் என்னும் ஏழுவகைப் பொருள்கள். 70. சகம்-உலகம்; 72 தோடு—மேலோடு; தொந்தம்-சம்பந்தம்;

நில்லுமனமே நீபர நின்மலத்திலே
நின்றனைதான் வெறும் பாழென்று ஆடுபாம்பே!

73 சேற்றில்திரி பிள்ளைப்பூச்சி சேற்றை நீக்கல்போல்
தேசத்தோடு ஒத்துவாழ்வார் செய்கை கண்டபின்
சாற்றுபர வெளிதனைச் சாரும் வழியே
தானடக்க வேணுமென்று ஆடுபாம்பே!

74 எண்ணெய்க்குந் தண்ணீர்க்குந் தொந்தம் இல்லா வாறுபோல்
எப்போதும் இப்புவியில் எய்த வேண்டும்;
கண்ணுக்குக் கண்ணான வொளி கண்டு கொள்ளவே
கட்டறுத்து வாழ்ந்திட நின்று ஆடுபாம்பே!

75 கக்கிவிட்ட சோறுகறி கந்த மூலங்கள்
கண்களுக்கு சுத்தமான காட்சி போலவே
சிக்கிக்கொண்ட சகத்தினைச் சீயென் றொறுத்துச்
சீர்பாதங் காணத் தெளிந்து ஆடுபாம்பே!

76 கோபம் என்னும். மதயானை கொண்ட மதத்தைக்
கூர்கொள யுத்தி அங்குசத்தால் கொன்று விட்டோங்காண்;
தீபமென்னுஞ் சிற்சொரூபச் செய்ய பொருளைச்
சேர்ந்துறவு கொண்டோம் என்று ஆடுபாம்பே!

77 நித்தியமென்னு மலையில்நின்று கொண்டோம்யாம்;
நினைத்தபடியே முடித்து நின்மல மானோம்:
சத்தியமாய் எங்கள் கடந்தான் அழியாதே
சந்ததமும் வாழ்வோம் என்று ஆடுபாம்பே!



78 மனமென்னும் குதிரையை வாகன மாக்கி
மதியென்னும் கடிவாளம் வாயினில் பூட்டிச்
சினமென்னும் சீனியின் மேற்சிராய் ஏறித்
தெளிவிடம் சாரிவிட்டு ஆடுபாம்பே!

79 ஆசையென்னுஞ் செருப்பின் மேல் அடியை வைத்தே
ஆங்கார முட்காட்டை அறவே மிதித்தே
காசையெனுந் துர்க்குணத்தில் கனலைக் கொளுத்திக்
காலாகாலங் கடந்தோம் என்று ஆடுபாம்பே!

80 காலன் எனுங் கொடிதான கடுப்ப கையைநாம்
கற்பமெனும் வாளினாலே கடிந்து விட்டோம்:
தாலமதிற் பிறப்பினைத் தானும் கடந்தோம்
தற்பரங் கண்டோம் என்று ஆடுபாம்பே!

---

75. கந்தமூலம்-கிழங்குகள்; 80 கற்பம்-ஆயுளை நீடிக்கச் செய்யும் மருந்து; தாலம்-உலகம்; தற்பரம்-பரம்பொருள்;

81 தேனில் வீழ்ந்த ஈயைப்போலச் சிந்தை குலைந்து
திகையாமல் சிற்சொரூப தெரிசனைகண்டு
வானிற் பறந் திடச்சூத வான்ம ணிதீர்ந்து
வாயிற் போட்டேக நீ நின்று ஆடுபாம்பே!

82 தூக்கியநற் பாதங்கண்டேன் சோதியுங் கண்டேன்:
சுத்த வெளிக்குள்ளேயொரு கூத்தனைக் கண்டேன்;
தாக்கிய சிரசின் மேல் தைத்த பாதம்
சற்குருவின் பாதம் என்று ஆடுபாம்பே!

83 ஆலடிப் பொந்தினிலே வாழ்ந்த பாம்பே!
அரசடிப் பொந்தினிலே புகுந்து கொண்டாய்;
வாலடி தன்னிலே பார்த்துப் பார்த்து
வாங்கியே தூங்கிநின்று ஆடுபாம்பே!

84 நாலு தெருவினிலே நாலு கம்பம்
நடுத்தெருவினிலேயோர் பொன்னுக் கம்பம்
போலும் விளங்குபொன்னுக் கம்பத்தினுக்கே
பூமாலை சூடியேநின்று ஆடுபாம்பே!

85 ஆழிபெயர்ந்தாலும் மேரு மட்டே அலையும்
அடியோடு பெயர்ந்தாலும் அன்றிக் கால
ஊழிபெயர்ந்தாலும் மதி உண்மைப் படிக்கே
உறுதி பெயராது நின்று ஆடுபாம்பே!

86 வாயுவினை இரையாக வாங்கி உண்டே
வருடிக்கு நீரினை வாயுள் மடுத்தே
தேயுபிறை குளிர்காய்ந்து வெட்ட வெளியில்
திகைப்புறச் சேர்ந்துநின்று ஆடு பாம்பே!

87. மாசில்கதி வளையிலே மண்டலம் இட்டே
மதியான பெரும்பட மடலை விரித்தே
ஆசில்பரா பரமான ஆதி பாதத்தை
அடுத்தடுத்தே துதித்து ஆடு பாம்பே!

88 காடுமலை நதிபதி காசி முதலாய்க்
கால்கடுக்க ஓடிற்பலன் காண லாகுமோ?
வீடுபெறும் வழிநிலை மேவிக் கொள்ளவே
வேதாந்தத் துறையில் நின்று ஆடுபாம்பே!

89 எள்ளளவும் அன்பகத்தில் இல்லா தார்முத்தி
எய்துவது தொல்லுலகில் இல்லையெனவே
கள்ளப்புலன் கட்டறுத்துக் கால காலனைக்
கண்டு தொழுதே களித்து ஆடு பாம்பே!

90 சூரியனைக் கண்டபனி தூர ஓடல் போல்
சொந்தபந்தஞ் சிந்தபரி சுத்த தலத்தில்

---

81. சூதவான்மணி—குளிகை. 89. காலகாலன்-சிவபிரான்; 90. சூரி யன்—குரு.

ஆரியனைக் கண்டுதரி சித்தே யன்புடன்
அகலாமல் பற்றித் தொடர்ந்து ஆடுபாம்பே!

91 காந்தம்வலி இரும்பு போல் காசில் மனத்தைக்
காட்சியான வத்துவுடன் கலக்கச் சேர்த்துச்
சாந்தமுடன் தோண்டியும் தாம்பும் போலச்
சலியாமல் தொடர்ந்து நின்று ஆடுபாம்பே!

92 உளியிட்ட கற்சிலையில் உண்டோ உணர்ச்சி?
உலகத்தின் மூடர்களுக் குண்டோ உணர்ச்சி?
புளியிட்ட செம்பிற்குற்றம் போமோ? அஞ்ஞானம்
போகாது மூடருக்கென்று ஆடுபாம்பே!

93 திரளான போரில்ஊசி தேடல் போல்முத்தி
சிக்காது தேசாசார தேசிகர் தம்மால்
அருளான மூலகுரு ஐயர் செயலால்
ஆனந்தங் கண்டோம் என்று ஆடுபாம்பே!

94 ஏட்டுச்சுரைக்காய் கறிக்கிங் கெய்திடாது போல்
எண்திசை திரிந்துங் கதி எய்தல் இலையே!
நாட்டுக்கொரு கோயிற்கட்டி நாளும் பூசித்தே
நாதன்பாதம் காணார்கள் என்று ஆடுபாம்பே!

95 தன்னையறிந்து ஒழுகுவோர் தன்னை மறைப்பார்;
தன்னையறியாதவரே தன்னைக் காட்டுவார்;
பின்னை யொரு கடவுளைப் பேண நினையார்
பேரொளியைப் பேணுவார் என்று ஆடுபாம்பே!

96 பாலிற்சுவை போலும் எங்கும் பாய்ந்த ஒளியைப்
பற்றுப்பொன் பற்றவைத்த பான்மைபோலே
காலிற்சுழு முனை நின்று கண்டு கொண்டு
களித்துக் களித்துநின்று ஆடுபாம்பே!

97 தேக்கெடுத்தே ஓடும்வானத் தேனை உண்டபின்
தேகபந்தம் கொண்டனம் இத் தேச வாழ்வினை
ஒக்காளமென்று எண்ணிமிகு ஓகையுடன் நீ
உள்ளம் தெளிந்துநின்று ஆடு பாம்பே!

98 சதுர்வேதம் ஆறுவகைச் சாத்திரம்பல
தந்திரம் புராணங்கலை சாற்றும் ஆகமம்
விதம்வித மானவான வேறு நூல்களும்
வீணான நூல்களேஎன்று ஆடு பாம்பே!

99 சமயபேதம் பலவான சாதி பேதங்கள்
சகத்தோர்க்கே அல்லாதுசற் சாதுக் களுக்கோ?
சிமயத்தி லேறினபேர் சித்தம் மாறுமோ?
சித்தர்சித் தாந்தந்தேர்ந்து ஆடு பாம்பே!

100 பூசைசெய்த தாலேசுத்த போதம் வருமோ?
பூமிவலஞ் செய்ததனாற் புண்ணியம் உண்டோ?

---

97. ஓகை-மகிழ்ச்சி; 100 போதம்-ஞானம்;

ஆசையற்ற காலத்திலே ஆதி வத்துவை
அடையலாம் என்று துணிந்து ஆடு பாம்பே!

1 மூலவேர் அறிந்து கொண்டால் மூன்று உலகமும்
முன்பாகவே கண்டு நித்ய முத்தி சேரலாம்;
சாலவேர் அறிந்ததாலே தான்பயன் உண்டோ?
சகத்தைப்பொய் யென்று தெளிந்து ஆடு பாம்பே!

2 சகத்தனுதி யென்றிடாது தான் அனுதியார்;
சமைந்ததென் றுஉரைப்பார்கள் சத்தை அறியார்;
மகத்துவ நிலைகற்பவன்மை யல்லாது
மற்றும்வன்மை இல்லையேஎன்று ஆடு பாம்பே!

3 ஆயிரத்தெட் டிதழ்வீட்டில் அமர்ந்த சித்தன்
அண்டம்எல்லாம் நிறைந்திடும் அற்புதச் சித்தன்
காயமில்லாது ஓங்கிவளர் காரணச் சித்தன்
கண்ணுள்ஒளி யாயினன் என்று ஆடு பாம்பே!

4 நாற்பத்துமுக் கோணநிலை நாப்பணதாக
நாடும் அக்க ரச்சொரூப நாய கன் தனை
மேற்படுத்திக் கொண்டால் அந்த மேலு லகெலாம்
மெல்லடிக்குத் தொண்டேயாம்என்று ஆடு பாம்பே!

5 கண்ட வர்கள் ஒருக்கா லும் விண்டி டார்களே:
விண் டவர்கள் ஒருக்காலும் கண்டி டார்களே!
கொண்டகோலம் உள்ளவர்கள் கோன் நிலை காணுர்;
கூத்தாடிக்கூத் தாடியேநீ ஆடு பாம்பே!

6 ஆறுகலைக் குச்சுக்குள்ளே ஆடும் ஒருவன்
அயல்வீடு போகுமுன்னே அரண்கோ லிக்கொள்ளு?
வேறுபட்டால் அவன் தனை மீட்டல் அரிதே;
மேவிமுன் னே விடாது கொண்டு ஆடு பாம்பே!

7 எண்ணரிய புண்ணியங்கள் எல்லாம் செய்தும்என்
ஏகன் அடி நெஞ்சமதில் எண்ணு விடிலே?
பண்ணரிய தவப்பயன்பத்தி இல்லையேல்
பாழ்படும் என்று துணிந்து ஆடு பாம்பே!

8 எவ்வுலகுஞ் சொந்தமதாய் எய்தும் பயன்என்
எங்கள் ஆதி பாதாம்புயம் எண்ணுக் காலையில்?
இவ்வுலக வாழ்வுதானும் இன்றே அறுமென்று
எண்ணிக் கர்த்தன் அடிநினைந்து ஆடு பாம்பே!

9 மணக்கோலங் கொண்டுமிக மனம கிழ்ந்துமே
மக்கள் மனை சுற்றத்தோடு மயங்கி நின்ருய்;
பிணக்கோலம் கண்டுபின்னுந் துறவா வீட்டில்
பிறப்புக்கே துணையாம்என்று ஆடு பாம்பே!

104 நாப்பணதாக — நடுவிலுள்ளது. 105 விண்டிடார்கள் — சொல்லமாட்டார்கள்.

110 பிறப்பையும் இறப்பையும் அறுத்து விடயான்
பெருமருந்து ஒன்றுசொல்வேன் பெட்புடன் கேளாய்;
திறப்புடன் மடைப்பூட்டுஞ் சிந்தைக் கதவும்
திறந்திடும் வகையறிந்து ஆடு பாம்பே!

1 இறந்தவர் ஐவர் அவர் இட்டமானவர்
எய்தும் அவர் இறந்தார் என்று எல்ல வர்க்குஞ்சொல்;
மறந்தவர் ஒருவர் என்றே மண்ணினில் உள்ளோர்
வகையறிந் திடவேநின்று ஆடு பாம்பே!

2 ஆகார முதலிலே பாம்ப தாக
ஆனந்த வயலிலே படம் விரித்தே
ஊகார முதலிலே யொத்து ஒடுங்கி
ஓடி வகாரத்தின் நாவைநீட்டிச்
சீகாரங் கிடந்ததோர் மந்திரத்தைச்
சித்தப் பிடாரனுர் போதஞ் செய்ய
மாகாரப் பிறப்பையும் வேர் அறுத்து
மாயபந்தம் கடந்தோம் என்று ஆடு பாம்பே!

3 தந்திரம் சொல்லுவார் தம்மை அறியார்;
தனிமந்திரஞ் சொல்லுவார் பொருளை அறியார்;
மந்திரம் செபிப்பார்கள் வட்ட வீட்டினுள்
மதிலினைச் சுற்றுவார் வாயில் காணுர்;
அந்தரம் சென்றுமே வேர் பிடுங்கி
அருள் என்னும் ஞானத்தால் உண்டை சேர்த்தே
இந்த மருந்தினைத் தின்பீராகில்
இனிப் பிறப்பு இல்லையென்று ஆடு பாம்பே!

4 களிமண்ணினுல் ஒரு கப்பல் சேர்த்தே
கனமான பாய்மரங் காண நாட்டி
அளி புலந் தன்னையே சுக்கானுக்கி
அறிவென்னும் ஆதாரச் சீனி தூக்கி
வெளியென்னும் வட்டத்தே யுள்ளடக்கி
வேதாந்தக் கடலினை வெல்ல வோட்டித்
தெளிவுறு ஞானியார் ஓட்டுங் கப்பல்
சீர் பாதஞ் சேர்ந்தது என்று ஆடு பாம்பே!

5 உள்ளத்துக் குள்ளேயே உணர வேண்டும்;
உள்ளும் புறம்பையும் அறிய வேண்டும்;
மெள்ளக் கனலை எழுப்ப வேண்டும்.
வீதிப் புனலிலே செலுத்த வேண்டும்!
கள்ளப் புலனைக் கடிந்து விட்டு
கண்ணுக்கு மூக்குமேற் காண நின்று
தெள்ளு பரஞ்சோதி தன்னைத் தேடிச்
சீர்பாதம் கண்டோம் என்று ஆடு பாம்பே!

---

111 எல்லவர்க்கும்-எல்லோருக்கும்; 113. அந்தரம்-ஆகாயம்;

6 ஓங்காரக் கம்பத்தின் உச்சி மேலே
உள்ளும் புறம்பையும் ஆறிய வேண்டும்;
ஆங்காரக் கோபத்தை அறுத்து விட்டே
ஆனந்த வெள்ளத்தைத் தேக்கிக் கொண்டே

சாங்காலம் இல்லாமல் தாணு வோடே
சட்ட திட்டமாய்ச் சேர்ந்து சாந்தமாகத்
தூங்காமல் தூங்கியே சுகம் அடைந்து
தொந்தோம் தொந்தோம் என்று ஆடு பாம்பே!

7 விரகக் குடத்திலே பாம்படைப்போம்!
வேதாந்த வெளியிலே விட்டே ஆட்டுவோம்;
கரணங்களைப் பிடுங்கி இரை கொடுப்போம்;
காலக் கடுவெளி நின்று ஆட்டுவிப்போம்;

துரகந் தனிலேறித் தொல் உலகெங்கும்
சுற்றி வலம் வந்து நித்ய சூட்சங் காண்டும்;
உரையற்ற மந்திரஞ் சொல்லி மீட்போம்;
ஒரு நான்கும் பெற்றோம் என்று ஆடு பாம்பே!

8 காயக் குடத்திலே நின்ற பாம்பைக்
கருணைக் கடலிலே தியங்க விட்டு
நேயச் சுழுமுனை நீடு பாய்ச்சி
நித்யமான வத்துவை நிலைக்க நாடி

மாயப் பெருவெளி தன்னில் ஏறி
மாசற்ற பொருளினை வாய்க்கத்தேடி
ஆயத் துறை கடந் தப்பாற் பாழின்
ஆனந்தஞ் சேர்ந்தோம் என்று ஆடு பாம்பே!

9 மூலத் தலத்திலே நின்ற கருத்தை
முற்றஞ் சுழுமுனை தன்னில் ஊடே
மேலத் தலத்திலே விந்து வட்டம்
வேலை வழியிலே மேவி வாழும்

பாலத் திருத்தாயக் கருணை யதனால்
பரகதி ஞான சொரூபமாகி
ஆலச் சயனத்து மாலுடன் நின்றே
ஆனந்தஞ் சேர்ந்தோம் என்று ஆடு பாம்பே!

120 புலன் ஐந்து வீதியில் வையாளி பாயும்
புரவி யெனும் மனத்தை ஒருமைப் படுத்தி
மலபந்த வுலகங் கடந்ததாலே
மன்னுகுரு பாதத்தின் நிலையை நாடித்

---

116. ஓங்காரம்-பிரணவத்திற்குக் காரணமான நாதம். தாணு-சிவன்;
119. ஆலம்-விஷம்;



தலம் ஐந்து பூலோகங் கடந்ததாலே
சந்திர மண்டிலமுங் கடந்த தாகும்;
அலமந்து பூலோகக் கூடலை நீக்கி
ஆனந்த மாகிநின்று ஆடு பாம்பே!

1 குருவென்னும் ஆசானின் உருவெடுத்துக்
குறியான ஞானந்துப் பாக்கி யாக்கி
அருளென்னும் அருளையே உண்டையாக்கி
ஆனந்த மாகவே அதைக் கடந்தே
மருளென்னும் மாதர்மன நெறியைத்தொட்டு
வாங்காமல் எரிந்திட நெட்டை யிட்டுப்
பருவலைக் குள்ளேயே பட்ட தென்றே
பற்றினைப் பற்றிநின்று ஆடு பாம்பே!

2 கன்னன் குகையிலே கான்மறிப்போம்;
கருமான் உலையிலே தீயை மூட்டுவோம்;
சொன்னார் தலையிலே பொன்னை ஆக்குவோம்;
சுருதி யருங்கலவி ஒப்பஞ் செய்வோம்;
மின்னார்கள் பாசத்தை விட்டே எரிப்போம்;
மெய்ப்பொருள் குறிகண்டு விருப்பை அடைவோம்;
பன்னாதே பன்னாதே சும்மா விருந்து
பராபரஞ் சேர்ந்தோம் என்று ஆடு பாம்பே!

3 சாதிப் பிரிவினிலே தீயை மூட்டுவோம்;
சந்தை வெளியினிலே கோலை நாட்டுவோம்;
வீதிப் பிரிவினிலே விளையாடிடுவோம்;
வேண்டாத மனையினில் உறவு செய்வோம்;
சோதித் துலாவியே தூங்கி விடுவோம்;
சுகமான பெண்ணையே சுகித்திருப்போம்;
ஆதிப் பிரமர்கள் ஐந்து பேரும்
அறியார்கள் இதையென்று ஆடு பாம்பே!

4 நெட்டெழுத்து அதனிலே நிலைபிடித்து
நீங்கர எழுத்திலே வாலை முறுக்கி
விட்டு அவ் எழுத்திலே படம்விரித்து
விண்ணின் வழியிலே மேவி யாடி
பட்ட எழுத்தையும் பதிந்திருப்போம்
பன்னிரண் டாமெழுத்தில் பன்னிக் கூடித்
திட்டமுடன் எமக்கருள் தேசிக னார் தம்
சீர்பாதஞ் சேர்ந்தோம் என்று ஆடு பாம்பே!

5 ஊசித்துளைக் குடத்தினில் பாம்பை அடைப்போம்;
உலகெலாம் சுற்றியே உலாவி வருவோம்;
மாசுள்ள பிறவியை மறந்திருப்போம்;
மனமொத்த வெளியிலே விட்டே ஆட்டுவோம்;

மாசுப் புலன்களை இரைகொடுப்போம்;
மனமுற்ற உச்சியில் ஏறி ஆடுவோம்;
பேசும் எழுத்தையும் விழுங்கி விடுவோம்;
பிறப்பு இறப்பு அற்றோம்என்று ஆடு பாம்பே!

6 ஆணிக் குடத்திலே பாம்படைப்போம்;
அக்கினிக் கோட்டை மேல் ஏறிப் பார்ப்போம்;
மாணிக்கத் தூணின் மேல் விட்டே ஆட்டுவோம்;
மனம்வாக்குக் காயத்தை இரைகொடுப்போம்;
நாணிக் கயிற்றையும் அறுத்து விடுவோம்;
நமனற்ற நாதன் பதம் நாடியே நிற்போம்;
ஏணிப் படிவழிகண்டு ஏறி விடுவோம்;
யாரும்இதை அறியார்என்று ஆடு பாம்பே!

7 வடக்குங் கிழக்குமாக நூலை இழைப்போம்;
மற்றுஞ் சுழலிமேல பாவு பூட்டுவோம்;
நடக்கும் வழியினிலே உண்டை சேர்ப்போம்;
நடவா வழியினிலே புடைவை நெய்வோம்
குடக்குக் கரையினிலே கோலைப் போடுவோம்;
கொய்ததை எங்குமே விற்று விடுவோம்;
அடக்கியே ஏகத்துள்ளே வைக்கவும் வல்லோம்;
ஆதிபதங் கண்டோம் என்று ஆடு பாம்பே!

8 சூத்திரக் குடத்திலே பாம்பை அடைப்போம்;
சுழுமுனைக் குள்ளேயே சுகித்திருப்போம்;
பாத்திரங் கொண்டுமே பலிஇரப்போம்;
பத்தெட்டு மூன்று படிகடந்தோம்;
ஊத்தைச் சடத்தினைப் புடமிடுவோம்;
உளவன் எமக்குநல் உறுதி சொல்லப்
பார்த்துரை இதன்மெய் பலிக்கஎண்ணிப்
பதனம் பதனம்என்று ஆடு பாம்பே!

9 மவ்வக் குடத்திலே பாம்படைப்போம்;
மணிவட்ட வாசியை வாரி உண்போம்;
வவ்வக் குடங்களைத் தள்ளி விடுவோம்;
வக்கிர சொப்பனந் தாண்டி விடுவோம்;
பவ்வ வெளியிலே விட்டே ஆட்டுவோம்;
பஞ்ச கருவியைப் பலிகொடுப்போம்;
சிவ்வுரு வாகியே நின்றோம் என்றே
சீர்பாதம் கண்டுதெளிந்து ஆடு பாம்பே!





# இடைக் காட்டுச் சித்தர்

## பாடல்

### காப்பு

ஆதி யந்தமில் லாதவ னுதிபைத்
தீது றும்பவந் தீப்படு பஞ்சுபோல்
மோது றும்படி முப்பொறி யொத்துறக்
காத லாகக் கருத்தற் கருதுவாம்.

### தாண்டவராயக்கோனுர் கூற்று!

1 எல்லா உலகமும் எல்லா உயிர்களும்
எல்லாப் பொருள்களும் எண்ணரிய
வல்லாளன் ஆதி பரம சிவனது
சொல்லால் ஆகுமே கோனுரே!

2 வானியல் போல் வயங்கும் பிரமமே
சூனியம் என்றறிந்து ஏத்தாக்கால்
ஊனியல் ஆவிக்கு ஒருகதி இல்லையென்று
ஓர்ந்துகொள் ளுவீர் நீர் கோனுரே!

3 முத்திக்கு வித்தான மூர்த்தியைத் தொழுது
முத்திக்கு உறுதிகள் செய்யாக்கால்
சித்தியும் பத்தியும் சத்தியும் முத்தியும்
சேரா வாகுமே கோனுரே!

4 தொல்லைப் பிறவியின் தொந்தமுற்று அறவே
சோம்பலற் றுத்தவஞ் செய்யாக்கால்
ஆரண மூலத்தை அன்புட னேபர
மானந்தக் கோலத்தைப் பண்புடனே

5 பூரண மாகவே சிந்தித்து மெய்ஞ்ஞானப்
போதத்தைச் சார்ந்திரும் கோனுரே!

### அருஞ்சொற் பொருள்

2, வயங்கும்-விளங்கும்;

எல்லையில் கடவுள் எய்தும் பதம்உமக்கு
இல்லையென்று எண்ணுவீர் கோனாரே!

6 காலா காலங் கடந்திடும் சோதியைக்
கற்பனை கடந்த அற்புதத்தை
நூலாற் பெரியவர் சொன்னநுண் பொருளை
நோக்கத்திற் காண்பது கோனாரே!

7 சொல்லருஞ் சகள நிட்களம் ஆனதைச்
சொல்லினுஞ் சொல்லாமல் கோனாரே!
அல்லும் பகலும் அகத்தில் இருத்திடில்
அந்தகன் கிட்டுமோ கோனாரே!

8 சூரியன் வாள்பட்ட துய்ய பனிகெடுந்
தோற்றம்போல் வெவ்வினை தூள்படவே
நாரிஇடப்பாகன் தாள்நெஞ்சிற் போற்றியே
நற்கதி சேர்ந்திடும் கோனாரே!

9 மும்மலம் நீக்கிட முப்பொறிக்கு எட்டாத
முப்பாழ் கிடந்ததாம் அப்பாழைச்
செம்மறி யோட்டிய வேலை யமயத்தும்
சிந்தையில் வைப்பீரே கோனாரே!

10 பஞ்ச விதமாய்ச் சஞ்சலம் பறக்கப்
பற்றற்ற நின்றதைப் பற்றி அன்பாய்
நெஞ்சகத்து இருத்தி இரவு பகலுமே
நேசித்துக் கொள்ளுவீர் கோனாரே!

## நாராயணக்கோனார் கூற்று

11 சீரார் சிவக்கொழுந்தைத் தெள்ளமுதைச் செந்தேனைப்
பாராதி வான் பொருளைப் பஞ்ச உரு ஆனஒன்றை
பேரான விண்ணொளியைப் பேரின்ப வாரிதியை
நேராக எந்நாளும் நெஞ்சு இருத்தி வாழ்வேனே.

12 கண்ணுள் கருமணியைக் கற்பகத்தைக் காஞ்சனத்தைப்
பெண்ணுருவப் பாதியனைப் பேசரிய முப்பொருளை
விண்ணின் அமுதை விளக்கொளியை வெங்கதிரைத்
தண்ணளியை உள்ளில் வைத்து சாரூபஞ் சாருவனே.

13 மனமென்னும் மாடு அடங்கில் தாண்டவக்கோனே!-முத்தி
வாய்த்ததென்று எண்ணேடா தாண்டவக்கோனே!

14 சினமென்னும் பாம்பு இறந்தால் தாண்டவக்கோனே!-யாவுஞ்
சித்தியென்றே நினையேடா தாண்டவக்கோனே!

---

7. சகள-உருவுள்ளது. நிட்களமானது-உருவம் இல்லாதது. அந்தகன்-குருடன்; 8. நாரி இடப்பாகன்-அர்த்தநாரீஸ்வரன்; 9. முப்பாழ்-விந்து, மோகினி, மான் ஆகிய மூன்று மாயை; 11. வாரிதி-கடல்; 12 சாரூபம்-கடவுளைப் போல் உருவம் பெறுதல்;

15 ஆசையெனும் பசுமாளின் தாண்டவக்கோனே!-இந்த
அண்டமெல்லாம் கண்டறிவாய் தாண்டவக்கோனே!

16 ஓசையுள் அடங்கு முன்னம் தாண்டவக்கோனே!-மூல
ஓங்காரங் கண்டறி நீ தாண்டவக்கோனே!

17 மூலப்பகுதியறத் தாண்டவக்கோனே!-உள்ளம்
முளைத்தவேர் பிடுங்கேடா தாண்டவக்கோனே!

18 சாலக் கடத்தியல்பு தாண்டவக்கோனே!-மலச்
சாலென்றே தேர்ந்தறி நீ தாண்டவக்கோனே!

19 பற்றே பிறப்புண்டாக்கும் தாண்டவக்கோனே-அதைப்
பற்றாது அறுத்து விடு தாண்டவக்கோனே!

20 சற்றே பிரமத்திச்சை தாண்டவக்கோனே!-உன்னுள்
சலியாமல் வைக்கவேண்டும் தாண்டவக்கோனே!

21 அவித்தவித்து முளையாதே தாண்டவக்கோனே!-பத்தி
அற்றவர் கதியடையார் தாண்டவக்கோனே!

22 செவிதனிற் கேளாத மறை தாண்டவக்கோனே-குரு
செப்பில் வெளியாம் அல்லவோ தாண்டவக்கோனே!

23 மாடும் மனைகளும் மக்களுஞ் சுற்றமும் வான்பொருளும்
வீடும் மணிகளும் வெண்பொன்னுஞ் செம்பொன்னும் வெண்கலமும்
காடுங் கரைகளும் கல்லாம் பணியுங் கரிபரியும்
தேடும்பலபண்டம் நில்லா; சிவகதி சேர்மின்களே!

24. போகம்போம் போக்கியம்போம் போசனம் போம் புன்மை போம்;
மோகம்போம் மூர்க்கம்போம் மோசம்போம்-தாகம்போம்;
வேத முதல் ஆகமங்கள் மேலானதென்று பல்கால்
ஓது பிரமத்து உற்றக் கால்.

தாண்டவராயக்கோனார் கூற்று



தாந்தி மித்திமி தந்தக்கோனாரே!
தீந்தி மித்திமி திந்தக்கோனாரே!

ஆநந்தக் கோனாரே!-அருள்
ஆநந்தக் கோனாரே!

25 ஆயிரத்தெட்டு வட்டமுங் கண்டேன்
அந்த வட்டத்துள்ளே நின்றதுங் கண்டேன்;
மாயிரு ஞாலத்து நூற்றெட்டும் பார்த்தேன்;
மந்த மனத்துறும் சந்தேகம் தீர்ந்தேன். [தாந்]

---

18. மலச்சால்- மலம் நிரம்பிய பாத்திரம்; 24, போக்கியம்-அனுபவம்
புன்மை- அற்பம்; பல்கால்- பலமுறை;

26 அந்தக் கரணமே னச்சொன்ளுல் ஆட்டையும்
அஞ்ஞானம் என்னும் அடர்ந்தவன் காட்டையும்
சந்தத் தவமென்னுப் வாளினுல் வெட்டினேன்
சாவாது இருந்திடக் கோட்டையுங் கட்டினேன் [தாந்]

27 மெய்வாய்கண் மூக்குச் செவியெனும் ஐந்தாட்டை
வீறுஞ் சுவையொளி யூருேசை யாங்காட்டை
எய்யாமல் ஓட்டினேன் வாட்டினேன் ஆட்டினேன்
ஏக வெளிக்குள்ளே யோக வெளிக்குள்ளே. [தாந்]

28 பற்றிரண் டும்அறப் பண்புற்றேன் நண்புற்றேன்
பாலேயும் உட்கொண்டேன் மேலேயாங் கட்கண்டேன்
சிற்றின்பம் நீக்கினேன் மற்றின்பம் நோக்கினேன்
சிற்பரஞ் சேர்ந்திட்டேன் தற்பரஞ் சார்ந்திட்டேன். [தாந்]

29 அண்ணுக்கை யூடே யடைத்தே அமுதுண்ணேன்
அந்தரத் தரத்தை அப்பொழு தேயெண்ணேன்
விண்ணுளும் மொழியை மேவிப் பூசை பண்ணேன்
மெய்ஞ்ஞானம் ஒன்று அன்றி வேறேஒன் றைநண்ணேன். [தாந்]

30 மண்ணுதி பூதங்கள் ஐந்தையுங் கண்டேனே
மாயா விகாரங்கள் யாவையும் விண்டேனே
விண்ணுளி மொழியை மெய்யினுள் கொண்டேனே
மேதினி வாழ்வினே மேலாக வேண்டேனே. [தாந்]

31 வாக்காதி ஐந்தையும் வாகாய்த் தெரிந்தேனே
மாயைசம் பந்தங்கள் ஐந்தும் பிரிந்தேனே
நோக்கரு யோகங்கள் ஐந்தும் புரிந்தேனே
நுவலுமற்ற ஐந்தியோக நோக்கம் பரிந்தேனே. [தாந்]

32. ஆருதாரத்தெய் வங்களே நாடு
அவர்க்கும் மேலான ஆதியைத் தேடு;
கூருன வட்டஆ னந்தத்திற் கூடு
கோசமைந் துங்கண்டு குன்றேறி ஆடு. [தாந்]

நாராயணக் கோனுர் கூற்று

33 ஆதிபகவனேயே
அன்பாய் நினைப்பாயேல் பசுவே!
சோதி பரகதிதான்
சொந்தமது ஆகாதோ? பசுவே!

34 எங்கும் நிறைபொருளேப்
எண்ணிப் பணிவாயேல் பசுவே!
தங்கும் பரகதியில்
சந்ததஞ் சாருவையே. பசுவே!

35 அல்லும் பகலும்நிதம்
ஆதி பதந்தேடில் பசுவே!

---

29. நண்ணேன்-நாடேன்; 32. கோசம்-கருப்பை;

புல்லும் மோட்சநிலை பசுவே!
பூரணங் காண்பாயே.

36 ஒன்றைப் பிடித்தோர்க்கே பசுவே!
உண்மை வசப்படுமே;
நின்ற நிலைதனிலே பசுவே!
நேர்மை அறிவாயே.

37 எல்லாம் இருந்தாலும் பசுவே!
ஈசர் அருள்இலை யேல்
இல்லாத் தன்மையென்றே பசுவே!
எண்ணிப் பணிவாயே.

38 தேவன் உதவியின்றிப் பசுவே!
தேர்ந்திடில் வேறொன்றில்லை.
ஆவிக்கும் ஆவியதாம் பசுவே!
அத்தன் திருவடியே.

39 தாயினும் அன்பன் அன்றோ பசுவே!
சத்திக்குள் ளானவன் றான்?
நேயம் உடையவர்பால் பசுவே!
நீங்காது இருப்பானே.

40. முத்திக்கு வித்தானோன் பசுவே!
மூலப் பொருளானோன்.
சத்திக்கு உறவானோன் பசுவே!
தன்னைத் துதிப்பாயே.

41 ஐயன் திருப்பாதம் பசுவே!
அன்புற்று நீ பணிந்தால்
வெய்ய வினைகளெல்லாம் பசுவே!
விட்டோடுங் கண்டாயே.

42 சந்திர சேகரன் தாள் பசுவே!
தாழ்ந்து பணிவாயேல்
இந்திரன் மான்முதலோர் பசுவே!
ஏவல் புரிவரே.



43 கட்புலன் காண ஒண்ணாப் பசுவே!
கர்த்தன் அடியிணையை
உட்புலன் கொண்டேத்திப் பசுவே!
உன்னதம் எய்வாயே.

44 சுட்டியுங் காண ஒண்ணாச் பசுவே!
சூனிய மானவத்தை
ஒட்டிப் பிடிப்பாயேல் பசுவே!
உன்னை நிகர்ப்பவர் யார்?

---

38. அத்தன்-தந்தை; 40. முத்தி-மோட்சம்; 41. ஐயன்-கடவுள்; வெய்ய-கொடிய; 42. கட்புலன்-கண்ணால்; 44. ஒட்டி-நெருக்கமாகப்பற்றி;

45 தன்மனந் தன்னுலே பசுவே!
தானுவைச் சாராதார்
வன்மரம் ஒப்பாக பசுவே பசுவே!
வையத்து உறைவாரே.

46 சொல்லென்னும் நற்பொருளாம் பசுவே!
சோதியைப் போற்ருக்கால்
இல்லென்று முத்திநிலை பசுவே!
எப்பொருளுஞ்சொலுமே!

பலரொடு கிளத்தல்: (குறள் வெண் செந்துறை)

47 கண்ணுள் மணியைக் கருதிய பேரொளியை
விண்ணின் மணியை விளக்கொளியைப் போற்றீரே.

48 மனம்வாக்குக் காயம்எனும் வாய்த்தபொறிக்கு எட்டாத
தினகரனை நெஞ்சமதில் சேவித்துப் போற்றீரே.

49 காலமூன் றுங்கடந்த கதிரொளியை உள்ளத்தால்
சாலமின்றிப் பற்றிச் சலிப்பறவே போற்றீரே.

50 பாலிற் சுவைபோலும் பழத்தில் மதுப்போலும்
நூலிற் பொருள்போலும் நுண்பொருளைப் போற்றீரே

51 மூவர் முதலை முக்கனியைச் சர்க்கரையைத்
தேவர் பொருளைத் தெள்ளமுதைப் போற்றீரே.

52 தூய மறைப்பொருளைச் சுகவாரிதிஅமிர்தை
நேயமுடன் அருள்நிலை பெறவே போற்றீரே.

53 சராசரத் தைத்தந்த தனிவான மூலம் என்னும்
பராபரத்தைப் பற்றிப் பவமறவே போற்றீரே.

54 மண்ணுதி பூதமுதல் வகுத்ததொரு வான்பொருளைக்
கண்ணுரக் காணக் கருத்திசைந்து போற்றீரே.

55 பொய்ப் பொருளை விட்டுப் புலமறிய ஒண்ணுத
மெய்ப்பொருளை நாளும் விருப்புற்றுப் போற்றீரே.

56 எள்ளில் தைலம் போல் எங்கும் நிறைபொருளை
உள்ளில் துதித்தே உணர்வடைந்து போற்றீரே.

நெஞ்சொடு கிளத்தல்

57 பூமியெல்லாம் ஓர் குடைக்கீழ்ப் பொருந்தஅர சாளுதற்குக்
காமியம் வைத்தால் உனக்குக் கதியுளதோ
கன்மனமே!



58 பெண்ணுசை யைக்கொண்டு பேணித்
திரிந்தக்கால்
விண்ணுசை வைக்க விதியிலையே கன்மனமே!

---

48. பொறி-இந்திரியம்; தினகரன்-சூரியன்; 51. மூவர்முதல்-மும்மூர்த்திகளின் தலைவன்; 52. மறை-வேதம்; சுகவாரிதி-இன்பக் கடல்; 53 சாரசரம் உலகம்; பவம்-பிறப்பு; 54. வகுத்த-படைத்த; 57. காமியம்-விருப்பம்;

59 மேயும் பொறிகடமை மேலிடவொட் டார்க்குவினை
தேயும்என்றே நல்வழியில் செல்லுநீ கன் மனமே!

60 பொன்னிச்சை கொண்டு பூமிமுற்றும் திரிந்தால்
மன்னிச்சை நோக்கம் வாய்க்குமோ கன்மனமே!

61 பொய்யான கல்விகற்றுப் பொருள்மயக்கங் கொள்ளாமல்
மெய்யான ஞானக்கல்வி விரும்புவாய் கன் மனமே!

62 பேய்க்குரங்கு போலப் பேருலகில் இச்சைவைத்து
நாய் நரிகள் போல்அலைந்தால் நன்மையுண்டோ கன் மனமே!

63 இரும்பைஇழுக் குங்காந்தத்து இயற்கைபோல் பல் பொருளை
விரும்பினதால் அவை நிலையோ? விளம்புவாய் கன்மனமே!

64 கற்பநிலை யால் அலவோ கற்பகா லங்கடத்தல்?
சொற்பநிலை மற்றநிலை சூட்சங்காண் கன்மனமே!

65 தேகம் இழப்பதற்குச் செபஞ்செய்தென் தவஞ்செய்தென்?
யோகமட்டுஞ் செய்தால்என்? யோசிப்பாய் கன்மனமே!

66 சாகாது இருப்பதற்குத் தான் கற்ற கல்வியன்றே
வாகான மெய்க்கல்வி? வகுத்தறிநீ கன் மனமே!

அறிவொடு கிளத்தல்

67 எல்லாப் பொருள்களையும் எண்ணப் படிபடைத்த
வல்லாளன் தன்னை வகுத்தறிநீ புல்லறிவே!

68 கட்புலனுக்கு எவ்வளவுங் காணாது இருந்தெங்கும்
உட்புலனாய் நின்றஒன்றை உய்த்தறிநீ புல்லறிவே!

69 விழித் திருக்கும் வேளையிலே விரைந்துறக்கம் உண்டாகும்
செழித்திலங்கும் ஆன் மாவைத் தேர்ந்தறிநீ புல்லறிவே!

70 மெய்யில் ஒரு மெய்யாகி மேலாகிக் காலாகிப்
பொய்யில் ஒரு பொய்யாகும் புலமறிநீ புல்லறிவே!

71 ஆத்துமத்தின் கூறான அவயவப்பேய் உன்னுடனே
கூத்துப் புரிகின்ற கோள் அறிவாய் புல்லறிவே

72 இருட்டறைக்கு நல்விளக்காய் இருக்கும்உன்றன் வல்லமையை
அருள்துறையில் நிறுத்திவிளக்கா குக நீ புல்லறிவே!

73 நல்வழியிற் சென்று நம்பதவி எய்தாமல்
கொல்வழியிற் சென்று குறுகுவதேன் புல்லறிவே!

74 கைவிளக்குக் கொண்டு கடலில்வீழ் வார்போல.
மெய்விளக்குன் னுள்ளிருக்க வீழ்குவதேன் புல்லறிவே!

75 வாசிக்கு மேலான வான்கதியுன் னுள்ளிருக்க
யோசிக்கு மேற்கதிதான் உனக்கரிதோ புல்லறிவே!

---

66 வகுத்தறி-ஆராய்ந்து அறிதல்; 70. கால்-காற்று; 71.புல்லறிவு-அற்ப அறிவு; 75 வாசி-பிராண வாயுவு.

76 அன்னையைப் போல் எவ்வுயிரும் அன்புடனே காத்துவரும்
முன்னவனைக் கண்டு முக்தியடை புல்லறிவே!

சித்தத்தொடு கிளத்தல்

77 அஞ்ஞானம் போயிற்று என்று தும்பீபற—பர
மானந்தங் கண்டோம் என்று தும்பீபற!
மெய்ஞ்ஞானம் வாய்த்ததென்று தும்பீபற-மலை
மேலேறிக் கொண்டோம் என்று தும்பீபற!

78 அல்லல்வலை இல்லையென்றே தும்பீபற-நிறை
ஆணவங்கள் அற்றோம் என்றே தும்பீபற!
தொல்லைவினை நீங்கிற்று என்றே தும்பீபற-பரஞ்
சோதியைக் கண்டோம் எனத் தும்பீபற!

79 ஐம்பொறி அடங்கினவே தும்பீபற-நிறை
அருவே பொருளாம் எனத் தும்பீபற-
செம்பொருள்கள் வாய்த்தனவே தும்பீபற-ஒரு
தெய்வீகங் கண்டோம் என்றே தும்பீபற!

80 மூவாசை விட்டோம் என்றே தும்பீபற-பர
முத்திநிலை சித்தியென்றே தும்பீபற!
தேவாசை வைத்தோம் என்று தும்பீபற!-இந்தச்
செகத்தை ஒழித்தோம் என்று தும்பீபற!

81 பாழ்வெளியை நோக்கியே தும்பீபற-மாயைப்
பற்றற்றோம் என்றேநீ தும்பீபற!
வாழ்விடம் என்றெய்தோம் தும்பீபற-நிறை
வள்ளல்நிலை சார்ந்தோமே தும்பீபற!

82 எப்பொருளுங் கனவென்றே தும்பீபற-உல
கெல்லாம் அழியும் என்றே தும்பீபற!
அப்பிலெழுத் துடல்என்றே தும்பீபற-என்றும்
அழிவல்லாதது ஆதியென்று தும்பீபற!

குயிலொடு கிளத்தல்

83 கரணங்கள் ஒருநான்கும் அடங்கினவே-கெட்ட
காமமுதல் ஓராறும் ஒடுங்கினவே;
சரணங்கள் ஒருநான்குங் கண்டனம் என்றே-நிறை
சந்தோட மாகவே கூவுகுயிலே!

84 உலகம் ஓக்காளமாம் என்று ஓதுகுயிலே-எங்கள்
உத்தமனைக் காண்பரிதென்று ஓது குயிலே!
பலமதம் பொய்மையே என்று ஓதுகுயிலே-எழு
பவம் அகன்றிட்டோம் நாம் என்று ஓதுகுயிலே!

---

80. மூவாசை-மண்ணாசை, பொன்னாசை, பெண்ணாசை' தேவாசை-கட வுள் மீது கொண்ட பக்தி; 82. அப்பு—நீர்;

85 சாதனங்கள் செய்தவர்கள் சாவார் குயிலே-எல்லாத்
தத்துவங்கள் தேர்ந்தவர்கள் வேவார் குயிலே!
மாதவங்கள் போலும்பலன் வாயாகுயிலே-மூல
மந்திரங்கள் தான் மகிமை வாய்க்கும் குயிலே!

86 எட்டிரண்டு அறிந்தோர்க்கு இடர் இல்லைகுயிலே-மனம்
ஏகாம னிற்கிற்கதி எய்துங்குயிலே!
நட்டணையைச் சார்ந்தறிந்து கொள்ளுகுயிலே-ஆதி
நாயகனை நினைவில் வைத்து ஓதுகுயிலே!

மயிலொடு கிளத்தல்

87 ஆடுமயிலே நடமாடுமயிலே! எங்கள்
ஆதியணி சேடனைக் கண்டு ஆடுமயிலே!
கூடுபோகு முன்னங்கதி கொள்ளுமயிலே-என்றுங்
குறையாமல் மோன நெறி கொள்ளுமயிலே!

88 இல்லறமே அல்லலாம் என்று ஆடுமயிலே-பத்தி
இல்லவர்க்கு முத்திசித்தி இல்லைமயிலே!
நல்லறமே துறவறங் காணுமயிலே-சுத்த
நாதாந்த வெட்டவெளி நாடுமயிலே!

89 காற்றானைப் போல்மனத்தைக் காட்டுமயிலே!-வரும்
காலனையும் தூரத்தில் ஓட்டுமயிலே!
பாற்றாடுருவவே பாயுமயிலே-அகப்
பற்றுச் சற்றும் இல்லாமற் பண்ணுமயிலே!

அன்னத்தொடு கிளத்தல்

90 சிறுதவளை தான் கலக்கிற் சித்திரத்தின் நிழல் மறையும்
மறுவாயைத் தான் கலக்கின் மதிமயங்கும் மடவனமே!

91 காற்றின் மரமுறியும் காட்சியைப்போல் நல்லறிவு
தூற்றிவிடில் அஞ்ஞானம் தூரப்போம் மடவனமே!

92 அக்கினியாற் பஞ்சுபொதி அழிந்திட்ட வாறேபோல்
பக்குவநல் அறிவாலே பாவம்போம் மடவனமே!

93 குளவிபுழு வைக்கொணர்ந்து கூட்டில் உருப் படுத்தல்போல்
வளமுடைய வன்மனத்தை வசப்படுத்து மடவனமே

94 அப்புடனே யுப்புச் சேர்ந் தளவுசரி யானதுபோல்
ஒப்புறவே பிரமமுடன் ஒன்றி நில்லு மடவனமே!

95 காய்ந்த இரும்புநிறங் காட்டுதல்போல் ஆத்துமத்தை
வாய்ந்திலங்கச் செய்து வளப்பெறுநீ மடவனமே!

புல்லாங்குழலூதல்

96 தொல்லைப் பிறவி தொலைக்கார்க்கு முத்திதான்
இல்லை என்று ஊதுகுழல்-கோனே!
இல்லையென்று ஊதுகுழல்.

---

85. வாயா—வாய்க்காது; 86. நட்டணை-நடிப்பு;

97 இந்திர போகங்கள் எய்தினுந் தொல்லை என்று
அந்தமாய் ஊதுகுழல்-கோனே!
அந்தமாய் ஊது குழல்

98 மோன நிலையினில் முத்தி உண்டாம் என்றே
கானமாய் ஊதுகுழல் கோனே!
கானமாய் ஊது குழல்.

99 நாய்போற் பொறிகளை நானுவி தம்விட்டோர்
பேயரென்று ஊதுகுழல்-கோனே
பேயரென்று ஊதுகுழல்.

100 ஓடித்திரிவோர்க்கு உணர்வுகிட் டும்படி
சாடியே ஊதுகுழல்-கோனே!
சாடியே ஊதுகுழல்.

1 ஆட்டுக் கூட்டங்களை அண்டும் புலிகளை
ஓட்டியே ஊதுகுழல்-கோனே
ஓட்டியே ஊது குழல்

2 மட்டிக் குணமுள்ள மாரீச நாய்களைக்
கட்டிவைத்து ஊதுகுழல்-கோனே!
கட்டிவைத்து ஊதுகுழல்.

3 கட்டாத நாயெல்லாம் காவலுக் கெப்போதும்
கிட்டாவென்று ஊதுகுழல்-கோனே!
கிட்டாவென்று ஊதுகுழல்.

4 பெட்டியிற் பாம்பெனப் பேய்மனம் அடங்க
ஓட்டியே ஊதுகுழல்-கோனே!
ஓட்டியே ஊதுகுழல்.

5 எனதென்றும் யானென்றும் இல்லா திருக்கவே
தனதாக ஊதுகுழல்-கோனே!
தனதாக ஊதுகுழல்.

6 அற்ற விடமொன்றே
அற்றதோடு உற்றதைக்
கற்றதென்று ஊதுகுழல்-கோனே!
கற்றதென்று ஊதுகுழல்



பால் கறத்தல்

107 சாவாது இருந்திடப் பால்கற-சிரம்
தன்னில் இருந்திடும் பால்கற;
வேவாது இருந்திடப் பால்கற-வெறு
வெட்ட வெளிக்குள்ளே பால்கற;

108 தோயாது இருந்திடும் பால்கற,
தொல்லை வினையறப் பால்கற



102 மட்டி-மூட; மாரீச-வஞ்சக;

வாயால் உமிழ்ந்திடும் பால்கற-வெறு
வயிருர உண்டிடப் பால்கற.

109 நாரு திருந்திடும் பால்கற-நெடு
நாளும் இருந்திடப் பால்கற
மாரூது ஒழுகிடும் பால்கற-தலை
மண்டையில் வளரும் பால்கற,

110 உலகம் வெறுத்திடும் பால்கற-மிக
ஒக்காளம் ஆகிய பால்கற:
கலசத்தினுள் விழப் பால்கற நிறை
கண்டத்தின் உள்விழப் பால்கற.

111 ஏப்பம் விடாமலே பால்கற-வரும்
ஏமன் விலக்கவே பால்கற;
தீப்பொறி ஓய்ந்திடப் பால்கற-பர
சிவத்துடன் சாரவே பால்கற.



112 அண்ணுவின் மேல்வரும் பால்கற-பேர்
அண்டத்தில் ஊறிடும் பால்கற;
விண்ணுட்டில் இல்லாத பால்கற-தொல்லை
வேதனை கெடவே பால்கற.

## கிடை கட்டுதல்

113 இருவினையாம் மாடுகளை ஏகவிடு கோனே!-உன்
அடங்குமன மாடொன்றை அடக்கிவிடு கோனே!

114 சாற்றரிய நைட்டிகரே தற்பரத்தைச் சார்வார்-நாளும்
தவமவமாகக் கழிப்பவரே சனனமதில் வருவார்,

115 அகங்கார மாடுகள் மூன்று அகற்றிவிடு கோனே-நாளும்
அவத்தையெனும் மாடதை நீ அடக்கி விடு கோனே!

116 ஒரு மலத்தன் எனுமாட்டை ஒதுக்கிக் கட்டு கோனே!-உடன்
உறையுமிரு மலந்தனையும் ஒட்டிக் கட்டு கோனே!

117 மும்மலத்தன் எனுமாட்டை முறுக்கிக் கட்டுக் கோனே-மிக
முக்கால நேர்மையெல்லாம் முன்பறிவாய் கோனே!

118 இந்திரியத் திரயங்களை இறுக்கிவிடு கோனே!-என்றும்
இல்லை என்றே மரணங்குழல் எடுத்து ஊதுகோனே!

119 உபாதியெனும் மூன்ருட்டை ஓட்டுவிடு கோனே!-உனக்
குள்ளிருக்குங் கள்ளம் எல்லாம் ஓடிப் போங் கோனே!

120 முக்காய மாடுகளை முன்னங்கட்டுக் கோனே!-இனி
மோசமில்லை நாசமில்லை முத்தி உண்டாங் கோனே!

121 கன்ம பல மாடுகளைக் கடைக் கட்டுக் கோனே!-மற்றக்
கன்மத்திர யப்பசுவைக் கடையிற்கட்டுக் கோனே!

---

114. தற்பரம்-பரம்பொருள்;

122 காரணக்கோ மூன்றனையுங் கால்பிணிப்பாய் கோனே!-நல்ல
கைவசமாம் சாதனங்கள் கடைப்பிடிப்பாய் கோனே!

123 பிரமாந்த ரத்திற் பேரொளி காண் எங்கள் கோனே!—வாய்
பேசாது இருந்து பெருநிட்டை சார் எங்கள் கோனே!

124 சிரமதிற் கமலச் சேவை தெரிந்தெங்கள் கோனே!-முத்தி
சித்திக்குந் தந்திரம் சித்தத் தறியெங்கள் கோனே!

125 விண்நாடி வத்துவை மெய்யறி விற்காணுங் கோனே-என்றும்
மெய்யே மெய்யில் கொண்டு மெய்யறிவில் செல்லுங்கோனே!

126 கண்ணுடியின் உள்ளே கண்டு பார்த்துக் கொள்ளுகோனே!-ஞானக்
கண்ணன்றிக் கண்ணுடி காண ஒண்ணுதெங்கள் கொனே!

127 சூனிய மானதைச் சுட்டுவார் எங்குண்டு கோனே!-புத்தி
சூக்குமமே அதைச் சுட்டுமென்று எண்ணங்கொள் கோனே!

128 நித்தியமானது நேர்படி லேநிலை கோனே!-என்றும்
நிற்குமென்றே கண்டு நிச்சயங் காண் எங்கள் கோனே!

129 சத்தியும் பரமுந் தன்னுட் கலந்தே கோனே!-நிட்டை
சாதிக்கில் இரண்டுந் தன்னுள்ளே காணலாங் கோனே!

130 மூகைபோல் இருந்து மோனத்தைச் சாதியெங்கோனே-பர
மூல நிலைகண்டு மூட்டுப் பிறப்பறு கோனே!



29. நிட்டை-சிவயோகம்;

## நூல்: ஆறு



# அகப்பேய்ச் சித்தர்

## பாடல்

1 நஞ்சுண்ண வேண்டாவே
    அகப்பேய்
நாயகன் தாள்பெறவே;
நெஞ்சு மலையாதே
    அகப்பேய்!
நீ ஒன்றுஞ் சொல்லாதே.

2 பராபர மானதடி
    அகப்பேய்!
பரவையாய் வந்ததடி;
தராதலம் ஏழ்புவியும்
    அகப்பேய்!
தானே படைத்ததடி.

### அருஞ்சொற் பொருள்

2. பரவை-கடல்;

3 நாத வேதமடி அகப்பேய்!
நன் நடம் கண்டாயோ?
பாதஞ் சத்தியடி அகப்பேய்!
பரவிந்து நாதமடி.

4 விந்து நாதமடி அகப்பேய்!
மெய்யாக வந்ததடி;
ஐந்து பெரும்பூதம் அகப்பேய்!
அதனிடம் ஆனதடி.

நாலுபாதமடி
நன்னெறி கண்டாயே;
மூல மானதல்லால்
முத்தி அல்லவடி.

வாக்காதி ஐந்தடியோ
வந்த வகைகேளாய்;
ஒக்கம் அதானதடி
உண்மையது அல்லவடி.

சத்தாதி ஐந்தடியோ
சாத்திரம் ஆனதடி;
மித்தையும் ஆகுமடி
மெய்யது சொன்னேனே.

வசனுதி ஐந்தடியோ
வண்மையாய் வந்ததடி;
தெசநாடி பத்தேடி
திடன்இது கண்டாயே,

காரணம் ஆனதெல்லாம்
கண்டது சொன்னேனே;
மாரணங் கண்டாயே
வந்த விதங்கள் எல்லாம்

ஆறு தத்துவமும்
ஆகமஞ் சொன்னதடி;
மாருத மண்டலமும்
வந்தது மூன்றடியே.

பிருதிவி பொன்னிறமே
பேதைமை அல்லவடி
உருவது நீரடியோ
உள்ளது வெள்ளையடி.



3. நடம்-கூத்து; 4. ஐந்து பெரும்பூதம்-நிலம், நீர், தீ, காற்று ஆகாயம், 5. நாலுபதம்-சரியை, கிரியை, யோகம்; ஞானம்; 6 வக்காதி ஐவர்-வாக்குபாதம், பாணி. பாயுரு, உபத்தம் ஆகிய கன்மேந்திரியங்கள்; ஒக்கம்-உயர்வு; 7. மித்தை-பொய்; 9. மாரணம்-அழிவு; 11. பிருதிவி-மண்;

12 தேயு செம்மையடி அகப்பேய்!
திடனது கண்டாயே;
வாயு நீலமடி அகப்பேய்!
வான் பொருள் சொல்வேனே.

13 வான மஞ்சடியோ அகப்பேய்!
வந்தது நீ கேளாய்;
ஊனமது ஆகாதே அகப்பேய்!
உள்ளது சொன்னேனே.

14 அகாரம் இத்தனையும் அகப்பேய்!
அங்கென்று எழுந்ததடி;
உகாரங் கூடியடி அகப்பேய்!
உருவாகி வந்ததடி.

15 மகார மாயையடி அகப்பேய்!
மலமது சொன்னேனே;
சிகார மூலமடி அகப்பேய்!
சிந்தித்துக் கொள்வாயே,

16 வன்னம் புவன மடி அகப்பேய்!
மந்திர தந்திரமும்;
இன்னமும் சொல்வேனே
இம்மென்று கேட்பாயே.



17 அத்தி வரைவாடி
ஐம்பத்தோர் அட்சரமும்
மித்தையாங் கண்டாயே
மெய்யென்று நம்பாதே.

18 தத்துவம் ஆனதடி
சகலமாய் வந்ததடி;
புத்தியுஞ் சொன்னேனே
பூத வடிவலவோ?

19 இந்த விதங்களெல்லாம்
எம் இறை அல்லவடி;
அந்த விதம்வேறே
ஆராய்ந்து காணுயோ?

20 பாவந் தீரவென்றால்
பாவிக்க லாகாதே;
சாவதும் இல்லையடி
சற்குரு பாதமடி

21 எத்தனை சொன்னாலும்
என் மனந் தேறுதே!
சித்து மசித்தும் விட்டே
சேர்த்து நீ காண்பாயே.



12. தேயு-தீ; 17, அத்தி-யானை, நாடிகளுள் ஒன்று:

22 சமய மாறுமடி அகப்பேய்!
தம்மாலே வந்தவடி
அமைய நின்றவிடம் அகப்பேய்!
ஆராய்ந்து சொல்வாயே.

23 ஆறும் ஆகுமடி அகப்பேய்!
ஆகாது சொன்னேனே.
வேறே உண்டானால் அகப்பேய்!
மெய்யது சொல்வாயே.

24 உன்னை அறிந்தக்கால் அகப்பேய்!
ஒன்றையும் சேராயே;
உன்னை அறியும் வகை அகப்பேய்!
உள்ளது சொல்வேனே.

25 சரியை ஆகாதே அகப்பேய்!
சாலோகங் கண்டாயே
கிரியை செய்தாலும் அகப்பேய்!
கிட்டுவது ஒன்றுமில்லை.

26 யோகம் ஆகாதே அகப்பேய்!
உள்ளது கண்டக்கால்;
தேக ஞானமடி
தேடாது சொன்னேனே.

27 ஐந்தலை நாகமடி
ஆதாயங் கொஞ்சமடி:
இந்த விடந்தீர்க்கும்
எம் இறை கண்டாயே.

28 இறைவன் என்றதெல்லாம்
எந்த விதமாகும்?
அறைய நீ கேளாய்
ஆனந்த மான்தடி.

29 கண்டு கொண்டேனே
காதல் விண்டேனே
உண்டு கொண்டேனே
உள்ளது சொன்னாயே.

30 உள்ளது சொன்னாலும்
உன்னாலே காண்பாயே;
கள்ளமுந் தீராதே
கண்டார்க்குக் காமமடி.

31 அறிந்து நின்றாலும்
அஞ்சார்கள் சொன்னேனே;
புரிந்த வல்வினையும்
போகாதே உன்னை விட்டு



25. சரியை-கடவுளைக் கோவிலில் வைத்து வழிபடுதல்; கிரியை-கடவுளை ஆகம விதிப்படி வழிபடல்; 27. ஆதாயம்-லாபம்; 28. அறைய-கூற.

32 ஈசன் பாசமடி அகப்பேய்!
இவ்வண்ணங் கண்டதெல்லாம்;
பாசம் பயின்றதடி அகப்பேய்!
பரமது கண்டாயே.

33 சாத்திர சூத்திரமும் அகப்பேய்!
சங்கற்பம் ஆனதெல்லாம்
பார்த்திடல் ஆகாதே அகப்பேய்!
பாழ் பலங்கண்டாயே.

34 ஆறு கண்டாயோ அகப்பேய்!
அந்த வினை தீர'
தேறித் தெளிவதற்கே அகப்பேய்!
தீர்த்தமும் ஆடாயே.

35 எத்தனை காலமுந்தான் அகப்பேய்!
யோகம் இருந்தாலென்?
முத்தனு மாவாயோ? அகப்பேய்!
மோட்சமும் உண்டாமோ?

36 நாசமாவதற்கே அகப்பேய்!
நாடாதே சொன்னேனே.
பாசம் போனாலும் அகப்பேய்!
பசுக்களும் போகாவே.

37 நாணம் ஏதுக்கடி அகபபேய்!
நல்வினை தீர்ந்தக்கால்?
காண வேணு மென்றால் அகப்பேய்!
காணக் கிடையாதே.

38 சும்மா இருந்துவிடாய் அகப்பேய்!
சூத்திரஞ் சொன்னேனே;
சும்மா இருந்தவிடம் அகப்பேய்!
சுட்டது காண்டாயே.

39 உன்றனைக் காணாதே அகப்பேய்!
ஊனுள் நுழைந்தாயே!
என்றனைக் காணாதே அகப்பேய்!
இடத்தில் வந்தாயே!

40 வானம் ஓடிவரில் அகப்பேய்!
வந்தும் பிறப்பாயே!
தேனை உண்ணாமல் அகப்பேய்!
தெருவோடு அலைந்தாயே.



41 சைவ மானதடி அகப்பேய்
தானாய் நின்றதடி;

---

34. ஆறு-வழி; 38. சூத்திரம்-தந்திரம்.
39. ஊன்-உடல்; 47. இந்து-சந்திரன்; இரவி-சூரியன்

சைவம் இல்லையாகில்
சலம் வரும் கண்டாயே.

42 ஆசை அற்றவிடம்
ஆசாரங் கண்டாயே.
ஈசன் பாசமடி
எங்ஙனஞ் சென்றாலும்.

43 ஆணவ மூலமடி
அகாரமாய் வந்ததடி.
கோணும் உகாரமடி
கூடப் பிறந்ததுவே.

44 ஒன்றும் இல்லையடி
உள்ளபடி யாச்சே;
நன்றில்லை தீதில்லையே
நாணமும் இல்லையடி.

45 சும்மா இருந்தவிடம்
சுட்டது சொன்னேனே;
எம்மாயம் இதறியேன்
என்னையுங் காணேனே!

46 கலைகள் ஏதுக்கடி?
கண்டார் நகையாரோ?
நிலைகள் ஏதுக்கடி?
நீயார் சொல்வாயே.

47 இந்து அமிர்தமடி
இரவி விடமோடி
இந்த வெள்ளையடி
இரவி சிவப்பாமே.

48 ஆணல பெண்ணலவே
அக்கினி கண்டாயே;
தாணுவும் இப்படியே
சற்குரு கண்டாயே.

49 என்ன படித்தாலும்
எம்முறை யாகாதே;
சொன்னது கேட்டாயே
சும்மா இருந்துவிடு.

50 காடும் மலையுமடி
கடுந்தவம் ஆனால் என்?
வீடும் வெளியாமோ?
மெய்யாக வேண்டாவோ?

51 பரத்தில் சென்றாலும்
பாரிலே மீளுமடி;
பரத்துக்கு அடுத்த இடம்
பாழது கண்டாயே



52 பஞ்ச முகமேது
பஞ்சு படுத்தாலே? அகப்பேய்!
குஞ்சித பாதமடி
குருபா தங்கண்டாயே. அகப்பேய்!

53 பங்கம் இல்லையடி
பாதம் இருந்தவிடம்; அகப்பேய்!
கங்கையில் வந்ததெல்லாம்
கண்டு தெளிவாயே. அகப்பேய்!

54 தானற நின்றவிடம்
சைவங் கண்டாயே; அகப்பேய்!
ஊனற நின்றவர்க்கே
ஊனமொன்று இல்லையடி. அகப்பேய்!

55 சைவம் ஆருக்கடி?
தன்னை அறிந்தவர்க்கே; அகப்பேய்!
சைவ மானவிடம்
சற்குரு பாதமடி அகப்பேய்!

56 பிறவி தீரவென்றால்
பேதகம் பண்ணாதே;
துறவி யானவர்கள்
சும்மா இருப்பார்கள்.

57 ஆரலைந்தாலும்
நீயலையாதேயடி;
ஊரலைந்தாலும்
ஒன்றையும் நாடாதே.

58 தேனாறு பாயுமடி
திருவடி கண்டவர்க்கே;
ஊனாறு மில்லையடி
ஒன்றையும் நாடாதே

59 வெள்ளை கறுப்பாமோ?
வெள்ளியுஞ் செம்பாமோ?
உள்ளது உண்டோடி
உன் ஆணை கண்டாயே,

60 அறிவுள் மன்னுமடி
ஆதாரம் இல்லையடி.
அறிவு பாசமடி
அருளது கண்டாயே.

61 வாசிப்பி லேறியபடி
வான் பொருள் தேடாயோ?

---

52. குஞ்சிதபாதம்—நடனத்தில் வளையத் தூக்கிய பாதம்;
60. மன்னும்-விளங்கும்; 61. வான்பொருள்-தெய்வம்.

வாசியில் ஏறினும் அகப்பேய்!
வாராது சொன்னேனே.

62 தூராதி தூரமடி அகப்பேய்!
தூரமும் இல்லையடி;
பாராமற் பாரடியோ அகப்பேய்!
பாழ்வினைத் தீரவென்றால்.

63 உண்டாக்கிக் கொண்டதல்ல அகப்பேய்!
உள்ளது சொன்னேனே;
கண்டார்கள் சொல்வாரோ அகப்பேய்!
கற்பனை அற்றதடி.

64 நாலு மறைகாணு அகப்பேய்!
நாதனை யார் காண்பார்?
நாலு மறை முடிவில் அகப்பேய்!
நற்குரு பாதமடி.

65 மூலம் இல்லையடி அகப்பேய்!
முப்பொருள் இல்லையடி;
மூலம் உண்டானால் அகப்பேய்!
முத்தியும் உண்டாமே.

66 இந்திர சாலமடி அகப்பேய்!
எண்பத் தொருபதமும்
மந்திரம் அப்படியே அகப்பேய்!
வாயைத் திறவாதே.

67 பாழாக வேணுமென்றால் அகப்பேய்
பார்த்ததை நம்பாதே;
கேளாமற் சொன்னேனே
கேள்வியும் இல்லையடி.

68 சாதி பேதமில்லை
தானாகி நின்றவர்க்கே;
ஓதி உணர்ந்தாலும்
ஒன்றுந்தான் இல்லையடி.

69 சூழ வானமடி
சுற்றி மரக்காவில்
வேழம் உண்டகனி
மெய்யது கண்டாயே

70 நானும் இல்லையடி
நாதனும் இல்லையடி;
தானும் இல்லையடி;
சற்குரு இல்லையடி.



69. மரக்கா-மரச்சோலை; வேழம்-விளாம்பழத்தைப்பற்றிக் கெடுக்கும் ஒரு நோய்.

71 மந்திரம் இல்லையடி — அகப்பேய்!
வாதனை இல்லையடி;
தந்திரம் இல்லையடி — அகப்பேய்!
சமயம் அழிந்ததடி.

72 பூசை பாசசமடி — அகப்பேய்!
போதமே கொட்டமடி!
ஈசன் மாயையடி — அகப்பேய்!
எல்லாமும் இப்படியே!

73 சொல்லலாகாதே — அகப்பேய்!
சொன்னாலுந் தோடமடி
இல்லை இல்லையடி — அகப்பேய்!
ஏகாந்தங் கண்டாய்.

74 தத்துவத் தெய்வமடி — அகப்பேய்!
சதாசிவ மானதடி;
மற்றுள்ள தெய்வமெல்லாம் — அகப்பேய்!
மாயை வடிவாமே.

75 வார்த்தை அல்லவடி — அகப்பேய்!
வாச மகோசரத்தை
ஏற்றதல்லவடி — அகப்பேய்!
என்னுடன் வந்ததல்ல,

76 சாத்திரம் இல்லையடி
சலனங் கடந்ததடி:
பார்த்திடல் ஆகாதே
பாவனைக் கெட்டாதே.

77 என்ன புடித்தால் என்?
ஏதுதான் செய்தால் என்?
சொன்ன விதங்களெலாம்
சுட்டது கண்டாயே.

78 தன்னை அறியவேணும்
சாராமற் சாரவேணும்!
பின்னை அறிவதெலாம்
பேயறி வாகுமடி

79 பிச்சை எடுத்தாலும்
பிறவி தொலையாதே;
இச்சை அற்றவிடம்
எம்இறை கண்டாயே.



---

72. பசாசம்-பிசாசு; போதம்-ஞானம்; 73. தோடம்-தோஷம்; ஏகாந்தம்-தனிமை; 75. வாசாமகோசரம்-வாக்குக்கு எட்டாதது. 79. இச்சை-விருப்பம்;

80 கோலம் ஆகாதே அகப்பேய்!
குத்ர்க்கம் ஆகாதே;
சாலம் ஆகாதே அகப்பேய்!
சஞ்சலம் ஆகாதே.

81 ஒப்பனை அல்லவடி அகப்பேய்!
உன் ஆணை சொன்னேனே
அப்புடன் உப்பெனவே அகப்பேய்!
ஆராய்ந்து இருப்பாயே.

32 மோட்சம் வேண்டார்கள் அகப்பேய்!
முத்தியும் வேண்டார்கள்;
தீட்சை வேண்டார்கள் அகப்பேய்!
சின்மய மானவர்கள்.

83 பாலன் பிசாசமடி அகப்பேய்!
பார்த்தக்கால் பித்தனடி
கால மூன்றுமல்ல அகப்பேய்!
காரியம் அல்லவடி.

94 கண்டதும் இல்லையடி அகப்பேய்!
கண்டவர் உண்டானால்
உண்டது வேண்டடியோ அகப்பேய்!
உன் ஆணை சொன்னேனே.

85 அஞ்சையும் உண்ணாதே
ஆசையுடன் வேண்டாதே;
நெஞ்சையும் விட்டுவிடு
நிட்டையில் சாராதே.

86 நாதாந்த உண்மையிலே
நாடாதே சொன்னேனே;
மீதான சூதானம்
மெய்யென்று நம்பாதே.

87 ஒன்றோடு ஒன்றுகூடில்
ஒன்றுங் கெடுங்காணே;
நின்ற பரசிவமும்
நில்லாது கண்டாயே

88 தோன்றும் வினைகளெலாம்
சூனியங் கண்டாயே;
தோன்றாமல் தோன்றிவிடும்
சுத்த வெளிதனிலே.



---

80. கோலம்-அலங்காரம்: குதர்க்கம்-விதண்டாவாதம்; 81. ஒப்பனை-அலங்காரம்; 82. சின்மயம்-அறிவு வடிவான கடவுள் நிலை. 85. நிட்டை-சிவயோகம்; 86. சூதானம்-ஜாக்கிரதை.

89 பொய்யென்று சொல்லாதே — அகப்பேய்!
போக்கு வரத்துதானே
மெய்யென்று சொன்னக்கால் — அகப்பேய்!
வீடு பெறலாமே.

90 வேதம் ஓதாதே — அகப்பேய்!
மெய் கண்டோம் என்னாதே;
பாதம் நம்பாதே — அகப்பேய்!
பாவித்துப் பாராதே.





நூல்: ஏழு

# குதம்பைச் சித்தர்

## பாடல்

### கண்ணிகள்

1 வெட்ட வெளிதன்னை மெய்யென்று இருப்போர்க்குப்
பட்டயம் ஏதுக்கடி?-குதம்பாய்!
பட்டயம் ஏதுக்கடி?

2 மெய்ப்பொருள் கண்டு விளங்குமெய்ஞ் ஞானிக்குக்
கற்பங்கள் ஏதுக்கடி?-குதம்பாய்!
கந்பங்கள் ஏதுக்கடி!

3 காணுமற் கண்டு கருத்தோடு இருப்பார்க்கு
வீணசை ஏதுக்கடி?-குதம்பாய்!
வீணசை ஏதுக்கடி?

4 வஞ்சகம் அற்று வழிதன்னைக் கண்டோர்க்குச்
சஞ்சலம் ஏதுக்கடி?-குதம்பாய்!
சஞ்சலம் ஏதுக்கடி?

5 ஆதார மான அடிமுடி கண்டோர்க்கு
வாதாட்டம் ஏதுக்கடி?-குதம்பாய்!
வாதாட்டம் ஏதுக்கடி?

6 நித்திரை கெட்டு நினைவோடு இருப்போர்க்கு
முத்திரை ஏதுக்கடி?-குதம்பாய்!
முத்திரை ஏதுக்கடி?

7 தந்திரமான தலந்தனில் நிற்போர்க்கு
மந்திரம் ஏதுக்கடி?-குதம்பாய்!
மந்திரம் ஏதுக்கடி?

### அருச்சொற் பொருள்

1. பட்டயம்-தாமிரச் சாஸனம்; குதம்பாய்- காதணி அணிந்தவளே;
2. கற்பங்கள்-ஆயுளை நீடிக்கச் செய்யும் மருந்துகள்;

8 சத்தியமான தவத்தில் இருப்போர்க்கு
உத்தியம் ஏதுக்கடி?-குதம்பாய்!
உத்தியம் ஏதுக்கடி?

9 நாட்டத்தைப் பற்றி நடுவணை சேர்வோர்க்கு
வாட்டங்கள் ஏதுக்கடி?-குதம்பாய்!
வாட்டங்கள் ஏதுக்கடி!

10 முத்தமிழ் கற்று முயங்குமெய்ஞ் ஞானிக்குச்
சத்தங்கள் ஏதுக்கடி?-குதம்பாய்!
சத்தங்கள் ஏதுக்கடி?

11 உச்சிக்கு மேற்சென்று உயர்வெளி கண்டோர்க்கு
இச்சிப்பிங்கு ஏதுக்கடி?-குதம்பாய்!
இச்சிப்பிங்கு ஏதுக்கடி?

12 வேகாமல் வெந்து வெளியொளி கண்டோர்க்கு
மோகாந்தம் ஏதுக்கடி?-குதம்பாய்!
மோகாந்தம் ஏதுக்கடி?

18 சாகாமல் தாண்டித் தனிவழி போவோர்க்கு
ஏகாந்தம் ஏதக்கடி?-குதம்பாய்!
ஏகாந்தம் ஏதுக்கடி?

14 அந்தரந் தன்னில் அசைந்தாடு முத்தர்க்குத்
தந்திரம் ஏதுக்கடி?-குதம்பாய்!
தந்திரம் ஏதுக்கடி?

15 ஆனந்தம் பொங்கி அறிவோடு இருப்பார்க்கு
ஞானந்தான் ஏதுக்கடி?-குதம்பாய்!
ஞானந்தான் ஏதுக்கடி?

16 சித்திரக் கூடத்தைத் தினந்தினம் காண்போர்க்குப்
பத்திரம் ஏதுக்கடி?-குதம்பாய்!
பத்திரம் ஏதுக்கடி?

17 முக்கோணம் தன்னில் முளைத்த மெய்ஞ் ஞானிக்குச்
சட்கோணம் ஏதுக்கடி?-குதம்பாய்!
சட்கோணம் ஏதுக்கடி!

18 அட்டதிக் கெல்லாம் அசைந்தாடும் நாதர்க்கு
நட்டணை ஏதுக்கடி?-குதம்பாய்!
நட்டணை ஏதுக்கடி?

19 முத்தி பெற் றுள்ளம் முயங்குமெய்ஞ் ஞானிக்குப்
பத்தியம் ஏதுக்கடி?-குதம்பாய்,
பத்தியம் ஏதுக்கடி?

---

8. உத்தியம்-யாகவகை; 10. சத்தங்கள்-எடுத்துச் சொல் இலக்கணங்கள்; 11. இச்சிப்பு-விருப்பம்: 12, மோகாந்தம்-மோகத்தை விளைவிக்கும் அழகு; 13. ஏகாந்தம்-தனிமை; 16 பத்திரப்-இலை; 17. சட்கோணம்-அறுகோணச் சக்கரம்; 18. நட்டணை-நடிப்பு; 19. பத்தியம்-பாட்டு;

20 அல்லலை நீக்கி அறிவோடு இருப்பார்க்குப்
பல்லாக்கு ஏதுக்கடி?-குதம்பாய்!
பல்லாக்கு ஏதுக்கடி?

21 அட்டாங்க யோகம் அறிந்தமெய்ஞ் ஞானிக்கு
முட்டாங்கம் ஏதுக்கடி?-குதம்பாய்
முட்டாங்கம் ஏதுக்கடி?

22 வேகம் அடக்கி விளங்குமெய்ஞ் ஞானிக்கு
யோகந்தான் ஏதுக்கடி?-குதம்பாய்!
யோகந்தான் ஏதுக்கடி?

23 மாத்தாளை வென்ற மலைமேல் இருப்போர்க்குப்
பூத்தானம் ஏதுக்கடி?-குதம்பாய்!
பூத்தானம் ஏதுக்கடி?

24 செத்தாரைப் போலத் திரியுமெய்ஞ் ஞானிக்கு
கைத்தாளம் ஏதுக்கடி?-குதம்பாய்!
கைத்தாளம் ஏதுக்கடி?

25 கண்டாரை நோக்கிக் கருத்தோடு இருப்பார்க்குக்
கொண்டாட்டம் ஏதுக்கடி?-குதம்பாய்!
கொண்டாட்டம் ஏதுக்கடி?

26 காலனை வென்ற கருத்தறி வாளர்க்குக்
கோலங்கள் ஏதுக்கடி?-குதம்பாய்!
கோலங்கள் ஏதுக்கடி?

27 வெண்காயம் உண்டு மிளகுண்டு சுக்குண்டு
உன்காயம் ஏதுக்கடி?-குதம்பாய்!
உன்காயம் ஏதுக்கடி?

28 மாங்காய்ப்பால் உண்டு மலைமேல் இருப்போர்க்குத்
தேங்காய்ப்பால் ஏதுக்கடி?-குதம்பாய்!
தேங்காய்ப்பால் ஏதுக்கடி?

29 பட்டணஞ் சுற்றிப் பகலேதிரிவார்க்கு
முட்டாக்கு ஏதுக்கடி?-குதம்பாய்!
முட்டாக்கு ஏதுக்கடி?

30 தாவாரமில்லை தனக்கொரு வீடில்லை
தேவாரம் ஏதுக்கடி -குதம்பாய்!
தேவாரம் ஏதுக்கடி?

31 தன்னை அறிந்து தலைவனைச் சேர்ந்தோர்க்குப்
பின்னாசை ஏதுக்கடி?-குதம்பாய்!
பின்னாசை ஏதுக்கடி?

32 பத்தாவுந் தானும் பதியோடு இருப்பார்க்கு
உத்தாரம் ஏதுக்கடி?-குதம்பாய்!
உத்தாரம் ஏதுக்கடி?

---

26. கோலம்-அலங்காரம். 31. தலைவன்-முதல்வன், கடவுள்,



நூல்: எட்டு

# கடுவெளிச் சித்தர்

## பாடல்

### ஆனந்தக் களிப்பு

பல்லவி

பாபஞ்செய் யாதிரு மனமே—நாளைக்
கோபஞ்செய்தே யமன் கொண்டோடிப் போவான்

சரணங்கள்

1 சாபங் கொடுத்திட லாமோ?-விதி
தன்னை நம் மாலே தடுத்திட லாமோ?
கோபந் தொடுத்திட லாமோ?-இச்சை
கொள்ளக் கருத்தைக் கொடுத்திடலாமோ? பாபஞ்

2
சொல்லருஞ் சூதுபொய் மோசம்-செய்தாற்
சுற்றத்தை முற்றாய்த் துடைத்திடும் நாசம்
நல்லபத் திவிசு வாசம்-எந்த
நாளும் மனிதர்க்கு நன்மையாய் நேசம் பாபஞ்

3 நீர்மேற் குமிழியிக் காயம்-இது
நில்லாது போய்விடும் நீயறி மாயம்;
பார்மீதில் மெத்தவும் நேயம்-சற்றும்
பற்று திருந்திடப்பண்ணு முபாயம். பாபஞ்



4 நந்த வனத்திலோ ராண்டி-அவன்
நாலாறு மாதமாய்க் குயவனை வேண்டிக்
கொண்டு வந் தானொரு தோண்டி;—மெத்தக்
கூத்தாடிக் கூத்தாடிப்
போட்டுடைத்தாண்டி பாபஞ்

5 தூடண மாகச்சொல் லாதே;-தேடுஞ்
சொத்துக்களிலொரு தூசும்நில்லாதே;
ஏடணை மூன்றும்பொல்லாதே; சிவத்
திச்சைவைத் தாலெம லோகம்
பொல்லாதே பாபஞ்



5. ஏடணைமூன்று-மூவாசைகள்;

6 நல்ல வழிதனை நாடு;-எந்த
நாளும் பரமனை நத்தியே தேடு;
வல்லவர் கூட்டத்திற் கூடு;-அந்த
வள்ளலை நெஞ்சினில் வாழ்த்திக் கொண்டாடு பாபஞ்

7 நல்லவர் தம்மைத் தள்ளாதே;-அறம்
நாலெட்டில் ஒன்றேனும் நாடித்தள் ளாதே;
பொல்லாங்கில் ஒன்றுங்கொள் ளாதே;-கெட்ட
பொய்ம் மொழிக்கோள்கள் பொருந்தவிள் ளாதே; பாபஞ்

8 வேத விதிப்படி நில்லு;-நல்லோர்
மேவும் வழியினை வேண்டியே செல்லு;
சாத நிலைமையே சொல்லு;-பொல்லாச்
சண்டாளக் கோபத்தைச் சாதித்துக் கொல்லு- பாபஞ்

9 பிச்சையென் றொன்றுங்கே ளாதே;-எழில்
பெண்ணாசை கொண்டு பெருக்கமா ளாதே;
இச்சைய துன்னையாளாதே-சிவன்
இச்சைகொண் டவ்வழி யேறிமீ ளாதே பாபஞ்

10 மெய்ஞ்ஞானப் பாதையி லேறு;-சுத்த
வேதாந்த வெட்ட வெளியினைத் தேறு;
அஞ்ஞான மார்க்கத்தைத் தூறு;-உன்னை
அண்டினோர்க் கானந்த மாம்வழி கூறு



11 மெய்க்குரு சொற்கடவாதே;-நன்மை
மென்மேலுஞ் செய்கை மிகவடக் காதே;
பொய்க்கலை யால்நட வாதே:-நல்ல
புத்தியைப் பொய்வழி தனில் நடத்தாதே

12 கூடவருவ தொன்றில்லை;-புழுக்
கூடெடுத் திங்ஙன் உலைவதே தொல்லை;
தேடரு மோட்சமதெல்லை;-அதைத்
தேடும் வழியைத் தெளிவோரு மில்லை

13 ஐந்துபேர் சூழ்ந்திடுங் காடு-இந்த
ஐவர்க்கும் ஐவர் அடைந்திடும் நாடு
முந்தி வருந்திநீ தேடு-!அந்த
மூலம் அறிந்திட வாமுத்தி வீடு

14 உள்ளாக நால்வகைக் கோட்டை-பகை
ஓடப் பிடித்திட்டால் ஆளலாம் நாட்டை;
கள்ளப் புலனென்னுங் காட்டை-வெட்டிக்
கனலிட் டெரித்திட்டாற் காணலாம் வீட்டை— பாபஞ்

15 காசிக்கோ டில்வினை போமோ?-அந்தக்
கங்கையா டில்கதி தானுமுண்டாமோ?

---

7. அறம் நாலெட்டு-முப்பத்திரண்டு அறங்கள்; 13. ஐவர்-பஞ்சேந்திரியங்கள்.

பேசுமுன் கன்மங்கள் சாமோ?-பல
பேதம் பிறப்பது போற்றினும் போமோ? பாபஞ்

16 பொய்யாகப் பாராட்டுங் கோலம்-எல்லாம்
போகவே வாய்த்திடும் யார்க்கும் போங்காலம்;
மெய்யாக வேசுத்த காலம்-பாரில்
மேவப் புரிந்திடில் என்னனு கூலம்? பாபஞ்

17 சந்தேகமில்லாத தங்கம்-அதைச்
சார்ந்து கொண்டாலுமே தாழ்விலாப் பொங்கம்;
அந்த மில்லாதவோர் துங்கம்-எங்கும்
ஆனந்தமாக நிரம்பிய புங்கம் பாபஞ்

18 பாரிலுயர்ந்தது பத்தி;—அதைப்
பற்றின பேர்க்குண்டு மேவரு முந்தி;
சீரி லுயரட்ட சித்தி-யார்க்குஞ்
சித்திக்கு மேசிவன் செயலினுல் பத்தி பாபஞ்

19 அன்பெனும் நன்மலர் தூவிப்-பர
மானந்தத் தேவின் அடியிணை மேவி
இன்பொடும் உன்னுடலாவி-நாளும்
ஈடேற்றத் தேடாய் நீ இங்கே குலாவி பாபஞ்

20 ஆற்றறும் வீடேற்றங் கண்டு-அதற்
கான வழியை யறிந்து நீ கொண்டு
சீற்றமில்லாமலே தொண்டு—ஆதி
சிவனுக்குச் செய்திடிற் சேர்ந்திடுங் கெண்டு பாபஞ்

21 ஆன்மாவால் ஆடிடு மாட்டந்-தேகத்
தான்மா அற்றபோதே யாமுடல் வாட்டம்;
வான்கதி மீதிலே நாட்டம்-நாளும்
வையிலுனக்கு வருமே கொண்டாட்டம். பாபஞ்

22 எட்டுமிரண்டையும் ஓர்ந்து-மறை
எல்லா முனக்குள்ளே ஏகமாய்த் தேர்ந்து
வெட்ட வெளியினைச் சார்ந்து-ஆனந்த
வெள்ளத்தின் மூழ்கி மிகுகளி கூர்ந்து பாபஞ்

23 இந்த வுலகமு முள்ளு-சற்றும்
இச்சைவையாமலே யென்நாளுந் தள்ளு;
செந்தேன் வெள்ளம் மதை மொள்ளு;-உன்றன்
சிந்தைதித் திக்கத் தெவிட்டவுட் கொள்ளு- பரபஞ்

24 பொய்வேதந் தன்னைப் பாராதே;-அந்தப்
போதகர் சொற்புத்தி போதவாராதே;
மைவிழியாரைச் சாராதே;-மூன்
மார்க்கர்கள் கூட்டத்தில் மகிழ்ந்து சேராதே- பாபஞ்

25 வைதோரைக் கூடவையாதே;-இந்த
வையம் முழுதும் பொய்த்தாலும் பொய்யாதே;
வெய்ய வினைகள் செய்யாதே; கல்லை
வீணிற் பறவைகள் மீதில் வெய்யாதே பாபஞ்

26 சிவமன்றி வேறே வேண்டாதே;-யார்க்குந்
தீங்கான சண்டையைச் சிறக்கத் தூண்டாதே;
தவநிலை விட்டுத் தாண்டாதே; நல்ல
சன்மார்க்க மில்லாத நூலை வேண்டாதே பாபஞ்

27 பாம்பினைப் பற்றியாட்டாதே;-உன்றன்
பத்தினி மார்களைப் பழித்துக் காட்டாதே
வேம்பினை யுலகிலூட்டாதே;-உன்றன்
வீறுப்புத் தன்னை விளங்க நாட்டாதே பாபஞ்

28 போற்றுஞ் சடங்கை நண்ணாதே;-உன்னைப்
புகழ்ந்து பலரிற் புகலவொண்ணாதே;
சாற்றுமுன் வாழ்வையெண்ணாதே;-பிறர்
தாழும் படிக்கு நீ தாழ்வைப் பண்ணாதே பாபஞ்

29 கஞ்சாப் புகைபிடி யாதே;-வெறி
காட்டி மயங்கியே கட்குடியாதே;
அஞ்ச வுயிர் மடியாதே;-பத்தி
அற்றவஞ் ஞானத்தின் நூல்படியாதே பாபஞ்

30 பத்தி யெனுமேணி நாட்டித்-தொந்த
பந்தமற்றவிடம் பார்த்ததை நீட்டிச்
சத்தியமென்றதை யீட்டி-நாளுந்
தன்வச மாக்கிக் கொள் சமயங்களோட்டி பாபஞ்

31 செப்பரும் பலவித மோகம்—எல்லாஞ்
சீயென்றெறுத்துத் திடங்கொள் விவேகம்;
ஒப்பரும் அட்டாங்க யோகம்-நன்றாய்
ஓர்ந்தறி வாயவற்றுண்மைசம் போகம் பாபஞ்

32 எவ்வகையாக நன்னீதி-அவை
எல்லா மறிந்தே யெடுத்து நீ போதி;
ஒவ்வாவென்ற பல சாதி-யாவும்
ஒன்றென் றறிந்தே யுணர்ந்துற வோதி பாபஞ்

33 கள்ள வேடம் புனையாதே; பல
கங்கையிலேயுன் கடம் நனையாதே;
கொள்ளை கொள்ள நினையாதே;- நட்புக்
கொண்டு புரிந்து நீ கோள் முனையாதே;- பாபஞ்

34 எங்குஞ் சயபிர காசன்-அன்பர்
இன்ப இருதயத் திருந்திடும் வாசன்
துங்க அடியவர் தாசன்-தன்னைத்
துதிக்கிற் பதவி அருளுவான் ஈசன் பாபஞ்



---

நூல்: ஒன்பது

---



# அழுகணி சித்தர்

## பாடல்

---

கலித்தாழிசை

1 மூலப் பதியடியோ மூவிரண்டு வீடதிலே
கோலப் பதியடியோ குதர்க்கந் தெருநடுவே
சாலப் பதிதனிலே தணலாய் வளர்த்த கம்பம்
மேலப் பதிதனிலே என் கண்ணம்மா!
விளையாட்டைப் பாரேனோ!

2 எண்சாண் உடம்படியோ ஏழிரண்டு வாயிலடி
பஞ்சாயக் காரர்ஐவர் பட்டணமுந் தானிரண்டு
அஞ்சாமற் பேசுகிறாய் ஆக்கினைக்குத் தான்பயந்து
நெஞ்சார நில்லாமல் என் கண்ணம்மா!
நிலைகடந்து வாடுறண்டி!

3 முத்து முகப்படியோ முச்சந்தி வீதியிலே
பத்தாம் இதழ் பரப்பிப் பஞ்சணையின் மேலிருத்தி
அத்தை யடக்கிநிலை ஆருமில்லா வேளையிலே
குத்து விளக்கேற்றி என் கண்ணம்மா!
கோலமிட்டுப் பாரேனோ!

4 சம்பா அரிசியடி சாதஞ் சமைத்திருக்க
உண்பாய் நீயென்று சொல்லி உழக்குழக்கு நெய்வார்த்து
முத்துப் போலன்னமிட்டு முப்பழமுஞ் சர்க்கரையுந்
தித்திக்குந் தேனமிர்தம் என் கண்ணம்மா!
தின்றுகளைப் பாரேனோ!

5 பைம்பொற் சிலம்பணிந்து பாடகக்கால் மேல்தூக்கிச்
செம்பொற் கலையுடுத்திச் சேல்விழிக்கு மையெழுதி
அம்பொற் பணிபூண் டறுகோண வீதியிலே
கம்பத்தின் மேலிருந்தே என் கண்ணம்மா!
கண்குளிரப் பாரேனோ!

6 எட்டாப் புரவியடி யீராறு காலடியோ
விட்டாலும் பாயுமடி வீதியிலே தான்மறித்துக்

கட்டக் கயிறெடுத்துக் கால்நாலுஞ் சேர்த்திறுக்கி
அட்டாள தேசமெல்லாம் என் கண்ணம்மா!
ஆண்டிருந்தா லாகாதோ!

7 கொல்லன் உலைபோலக் கொதிக்குதடி யென்வயிறு!
நில்லென்று சொன்னால் நிலைநிறுத்தக் கூடுதில்லை!
நில்லென்று சொல்லியல்லோ நிலைநிறுத்த வல்லார்க்குக்
கொல்லென்று வந்தநமன் என் கண்ணம்மா,
குடியோடிப் போகானோ!

8 ஊற்றைச் சடலமடி உப்பிருந்த பாண்டமடி;
மாற்றிப் பிறக்க மருந்தெனக்குக் கிட்டுதில்லை;
மாற்றிப் பிறக்க மருந்தெனக்குக் கிட்டுமென்றால்
ஊற்றைச் சடலம்விட்டே என் கண்ணம்மா!
உன் பாதஞ் சேரேனோ?

9 வாழைப் பழந்தின்றால் வாய்நோகு மென்றுசொல்லித்
தாழைப் பழந்தின்று சாவெனக்கு வந்ததடி;
தாழைப்பழத்தைவிட்டுச் சாகாமற் சாகவல்லோ
வாழைப் பழந்தின்றால் என் கண்ணம்மா!
வாழ்வெனக்கு வாராதோ!

10 பையூரி லேயிருந்து பாழூரிலே பிறந்து
மெய்யூரில் போவதற்கு வேதாந்த வீடறியேன்:
மெய்யூரிற் போவதற்கு வேதாந்த வீடறிந்தால்
பையூரும் மெய்யூரும் என் கண்ணம்மா!
பாழாய் முடியாவோ!

11 மாமன் மகளடியோ மச்சினியோ நானறியேன்!
காமன் கணையெனக்குக் கனலாக வேகுதடி!
மாமன் மகளாகி மச்சினியும் நீயானால்
காமன் கணைகளெல்லாம் என் கண்ணம்மா!
கண் விழிக்க வேகாவோ!

12 அந்தரத்தை வில்லாக்கி ஐந்தெழுத்தை யம்பாக்கி
மந்திரத் தேரேறியல்லோ மான்வேட்டை யாடுதற்குச்
சந்திரருஞ் சூரியருந் தாம்போந்த காவனத்தே
வந்து விளையாடியல்லோ என் கண்ணம்மா!
மனமகிழ்ந்து பார்ப்பதென்றோ!

18 காட்டானை மேலேறிக் கடைத்தெருவே போகையிலே
நாட்டார் நமைமறித்து நகைவிரியப் பார்ப்பதென்றோ
நாட்டார் நமைமறித்து நகைபுரியப் பார்த்தாலுங்
காட்டானை மேலேறி என் கண்ணம்மா,
கண்குளிரக் காண்பேனோ!

14 உச்சிக்குக் கீழடியோ ஊசிமுனை வாசலுக்குள்
மச்சுக்கு மேலேறி வானுதிரந் தானெடுத்துக்
கச்சை வடம்புரியக் காயவூர்ப் பாதையிலே
வச்சு மறந்தல்லோ என் கண்ணம்மா!
விக்கமோச மானேனடி!

15 மூக்கால் அரும்பெடுத்து மூவிரண்டாய்த் தான் தூக்கி
நாக்கால் வளைபரப்பி நாற்சதுர வீடுகட்டி
நாக்கால் வளைபரப்பி நாற்சதுர வீட்டினுள்ளே
மூக்காலைக் காணாமல் என் கண்ணம்மா!
முழுதுந் தவிக்கிறண்டி!

16 காம மலர் தூவக் கருத்தெனக்கு வந்ததடி;
பாம வலிதொலைக்கப் பாசவலி கிட்டுதில்லை;
பாம வலிதொலைக்கப் பாசவலி நிற்குமென்றால்
காம மலர் மூன்றும் என் கண்ணம்மா!
கண்ணெதிரே நில்லாவோ!

17 தங்காயந் தோன்றாமல் சாணகலக் கொல்லைகட்டி
வெங்காய நாற்றுவிட்டு வெகு நாளாய்க் காத்திருந்தேன்!
வெங்காயந் தின்னாமல் மேற்றோலைத் தின்றலவோ
தங்காயந் தோணாமல் என் கண்ணம்மா!
சாகிறண்டி சாகாமல்!

18 பற்றற்ற நீரதிலே பாசி படர்ந்ததுபோல்
உற்றுற்றுப் பார்த்தாலும் உன்மயக்கம் தீரவில்லை!
உற்றுற்றுப் பார்த்தாலும் உன்மயக்கந் தீர்ந்தக்கால்
பற்றற்ற நீராகும் என் கண்ணம்மா!
பாசியது வேறாமோ!

19 கற்றாரும் மற்றாருந் தொண்ணூற்றா றாறதிலே
உற்றாரும் பெற்றாரும் ஒன்றென்றே யானிருந்தேன்;
உற்றாரும் பெற்றாரும் ஊரை விட்டுப் போகையிலே
சுற்றாரு மில்லாமல் என் கண்ணம்மா!
துணையிழந்து நின்றதென்ன?

20 கண்ணுக்கு மூக்கடியோ காதோர மத்திமத்தில்
உண்ணுக்கு மேலேறி உன் புதுமை மெத்தவுண்டு
உண்ணுக்கு மேலேறி உன் புதுமை கண்டவர்க்குங்
கண்ணுக்கு மூக்கடியோ என் கண்ணம்மா
காரணங்கள் மெத்தவுண்டே!

21 சாயச் சரக்கெடுத்தே சாதிலிங்கந் தான் சேர்த்து
மாயப் பொடிகலந்து வாலுழுவை நெய்யூற்றிப்
பொட்டென்று பொட்டுமிட்டாள் புருவத்திடை நடுவே
இட்ட மருந்தாலே என் கண்ணம்மா;
இவ்வேட மானேண்டி!

22 பாதாள மூலியடி பாடாணந் தான் சேர்த்து
வேதாளங் கூட்டியல்லோ வெண்சாரை நெய்யூற்றிச்
செந்தூர மையடியோ செகமெலாந் தான்மிரட்டித்
தந்த மருந்தாலே என் கண்ணம்மா!
தணலாக வேகுறண்டி!

23 கள்ளர் பயமெனக்குக் கால்தூக்க வொட்டாமல்
பிள்ளை யழுதுநின்றால் பெற்றவட்குப் பாரமது
பிள்ளை யழுகாமல் பெற்றமனம் நோகாமல்

கள்ளர் பயமெனக்கே என் கண்ணம்மா
கடுகளவு காணுதோ!

24 பட்டணத்தை யாளுகின்ற பஞ்சவர்கள் ராசாக்கள்
விட்டுப் பிரியாமல் வீரியங்கள் தாம்பேசி
விட்டுப் பிரிந்தவரே வேறு படுங்காலம்
பட்டணமுந் தான்பறிபோய் என் கண்ணம்மா!
படைமன்னர் மாண்டதென்ன?

25 ஆகாப் புலையனடி அஞ்ஞானந் தான் பேசிச்
சாகாத் தலையறியேன் தன்னறிவு தானறியேன்.
வேகாத காலறியேன் விதிமோச மானேனடி:
நோகாமல் நொந்தல்லோ என் கண்ணம்மா!
நொடியில் மெழு கானேனடி!

26 தாயைச் சதமென்றே தந்தையரை ஒப்பென்றே
மாயக் கலவிவந்து மதிமயக்க மானேனடி!
மாயக் கலவி விட்டு மதிமயக்கந் தீர்ந்தக்கால்
தாயுஞ் சதமாமோ என் கண்ணம்மா!
தந்தையரு மொப்பாமோ!

27 அஞ்சாத கள்ளனடி ஆருமற்ற பாவியடி
நெஞ்சாரப் பொய்சொல்லும் நேயமில்லா நிட்டூரன்
கஞ்சா வெறியனடி கைசேத மாகுமுன்னே
அஞ்சாதே யென்றுசொல்லி என் கண்ணம்மா!
ஆண்டிருந்தா லாகாதோ!

28 உன்னை மறந்தல்லோ உளுத்த மரமானேன்?
தன்னை மறந்தார்க்குத் தாய் தந்தை யில்லையடி!
தன்னை மறக்காமற் றுயாரு முண்டானால்
உன்னை மறக்காமல் என் கண்ணம்மா!
ஒத்திருந்து வாழேனோ!

29 காயப் பதிதனிலே கந்தமூ லம்வாங்கி
மாயப் பணிபூண்டு வாழுஞ் சரக்கெடுத்தே
ஆயத் துறைதனிலே ஆராய்ந்து பார்க்கு முன்னே
மாயச் சுருளோலை என் கண்ணம்மா!
மடிமேல் விழுந்ததென்ன?

30 சித்திரத்தைக் குத்தியல்லோ சிலையை எழுதிவைத்து
உத்திரத்தைக் காட்டாமல் ஊரம்ப லமானேன்
உத்திரத்தைக் காட்டியல்லோ ஊரம்பலமானால்
சித்திரமும் வேறாமோ என் கண்ணம்மா!
சிலையுங் குலையாதோ!

31 புல்லரிடத்திற் போய்ப் பொருள் தனக்குக் கையேந்திப்
பல்லை மிகக் காட்டிப் பரக்க விழிக்கிறண்டி!

பல்லை மிகக் காட்டாமல் பரக்க விழிக்காமல்
புல்லரிடம் போகாமல் என் கண்ணம்மா!
பொருளெனக்குத் தாராயோ!

32 வெட்டுண்ட சக்கரத்தால் வேண தனமளித்துக்
குட்டுண்டு நின்றேண்டி கோடிமனு மூன்றுலே
குட்டுண்டு நில்லாமற் கோடிமனு மூன்றுக
வெட்டுண்டு பிணிநீக்கி என் கண்ணம்மா!
விழித்து வெளி காட்டாயோ!






# கொங்கண நாயனர்

## வாலைக் கும்மி

காப்பு

1 கல்விநிறை வாலைப்பெண் காதலியென் றோதுகின்ற
செல்வியின் மேற் கும்மிதனைச் செப்புதற்கே-நல்விசய
நாதனின் சொல்வேதனஞ்சு போதன்மிஞ்சி மானகஞ்ச
பாதம் வஞ்ச நெஞ்சினில்வைப் போம்.

கும்மி

2 சத்தி சடாதரி வாலைப்பெண் ணைமந்த
உத்தமி மேற் கும்மிப் பாட்டுரைக்க
வித்தைக் குதவிய வொற்றைக்கொம் பாம்வாலை
சித்தி விநாயகன் காப்பாமே

## சரஸ்வதி துதி

3 சித்தர்கள் போற்றிய வாலைப் பெண் ணுமந்த
சத்தியின் மேற்கும்மிப் பாட்டுரைக்கத்
தத்தமி தோமென ஆடுஞ் சரஸ்வதி
பத்தினி பொற்பதங் காப்பாமே.

## சிவபெருமான் துதி

4 எங்கும் நிறைந்தவள் வாலைப்பெண் ணும்மாலின்
தங்கையின் மேற்கும்மி பாடுதற்குக்
கங்கை யணிசிவ சம்புவாஞ் சற்குரு
பங்கயப் பொற்பதங் காப்பாமே.

## சுப்பிரமணியர் துதி

5 ஞானப்பெண் ணுமருள் சோதிப்பெண் ணுமாதி
வாலைப்பெண் மேற்கும்மி பாடுதற்கு
மானை பெண்ணுக்கிய வள்ளிக் கிசைந்திடும்
மால்முரு கேசனுங் காப்பாமே.

## விஷ்ணு துதி

6 ஆண்டிப்பெண் ணும்ராச பாண்டிப்பெண் ணும்வாலை
அம்பிகை மேற்கும்மி பாடுதற்குக்
காண்டீப னுல்பணி பூண்டவன் வைகுந்தம்
ஆண்டவன் பொற்பதங் காப்பாமே.

## நந்தீசர் துதி

7 அந்தரி சுந்தரி வாலைப்பெண் ணுமந்த
அம்பிகை மேற்கும்மி பாடுதற்குச்
சிந்தையில் முந்திநல் விந்தையாய் வந்திடும்
நந்தீசர் பொற்பதங் காப்பாமே.

## நூல்

8 தில்லையில் முல்லையி லெல்லையு ளாடிய
வல்லவள் வாலைப் பெண் மீதினிலே
சல்லாபக் கும்மித் தமிழ்பா டவரும்
தொல்லை வினை போக்கும் வாலைப் பெண்ணே!

9 மாதா பிதாகூட இல்லாம லேவெளி
மண்ணும் விண்ணுமுண்டு பண்ணவென்று
பேதைப்பெண் ணுமுதல் வாலைப்பெண் ணுளென்று
புகுந்தா ளிந்தப் புவியடக்கம்,

10 வேதமும் பூதமுண் டானது வும் வெளி
வஞ்ஞான சாத்திர மானதுவும்
நாதமுங் கீதமுண் டானது வும்வழி
நான் சொல்லக் கேளடி வாலைப்பெண்ணே!

11 முந்தச் செகங்களுண்டானது வும்முதல்
தெய்வமுந் தேவருண் டானதுவும்
விந்தையாய் வாஊயுண் டானது வும்ஞான
விளக்கம் பாரடி வாலைப்பெண்ணே!

12 அரிக்கு முந்தின தவ்வெழுத்தாம்; பின்னும்
அரிக்குள் நின்றதும் அஞ்செழுத்தாம்;
தரிக்கும் முந்தின தஞ்செழுத்தாம் வாசி
பரிக்குள் நின்றது மஞ்செழுத்தாம்.

13 ஆதியிலைந்தெழுத் தாயினுள் வாலைப்பெண்
ஐந்தெழுத் துமென்று பேரானுள்;
நாதியி னூமை யெழுத்திவள் தானல்ல
ஞான வகையிவள் தானுனுள்.

14 ஊமை யெழுத்தே யுடலாச்சு மற்றும்
ஓமென் றெழுத்தே யுயிராச்சு;
ஆமிந் தெழுத்தை யறிந்து கொண்டு விளை
யாடிக் கும்மி யடியுங்கடி.

15 செகம் படைத்ததும் அஞ்செழுத்தாம் பின்னும்
சிவன் படைத்ததும் அஞ்செழுத்தாம்
உக முடிந்தது மஞ்செழுத் தாம் பின்னும்
உற்பன மானது மஞ்செழுத்தாம்.

16 சாத்திரம் பார்த்தாலுந் தானுமென்ன வேதந்
தானுமே பார்த்திருந் தாலு மென்ன?
சூத்திரம் பார்த்தல்லோ ஆளவேணு மஞ்சு
சொல்லை யறிந்தல்லோ காண வேணும்?

17 காணுது கிட்டாதே எட்டாதே அஞ்சில்
காரிய மில்லையென் றேநினைத்தால்;
காணுதுங் காணலா மஞ்செழுத் தாலதில்
காரிய முண்டு தியானஞ் செய்தால்.

18 ஆயனு மைந்தா மெழுத்துக்குள் ளேயறி
வாயனு மைந்தா மெழுத்துக்குள்ளே;
வாயனு மைந்தா மெழுத்துக்குள் ளேயிந்த
வாலையு மைந்தா மெழுத்துக்குள்ளே.

19 அஞ்செழுத் தானதும் எட்டெழுத் தாம்பின்னும்
ஐம்பத்தோர் அட்சரந் தானுச்சு;
நெஞ்செழுத் தாலே நினையா மலந்த
நிசந்தெரியுமோ வாலைப்பெண்ணே!

20 ஏய்க்கு தேய்க்கு தஞ்செழுத் துவதை
எட்டிப் பிடித்துக் கொளிரண்டெழுத்தை
நோக்கிக்கொள் வாசியை மேலாக வாசி
நிலையைப் பாரடி வாலைப்பெண்ணே!

21 சிதம்பர சக்கரந் தானறி வாரிந்தச்
சீமையி லுள்ள பெரியோர்கள்;
சிதம்பர சக்கர மென்றால் அதற்குள்ளே
தெய்வத்தை யல்லோ அறியவேணும்

22 மனமு மதியு மில்லாவி டில்வழி
மாறுதல் சொல்லியே யென்ன செய்வாள்?
மனமு றுதியும் வைக்கவே ணும் பின்னும்
வாலை கிருபையுண் டாகவேணும்.

23 இனிவெ ளியினிற் சொல்லா தேயெழில்
தீமட்டு திந்த வரி விழிக்கே.
கனிமொ ழிச்சியீர் வாருங்கடி கொஞ்சங்
கருவைச் சொல்லுவேன் கேளுங்கடி

24 ஊத்தைச் சடலமென் றெண்ணா தேயிதை
உப்பிட்ட பாண்டமென் றெண்ணாதே;
பார்த்த பேருக்கே ஊத்தையில் லையிதைப்
பார்த்துக்கொள் உன்ற னுடலுக்குள்ளே.

25 உச்சிக்கு நேராயுண் ணாவுக்கு மேல் நிதம்
வைத்த விளக்கும் எரியுதடி;
அச்சுள்ள விளக்கு வாலைய டிஅவி
யாம லெரியுது வாலைப்பெண்ணே!

26 எரியு தேஅறு வீட்டினி லேயதில்
எண்ணெயில் லையமிழ் தண்ணீரில்லை;
தெரியுது போக வழியுமில் லைபாதை
சிக்குது சிக்குது வாலைப்பெண்ணே!

27 சிலம்பொ லியென்னக் கேட்கும டிமெத்த
சிக்குள்ள பாதை துடுக்கமடி;
வலம்புரி யச்சங்கமூது மடிமேலே
வாசியைப் பாரடி வாலைப்பெண்ணே!

28 வாசிப் பழக்க மறியவே ணுமற்று
மண்டல வீடுகள் கட்டவேணும்;
நாசி வழிக்கொண்டு யோகமும் வாசியும்
நாட்ட த்தைப் பாரடி வாலைப்பெண்ணே!

29 முச்சுட ரான விளக்கினுள் ளேமூல
மண்டல வாசி வழக்கத்திலே
எச்சுட ராகி யந்தச் சுடர்வாலை
இவள் விட வேறில்லை வாலைப்பெண்ணே!

30 சூடாமல் வாலை யிருக்கிற தும்பரி
சித்த சிவனுக்குள் ளான தனல்
வீடாமல் வாசிப் பழக்கத்தைப் பாருநாம்
மேல்வீடு காணலாம் வாலைப்பெண்ணே!

31 மேல்வீடு கண்டவன் பாணியடி விண்ணில்
விளக்கில் நின்றவன் வாணியுமடி

தாய்வீடு கண்டவன் ஞானிய டிபரி
தாண்டிக் கொண்டான்பட் டாணியடி.

32 அத்தியி லேகரம் பத்தியி லேமனம்
புத்தியி லேநடு மத்தியிலே
நெற்றி சதாசிவ மென்றுசொன் னேனுன்றன்
நிலைமையைப் பாரடி வாலைப்பெண்ணே!

33 அழுத்தி லேசொல்லஞ் செழுத்தி லேநானும்
வழுத்தி னேன்ஞானப் பழத்திலே
கழுத்தி லேமயேஸ்வர னுமுண்டுகண்
கண்டு பாரடி வாலைப்பெண்ணே!

34 அஞ்சிலே பிஞ்சிலே வஞ்சிய ரேநிதம்
கொஞ்சி விளையாடும் வஞ்சியரே!
நெஞ்சிலே ருத்திரன் சூழிருப் பானவன்
நேருட னுமடி வாலைப்பெண்ணே!

35 தொந்தியி லேநடுப் பந்தியி லேதிடச்
சிந்தையிலே முந்தி யுன்றனுடன்
உந்தியில் விண்ணுவுந் தாமிருப் பாரிதை
உண்மையாய்ப் பாரடி வாலைப்பெண்ணே!

36 ஆலத்தி லேயிந்த ஞாலத்தி லேவருங்
காலத்தி லேயனு கூலத்திலே
மூலத்தி லேப்ரமன் தானிருந் துவாசி
முடுக்கிருன் பிண்டம் பிடிக்கிருனே.

37 தேருமுண்டு அஞ்நூறும் ஆணியுண் டேஅதில்
தேவரு முண்டுசங் கீதமுண்டே
ஆருண்டு பாரடி வாலைத் தெய் வம்மதில்
அடக்கந் தானடி வாலைப்பெண்ணே!

38 ஒன்பது வாயில்கொள் கோட்டையுண் டேஅதில்
உள்ளே நிலைக்கார ரஞ்சுபேராம்;
அன்புட னேபரி காரர்க ளாறுபேர்
அடக்கந் தானடி வாலைப்பெண்ணே!

39 இந்த விதத்திலே தேகத்திலே தெய்வம்
இருக்கையில் புத்திக்க றிக்கையினல்
சந்தோட வாலையைப் பாராமல் மனிதர்
சாகிற தேதடி வாலைப்பெண்ணே!

40 நகார திட்டிப்பே ஆனதனுல் வீடு
வான வகார நயமாச்சு;
உகார முச்சி சிரசாச்சே இதை
உற்றுப் பாரடி வாலைப்பெண்ணே!

41 வகார மானதே ஓசையாச்சே அந்த
மகார மானது கர்ப்பமாச்சே;
சிகார மானது மாய்கையாச்சே இதைத்
தெளிந்து பாரடி வாலைப் பெண்ணே!

42 ஓமென்ற அட்சரந் தானுமுண்டதற்குள்
ஊமை யெழுத்து மிருக்குதடி;
நாமிந்தெழுத்தை யறிந்து கொண்டே நாம் வினை
நாடிப் பாரடி வாலைப்பெண்ணே!

43 கட்டாத காளையைக் கட்டவேணுமாசை
வெட்ட வேணும்வாசி யொட்டவேணும்
எட்டாத கொம்பை வளைக்க வேணுங்காய
மென்றைக் கிருக்குமோ வாலைப் பெண்ணே!

44 இருந்த மார்க்கமாய்த் தானிருந்து வாசி
ஏற்காமலேதான டக்கவேணும்;
திரிந்தே ஓடி யலைந்து வெந்துதேகம்
இறந்து போச்சுதே வாலைப்பெண்ணே!

45 பூத்த மலராலே பிஞ்சுமுண்டே அதில்
பூவில்லாப் பிஞ்சும் அனேகமுண்டு
மூத்த மகனாலே வாழ்வுமுண்டு மற்ற
மூன்று பேராலே அழிவுமுண்டு!

46 கற்புள்ள மாதர் குலம் வாழ்க நின்ற
கற்பை யளித்தவரே வாழ்க!
சிற்பரனைப் போற்றிக் கும்மியடி.
தற்பரனைப் போற்றிக் கும்மியடி.

47 அஞ்சி னிலெரண் டழிந்ததில்லை யஞ்
சாறிலே யுநாலொழிந்ததில்லை;
பிஞ்சிலே பூவிலே தஞ்சுவதாம் அது
பேணிப் போடலாம் வாலைப் பெண்ணே!

48 கையில்லாக் குட்டையன் கட்டிக்கிட்டானிரு
காலில்லா நெட்டையன் முட்டிக் கிட்டான்;
ஈயில்லாத் தேனெடுத் துண்டுவிட்டானது
இனிக்குதில்லை யேவாலைப்பெண்ணே!

49 மேலூரு கோட்டைக்கே ஆதர வாய்நன்றாய்
விளங்கு கன்னனூர்ப் பாதையிலே
காலூரு வம்பலம் விட்டதனாலது
கடு நடையடி வாலைப் பெண்ணே!

50 தொண்டையுள் முக்கோணக் கோட்டையி லேயிதில்
தொத்திக் கொடிமரம் நாட்டையிலே
சண்டை செய்து வந்தே ஓடிப்போனாள் கோட்டை
வெந்து தணலாச்சு வாலைப் பெண்ணே!

51 ஆசை வலைக்குள் அகப்பட்டதும் வீடு
அப்போதே வெந்தே அழிந்திட்டதும்
பாச வலைவந்து மூடியதும் வாலை
பாதத்தைப் போற்றடி வாலைப்பெண்ணே!

52 அன்ன மிருக்குது மண்டபத்தில் வினை
யாடித் திரிந்ததே ஆண்புலியும்

இன்ன மிருக்குமே யஞ்சு கிளியவை
எட்டிப் பிடிக்குமே மூன்று கிளி;

53 தோப்பிலே மாங்குயில் கூப்பிடுதே புது
மாப்பிள்ளை தான் வந்து சாப்பிடவும்
ஏய்க்கு மிப்படி யஞ்சா ருந்தை
இருந்து விழிப்பது பாருங்கடி.

54 மீனிமிருக்குது தூரணி யிலிதை
மேய்ந்து திரியுங் கலசாவல்;
தேனுமிருக்குது போரையிலே யுண்ணத்
தெவிட்டுத்தில்லையே வாலைப் பெண்ணே!

55 காகமிருக்குது கொம்பிலே தான் கத
சாவ லிருக்குது தெம்பிலேதான்;
பார்க்க வெகுதூர மில்லை யிதுஞானம்
பார்த்ததால் தெரியுமே வாலைப் பெண்ணே!

56 கும்பிக் குளத்திலே யம்பல மாமந்தக்
குளக்க ருவூரில் சேறு மெத்த;
தெம்பிலிடைக் காட்டுப் பாதைகளாம் வந்து
சேர்ந்தா ராய்ந்து பார் வாலைப் பெண்ணே!

57 பண்டுமே ஆழக் கிணற்றுக்குள் ளேரண்டு
கெண்டையிருந்து பகட்டுதடி;
கண்டிருந்து மந்தக் காக்கையுமேயஞ்சி
கழுகு கொன்றது பாருங்கடி!

58 ஆற்றிலே யஞ்சு முதலைய டியரும்
புற்றிலே ரண்டு கரடியடி;
கூற்றனு மூன்று குருடான டி பாசங்
கொண்டு பிடிக்கிருன் வாலைப் பெண்ணே!

59 முட்டை யிடுகு தொருபற வை முட்டை
மோசம் பண்ணு தொருபறவை;
வட்டமிட்டாளுர் கன்னியி லிரண்டு
மானுந் தவிக்குது வாலைப் பெண்ணே!

60 அட்டமாவின் வட்டம் பொட்டலி லேரண்டு
அம்புலி நிற்குது தேர்மேலே;
திட்டமாய் வந்து அடிக்குதில்லைதேகம்
செந்தண லானதே வாலைப் பெண்ணே!

61 முக்கோண வட்டக் கிணற்றுக்குள்ளே மூல
மண்டல வாசிப் பழக்கத்திலே
அக்கோண வட்டச் சக்கரத் தில்வாலை
அமர்ந்திருக்கிருள் வாலைப் பெண்ணே!

62 இரண்டு காலாலொரு கோபுரமாம்நெடு.
நாளா யிருந்தே அமிழ்ந்து போகும்;
கண்டபோது கோபுரமிருக்கும் வாலை
காணவு மெட்டாள் நிலைக்கவொட்டாள்

63 அஞ்சு பூதத்தை யுண்டு பண்ணிக் கூட்டி
ஆராதாரத்தையுண்டு பண்ணிக்
கொஞ்சு பெண்ணுசை யுண்டு பண்ணிவாலை
கூட்டுகிருள் காலனை மாட்டுகிருள்

64 காலனைக் காலா லுதைத்தவளாம் வாலை
ஆலகாலவிட முண்டவளாம்;
மாளாச் செகத்தைப் படைத்த வளாமிந்த
மானுடன் கோட்டை இடித்தவளாம்.



65 மாதாவாய் வந்தே அமுதந்தந் தாள்மனை
யாட்டியாய் வந்து சுகங்கொடுத்தாள்
ஆதரவாகிய தங்கையானுள் நமக்
காசைக் கொழுந்தியு மாமியானுள்.

66 சிரித்து மெல்லப் புரமெரித் தாள்வாலை
செங்காட்டுச் செட்டியைத்
தானுதைத்தாள்;
ஒருத்தியாகவே சூரர்தமை வென்ருள்
ஒற்றையாய்க் கஞ்சனைக் கொன்று
விட்டாள்.

67 இப்படியல்லோ இவள் தொழி லாமிந்த
ஈனு மலடி கொடுஞ்சூலி;
மைப்படுங் கண்ணியர் கேளுங்கடி அந்த
வயசு வாலை திரிசூலி.

68 கத்தி பெரியதோ யுறை பெரிதோவிவள்
கண்ணு பெரிதோ முகம் பெரிதோ?
சத்தி பெரிதோ சிவம் பெரிதோ நீதான்
சற்றே சொல்லடி வாலைப் பெண்ணே!

69 அன்னம் பெரிதல்லால் தண்ணீர் பெரிதல்ல
அப்படி வாலை பெரிதானுல்
பொன்னு பெரிதல்லால் வெள்ளி பெரிதல்ல
பொய்யாது சொல்கிறேன் கேளுங்கடி.

70 மாமிசமானு லெலும்புமுண்டு சதை
வாங்கி ஓடு கழன்றுவிடும்;
ஆமிச மிப்படிச் சத்தியென் றேவிளை
யாடிக் கும்மி அடியுங்கடி.

71 பண்டு மூளைப்ப தரிசியே யானுலும்
விண்டுமி போனுல் விளையாதென்று
கண்டு கொண்டு முன்னே அவ்வை சொன்னுளது
வுண்டோ வில்லையோ வாலைப் பெண்ணே!

72 மண்ணு மில்லாமலே விண்ணுமில்லை கொஞ்சம்
வாசமில்லாமலே பூவுமில்லை;
பெண்ணுல்லாமலே யாணுமில் லையிது
பேணிப் பாரடி வாலைப் பெண்ணே!

73 நந்த வனத்திலே சோதியுண்டு நிலம்
நத்திய பேருக்கு நெல்லுமுண்டு;
விந்தையாய் வாலையைப் பூசிக்க முன்னுளில்
விட்ட குறைவேணும் வாலைப்பெண்ணே!

வாலையைப் பூசிக்கச் சித்தரா னுர்வாலைக்
கொத்தாசை யாய்ச்சிவ கர்த்தரானுர்;
வேலைப்யை பார்த்தல்லோ கூலிவைத் தாரிந்
விதந்தெ ரியுமோ வாலைப் பெண்ணே!

வாலைக்கு மேலான தெய்வமில் லைமாலங்
காப்பது சேலைக்கு மேலுமில்லை:
பாலுக்கு மேலான பாக்கியமில் லைவாலைக்
கும்மிக்கு மேலான பாடலில்லை.

நாட்டத்தை கண்டா லறியலா குமந்த
நாலாறு வாசல் கடக்கலாகும்;
பூட்டைக் கதவைத் திறக்கலா கும்மிது
பொய்யல்ல மெய்யடி வாலைப் பெண்ணே!

ஆணும்பெண் ணும்கூடி யானத னுற்பிள்ளை
ஆச்சுதென் றேநீரும் பேசுகின்றீர்;
ஆணும் பெண்ணுங் கூடியானதல் லோபேதம்
அற்ருெரு வித்தாச்சு வாலைப் பெண்ணே!



78 இன்றைக் கிருப்பதும் பொய்யல்ல வேவீடே
என் வாழ்க்கை யென்பதும் பொய்யல்லவே;
அன்றைக் கெழுத்தின் படிமுடியும் வாலை
ஆத்தாளைப் போற்றடி வாலைப் பெண்ணே!

79 வீணுசை கொண்டு திரியா தேயிது
மெய்யல்ல பொய்வாழ்வு பொய்க்கூடு
காணுத வாலையைக் கண்டுகொண்டாற் காட்சி
காணலா மாகாய மாளலாமே.

80 பெண்டாட்டி யாவதும் பொய்யல்லவோபெற்ற
பிள்ளைக ளாவதும் பொய்யல்லவோ?
கொண்டாட்ட மான தகப்பன்பொய் யேமுலை
கொடுத்த தாயும் நிசமா மோ?

81 தாயும் பெண் டாட்டியந் தான்சரி யேதன்யம்
தாமே யிருவருந் தாங்கொடுத்தார்;
காயும் பழமுஞ் சரியா மோஉன் றன்
கருத்தைப் பார்த்துக்கொள் வாலைப்பெண்ணே!

82 பெண்டாட்டி மந்தைமட் டும்வரு வாள்பெற்ற
பிள்ளை மசானக் கரையின் மட்டும்;

தெண்டாட்டுத் தர்மம் நடுவினி லேவந்து
சேர்ந்து பரகதி தான் கொடுக்கும்.

83 பாக்கிய மும்மகள் போக்கிய மும்ராச
போக்கிய மும்வந்த தானுக்கால்
சீக்கிரந் தருமஞ் செய்யவேண் டுங்கொஞ்சத்
திருப்ப ணிகள்மு டிக்கவேண்டும்.

84 திருப்பணி களைமுடித்தோ ருஞ்செத்துஞ்
சாகாத பேரி லொருவரென்றும்
அருட்பொ லிந்திடும் வேதத்தி லேயவை
அறிந்து சொன்னளே வாலைப்பெண்ணே!

85 மெத்தை தனிலே படுத்திருந் துநாமும்
மெல்லிய ரோடு சிரிக்கும்போது
யுத்தகா லன்வந்து தான்பிடித் தால்நாமும்
செத்த சவமடி வாலைப்பெண்ணே!

86 ஏழை பனுதிக ளில்லையென் ருலவர்க்
கிருந்தா வன்னங் கொடுக்க வேண்டும்;
நாளையென் றுசொல்ல லாகா தேயென்று
நான்மறை வேத முழங்குதடி.

87 பஞ்சை பனுதி யடியாதே யந்தப்
பாவந் தொலைய முடியாதே;
தஞ்சமென் ருேரைக் கெடுக்கா தேயார்க்கும்
வஞ்சனை செய்ய நினையாதே,

88 கண்டதுங் கேட்டதுஞ் சொல்லாதே கண்ணில்
காணுத வுத்தரம் விள்ளாதே;
பெண்டாட்டிக் குற்றது சொல்லாதே பெற்ற
பிள்ளைக் களப்பங் கொடுக்காதே.

89 சிவன்ற னடியாரை வேதிய ரைச்சில
சீர்புல ஞானப் பெரியோரை
மவுன மாகவும் வையா தேயவர்
மனத்தை நோகவும் செய்யாதே.

90 வழக்க ழிவுகள் சொல்லா தேகற்பு
மங்கையர் மேல்மனம் வையாதே;
பழக்க வாசியைப் பார்த்துக்கொண் டுவாலை
பாதத்தைப் போற்றடி வாலைப்பெண்ணே!

91 கூடிய பொய்களைச் சொல்லாதே பொல்லாக்
கொலைக ளவுகள் செய்யாதே

ஆடிய பாம்பை யடியா தேயிது
அறிவு தானடி வாலைப்பெண்ணே!

92 காரியனுகினும் வீரியம் பேசவும்
காணு தென் றவ்வை சொன்னுளே;
பாரினில் வம்புகள் செய்யா தேபுளிப்
பழம்போ லுதிர்ந்து விழுந்தானே.

93 காசார் கள்பகை செய்யா தேநடுக்
காட்டுப் புலிமுன்னே நில்லாதே;
தேசாந்திரங்களுஞ் செல்லா தேமாய்கைத்
தேவடி யாள்தனம் பண்ணுதே.

94. தன் வீடிருக்க அசல்வீடு போகாதே
தாயார் தகப்பனை வையாதே;
உன்வீட்டுக் குள்ளேயே யூக மிருக்கையில்
ஓடித் திரிகிருய் வாலைப்பெண்ணே!

95 சாதி பேதங்கள் சொல்லுகி றீர்தெய்வம்
தானெங் ெருருவுடல் பேதமுண்டோ?
ஓதிய பாலதி லொன்ருகி யதிலே
உற்பத்தி நெய்தயிர் மோராச்சு

96 பாலோடு முண்டிடு பூனையு முண்டது.
மேலாக காணவுங் காண்பதில்லை;
மேலந்த வாசையைத் தள்ளிவிட் டுள்ளத்தில்
வேண்டிப் பூசையைச் செய்திடுங்கள்

97 கோழிக் கறு காலுண் டென்றுசொன் னேன் கிழக்
கூனிக்கு மூன்றுகா லென்றுசொன் னேன்;
கூனிக்கிரண் டெழுத் தென்றுசொன் னேன் முழுப்
பானைக்கு வாயில்லை யென்று சொன்னேன்.

98 ஆட்டுக் கிரண்டுகா லென்றுசொன் னேனம்
மானைக்குப் பானைக்கு நிற்குமேல் சூல்
மாட்டுக்குக் காலில்லை யென்றுசொன் னேன் கதை
வகையைச் சொல்லடி வாலைப்பெண்ணே!

99 கோயிலு மாடும் பறித்தவ னுங்கன் றிக்
கூற்று மேகற் றிருந்தவனும்
வாயில்லாக் குதிரை கண்டவ னுமாட்டு
வகை தெரியுமோ வாலைப் பெண்ணே!

100 இத்தனை சாத்திரந் தாம்படித் தோர்செத்தார்
என்று லுகத்தோர் தாம்சிரிப்பார்;

செத்துப் போய்க் கூடக் கலக்கவேண் டுமவன்
தேவர்க ளுடனே சேரவேண்டும்.

1 உற்றது சொன்னக்கா லற்றது பொருந்தும்
உண்டோ உலகத்தி லவ்வைசொன்னுள்;
அற்றது பொருந்து முற்றது சொன்னவன்
அவனே குருவடி வாலைப்பெண்ணே!

2 பூரண நிற்கும் நிலையறி யான் வெகு
பொய்சொல்வான் கோடிமந் திரஞ்சொல்வான்
காரண குருஅ வனுமல் லவிவன்
காரிய குருபொ ருள்பறிப்பான்.

3 எல்லா மறிந்தவ ரென்றுசொல் லியிந்தப்
பூமியி லேமுழு ஞானியென்றே
உல்லாச மாக வயிறு பிழைக்கவே
ஓடித் திரிகிறர் வாலைப்பெண்ணே!

4 ஆதிவா லைபெரி தானு லும்மவள்
அக்காள் பெரிதோ சிவன் பெரிதோ!
நாதிவா லைபெரி தானு லும்அவள்
நாயக னல்ல சிவம்பெரிது.

5 ஆயுசு கொடுப்பாள் நீரிழிவு முதல்
அண்டாது மற்ற வியாதியெல்லாம்
பேயும் பறந்திடும் பில்லிவி னுடியில்
பத்தினி வாலைப்பெண் பேரைச் சொன்னுல்

6 நித்திரை தன்னிலும் வீற்றிருப் பாளெந்த
நேரத்தி லும்வாலை முன்னிருப்பாள்;
சத்துரு வந்தாலும் தள்ளிவைப் பாள்வாலை
உற்றகா லனையுந் தானுதைப்பாள்.

7 பல்லாயிர ங்கொடி யண்டமு தல்பதி
னுன்கு புவனமும் மூர்த்திமுதல்
எல்லா ந் தானுய்ப் படைத்தவ ளாம்வாலை
எள் ளுக்கு ளெண்ணெய்போல நின்றவளாம்

8 தேசம் புகழ்ந்திடும் வாலைக்கும் மித்தமிழ்
செய்ய எனக்குப தேசஞ்செய்தாள்
நேசவான் வீரப் பெருமாள் குருசாமி
நீள் பதம் போற்றிக்கொண் டாடுங்கடி.

9 ஆறு படைப்புகள் வீடு கடைசூத்ர
அஞ்செழுத் துக்கும் வகையறிந்து

கூறு முயர்வல வேந்த்ரன் துரைவள்ளல்
கொற்றவன் வாழக்கொண் டாடுங்கடி!

110 ஆடுங்கள் பெண்டுக ளெல்லோ ருமந்த
அன்பான கொங்கணர் சொன்ன தமிழ்
பாடுங்கள் சித்தர் களெல்லோ ரும்வாலை
பரத்தைப் போற்றிக் கொண்டாடுங்கடி

1 சித்தர்கள் வாழி சிவன்வா ழிமுனி
தேவர்கள் வாழி ரிடிவாழி
பத்தர்கள் வாழி பதம்வா ழிகுரு
பாரதி வாலைப்பெண் வாழியவே!



## நூலஃ பதினொன்று



பீரு முகம்மது

# ஞானரத்தினக் குறவஞ்சி

காப்பு

தரவு கொச்சகம்

பொன்னுலகு பொருந்துமனப்
பொருளறியத் தனமறிய
மின்னுலகில் மெய்ஞ்ஞானம்
விளங்குற வஞ்சிதனை
உன்னுமற் றன்னிணைவின்
உன்னி யுதிப் பொருநான் காய்த்
தன்னிறையைத் தன்னிணை வாய்த்
தரிப்பதுவே காப்பாமே.

கண்ணிகள்

1 ஆதிக்கு முன்னம நாதியு மென்னடி சிங்கி?
அந்தக் கருக்குழி முந்த இருளறை சிங்கா!

2 ஆதியாய் வந்த அரும்பொரு ளேதடி சிங்கி?
சோதியி லாதி சொரூபா யெழுந்தது சிங்கா!

3 சோதியி லாதி சொரூபமான தெப்படி சிங்கி!—அது
வேதமாம் முப்பொரு ளொன்ருய் முடிந்தது சிங்கா!

4 முப்பொரு ளென்றுநீ முன் சொன்ன தாரடி சிங்கி!-அவர்
அப்பனு மாயிர மாதியாம் நாமடா சிங்கா!

5 எப்படி யுலகில் இப்படி யுருவாளும் சிங்கி!-அது
அப்பன் தன் னட்புக்கு ஒப்பிய தாயாலே சிங்கா!

6 பராப ரத்தினிற் பஞ்சவன் னமேது சிங்கி!-அது
வேறாகித் [illegible] சிங்கா!

7 ஒன்றுக்குள் ஐவர்கள் உண்டான தெப்படி சிங்கி!-அது
ஒன்றேடே ஒன்ருக ஓடி இணைந்தது சிங்கா!

8 மூலக் குகைக்குள்ளே முச்சுட ரேதடி சிங்கி!-அது
நாதத்தி லேம்பூதம் நன்பா யுதித்தது சிங்கா!

9 மூலக் குகையெனுங் கோட்டைக் கரசர் யார்சிங்கி!-அது
முப்பொருள் ஒன்ருய் முடிந்த நினைவடா-சிங்கா!

10 மூலக்கி ழுங்கு முனைத்திடம் எவ்விடஞ் சிங்கி-அது
நாதத்தி லான நடுநிலை யல்லவோ சிங்கா!

11 முன்னே முனையாய் முனைத்திடம் எவ்விடஞ் சிங்கி-அது
முனைமு னையிரு கண்ணிக ளல்லவோ சிங்கா!

12 முன்னே யுருவாய் முடிந்திட மெவ்விடம் சிங்கி!-அது
பெண்ணுணு மாகப் பிறந்த தலமடா சிங்கா!

13 இந்த வுடலுக்கு வேரென்ன தூரென்ன சிங்கி!-அது
இந்த வுடலுக் குயிராதி மூலமே சிங்கா

14 இந்த வுடலுக் குயிர்வந்த தெப்படி சிங்கி!-அது
தொந்தி நடுக்குழி தொப்பூழ் வழியடா சிங்கா!

15 இந்த உடலுக் குயிரெங்கே நின்றது சிங்கி!-அது
அந்தர மாயண்டமாக்கொடி யல்லவோ சிங்கா!

16 இந்த வுடற்கனி எந்தக் கொடிக்கனி சிங்கி!-அது
முந்திய கொப்பூழு மாக்கொடி யல்லவோ சிங்கா!

17 மாக்கொடி என்பதை மானிடா என் சொன்னுர் சிங்கி!'
மட்டிலடங்காத மாகலி மாவடா சிங்கா!

18 எந்த வழியினுல் வந்தோ மூலகினில் சிங்கி!-அது
எல்லா முடிந்த பொருள்வழி யாமடா சிங்கா!

19 முன்னே அறிவால் அறிவகை என்னடி சிங்கி!-அது
முன் சுடர் மூன்று முடலுயி ராத்துமா சிங்கா!

20 பின்னே ரறிவர்க ளொன்ருன தெப்படி சிங்கி!-அது
பேதகமற்ற பெருவெளி யானது சிங்கா!

21 ஆசைகொண் டுநம்மை யாட்டுவா ராரடி சிங்கி!-அது
அக்கினி வாயுநீர் மண்ணின் மகிமையே சிங்கா!

22 ஆசைபா சப்பலன் அனுபோகம் ஆரடி சிங்கி!-அது
அங்கம் பொருந்திய பங்குமன் அல்லவோ சிங்கா!

23 தன்னை அறியுந் தலமேது சொல்லடி சிங்கி!-அது
கண்ணிடை யான நடுநிலை யல்லவோ சிங்கா!

24 என்ன விதமாகத் தன்னை யறிவது சிங்கி!-அது
தன்னவன் ருந்தந்தை யாகிநா மானது சிங்கா!

25 இறையை அறிவதிங் கெப்படிச் சொல்லடி சிங்கி-அது
இறையெங்கு நின்றுடு ந் தன்நினை வாகுமே சிங்கா!

26 தன்னுள் விளங்குந் தவமென்ன சொல்லடி சிங்கி!-அது
தன்னை மறந்து தவத்தி லிருப்பது சிங்கா!

27 என்ன விதமாகத் தன்னை மறப்பது சிங்கி!-அது
ஒன்றைப் பொருந்தி யொடுங்கியிருப்பது சிங்கா!

28 என்ன விதமாக ஒன்றைப் பொருந்தலாம் சிங்கி!-அது
எல்லா மறந்து இருளா யிருப்பது சிங்கா!

29 மூன்றென்று சொன்ன உயர்நிலை என்னடி சிங்கி!-அது
உன்னு ளுதிப்பல முன்னுல் நினைவடா சிங்கா!

30 கன்னி யெழுந்து கலந்திடம் எவ்விடஞ் சிங்கி!-சில
உன்னியெழுந்த உயிர்நிலை யல்லவோ சிங்கா!

31 எங்கும் பரந்த பெரும் பொருளென்னடி சிங்கி!-அது
அங்கிங்கு மெங்குமாய்க் கண்ட பெருவெளி சிங்கா!

32 அண்ணினு மெண்ணும் அழியாப் பொருளென்ன சிங்கி!-இரு
கண்ணையு மூட இருளழி யாப்பொருள் சிங்கா!

33 ஆங்கார வுடலுக்கு ஆணியா னென்னடி சிங்கி!-அது
ஓங்கார மூலத்தின் உள்ளொளி யல்லவோ சிங்கா!

34 ஆணியாய் வந்த அரும்பொரு ளென்னடி சிங்கி-முன்
தோணிய சற்குரு முதனும மல்லவோ சிங்கா!

35 இந்தப் பொருள்வந்த தெந்த வழியடி சிங்கி!-அது
அந்தக் கதிர்மதி வந்த வழியடா சிங்கா!

36 கத்த னொளிவு கலந்திட மெவ்விடம் சிங்கி!-வழி
அத்தன் நடனந்தா னுடிய தற்பரஞ் சிங்கா!

37 உத்தமப் பொருளுக்கு உயிரெழுத் தென்னடி சிங்கி!-அது
நச்சரவாடும் நடுநிலை யல்லவோ சிங்கா!

38 எட்டெழுத் தாக எழுந்தெழுத் தென்னடி சிங்கி!-அது
மட்டி லடங்கா வடிவட்ட கோணமே சிங்கா!

39 அஞ்செழுத் தாக அமைந்தெழுத் தென்னடி சிங்கி!-அது
அஞ்சும் பொருந்திய ஆகாய வட்டமே சிங்கா!

40 அன்பத்தோ ரட்சரம் அறியநீ சொல்லடி சிங்கி!-அது
வஞ்ச மகார நடுச்சுழி மூன்றுமே சிங்கா!

41 கற்பக வாசி கலந்திடம் எவ்விடம் சிங்கி!-அது
உற்பன மூலத்தி னுள்ளொளி யல்லவோ சிங்கா!

42 சத்தம் பிறந்திடுஞ் சற்குரு வேதடி சிங்கி!-அது
உற்ற சுவாசம் உயிர்நிலை யல்லவோ சிங்கா!

43 கண்டு தொழுஞ்சிவ காரண மேதடி சிங்கி-நம்மை
உண்டு படுத்திய வுள்ளொளியானதே சிங்கா!

44 எப்படிக் கண்டே இறையை வணங்கலாம் சிங்கி-அது
நட்புடன் இரண்டு நடுநிலை காண்பது சிங்கா!

45 நடுநிலை யானதை நாடுவதெப்படி சிங்கி-அது
நாட்டந்தேட்ட மோட்ட மாட்டமொன்று யினல் சிங்கா!

46 தேட்ட மூ நாலுந் திருந்துவ தெப்படி சிங்கி-அது
திருவைப் பொருந்தி ஒருமித் திருப்பதே சிங்கா!

47 ஒருமித் திருக்கின்ற ஓரிட மெவ்விடம் சிங்கி-அது
ஒன்று மிரவும் பகலும் உதிப்பிடம் சிங்கா!

48 இரவும் பகலுமொன் றானது மெவ்விடம் சிங்கி-அது
எப்போது மிருளா யிருப்பது மூலையே சிங்கா!

49 இரவும் பகலும் பிறப்பிட மெவ்விடம் சிங்கி-அது
இருளி லுதித்துன்னி வந்தத டிமூலம் சிங்கா!

50 இரவும் பகலும் மெழுந்திட மெவ்விடம் சிங்கி-அது
ஏகாந்த உன்னல்வந் தீதறிய தாமரை சிங்கா!

51 இரவும் பகலும் பிறந்திட மெவ்விடம் சிங்கி-அது
எழுந்தறு கோண மிடம்வலம் வாசியே சிங்கா!

52 இரவும் பகலுப் நின் றாடிய தெவ்விடம் சிங்கி-அது
எழுந்து நின்றாடுஞ் சுழுமுனை மண்டலம் சிங்கா!

53 இரவும் பகலு மிருப்பிட மெவ்விடம் சிங்கி-அது
ஈராறு மோடிய வோரான நான்கடா சிங்கா!

54 இரவும் பகலு முதிப்பிட மெவ்விடம் சிங்கி-அது
ஏறுமெட் டங்குல மிருவிழி நடுநிலை சிங்கா!

55 இரவும் பகலுமென் றென்னதைச் சொல்லலாம் சிங்கி-அது
இரவு பகலிடை பிங்கலை வாசியே சிங்கா!

56 இடைகலை பிங்கலை என்னத்தைச் சொல்லலாம் சிங்கி-அது
இடைகலை சந்திரன் பிங்கலை சூரியன் சிங்கா!

57 என்னத்தைச் சொல்லலாம் சந்திரன் சூரியன் சிங்கி-அது
கலையும் பொருந்தும் நடுச்சுழு முனையே சிங்கா!

58 சந்திரன் சூரியன் ஒன்றான தெவ்விடம் சிங்கி-அது
கலையும் பொருந்து நடுச்சுழு முனையே சிங்கா!

59 என்னத்தி லேபால னேறிநின் றாடுத சிங்கி-அது
உன்னுக்குள் வாசி நடனப் புரவிமேற் சிங்கா!

60 என்ன விதமாய் எடுத்துநின் றாடலாம் சிங்கி-அது
ஏற்றவு மாற்றவுவும் இணங்கிநின் றாடிப்பார் சிங்கா!

61 மாற்றிப் பிடிக்க மருந்தென்ன சொல்லடி சிங்கி!-அது
மாளாமல் மாண்டு மறைந்து இருப்பதே சிங்கா!

62 அட்ட கசங்கள் அறிந்திட மெவ்விடம் சிங்கி!-அது
எட்டு விதமா யெழுதும் பலனடா சிங்கா!

64 உற்றஞா னப்பொருளுத்தியாய்ச் சொன்னதார் சிங்கி!-அது
உத்தமர் பீருமுகம்ம துரைத்தது சிங்கா!





மதுரை வாலைசாமி

# ஞானக் கும்மி

காப்பு

1 சீர்மேவு ஞான வடிவான-பர
தேசிகன் சற்குரு தன்னருளாற்
பார்மீதில் ஞானக் கும்மி பாட-சிவ
பாலன் கணபதி காப்பாமே.

2 அம்பிகை வாலை பதம் போற்றி-அருள்
ஆனந்தக் கும்மித் தமிழ்பாடத்
தும்பி முகனுக் கிளையவ னுஞ்சிவ
சுப்பிர மண்யனுங் காப்பாமே.

3 நாலாம் வேதமு மோரா றும்-வெகு
நாநா பேதமாய் நின்றானை
மேலாய்ப் போற்றிக் கும்மி பாடச்-செந்தில்
வேலவன் தன்பதங் காப்பாமே.

4 பாரி லுயர்மது ராபுரியில்-வாலை
சாமிசொல் லுங்கும்மிப் பாடலுக்கு
மேரு வதனடி மூலமுக் கோண
விநாயகன் தன்பதங் காப்பாமே.

5 ஆதியும் அந்தமும் ஒன்ருகி-வளர்
அண்டபிண் டம்மு மிரண்டாகிச்
சாதி பலபல வேருகி நின்று
தத்துவங் கேளடி ஞானப்பெண்ணே!

6 தேகமா னதோர் மலபாண்டம்-அதிற்
சிற்பணம் வந்திடு முற்பணத்தை
யோக மெனுந் தமிழ்ப்பாடலுக்கு-மனம்
உவந்து கேளடி ஞானப் பெண்ணே!

7 ஏகப் பெருவெளி பட்டணமாம்-அதில்
எவனே சித்த னொருவனுண்டாம்-அந்த
வாச னில்லை பேசா வாயுமில்லை-அந்த
மாப்பிள்ளை பெண்ணென்று ஞானப் பெண்ணே!

8 சாட்சி யெனும்பிர மன்பிள்ளைக்கு மூலச்
சத்தியென் றவொரு பெண்ணுச்சு;
சூட்சும காரண மிரண்டினுக் குநிலை
தூலநா மென்கிருள் ஞானப் பெண்ணே!

9 ஊமையன் என்றே அறிந்துகொண் டாள் அந்த
ஊமைபேச் செல்லாமே நாமென்கிருள்;
சீமையை ஆளத் தசங் கட்டினுள் அந்தச்
சீமாட்டி தானடி ஞானப் பெண்ணே!

10 பெண்ணர சானதி ரத்தின மாமதைப்
பெண்ணென் று சொல்லவுங் கேள்வியுண்டோ?
மண்ணையும் விண்ணையுங் கூட்டிப் பயிர்செய்த
மார்க்கத்தைக் கேளடி ஞானப் பெண்ணே!

11 பட்டணங் கட்டி மகராசி துரை
பாங்குடன் செய்த அதிகாரச்
சட்ட முஞ் சொல்லத் தொலையாதே விதைச்
சற்றே கேளடி ஞானப் பெண்ணே!

12 அஞ்சூர் அஞ்சூர் வகுப்பாச் சாமம் அதில்
அஞ்சூர் அஞ்சு பிரிவாச்சாம்;
அஞ்சு ருக்கொரு வித்தாச் சாமம் அதற்
கான குளமுண்டு ஞானப் பெண்ணே!

13 ஊரை யடுத்து மலையுமுண் டாம் அதற்
குள்ளா யிருந்த நிலைக்காரர்
பேரை யுரைக்க இனிக்கே ளுமவர்
பெருமைதா னென்னடி ஞானப் பெண்ணே!

14 தலைமன் னரிலி ருப்பவ ராமந்தச்
சட்டையப் பிள்ளையும் நெட்டையராம்;

நிலமு மான்யமு மென்னவன் றூளந்த
நிசந்தெ ரியுமோ ஞானப்பெண்ணே!

15 கும்பகோ ணத்திலே அப்புப்பிள் ளையவர்
கூட்டமற் றூல்வெகு வாட்டமென்று
செம்பாதிப் பங்குதான் கேட்டுவந் தால்நியாயந்
தெளிவ தெப்படி ஞானப் பெண்ணே!

16 மூலக் குடிவன்னித் தேவரை வரவர்
மூர்க்கமுந் தீர்க்கவு மார்க்கமுண்டோ?
நாலு கரைப்பங்கு நாமென்கி றூரிந்த
ஞாயந் தெரியுமோ ஞானப்பெண்ணே!

17 காத்தவ ராய கவுண்டனுக்குத் திசைக்
காவலும் மற்ற விசாரணையும்
பார்த்து வருவது நாமென்கி றூரிந்தப்
படிநி லைக்குமோ ஞானப்பெண்ணே!

18 ஆகாய மான பரஞ்சோ தியவர்
அஞ்சுக் கரைப்பங்கும் தனக்குள்ளே
சேகர மாமென் றுஞ் சொல்லுகி றூரிந்தச்
சேதியைக் கேளடி ஞானப் பெண்ணே!

19 அம்பலக் காரரும் மூன்றுபே ராம் பின்னும்
அத்தக ளுட்டுக் கணக்கனெ ன்றும்;
வம்புசெய் தாலந்த மூன்னு ளனுப்படி
வகைதெ ரியுமோ ஞானப்பெண்ணே!

20 ஒன்பது கூத்தரும் பங்காளி எந்த
ஊருக்கு ளூர்களும் அப்படியாம்;
ஐம்பது சேருவைக் காரருக் குமவன்
அண்ண னொருவனும் ஞானப்பெண்ணே!

21 கோயிற் குருக்க ளொருபார்ப் பான்தெப்பக்
குளத்தின் மேலே யவன்வீடு;
தாவிக் கொண் டுதொடை தட்டுகி றூனிலஞ்
சாருமோ கேளடி ஞானப் பெண்ணே!

22 செட்டி யொருவனும் பங்கா ளிஅதிற்
சேர்ந்தவனுக மிக வோங்கிக்
கட்டி வராகனைக் கொண்டு வந்தால் காணி
யாட்சி செல்லுமோ ஞானப் பெண்ணே!

23 காரியக் காரரோ அஞ்சுபே ராமவர்
காரியம் பார்க்க வீரஞ்சு பேராம்;
மாரீசக் காரர்; சமாதிக்கன் மூன் றுபேர்
வார்த்தையைக் கேளடி ஞானப் பெண்ணே!

24 ஊழியக் காரர் அநேகருண் டாமவர்க்
கும்பளஞ் சம்பளம் நிரம்பவுண்டாம்;
பாளையங் கோட்டைக்குச் சாரிவைத் தாலிவர்
பதுங்குவாரடி ஞானப் பெண்ணே!

25 பாழூ ருக்கொரு மேல்மணி யாமவன்
பார்த்தாற் சின்னப் பயல் காணும்
வேளூ ரானரைப் பங்குத் தனமுதல்
விற்றுக் கொடுக்கிறான் ஞானப் பெண்ணே!

26 ஆராறு குடியு முண்டா கும்மதில்
அந்நியக் குடிமுப்பத் தைந்து முண்டாம்;
ஓராறு பத்துக் குடிதனி லேயஃது
ஒட்டுக் குடியடி ஞானப் பெண்ணே!

27 இத்தனை பேரு மிருந்தா லும்மதில்
இரண்டே பேர்கள் சமுசாரி;
அத்தனை பேரையுந் தள்ளிவைத் தாற்பயிர்
ஆரிடு வாரடி ஞானப் பெ்ண்ணே!

28 ஒற்றேர் ஒற்றை எருதா கும்மதில்
ஒன்று பரம்புழுச் சாலடிக்கும்;
கற்றுடன் காரணங் கண்டா யோஞானக்
கண் கொண்டு பாரடி ஞானப் பெண்ணே!

29 இரண்டு கரைக்குடி மானிய மாமதில்
இட்ட விதையொட்டி ரட்டியுண்டாம்;
பண்டு பழகின மேன்புள்ளிக் காரனும்
பார்த்துப் போயினன் ஞானப் பெண்ணே!

30 புள்ளிக் குறைச்சலும் வாரா மல்முன்னே
போட்ட பலனுங்கை யாடாமற்
கொள்ளையிடச் சொல்லி ஓலைவந் தாலிது
கொடுமை சொல்லடி ஞானப் பெண்ணே!

31 வந்த விதியென்றி ருந்தா லும்வசக்
கட்டு நிலுவையுங் கேட்கிறானே
இந்த மகிமை யவன்ற னுவிதற்
கென்ன சுகமடி ஞானப் பெண்ணே!

32 தரிசுக் கிடக்கிற பெட்டியி லேயேறித்
தண்ணீர் பாய்ச்சவுஞ் சொல்லுகிறான்;
வரி கொடுக்கிற தில்லையென் றாற்பூசை
மாட்டுகி றானடி ஞானப்பெண்ணே!

33 ஊரிற் குடியதி ருக்கவொட் டானிருந்
தூழியஞ் செய்யவும் வேலையிட்டான்;
தீரமில்லை யென்று சொன்னா லுமவன்
தெண்டம் பிடிக்கிறான் ஞானப் பெண்ணே!

34 அந்த இருபத்தோ ராயிரத் திருநூற்
றுக்கல நெல்லுமே கண்டுமுதல்
வந்ததுண் டோவதில் மூனறத் தொருபங்கு
வாரம் பிடித்தாண்டி ஞானப் பெண்ணே!

35 மிச்ச மிருந்த நெல் லுத்தொகை யில்வாரம்
விண்ணுறுநோய் கொண்ட பேயனுடன்
அச்சுதன் சேயனுஞ் துங்கக்கோ னுனுமாய்
அழித்துப் போட்டாரடி ஞானப் பெண்ணே!

36 நிலம் விளைந்ததுங் காணீ ரோவதிற்
செலவழிந்ததும் பாரீரோ?
அலமந்து திரி யாம லேயருள்
ஆனந்தஞ் சேரடி ஞானப் பெண்ணே!

37 எண்சா ணிள மொரு விடாமதில்
எட்டொரு பீற்றல் மலக்கூடாம்;
பஞ்சாயக் காரரீ ரைந்துபே ருந்தெய்வப்
பதியி தென்கிறர் ஞானப் பெண்ணே!

38 தேக மென்னுஞ் சிவாலய மாமதிற்
சென்னி சிறுவாயிற் கோபுரமாம்;
காக மான விரண்டு கரக்கோடுங்
கையாங் கேளடி ஞானப் பெண்ணே!

39 உண்ணுக் கென்ற கொடி மரமாமதிற்
கோபுர சந்திர புட்கரணி
அண்ணுக் கென்றே வலப்புறத் திற்கண்ட
தக்கினி தீர்த்தமாம் ஞானப் பெண்ணே!

40 நாற்பத்து முக்கோண மண்டப மாம்அதன்
நடுவி ருக்குதாஞ் சிங்காரம்!
பார்ப்பது சக்கரக் கோட்டையிலே யிந்தப்
படியிருக்குதாம் ஞானப் பெண்ணே!

41 பீடமிருப்பது மையத்தி லேபலி
பீட மிருப்பதுங் குய்யத்திலே;
மாடமிருந்த சிவாலயத் தின்மணி
விளக்கி ருக்குது ஞானப் பெண்ணே!

42 இப்படி யான திருக்கோ விலதற்
கெப்படி வாயி லிருக்காதோ
அப்படி யென்று தெரியா மற்றெரிந்
தலைகி றாரடி ஞானப் பெண்ணே!

43 பூட்டைத் திறப்பதுங் கையாலே மனப்
பூட்டைத் திறப்பது மெய்யாலே;
வீட்டைத் திறக்க முடியாமல் விட்ட
விதியி தென்கிறர் ஞானப் பெண்ணே!

44 வாசலிலே யொரு மேல்வா சலந்த
வாசலிலே சிறு வாசலுண்டு;
நேசமுடன் திருவாசலிற் பூட்டு
நெருக்கம் பாரடி ஞானப் பெண்ணே!



45 அட்சர மாமெள ஞட்சர மாவது
ஆனல் நல்ல திறவு கோலாம்;
உச்சிதமாகத் திறந்தா லேயந்த
உச்சிவழிகாணும் ஞானப் பெண்ணே!

46 கண்ணு லேமனக் கண்ணு லேயதைக்
கண்டாலே வழி யுண்டாகும்;
பெண்ணுசை தன்னை யடுக்கா மல்வழி
பேணிப் பாரடி ஞானப் பெண்ணே!

47 பார்த்து நடப்பது மேல்வா சலந்தப்
பாதையறிவது மெவ்வாறு?
மாத்திரை நேரம் பிரியா மற்பாதை
மார்க்கங் கேளடி ஞானப் பெண்ணே!

48 எருக்கி டந்த குழிதாண் டியதில்
இரண்டு விரற்கடை மேற்ருண்டிக்
கருக்கி டைச்கும் அடையாள மதைக்
கண்டு கேளடி ஞானப் பெண்ணே!

49 மாயன் அரண்மனை காணீ ரோவன்னி
மரமி ருப்பதுங் தோணீரோ?
நேய மதுகடந் தப்பா லேயறு
கோணப் படியடி ஞானப் பெண்ணே!

50 கோணத்தில் நின்று மயங்கா தேசுழிக்
காற்றை யடக்கிச் சிணுங்காதே;
வீணுக் கலைந்து தியங்காதே தூல
வேடத்தைத் தள்ளடி ஞானப் பெண்ணே!

51 தூலத்தை விட்டு விடாயா கிலதிற்
சூட்சத்தைக் காண முடியாது;
பாலத்திலேறி நடந்தக் காற்பெரும்
பாதையி தல்லவோ ஞானப் பெண்ணே!

52 பாதையான பெரும்பாதையைக் கிட்டிடப்
பட்டண முண்டொரு வட்டமதாய்;
நாதமுங் கீதமுங் கேட்குதடி தெய்வ
நாயகன் சந்நிதி ஞானப் பெண்ணே!

53 சந்நிதி யென்னடி கண்டதுண்டோ கண்டால்
தத்துவம் பேசத் திறமுமுண்டோ?
மூன்னே முப்பாழுங் கடப்பதுண்டோ அதில்
மூச்சுடருண்டடி ஞானப் பெண்ணே!

54 முச்சுடர் வட்டமே சக்கர மாமது
மூக்கு நுனியிற் சுழுமுனையாம்;
அச்சுடர் வட்டத் திரு[illegible]
ஆனந்த நந்தியாம் ஞானப் பெண்ணே!

நந்தியிருந்தது வன்னிவட் டம்மதில் நாட்டம் புருவமத் யானதிட்டம்; 55
சந்திரனுங் கதிர்ச் சூரியனும் அந்தத் தலத்தில் நின்றனர்
ஞானப் பெண்ணே!

நாதவிந்தல்லவோ நால்யோ னிதச நாதவிந் தல்லவோ எழுதோற்றம்? 56
நாதவிந்தால் உடலும் உயிரும்பரம் நந்தியைப் போற்றடி
ஞானப் பெண்ணே!

விந்து இருந்த தலந்தனிலே குருநந்தி யிருந்தார் கொலுவாகி; 57
சிந்தை தெளிந்து மகாரம்வைத் தால் அந்தச் சீமானைக் காணலாம்
ஞானப் பெண்ணே!

சீமான் கிட்ட அடுத்தக் கால்மேலைச் சீமை நமக்குக் குடியாச்சு; 58
ஆமா மென்று கும்மிப்பாடியருள் ஆனந்தஞ் சேரடி ஞானப்பெண்ணே!

ஆனந்தமான தலந்தானே அது அத்து விதமாந் தலந்தானே 59
தானந்தமான சதாசிவத்தைப் போற்றித் தாண்டிக் கும்மி அடியுங்கடி

ஞானமாம் ஆயிரத் தெட்டிதழ்ப் பீடம் நாட்டமாஞ் சந்திரனுர் வீடு 60
மோனம் இருந்த மகார மவுனத்தை மூட்டிக் கும்மி அடியுங்கடி.

குண்டலி வாசி யகாரம டிபீடர்க் கண்டமதிலே யுகாரமடி 61
உண்டு சுழியின் மகாரம்வைத் தாற்சிவ லோகம் இதல்லவோ
ஞானப் பெண்ணே!

ஓங்காரமான பிரணவத் தாள்எங்கும் உயர்ந்த சோம கலை நிறத்தாள் 62
ரீங்காரமான பராசக்தியை நீங்கள் நேர்ந்து கும்மியடியுங்கடி.

பூரக முப்பத்திரண்டாகு மனப் பூரண கும்பம் இரட்டியதாம் 63
கூறவே ரேசகம் எண்ணிரண்டாம் அந்தக் குறிப் பறிந்துகொள்
ஞானப் பெண்ணே!

பிங்கலை யாவதி ரேசகத் தைவளர் பூரகந் தன்னி டலத்தூதி 64
நங்கலை நந்தியிற் கும்பிக்கவே சிவ நாட்டம் இதல்லவோ
ஞானப் பெண்ணே!

அறிந்து கொள்ளு மெழுத்தோடே பவுரணை முதலமா வாசிமட்டும் 65
மறந்திடாமற் செய் மாத்திரை யின்படி வாசி வசமாகும்ஞானப்பெண்ணே!

காலாலே கனல் ஏற்றுங்கடி சுழி மேலே கொண்ட முதூட்டுங்கடி 66
மூலா தாரத் தலங்கேசர மென்று முழங்கிக் கும்மியடியுங்கடி.

சார்ந்து கொள்ளடி கேசரத்தை மூதற்றன்னை யறியலாந் தானாகக் 67
கூர்ந்து மூலக் கணபதி பா தத்தைக் கும்பிட்டுக் கொள்ளடி
ஞானப் பெண்ணே!

நவ்வெழுத்தே பிரமனுரா குமதில் நாரணன் மவ் வெழுத்தானுனே; 68
சிவ்வெழுத்தே தெய்வ ருத்திரனும் இன்னுஞ் செப்புவன் கேளடி
ஞானப் பெண்ணே!

செப்புவே வவ்வு மகேசுரனும் வட்டஞ் சேர்ந்துப சாரம் சதாசிவனும்; 69
தம்பிலா ஐந்தெழுத்தாலே சராசரந் தங்கியிருந்தது ஞானப் பெண்ணே!

வாலையி னட்சர மூன்றுகும் அதை வாய்கொண்டு சொல்பவரார் காணும் 70
மேலொன்றுங் கீழொன்றும் மத்திம முங்கூட்டி விரைந்து பாரடி
ஞானப் பெண்ணே!

விரைந்து சொல்லுவன் மூன்றெழுத் தாற் சதம் விரிந்து தானுயுர் 71
உண்டாச்சு;
தெரிந்து கண்டவர் தங்களுக்கு காவலை தீட்சையி தல்லவோ
ஞானப் பெண்ணே!

தீட்சை யெனுஞ்சிவ சக்கரத் தின்மையைந் தேவியெழுத்தை 72
நிரை நிறுத்திக்
காட்சியுடன்சிவ பூஜை செய் தாற்சித்தி கைவச மாமடி ஞானப்பெண்ணே!

கள்ளுண்டு தள்ளுண்டு நில்லாதேபின்பு கஞ்சாஉறக்கமுங் சொள்ளாதே; 73
உள்ளுண்டு சோமக் கலையாதி பானத்தை ஊட்டிக் கும்மியடியுங்கடி!

கும்மி அடிப்பெண்கள் அம்பலத்தை யரைக் கூட்டி அமுதங் குடியுங்கடி 74
அம்மென்றும் உம்மென்றுஞ் சொல்லாமல் நின்ற அத்விதம்
பாரடி ஞானப் பெண்ணே!

அத்வித மாவத்துக் காதியடி மத ஆயிரத் தெட்டிதழ்ப் பூசைபண்ண 75
மூத்தி தருஞ் சோமப்பாலை யனுதினம் மூட்டிக் கும்மியடியுங்கடி.

மூட்டுவதென்ன திரிகோண வட்ட மூலத்தில் குண்டலி வாசியினல் 76
நாட்டுவன் பூரண நாலையுங் கட்டினுன் ஞாயமி தல்லவோ
ஞானப் பெண்ணே!

கட்டிக்கொள் விந்துவைத் தள்ளா தேசுழிக் காற்றையடக்கிப் 77
பெருக்காதே
சுட்டி மனப்பொரு துரூதே காமச் சோம்பலைத் தள்ளடி ஞானப்பெண்ணே!

சோம்பலுந் தூக்கமும் ஆகாதே அன்ன சுகியுஞ் சோகமுங் கொள்ளாதே
சாம்ப சதாசிவ நாட்டத்திலே நின்று சார்ந்து கும்மி யடியுங்கடி.

கைவச மாவது சட்டிவித் தைஞானக் கற்பகமும் வந்து லபிக்குமடி; 79
தெய்வம் இவரென்று சொன்னுரே நல்ல சித்தரு மூத்தரும்
ஞானப் பெண்ணே!

யோகத்துக் காதி யுமைதீட் சைமற்ற யோகத்துக் கெல்லா முதல் தீட்சை
போகத்தைக் கைவிட லாகா தேசுத்திப் பூசையைக் வேண்டிக்
கொள் ஞானப் பெண்ணே!

வேண்டிக்கொள் விந்து முகனு தஞ்சத்தி மேவுஞ் சிவத்துடனே பரமாம் 81
தாண்டிக் கொள் இந்த வகையாறும் யோகசாதக சாக்கிரம்
ஞானப் பெண்ணே!

சாக்கிரம் விந்துக்கு மேலண்ட மாம்அதைச் சார்ந்திடும் நிற்குண 82
நிட்களந்தான்
பார்க்கில் நிராதார மாமலத் தைஅதைப் பாரா விடம் அந்தம்
ஞானப் பெண்ணே!

அந்த மடியிந்த மேலா றுங்கண்டே ஆரறி வாரடி ஞானவழி? 83
சிந்தை தெரிந்த பெரியோ ரைக்கண்டு [illegible] கும்மியடியுங்கடி.

சேவிப்ப துந்தவ னந்தியடி யோக மாய்நிற்ப தும்விந்து நாதமடி 84
ஆவிக் கிசைந் த சதாசிவ சாக்கிரம் அவ்விட மாமடி ஞானப் பெண்ணே!

அவ்விட்டே யுவ்விட்டே மேற்சுழி யிற்சுழி அங்கி யைவிட்டுக் காலாலே 85
மவ்விட்டு நாதவிந் துட்பொரு ளைக்கண்டு வாழ்த்திக் கும்மி யடியுங்கடி.

மூழக்க மென்ன பிரணவ மாமதை மூட்டுச் சமாதியி லிரேசகத்தை 86
விளக்கு மாகு மிரவி காந்திநித்தம் வேண்டிக் கும்மியடியுங்கடி.

பார்க்குஞ் சுழுமுனை காணு ரேயது மூக்கு நுனியென் றறியாரே 87
மார்க்க மறிந்து பெரியோ ரைக்கண்டு வாழ்த்திக் கும்மி யடியுங்கடி.

வாழ்த்தி யடிபெண்ணே ரேசகத் தைவினை மாற்றியடி பெண்ணே, 88
பூரகத்தை
தூற்று மகாமிய சஞ்சிதத் தைத்தொல்லை தொலைத்துக் கும்மியடியுங்கடி

பாசமற் றவிடம் கேசர மாம்ஒரு பாதியில் நின்றிட யோகமுமாம்; 89
நேசமற் றூர்பிர்ம ஞான சமாதியும் நிருவி கற்பமாம் ஞானப் பெண்ணே,

கற்ப மடியிது மெய்யா குமற்றைக் கர்ம்மெல் லாமிக அற்பமடி 90
தற்பரா னந்த சதாசிவ மோனத்தைச் சார்ந்து கும்மி யடியுங்கடி!

பாசத்தைச் சொல்லும் உடலாக அந்தப் பசுவைச் சொல்லும் உயிராக 91
நேசத்தில் நிற்பது யாதது பிரம நிட்டையென் பாரடி ஞானப் பெண்ணே!

தேகத்துக் காதியாம் ஐம்பூ தமற்றைச் செயலுக் காதியாம் விட்சேபம் 92
மோகத்துக் காதியா மம்மா யைஇன்னும் மூழுதுங் கேளடி
ஞானப் பெண்ணே!

இன்னமுண்ட ந்த வியாகிரு தற்கும் இரணிய கர்ப்பன் விண்ணுவுக்கும் 93
மின்னிய விராடபு ருடனுக் கும்இன் னும் மேலுண்டு சைதன்யம்
ஞானப் பெண்ணே!

சைதன்ய வத்துவே பிரமமடி அந்தச் சாட்சிக்குப் பிரதி பிம்பமடி 94
மெய்நின்ற சுத்த அறிவா லுல்ப்ரதி பிம்பத்தைத் தள்ளலாம்
ஞானப் பெண்ணே!

ஆமடி யிந்தப் பதந்தா னேகண்டால் ஆதியும் அந்தமு நீதானே; 95
நாமடி வாசிக் குதிரையி லுல்மிக்க நல்ல கதியடி ஞானப் பெண்ணே!

சாதிக் குதிரை உ லுவே கஞ்சரு தாரு இருக்கின்றான் மேலாக 96
வீதிக்கு வீதி சாரிவைத் தாற்பரி வேடிக்கை பார்க்கலாம்
ஞானப் பெண்ணே!

கட்டுப் படாதந்த அச்சுமட்டம் அது காலோ பன்னிரண்டாகையினல் 97
எட்டுக் கயிற்றினாற் கட்டிக்கொண் டால் இது மட்டுப்படுமடி
ஞானப் பெண்ணே!

கட்டுப்படுமோ மலவா யில்நடு மையத்தின் குண்டலி வாசியினல் 98
எட்டையும் நாலையுங் கட்டியே போற்றிடில் ஏறி நடத்தலாம்
ஞானப் பெண்ணே!

சூட்சக் குதிரை யடங்கா துசுழிக் கோட்டுக்குட் செல்ல முடியாது 99
மூச்சுக் காயிரங் காதவழி மிக முந்தி நடக்குதாம் ஞானப் பெண்ணே!

குதிரை கட்டிய லாயத்திலே மனக் கோட்டையி லே சந்தைப் 100
பேட்டையிலே
எதிரிதான் வந்து தட்டுகிருன் அதை ஏனென்று கேளடி ஞானப்பெண்ணே!

காமன் எவருக்கும் மூத்தவனும் அவன் கற்றிடும் வித்தைகள் 1
மெத்தவுண்டாம்!
தாமத மானகு ரோதனும் லோபனுந் தம்பியாம் கேளடி
ஞானப் பெண்ணே

மோக மதமிரு பிள்ளைக ளாம்ஒரு மூர்க்க மமசியக் காரனெடு 2
சேகர வீரசை டம்பனுஞ் சம்பனுஞ் சிநேக மாமடி ஞானப் பெண்ணே!

சிநேகனுக் கேற்ற உறவாளி பொல்லாத் தீயவ னுகுமோ ராங்காரி 3
அநேகத்தைச் செய்யு மவதியில் ரோசனும் அத்தை மகனடி
ஞானப் பெண்ணே!

பெண்ணே கேளு பதிமூன்ருகிய பேர்களுண்டு பகையாளர்; 4
ஒன்றே யொன்று வசமா னுல்அவர் ஒடுங்குவா ரடி ஞானப் பெண்ணே!

ஓடுக்கமில்லை யிவரா லேபலன் ஓட்டமெல் லாமனக் கோட்டையிலே 5
படுகளத்துக்கு மேய்ந்துவ ரப்பசு பற்றுகிருரடி ஞானப் பெண்ணே!

பாம்பி ருக்குது புற்றுக்குள் ளேசுக பந்த மிருக்குது நெஞ்சுக்குள்ளே; 6
வீம்பை யடக்கி உயர்ந்தக்கால் பரிவேடிக்கை பார்க்கலாம்
ஞானப் பெண்ணே!

பித்துப் பிடித்த மனக்குரங்கு வெறிப் பேயும் பிடித்துக் கொண் 7
டாட்டமிட்டால்
அத்தை யடக்க மருந்துசெய் தாற்பரி அன்று நடத்தலாம்
ஞானப் பெண்ணே!

நடத்தலாமே மனவாசி ஒரு நாலைந்து பீற்றலை மூடாமல் 8
திடத்தினல் மனஞ் சித்தானுற் சித்தந் தெளிந்து கொள்ளலாம்
ஞானப் பெண்ணே!

தெளிந்த சித்தகம் பூட்டிய திற்சேணத் தேறும் அறிவை யதிற்சேர்த்துக் 9
குளிர்ந்து ஞானவை ராக்கியக் குறடா கொண்டு மாட்டடி
ஞானப் பெண்ணே!

மூலத் தெருவி லொருபாய்ச் சல்அந்த முச்சந்தி வீதியி லோர்பாய்ச்சல் 110
மேலைத் தெருவி லொருபாய்ச் சல்பரி வேடிக்கை பார்க்கலாம்
ஞானப்பெண்ணே!

அந்த விதங்கள் அறியா மல்மணி மந்திர மென்று திரிகின்ருர் 11
அந்தரமான எழுத்தறிந் தால்மணி மந்திர மல்லவோ ஞானப் பெண்ணே!

மவுன மந்திரங் களினலே தங்கள் வாய்தனை மூடித் திரிவார்கள் 12
புவன சாரம் புசிப்பார்க் கும்தி போசனமாகுமோ ஞானப் பெண்ணே!

தாயென்று சொல்லுவார் சொப்பனத் திற்காம சன்னதம் வந்தால் 13
நினைப்பாரோ?
வாய் கொண்டு வேதம் படித்தா லுஞ்சுத்த மௌன ந் தங்குமோ
ஞானப் பெண்ணே

தாடி வளர்த்துச் சடைவளர்த் துநல்ல சந்யாசி யென்றொரு 14
வேடமிட்டே
ஓடித் திரிந்த விளையாட்டை யிங்கே ஒப்புவ தாரடி ஞானப் பெண்ணே!

பேசாதிருக்கும் இடம் பார்த்தே அதைப் பெற்றேயிருப்பது 15
மந்திரமாம்;
ஆசான்என் றேயுப தேசமிட் டாற்குரு அல்லவென் றுகும்மி யடியுங்கடி.

சொற்குரு வாலே கதியா மோபொய்யைச் சொல்லுவார் தங்கள் 16
உறவாமோ
சற்குரு வான வரைச்சேர்ந் தேயவர் தம் சொல்லைக் கேளடி
ஞானப் பெண்ணே!

நானென்ற ஆணவம் பேசார்கள் நல்ல நாடென்றுங் காடென்றுஞ் 17
சொல்லார்கள்;
தானென் றியாவையுங் கண்டாரே நல்ல சற்குரு வாமடி
ஞானப் பெண்ணே!

குருஇருப்பதும் உள்ளந்திலே மனக் கோணல் அறுப்பதுந் தனக்குள்ளே 18
பொருள் இருப்ப தறியாமல்புடம் போடுவதெப்படி ஞானப் பெண்ணே!

வாதஞ் செய்ய அறியா மல்ரச வாதஞ் செய்கிறோமென்று சொல்லிச் 19
சூதங் கெந்தி புடத்திலிட் டால்அதிற் சொன்னம் விளையுமோ
ஞானப் பெண்ணே!

லிங்க முருக்க அலைவார்கள் சாதி லிங்க மிருப்ப தறியாமல்; 120
வங்கமுந் தங்கமும் சேர்த்து ருக்கினல் பங்கமி தல்லவோ
ஞானப் பெண்ணே!

பாசா ணங்குகை தன்னில் வைத் துவெள்ளைப் பாலா லூட்டிக் 21
குகைமூடி
ஈசானியப்புட மிட்டாலும் அதில் இருப்ப தென்னடி ஞானப் பெண்ணே!

காரணமானது காரிய மாவதைக் கட்ட அறியார் முழுமூடர்; 22
பூரணமென்று திரிந்தா லுமதிற் புண்ணிய முண்டாமோ
ஞானப் பெண்ணே!

23
முப்பூ வென்று திரிவார் கள்அந்த முப்பூ வந்த வகைகாணார்;
அப்பூ வென்று மறிந்தக் காற்சித்தி ஆமென்று கும்மி அடியுங்கடி.

காரத்தைக் கட்ட அறியார்கள் கடுஞ் சாரத்தை நீற்றினஞ் செய்யாமல் 24
வீரத்தைப் பூரத்தைச் சேர்த்தத னலது வீணல்ல வோசொல்லு
ஞானப்பெண்ணே!

கோசவித் தையை யறியாமல் லோக வேசத்தி னின்று மலைவார்கள் 25
கோச பீசம் றிந்தா லேவாதம் கோசா ரமடி ஞானப்பெண்ணே!

வாதத் திறவுகோல் காணு ரேபஞ்ச பூதச் சரக்கையுந் தோணு ரே 26
ஏதுக்குக் கண்புகைந்தூ துகின் ருரிதை ஏதென்று கேளடிஞானப் பெண்ணே!

துருசு சுன்ன முடிந்தாச் சேஅதைச் சோதிக்க எட்டரை மாற்ருச்சு; 27
பொருளைச் சொல்லிப் பணம்பறிப் பாரிவர் பொய்க்குரு அல்லவோ

ஞானப்பெண்ணே!

கவனி சூத முடிந்ததென்பார் ஊசிக் காந்தத்தைக் கின்னமுஞ் 28
செய்தோமென்பார்;
புமனி வாதப் புரட்டா லேயவர் பிழைக்கி ருரடி ஞானப்பெண்ணே!

பிழைக்க மூத்தி யறியா மற்சென்ம பூர்வக் கியானந் தெரியாமல் 29
தழையைத் தின்று சருகாகித் திசை தயங்கு ருரடி ஞானப்பெண்ணே!

தயங்கி யென்ன பலனு மோவனஞ் சாதித்து நிர்கத் திறமாமோ? 130
மயங்கி டாதே அழலை மகத்துவம் வருவ தெப்படி ஞானப்பெண்ணே!

உப்பை யறிந்தவ னேவா திசகத் துப்பை யொழிந்த வனேயோகி 31
தப்பிலை யேபூமி நாத மகிமையைச் சார்ந்து பாரடி ஞானப்பெண்ணே!

வீட்டி லிருக்கு தொரு மூலம்வெளிக் காட்டி லிருக்கு திருமூலம்; 32
மாட்டி லிருக்கும் பெரியோர்குரசவாதமி தல்லவோ ஞானப்பெண்ணே!

தோணு தென்ற சரக்கெடுத் துச்கருஞ் சூரா சூரையில் வைத்தெடுப்பச் 33
சாணுன் கண்ட பொருள்போ லேசித்தி தானேன்று கும்மியடியுங்கடி.

நெல்லி யிருக்குது காட்டுக்குள் ளேசுரு நெல்லியிருக்குது வீட்டுக்குள்ளே; 34
கொல்லி மலைக்குத் திரிந்தா லும் குரு கொண்டு வருவாரோ

ஞானப்பெண்ணே!

காயம் பட்டிக்கு ளத்துக்குள் ளேவெள்ளைக் காயா வேரு 35
மூளைத்திருக்கும்;
வாயாற் றின்று நிமிர்ந்தக் காலுடல் மாயா தல்லவோ ஞானப்பெண்ணே!

கற்ப நிலையறிந் தெண்ணு மல் வெறிக் கஞ்சா உண்டு விழிப்பார்கள்! 36
அற்பர் குகைமலை சென்ருலும்வத்தை அறிய லாகுமோ ஞானப்பெண்ணே!

கொங்கணர் சொன்ன கடைக்காண்டம் அதிற் சங்கை யறிவது 37
பிரமாண்டம்;
எங்கள் குருசட்டை மாமுனி யாரிரு நூறும் பாரடி ஞானப்பெண்ணே!

நூறி லுரைத்தது மெய்ஞ்ஞா னந்திரு மூலர் உணர்ந்தது வேஞானம் 38
பூரண கும்ப மூனிசொன்ன சூத்திரம் பூண்டகம் பாரடி ஞானப்பெண்ணே

தீட்சையில் மச்ச முனிதீட் சையவர் செப்பின ஞான மொரு நூறும் 39
தாழ்ச்சிவா ராது பெரியோ ரைக்கண்டு சாட்சி கேளடி ஞானப்பெண்ணே!

ரேசக பூரக கும்பகத் தால்வாசி நேரிட்டுச் செய்வதும் ஆசையடி; 140
கேசர மாகிய அத்வித பிரமத்தைக் கிட்டிக் கும்மியடியுங்கடி.

உப்பை விடுவதும் ஆசையடி அன்னம் ... துண்பதும் ஆசையடி; 41
செப்ப ஒண்ணுத மனோன்மணி தேவனைச் சேர்ந்து கும்மி யடியுங்கடி.

வாசலி லேயொரு மேல்வாசல் அந்த வாசலி லேசிறு வாசலுண்டு; 42
நேசமு டன் சிறு வாசலிற் பூட்டியே நெருக்கம் பாரடி ஞானப்பெண்ணே!

தேசங்கள் போவதும் ஆசையடிகுல தெய்வமுண் டென்பதும் ஆசையடி; 43
நேச மெம்பிர மஞான சோதியைச் சேர்ந்து கும்மி யடியுங்கடி.

சமய பேதமும் ஆசைய டிகங்கா ஸ்நான பூசையும் ஆசையடி; 44
மமதை யற்றுஇருக் கின்ற மமதையை வாழ்த்திக் கும்மி யடியுங்கடி.

பால்கற வாப்பசு தள்ளுங்க டிபதி பாசத்தை யும்விட்டுத் திருங்கடி; 45
மேல்வ் ளங்கிய தற்பர சோதியை வேண்டிக் கும்மி யடியுங்கடி.

தத்துவக் குப்பையைத் தள்ளுங்கடிவேத சாத்திரப் பொத்தலை மூடுங்கடி; 46
முத்தி தருஞான வத்துவை வாவென்று மூட்டிக் கும்மி யடியுங்கடி

ஆரு தாரமுந் தொல்லைய டியதற் கப்பாலேயொன்றும் இல்லையடி; 47
சீராய் நின்ற நிலைபார்த் துப்பெண்கள் சேர்ந்து கும்மி யடியுங்கடி.

சித்தர் சொற்படி சித்தான ந் தங்கண்டு தெளிந்துகொள்ளடி 48
வேதாந்தம்
தத்துவ மாகிய உற்பத்தி சூக்குமச் சார்பு கேளடி ஞானப்பெண்ணே!

சார்புதா னென்னடி வேதாந் தஞ்சொல்லுந் தத்துவந் தானிவ் 49
வகையுடனே
கார ணாதி அவத்தை நிலைகளின் கணக்கு ரைக்கிறேன் ஞானப்பெண்ணே!

உரைக்குந் தத்துவம் நாலே ழிற்கண்ட ஓதுஞ் சித்தரு நாலாறும்; 150
மறைக்குட் சொல்லிய சித்துரு நாலாகும் மகிமை பாரடி ஞானப்பெண்ணே!

மகிமை யாகிய தொம்பத மாமதில் வந்த வுபாதி யுணர்த்துகிறேன்! 51
தகைமை யென்னமுன் சொன்ன வசித்திருத் தன் செயல் கேளடி
ஞானப்பெண்ணே!

வாசல் மிகுந்த உடம்போ டுப்ராண வாயுவோ டிந்திரியம் 52
ஆனதொன்று;
காசலை யாமதி சேர்ந்து வளர்ந்ததன் காரணம் நாலடி ஞானப்பெண்ணே!

காரண மென்ப திவையே மூம்வந்து கலந்த தாமடி தொம்பதத்தைத் 53
தாரண தொம்பத மான துரியத்தில் தன்னுட லாச்சுதாம்
ஞானப்பெண்ணே!

தன்னுட லாகிய சாக்கிரத் தைத்தன தாக விரு ந்திடும்ஆத்துமற்குப் 54
பின் சொல்வ தாம்விசு வனென்ற பிமானப் பேரல்லோ சொல்லடி
ஞானப்பெண்ணே!

பேர் பெறும் எந்த்ரமு பாதியுடன் கூடப் பெற்றிடு சூட்சுமச் 55
சொப்பனத்தின்
சார்பி லிருந்த துரியற்கு நாமமுஞ் சைதன் யமடி ஞானப்பெண்ணே!

ஆகும் பிராணநல்ல வாயுபவு டன்கூடி அடங்கி மூலத்து டன்சேர்ந்து 56
சேகர மாவந்த நாத துரியத்தைச் சேர்ந்திடிற் காரண தேகமடி.

சேர்ந்த அவத்தைச் சுழுத்திய டியதைச் சேர்ந்தவ னும் 57
பிராக்ஞ னுகுமடி
கூர்ந்த மூன்றையுங் கண்ட துரியத்தைக் கும்பிட்டு கும்மி யடியுங்கடி!

கும்பிட்டுத் தொம்பதச் சித்தார்த் தங்கண்டு கூறிய ஞாயம் இதுபோல 58
அம்பிட்டுத் தற்பத மான விவேகத்தை அறியச் சொல்லுவேன்
ஞானப்பெண்ணே!

அறிவ தென்னடி தொம்பத மாம்பொருள். ஆன வுபாதியும், 59
ஆன துபோல்
சருவ தற்பர மான பொருளுக்குத் தன்னுடைச் சீவன் துரியமடி.

சர்வஞ் ஞ னுஞ்சரு வக்கார னுஞ்சரு வேந்திரி யாமிசர் வேசுரனுஞ் 160
சர்வ சிருட்டி சர்வதி திசர்வ சங்கார னும்பேராம் ஞானப்பெண்ணே!

பேரான தென்ன இவையே மூமிகப் பேசிடில் வேதம் துரியமடி; 61
தோரா உபாதியைப் பெற்றத னுல்முத்தி தூசணம் உண்டாச்சு
ஞானப்பெண்ணே!

தூசணச் சீவன் இவையே மூங்கண்டு சொல்லும் பரனுக் குடலாச்சு; 62
சாசுவ தமென்ற தானத்தி னுற்சாயா கிரக மென்றுபேர்
ஞானப்பெண்ணே!

சாக்கிரந் தன்னைத்தா னென்றுசொல் லியப்பால் தானபி மானித் 63
தருந்தாக்காற்
சேர்க்க விராட்டெனச் சொல்லுவார் நாமந் தெரிந்து கொள்ளடி
ஞானப்பெண்ணே!

தெரிந்த மூன்றனு பாதியு மாம்அதிற் சேர்ந்த பரன்பர 64
சொப்பனமாம்;
பிரிந்தி டாதபி மான னிரணிய கற்பன்என் பாரடி ஞானப்பெண்ணே!

பாருமி திலொரு பாதியு டன்பரா பரனுக் கல்லவோ பார்சுழுத்தி 65
சேரும் பொழுது வியாகிரு தனெனச் சிந்தையிற் காணடி
ஞானப்பெண்ணே!

காணடி தற்பர சத்தார்த் தமதைக் கண்டு தெரிந்த வகைபோல 66
ஊணடி ஞான சிவப தார்த்தத்தில் உண்மையைக் கேளடி
ஞானப்பெண்ணே!

உண்மையாந் தற்பர நற்றுரி யங்கண்டும் உற்றுப்பா ராதொரு 67
தோடமதால்
தண்மைச் சிவபத சுத்தனுக் குப்பரன் தன்னுடலாச்சுது ஞானப்பெண்ணே!

ஓதும் பரம்விஸ்வ கிராசமடியுப சாந்தமெ னும்வகை மூன்றி 68
லொன்றைச்
சாதனை செய்த சிவத்துக்கல் வேறபர சாக்ஷியுமே ஞானப்பெண்ணே!

ஆகும் பொருள் சிவ சாக்கிரத் தையபி மானித்திருந்த சிவதுரியம் 69
சேகர மாயிடிற் சிற்சொ லிதையென்று செப்பிடும் வாக்கியம்
ஞானப்பெண்ணே!

வாக்கிய மாம்விஸ் வகிராசம டியந்த மார்க்கமென் னசிவ 170
சொப்பனத்தைப்
பாக்கி யனபி மானிடத் திற்பிரசாபத்தனென்று சொல் ஞானப்பெண்ணே!

சொல்வது மென்ன உபசாந் தஞ்சிவ சுழுத்தி தானென்றி ருந்தக்கால்? 71
நல்லது பொற்புறு சாந்தனென் ருலது நாமம தல்லவோ
ஞானப்பெண்ணே!

நாமச் சிவதூரி யத்தில டியபி மான மிழந்து தனித்ததனுல் 72
நேமமி தல்லவோவாதி துரியத்தின் நிலைமை கண்டிலர் ஞானப்பெண்ணே!

கண்டறி யாதது மூற்றிரி யமதைக் கண்டு சுமூன்றுமே லானதடி; 73
பண்டு பிரமவா னந்த சொரூபத்தைப் பணிந்து கும்மி யடியுங்கடி.

பணிந்த ஞான மதுதான் டிபர மானந்த மானது இது தாண்டி; 74
துணிந்து பாருமா னந்தசொ ரூபனைத் தொழுது கும்மி யடியுங்கடி.

தொழுது கொள்ளுஞ் சுகசிவ பர சுத்தப் பொருளு மிது தாண்டி; 75
பழுதி லாத சொரூபக்கு ருவுடைப் பாதம் இதல்லவோ ஞானப்பெண்ணே!

பாதமி தாகிய தொம்பத மாம்அதிற் பாதமுந் தற்பர மானதடி; 76
பேதவு பாதி யவத்தைக ளும்பல பேர்களு மானது ஞானப்பெண்ணே!

பேருக்குச் சார்ந்த துரியம டியதைப் பேசவுந் தற்பிர காசமடி; 77
யாருக்குங் கண்டறி யாத பொருளைக்கண் டகந் தெளிந்து கும்மியடியுங்கடி.

முத்தி பெறுந்தேவ தத்தனைப் போற்சக மூழுதுந் தன்மய மானதடி; 78
நத்தியே விட்டுவி டாதே இலக்கண ஞானம் இதல்லவோ
ஞானப்பெண்ணே!

ஞானமாம் மோட்சம் இதுதான் டிமற்ற ஞாயமெல் லாமன மாயமடி; 79
தானசங் கற்ப விகற்ப சமயமுந் தன்மய மானது ஞானப்பெண்ணே!

தூர தூரமும் இல்லைய டியதைச் சொல்வதுங் கேட்பதும் இல்லையடி. 180
தாரார் பிரமநிலை பார்த் துப்பெண்கள் தாண்டிக் கும்மி யடியுங்கடி.

அண்டமும் பிண்டமும் பாழாச் சேஅதற் கப்பா லும்பெரும் 81
பாழாச்சே;
உண்டில்லை யென்று பராபரப் பிரமத்தை உவந்து கும்மியடியுங்கடி!

சொல்லினுங் கல்லினும் நில்லா தேபிரம சோதியை யாதியைத் 82
தூவெளியை
வல்லதத் தற்பிர காச மவுனத்தை வகைய றிந்துகொள் ஞானப்பெண்ணே!

பிருதிவி தூய்மை மயமாச் சேயதில் பேதம் பலபல உண்டாச்சே; 83
சுருதி முடிவை குருசொல்லு வார் அந்தச் சூட்சந் தெரியுமோ
ஞானப்பெண்ணே!

அறிந்து கொண்ட பெரியோர் பாதங்கள் அர்ச்சனை செய்து கும் 84
மித்தமிழைப்
பிரிந்தி டாமனூற் றெண்பத்தைந் துகண்ணி பேசினேன்
சற்குரு தாள் வாழி!

சற்குரு பாத மிகவா ழிவாலை சாமி தமிழ்நிதந் தான்வாழி! 85
நற்குண ஞானக்கும் மித் தமிழ் கற்றவர் ஞான நெறியே மிக வாழி.





நூல்: பதின்மூன்று

# சேஷ யோகியார்

# ஞான ஏற்றம்

பிள்ளையாரும் வாரி
பிள்ளையாரும் அங்கே
பெருத்தமூலா தாரஞ்
சிறுத்தஇதழ் நாலாம்
உரைத்தகம்ப மாகி
ஓங்கியுச்சி தொட்டுத்
தாங்கியதன் கீழாய்த்
தான் இரண்ட தாகித்
தங்கிவாயு வானல்
அங்குமே கடந்து
சங்கிலி பிளந்து
சமத்தவாயு வானல்
இங்கிது உரைத்தே
இரண்டுடனே வாரி
இன்னம் அதன் மேலே!
வன்னமதைச் சொல்வேன்:
அன்னத்துக்கு ராசன்
அயன்சரஸ் வதியாம்;
நயந்தஇதழ் ஆரும்
நல்ல நிலம் பொன்னும்
நகரமேயெ ழுத்தாம்
உகரங்கந்த மாகும்:
முத்திதந்த நாதா
மூன்றுடனே வாரி
மோசம்பண்ண மாயன்
வாசமணி பூரம்
நேசம் லட்சுமியாம்
வீசம்பத் திதழும்
ஓசைமவ்வெ ழுத்தாம்
தேசமே வெளுப்பாம்
ஆறுசுவை யாலே
நடுவேதேயு வீடாம்
நாலுடனே வாரி
நாலும்எட் டிதழும்
நல்லசெம்பு மேனி
எல்லோருத்தி ரனும்
தொல்லைவிழிப் பார்வை
செல்லுமே சிகாரம்

அல்லல்உண்டே யின்னம்
அஞ்சுடனே வாரி
நெஞ்சில்அவ்வெ ழுத்தாம்
கொஞ்சிய மயேசன்
மிஞ்சுமறு கோணம்
மேனிகறுப் பாமே
தன்னிதழைப் பார்க்கில்
தனியேபதி னாறும்
முந்தவேலை யோடல்
அந்தரங்கஞ் சொல்வேன்
ஆறுடனே வாரி
கூறுவேனே நானும்
குருவிருந்த நேர்மை
அருகிருந்த பூசம்
அமைச்சல்லவோ அத்தான்!
என்னவென்று சொல்வேன்!
ஏழுடனே வாரி
தாழச்சொன்ன பேச்சுச்
சத்தியங்காண் அத்தான்!
ஏழைசொன்ன பேச்சு
எட்டுடனே வாரி
எட்டுச்சாண் உடம்பு!
கட்டையைநம் பாதே;
ஒன் றல்லவோ தெய்வம்;
ஒருபதியா லெட்டாம்
ஊமையெழுத் தாலே
ஓங்காரம்உண் டாச்சு;
ஓங்காரத்தி னாலே
உண்டாச்சுதே லோகம்:
இதுவுங்குரு வாலே
இருபதியா லெட்டாம்
இறைக்கிறரண் டேற்றம்
சுரக்குமேழை நாலாம்
முந்திகுரு பாதம்
முப்பதியா லெட்டாம்
முப்பாழுங் கடந்து
அப்பாலே நடந்தால்
அதிசயம்பார் அத்தான்!

நல்லகுரு பாதம்
நாற்பதியா லெட்டாம்.
நாலுமூலைக் குண்டம்
நடுவெழுந்த தூணும்
படுமுதல் இரண்டாம்
படுமுதல் பிடுங்கி
பருத்தமரம் ஏறிக்
குருத்தில்கள்ளி றக்கிக்
கூசாமற் குடித்தாற்
பேசாதே பிறகு
அஞ்சாதேநீ அத்தான்!
ஐம்பதியா லெட்டாம்
அஞ்சலவோ பூதம்?
பஞ்சல்லோவெ ழுத்து?
அஞ்சொடுங்கும் போது
நெஞ்சடங்கும் அத்தான்!
ஆறுமுக மல்லோ
அறுபதியா லெட்டாம்,
ஆறல்லவோ தாரம்?
வேறல்லோ சொரூபம்?
வேறறிந்த பேர்க்குத்
தூரமில்லை அத்தான்!
என்னவென்று சொல்வென்
எழுபதியா லெட்டாம்
ஏழல்லவோ நாடி?
வாழின்பத்து நாடி.
பாழல்லவோ நானும்?
பாழ்கடந்த பேர்க்குப்
பத்துக்கோடி தெண்டம்.
என்னவென்று சொல்வேன்?
எண்பதியா லெட்டாம்.
எண்ணிக்கை யறிந்து
கண்ணப்பனைக் கண்டு
திண்ணப்பா பழத்தைக்
குண்ணப்பா வறுமை.
விண்ணப்பம் உரைத்துச்
சண்ணப்பா குருவே
சொன்னதப சாரம்
தொண்ணூறுடன் எட்டாம்.
மண்ணில்வெகு தூரம்
குண்ணறிந்த பேரை
எண்ணறிந்தே வாடி
ஏகமன மாகிப்
பாரமும் அறிந்து
நாகத்தை யெழுப்பிப்
பீசத்தைத் துறந்து
யோகத்தை நடத்திப்
போகத்தைக் கடந்தால்
தாகத்தை நிறுத்தும்;
சோதியறிந் தோர்க்குத்
தூரமில்லை அத்தான்!
சாதிகுல மில்லை
சற்குருவ றிந்தால்;
நித்தியம் இதுவே;
பத்தியாய்ப் பணிந்தால்
முத்திதரும் அத்தான்!
வாமநெறி சிவன்
ராமயோகி தந்த
ராசயோகி சேடன்
தாசன்அரு ளாலே
பாசமறச் சொன்னேன்
பிரியாமலே அத்தான்
பிள்ளையாரும் வாரி.





நூல்: பதினான்கு

# சட்டை முனி ஞானம்

எண்சீர் விருத்தம்

1. காணப்பா பூசைசெய்யும் முறையைக் கேளாய்:
கைம்முறையாய்ச் சுவடிவைத்துப் பூசை செய்வார்
பூணப்பா சிலபேர்தான் தீபம் வைத்துப்
புகழாகப் பூசைசெய்வார் பெண்ணை வைத்தும்;
நாளப்பா சக்கரத்தைப் பூசை செய்வார்
நம்முடைய பூசையென்ன மேருப் போலே
ஓதப்பா நாற்பத்துமுக் கோணம் வைத்தே
உத்தமனே! பூசைசெய்வார் சித்தர் தானே.

2. தானென்ற மேருவைத்தான் பூசை செய்வார்
சாபமிட்டால் அண்டரண்டம் தீயா வேகும்;
தேனென்ற மேருவுக்குத் தீட்சை வேண்டும்;
சிறுபிள்ளை யாமொருவன் தீண்டப் போகா;
வானென்ற மேருவைத்தான் பூசை செய்தோர்
வாய்திறந்தே உபதேசம் சொன்ன ராகிற்
கோனென்ற வாதசித்தி கவன சித்தி
கொள்ளையிட்டான் அவன்சீடன் கூறி னானே.

3. கூறியதோர் வாலையின்மூன் றெழுத்தைக் கேளாய்:
குறியறிந்து பூசைசெய்து பின்பு கேளாய்;
மாறியதோர் திரிபுரையெட் டெழுத்தைக் கேளாய்;
மைந்தனே! இவளை நீ பூசை பண்ணத்
தேறியதோர் புவனைதனின் எழுத்தைக் கேளாய்;
திறமாகப் புவனையை நீ பூசை பண்ணு;
ஆறியதோர் யாமளையா றெழுத்தைக் கேளாய்;
அவளுடைய பதம்போற்றிப் பூசை பண்ணே.

4. பண்ணியபின் யாமளைஐந் தெழுத்தைக் கேளாய்;
பண்பாகத் திட்சையைந்தும் முடிந்த பின்பு
வண்ணியதோர் வாசியென்ற யோகத் துக்கு
மைந்தனே வைத்துப்ராண யாமந் தீரும்;
கண்ணியதோர் இத்தனையும் அறிந்தி ருந்தாம்
காயசித்தி விக்கினங்கள் இல்லை யில்லை;
உண்ணியதோர் உலகமென்ன சித்த ரென்ன
உத்தமனே விட்டகுறை எடுக்கும் காணே!



# திருவள்ளுவர் ஞானம்

காப்பு:
எண்சீர் விருத்தம்

அண்டபிண்டம் நிறைந்துநின்ற அயன்மால் போற்றி!
அகண்டபரி பூரணத்தின் அருளே போற்றி!
மண்டலஞ்சூழ் இரவிமதி சுடரே போற்றி
மதுரதமி ழோதும்அகத் தியனே போற்றி!
எண்டிசையும் புகழுமென்றன் குருவே போற்றி!
இடைகலையின் சுழுமுனையின் கமலம் போற்றி!
குண்டலிக்குள் அமர்ந்துநின்ற குகனே போற்றி!
குருமுனியின் தாளிணையெப் போதும் போற்றி! 1

கட்டளைக் கலித்துறை

அன்னை யெனுங்கர்ப்ப மதனில்வந் தும்அதி லேயிருந்தும்
நன்னய மாய்ம்பத்துத் திங்களு நானகத் தேயிருந்தேன்;
என்ன அதிசயங் காணிவ் வுலகி லேயமைந்த
உன்னத மெல்லா மமைத்தேன் உண்மையைக் காண்கிலரே!

அம்புவி தன்னி லேயுதித் தாய்ந்தறி பாடைதன்னை
வம்புல கத்தார் வசியமாய்க் கைப்பிடித் தேபிரிந்து
கும்பி தனிலே யுழன்றுமக் குண்டலி பொற்கமலம்
நம்பி யிருந்தேன் சிலநாள் ரகசியங் காண்கிலனே! 2

தரவு கொச்சகம்

அண்டரண்ட வான்புவியும் ஆகமத்தி னுட்பொருளும்
கண்டிதமா யான்விளங்குங் காயமதி லேயறியும்
வண்டரெனை நீசனென்ற வாறுதனை யேயொழித்தேன்;
விண்டரக சியந்தன்னை விளக்கமது காண்கிலரே. 3

வையமதி லேயுதிக்கு மாண்பர்களே யுங்களுயிர்
மெய்யென் திருந்தசைவு வெளிப்படுவ தென்னவிதம்?
அய்யமில்லா வாழ்ந்துலகி ல்ஆண்மையாய்ப் பூண்டமதிப்
பொய்யெனுமிவ் வாழ்க்கையது போகுஞ்சுடு காடெனவே! 4

## கட்டளைக் கலித்துறை

வீடான மூலச் சுழிநாத வீட்டில் விளங்கும் விந்து
நீடாழி லோகந் தழைத்துப் பெருகியு நின்றிலகுந்
தேடாத ழித்த பொருளான பொக்கிடந் தேடியென்ன?
காடான நாடு சுடுகாடு சேர்வதுங் கண்டிலரே! 5

எழுவகைத் தோற்றமும் நால்வகை யோனியி லெய்திடினும்
பொழியச் சுரோணிதம் நாதவிந்துப் பொருள் போதகத்தால்
கழியக் கழியக் கடலுயிர் தேய்பிறை கண்டுமிருந்
தழியப் பெருந்தரை யெந்நாளிருந்தும் அனித்தியமே! 6

எந்நா ளிருந்தென்ன முன்னு ளனுப்படி யிந்தவுடல்
தன்னு லழிவதுந் தானறி யாதெனத் தந்தைவிதி
உன்னு லழிவ துடலுயிர் காய மொழிவதுங்கண்
டந்நா ளனுப்படி கண்டு மிருந்தறி யாதவரே! 7

யோனிக்கு ளாசை யொழியா தனித்தியம் உங்களுயிர்;
தேனிக்கு ள்இன்பஞ் சுகாதித மோவருங் சிற்றின்பத்தில்
ஊனற்றுக் காய முடலற்றுப் போம்பொழு தொன்றறியா
ஈனர்க்குச் சொர்க்கஞ் சுடுகா டொழிய இனியில்லையே! 8

## நேரிசை வெண்பா

இந்தவுடல் காயம் இறந்துவிடு மிவ்வுலகில்
வந்தவழி தானறியா வாழ்க்கையோ—இந்தவுடல்
அற்பக் குழியி லரவ மிருப்பதெனும்
கற்பகத்தை யாண்டிடுமோ காண். 9

ஞானமறிந் தோர்க்கு நமனில்லை நாள்தோறும்
பானமதை யுண்டு பசியினல்—ஞானமது
கண்டால் உடலுயிருங் காயம் வலுவாகும்
உண்டால் அமிர்த ரசம் ஊண். 10

சுழியறியார்க் கென்ன சுகமறியார்க் கென்ன
வழியறியார்க் கென்னஎய்து மாற—சுழியறியா
மூலமறிந் தவ்வழியில் முத்தியடை யார்க்குநமன்
காலனவர்க் கேமரணங் காண். 1

வேத மறைஞான மெய்யுணர்வு தானுகில்
நாதனரு ளால்பதவி நாடுமே வேதமறை
நாலு பொருளுள் நற்பொருளின் ஆறறியப்
பாலுமது நெய்யெனவும் பார். 2

முதலிருந்த ஊழ்வினையை முப்பாழைச் சுட்டுப்
பதரு மதிபாடு பட்டேன்—முதலிருந்த
நல்வினையுந் தீவினையு நாடாம லும்பிறந்து
வல்வினையிற் போக்கிவிட்டேன் வாழ்வு. 3

காயசித்தி யாலெனது கன்மவினை போக்கியபின்
மாயசித்தி மூலசுழி வாய்க்குமே;—காயசித்தி
மூலப் புளியால் முதல்தீட்சை யாச்சுதுஇனிக்
காலமென்னி ரண்டாண்டில் காண். 4

கல்லுப்பின் வாருங் கருத்தறியா துண்டுமனு
வல்வினைக்குள் ளாகி மரணமார்—கல்லுப்பு
வெள்ளைக்கல் லுப்பு வெகுவிதமாய் வந்தாலும்
உள்ளமதி லுண்டென்றே உன். 5

என்றும்இந் துப்பாகும் எண்சா ணுடலிருக்கக்
கண்டுமறி யாததென்ன காரணமோ?—என்றுமதி
வாரி யமூரியதை வன்னிவிட்டுக் காய்ச்சியபின்
விரியமா யானுணரு மெய். 6

உப்பின் கசடுதான் ஊறலது மாறினதால்
மூப்புசுன்ன மாவதற்கு முன்னமே—உப்பதனுல்
கற்பாந்தங் கோடி காய மிதுவலுத்துச்
செற்பாயும் வாசியில் தேகம். 7

அஞ்சுபஞ்ச பூதம் அறிந்தால் அனித்தியம்போம்
அஞ்சு வசப்படுவ தாண்டதனில்—அஞ்சினையும்
கண்டறி வோர்ஞானக் காட்சி யதினினைவு
விண்டறிய லாமே விதி. 8

எண்சாணுந் தேக மெடுத்தாலென் னுண்டையே
பெண்சாரல் நீக்கியே பேரின்பம்—கண்காணத்
தேக மொழியாமல் சித்தி பெறுஞானம்
யோகசித்தி பூசைவிதி யுன். 9





நூல் : பதினாறு

# கணபதி தாசர்

## நெஞ்சறி விளக்கம்

விநாயகர் காப்பு:



வஞ்சக மனத்தி னுசை மாற்றிய பெரியோர் தாளில்
கஞ்சமா மலரிட் டோதுங் கணபதி தாசன் அன்பால்
நெஞ்சறி விளக்க ஞான நீதிநூல் நூறும் பாடக்
குஞ்சர னுகத்து மூலக் குருபரன் காப்பதாமே.

நூல்

பூமியிற் சவுந்த ரப்பெண் புணர்ந்திடு நாகை நாதர்
நாமமெந் நாளும் நாவி னவின்றுசெந் தமிழாற் பாடிக்
காமமு மாசா பாசக் கன்மமு மகற்றி மூல
ஓமெனு மெழுத்தைந் தாலே யுனையறிந் துணர்வாய் நெஞ்சே! 1

தந்தைதாய் நிசமு மல்ல; சனங்களு நிசமு மல்ல;
மைந்தரும் நிசமு மல்ல; மனைவியும் நிசமு மல்ல;
இந்தமெய் நிசமு மல்ல; இல்லறம் நிசமு மல்ல;
சுந்தர நாகை நாதர் துணையடி நிசம்பார் நெஞ்சே! 2

காண்பது மழிந்து போகும்; காயமு மழிந்து போகும்;
ஊண்பொருள் அழிந்து போகும்; உலகமும் அழிந்து போகும்;
பூண்பணி நாகை நாதர் பொற்பதம் அழியா தென்று
வீண்பொழு தினைப்போக் காமல் வெளிதனில் ஒளிபார் நெஞ்சே! 3

மனமெனும் பேயி னுலே மாய்கையாம் இருடான் மூடச்
சனமெனும் ஆசா பாசந் தலைமிசை ஏற்றிக் கொண்டு
கனமெனுஞ் சுமையைத் தூக்கிக் கவலையுற் றிட்டாய் நீயுற்
பனமெனும் நாகை நாதர் பதம்பணிந் தருள்சேர் நெஞ்சே! 4

இருவினைப் பகுதி யாலே எடுத்திந்தத் தேகந் தன்னை
மருவிய நானுன் என்று மாயையில் அழிந்தாய் நீதான்;
குருவினுற் குறியைப் பார்த்துக் குண்டலி வழியே சென்றங்கு
உருவினுல்நாகை நாதர் உண்மையை உணர்வாய் நெஞ்சே! 5

வானதில் இரவியுன்றன் வயதெலாங் கொடுபோ கின்றுன்;
தானதை யறிந்தி டாமல் தரணியி லிருப்போ மேன்றே
ஊனமாம் உடலை நம்பி உண்மைகெட் டலைந்தாய் நீமெய்ஞ்
ஞானமே பொருளாய் நாகை நாதரைத் தொழுவாய் நெஞ்சே! 6

எட்டுடன் இரண்டு மாகி இருந்ததோர் எழுத்தைக் காணுர்;
விட்டதோர் குறியுங் காணுர்; வீதியின்றன் விவரங்காணுர்!

தொட்டதோர் குறியுங் காணார்; சோதிமெய்ப் பொருளுங் காணார்;
கிட்டுமோ நாகை நாதர் கிருபைதா னுரைப்பாய் நெஞ்சே! 7

வஞ்சக நடைம ரத்தில் வளர்வினைக் கொம்பி லேறிச்
சஞ்சல மனக்கு ரங்கு தாவியே அலைய நீதான்
பஞ்சபா தகங்கள் செய்து பாம்பின் வாய்த் தேரை யானாய்;
நஞ்சமு தருந்து நாகை நாதரை வணங்கு நெஞ்சே! 8

உடலினை நிசமென் றெண்ணி உலகெலாம் ஓடி யாடிக்
கடல்மரக் கலப்பாய்க் கம்பக் காகம் போற் கலக்க முற்றாய்;
திடமருள் குருவின் பாதஞ் சிக்கெனப் பிடித்து நின்றால்
நடமிடு நாகை நாதர் நற்பதம் பணிவாய் நெஞ்சே! 9

வீட்டிருள் போக வென்றே விளக்கினை ஏற்றி வைத்தால்,
வீட்டிருள் எங்கே போச்சு? விளக்கொளி எங்கே போச்சு?
கூட்டினில் நடஞ்செய் ஈசன் குறிப்பறி யாமல் நீதான்
நாட்டினில் அலைந்தாய் நாகை நாதரை வணங்கு நெஞ்சே! 10

காட்டினில் மேவு கின்ற கனபுழு வெல்லாம் பார்த்து
வேட்டுவ னெடுத்து வந்து விரும்பியக் கிருமி தன்னைக்
கூட்டிலே அடைத்தும் அந்தக் குளவிதன் உருவாய்ச் செய்யும்
நாட்டினில் நீதா னாகை நாதரை வணங்கு நெஞ்சே! 1

குளத்திலே கிடக்கும் ஆமை குளக்கரை முட்டை யிட்டுக்
குளத்துநீர்க் குள்ளிருந்து குறிப்புடன் நினைக்கும் போது
குளத்திலே புதைத்த முட்டை கருவுரு வானாற் போலுன்
உளத்திலே நாகை நாதர் உருவறிந் துணர்வாய் நெஞ்சே! 2

மருவிய சிலந்திப் பூச்சி வயிற்றினில் நூலுண் டாக்கி
உருவுடன் கூடு கட்டி உகந்ததிலிருக்கு மாபோல்
குருபர னுனது கூட்டில் குடியிருப் பதனைப் பார்த்து
பெருவெளி நாகை நாதர் பெருமைகண் டருள்சேர் நெஞ்சே! 3

வாரணம் முட்டை யிட்டு வயிற்றில்வைத் தணைத்துக் கொண்டு
பூரணக் கூடுண் டாக்கிப் பொரித்திடுங் குஞ்சு போலக்
காரணக் குருவை மூலக் கனல்விளக்கதனாற் கண்டு
நாரணன் அறியா நாகை நாதரைப் பணிவாய் நெஞ்சே! 4

புல்லினுள் இருக்கும்பூச்சி பொருந்த வெண் ணுரையுண் டாக்கி
மெல்லிய தண்ணீர் வீட்டில் வெயிற்படா திருக்கு மாபோல்
சொல்லிலே நாகை நாதர் தோய்ந்திடச் சூட்சங் கண்டாற்
கல்லிலே தெய்வ மில்லைக் கருத்திலே தெய்வம் நெஞ்சே! 5

தண்ணீரி லிருக்கும் மீன்கள் தண்ணீரிற் கருவைப் பித்திக்
கண்ணினாற் பார்க்கும் போது கயலுரு வானாற் போல
நண்ணிய குருவைக் கண்டு நாதனல் லுருவைச் சேர்த்து
விண்ணின்மேல் நாகை நாதர் மெல்லடி வெளிபார் நெஞ்சே! 6

இலகிய ஊசிக் காந்தம் இரும்பினை இழுப்பதேபோல்
உலவிய குருப ரன்றாள் உன்னையாட் கொண்ட தன்மை
நலமுடன் அறிந்த நீதான் நாயனை யறிந்தி டாமல்
நிலமிசை யலைந்தாய் நாத லிங்கரை நினைப்பாய் நெஞ்சே! 7

சூரிய காந்தம் பஞ்சைச் சுட்டிடுஞ் சுடரே போலக்
கூரிய அடிமூ லத்தின் குண்டலிக் கனலை மூட்டி
வீரிய விருந்து ணுத வெளிவீடு தன்னிற் சென்றே
ஆரிய நாகை நாதர் அடியிணை தொழுவாய் நெஞ்சே! 8

ஐவகைப் பூதந் தொன்னூற் ருறுதத் துவங்க ளாட்டும்
தெய்வமுன் னிடத்தி ருக்கத் தேசத்தில் அலைந்தாய் நீதான்;
பொய்வசத் தே க பந்தம் போக்கிமெய்ப் பொருளை நோக்கி
ஐவரோ ரிடத்திற் கூடும் ஆனந்தம் அறிவாய் நெஞ்சே! 9

ஊனமாம் உடலம் பொய்யென் றுணர்ந்துமெய் யறிவைக் கண்டு
தானவ ஞன போதே சற்குரு பதத்தைச் சேர்ந்தாய்;
வானதி லிரவி திங்கள் வந்துபோ வதனைக் கண்டால்
ஞானவான் நாகை நாதர் நடனமுங் காண்பாய் நெஞ்சே! 20

கிட்டுமோ ஞான யோகம்? கிடைக்குமோ குருவின் பாதம்?
கட்டுமோ மூல வாசி? காணுமோ கயிலை வீடு?
எட்டுமோ நாக லிங்கம்? ஏற்றமோ தீப சோதி?
தட்டுமோ பளிங்கு மேடை தனையறியார்க்கு நெஞ்சே! 21

ஒருபதந் தன்னைத் தூக்கி ஒருபதந் தன்னை மாற்றி
இருபதம் ஆடு கின்ற இயல்பைநீ அறிந்தா யானல்
குருபத மென்று கூறுங் குறிப்புனக் குள்ளே யாச்சு
வருபத நாகை நாதர் மலரடி காண்பாய் நெஞ்சே! 22

நாடென்றும் நகர மென்றும் நலந்திகழ் வாழ்வ தென்றும்
வீடென்றும் மனையா ளென்றும் மிக்கதோர் மைந்தர் என்றும்
மாடென்றுஞ் சம்பத் தென்றும் வாஞ்சை கொண்டலைந்தாய் இந்தக்
கூடொன்றும் அழிந்தாற் கூடத் தொடருமோ கூறு நெஞ்சே! 23

ஏட்டிலே எழுதும் நூல்கள் எத்தனை படித்தும் நீதான்
காட்டிலே எறித்த திங்கள் கானலிற் சலம்போ லானுய்;
நாட்டிலே தெய்வமென்று நடந்தலை யாம லுன்றன்
கூட்டினில் நாகை நா தர் குறிப்பறிந் துணர்வாய் நெஞ்சே! 24

நற்பிடி சோறு வைத்தால் நாயனென் றறிந்து கொண்டு
சொற்படி பின்னே ஓடுஞ் சுணங்கன் போற்குணம் உண்டாகி
விற்பிடித் தடிக்கப் பெற்ற விமலனுர் கமல பாதம்
பிற்பிடி பிடித்து நாகை நாதரைக் காண்பாய் நெஞ்சே! 25

விரகநா யகனைத் தேடி விரும்பிய மங்கை போலக்
குரவனு ருபதே சத்தைக் குறிப்புடன் நிதமுந் தேடி
இரவுடன் பகலு மான இருபத நடனங் கண்டால்
சிரமதில் நாகை நாதர் சிலம்பொலி கேட்கும் நெஞ்சே! 26

வாரணன் அயன்மால் ருத்ரன் மகேசுரன் சதாசி வன்றன்
காரண மாறு வீட்டிற் கலந்தவ ரிருக்கும் அப்பால்
பூரண நிராதா ரத்தின் புதுமையுங் கண்டு போற்றி
ஆரண நாகை நாதர் அடியிணை தொழுவாய் நெஞ்சே! 27

மோரிலே நீரை விட்டால் முறிந்திடுங் கொள்கை போலக்
காரிய குருவை விட்டுக் காரண குருவைக் கண்டு
சீரிய சாலு நீர்போற் சேர்ந்திரு வருமொன்ருகி
ஆரிய நாகை நாதர் அடிபணிந் தேத்து நெஞ்சே! 28

நித்திரை வந்தபோது நினைவுதானிருந்த தெங்கே?
புத்திரர் தாமுமெங்கே? புணர்ந்திடும் மனைவி எங்கே?
பத்திர பூசை எங்கே? பல தொழில் செய்வதெங்கே?
சிற்பர நாகை நாதர் செயலினை அறிவாய் நெஞ்சே! 29

வேடத்தைத் தரித்தா லென்ன? வெண்பொடி யணிந்தா லென்ன?
நாடொத்து வாழ்ந்தாலென்ன? நதிதலங் கண்டா லென்ன?
தேடொத்த நாகை நாதர் சீரடி சிந்தை தேர்ந்தே
ஓடைத்தா மரையின் பூப்போல் உயுர்வர்நற் பெரியோர் நெஞ்சே! 30

தள்ளிடு சுணங்கன் போலச் சாத்திரம் படித்தா லென்ன?
வெள்ளிய துகிலைத் தாவி வேட்டியாய்த் தரித்தா லென்ன?
உள்ளிருந் தாட்டு விக்கும் ஒருவனை உருகித் தேடித்
தெள்ளியல் நாகை நாதர் செயல் காணு மாந்தர் நெஞ்சே! 31

பளிங்குற்ற குளத்து நீரைப் பாசிதான் மறைத்தாற் போலக்
களங்கற்ற புத்தி தன்னைக் காமந்தான் மூடிக் கொண்டு
விளங்கத்தான் செய்வதில்லை; மெய்யறி விளக்கை யேற்றி
முழங்கத்தான் நாகை நாதர் முழுமொழி பகர்வாய் நெஞ்சே! 32

மண்ணதை எடுத்து நீரால் வகையுடன் பிசைந்து பாண்டம்
பண்ணியே கனலாற் சுட்டுப் பாதையென் பதுதான் விட்டே
அண்ணலார் வாய்வா காச மடைந் தஜம் பூதக் கூட்டை
விண்ணமால் நாகை நாதர் விளையாட்டென்றறிவாய் நெஞ்சே! 33

கண்ணுடி தன்னிற் ருேற்றுங் காரண உருவம் போல
உண்ணுடி மூலா தாரத் துதித்தசற் குருவைக் கண்டு
விண்ணுடி வெளியைப் பார்த்து விளக்கொளி மகிமை சேர்ந்தால்
மண்ணுடு நாகை நாதர் வந்துனை ஆள்வார் நெஞ்சே! 34

உருவமும் நிழலும் போல உகந்து பின்றெடரும் நாயன்
பருவங்கண் டறிந்தி டாமற் பருந்தின் காற் பட்சி யானுய்;
புருவனை நடுவ ணைக்குட் பொருந்திய நடனங் கண்டால்
குருபர நாகை நாதர் கூப்பிட வருவார் நெஞ்சே! 35

கணக்கிலா எழுவ கைக்குட் கலந்துரு எடுத்த இந்நாள்
பிணக்கிலா நரசென் மந்தான் பிறப்பதே அரிதென் றெண்ணிக்
குணக்கிலாக் குணமுண்டாகிக் கோதிலா ஞானம் போற்றி
இணக்கிலா நாகை நாதர் இணையடி சேர்வாய் நெஞ்சே! 36

அரியதோர் நரசென் மந்தான் அவனியிற் பிறந்து பின்னுள்
பெரியபே ரின்ப ஞானம் பெறுவதே யரிதென் றெண்ணி
உரியவே தாந்தத் தன்மை உரைக்குமா சானைப் போற்றித்
தெரிவொணு நாகை நாதர் சிரப்பதந் தேடு நெஞ்சே! 37

பசும்பொனின் நாம மொன்றிற் பணிதிவே ருனற் போலே
விசும்பெலாங் கலந்த சோதி வெவ்வேறு தெய்வ மாகி
உசும்புசி வாத்து மாக்கள் உடல்பல வான தன்மை
கசிந்துகண் டுருகி நாகை லிங்கரைக் காண்பாய் நெஞ்சே! 38

விண்டவர் கண்டதில்லை; விட்டதோர் குறைமெய்ஞ் ஞானம்
கண்டவர் விண்டதில்லை; ககனவம் பலத்தின் காட்சி
அண்டர்கோ டஞ்சை யீசன் அடிபிணை வாசி யுச்சி
மண்டல நாகை நாதர் வாழ்பதி வழிபார் நெஞ்சே! 39

காதுடன் நாக்கு மூக்குக் கண்ணுயிர் சிரங்க ருத்து
மாதுட னீச னுடு மலர்ப்பதம் அறிந்தி டாமல்
வாதுசொற் றர்க்க நூல்கள் வகைபல படித்தா லென்ன?
சாதுவாய் நாகை நாதர் தாள்கண்டு தனைப்பார் நெஞ்சே! 40

தீபத்தை மலரென் றெண்ணிச் சென்றிடு விட்டில் போலக்
கோபத்தின் கனலில் வீழ்ந்து கொடியதோர் பிறவி பெற்ருய்;
ஆபத்து வந்தா லுன்னே டியாவர் தாம் வருவார்? அந்தக்
கோபத்தை மறந்து நாகை லிங்கரைத் தொழுவாய் நெஞ்சே! 41

மின்மினிப் பூச்சி தன்னுள் மெய்யொளி கண்டாற் போல
உன்மன மொடுங்கி யேயுன் உள்ளொளி கண்டாற் பின்னைச்
சென்மமு மில்லை; அந்தச் சிவத்துளே சேர்வாய்; நாளும்
பொன்மகள் புகழும் நாகை நாதரைப் போற்று நெஞ்சே! 42

செம்பினிற் களிம்பு போலச் சீவனுஞ் சடமுங் கூடி
நம்பின உடலைக் கண்டு நல்லுயிர் வடிவங் காணுய்!
வெம்பிய காம மாயை விட்டுமெய்ப் பொருளைத் தேடிக்
கும்பிய நாகை நாதர் கூத்தாடல் காண்பாய் நெஞ்சே! 43

இலவுகாத் திருந்த பட்சி ஏங்கியே பறக்கு மாபோல்
உலகமே பொருளாய் நம்பி ஒருபலன் அற்ருய் நீ தான்:
தலைமையாங் குருவைப் போற்றித் தாளிணை வாசி கண்டால்
நிலைமையாம் நாகை நாதர் நின்னிடை நிற்பார் நெஞ்சே! 44

ஆத்தும லிங்கங் கண்டுள் அன் பெனும் மலரை நன்ருய்ச்
சார்த்தியே பிரண வத்தாற் றனிப்பெரு வட்டஞ் சூட்டிப்
போற்றியே தீப மூலப் புரிசுடர் விளக்கும் பார்த்துப்
போற்றியே நாகை நாதர் பொன்னடி பூசி நெஞ்சே! 45

சுக்கில விந்து தானுஞ் சுரோணிதக் கருவிற் கூடிப்
பக்குவக் குழவி யாகிப் பையுளே அடைந்த பாவை
அக்குவை யதனை விட்டிங் கவனியிற் பிறந்த சூட்சம்
அக்கினி நாகை நாதர் அமைத்ததென் றறிவாய் நெஞ்சே! 46

நீக்கமில் லாமலெங்கும் நிறைந்ததோர் வெளியை யுன்னுள்
தாக்கியே அறிவி னுலே தனைமறந் திருந்து பார்வை
நோக்கியே நிட்டை கூடி நொடியரை நிமிடம் வாங்கித்
தூக்கியே நாத நாகை நாதரைத் தொழுவாய் நெஞ்சே! 47

கடலென விளங்கும் வேத காரணக் குருவைக் கண்டுன்
உடல்பொருள் ஆவி மூன்றும் உகந்தவர்க் குதவி நீதான்
திடமுடன் பூர்த்தி யாகிச் செந்துசிற் பரத்திற் சேர்ந்து
நடமிடும் வாசி நாகை நாதரை நாடு நெஞ்சே! 48

நாசியி னுனியின் மீது நடனமே செய்யுந் தேசி
வாசிவா வென்றே யுன்னுள் வாங்கியே மௌன முற்றுக்
காசிமா நதியுந் தில்லைக் கனகவும் பலமுங் கண்டு
பூசித்து நாகை நாதர் பொன்னடி வணங்கு நெஞ்சே! 49

தாவுநல் லுதய காலந் தபனன்தே ரெழும்பக் கண்டு
கூவுமாக் குக்கு டங்கள் கூப்பிடு காட்டிற் சம்பு
மேவியே நீயும் அந்த மெய்யறி வறிந்தா யானால்
மூவர்கோ னாகை நாதர் முன்வந்து நிற்பர் நெஞ்சே! 50

வஞ்சியர் மீதில் ஆசை வைத்திந்த வைய மீதில்
சங்கையில் லாத துன்பச் சாகரந் தனிலே வீழ்ந்தாய்;
நங்கைமேல் வைத்த பாசம் நாயன்மேல் வைத்து நீயும்
செங்கையால் நாகை நாதர் சீர்பதந் தொழுவாய் நெஞ்சே! 51



அன்றிலும் பேடும் போல அடிமையுங் குருவுங் கூடிக்
கொண்டிருந் தடிமூ லத்திற் குத்தெழு வாசி யாடக்
கண்டிமை யாத நாட்டக் கருணையால் வெளியி லேறிப்
பண்டித நாகை நாத லிங்கரைப் பணிவாய் நெஞ்சே! 52

குலங்கெட்டுப் பாசங் கெட்டுக் கோத்திர பேதங் கெட்டு
மலங்கெட்டுக் கோபங் கெட்டு மங்கையர் ஆசை கெட்டுத்
தலங்கெட்டுத் தானும் கெட்டுத் தனக்குளே வெறும்பா ழாகிப்
பலங்கெட்டு நாகை நாதர் பதங்கொள்வார் பெரியோர் நெஞ்சே! 53

ஓமெனும் பிரண வத்துள் உதித்தவைந் தெழுத்து மாகி
ஆமெனும் அகார பீடத் தமர்ந்திடு வாசி கண்டே
ஊமெனு மௌன முற்றே யூறிடு மதிப்பா லுண்டு
தாமெனும் நாகை நாதர் தாண்டவம் பார்ப்பாய் நெஞ்சே! 54

அலைதனிற் றுரும்பு போலும் ஆலைவாய்க் கரும்பு போலும்
வலைதனில் மானைப் போலும் மயங்கினைந் தலைந்தாய் நீதான்;
உலைதனில் மெழுகைப் போலும் உருகி மெய்ப் பொருளை யுன்னி
நிலைதனி னின்று நாகை லிங்கரைக் காண்பாய் நெஞ்சே! 55

பொறிவழி யலைந்து மீளும் புலன்களை அடக்கி ஞான
அறிவெனும் விழியினாலே அம்பர வெளியைப் பார்த்தே
உறிதனி லிருக்குங் கள்ளை உண்டுதற் போதம் விட்டு
நெறிதரு நாகை நாதர் நிலைமைகண் டறிவாய் நெஞ்சே! 56

ஆயாத நூல்க ளெல்லாம் ஆய்ந்துநீ பார்த்துங் காமத்
தீயான குழியில் வீழ்ந்து செனனமுற் றலைந்தா யுன்னின்
காயாத பாலை யுண்டு கனகவம் பலத்தைக் கண்டு
மாயாமா நாகை நாதர் மலரடி வணங்கு நெஞ்சே! 57

ஆதார மாறுந் தாண்டி ஐம்பூத வடிவுந் தாண்டி
மீதான வெளியுந் தாண்டி விளங்கிய பரன்றன் கூத்தை
நீதானும் அறிந்து கொண்டு நின்மல வடிவ மாகி
வேதாந்த நாகை நாதர் மெல்லடி வெளிபார் நெஞ்சே! 58

பார்த்திடுந் திசைக ளெங்கும் பராபர வெளிதான் கூடிக்
கோத்திடும் வடிவை ஞானக் குருவினு லறிந்து கொண்டு
பேர்த்திடு மிமையா நாட்டத் திருந்துபே ரின்ப வெள்ளம்
வார்த்திட மூழ்கி நாகை லிங்கரை வணங்கு நெஞ்சே! 59

சச்சிதா னந்த மான சற்குரு பதத்தைப் போற்றிக்
கச்சிமா நகர மூலக் கனல்விளக் கதனை யேற்றி
உச்சிமேல் வைத்துப் பார்வை யுணர்வினுல் வெளியி லுன்னித்
தச்சிலா வீட்டில் நாகை லிங்கரைத் தழுவு நெஞ்சே! 60

மாரின்ப மூலையா ளோடு மன்றிலே நடஞ்செய் வோனைப்
பேரின்ப வீட்டைக் கண்டு பிரணவ விளக்கை யேற்றிச்
சேரின்ப வெளியில் வாசித் திருவிளையாடல் பார்த்தால்
ஓரின்ப நாகை நாதர்க் குகந்துவந் துரைப்பார் நெஞ்சே! 61

நாயனை யறிந்தி டாமல் நானென்னும் ஆண்மை யாலே
ஆயனில் லாத காலி யாகி நீ யலைய லுற்ருய்:
காயமே கோயி லாகக் கலந்திருந் தவனைக் கண்டு
மாயொணு வாழ்க்கை நாகை நாதரை வணங்கு நெஞ்சே! 62

உருப்படுங் கல்லுஞ் செம்பும் உண்மையாய்த் தெய்வ மென்றே
மருப்புனை மலரைச் சூட்டி மணியாட்டித் தூபங் காட்டி
விருப்பமுற் றலைந்தாய் அந்த வினைமயல் விட்டு நின்னுள்
இருப்பவர் நாகை நாதர் இணையடி பூசி நெஞ்சே! 63

உனைவிட வேறே தெய்வம் உண்டென உலகிற் றேடும்
நினைவதே தெய்வ மாகி நீகண்டு நின்ரு யானல்
செனனமாம் பிறவி போகும்; சிவத்துளே சேர்க்கு மெங்கோன்;
மனமகிழ் வாசி நாகை நாதர் தாள் வணங்கு நெஞ்சே! 64

ஆசையாம் பாச மாயை அறிவதை மயக்கி யுன்னுள்
ஈசனைத் தேடொட் டாம லிருக்குமவ் விருளைப் போக்கிக்
கோசமா குறியை நோக்கிக் குருபரன் வடிவைக் கண்டு
வாசமா மலரால் நாகை நாதரை வணங்கு நெஞ்சே! 65

கன்றதைத் தேடுங் காறுங் காலியைப் போலே யுன்னுள்
நின்றபே ரொளியைக் கண்டு நினைவெனு மறிவாற் றெய்வம்
ஒன்றேனக் கண்டா யானல் உமையவ ளுடனே தில்லை
மன்றினுள் ஆடும் நாகை நாதர்முன் வருவாய் நெஞ்சே! 66

மடைவாயிற் பட்சி போலே மனந்தனை யடக்கி வாதி
விடையேறு மீசன் பாதம் விரும்பிய பெரியோர் பின்னே
தடையறத் திருந்து ஞான சாதகம் பெற்று நீதான்
புடைசூழ நாகை நாதர் பொன்னடி போற்று நெஞ்சே! 67

சிரமெனுங் குகையி னுள்ளே சிவகயி லாய மன்றில்
அரனிட மமையும் வாசி யாடல்தான் செய்வா ரென்று
பரமமெய்ஞ் ஞான நூல்கள் பகர்வதை யறிந்து பார்த்து
வரமிகு நாகை நாதர் மலரடி வணங்கு நெஞ்சே! 68

கடமதில் நிறைந்து நின்ற கனவொளி போலே யுன்றன்
செடமதில் நிறைந்து நின்ற சிவனை யறிவாற் கண்டு
திடமிகு சிவ சாட்சி தரிசிக்கச் சிவன் முத்தி
இடமரு நாகை நாத ரிணையடி யுணர்வாய் நெஞ்சே! 69

மெய்யருள் விளங்குட் சோதி வெளிதனை அறிவா லுன்னி
ஐயமில் லாமற் காண்போ ரவரின்ப முத்த ரென்று
துய்யமெய்ஞ் ஞான நூல்கள் சொல்வதாற் பரத்தை நோக்கிச்
செய்யதாள் வாசி நாகை லிங்கரைத் தெரிசி நெஞ்சே! 70

முந்தின பிறப்பு வந்த முதன்மையும் அறியாய் இப்பால்
பிந்தின பிறப்பு வந்த பெருமையும் அறியாய் நீதான்;
அந்தரப் பட்சி போல அலைகின்றாய்: அகத்து ளேமுச்
சந்தியை அறிந்து நாகை நாதரைச் சார்வாய் நெஞ்சே. 71

காகத்தின் கண்ணி ரண்டிற் காண்பதுங் கண்ணொன்
றேபோல்
தேகத்தின் அறிவின் கண்ணைத் திடமுடன் அறிந்து
கொண்டு
மோகத்தின் கனலில் வீழா முனைசுழி வாசி பார்த்தால்
ஏகத்தால் நாகை நாத ரிணையடி சார்வாய் நெஞ்சே!



ஓட்டிலே பட்ட பட்சி உழல்கின்ற நெறிபோ லாசைக்
கட்டிலே மயங்கி மாறாக் கவலையுற் றலைந்தாய் நீதான்;
நெட்டிலே யோடு வாசி நிலைமையாய் நிறுத்தி மேரு
வட்டிலே நாகை நாதர் வாழ்பதி அறிவாய் நெஞ்சே! 73

ஆனைவாய்க் கரும்பு போலும் அரவின்வாய்த் தேரை போலும்
பூனைவா யெலியைப் போலும் புவியில்நைந் தலைந்தாய் ஞானத்
தேனைவாய் அருந்தி முத்தி சேர்ந்திடச் சிவத்தை நோக்கி
ஊனுளே நாகை நாதர் உற்றிட மறவாய் நெஞ்சே! 74

மித்திர குருக்கள் சொல்லை மெய்யென்று கல்லை வைத்துப்
பத்திர புட்பஞ் சார்த்திப் பணிந்திடும் பாவை நீதான்:
சித்திரப் பதுமை போலுஞ் செய்தொழி லொடுங்கி நின்று
புத்தியாய் நாகை நாதர் பொன்னடி போற்று நெஞ்சே! 75

உப்போடு புளிப்புங் கைப்பும் உணர்வினால் அறிந்து நீதான்
எப்போது முனக்குள் நாயன் இருப்பிடம் அறியா தென்னே?
முப்போதுங் குருவைப் போற்றி முனைசுழி வாசி பார்த்தால்
அப்போது நாகை நாதர் அடியிணை அறிவாய் நெஞ்சே! 76

படிக்கவும் நாவி ருக்கப் பணியவுஞ் சிரமி ருக்கப்
பிடிக்கவும் கரமி ருக்கப் பேணவுங் குருவி ருக்க
நடிக்கவுந் தாளி ருக்க நாடவுங் கண்ணி ருக்க
இடுக்கமுற் றலைந்தாய் நாகை நாதரை இறைஞ்சு நெஞ்சே! 77

அருவுரு வில்லா நாயன் அணுவினுக் கணுவாய் நின்றும்
மருவுபல் லுயிர் கட் கெல்லாம் வடிறுவே றூன தன்மை
ஒருவரும் அறியார்; நல்லோர் உறுதியா லறிவார்; ஞான
குருபர நாகை நாதர் குறுப்பறிந் துணர்வாய் நெஞ்சே! 78

ஆண்டொறு நூறு கற்பம் ஔடத மூலியுண்டு
நீண்டதோர் காய சித்தி நெடுநாளைக் கிருந்த பேரும்
மாண்டுதான் போவா ரல்லால் வையகத் திருப்பா ருண்டோ!
தீண்டொணு நாகை நாதர் சீர்ப்பதந் தேடு நெஞ்சே. 79

பொருடனைத் தேடிப் பாரிற் புதைக்கின்ற புத்தி போன்மெய்
அருடனை நிதமுந் தேடி அரனடியதனில் வைத்தால்
இருடனை அகற்றுஞ் சோதி எம்பிரான் முன்னே வந்துன்
மருடனை மாற்றும் நாகை நாதரை வணங்கும் நெஞ்சே! 80

ஆண்டியின் வேடந் தானும் அறிவுடன் எடுத்தி டாமல்
தூண்டிலில் மீனைப் போலத் துள்ளிவீழ்ந் தலைந்தாய் நீதான்
வேண்டிய போது நாயன் மெல்லடி வெளித்தாய்த் தோன்றும்;
தாண்டிய வாசி நாகை நாதரைத் தழுவாய் நெஞ்சே! 81

சேற்றிலே நுழைந்தி ருந்த சிறுபிள்ளைப் பூச்சி போலும்
நீற்றிலே நுழைந்தி ருந்த நேர்மையாம் அழற்சி போலும்
மாற்றுபே ருலகில் நல்லோர் மருவிரி மருவார் சித்தத்
தேற்றியே நாகை நாதர் இணையடி வைப்பாய் நெஞ்சே! 82

நாடகப் பெண்ணை ஆட்டும் நட்டுவன் போலே யுன்றன்
கூடகச் சடத்தை யாட்டுங் குருவைநீ அறிந்தி டாமல்
மூடக மானுய் ஞான முதல்வனை அறிவால் தேடி
ஆடக நாகை நாதர் அடியிணைப் பணிவாய் நெஞ்சே! 83

சத்தியுஞ் சிவமு மாகித் தாண்டவ மாடும் வாசி
அத்திய மூல நாடிச் சுழுமுனைக் கம்பத்துள்ளே
புத்தியைச் செலுத்தி மேலாம் பொருடனை யெடுக்க வல்லார்
பத்திசெய் நாகை நாதர் பதிதனைப் பார்ப்பாய் நெஞ்சே! 84

நாட்டமாம் அறிவின் கண்ணால் நாயனைப் பருகிப் பார்த்துத்
தேட்டமாங் கருணை பெற்ற சிவனடி யார்கள் தங்கள்
கூட்டமாம் பரத்திற் சென்று குருபணி விடையுஞ் செய்கொண்
டாட்டமா நாகை நாதர் அருள்தர வருவார் நெஞ்சே! 85

காலனை உதைத்த நாயன் காலெனும் வாசி தானை
மூலநன் மனையிற் கண்டு முப்பதி முப்பாழ் தாண்டிப்
பாலமு தருந்த மேலாம் பராபரை பாதம் போற்றி
மாலயன் அறியா நாகை நாதரை வணங்கு நெஞ்சே! 86

கடுமையாம் பகட்டிலேறிக் கயிற்ருேடு சூலமேந்திக்
கொடுமையாங் காலன் வந்து கொண்டுபோம் முன்னே நீதான்
அடிமையா நாதன் பாதம் அனுதினம் மறவா தேத்தில்
நெடுமையா நாகை நாதர் நிலைமைகண்டறிவாய் நெஞ்சே! 87

அரகரா சிவசி வாவென் றனுதினம் மறவா தேத்திச்
சிரகயி லாய வீட்டிற் சிவனை நீ யறிந்து தேடில்
மரகத வல்லி பங்கன் வந்துமுன் காட்சி நல்கிப்
பரகதி கொடுக்கும் நாகை நாதரைப் பணிவாய் நெஞ்சே! 88

நடக்கிலும் வாசி பாரு; நாட்டமும் வாசி பாரு;
முடக்கிலும் வாசி பாரு; முனிசுழி வாசி பாரு;
மடக்கிலும் வாசி பாரு; மறிவிலும் வாசி பாரு;
திடக்குரு நாகை நாதர் திருநடஞ் செய்வார் நெஞ்சே! 89

போனநாள் வீணுய்ப் போனுற் புதியநாள் கெடவி டாமல்
ஞானநாள் இதுதா னென்று நாடெங்கும் குருவைப் போற்றி
வானநா ளத்திற் சென்னி வழிகண்டு மதிப்பா லூறும்
தேனைநன் கருந்தி நாகை லிங்கரைத் தெரிசி நெஞ்சே! 90

பராதல மெல்லாந் தானுயத் தாவர சங்க மங்கள்
நிராமய மாகக் கோத்து நின்றதோர் பொருளா மந்தப்
புராபர வடிவங் கண்டு பரத்துளே யடக்கி மேலாம்
தராதன மூர்த்தி நாகை லிங்கரைப் போற்று நெஞ்சே! 91

மாணிக்க வாச கர்க்கும் மகிழ்ப்பரஞ் சுந்த ரர்க்கும்
ஆணிப்பொன் திருமூ லர்க்கும் அறுபத்து மூவ ருக்கும்
பேணிக்கொள் பெரியோ ருக்கும் பேறருள் சிவனை யுன்னுள்
தோணக்கண் டிருந்து நாகை லிங்கரைத் தொழுவாய் நெஞ்சே! 92

மகத்துவம் அடைந்த நெஞ்சே! மலமாயை கொண்ட நெஞ்சே!
பகுத்தறி வில்லா நெஞ்சே! பலநினை வான நெஞ்சே!
மிகுத்திடு காம நெஞ்சே! மெய்ப்பொருள் அறியா நெஞ்சே!
செகத்தினில் நாகை நாதர் சீர்ப்பதந் தேடு நெஞ்சே! 93

காலது மேல தாகக் கனியுண்ணும் வௌவால் போல
மூலநல் வாசி யோடு முறைமையை அறிவாற் கண்டு
சீலமெய்ஞ் ஞான போத சிவயோகந் தன்னைப் பார்த்து
ஞாலமேல் நாகை நாதர் நடனமுங் காண்பாய் நெஞ்சே! 94

உறக்கமும் விழிப்பும் போல உடல்பிறந் திறக்குந் தன்மை
சிறக்கவே அறிந்து மிந்தச் செகவாழ்வை மெய்யென் றெண் ணிக்
குறித்தலை குலாமர் சொல்லைக் குறிப்புடன் நம்ப லாமோ?
மறக்கொணு நாகை நாதர் மலரடி வணங்கு நெஞ்சே! 95

எத்தனை புத்தி சொல்லி எடுத்தெடுத் துரைத்தும் நீதான்
பித்தனைப் போலே யோடிப் பிறவிசா கரத்தில வீழ்ந்தாய்;
முத்தமிழ் நாகை நாதர் முண்டக மலர்த்தாள் போற்றிச்
சத்தமூன் றுடலிற் றோன்றுந் தலந்தனைப் பார்ப்பாய் நெஞ்சே! 96

சுவர்க்கலைப் பூனை போலச் சுற்றிய பிறவி தீரத்
தவத்தினுக் குருவ மான சற்குரு தாளைப் போற்றிச்
சிவத்துடன் கலந்து மேவிச் சிதம்பர வழியே சென்றங்
கெவர்க்குமே லான நாகை நாதரை வணங்கு நெஞ்சே! 97

அலைவாயிற் றூடு போலும் ஆனைவாய்க் கவளம் போலும்
வலைவாயில் மிருகம் போலும் மயங்கினாய் தலைந்தாய் நீதான்;
உலைவாயின் மெழுகைப் போல உருகுமெய்ப் பொருளை யுன்னிப்
பலகாலு மேத்தி நாகை லிங்கரை பணிவாய் நெஞ்சே! 98

மூலமாம் நகர மீதில் மூளைத்தெழுஞ் சுடரைக் கண்டு
காலத்தீ மேலே யேற்றிக் கபாலத்தி லமுதை யுண்டுக்
கோலமா மதுவே யுண்டு குருபதந் தன்னிற் சேர்ந்து
வாலசந் திரிவால் நாகை லிங்கரை வணங்கு நெஞ்சே! 99

இறந்திடும் இருபத்தோரா யிரத்தறு நூறு பேரும்
இறந்திடக் காயம் போகுமென் றெண்ணிச் சீவனை காணப தெந்நாள்?
மறந்திடா தறிவால் மூலவாசியை மேலே யேற்றிச்
சிறந்தசிற் பரத்து நாகை லிங்கரைத் தெரிசி நெஞ்சே! 100

நூற் பயன்:

கதிதரு மூலா தாரக் கணபதி தாசன் சொன்ன
விதிமணி மாலை யான நெஞ்சறி விளக்கம் நூறும்
துதிசெய்யும் அறிவோர் ஞான சோதியின் வடிவ மாகி
மதியணி நாகை நாதர் மலர்ப்பதம் பெற்று வாழ்வார். 1

நித்தியப் பொருள தான நெஞ்சறி விளக்கம் நூறும்
பத்தியாய் மனதி லெண்ணிப் படித்ததன் பயன்காண் போர்கள்
முத்தியெய் ஞ்ஞானம் பெற்று மூவர்க்கும் முதல்வராகிச்
சத்தியுஞ் சிவமுந் தோன்றுந் தற்பர மதனுட் சார்வார். 2

கனகமா மணிசேர் மூல கணபதி தாசனுக்
கினிவிறு லதிகட் செப்பும் நெஞ்சறி விளக்கம் நூறும்
வினவியே படிப்போர் கேட்போர் வினையெலாம் அகன்று மெய்யுத்
தனிமெனும் மோட்ச காலம் பதம்பெற்றுப் பதத்தின் வாழ்வார். 3



## நூல்: பதினேழு

# அகஸ்தியர்

## ஞானப் பாடல்கள்

### ஞானம்—1

சத்தியே பராபரமே ஒன்றே தெய்வம் சகலவுயிர் சீவனுக்குமதுதானுச்சு;
புத்தியினா லறிந்தவர்கள் புண்ணியோர்கள் பூதலத்தில் கோடியி லொருவருண்டு;
பத்தியினால் மனமடங்கி நிலையில் நிற்பார் பாழிலே மனத்தை விடார் பரம ஞானி;
சுத்தியே நிலைவதிலேச் சூட்சஞ் சூட்சம் சுழியிலே நிலையறிந்தால மோட்சந் தானே.

மோட்சமது பெறுவ தற்குச் சூட்சஞ் சொன்னேன் மோகமுடன் பொய் களவு கொலைசெய் யாதே; 2
காய்ச்சலுடன் கோபத்தைத் தள்ளிப்போடு; காசினியிற் புண்ணியத்தைக் கருதிக் கொள்ளு;
பாய்ச்சலது பாடாதே; பாழ்போகாதே; பலவேத சாஸ்திரமும் பாரு
ஏச்சலில்லா தவர் பிழைக்கச் செய்த மார்க்கம் என்மக்கா ளெண்ணி யெண்ணிப் பாரீர் நீரே

பாரப்பா நாலுவேதம் நாலும் பாரு; பற்றாசை வைப்பர்கோர் பிணையோ கோடி! 3
வீரப்பா ஒன்றொன்றுக்கொன்றை மாறி வீணிலே யவர் பிழைக்கச்செய்த மார்க்கம்;
தேரப்பா தெருத்தெருவே புலம்புவார்கள் தெய்வமில்லை ஒருவருமே காணார் காணார்;
ஆரப்பா நிலைநிற்கப் போறாரையோ! ஆச்சரியங் கோடியிலே யொருவன் தானே!

ஒருவனென்றே தெய்வத்தை வணங்க வேணும் உத்தமனாய்ப் பூமிதனி லிருக்க வேணும்; 4
பருவமதிற் சேறுபயிர் செய்ய வேணும்; பாழிலே மனதை விடான் பரம ஞானி
திரிவார்கள் திருடரப்பா கோடா கோடி; தேசத்திற் கள்ளரப்பா கோடா கோடி;
வருவார்க ளப்பனே அனேகங் கோடி; வார்த்தையினால் பசப்புவார் திருடர் தானே;

தானென்ற தானே தா னென்றே தெய்வம்; தகப்பனுந் தாயுமங்கே புணரும் போது 5
நானென்று கருப்பிடித்துக் கொண்டு வந்தோ நாதனை நீ எந்நாளும் வணங்கி நில்லு;
கோனென்ற திருட னுக்குந் தெரியு மப்பா கோடானு கோடியிலே யொருவ னுண்டு;
ஏனென்றே மனத்தாலே யறிய வேணும் என்மாக்கள் சில சித்த மோட்சர் தானே.

மோட்சமது பெறுவதற்குச் சூட்சங் கேளு; முன்செய்த பேர்களுடன் குறியைக் கேளு! 6
ஏச்சலது குருக்களது குலங்கள் கேளு; எல்லாருங் கூட மிருந்த தெங்கே கேளு;
பேச்சலது மாய்கையப்பா வொன்றுமில்லை; பிதற்றுவா ரவரவரும் நிலையுங் காணார்
கூச்சலது பானையந்தான் போகும் போது கூட்டோடே போச்சுதப்பா; மூச்சுத் தானே.

மூச்சொடுங்கிப் போனவிடம் ஆருங் காணார்; மோட்சத்தின் நரகாதி யிருப்புங் காணார்; 7
வாச்சென்றே வந்தவழி யேற்றங் காணார்; வளிமாறி நிற்கும் பணி வழியுங் காணார்
வீச்சப்பா வெட்டவெளி நின்றுப் பாரு. வேதங்கள் சாத்திரங்கள் வெளியாய்ப் போச்சே;
ஆச்சப்பா கருவுதனில் அமைந்தாற் போலாம்; அவனுக்கே தெரியுமல்லா லறிவாய்ப் பாரே!
பாரப்பா வுலகுதனிற் பிறவி கோடி; படைப்புகளோ பலவிதமாய்க் கோடா கோடி 8
வீரப்பா அண்டத்திற் பிறவிகோடி; வெளியிலே யாடுதப்பா வுற்றுப் பாரு;
ஆரப்பா அணுவெளியி லுள்ள நீதான் ஆச்சரியம் புழுக்கூடு வலமோ தப்பா
கூரப்பா அண்டத்திற் பிண்ட மாகும் குணமியவா னுனக்காற் சத்திய மாமே;

சத்தியமே வேணுமடா மனிதனுனக்; சண்டாளஞ் செய்யாதே தவறிடாதே; 9
நித்திய கர்மம் விடாதே நேமம் விட்டு வீட்டை யுடன் சமாதி விட்டு நிலைபெறாதே;
புத்தி கெட்டுத் திரியாதே; பொய்சொல் லாதே புண்ணியத்தை மறவாதே பூசல் கொண்டு;
கத்தியதோர் சள்ளிட்டுத் தர்க்கி யாதே கர்மி யென்று நடவாதே கதிர்தான் முற்றே

## ஞானம்—2

மனமது செம்மை யானால் மந்திரஞ் சேபிக்க வேண்டா;
மனமது செம்மை யானால் வாயுவை யுயர்த்த வேண்டா;
மனமது செம்மை யானால் வாசியை நிறுத்த வேண்டா;
மனமது செம்மை யானால் மந்திரஞ் செம்மை யாமே.

### உயர் ஞானம்

உண்ணும்போ தூயிரெழுத்தை வுயர வாங்கி உறங்குகின்ற போதல்லா 2
மதுவே யாகும்
பெண்ணின்பா லிந்திரியம் விடும்போ தெல்லாம் பேணிவலம் மேல்
நோக்கி அவத்தி கிக்கு.
தின்னுங்கா யிலமருந்து மதுவே யாகும்; தினந்தோறும் அப்படியே
செலுத்த வல்லார்
மண்ணூழி காலமட்டும் வாழ்வார் பாரு; மறலிகையில் அகப்படவு
மாட்டார் தாமே.

### தனி ஞானம்

ஒன்றான உச்சிவெளி தாண்டி நின்று உமையவளுங் கணபதியு 3
முத்தி யாமி
விண்ணொளியாம் அம்பரமும் அவ்வும் உவ்வும் விதித்தபரம் ஒருவருக்கு
எட் ர தப்பா!
பண்ணான உன்னுயிர்தான் சிவம தாச்சு; பாற்கடலில் பள்ளிகொண்
டோன் விண்டு வாச்சு;
கண்ணான கணபதியைக் கண்ணில் கண்டால் கலந்துருகி யாடுமடா
ஞானம் முற்றே;

விந்துவில் தனியறிந்து விந்தைக் கண்டால் விதமான நாதமது 4
குருவாய்ப் போகும்;
அந்தமுள்ள நாதமது குருவாய்ப் போனால் ஆதியந்த மான்குரு நீயே
யாவாய்;
சந்தேக மில்லையடா புலத்தி யன்னே! சகலகலை ஞானமில்லா மிசற்
கொவ்வா தே;
மூந்தானான் இருவருமே கூடிச் சேர்ந்த மூலமதை யறிவாட்டால்
மூலம்பாரே.

மூலமதை யறிந்தக்கால் யோகமாச்சு; முறைமையுடன் கண்டக்கால் 5
வாத மாச்சு;
சாலமுடன் கண்டவர்முன் வசமாய் நிற்பார்; சாத்திரத்தை கூட் டெறிந்தா
லவனே சித்தன்;
சீலமுள்ள புலத்தியனே! பரமயோகி செப்புமொழி தவறாமல் உப்பைக்
கண்டால்
ஞாலமுள்ள எந்திரமாஞ் சோதிதன்னை நாட்டினால் சகலசித்தும்
நல்கும் முற்றே;

### ஞானம்—3

பாரப்பா சிவன் விட்டுப் போகும் போது பழுத்தபிணங் கிடக்கு
தென்பார்; உயிர்போச் சென்பார்
ஆரப்பா அறிந்தவர்கள்? ஆரும் இல்லை; ஆகாய சிவத்துடனே
சேரு மென்பார்;
காரப்பா தீயுடன் தீச் சேருமென்பார்; கருவறியா மானிடர்கள்
கூட்டமப்பா!
சீரப்பா காமிகள் தா மொன்றாய்ச் சேர்ந்து தீயவழி தனைத்தேடிப்
போவார் மாடே

மாடுதா னுறலும் ஒருபோக் குண்டு; மனிதனுக்கோ அவ்வளவுந் 2
தெரியா தப்பா!
நாடுமெத்த நரகமென்பார்; சொர்க்க மென்பார்; நல்வினையோ
தீவினையோ என்ன மாட்டார்;
ஆடுகின்ற தேவதைகள் அப்பா! கேளு; அரியதர்வை யினஞ்சேரு
மென்றார் தோணார்;
சாடுமெத்த பெண்களைத்தான் குறிப்பா யெண்ணித் தீவமான தீயில்
வீழ்ந் தயங்கு வாரே;

தயங்காமற் பிழைப்பதற்கே இந்த ஞானம்; சார்வாகப் பாராட்டும்
ஞானம் வேறே;
மயங்குதற்கு ஞானம்பார் முன்னோர் கூடி மாட்டினார் கதைகாவ்ய
புராணமென்றும்
இயலான ரசந்தனிலேத் புகுந்தாற் போலும் இசைத்திட்டார் சாத்திரங்க
ளாறென் றேதான்;
வயலான பயன்பெறவே வியாசர் தாமும் மாட்டினார் சிவனுருத்தரவினாலே
உத்தார மிப்படியே புராணங் காட்டி உலகத்தில் பாரதம் போல்
கதையுண்டாக்கிக்;
கர்த்தாவைத் தானென்று தோண வொட்டாக் கபடமாக வேதஞ்
சேர்த்துச்
சத்தாக வழியாகச் சேர்ந்தோர்க் கெல்லாஞ் சதியுடனே வெகுதர்க்கம்
பொருள்போற் பாடிப்
பத்தாகச்சைவர்க்கொப்பனையும்செய்துபாடினார்சாத்திரத்தைப்பாடினாரே
பாடினதோர் வகையேதோ? சொல்லக் கேளு; பாரதபு ராணமென்ற 5
சோதி யப்பா!
நீடியதோர் ராவணன்தான் பிறக்க வென்றும் நிலையான சுரதன்னை
வெல்ல வென்றும்
வீடியவோ ரரசனென்றும் முனிவ ரென்றும்வித்தையருள் பெற் றவரென்றுந்
தேவ ரென்றும்
ஆடியதோர் அரக்கரென்றும் மனித ரென்றும் பாடினார் சான்றோரும்
பகையாய்த் தானே

கழிந்திடுவார் பாவத்தா லென்று சொல்லும் கட்டியகால வேதமறு 6
சாத்திரங்கள்
அழிந்திடவே சொன்னதல்லால் வேறொன் றில்லை; அதர்மமென்றுந்
தர்மமென்றும் இரண்டுண் டாக்கி
ஒழிந்திடுவ ரென்றுசொல்லிப் பிறப்புண் டென்றும் உத்தமனும்
பிறப்பனென்று மூலத் தோர்கள்
தெளிந்திடுவோர் குருக்களென்றுஞ் சீடரென்றும் சீவனத்துக் கெங்கள்போல்
தெளிந்து காணே!

## ஞானம்-4

பூரணமே தெய்வமென உரைத்தா ரையா! பூரணத்தை யின்னதென்று 1
புகல வேண்டும்
காரணத்தைச் சொல்லுகிறேன்; நினைவாய்க் கேளு; கல்யாண பதினாறும்
பூரணமே யாகும்;

மாரணமா முலைத்தில் மதிம யங்கி மதிகெட்டுப் பூரணத்தை
யிகழ்ந்தா ரையா!
வாரணத்தை மனம்வைத்துப் பூரணத்தைக் காத்தால் வாசியென்ற
சிவயோக வாழ்க்கையாச்சே,

ஆச்சப்பா இந்த முறை பதினென் பேரும் அயன்மாலும் அரனோடு 2
தேவரெல்லாம்
மூச்சப்பா தெய்வமென்றே யறியச்சொன்னார்; முனிவோர்கள் இருடியரிப்
படியே சொன்னார்;
பேச்சப்பா பேசாமல் நூலைப் பார்த்துப் பேரான பூரணத்தை வினவாய்க்
காரு;
வாச்சப்பா பூரணத்தைக் காக்கும் பேர்கள் வாசிநடு மையத்துள்
வாழ்வார் தானே

தானென்ற பெரியோர்க ளுலகத்துள்ளே தாயான பூரணத்தை 3
யறிந்த பின்பு
தேனென்ற அமுதமதைப் பானஞ் செய்து தெவிட்டாத மவுனசிவ
யோகஞ் செய்தார்;
ஊனென்ற வுடலைநம்பி யிருந்த பேர்க்கே ஒருநான்கு வேதமென்றும்
நூலா றென்றும்;
நானென்றும் நீயென்றும் சாதி யென்றும் காட்டினா ருலகத்தோர்
பிழைக்கத்தானே;

பிழைப்பதற்கு நூல்பலவுஞ் சொல்லா விட்டாற் பூரணத்தை யறியாம 4
லிறப்பா ரென்றும்
உழைப்பதற்கு நூல்கட்டிப் போடாவிட்டால் உலகத்திற் புத்திகெட்டே
யலைவா ரென்றும்
தழைப்பதற்குச் சாதியென்றும் விந்துவென்றும் தந்தை தாய்
பிள்ளையென்றும் பாரி யென்றும்
உழைப்பதற்குச் சொன்னதல்லாற் கதிவே றில்லை; உத்தமனே
யறிந்தோர்கள் பாடி னாரே.

பாடினாரிப்படியேசொல்லாவிட்டால்பரிபாடையறிவார்களுலகமூடர்; 5
சாடுவார் சிலபேர்கள் பலநூல் பார்த்துத் தமைமறந்து படுகுழியில்
விழுவார் சாவார்;
வாடுவார் நாமமென்றும் ரூப மென்றும் வையகத்திற் கற்செம்பைத்
தெய்வமென்றும்.
நாடுவார் பூரணத்தை யறியார் மூடர்; நாய்போலே குரைத்தலைவே
யொழிவார் காணே.

காணாமல் அலைந்தோர்கள் கோடா கோடி காரணத்தை யறிந்தோர்கள் 6
கோடா கோடி;
வீணாகப் புலம்பினதா லறியப்போமோ? விஞ்ஞானம் பேசுவதும் எதுக்
காகும்?
கோணாமற் சுழுமுனையில் மனத்தை வைத்துக் குருபாத மிருநாலில்
நாலைச் சேர்த்து
காணாம லொருவினையாய்க் காக்கும் போது நாலுமெட்டு மொன்றாகும்
[illegible]

ஊதிபதோ ருமறிந்தாலவனே சித்தன்; உத்தமனே பதினாறும்
பதியேயாகும்
வாதிகளே யிருநான்கும் பதியின் பாதம் வகைநான்கு முயிராகும்
மார்க்கங் கண்டு
சோதிபரி பூரணமும் இவைமூன் றுந்தான் தூங்காமற் றூங்கியங்கே
காக்கும்போது
ஆதியென்ற பராபரையு மரனு மொன்றாய் அண்ணாக்கின் வட்டத்தல்
ளாகும் பாரே.

பாரப்பா உதயத்தில் எழுந்தி ருந்து பதறாமற் சுழுமுனையில் மனத்தை 8
வைத்துக்
காரப்பா பரிதிமதியிரண்டு மாறிக்கருவானசுழுமுனையில் உதிக்கும்போது
நேரப்பா அண்ணாக்குள் நின்று கொண்டு தியங்காமற் சுழுமுனைக்குள்
ளடங்கும் பாரு;
சீரப்பா பதினாறில் எட்டும்நான்கும் சிதறாமல் மூன்றும்ஒன்றாய்ச் சேர்ந்து
போமே.

ஒன்றான பூரணமே யிதுவே யாச்சு; உதித்தகலை தானென்று 9
மிதுவே யாச்சு
நன்றாகத் தெளிந்தவர்க்கு ஞானஞ் சித்தி நாட்டாமற் சொன்னதனால்
ஞானமாமோ?
பன்றான வாதிநூல் சொன்ன ஞானம் பரப்பிலே விடுக்காதே பாவ மாகும்;
தின்டாடு மனத்தோர்க்குக் காணப் போகா; தெளிந்தவர்க்குத் தெரிவித்த
வுகமை தானே.
உகமையின்னஞ் சொல்லுகிறேன் உலகத் துள்ளே உவமையுள்ள

பரிகாசம் பணிபேச சாதே; 10
பகைமை பண்ணிக் கொள்ளாதே; வீண்பேசாதே; பரப்பிலே திரியாதே;
மலை யேறாதே;
நமையோகாதேசிளங்காதேயுறங் கிடாதே; கழுகாதே சுழுமுனையிற்பின்வாங்
காதே;
செகமுழுதும் பரிபூரண மறிந்து வென்று தெளிந்து பின் உலகத்தோ
டொத்து வாழே!
வாழாமல் உலகம் விட்டு வேடம் பூண்டு வயிற்றுக்கா வாய்ஞானம்
பேசப் பேசித்
தாழ்வான குடிதோறும் இரப்பான் மட்டை; தமையறியாச் சண்டாளர்
முழுமா டப்பா!
பாழாகப் பாவிகளின் சொற்கேளாதே பதறாதே வயிற்றுக்காக
மயங்கிடாதே;
கேளாதே பேச்செல்லாங் கேட்டுக் கேட்டுக் கலங்காதே யுடலுயிரென்
றுரைத்திடாதே.
உடலுயிரும் பூரணமும் மூன்றுமொன்றே; உலகத்திற் சிறிதானம் 12
வெவ்வேறென்பார்;
உடலுயிரும் பூரணமும் ஏதென் றக்கால் உத்தமனே பதினாறு மொருநான்
கெட்டும்
உடலுயிரும் பூரணமும் அயன்மா லீசன்; உலகத்தோரறியாமல் மயங்கிப்
போனார்;
உடலுயிரும்பூரணமுமேயுமாச்சே உதித்தகலைவிலையறிந்துதாதியிலிலே

பதியின்ன இடமென்ற குருவைச் சொல்லும் பரப்பிலே விள்ளாதே 13
தலைரண்டாகும்
விதியின்ன விடமென்று சொல்லக் கேளு; விண்ணான விண்ணுக்குள்
அண்ணாக்கப்பா!
மதிரவியும் பூரணமுங் கண்வாய் மூக்கும் மகத்தான செவியோடு பரிச
மெட்டும்
பதிவிடஞ் சுழுமுனை யென்றதற்குப்பேராம்: பருவார்சொர்க்கமும்கை
லாச மென்றே

கைலாசம் வைகுந்தந் தெய்வ லோகம் காசிகன்யா குமரியென்றுஞ்சேதுவென்றும் 14
மயிலாடு மேகமென்றும் நாகமென்றும்மாய்கையென்றும்பின்ன லென்றும்
மவுன மென்றும்
துயிலான வாடை யென்றும் சூட்சமென்றும் சொல்லற்ற இடமென்றும்
ஒடுக்கமென்றும்
தயிலான பாதமென்றும் அடி முடி என்றும் தாபான வத்துவென்றும்
பதியின் பேரே.

பேருசொன்னேன்; ஊர்சொன்னேன் இடமும்சொன்னேன்: பின்கலையும் 15
முன்கலையும் ஒடுக்கம் சொன்னேன்:
பாருலகில் பல நூலின்மார்க்கஞ் சொன்னேன்; பலபேர்கள் நடத்துகின்ற
தொழிலும் சொன்னேன்;
சீருலகம் இன்னதென்று தெருட்டிச் சொன்னேன்; சித்தான சித்தெல்லாம்
சுருக்கிச் சொன்னேன்;
நேருசொன்னேன் வழிசொன்னேன் நிலையுஞ்சொன்னேன்; நின்னுடம்பை
யின்னதென்று பிரித்துச் சொன்னேன்;

பிரித்துரைத்தேன் சூத்திரமீ ரெட்டுக்குள்ளே பித்தர்களே! நன்றாகத் 16
தெரிந்து பார்க்கில்
விரித்துரைத்த நூலினது மார்க்கஞ் சொன்னேன்; விள்ளாதே இந்த
நன்னூலிருக்குதென்று
கருத்துடனே அறிந்து கொண்டு கலைமாறாதே காரியத்தை வினவாதே
கருத்திற் சொல்லு;
சுருதிசொன்ன செய்தியெல்லாம் சுருக்கிச் சொன்னேன்; சூத்திரம்பாற்
பதினாறும் தொடுத்தேன் முற்றே

## ஞானம்-5

கற்பமென்ன வெகுதூரம் போக வேண்டா! கன்மலையில் குவடுகளில் 1
அலைய வேண்டா;
சர்ப்பமென்ன நாகமதோர் தலையில்நின்று சாகாத காலகண்டு
முனை யிலேறி
நிற்பமென்று மனமுறுத்து மனத்தில்நின்று நிசமான கருநெல்லிச்
சாற்றைக் காணு;
சற்பமென்று விட்டு விட்டால் அலைந்து போவாய்; சுழிமென்ற
பராபரத்திற் சென்று கூடே

கூடப்பா அரியமென்ற வாலை வீடு கூறரிய நாதர்மகேச் சுரியே
பென்பார் 2
நாடப்பா அவள் தனையே பூசை பண்ணு; நந்தி சொல்லுஞ் சிங்காரந் தே ன்றுந் தோன்றும்;
ஊடப்பா சிகாரவரை யெல்லாந் தோன்றும்; ஊமையென்ற அமிர்தவெள்ளம் ஊறலாகும்;
தேடப்பா இதுதேடு காரிய மாகும்; செகத்திலே இதவல்லவோ சித்தி யாமே.

ஆமென்ற பூர்ணஞ்சுழு முனையிற் பாராய்; அழகான விந்துவிலே சக்கர 3
னிற்பார்,
ஓமென்ற ரீங்காரம் புருவ மையம் உத்தமனே வில்லென்ற வீட்டிற் காணும்;
வாமென்ற அவள்பாதம் பூசை பண்ணு; மற்றொன்றும் பூசையல்ல மகனே! சொன்னேன்;
நாமென்ற பரமனல்லோ முதலே முத்தி; பாடினேன் வேதாந்தம் பாடி னேனே.

பாடுகின்ற பொருளெல்லாம் பதியே யாகும்; பதியில் நிற்கும் அட்சரந் 4
தான் அகார மாகும்;
நாடுகின்ற பரமனது ஒங் கார மாகும்: நலம் பெரிய பசுதானே உகாரமாகும்;
நீடுகின்ற சுழுமுனையே தாரை யாகும்; நின்றதோர் இடைகலையே ஏக விந்தாம்;
ஊடுகின்ற ஒங்கார வித்தை யாகும் ஒளியான அரிவெழுத்தை ஊணிப் பாரே.

ஊணியதோர் ஓங்காரம் மேலுமுண்டே உத்தமனே சிரண்டே வூணிப் 5
பாரே.
ஆணியாம் நடுநாடி நடுவே மூட்டும் ஆச்சரிய வெழுத்தெல்லாம் அடங்கி நிற்கும்
ஏணியா யிருக்குமடா அஞ்சு வீடே ஏகாந்த மாகியவவ் வெழுத்தைப் பாரு;
தோணிபோற் காணுமடா அந்த வீடு; சொல்லாதே ஒருவருக்குந் துறந்திட்டேனே.

துறந்திட்டேன் மேல்மூலங் கீழ்மூ லம்பார்; துபரமாய் நடுவிலையை
யூணிப் பாராய்; 6
அறைந்திட்டேன் நடுமூலம் நடு நாடிப்பார்; அப்பல்லோ வரைதாக்கும் தாரை காணும்;
உறைந்திட்ட ஐவருந்தான் நடனங் காணும், ஒளிவெளியும் சிலம் பொலிவு மொல் ருப்புங் காணும்:
நிறைந்திட்ட பூரணமு மிதுதானப்பா! நிசமான பேரொளிதான் நிலைத்துப் பாரே;

அம்மாநீ பார்க்கையிலே மனத்தை யப்பா சுழுமுனையி லோட்டியங்கே 7
காலைப் பாராய்;
அம்மாநீ தேவியென்று அடங்கிப் பாராய்; அப்பவல்லோ காயசித்தி யோகசித்தி;

உம்மாவும் அம்மாவும் அதிலே காணும்; ஒருமனமாய்ச் சுழுமுனையில்
மனத்தை யூன்று;
கம்மாலே ஆனவெல்லாஞ் சொன்னே மப்பா! காதர்களிவிதை யாரும்
பாடார் காணே!

காணுகின்ற ஓங்கார வட்டம் சற்றுக் கனலெழுப்பிக் கண்ணிலே
கடுப்புத் தோன்றும்: 8
பூணுகின்ற இடைக்கலையில் பரம்போ லாடும்: பொல்லாத தேகமென்றும்
உருகிப் போகும்
ஆணவங்களான வெல்லா மழிந்து போகும்; அத்துவிதத் திரிபாட்டமாடி
நிற்கும்;
ஊணியதோ ரொழுத் தெல்லாந் தேவி யாகும்; ஓங்காரக் கம்பமென்ற்
உணர்வு தானே.

உணர்வென்றுஞ் சுந்திரினி லேறிப் பாவி ஓடியங்கே தலையென்ற
எழுத்தில் நில்லே; 9
அணுவென்றால் மனையாகுஞ் சிவனை யுச்சி அகாரமென்ன பதியுமென்ன
குட்ச மாகும்:
கணுவென்ன விற்புருவ மகண்ட வீதி; கயிலாய மென்றதென்ன பரத்தின்
வீடு.
திணுவென்ற சூரியன்றன் நெருப்பைக் கண்டு தானென்ற பிடரிலே
தாங்கு தாங்கே;

மூவெழுத்தும் ஈரெழுத்து மாகி நின்ற முறைமைதை யறிந்துரைப்போன்
குருவுமாகும்: 10
ஊவெழுத்துக் குள்ளேதா னிருக்கு தப்பா உணர்வதுவே கண்டறிந்தோன்
அவனே ஆசான்;
யாவருக்குந் தெரியாதோ அறிந்தோ மென்றே அவரவர்கள் சொல்வார்க
ளறியா மூடர்;
தேவரோடு மாலயனுந் தேடிக் காணார் திருநடனங் காண முத்தி
சித்தியாமே,

ஈரெழுத்து மோரெழுத்து மாகி யங்கே இயங்கிநிற்கும் அசபையப்பா
மூலத்துள்ளே 11
வேரெழுத்தும் வித்தெழுத்தும் இரண்டுங் கொண்டு வித்திலே
முளைத்தெழுந்து வங்கி நிற்கும்
சீரெழுத்தை யூணுகல்ல வாசி யேறித் தெருவீதி கடந்தமணி மண்ட
பத்தச்
சாரெழுத்தி னுட்பொருளாம் பரத்தை நோக்கிச் சார்ந்தவர்க்குச்
சித்திமுத்தி தருமே தானே.

ஏகமெனு மோரெழுத்தின் பயனைப் பார்த்தே எடுத்துரைத்த
மிவ்வுலகி லெவரு மில்லை. 12
ஆகமங்கள் நூல்கள்பல கற்றுக் கொண்டே அறிந்தோமென்பார் மவுனத்தை
அவனே நீயும்
வேகாசகா காத்தலைகால் விரைந்து கேளாய்: விடுத்ததனை யுரைப்பவனே
ஆசா னாகும்;
தேகமதி லோரெழுத்தைக் காண்போன் ஞானி; திருநடனங் காணமுத்தி
சித்தி யாமே,

குருவாக உமைபாக னெனக்குத் தந்த கூறரிய ஞானமது பத்தின் மூன்று। 18
பொருளாகச் சொல்லி விட்டேனப்பா நீதான் பொருளறிந்தாற் பூரணமும் பொருந்திக் காணே
அருளாகா திந்நூலைப் பழித்த பேர்கள் அருநரகிற் பிசாசெனவே அடைந்து வாழ்வார்.
அருளாக ஆராய்ந்து பார்க்கும் பேர்கள் ஆகாயம் நின்றநிலை அறியலாமே



# நூல்: பதினெட்டு

# உரோம ரிஷி ஞானம்

மூலவட்ட மான குரு பாதங் காப்பு: முத்திக்கு வித்தான முதலே காப்பு; 1
மேலவட்டமான பரப் பிரமங் காப்பு! வேதாந்தங் கடந்துநின்ற மெய்யே காப்பு:
காலவட்டங் கண்டுமதி யமுதப் பாலைக் கண்டுபசி யாற்றிமனக் கவடு நீக்கி
ஞாலவட்டஞ் சித்தாடும் பெரியோர் பாதம் நம்பினதா லுரோமனென் பேர் நாயன் றானே.

கண்ணாடி நிலமூடித் தனுப்பினாலே கருவதனை யறியாமல் மாண்டு போனான் 2
விண்ணாடிப் பாராத குற்றம் குற்றம் வெறுமனேப் போச்சுதவன் வித்தை யெல்லாம்;
ஒண்ணான மவுனமென்றே யோகம் விட்டால் ஒருபோதஞ் சித்தியில்லை! வாதந் தானும்
பெண்ணார் தம் ஆசைதன்னை விட்டு வந்தால் பேரின்ப முத்திவழி பேசுவேனே.

பேசுவேன் இடைகலையே சந்திரகாந்தம்; பிங்கலை யாதித்த னாதி யாச்சு; 3
தேசமதாய் நடுவிருந்த சுடர்தான் நின்று நீங்காம லொன்றான துதான் முத்தி;
காதலாய்ப் பார்த்தோர்க்கு இதுதான் மோட்சம்; காணாதபேர்க் கொன்னகாம தேகஞ்
சோதனையாய் இடைகலையி லேறவாங்கிச் சுழுமுனையில் கும்பித்துச் சொக்கு வீரா

வாங்கியந்தப் பன்னிரண்டி னுக்ளேரேசி வன்னி யின்ற விட மல்லோ 4
குர்பன் வாழ்க்கை?
ஓங்கியிந்த இரண்டிட முமறிந்தோன் யோகி; உற்றபூர மடி நானே
பதினாறும்;
தாங்கிநின்ற கலைடி தான் பன்னிரண்டு; சார்வாக பதினாறில வெள்ள
வாங்கி
ஏங்கினதைப் பன்னிரண்டில் இருத்தி யூதி எழுந்தபுரி யட்டமடங்
கிற்றப் பாரே.
பாரையா குதிரைவட்டம் பாய்ச்சல் போச்ச; பரப்பிலே விடுக்காதே 5
சத்தர் தன்னை;
கேரையா இரண்டிதழி லதிலே வைத்து மிறைந்தசதா சிவனரைத்
தியானம் பண்ணு;
கூரையா அந்தலத்தா னாலுஞ் சென்றால் குறிக்குள்ளே தானடக்கிக்
கொண்ட டையா!
ஆரையா உனக்கிடு செல்லப் போறேன்! அருமையுள்ள என் மக்கே சொன்
னழைக்க லாமே.
அழைப்பதுவும் நல்லபிள்ளை யானால் நன்றே! ஆகாத சிஷர்களைச் 6
சேர்த்தல் தோடம்;
பிழைப்பதற்கு வழி சொன்னால் பார்க்க மாட்டான் பெண்டாட்டி மனங்
குளிரப் பேசு மாடு;
உழைப்பதற்குச் சென்மமெடுத்தானே யல்லால் உதவிதனக் கெவ்வளவு
முண்டோ வில்லை
இளப்பமிவன் பேச்சயடிக் கடிகா ரனுக்கு மேதுக்குச் சொல்லுகிறோ
யினிமேல் தானே,
மேலென்ன இருக்கையிலும் நடக்கும் போதும் வேறுரையால்
சாரங்கள் விடாமல் வேற்று
சாலென்ன எட்டென்ன வெல்லா மொன்று சுகமான அட்டாங்க
மப்பிய சித்துக்
காலென்னப் பிராணாய முன்னே செய்யில் கணக்காகப் பூரகங்கும்
பகமே நாலு
கோலென்ன ரேசகந்தா னென்று மூன்று குறையாமற் சரபீசங் கூட்டித்
தீரே.
கூட்டியே பழகினபின் சரபீசத்தில் குறையாமல் சாதித்தால் பிரம 8
ரந்திரம்
காட்டுவிக்கு மல்லால்விழிக்குறியி னாலே கண்மூக்கு மத்தியிலே கண்டு
பாரு;
மூட்டுவிக்கு மாதார மாறுந்தானே மூலவட்டக் கணபதிநான் முகத்
தோன் மாயன்
நாட்டி கமா மணிபூரங் கைபன் வட்டந் தனலான ருத்திரனுந்
தனலுமாமே
தனலாகும் விசுத்திபறு கோண வட்டஞ் சதாசிவனார் வட்டமல்லோ 9
குருபீடந்தான்;
மனையான பதியினிலே குறித்துப் பார்க்க மத்யமமுதல் கிரிகொண்டு
[illegible]

கனலேறிக் கொண்டிருந்தா லெல்லா முண்டு:காற்றைவெளி விட்டக்கால் கருமந் தீதான்
புன்னூறும் வழிபாதை யிந்த மார்க்கம் பொல்லாத துரோகிக்குப் பொய்யா மன்றோ?

சேலுத்துவது முண்ணுக்கி லண்ணுக் கையா! செந்நேறிப் படரி 10 வழித் தியங்குந் தோன்றும்;
வலுத்ததடா நாலுமுனக் கமுத மாச்சு; மவுனமென்ற நிருவிகற்ப வாழ்க்கை யாச்சு;
சொலித்திருக்கும் பன்னிரண்டடி விருத்தி யூது சோடசமாம் சந்திரகலை தேய்ந்து போச்சு;
பலித்ததடா யோகசித்தி ஞான சித்த பருவமாய் நாடி வைத்துப் பழக்கம் பண்ணே.

மூடமகல் சிறிதுமனப் பாடம் பண்ணி முழுவதுமவன் வந்ததுபோல் 11 பிரசங் கித்து
வீடேதிங் குடலேது யோக மேது வீண்பேச்சாச் சொல்லிடல்லோ மாண்டு போனார்?
காடேறி மலையேறி நதிகளாடிக் காய்கிழங்கு சருகுதின்று காமந் தீபால்
கூடேறி மாண்டவர்கள் கோடா கோடி சொருபமுத்தி பெற்றவர்கள் சுருக்க மாச்சே.
சொருப முத்திக் கடையாளம் ஏதென் றக்கால் சுடர்போலக் காணுமடா தூல தேகம்; 12
அரூபமுத்தி யிடமல்லோ பிரம ஞானம் அபராட்சமென்று சொல்லுஞ் சிரவணந்தான்
பருபதத்தை அசைப்பனெனச் சிற்றெறும்பின் பழங்கதைபோ லாச்சுதிந்த யோகம் விட்டால்
வெறுங்கட்டி வீப்புதந்த வாறு போல வேதாந்த மறியாத மிலேச்சர் தாமே.

ஓமென்ற வெட்டபுத்தி மாறு கேளே; உலகத்தில் மானிடர்க்காம் 13 ஆண்டு நூறு:
ஆமென்ற இருபத்தோ ராயி ரத்தோ டறுநூறு சுவாச மப்பா ஒருநா ளைக்குப்
போவென்று போனதனால் நால்கு றைந்து போச்சுதுபோ காவிட்டால் போவ தில்லை:
தாமொன்று வினைக்கையிலே தெய்வமென்று தானினைந்த தின்னமை யல்லோ விதிகள் தாமே.



# நூல் பத்தொன்பது

# திருமூல நாயனார் ஞானம்

அடியாகி அண்டரண்டத் தப்பால் ஆகி அகாரமெனு மெழுத்ததுவே பாதமாகி
முடியாகி நடுவாகி மூலந் தன்னில்முப் பொருளுந் தானாகி முதலுமாகிப்
படியாய்முப் பாழற்றுப் படித்து மப்பாற் படிகடந்த பரஞ்சோதிப் பதியுமாகி
அடிபாகு மூலமதே அகாரமாகி அவனவளாய் நின்றநுல்ல யனுவ தாமே.

அதுவாகி அவனவளாய் எல்லாமாகி அடிநடுவு முடிவாகி யகண்ட மாகிப் 2
பொதுவாகிப் பல்லுயிர்க ளனைத்துக் கெல்லாம் புகலிடமாய் எப்பொருட்கு மூலமாகி
மதுவாகி வண்டாகிச் சுவையுமாகி மலராகி மணமாகி மதிக்கவொண்ணு
அதுவாகும் அகாரமதே மூலமாகி அண்டமெல்லாந் தாங்கிநின்ற அம் மூலமே

மூலமெனு மாதார வட்டந் தானே முச்சுடரு முக்கோண மூன்று நாடிச் 3
சீலமெனுஞ் சிவலிங்க பாத தீர்த்தந் திருவடியுந் திருமேனி கடமு மாகும்
கோலமுடன் அண்ட மெல்லாந் தாங்கிக் கொண்டு கொழுந்துவிட்ட கம்பமதாய் மேலே நோக்கி
ஆலமுண்ட கண்டமெலாந் தானாய் நின்ற அகாரமுதல் அவ்வெழுத்தை அறிந்து பாரே

அறிந்ததுவுந் தற்பரமே அகாரமாகும்: அறிவுடைய உகாரஞ்சிற் பரம தாகும்: 4
பிறந்ததுவு மூலகமெலாஞ் சமயந் தானும்: பேதமெனிங் கருவிவகை யெல்லா மாகும்:
அறிந்ததுவும் அகாரமெனும் பாதந் தன்னை: அடிமுடியென்று

அறிந்திடும் அறிந்து கொள்ளே.

நோக்கமுடன் மூலமெனும் பாதந் தன்னை நுண்பொருளாஞ்
சிற்பரத்தி னூடே நோக்கும் 5
தீர்க்கமுட னாதார வகையுந் தாண்டித் திருநயனம் நாசிநெற்றி நடுவே
பார்த்துப்
போக்கறிந்திங் கிந்தநிலை நோக்க வல்லார் புரிசடைபோன் தன்னுடைய
புதல்வ ராவார்;
ஆக்கமுடன் அருட்சுடர்போற் குருவைத் தானே அனுதினமும் நோக்கி
நிற்பார் ஆசா னாமே.

ஆசானு மீசானு மொன்றே யாகும் அவனவனு மொன்றாகும் அது
தானு நும்;
பேசாத மந்திரமு மிதுவே யாகும்; பேரொளியின் வடிவாகும்; பேரு
மாகும்
தேசாருங் கலைகளெலாந் தானே யாகும்; நிலையான ஓங்கார பீடமாகும்
ஈசனை ஆசானாய்க் காணும் பேர்க்கள் இன்பமுடன் கயிலாச மெய்த
லாமே.

எய்தரிய பரசிவத்தின் மூலந் தன்னில் இருசுடரும் உதித்தொடுங்கு 7
மிடமு மென்று
மெய்தொழிபுஞ் சுழுமுனையே கம்பமாகி மெய்ப்பொருளாஞ் சோதியென
மேவி நிற்கும்;
இவ்வகையே மூலமெனும் பாதந் தன்னை இருநேர மற்றிடத்தே
யிறைஞ்சிக் காணே.

காண்பதுதான் பேரொளியின் காட்சி யாகும்; காணரிய பொருளாகும் 8
காட்டும் போதே
ஆண் பெண்ணும் அலியாகி அடியு மாகி அப்பாலுக் கப்பாலாய் அமர்ந்த
சோதி
விண்டயிலும் வேதமெல்லாந் தேடிக் காணு வெறும்பாழ தாகியே
மேவி நின்றார்
சேண்பயிலும் செகசோதி மூலந்தன்னைத் தேடரிய பாதமென்றே
தெளிந்து நோக்கே.

தெளிவரிய பாதமது அகார மாகிச் சிற்பரமுந் தற்பரமுந் தானே யாகி 9
அழிவரிய சோதியது தானே யாகி அடிநடுவு முடியாகி யமர்ந்து நின்று
மொழிவரிய முதலாகி மூல மாகி முச்சுடருந் தானாகி முடிந்த சோதி
சுழிமுனையே முனையாகிக் கோப மாகிச் சொல்லரிய வெழுத்தெல்லாமே
தொகுத்துப் பாரீர்

தொகுப்பதுதாம் மந்திரங்கள் கருவி நாட்கள் சொல்லரிய தத்துவங்கள்
தடமை யெல்லாம் 10
வகுத்துடனே யிவற்றை யெலாங் கண்டு நீங்கி வாகான உடலுயிரை
வகையாய்க் கண்டு
பகுப்புடனே சேராமற் பாதந் தன்னைப் பரகதிக்கு வழியெனவே
பற்றிக் கொண்டு
விகற்பமிலா மூலமதில் நின்ற சோதி மேலான பாதமென்றே பேசி
நில்லே.

மேவியதோர் சற்குருவின் பாதந் தன்னை மெய்ஞ்ஞான மென்றதனை மேவக் கொண்டு 1
ஆவியுடல் காயமெல்லா மறிந்து பார்த்தே அத்தனார் வடிவமென்றே அறிந்து கொண்டு
பாலனையு ளாலவெல்லாம் விட்டு நீங்கிப் பகலிரவு மற்றிடத்தே கருத்தை வைத்துச்
சிவனையுஞ் சிவந்தனையும் ஒன்றாய்த் தானே திருமூலர் பாதமொன்றி திடமாய்க் காணே.



## நூல் இருபது

# சுப்பிரமணியர் ஞானம்

காப்பு:

ஒழியாத கழுமுனையி லொடுங்கி நல்ல உற்றநல வாசிசிவ யோகத் தேகி
வழியான துறைபறிந்து மவுனங் கொண்டு மகத்தான அண்டவரை முடிமேற் சென்று
தெளிவான ஓங்கார வடிவேல் கொண்டு தெளிந்துமன் அறிவாலே தன்னைக் கண்டு
வெளியான பரவெளியில் வாச மாகி வேதாந்த சத்திசிவ ஆதி காப்பே.

நூல்:

ஆதியிலே பராபரத்திற் பிறந்த சத்தம் அருவுருவாய் நின்றபர சிவமுமாகிச் 1
சோதியென்ற சிவனிடமாய்ச் சத்தி பாகித் தொல்லுலகில் எழுவகை யோர் தோற்றமாகி.
நீதியென்ற அறிவதனால் தானாய் நின்று நிறைந்தபரி பூரணமீட் களமு மாகிச்
சாதியென்ற சத்திசிவ மருள்தன் னாலே சண்முகனுங் கண தியுந் தாமுண் டாச்சே
உண்டான சத்திசிவம் ஏக மாகி உளங்கனிந்து பூரணமாய் நிற்கும் போது
குண்டான் மாங்கனியைக் கையில் வாங்கிக் குமரனுடன் கணபதியைக் குணமாய்ப் பார்த்து

'நன்ருகக் கிரிவலமாய் வந்த பேர்க்கு நல்லகனி தானீவோம் என்று
சொன்னர்;
பன்ருன கனியறிந்து குமரன் ருனும் பாய்ந்துமயி லேறிகிரி
வலஞ்சென்ருனே.

சென்றபின்பு கணபதியும் ஆலோ சித்துத் தீர்க்கமுள்ள மேருகிரி 3
நீர்தா மென்று
கண்டவுடன் சிவனுமையாள் பாதந் தன்னைக் கருத்துடனே சுற்றிவந்து
கனியை வாங்கிக்
கொண்டந்த சிவனுமையைத் தியானஞ் செய்து குறியறிந்து நெறி
தமக்குள் திருவைப் போற்றித்
தின்றுருசி கண்டறிந்து நிற்கும் போது தீர்க்கமுள்ள கணபதியை
வாவென் ருரே.

வாவென்றே எடுத்தணைத்தங் கருட்பாலீந்து, 'மகத்தான ஐவருக்கும் 4
பீடமாகி
ஆவென்று மூலமதற் கரசாய் நின்றே ஐந்தெழுத்திற் குபிரான ஆதி யாகிக்
கூவென்ற சத்துசித்த சுத்த மாகிக் குவிந்தெழுந்த வாதிகுரு தேசி யாகிப்
பூவென்ற வாயிரத்தெதன் மலருக் குள்ளே பொருந்திமன அறிவாலே
யிருந்து வாழே.'

இருந்துவா ழென்றுரைத்த வேளை தன்னில் ஏகாந்த மயில்வீர னெதிரில் 5
வந்தே
அருந்தவமாய் நின்றநிலை தன்னைப் பார்த்தே, 'அருமையுள்ள கண்மணியே
வா' வென் றேதான்
வருந்தியே மாங்கனியொன் றீந்து, நல்ல மகத்தான அண்டரண்ட
வரைகள் சுற்றித்
திருந்தியே தீர்க்காயுள் பெற்று வாழ்ந்து தீர்க்கமுடன் மலைக்கரசா
யிருந்து வாழே,

வாழென்று சொன்னவுடன் மயில்வீ ரன்தான் மகத்தான சிவசத்திபத 6
மேற்கொண்டே
ஆவென்று மயிலேறிக் கயிலா சத்தை ஆவலுடன் சுற்றிவரும் போதி
லேதான்
சூழென்றே இமயகிரி வடபா கத்திற் சுத்தசித்த மானதபோ தனர்கள்
கண்டு
தாள்பணிந்து வணக்கமதாய் நிற்கும் போது தபோதனர்கள் ரிடிகளுமே
தாம்வந் தாரே.

வந்தவரைத் தான்பார்த்து வரையில் நிற்க மகத்தான சற்குருவென் 7
றடிபணிந்தே
'இந்தமலைச் சாரலிலே வெகுநா ளாக இன்பமுடன்' தவஞ்செய்து
வாழ்ந்தோமையா!
அந்தரமாய் ராட்சதர்கள் அண்டி வந்தே அலங்கோலஞ் செய்துமே
துரத்துகின்ருர்!
சுந்தரமாயிருந்து 'தவஞ் சாவாய்!' என்று சுத்தசித்த மாய்த்தவத்தைத்
தொடங்கி ருரே.

தொடங்கிமன மடங்கிநிலை தன்னைக் காத்துச் சுத்தமுடன் நின்றுவிளை
யாடும் போதில் 8
அடங்கிமன மடங்காத அசுரர் தாமும் அஞ்சாமல் அழும்புசெய்யு
மகத்தைப் பார்த்துத்
திடங்கொண்டு மயிலேறிச் செவ்வேல் கொண்டு சிவந்துவரும்
அசுரர்களை மாள வென்று
படங்குவித்து வேல்முனையைத் தியானம் பண்ணிப் பாயவிட அசுரர்களை
பறந்து போச்சே.

பறந்துபோய்ப் பலவிதமாய் ரூபங் கொண்டு பந்திபந்தி யாய்அசுரர் 9
பறந்து வந்தார்;
சிறந்துவந்த சேனைகளை நன்றாய்ப் பார்த்துத் தீர்க்கமுள்ள மயிலேறித்
தெளிந்து நின்றே
அறந்தழைக்க வேணுமென்று தூல சூட்சம் அருபமெனுங் காரணமாய்
ரூபங் கொண்டு
நிரந்தரமாய் வந்த பொலா அசுரர் தம்மை நிர்த்தூளி செய்துதவம்
நிலைகொண்டானே.

நிலைகொண்டு நின்றசெயங் கொண்டு சிந்தை நேர்மையுடன் தவஞ்செய்யு
முனிவர் கண்டு 10
கலைகொண்டு மனந்தெளிந்து மகிழ்ச்சி யாகிக் கானமயில் வீரனடி
கருதிப் போற்றித்
தலைகொண்டு தாள்பணிந்தே அருட்கண் பெற்றுத் தபோதனரும்
ரிடிகளுமே தாம் பணிந்து
சிலைகொண்டு நின்றவடி வேலன் தன்னைத் தெரிசித்தே அவரவர்கள்
பதிசென்றாரே.

பதிதேடி யவரர்கள் செல்லும் போது பத்தியுள்ள அகத்தியமா முனிவன்
வந்து 1
'விதியறிந்தே அசுரர்களை மாள வென்று வெற்றியுள்ள வடிவேலைத்
தியானம் பண்ணிக்
கெதியறிந்து தூலமுடன் சூட்சமாகிக் கிருபையுள்ள காரணமாம் ரூபங்
கொண்டு
சதியறிந்து சங்காரஞ் செய்தா யையா! சண்முகமே! என்குருவே! சரணந்
தானே

சரணமென்ற அகத்தியமா முனியைப் பார்த்துச் சண்முகமாய் நின்றவடி
வேலன் தானும் 2
திரணமதாய்த் தானறிந்து, 'நீயார்?' என்னத் 'திருவடியைப்
பூசை செய்யுஞ் சேயன்,' என்றார்;
'கரணமந்தக் கரணமதாய் வந்த தேதோ? கருணையுடன் வா,' என்று
கடாட்சம் நல்கித்
தருணமறிந் துதவுவது தருமமென்று 'சங்கையுடன் தான்வந்த
வகைசொல்வாயே.'

சொல்லென்று மயில்வீரன் கேட்க வந்த சோதிமய மானஅகத் தியர்
தாம் சொல்வார்; 3
,சல்லென்று வந்தபொலா அசுரர் தம்மைச் சண்முகமாய் நின்றவடி
வேலுங்கொண்டு

செல்லென்று சங்காரஞ் செய்தா யந்தத் திருவுருவாய் நின்றகா ரணத்தைக்
காட்டி
உள்ளென்ற ஆகார தூல சூட்சம் உண்மையென்றகாரணமு ரைசெய்வாயே.

உரைசெய்வா யென்றுசொன்ன வ்றுதி கேட்டே உண்மையென்று 4
மயில்வீரன் உறுதி யாகி
நிரைசெய்தே எக்கியங்கள் தாமுண் டாக்கி நேமமுடன் அகத்தியமா
முனிவா' என்றே
அரையறிந்தே அருகிருத்தி ஓம குண்டம் ஆதியென்ற மந்திரத்தி லங்கி
யாக்கிப்
புரையறிந்து மந்திரங்கள் செபிக்கும்போது பூரணமாய்க் கும்பமதில்
தானுண் டாச்சே.

உண்டான பூரணமாய்க் கும்பம் வாங்கி உண்மையென்ற மாமுனிக்கே
அபிஷேகித்து 5
நன்றான நவக்கிரகமொன்ப துக்கும் நலமான அனுக்கிரக நிலையுங் காட்டிக்
குன்றான அனுக்கிர வாசல் காணக் குவிந்துமன அறிவதனால் விண்ணென்
றானே

விண்ணென்று விசையுடனே முனைநா வுள்ளே மெய்ஞ்ஞான வாசலது
திறக்கு மப்போ 6
கன்னென்ற கபாடவழிக் குள்ளே நின்று கலையறிந்து வாசியினால் கமலம்
நோக்கி
உன்னென்று மூலமதில் வங்கென் பூரி உறுதியென்ற சமாதியிலே சிங்கென்
ரேசி
என்றென்று மிப்படியே கொண்டு நின்றால் ஏகமுள்ள தசதீட்சை யுண்மை
கேளே.

உண்மையுடன் சுழுமுனையில் விண்ணென் றானி உறுதியுடன் ஆராத
தீட்சை கேளு; 7
நன்மையுடன் ஓங்-ரீங்-அங்-உங்கென் றோதி நாட்டமுடன் பதினாறும்
உருவே செய்தால்
தண்மையுடன் கணபதியும் பிரகா சிப்பார் தானமென்ற சுழுமுனையில்
தன்னைப் பார்த்து
நுண்மையுடன் ஓம்நமசி வாய மென்றால் நோக்குமுன்னே பிரமந்தரி
சனமுமாமே.

ஆமப்பா நமசிவா யநம வென்றே அதன்பின்வய நமசிவய நமசி யென்று 8
தாமப்பா தலைகாலால் மாறிக் கொண்டு சங்கையுடன் கால்தலையால்
மாறிக் கொள்ளு;
ஆமப்பா நமசிவய சிவயநம வென்றும் அதன்பிறகு சிவயநம சிவநம
வென்றும்;

ஓமப்பா நமசிவய வென்று மாற உண்மையென்ற ஆதாரஞ் சித்தி யாமே.

சித்தமுட னைந்தெழுத்தை மைந்தா! நீயும் செம்மையுடன் தலைகால் கால் தலையாய் மாறச் 9
சுத்தமுடன் ஆதாரதே வதைகள் வந்து சொன்னபடி யிருதயத்தில் சுகமாய் நின்று
பத்தியுட னிப்படியே தியானம் பண்ணிப் பதிவாக விபூதியையுந் தளமாய்ப் பூசி
நித்தியமு மிப்படியே செய்து நின்றால் நிலையில்லாத் தூலசடம் நிலைக்கும் பாரே.

பாரப்பா கலையறிந்து நிலையில் நின்று பத்தியுட னாதார சூட்சங் கேளு: 20
நேரப்பா ஓம்கிலிஅங் கென்றென் றோது நிலையறிந்தே அங்கிலி நங் கென்றென் றோது
காரப்பா வங்கிலிசிங் கென்றேன் றோது கருணையுடன் சிங்கிலிவங் கென்றென்றோது
சாரப்பா வங்கிலியங் கென்றென் றோது சலுதியாம் அங்கிலிமங் கென்றேன் றோதே.

ஓதியபின் வங்கிலிசிங் கென்றென் றோது உண்மையுடன் அங்கிலிசிங் கென்றேன் றோது 1
நீதியுடன் அங்கிலிமங் கென்றென் றோது நிலையறிந்து மங்கிலிரீங் கென்றென் றோதே
ஆதியுடன் ரீங்கிலிஓ மென்றென்றோது அப்பனே தலைகாலாய் மாறி யோது
சோதியுடன் சுழுமுனையில் மனக்கண் சார்த்திச் சுத்தமுடன் விபூதியைநீ தரித்துக் கொள்ளே.

கொள்ளப்பா விபூதியைநீ தரித்துக் கொண்டு கூர்மையுடன் கால்தலையாய் மாறிக் கொண்டு 2
சொல்லப்பா ஓங்கிலிரீங் கென்றென் றோது சுத்தமுடன் ரீங்கிலிமங் கென்றென் றோது
வில்லப்பா மங்கிலிசிங் கென்றென் றோது விவரமதாய்த் தோற்றுமடா செய்கை யாவும்;
உள்ளப்பா மங்கிலிங் கென்றென் றோது உத்தமனே சிங்கிலிமங் கென்றென் றோதே

ஓதியபின் வங்கிலிசிங் கென்றேன் றோது வுத்தமனே சிங்கிலிமங் கென்றென் றோது 3
நீதியுடன் மங்கிலிநங் கென்றென் றோது நிலையறிந்து நங்கிலியங் கென்றென் றோதே
சோதியுடன் மங்கிலிஓ மென்றென் றோது சுத்தமுடன் ஈராறு தவமுஞ் சித்தி
வீதியென்ற ஆதார மேலா தாரம் விண்ணடங்கிக் கண்ணடங்கி மேவி நில்லே.

நில்லப்பா கண்ணடங்கி விண்ணென் றாணி நிலையறிந்து பிராணயஞ் செய்தால் மைந்தா! 4
கல்லப்பா தேகமது காலனேதூர் காலனென்னும் வியாதியெல்லாங் காணு தோடும்
உள்ளப்பா வாசியது முறதி யாகும் ஓதுகின்ற மந்திரமுஞ் சித்தி யாகும்:
சொல்லப்பா தூலமுடன் சூட்சஞ் சொன்னேன் துலங்கிநின்ற தூலத்தின் கருக்கன் கேளே:

சுருக்கமுடன் ஆதார தூல சூட்சஞ் சொன்னபடி பிராணயஞ் செய்து
கொண்டே 5.
உருக்கமுடன் செபதபங்கள் பூசையாலும் உண்மையா யுனக்குள்ளே
கண்டு தேறிப்
பெருக்கமுடன் தானிருந்து சிவான் மாவே பிரணவமாய் நின்றபரம்
நிரு மாகி
நெருங்கியந்த அண்டவெளிக் குள்ளே சென்று நேமமுடன் பிராணயம்
நினைவாய்ச் செய்யே.

செய்யப்பா பிராணயம் நினைவாய்ச் செய்யச் சிவசிவா கருமானஞ் செப்பக்
கேளு; 6
பொய்யப்பா போகாது பிராண வாயு பொருந்திநின்று விளையாடும்
புதுமை கேளு;
பையப்பா சுழுமுனையில் விண்ணென் றாணிப் பதியாக மூலமதில்
வங்கென் பூரி
மெய்யப்பா சுழுனையில்சிங் கென்று ரேசி வேகமுடன் கண்டம் அங்
கென்று கும்பே.

அங்கென்று கண்டமதில் கும்பித் தேதான் அசையாது வாசிதிரு
வாசிதானும் 7
செங்கமல மானசுழி பிண்டத் தேறும் திரும்பியந்தப் பிண்டமதில்
சென்று வாழும்
சங்கையுடன் தன்னகத்தில் தானே தானாய்த் தன்மையுடன் நின்றுவிளை
யாடும் வாசி
மங்களமாய்ச் சுழுனையிலே விண்ணென் றாணி மார்க்கமுடன் இகபரமா
யிருந்து காணே.

காணவே சத்தியவள் தியானம் கேளு கருவாகச் சொல்லுகிறேன்
கருத்தாய்க் கேளு; 8
பூணவே யுரைத்திடுவாய் அங்சிங் கென்று புத்தியுடன் பதினாறு வுருவே
செய்து
தோணவே விபூதி தூ ளிதமே பூசிச் சுத்தமுடன் பராசத்தி நீர்த்தஞ்
செய்வாள்;
ஊனவே யிப்படியே தியானம் பண்ணி உண்மையுடன் பிராணய வுறுதி
பாரே

உறுதியுள்ள அகத்தியமா முனியே! கேளாய்; உண்மையுள்ள
சத்தியை நீ தியானம் பண்ணிப் 9.
பருதிமதி சுடரொளிபோல பஞ்ச கர்த்தாள் பதியறிந்து பிராணயம்
பதிவாய்ச் செய்து
சுருதிபொரு ளானதொரு பொதிகை மேவிச் சுகசிவ பிராணகலை
வாசியேறிக்
கருதிமன மொன்றாகிச் சுழியில் நின்று கலக்கமற்ற அமிர்தபானங் கைக்
கொள்ளே!

பானமென்ற மதியமிர்த பானங் கொள்ளப் பரபிரம மானசுழி வழியுங்
காட்டித் 80
தானமென்ற ஆதார மேலா தாரந் தனையறியும் பிராணயச் சங்கை
சொல்லி
ஞானமென்ற நிலைகாட்டி மூலங்காட்டி நாதாந்த ஆறுமுக நிலையங்
காட்டி
மோனமென்ற வடிவேலின் முனையுங் காட்டி முனையறிந்து கலைநிறுத்தி
முடிமேல் நில்லே.

நில்லப்பா சதுரகிரி முடியிற் சென்று நிலையான பொதிகையிலே
வாசமாகி 81
உள்ளப்பா தானாகி விண்ணென் றாணி உன்மனத்தில் நினைத்ததொரு
மந்த்ரந் தன்னைச்
சொல்லப்பா தியானமுடன் செபிக்கும் போது சுத்தமுடன் சித்திக்கும்
சும்மா நின்று
செல்லப்பா அட்டாங்க யோகத் தேகிச் சிவாயகுரு பாதமதில் தெளிவாய்
நில்லே.

தெளிவான தெளிவதனால் தன்னைக் கண்டு தீர்க்கமுட னிருந்துதவஞ்
செய்ய வென்றும் 82
அழியாத அனுக்கிரக வரமு மீந்தே ஆர்வமுடன் மயில்வீரன் வடிவேல்
கொண்டே
அழியாத அண்டவரை முடிமேற் சென்றே அட்டகிரி பர்வதத்திற்கு
அரசுமாகி
ஒழிவாகி அண்டவெளி யெங்குந் தானாய் ஓங்கார வடிவேலை யுவந்தான்
முற்றே



நூல் : இருபத்தொன்று

# வால்மீகர்

## சூத்திர ஞானம்

இருள் வெளியாய் நின்றசிவ பாதம் போற்றி
எழுத்ததனின் விவரத்தை விரித்துச் சொல்வேன்;
அருவுருவாய் நின்றது வேயெழுத்து தாகும்
ஆதியந்தம் அண்டபிண்ட மதுவே யாகும்;

திருவுருவாய் ரவிமதியாய் நின்ற ரூபம்
சிவசத்தி திருமாலின் ரூப மாகும்;
வருமுருவே சிவசத்தி வடிவ மாகும்;
வந்ததிலும் போனதிலும் மனத்தை வையே.

வந்ததுவும் போனதுவும் வாசி யாகும்; 2
வானில்வரும் ரவிமதியும் வாசியாகும்;
சிந்தைதெளிந் திருப்பவனு ரவனே சித்தன்;
செகமெலாஞ் சிவமென்றே யறிந்தோன் சித்தன்
நந்தியென்ற வாகனமே தூல தேகம்;
நான்முகனே கண்மூக்குச் செவிநாகாகும்;
தந்திமுகன் சிவசத்தி திருமூச் சாகும்;
தந்தைதாய் ரவிமதியென் றறிந்து கொள்ளே.

அறிந்து கொள்ளு பூரகமே சரியை மார்க்கம் 3
அடங்குகின்ற கும்பகமே கிரியை மார்க்கம்;
பிரிந்துவரும் ரேசகமே யோக மார்க்கம்;
பிசகாமல் நின்றதுவே ஞான மார்க்கம்;
மறிந்துடலிற் புகுகின்ற பிராண வாயு
மகத்தான சிவசத்தி அடங்கும் வீடு:
சிறந்தமனத் தெளிவாகிச் சேர்ந்தோன் சித்தன்
சிவசிவா அவனவனென் றுரைக்க லாமே

ஆமப்பா வுலகத்தில் பெருநூல் பார்த்தோர் 4
அவரவர் கண்டதையெல்லாம் சரிதை யென்பார்;
ஓமப்பா கல்செம்பைத் தெய்வ மன்றே
உருகுவார் பூசிப்பார் கிரியை யென்பார்
வாமப்பா யோகமென்று கனிகாய் தின்று
வாய்பேசா வூமையைப்போல் திரிகுவார்கள்;
காமப்பா ஞானமென விண்டு மேலும்
காக்கைபித்தன மிருகம்போல் சுற்றுவாரே.

சுற்றுவார் பெருநூலைப் பார்த்துப் பார்த்துத் 5
தாடிப்பா ருலகத்தில் சிற்சில் லோர்கள்!
தெற்றுவா ரவர்பிழைக்க அனேக வேடம்
தேகத்தி லணிந்துகொண்டு திரிகு வார்கள்;
பற்றுவார் குருக்களென்பார் சீட ரென்பார்
பையவே தீட்சைவைப்பார் தீமை யென்பார்.
கத்துவார் திரிமூர்த்தி தாமே யென்று
காரணத்தை யறியாத கசடர் தானே:

தானென்ற வுலகத்தில் சிற்சில் லோர்கள் 6
சடைபுலித்தோல் காசாயம் தாவடம் பூண்டு
ஊனென்ற வுடம்பெல்லாம் சாம்பல் பூசி
உலகத்தில் யோகியென்பார் ஞானியென்பார்;
தேனென்ற சிவபூசை தீட்சை யென்பார்;
திருமாலைக் கண்ணாலே கண்டோ மென்பார்;
கானென்ற காட்டுக்கு ளலைவார் கோடி
காரணத்தை யறியாமல் கதறுவாரே.

கதறுகின்ற பேர்களையா கோடா கோடி; 7
காரணத்தைக் கண்டவர்கள் கொஞ்சம் கொஞ்சம்
பதறுகின்ற பேர்களெல்லாம் பராப ரத்தைப்
பற்றிநின்று பார்த்தவர்கள் சுருக்க மப்பா!
உதறுகின்ற பேர்களெல்லா முலகத் துள்ளே
உதித்தகலை தம்முள்ளே யறிய மாட்டார்;
சிதறுகின்ற பேர்களைப்போல் சிதறி டாமல்
சிவசத்தி வரும்போதே தன்னில்நில்லே.

நில்லென்ற பெரியோர்கள் பாடை யாலே 8
நீடுலகம் தன்னுள்ளே நாலுவேதம்
வல்லமையாய்ச் சாத்திரங்க ளிருமூன் றாக
வபிறுபிழை புராணங்கள் பதினெட் டாகக்
கல்லுகளைக் கரைப்பதுபோல் வேதாந் தங்கள்
கட்டினு ரவரவர்கள் பாடை யாலே;
தொல்லுலகில் நாற்சாதி யனேகஞ் சாதி
தொடுத்தார்க ளவரவர்கள் பிழைக்கத்தானே.

தானென்ற வுலகத்தி லில்லா விட்டால் 9
தன்பெருமை யாலழிந்து சகத்தில் வீழ்வார்;
ஊனென்ற வுடம்பெடுத்தா லெல்லாம் வேணும்;
உலகத்தி லவரவர்கள் பாடை வேணும்;
மானென்ற சிவகாமி சிவனுங் கூடி
மாமுனிவர் முகம் பார்த்து மறைநூல் சொன்னர்;
தேனென்ற சிவகாமி யருளினாலே
திரட்டினுர் வெகுகோடி தேச பாடை.

தேசத்தின் பாடைதனை யறிந்தி டாமல் 10
தெளிவாகத் தாமுரைப்பார் பாடை பார்த்தோர்;
ஆசிப்பா ருலகத்தில் கண்டதெல்லாம்;
ஆச்சரியந் தனைக்கண்டு மறந்து போவார்;
வாசிதனை யறியாத சண்டி மாண்பர்
வார்த்தையினல் மருட்டிவைப்பார் வகையி லாமல்:
நாசிநுனி யதனடுவில் சிவத்தைக் கண்டோர்
நான்முகனும் திருமாலும் சிவனுந் தாமே.

சிவசிவா பதினெண்பேர் பாடற் கெல்லாம் 11
திறவுகோல் வால்மீகன் பதினுருகும்;
சிவம்பெத்த சித்தரெல்லா மென் னூல் பார்த்துச்
சிவனோடே கோள் சொன்னுர் சினந்தான் நாதன்:
அவமாகிப் போகாமல் சிவனுத் தார
அருளினல் திறந்துசொன் னேன் உலகுக் காக;
நவமான நவக்கிரகந் தன்னுள் ளேயே
நாக்குவாய் செவிமூக்கு மத்திக் கப்பால்.

நாக்குவாய் செவிமூக்கு மத்திச் கப்பால் 12
நடுவி [illegible]
தாக்குவாய் அங்கென்றே அதிலே மூட்டுத்
தாயாரைப் பூசித்து வேதம் ஓத:

வாக்குவாய் அசையாமல் மவுனங் கொண்டு
வாசிவரு மிடத்தில் மனம் வைத்துக் காத்து
நீக்குவாய் வாசியொடு மனந்தான் புக்கு
நிலைவதனி லடங்கிவரும் வரிசை காணே.

13

காணரிதே யெவராலு மிருசு வாசம்:
காண்பவனே சிவசித்த னவனே யாகும்:
பூணரிதிவ் வுலகத்தி லிந்நூல் கிடடில்
பூலோக சித்ரனென வுரைக்க லாகும்;
காணரிது சிவசத்தி திருமூச் சாகும்:
காட்டாதே மூடருக்கே யிந்நூல் தன்னை:
தோணரிது விழிமயக்கம் சும்மாப்போமே
சொல்லரிய சூட்சுமத்தைச் சொன்னே னப்பா!

14

சூட்சமிந்நூல் சொல்லுகிறேன் வாசி காண:
சூட்சாதி சூட்சத்தைத் துறக்கப் போகா;
சாட்சியில்லை துணையில்லை கேள்வி யில்லை:
சந்தேக மொன்றுமில்லை விழியைக் காணக்
காட்சியென்ன கற்பகத்தில் வசிக்கு மாப்போல்
காரணத்தைக் கண்ணாலே கண்டி ருக்க
ஆட்சிதரு முமையாளப் படியே கண்டேன்:
ஆனந்தத் திருக்கூத்தின் நடக்கை காப்பே.

15

காப்பதற்குப் பத்தியத்தைச் சொல்லக் கேளு:
காய்கனிகள் பஞ்சரசம் பரமான் னங்கள்
ஏற்கையுட னுண்டுகொண்டு சிவத்தைக் கர்த்தே
என்மகனே சித்தருடைக் குருநூல் பாராய்:
ஆத்துமத்துக் கழிவில்லா திருக்க வேணும்:
அவரவர்கள் நித்யகர்மம் நடக்க வேணும்;
தீர்க்கமுட னின்றவர்க்கு வாசி சித்தி
சிறப்புடனே பதினாறும் பலிக்குந் தானே.

16

தானவனா யிருக்கவென்றால் வாசி வேணும்:
தனக்குள்ளே தானிற்க இடமும் வேணும்:
வானவனாய் நின்றவர் கட் கெல்லாஞ் சித்தி
வானுக்குள் மனமிருக்க மதிபோல் காணும்.
தேனவனாஞ் சித்தருக்குத் தெவட்டா மூலி
சிரசடபா வுடலுக்குப் பதியே யாகும்
கோவவனா யிருக்கவென்ற குறியைச் சொன்னேன்
குவலயத்தில் பதினாறுங் குறுகத் தானே.

நூல் : இருபத்திரண்டு

# நந்தீஸ்வரர்

## பூஜாவிதி



எண்சீர் விருத்தம்

கேளப்பா ஓம்ஸ்ரீ கங்கென்று ந்தான்
கெடியாக மூலத்தில் கும்பித் தக்கால்
வாளப்பா பழந்தெங்கவல் வடைகள் தோசை
வளமாவிக் கினர்க்குப் புட்ப பரிம ளங்கள்
நாளப்பா மனமடங்கித் தோத்ரஞ் செய்து
நலமான விக்கினரைப் பூசித் தக்கால்
ஆளப்பா ஆசீர்வா தங்க ளீவார்
அப்பனே விக்கினரைப் பூசை செய்யே! 1

செய்யப்பா விக்கினர்தம் பூசை சொன்னேன்: 2
செயமான சண்முகவன் பூசை கேளு:
வையப்பா சங்வம்மங் சரவ ணய
வளமாக அனாகதத்தில் பூசை பண்ணு;
வையப்பா புட்பரி மளங்கள் கொண்டு
மைந்தனே தூபநை வேத்யங் காட்டி;
கையப்பா கனகசபை யதிலே பூசி:
கண்மணியே சண்முகத்தை வரங்கள் கேளே.

காணப்பா ஆசார பூசை சொன்னேன்; 3
கண்மணியே சிவபூசை சொல்லக் கேளு:
வாணப்பா நமசிவய கிம்ஆம் என்று
வளமாகப் பூரணத்தி லிருத்திக் கொண்டே
ஆனப்பா தூபதீப நைவேத் யத்தோ
டப்பனே சதாசிவத்தைத் தோத்தி ரஞ்செய்;
மாணப்பா நீகேட்...
மைந்தனே சிவத்தினுடைய மகிமை தானே.

4
தானான சிவத்தினுடைப் பூசை சொன்னேன்;
 தன்மையுள்ள சக்தியுடைப் பூசை கேளு:
வானான இம்மென்றுங் கும்ப கத்தில்
 வட்டிவள மாகவொரு மனமாய் நின்று
ஆனான கதம்பகத் தூரி புட்பம்
 அப்பனே பாக்பழங்கள் வத்து வைத்து
மானான தேவியைத்தான் தோத்திரித்து
 மைந்தனே சாட்டாங்கச் சரணம் பண்ணே.

5
பண்ணப்பா என்னவம்மா வென்று கேளு:
 பலவிதமாய் நீதொடுத்த வெல்லாம் மெய்யாம்;
அண்ணப்பா வென்றவளே சொன்னாற் போதும்:
 அப்பனே யட்சரத்தில் பலிக்கும் பாரு.
வன்னப்பா சத்தியுடைப் பூசை சொன்னேன்:
 வளமான சிவத்தினுடைப் பூசை சொன்னேன்:
கண்ணப்பா விண்ணுபூசை சொல்லக் கேளு:
 கண்மணியே மங நங்சிங் கென்றே ஏத்தே.

6
ஏத்தப்பா புட்பரி மளங்கள் சார்த்தி
 என் மகனே கதம்பகத் தூரி சார்த்து;
வாத்தப்பா சங்கீதத் துடனே பூசி
 வளமான விண்ணுவுக்குப் பூசி பூசி;
போற்றப்பா மனமடங்கிப் பத்தியாகப்
 போற்றவே விண்ணுவவர் கேட்ட தீவார்;
ஆற்றப்பா விட்டுணுவின் பூசை சொன்னேன்:
 அகார கெசமுகவன் பூசை கேளே;

## இரேசக பூசை ;



பாரப்பா ரேசகத்தின் பூசை கேளு:
 பண்பான ரேசகத்தின் ஆமென் றேத்தி
ஆரப்பா நைவேத்யங் கும்ப கஞ்செய்
 தப்பனே ரேசகத்தில் மனத்தை நாட்டு;
வாரப்பா மனமதுரே சகமே யாச்சு;
 வளமான ரேசகந்தான் வசிய மாச்சு;
நாரப்பா ரேசகத்தின் பூசை சொன்னேன்;
 நலமான பூரகத்தின் பூசை கேளே:

## பூரக பூசை !

கேளப்பா மணிபூர கத்தில் மைந்தா!
 கெடியாக இம்மென் று கும்பித் தேத்து:
வாளப்பா வகையாக நின்று கொண்டு
 வளமான பூரகத்திற் உருத்ரம் பண்ணி
வாளப்பா வேண்டியவாம் வரங்கள் கேளு:
 வளமாக விண்ணுவர மீவார் பாரு:
ஆளப்பா பூரகத்தின் பூசை சொன்னேன்:
 அப்பனே கும்பகத்தின் பூசை யாமே.

கும்பக பூசை :

ஆமப்பா கும்பகத்துள் உம்மென் நாடி 9
அப்பனே மனத்தைக் கும் பகத்தில் வைத்து
வாமப்பா பூசைநை வேத்யஞ் செய்து
வளமான கும்பகத்தை மனத்தால் வேண்டிக்
காமப்பா கும்பகத்தை வரங்கள் கேளு.
கண்மணியே வேண்டுவர மீவா ரையா!
நாமப்பா சூரியன்றன் பூசை கேளு;
நலமாக மங்குசிங் கென்று சொல்லே.

சூரிய பூசை :

சொல்லப்பா சூரியகும் பகமே செய்து 10
சொற்பெரிய பூசைநை வேத்யஞ் செய்தே
அல்லப்பா சாட்டாங்க சரணஞ் செய்தே
அப்பனே தோத்திஞ்செய் கும்ப கத்தை;
மல்லப்பா அட்டசவு பாக்ய மீவார்:
அகத்தியர்தாம் கும்பகத்தில் வரங்க ளீவார்;
வல்லப்பா சூரியன்றன் பூசை சொன்னேன்;
வளமான சந்திரன்றன் பூசை கேளே;

சந்திர பூசை

கேளப்பா யங்குநங் கென்று கும்பி, 11
கெடியாகப் பால்பழம்பா பாசம் வைத்தே
ஆளப்பா தூபதீப நைவேத் யஞ்செய்
தப்பனே சந்திரனைத் தோத்தி ரித்து
வாளப்பா சோடச்சந் திரனில் நின்று
வளமான சந்திரனை வரங்கள் கேளு:
நாளப்பா வேணவர மீவாரையா!
நலமான சந்திரன்றன் மகிமை பாரே.

சனி பூசை

பாரப்பா சனிபூசை சொல்லக் கேளு; 12
பண்பான வங்கென்றஞ் சங்கென் றுந்தான்
நாரப்பா மேருவிலே குந்திக் கொண்டு
நலமாகத் தோத்தரித்துப் பூசை செய்நீ;
வாரப்பா தூபநை வேத்யத் தோடு
வளமாகத் தோத்திரித்துப் பானஞ் செய்து
ஆரப்பா வேணவரங் கேட்டுக் கொண்டே
அப்பனே யட்சணத்தி லீவார் காணே.



நூல் : இருபத்து மூன்று

# இராம தேவர்

## பூஜாவிதி

1

ஆதியென்ற மணிவிளக்கை அறிய வேணும்;
அகண்டபரி பூரணத்தைக் காண வேணும்;
சோதியென்ற துய்யவெளி மார்க்க மெல்லாஞ்
சுகம்பெறவே மனோன்மணியென் னுத்தாள் தன்னை
நீதியென்ற பரஞ்சோதி ஆயி பாதம்
நிற்குணத்தி னின்றநிலை யாருங் காணார்;
வேதியென்ற வேதாந்தத் துள்ளே நின்று
விளங்குவதும் பூசையிது வீண்போ காதே.

2

போகாமல் நின்றதோ ரையா நீதான்
பூரணத்தி னுனகலை ஐந்தும் பெற்றே
ஆகாம லானந்த வல்லி யாலே
அடிமுடியி னடுவாசி யாறுக் குள்ளே
வாகாமல் வாலையுடை மூலத் தாலே
வழிதோன்றும் மூன்றுமெழுத்தை யுரைக்க வேணும்;
சாகாமல் சாகுமடா இந்த மூலஞ்
சசிவட்டம் நடுக்கோணமுக் கோண மாமே.

3

முக்கோண மூசுழிதற் கோண மாகி
முதலான மூலமணி வாலை தன்னில்
நாற்கோண நாலுவரை நயந்து காக்க
நாயகியாள் பரஞ்சோதி நாட்ட முற்றுத்
தீக்கோணத் திக்குதிசை யிருந்த மாயம்
தெரிந்திடவே யுரைத்திட்டேன் விவர மாக;
தாக்கோண விட்டகுறை வந்த தென்றால்
தனியிருந்து பார்த்தவனே சித்த னாமே.

4

இத்தான மூன்றெத்துச் செயலாஞ் சோதி
சீரியவை யுங்கிலியும் சவ்வு மாகி
முத்தான லட்சவுரு செபிக்கச் சித்தி
முத்திடுமே யெதிரியென்ற பேய்கட் குந்தான்

வித்தான வித்தையடா மூட்டும் பாரு;
விரிவான முகக்கருவு மூன்று பேரு;
சத்தான அதன்கருவும் சிலையில் வைத்துச்
சதுரான விதிவிவர மறியக் கேளே:

கேளப்பா பலிகொடுத்துப் பூசை செய்து 5
கிருபையுள்ள வுருவேற்றித் திட்ட மாக
வாளப்பா சுடுகாட்டின் சாம்பல் தன்னில்
வளமாகப் புதைத்துவிடு நடுச்சா மத்தில்:
ஆளப்பா அடியற்று மரண மாகி
ஆண்டிருந்த தவசுநிலை தான்குலைந்து
காணப்பா கண்மணியே! வீழ்வான் பாவி!
கதைதெரியச் சொல்லுகிறே னின்னம் பாரே.

இன்னமின்னங் கண்மூன்சோ தனையு மாகும்; 6
ஈடேற வேணு மென்று லிதனிற் சூட்சம்
அன்னமின்னு அகற் கட்டை மேதவ தாரம்
அறிவுடைய மூலைசீவிச் சிங்கை யோதி
வன்னமின்னூர் பேர்சொல்லி நசிபென் றேதான்
வலுவான நூற்றெட்டு வுருவும் போடு;
சன்னமின்னு மரத்தடியி லிருந்து கொண்டு
சதிராக ஆணிகொண் டடித்தி டாயே.

அடித்தமுளை பிடுங்கிவைத் திறுக்கிப் போடு 7
ஆனந்த வுருக்குலைந்து பட்டுப் போகும்;
தொடுத்தமுதல் நாலாநாள் கண்டு தானுந்
தொகைமுடிந்து வாச்சுதடா விந்தப் போக்கு
விடுத்தபின்பு விடமேறிக் கருவிப் போகும்;
விரித்துரைத்தேன் பூட்டிதுவே வீண்போ காது.
தடுத்துவிடு நகரத்தி லடித்துப் பாரு
தட்டழிந்து உயிர்முதலாய்ச் சேத மாமே.

ஆமப்பா அடிகரிசிங் களத்தி லானல் 8
அதிசயங்காண் கண்டவர்க்கே யடைக்க லம்போம்
வீமப்பா வெளிதிறந்து சொன்னேன் பாரு;
விளையாட்டே யில்லையடா விந்தப் போக்கு;
சோமப்பா சுத்தியுடன் தலையும் மூழ்கிச்
சுருக்கெனவே தியானிப்பா யாத்தாள் மூலம்
தாமப்பா சத்தியமே சொன்னேன் பாரு;
தவறாது ராமனுடை வாக்யந் தானே.

தானென்ற மூலமுடன் சித்தி பண்ணு; 9
தனதான நூற்றெட்டுக் குள்ளே சித்தி
ஆனென்ற அண்டர்பதி யெட்டு மாடும்:
அறுபத்து நால்பூலி யெல்லா மாடும்:
கோனென்ற மகாடிசித்துக் கணத்தி லாடுங்
குணமாக ரேவதி நாட் செய்ய நன்று;
வானென்ற அட்டமியிற் செய்ய நன்று;
வளர்பிறையில் செய்தவனே யோகி யாமே.

யோகியா யாவதற்கே தனக்குச் சொன்னேன்; 10
ஓகோகோ மூன்னுரைத்த மூலத் தாலே
யோகிகளா யேகாந்த வல்லி யாட்கிங்
கேட்டிலே யெழுதினதால் எல்லாமாச்சு;
தாகிகளாயத் தாயடைய கிருபை யாலே
தவமாகும் மவமாகும் சுபமூண் டாகும்;
மோகிகளால் மூலபூசா விதிபத் தாலே
முத்திபெறச் சித்திவிளை பத்தமுற்றே.



நூல்: இருபத்து நான்கு

# கருவூரார்

## பூஜாவிதி

காப்பு

எண்சீர் விருத்தம்

தெளிவுதனில் தெளிவுதரு மருளுங் காணும்:
செணத்திலே சிவமயமுஞ் சேரத் தோணும்:
வழியதனில் நல்லவழி ஞானங் கூடும்;
மகத்தான வேதாந்தஞ் சித்தி காட்டும்:
ஒளிவுதனி லொளிவுதரு முறுதி சொல்வார்
உற்பனத்தி லுற்பனமா யுறுதி தோணும்;
வெளியதனில் வெளியாகி நாதத் துள்ளே
விளங்கிநின்ற வாலைப்பெண் ணுதி காப்பே!

நூல்:

ஆதியந்தம் வாலையவ ளிருந்த வீடே 1
ஆச்சரியம் மெத்த மெத்த அதுதான் பாரு:
சோதியந்த நடுவீடு பீட மாகிச்
சொகுசுபெற வீற்றிருந்தாள் துரைப்பெண் ணுத்தான்
வீதியந்த ஆறு தெரு அமர்ந்த வீதி
விளையாடி நின்றதிரு மாளி கண்டாய்;
பாதிமதி சூடியே யிருந்த சாமி
பத்துவய தாகுமிந்த வாமி தானே.

வாமியிவள் மர்மம் வைத்துப் பூசை பண்ண 2
மதியுனக்கு வேணுமடா அதிக மாக;
காமிவெகு சாமிசிவ காமி ரூபி
காணரிது சிறுபிள்ளை கன்னிகன்னி
ஆமிவளை யறிந்தவர்கள் சித்தர் சித்தர்
அறிந்தாலு மனமடக்க மறிய வேணும்;
நாமிவளைப் பூசை பண்ண நினைத்த வாறு
நாட்டிலே சொல்லவென்றால் நகைப்பார் காணே.

காணப்பா இவளுடைய கற்பு மெத்த 3
கண்டவர்க்குப் பெண்ணரசு நானே யென்பாள்;
ஊணப்பா அமிர் தமிவ ளூட்டி வைப்பாள்:
உள் வீட்டுக் குள்ளிருந்து மேலே யேறப்
பூணப்பா மனமுறைந்து வாவா வென்பாள்;
புத்திரனே யென்மகனே யென்று சொல்லி
வேணப்பா வேணதெல்லா ந் தருவே னென்பாள்;
வேதாந்த சூட்சமெலாம் விளங்குந் தானே.

தானென்ற வாலையிவள் ரூபங் காணச் 4
சமர்த்துண்டோ ஆண்பிள்ளை தானு முண்டோ?
பானென்ற வாமத்துக் குள்ளே யப்பா
பராபரையாள் பலகோடி விதமு மாடித்
தேனென்ற மொழிச்சியிவள் சித்தர்க் கெல்லாஞ்
சிறுபிள்ளை பத்துவய துள்ள தேவி;
ஊனென்ற வுடலுக்குள் நடுவு மாகி
உத்தமியாள் வீற்றிருந்த வுண்மை தானே.

உண்மையிவள் நாணமில்லா திருந்த வீடே 5
ஊருக்குள் நடுவீடே உற்றுப் பாரு;
செம்மையாய்க் கண்டவர் களுண்டோ அப்பா!
செகசால வித்தையிவ ளாடும் வித்தை;
உண்மையடா பஞ்சவண்ண மாகிநின்ற
உலகதனி லலைந்தவர்கள் கோடா கோடி
நின்மலமாய்க் கண்டவர்கள் சொல்லா ரப்பா!
நேசமுட னெனக்குரைத்த நிசங்கண் டேனே.

கண்டதொரு பூரணத்தின் மகிமை கேளு; 6
கால்மேலுந் தலைகீழும் நடுவு மாகி
அண்டரொடு முனிவர் களுங் கண்டு போற்ற
ஆதவனு மம்புலியு மதிலே நின்று
தொண்டுபண்ணு மவர்களிலே நாலு பேர்கள்
சுகம்பெறலா மென்றுசொன்ன வாசல் நாலு
கொண்டவர்கள் கண்டுவந்த தொண்ணூற் ருறு
கொள்கையெனக் காத்திருந்த குறிப்பைப் பாரே.

பார்த்தவர்கள் செய்தொழிலும் மானமும் வேருய்ப் 7
பலநூலைப் படித்தப்படு குழியில் வீழ்வார்;
ஏற்றபடி மனம்போனாற் புத்தி போச்சே;
ஏழைமதி போகாதே; என் தாய் பாதம்

போற்றுதற்கே ஐவரையு மனத்தி லொன்றுய்ப்
புத்திசித்த மோர்நிலையில் நிறுத்திவாசம்
பூத்தமல ரெடுத்துதிருப் பாதம் போற்றப்
பொறியைந்து கருவிகர ணுதி போமே.

8

போச்சுதடா மனமாய்கை வீறு போச்சு;
பொறியைந்து கருவிகர ணுதி போச்சு;
ஏச்சுதடா வென்றுமன மிறக்க லாச்சு;
எனக்கொருவ ரிணையில்லை யென்ற பேச்சு
வாய்ச்சுதடா மனமடங்க வங்கென்றோர் சொல்;
வாய்பேசா மவுனத்தை யதிலே சேர்க்கக்
காய்ச்சுதடா பூத்த மலர் கருத்தை யூன்று
கனியாகு மக்கனியைக் கண்டு கொள்ளே.

9

கொள்ளுதற்கிங் கின்னமொரு குறிப்பைக் கேளு;
கோடியிடி மின் முழங்குங் கண்ணை மூடு:
விள்ளுதற்கு மனமடங்காப் பூதங் காணும்;
விள்ளாதே யுள்ளபடி சிங்கென் றோர்சொல்
விள்ளவுமே யுபாயமதால் நடுவே நில்லு,
வேகமெல்லா மொடுங்குமடா சத்தம் போச்சு;
கள்ளரைப்போல் மயங்காதே மவுனத் தூன்று;
கண்ணிணையுந் திறக்காதே கருதிப் பாரே.

10

பாரேது புனலேது அனலு மேது?
பாங்கான காலேது? வெளியு மாகும்
நாரேது பூவேது வாசமேது?
நல்ல புட்பந்தானேது பூசை யேது?
ஊரேது பேரேது சினமு மேது?
ஓகோகோ அதிசயந்தா னென்ன சொல்வேன்!
ஆறேது குளமேது கோயிலேது?
ஆதிவத்தை யறிந்தனு லறிய லாமே.

11

ஆமெனவும் ஊமெனவு மிரண்டுங் கூட்டி
அப்பனே ஓமென்ற மூன்று மொன்றுய்
நாமெனவுந் தாமெனவு மொன்றே யாகும்;
நல்லவர்களறிவார்கள்; காமி காணுன்!
வாமம் வைத்துப் பூசைபண்ண இந்த மார்க்கம்
வந்தவர்க்குச் சத்திசிறு பிள்ளை வாலை
சோமநதிய முதமுண்ண வாவா வென்பாள்;
சுகமுனக்குப் பரமசுக மருள்செய் வாளே.

12

செய்குவாய் பூசையது செய்யும்போது
செய்குறிகள் தவறுமல் நடக்க வேண்டும்;
உய்குவாய் பெண்ணரவம் கடியா வண்ணம்;
ஊமை யென்ற நடுத்தீயை யதிகங் கொண்டால்

பைகுவாய் அரவுவிடம் பொசுங்கிப் போகும்;
பங்கமுனக் கில்லையடா அங்க மீதில்
ஐகுவா யுள்ளடங்கிப் பேச்சை விட்டே
அழைத்திடவே யஞ்சுமது கொஞ்சுங் காணே.

காணுத காட்சி யெல்லங் கண்ணிற் காணும் 13
கலங்காதே மெய்ம்மயக்கம் மெத்த வாகும்;
பூணுத பணிபூண்டு சிறு பெண்ணுகப்
போதமெனும் பொருள்பறிக்க வருவாள் கண்டாய்:
வாணுளை மடக்கியிவள் ரூபங் கண்டு
மயங்காதே மவுனத்தில் நில்லு நில்லு!
கோணுத முக்கோணக் குறியைப் பாரு;
கூசாதே கண் கூசுங் கூசுங் காணே.

கூச்சமற்றும் பார்க்கையிலே இருள்போல் மூடும்; 14
கொள்ளிகொண்டு கொளுத்தியதை வெளிச்சம் போடு;
வாய்ச் சமர்த்துப் பேசாதே மவுனத் தூன்று;
வாவாவென் றேநீயும் வருந்திக் கூவச்
சூட்சமது விருந்தவிடஞ் சொல்ல லாமோ?
சொல்லுதற்கு வாய்விட்டுச் சொல்ல லாமோ?
தாய்ச் சமர்த்துப் பாராதே தாயைப் போற்று;
சற்குருபோ லுற்பனத்தைத் தாய்சொல் வாளே.

சொல்வதற்கிங் கிவளையலால் சுகம்வே றுண்டோ? 15
சூட்சமெல்லா மிவளை விடச் சூட்ச முண்டோ?
நல்லவர்க்கு நடுவில்விளை யாடும் வல்லி
நாதவிந் தோங்கார நிலையுங் காட்டி
வல்லவர்க்கும் வல்லவளும் நானே யென்பாள்;
வரமவர்க்கு வேணதெல்லாம் வழங்கும் ரூபி:
புல்லருக்கிங் காயுதமும் புல்லே யாகும்.
புத்திகெட்ட லோபிகட்குப் புகலொ ணுதே.

புகலுவார் வேதமெல்லாம் வந்த தென்று 16
பொய்பேசிச் சாத்திரங்கள் மிகவுங் கற்றே
அகலுவார் பெண்ணுசை விட்டோ மென்றே:
அறிவுகெட்டே ஊர்தோறுஞ் சுற்றிச் சுற்றிச்
சகலமுமே வந்தவர்போல் வேடம் பூண்டு
சடைமுடியுங் காசாயந் தன்னைச் சாற்றி
இகலுமன மடங்காமல் நினைவு வேருய்
எண்ணமெலாம் பெண்ணுசை பூசை தானே.

பூசையது செய்வமென்று கூட்டங் கூடிப் 17
புத்திகெட்டுக் கைம்முறையின் போக்கை விட்டுப்
பாசையது மிகப்பேசிப் பாட்டும் பாடிப்
படிப்பார்கள் மந்திரத்தின் பயனைக் காணுர்:



ஆசையிலே பெண்ணாசை மயக்கத் தாலே
அங்கிருந்த வாமத்தைப் பங்கு போட்டுப்
பேசையிலே மனம்வேறாய் நினைப்பான் பாவி
புரட்டுருட்டாய் நினைவுதப்பிப் பேசு வானே.

பேச்சென்றால் வாய்ச்சமர்த்தாய்ப் பேசிப் பேசிப்
பின்னுமுன்னும் பாராமல் மதமே மீறி
நீச்சென்றும் நினைப்பென்றும் ஏதுங் காணார்
நிர்மூட ரனேகவித சாலங் கற்றே
ஆச்சென்றா லதனாலே வருவ தேதோ?
ஆத்தாளைப் பூசித்தோ னவனே சித்தன்.
மூச்சென்ன செய்யுமடா நரகிற் றள்ளும்:
மோசமது போகாதே மூக்கால் பாரே.

முக்காலும் பொருந்துமென்று சொன்ன போதே 19
மோசமில்லை சூட்சமது மொழிந்து கூடும்;
தக்காமற் போனபே ரனேக ருண்டு;
சமர்த்தறிந்தா லவன்வாமி யவனே சித்தன்;
எக்காலும் நடந்திரு நீ காலு முன்னி
இருந்தடங்கி யுள்ளிருந்து வெளியிற் போன
அக்காலைக் காணும லலைந்தே யோடி
அழிந்துகெட்டுப் போனவர்கள் அறிந்து கொள்ளே.

அறிந்தகுறி யடையாளங் காண வேண்டும்; 20
அக்குறியிற் சொக்கிமனந் தேற வேண்டும்;
அறிந்தவன்போ லடங்கிமன மிறக்க வேண்டும்;
அலகையது வழிபாதை அறிய வேண்டும்;
மறைந்தவரை நிறைந்தவ்ரை நீதான் காண
மயக்கத்தைக் கண்டுணையு மதிக்க வேண்டும்:
நிறைந்தமதி குறைந்தவகை அறிய வேண்டும்;
நிச்சயத்தை யறிவார்க்கு முத்தி தானே.

முத்தி தரு மென்றுமனம் புத்தி யற்று 21
மோசமது போகாதே பாசங் கையில்
சித்தமதில் சந்திரனை நிறுத்திக் கொண்டு
செந்தீயில் உன்தீயை நடுவில் வாங்கிச்
சுத்தியுடன் ஆதியந்த மனத்தில் வைத்துச்
சொல்லாத மந்திரத்தின் தீயை மூட்டி
நித்யமல ரர்ச்சனைசெய் பாதம் போற்றி
நீயுமதி மதியுமதி லதிக மாமே.

மதிபெருகுங் கதிபெருகும் வாதம் வாதம் 22
வருந்தாதே யந்தமுறை யாகா தப்பா!
மதிபெருகு மென்றுமிதே வாத மாகும்;
நிர்மூட ரறியாமல் வகாரம் பேசி

நதிகள்தனை யறியாமல் சலத்தில் மூழ்கி
நானேநா னென்றுவாய் மதங்கள் பேசி
உரியபொரு ளுள்ளதெல்லாஞ் சுட்டுச் சுட்டே
உட்பொருளைப் பாராம லழிந்திட் டாரே!

இட்டகுறி நாதவிந்து ரூபங் காண 23
இயலறியாச் சண்டாளர் சுட்டு மாய்வார்;
விட்டகுறை வந்ததென்றால் தானே யெய்தும்:
விதியில்லார்க் கெத்தனை தான் வருந்தி னாலும்
பட்டுமன மாய்தலல்லால் வேறொன் றில்லை;
பத்தியிலார்க் குரைத்து மனம் பாழ்போக்காதே;
திட்டமதாய்ப் பாணம் வைத்துத் தேவி பூசை
சீர்பெற்றார் பதினெட்டுச் சித்தர் தாமே.

எட்டிரண்டு மொன்றுமது வாலை யென்பார்: 24
இதுதானே பரிதிமதி சுழுனை யென்பார்:
ஒட்டிமுறிந் தெழுந்ததுமுக் கோண மென்பார்:
உதித்தெழுந்த மூன்றெழுத்தை யறியா ரையோ!
கொட்டுமொரு தேனுருவாய் நிற்கும் பாரு;
கூட்டமிட்டுப் பாராதே குறிகள் தோன்றும்:
சுட்டசுடு காடுமது வெளியு மாகும்;
சொல்லுவதற்கு வாய்விளங்காச் சூட்சந் தானே.

சூட்சமிவள் வாசமது நிலைத்த வீடு; 25
சொல்லுதற்கே எங்குமாய் நிறைந்த வீடு:
தேசமதில் போய்விளங்கு மிந்த வீடு,
சித்தாந்த சித்தரவர் தேடு வீடு:
ஓசைமணிப் பூரமதி லுதிக்கும் வீடு:
ஓகோகோ அதிசயங்க ளுள்ள வீடு:
ஆசுகவி மதுரமதுஞ்பொழியும் வீடு:
அவனருளுங் கூடிவிளை யாடும் வீடே.

வீடுமது தலைவாசல் அதுமேல் வாசல். 26
வெளியான சுழிக்கதவு அடைக்கும் வாசல்:
தேடுகிற மூவருமே வணங்கும் வாசல்;
திறமையான பன்னிருவர் காக்கும் வாசல்:
ஆடுகிற புலியாகி நின்ற வாசல்:
அரகர சிவசிவா வாசி வாசல்:
கூடுகிற முக்கோணப் பரங்க ளாகிக்
குறுகுமதி பெருகுமதி கூறொண் ணாதே.

ஒன்றாகி இரண்டாகி விளைவு மாகி 27
உத்தமியா ளுட்கருத்தை யறியப் போமோ?
[illegible] சொன்னாள்;
செத்தசவம் போலிருந்து செபிக்கச் சொன்னாள்;

பண்ணாத பணக் கோடிப் பண்ணி வைத்தாள்;
பார்த்திருந்து கழுத்தறுக்கப் பார்த்தாள் பாவி!
எண்ணாது மெண்ணிமனம் ஏங்கி நாளும்
எனக்கபயம் ஏதெனவே யெழுந்திட் டேனே.

28
எழுந்திட்ட திவள் பார்த்துத் தொடர்ந்து கூடி
என்னையுமே யிழுத்துமடி பிடித்துக் கொண்டு
கொழுந்துவிட்டு வளர்ந்தெரியும் அனலை மூட்டிக்
குடிகேடி சத்துருப்போல் கூச்சலிட்டாள்:
அழுதேனே முக்தியினி யந்த வூரில்
அரகரா துணையெனக்கே யாரு மில்லை;
எழுந்திட்டா ரெல்லோரும் மோடிப் போனார்;
என்ன செய்வேன் தனித்திருந்தே ஏங்கி னேனே!

29
ஏங்கினேன் ஈடழிந்தேன் விடும் அற்றேன்;
என்னைத்தான் கண்டவர்கள் சீசீ யென்னத்
தூங்கினேன் காலறிந்து மடக்க மாட்டேன்;
துணையெனக்கு யாருமில்லை சூழிச்சி யாக
வாங்கினேன் காலறிந்து மடக்க வேண்டும்;
வகையான வெனக்கொருத்தி யுறுதி சொன்னாள்;
தேங்கினேன் முன்னுவள் பின்னு மாகத்
திடமெனக்குச் சொன்னதிந்தத் தெளிவு தானே.

30
தெளிவதற்குச் சூட்சமிது தெளிவாய்ப் பாரு:
சிவனிருந்து விளையாடுந் தெருவைப் பாரு;
மொழிவதற்கிந் நாலைவிட வேறொன் றில்லை;
முன்னாதி யந்தமொடு நடுவுஞ் சொன்னோம்;
சுழியதற்குள் சுழியிருந்த சூட்சம் சொன்னோம்;
சொல்லாத மவுனமுதற் கருவுஞ் சொன்னோம்.
ஒளிபிறக்கு முறுதியிந்த வுறுதி சொன்னோம்
உற்பனமாய்ப் பார்த்தவர்கள் சித்தர் தாமே.





## நூல் : இருபத்து ஐந்து

### கைலாயக் கம்பளிச்

# சட்டைமுனி நாயனார்

## ஞானப் பாடல்கள்

### முன் ஞானம் நூறு

அகண்டபரி பூரணமாம் உமையாள் பாதம் 1
அப்புறத்தே நின்றதோர் ஐயர் பாதம்
புகன்றுநின்ற கணேசனொடு நாதாள் பாதம்
புகழ்பெரிய வாக்குடைய வாணி பாதம்
நீகன்றெனவே யென்னையாண்ட குருவின் பாதம்
நிறைநிறையாய்ச் சொரூபத்தில் நின்றோர் பாதம்
மூகன்றெனையீன் றெடுத்தசின் மயத்தின் பாதம்
மூவுலகு மெச்சுதற்குக் காப்புத் தானே.

தாங்கிநின்ற சரியையிலே நின்றுசடம் வீழில் 2
தப்பாது கிரியையுள்ளே சரரப் பண்ணும்
வாங்கிநின்ற கிரியைவிட்டு விழுந்த தானால்
மகத்தான வுடலெடுத்து யோகம் பண்ணும்
ஓங்கிநின்ற கிரியைவிட்டு விழுந்த தானால்
உத்தமனே! உயர்ந்துநின்ற ஞானந் தோற்றும்
பாங்கில் நின்ற அச்சென்மம் மவுன முத்தி
பரிவாக வாய்ந்தவர்கள் அறிந்து கொள்ளே.

அறிந்திருத்த நான்குக்கும் விக்கின முண்டாம் 3
அப்பனே! ஆகாமியஞ் சித்தினோடே,
மறிந்துநின்ற பிராரத்தந் தோயத் தோடு
மகத்தான நாலுக்கும் விக்கின மாச்சு;
பிரிந்துநின்ற நாலினாற் செய்வதென்ன?
பேரான வறுமையொடு இலேசந் துக்கஞ்
செறிந்துநின்ற பெண் பொன்னும் [illegible]
சேத்துமத்தி லீப்போலத் தியங்கு வாரே.

4

இயங்கினல் கொர்ச்சித்துத் துரத்துச் சண்ணுஞ்
சிறியர் மிலேச்சரையே சகத்தி னுள்ளே
மயங்கினர் நாலுபா தத்தி னுள்ளும்
மனஞ்செவ்வை யாவ தெப்போ தறிவதெப்போ?
தயங்கின ருலகத்திற் கோடி பேர்கள்;
சாவதும் பிறப்பதுங்கா வடிபோ லாச்சு;
துயங்கினர் துயரத்தால் ஞானம் போச்சு;
சுடுகாட்டில் அறிவதுபோல் சுத்தப்பாழே,

5

பாழான மாய்கைசென் றொழிவ தெப்போ?
பரந்தமனஞ் செவ்வையாய் வருவ தெப்போ?
வாளான விழியுடைய பெண்ணைச் சேரும்
மயக்கமற்று நிற்பதெப் போ? மனமே ஐயோ!
காழான வுலகமத னைசை யெல்லாங்
கருவறுத்து நிற்பதெப்போ? கருதி நின்ற
கோளான கருவிவிட்டு மேலே நோக்கிக்
கூடுவது மேதென்றால் மூலம் பாரே.

6

மூலமதி லாறு தலங் கீழே தள்ளி
முகிர்ந்துநின்ற மேலாறு மெடுத்து நோக்கிக்
கோலமூட னுன்மனையைத் தாண்டி யேறிக்
கொடியதொரு ஞானசக்திக் குள்ளே மைந்தா!
பாலமென்ற கேசரியாம் மவுனத் தூன்றிப்
பாராபரமாம் மந்திரத்தில் ஞானம் முற்றிக்
காலமொடு பிறப்பிறப்புங் கடந்து போகுங்
கைவிட்ட சூத்திரம்போல் சடமு மோங்கே.

7

ஓங்கார முதற் கொண்டைந் தெழுத்தோ டாறும்
உற்றுநின்ற பஞ்சகர்த்தா ளிருந்தி டம்பார்
ஆங்கார மாணவம் நா னெனலும் போனல்
அப்பவலோ அகாரமுத லுகாரங் காணும்?
பாங்கான மகாரமொடு விந்து நாதம்
பரவியதன் மேல்நிற்கும் பராப ரந்தான்
வாங்கான மவுனத்தைப் பற்றி யேறு
மருவிநின்ற லகிரியைத்தா னெத்துக் காணே,

8

ஒத்துநின்ற ஓங்காரம் மண்ணை யுண்ணும்
உருவியந்த மண்சென்று சலத்தை யுண்ணும்.
பத்திநின்ற சலமதுதான் தீயை யுண்ணும்;
பாங்கான தீச்சென்று காலை யுண்ணும்;
வெத்திநின்ற கால்சென்று விண்ணை யுண்ணும்;
விழுந்ததப்பா சடமென வேதாந்தப் பேச்சு;
முத்திகண்டு கூடுவது மெந்தக் காலம்?
மூடரே மதுவையுண்டு மேல்பா ரீரே.

9

பாரப்பா அகாரமுத லுகாரங் கொள்ளும்;
பாங்கான உகாரமது மகாரம் கொள்ளும்;
நேரப்பா மகாரமது விந்து கொள்ளும்;
நேரான விந்துவது நாதம் கொள்ளும்;

சேரப்பா நாதமுற்றுச் சத்தி கொள்ளும்;
சேர்ந்துநின்ற சத்தியல்லோ சிவத்தைக் கொள்ளும்;
ஆரப்பா சிவந்தன்னைப் பரந்தான் கொள்ளும்;
அப்பரத்தைக்கொண்டவிடம் அறிந்தே யுன்னே.

உன்னிநின்ற மூலமுத லாறும் பார்த்தே 10
உருகிநின்ற சுழுமுனையை யறிந்து பின்பு
மன்னிநின்ற மதிமேல்சாம் பவியைக் கண்டு
மருவிநின்று மனமுறைந்து தேர்ந்த பின்பு,
பன்னிநின்ற இவ்வளவும் யோக மார்க்கம்;
பகலிரவு மற்றவிடம் ஞான மார்க்கம்;
சன்னிநின்ற விடங்கண்டா லவனே ஞானி
காட்டுவான் கேசரியைக் காட்டு வானே.

காட்டுவான் கிரியுன்னை மேலே யேற்றிக் 1
கைவிட்டால் கிரியைத்தான் கீழே தள்வாள்
மூட்டுவாள் குளிகைவிட்டால் கணத்துக் குள்ளே
மூதண்ட புவிகடந்து தெளிவுங் காணும்
ஆட்டுவாள் எண்டரண்ட மாலை பூண்டாள்
ஆதிவத்து அனாதிவத்து இரண்டு மொன்றே
ஊட்டுவாள் நிர்க்குணத்தி னமுர்தவல்லி
உயர்ந்துநின்ற ஞானசத்தி யுறவு தானே,

உறவென்னத் தாரைவிட வுறவு முண்டோ? 2
உலுத்தரையோ வாமத்தைத் தூடிப் பார்கள்
குறைவென்ன திரோதாயி சமயந் தோறுங்
கூடியல்லோ மாயவலை கூட்டி யாட்டி
மறவென்ன ஞானமென்ன மங்கித் தள்ளி
மகத்தான சமுசார வலையிற் போட்டாள்
நிறவென்ன வாமதத்தால் ஞானமாச்சு
நின்றவனே சிவயோகி வாசி பாரே.

வாசியென்றும் மவுனமென்றும் இரண்டும் வித்தை 3
மகத்தான சாம்பவிகே சரியும் ரண்டு
தேசி யென்றால் யோகத்துக் காதிவித்தை
திறமான மவுனமென்றால் ஞான வித்தை
மாசியென்ற மனமுடைத்தா லிரண்டு மாகா;
மருவிநின்றே அறிவறிந்தா லிரண்டு மாகும்;
ஆசியென்ற வெளியல்லோ அண்ட வீதி
சொக்காமல் கிரிகொண்டே ஆக்கி யேறே.

ஆக்கிநின்ற பரிசத்தால் கொசுவி றந்த 4
தாச்சரியம் ரூபத்தில் வண்டி றந்த
பாக்கிநின்ற மணியொலியால் மானி றந்த
பாழான வுரிசையினால் மீனி றந்த

தாக்கிநின்ற கெந்தியினு லெறும்பு சென்று
சாதகமாய் மாண்டதிந்த ஐந்தும் பாரு;
பாக்கிநின்ற இந்திரிய விடயத் துள்ளே
பாழான மனஞ்சிக்கிப் படுகு வாரே.



வாரான வுலகத்தில் மனிதர் கோடி
மருவிநின்றே யுண்டுடுத்துச் சையோகித்துத்
தாரான கசதுரங்க ரதங்க ளேறிச்
சகலரத்ன பூடணங்கள் தரித்து விம்மி
மாரான வாழ்வடைந்தோர் இறந்தா ரையா!
மாண்டவர்கள் வெகுகோடி மாய வாழ்க்கை
கூரான் சிவபோக ஞானம் வந்தால்
கூடழிந்து போகாது கூடுகூடே.

6

கூடுவதம் பரமோகே சரமோ வென்னில்
கூர்மையுள்ள வாளுவ தீதமோ வென்னில்
ஆடுவதாச் சரியநின் மலமோ வென்னில்
அருமையுள்ள நிர்க்குணமோ நிரஞ்சனமோ என்னில்
பாடுவது பதங்கடந்த பூரணமோ வென்னில்
பகலிரவு மற்றிடமோ பராபரமோ வென்னில்
ஊடுவதெங் கேபின்னை யெங்கு மில்லை
உம்மென்று ளமவெள்ள மோகங் காணே.

7

மோகமென்ற வுரலுக்குள் மனந்தான் சிக்கி
மூசியாம லிடிப்பதற்கைம் பொறியுங் கோல்தான்
பாகமென்ற கோபம் வந்தே யுருவாய் நின்று
பதையாமற் சண்ணிச்சே யுலக மெல்லாந்
தாகமென்ற ஞானம்வந் தென்ன செய்யும்?
சண்டாள இந்திரியச் சார்பி னுலே
வேகமென்ற மனலகரி யைத்தான் கொண்டு
விண்ணுக்கு ளேநிற்க வெளியாய்ப் போமே.

8

வெளியேது வெளிக்குள்ளே வெளியங் கேது?
வேதாந்த வெளிகடந்த வொளியங் கேது?
அளியேதவ் வளிகடந்த அண்ட மேது?
அப்புறத்தே தோற்றுகின்ற சோதி யேது?
நெளியேது நினைவேதுநிர்க் குணந்தா னேது?
நேரான பூரணத்தின் நாத மேது?
சுழியேது? சுழியடக்குஞ் சூட்ச மேது?
தோற்றுமப்பா வானத்தை யொத்துப் பாரே.

9

ஒத்துகின்ற சரியையொடு கிரியை ரண்டும்
உறவாதி செய்தவப்பா நன்றாய்க் கேளு:
பத்திநின்ற யோகமுதல் ஞானம் ரண்டும்
பாங்காகச் சித்தருக்கே அடுத்தவாறே

அத்திநின்ற ஆகாம்யசஞ் சிதபிரா ரத்வம்
ஆருக்கு மடுக்குமென்ருல் யோக மெய்தி
முத்திநின்ற ஞானத்திற் புகுந்தோர்க் கையா
மூன்றுமிலைப் பிரபஞ்ச முழுதும் போச்சே.

போச்சென்பர் முக்காலம் பிறகே நின்று 20
புரிமுருக்குப் போலேறிப் புணர்ந்து கொல்லும்
ஆச்சப்பா காலமென்ன வென்று சொல்லி
அவரவர்கள் சபஞ்செய்வா ரறிந்த மட்டும்;
நீச்சப்பர அகாலவெள்ளம் கடப்பா ரென்ருல்
நேரான ஞானியல்லோ கடந்து நின்ருர்
மூச்சப்பா அற்றிடத்தைப் பாரு பாரு
மூட்டுவிக்கு மூகிடந்தான் ஞானத் தீயே.

தீக்குள்ளே வெந்துநின்ற பற்பம் போலச் 1
செகசால மூதற்கொண்டு காலம் போகும்;
தீக்குள்ளே விழுந்தெழுந்த நெய்யைப் போலச்
சிறப்பான ஞானமது திரண்டே யேறும்:
தீக்குள்ளே காட்டமெடு கோலுங் கூடித்
திரண்டாரற்போற் கருவியெல்லாம் கணத்தில் மாளும்;
தீக்குள்ளே பராபரந்தானிருந்த தாயின் :
செகமெல்லாம் வித்தையென்று தெளிந்து போமே.

தெளிந்தவிடங் கண்டாரார் சித்தர் யோகி 2
செகமெல்லாம் நானென்பார் திருட்டு ஞானம்
ஒளிந்துவிட மூணைத்தாஉகே சரிக்குள் நிற்பாள்
உற்றுப்பரர் மகாரம்வைத்தே யூகி யூதே
அளிந்தவிடம் நிர்க்குணந்தா னதிலே கேளு;
ஆச்சரிய மகாரமென்ற யுண்டதுண்டு;
களிந்தவிடம் நிராகர மொன்று மில்லைக்
காட்டுந்தா ரறிவுகொண்டே யுற்றுக் காணே.

உற்று நின்றே உலகத்தோர் ஞானம் பார்த்தே
ஊணுக்குக் கிடையாமல் புரட்டுப் பேசிப்
பற்றுகின்ற மோகத்தாற் பெண்ணைக் கூடிப்
பரந்துநின்ற திரோதாயி தலையிற் சிக்கிக்
கொத்துகின்ற விடங்காண்பார் கண்ணை மூடிக்
கும்மென்றே யிருளாகு மறிவும் பொய்யாம்
மற்றுநின்ற லகரியினுல் கொண்டே யேற
மாட்டார்கள் அறுசமய மாடு தானே.



சமயமெல்லாஞ் சத்தியுண்டு சிவமு மூண்டு;
சண்டாளர் பிரித்தல்லோ தள்ளி ஞர்கள்;
சமயமெல்லாம் வேதாந்தசித் தாந்த மூண்டு;
[illegible] றங்கி ஞர்கள்;

சமயமெல்லாம் நாதமுண்டு விந்து முண்டு;
காக்காமற் கொட்டார்க ளுலகத் தோர்கள்;
சமயமெல்லாம் அம்பரமாம் ஞான முண்டு;
தாயைவிட்ட பாவத்தால் தவறிப் போச்சே.

போச்சப்பா ஆறும் பானத்தாலே 5
புத்தியுள்ளோர் பானத்தாற் கண்டா ரையா!
ஆச்சப்பா வாமமென்ன நிசித மென்பார்
அதன் குணமோ திரோதாயி யனுட்டா னந்தான்!
ஓச்சப்பா நாதாக்கள் ரிடிகள் சித்தர்
உயர்ந்தவரைக் கண்டவர்பா னத்தா லன்றோ?
காய்ச்சமரம் பட்டதென்ன வேரற் றூற்போல்
கசடரென்ற அறுசமயங் கேட்ட பாங்கே,

பாங்கான குண்டலிக்குள் மூல மொன்று; 6
பாரப்பா கண்டத்தில் மூல மொன்று
போங்கான புருவமைய மூல மொன்று;
புகழான விந்துவிலே மூல மொன்று
வாங்கான சத்தியிலே மூல மொன்று
மருவிநின்ற பராபரத்தில் மூல மொன்று
தேங்காம லிவையாறுங் கண்ட ஞானி
சேர்ந்துநின்ற மும்மூல யோகி யாமே.

ஆமப்பா நகாரமுதல் யகாரம் நிற்கும் 7
அவ்வளவும் யோகத்தின் மூல மாச்சு;
தாமப்பா அகாரமுதல் உகாரந் தொட்டுச்
சாதகமாய் மகா ரவரை ஞான மூலம்
ஓமப்பா திசைநாத மவுனத்திற் காணும்
உற்றேற வுற்றேற அகண்ட வீதி
காமப்பா வுண்டக்கால் யோக சித்தி
கடுங்கானற் பாலுண்ட ஞான மாச்சே.

ஆச்சிந்த வரிசைவிட்டே யுலக ஆசான் 8
ஆதிஅந்த மொன்றுரவி மதிதா னென்பான்;
மூச்சற்ற விடங்காட்டத் தெரியா நின்று
முன்னேது பின்னேது சாங்க மென்பான்;
வாச்சிந்த மயக்கத்தா லுலகோர் கேட்டார்
மதுவைவிட்டே றியல்லோசை யத்தோர் கேட்டார்
ஓச்சிந்த விதமறிந்தோன் யோக ஞானி
உம்மென்று ஆகுமென்ற நாத மாமே.

நாதமப்பா யோகத்தி லந்து நாதம் 9
நலமான மவுனத்தி லந்து நாதம்
வேதமப்பா [illegible] சுத்த நாதம்
வெட்டவெளிக் குள்ளேயொரு நாத முண்டு

போதமப்பா கடந்திடத்தே யந்த நாதம்
புகழாகச் சேவித்து நிற்கு மென்றும்
காதமப்பா தூரமல்ல அந்தோ அந்தோ!
கண்ணிமைக்குள் விண்ணுக்குள் கலந்து காணே.

விண்ணேது வெளியேது வொளியங் கேது? 30
விரைந்திந்த மூன்றுங்கே சரிதா னுச்சு;
கண்ணேது காதேது மூக்கங் கேது?
கண்டிப்பாய்க் கண்டவெல்லாம் அழிந்து போச்சே;
ஒண்ணிரண் டேது சம ரசந்தா னேது?
உற்றுப்பார் வெட்டவெளி யொன்றுமில்லை;
எண்ணேது நினைவேதிங் கறிவு மேது?
ஏகமாய்க் கலந்துத்தி யிடத்தைக் காணே.

உத்தி கொண்டுஞான நூல்பார்த்துப் பார்த்தே 31
உலகத்தோர் ஞானமெல்லாம் வந்த தென்று
பத்தி கொண்டே அலைவார்கள் விண்ணைப் பாரார்
பாழான மனத்தையங்கே நிறுத்த மாட்டார்
மூத்திகண்ட விடமெங்கே யென்று காணுர்
மூச்சற்று நின்றிடத்தை நோக்கிப் பாரார்
சித்தி கண்டால் சித்திகொண்டு செய்ய மாட்டார்
சேர்ந்துமதா யிருக்கறியார் திருடர் தானே.

தானென்ற ஆணுவத்தை நீக்க மாட்டார் 32
சண்டாள கோபத்தைத் தள்ள மாட்டார்
ஊனென்ற சுகபோக மொழிக்க மாட்டார்
உற்றுநின்ற சையோகம் விடுக்க மாட்டார்.
பானென்ற ஞானவெள்ள முண்ண மாட்டார்
பதருமல் மவுனத்தே யிருக்க மாட்டார்
வானென்ற பொருளென்ன எளிதோ மைந்தா!
மகத்தான மனமடங்க எய்யுங் காணே.

காணிந்த வுலகத்தில் மாயக் கூத்துங் 33
கண்மூக்குச் செவியோடிந் திரியக் கூத்தும்
பூணந்த வாசியினல் வறுமைக் கூத்தும்
புகழான செனனமொடு மானக் கூத்தும்
ஆணிந்த அண்டமெல்லாம் படைத்த கூத்தும்
ஆங்காரம் மனம்புத்தியான கூத்தும்
தோணிந்தப் படிபடைத்த பரமே யையா!
சொற்பெரிய பூரணமே யென்று கூவே.

கூவையிலே யர்த்தாளைத் தொழுது கூவக்
குறையாத கருணையினல் திரும்பிப் பார்த்துத் 34
தாவையிலே மதலையைத்தான் தாய்தான் சென்று
சார்வாக எடுத்[illegible] மைந்தா!

தேவையிலே யெடுத்தணைத்தே யுயிரை வைப்பாள்
செகசால மாடுகிற திருட்டுத் தாய்தான்
பாவையிலே மனஞ்சென்று பரவா விட்டால்
பாராது போலிருப்பாள் பாரு பாரே.

35

பாரப்பா செகமனைத்தும் அண்ட மெல்லாம்
பாங்கான சூழ்ச்சியில் வைத் திருந்த கன்னி
நேரப்பா இவளைவிட்டு யோகம் பார்த்தேன்
நேராக அண்டத்தில் ஞானம் பார்த்தேன்
சேரப்பா சுத்த விழல் மனமோ பேயாம்
செகசாலக் கூத்தைவிட்டுத் தெளிய மாட்டார்
ஆரப்பா அவளை விட்டு ஞானங் கண்டோர்
அலைக் கழிக்கு மாசையென்ற பாம்பு தானே.

36

பாம்பையல்லோ ஆபரணம் பூண்ட ஈசன்
பரிவாக மதியோடு கொன்றை சூடிப்
பாம்பையல்லோ முந்நூலாய்ப் போட்ட கூத்தன்
பாங்கான கரியுரித்த பாணி பாணி
பாம்பையல்லோ கங்கணமாய்த் தரித்துக் கொண்டு
பரிபுழுவைத்தோலுடுத்துப் பாதந் தூக்கிப்
பாம்பையல்லோ மனைக்குமோ திரமாய்ப் போட்டு
பாரென்றே அகண்டத்தி லாடி னாரே.

37

ஆடினதோர் கூத்தெல்லா மாத்தாள் மெச்சி
அண்டையிலே யழைத்தானை யிருத்திக் கொண்டாள்
நாடினதோ ரவளருகி லரனு மெய்வான்
நாமறியோ மவனவளு மொன்றே யொன்றே
ஊடினதோ ரிடமெங்கே? ஒலிகேட் பெங்கே?
ஒன்றாகக் காணுகிற நடன மெங்கே?
கூடினதோ ரகண்டத்தின் சோதி யெங்கே?
கூசாமல் மவுனத்திற் கூடிக் காணே.

## மெய்ஞ்ஞான குரு

38

காணப்பா மகாரவரை நாத வோசை
கன்னிக்குப் பீடமடா மவுன ஞானம்
ஊணப்பா வூணப்பா நாதத் தோடே
ஒருமுனையா யொருவழியா யொன்று யோடும்
தோணப்பா தோற்றுவதங் கொன்று மில்லை
சுத்தவெளி ரவிகோடி சூழ வன்னி
ஆணப்பா மாகோடி கண்கொள் ளாதே
ஆச்சரிய மதிகமென்ற மகாரங் காணே,

39

மகாரமல் லோமுந்தி யாசான் சுட்டி
வழிகாட்டு முறைமையது ஞான மார்க்கம்
மகாரமல்லோ அடங்கியந்த நாதந் தாண்டி
மருவி நின்ற இடமல்லோ கேசரி மைந்தா

மகாரமென்ன மேலெழுத்தே யென் பார் மாண்பர்
மாட்டுவதை யூன்றெழுத்த தென்று காணர்
மகராமென்ன மகாரவித்தை யதீத வித்தை
வாய்திறந்து பேசாதே மௌன மாமே.

மௌனவித்தை யாதெனில்மூன் றெழுத்தே யென்பார் 40
மாட்டுகிற இன்ங்காணர் மார்க்கங் காணர்
மௌன வித்தையாவதெனவாய் மூட லென்பார்
மாடுமுதற் குதிரையின லாவ தென்ன?
மௌன வித்தை கேட்டார் கூட் டுறவு காணர்
வாய்மூடி வழியோடே நாதங் கேளார்
மௌனவித்தை யாசான்றன் தூண்டிக் காட்டில்
மணிமுதலாய்த் திசை நாதங் கேட்குந் தானே.



கேட்கையிலே மதியினிட மமிர் தஞ் சிந்துங்
கெடியான துவாசமூர் தங் கடந்து தோன்றும்
வாழ்க்கையிலே யாசையறும் நினைவும் போகும்
வாரிதிபோ லண்ணுக்கி லமிர்த மோடும்
தாக்கையிலே ரவிகோடி காந்தி காணும்
சச்சிதா னந்தவொளி தானே தோன்றும்
மூட்கையிலே மேலமிர்த லகரி மீறும்
மூன்றுகமும் கணமாகு மூட்டிப் பாரே.

மூட்டையிலே யுலககிரி கொண்டு மூட்டு
முதிர்ந்த பின்பு விண்ணுள் கிரி வந்து காக்கும்
கூட்டையிலே மகாரத்தை யறிந்து கூட்டுங்
கும்மென்ற நாதத்தில் கூடியேறும்
மாட்டையிலே யறிவோடு மனத்தை மாட்டும்
மறுகாலும் நாதத்தைக் கூர்ந்து கேளே
ஓட்டையிலே யொருவழியா யோடிற் றனல்
உத்தமனே யச்சின்ன முத்தியையா!

ஏறுகிற துறை:

ஐயனே! குருவான அகண்ட மூர்த்தி! 43
அதிதமன்றெ ஞானமெல்லாம் அருளிச் செய்தாய்:
மெய்யனே! ஏறுகிற சாத கஞ்சொல்
வேதாந்த லட்சியத்தை விளங்கச் சொல்லு
துய்யனே! நிலைதோறு மெழுத்தைச் சொல்லு
சொற்பெரிய பிராணய சூட்சஞ் சொல்லு
தையனே! தையமென்ற நிர்த்தஞ் சொல்லு
சாத கமாய் லட்சயத்தைச் சாற்றி டாயே.

சாற்றிடென்று கேட்டமா ணுக்க வேகேள்: 44
சந்தோட மாச்சுதிப்போ சார்பு சொல்வேன்:
ஏற்ற மென்ற மூலத்தில் வாசி வைத்தே
எளிதாகப் பிராணயம் பண்ணித் தேறு

ஆற்றுமென்ற குண்டலிக்குள் நடனங் கண்டால்
ஆதித்தன் கோடியைப் போல் காந்தி காணும்
மாற்றுமென்ற கண்டத்தி லங்கென் றாணு
வாய்திறக்க வொட்டாது வழிசெய் வாயே.

45

வழியோடே நின்றுரைத்துப் பழக்க மாகி
மனோன் மணியாம் புருவமையத் தூடே சென்றே
ஒளியோடே மவுனத்தை யோட்டி யூதாய்:
உத்தமனே! சாம்பவியைக் கண்டு கொள்வாய்
நெளிவோபோ யிவ்வளவும் யோக மார்க்கம்
நின்றவனே சிவயோகி நினைவாய்க் கேளு:
தெளிவோடே விந்து வென்ற குருப தத்தில்
தேக்கப்பா மவுனத்தைத் தாரை யாமே.

46

ஆமப்பா விந்துரவி மதியோர் கூடி
ஆச்சரியங் கண்கூசி மயக்க மாகி
ஓமப்பா நாதத்திற் செவிடு பட்டே
ஊமையென்ற வெழுத்துடைய வுருவங் காணும்
தாமப்பா சத்தியிலே வன்னி யோடு
சதகோடி ரவிமதியு மொவ்வா வொவ்வா
வாமப்பா லுண்டவர்க்கித் தனையுங் காணும்
வாய்பேசா ஞானிக்கு மாயந் தானே.

47

தானென்ற சிவத்துக்குள் மௌனஞ் சென்றால்
சதகோடி நவகோடி வன்னிரவி சோமன்
பானென்ற பரத்தின்கீழ் முப்பா மூண்டு
பார்மகனே அகாரமொன் றுகார மொன்று
வானென்ற மகாரமொன்று முப்பா மாக
வழங்கிற்றே அதனொளியைச் சொல்லப் போகா
தேனென்ற மொழியுடைய னமனுந் தத்தைத்
தேவிபத மென்றகே சரிதான் காணே.

48

காணிந்தக் கேசரத்தின் தாயின் காந்தி
கண்கொள்ளா விண்கொள்ளா கரையுங் கொள்ளா
ஆணிந்தப் பரையென்பார் அம்பரந்தா னென்பார்
அவளுக்குள் மவுனமுண் டறிவாற் பாராய்
ஊணிந்த மௌனத்தை நிட்களமாய்ப் போவாய்
ஓகோகோ அம்பரத்தி லேதோ வேதோ
தோணிந்தப் படியிருந்தால் லயத்தின் நேர்மை
சொல்லரிதாம் அப்புறத்தே சோதி தானே.

49

சோதியென்று பராபரத்தி லறுவரை யுண்டு
சொல்லையிலே கேட்டிருப்போம் சொல்லிக் காணோம்.
ஆதியென்ற மூலகுரு பேரால் மைந்தா
ஆண் பிள்ளைச் சிங்கமென்ற கொங்கணர்கேள்

வாதியென்று லவர்வாதி ஞான வாதி
மகத்தான குளிகையிட்ட சித்தன் வாதி
பேதியென்றல் மேருப்போ லேயும் பண்ணும்
பெருவாதி ரசவாதி பேருள் ளோனே.

பேருள்ள கொங்கணர் தாம் குளிகையிட்டுப் 50
பேரான பூரணத்தி லறுவரை கண்டார்
ஆருள்ளா ருலகத்தில் வரைகுரு சொல்ல
ஆச்சரியஞ் சித்தருக்குக் கீர்த்தி வைத்தார்
நேருள்ள ரிடிகளொடு முனிவ ரையா
நேராகச் சமாதியிலே கண்டோ ருண்டு
தாருள்ள சலத்தோடுஞ் சென்று ரில்லை
சமர்த்தான மனத்தினிடச் சத்தி தானே.

சத்தியுள்ள வாசனையாங் குரங்கு கேளு 51
தாண்டியல்லோ இந்தியரியக் கொம்புக் குள்ளே
பத்தியுள்ளே யலைத்தடித்துப் பேய்க்கூத் தாக்கிப்
பாங்கான மனத்தையல்லோ சின்னம் பண்ணி
முத்தியுள்ள வாசலுக்கே யேறெட் டாது
முழுமோசச் சனியனப்பா ஞானத் துக்குக்
கொத்தியுள்ள வாசனையை யடக்கிப் பார்த்தால்
குருடனுக்கும் ஞானவழி கூடுங்காணே.

கூடுவதும் எப்படியோ ஞான மூர்த்தி! 52
குரங்கைவிட்டே அகலுகிற வழியைச் சொல்க:
நாடுவது முலகத்து வாதம் வந்தால்
நன்மனமுண் டானல்சாத் திரத்திற் சொல்வார்
ஊடுவது சாதுசங்கம் வேதாந் தம்பார்
உத்தமனே வாசனையாங் குரங்கு போகும்:
ஆடுவது தொய்தவா சனையி லேற்றும்
அட்படியே புலகத்தி லனேகம் பேரே.

பேரான வுலகத்தில் ஞான முற்றும் 53
பேசாம லருகிருந்த விடத்தில் மைந்தா!
வாரான மோ தத்தி லிங்கமாகும்
வாரிதிக்கு மேருவுக்கும் நடுவே கோடி
காரான காமத்தால் பாண்டி லிங்கம்
கைவிட்ட சமாதியினல் சுந்தர லிங்கந்
தாரான மலைதோறும் பூமி தோறுஞ்
சாற்றரிது சாற்றரிது சார்ந்து பாரே.

பாரப்பா சுயம்பில்வந்து பிட்சை யேற்றல் 54
பலித்ததப்பா ஞானசித்தி மவுன சித்தி;
நேரப்பா வொன்பது பேரிவரு ளாறு
நேராகப் [illegible] முனி

காரப்பா விண்ணையென்ருல் சாவார் கர்த்தர்
காத்தாலே ஞானசித்தி கலந்து கூடும்:
ஊரப்பா வாதியைப்போல் நீங்கள் கெட்ட
உலுத்தரென்பார் சித்தர்கள் தா முரைத்தி டீரே.

உரைக்கவல்லோ ராசயோகம் வைத்தா னீசன்? 55
உண்டுடுத்துத் திரிவதற்கோ சொன்ன ஐயன்?
மறைக்கவா சனைலகிரி கொள்ளு மென்ருன்
மகத்தான தெட்சணு மூர்த்தி யாசான்
நிறைக்கவல்லோ யோகமுதல் ஞானஞ் சொன்னன்
நிற்கவிட மற்றநிர் மலமாஞ் சோதி
இறைக்கவல்லோ லூறினதோர் கேணி யைப்போல்
எடுக்கெடுக்க வெழும்பும்வா சனைதான் காணே.

எழும்பாமல் வாசனையைக் கொன்றேன் ஞானி; 56
ஏகாமல் வாசனையை யடித்தோன் சித்தன்:
எழும்பாமல் கருவிகளை யிருக்கச் சாடி
இருத்தினவன் சிவயோகி வாத யோகி;
எழும்பாம லடிப்பதற்குச் சூட்சஞ் சொல்வேன்:
என் மக்காள்! மவுனத்தே யிருந்தாற் போகும்:
எழும்பாமல் வாசனை தான் போச்சு தானல்
ஏதுமில்லை சுத்தவெளி யிருளும் போச்சே.

போச்சென்றே இருக்கிறதோர் ஞானத் துக்குப் 57
புகழான வல்லமைதா னென்ன மைந்தா!
வாச்சென்ற அகண்டத்துள் வரைக ளாறு
மருவினல் சடத்தோடே யவனே சித்தன்;
நீச்சென்ற வரைபார்த்து வாரேன் மக்காள்!
நில்லுங்கோள் குகையினுள்ளே யென்று சொல்லித்
தோச்சென்ற பூரணத்திற் சொக்கி நின்ற
சுந்தர னந்தன்வந்து தொழுதிட்டானே.

தொழுதுகொண்டு பதம் பிடித்த அகண்டத் துள்ளே 58
சொக்குகிறே மென்று சொன்ன சுந்தரமே யையா!
விழுதுகொண்ட ஆலைப்போல் நெட்டிட் டேறி
வெளிகடந்தே ஆறுகலங் கண்டு வாரேன்;
முழுதுகண்டா னென்பிள்ளை யென்று கீர்த்தி
மூட்டிவைப்பேன் சித்தத்தில் கோபம் வேண்டா
பழுதுகொண்டு வருகிறேன் திரும்பாவிட்டால்
பராபரத்தில் லயிச்சிடுவேன் பண்பு பாரே.

பாரப்பா அகண்டவெளி சுத்தக் கானல் 59
பார்ப்பதற்கோ அங்கொன்று மிடமேயில்லை:
நேரப்பா ரவிகோடி வன்னி கோடி
நேரான மதி கோடி கண்டேன்:

ஆரப்பா அளவிட்டோர் கண்டோர் வீதி
அதற்குள்ளே செல்லரிது மைந்தா போபோ:
காரப்பா குகையென்று பட்டங் கட்டிக்
கடுங்குளிகைச் சோடிட்டுக் கலந்திட்டேனே.

கலந்திட்டே னொருவரையில் நாத வோசை 60
கண்கொள்ளா வெளிக்குள்ளே கலக்கமாச்சு:
கலந்திட்டேன் மறுவரையி லிடியோ கோடி
கண்கெட்டேன் மதிகெட்டேன் காதுங் கெட்டேன்:
ஃ ஃ ஃ ஃ
கலந்திட்டேன் மூவரையிற் காந்திக் குள்ளே
கடுகவந்தேன் கொங்கணரை யழைத்திட் டீரே.

அழையுமென்ற சொற்கேட்டுச் சுந்த ரானந் 61
தன் கணத்திற் கொங்கணரை யதிசிக் ரத்தில்
விழைவுடனே யோடிவந்து தெண்ட னிட்டு
விரைவுடனே கொங்கணர்தா னிக்க ணத்தில்
அழையுமென்றே ரெங்களைய ருங்க ளைத்தான்
ஆச்சரியஞ் சொல்லுதற்கே யடியேன் வந்தேன்:
அழையுமென்ற சீடனுக்கும் பின்னே வந்தே
அடியேன்தான் வந்ததென்று பணிந்திட்டாரே.

பணிந்திட்ட கொங்கணரை வாரி மோந்து 62
பராபரமே நிர்க்குணமே பண்புள் ளோனே!
அணிந்திட்ட அறுவரையிற் சொக்கிச் சென்ற
ஆதியென்ற பராபரமே யையா வையா!
மணியிட்ட சிலம்பொலியைக் கேட்ட மூர்த்தி
மார்க்கத்தை யெப்படித்தா னேறி னீரோ
கணியிட்ட நிர்மலா மனத்தி னாலே
கைலாய தேகமென்ன தங்க மாச்சு.

ஆச்சப்பா அப்படியே வரனு மென்றே 63
ஆசைகொண்டே யிருக்கவழைத் தனுப்பு வித்தீர்:
வாச்சப்பா மனுவொன்ற வடியே னுக்கு
மைந்தன்மேல் கடாட்சத்தால் சொல்லவேணும்
ஒச்சப்பா கொங்கணரே யுபசார மென்ன
ஓங்கினதை யுரைக்கின்றேன் கேளு கேளு:
காச்சப்பா வுலகத்தி லெடுத்த தேகங்
கைலாயச் சட்டையாங் கருவைச் சொல்லே.

கருவென்ன வொன்றுமில்லை மேரு நேரே 64
காணப்பா வீசானங் கைலாய மாச்சே;
உருவென்ன வெடுத்துகை லாய தேகம்
உத்தமனே நிராகார ஞான சித்தி

குருவென்ன நிர்க்குணத்தின் மவுனத்துள்ளே
குவிந்துரைத்த பெருமையின் கைலாயமாச்சே;
அருவென்ன மகார வித்தை மூட்டிக்கொண்டு
ஆதிவிர்த்த கற்பமது வுண்டு பாரே.

பாரப்பா சூதமுண்டு மவுனந் தாக்கப் 65
பளிச்சென்ற ஏழுசட்டை பண்ணுய்ப் போதும்
நேரப்பா அச்சடங்கை லாய தேகம்
நிமிடத்தே சித்தியா முன்னினைவுக் கையா
ஆரப்பா வுனைப்போல நினைத்த பண்ணல்
அரிதரிது கூடாகி மூடர் பேரால்
சேரப்பா சொல்லிவிட்டே னென்ற பேச்சுச்
செப்புமுன்னே கைலாய முற்றுப் பாரே.

உற்றுநின்ற பலநூலைப் பார்த்துப் பார்த்தே 66
உரையாவே தாந்தசித் தாந்த மென்று
பற்றிநின்ற பரவசத்தா னென்றே உன்னிப்
பாராமல லைந்துகெட்டா ரனந்தக் கோடி;
முற்றிநின்ற விடமெங்கே ஞான மெங்கே?......
கொற்றி நின்ற மேல்மூலத் துரிய மெங்கே?
கூடுவார் மெய்ஞ்ஞானக் குரைவி தாமே. 67

குறைவேது வாசனையாந் தொய்தத் தோடு
கூடவல்லோ மெய்ஞ்ஞானம் புனைந்து நிற்கும்:
மறைவேது மறையதனின் அந்த மேது?
மறைவற்று நின்றதொரு வெளியங் கேது?
துறையேது துறைக்குள்ளே சோதி யேது?
சூட்டியிருந்த விவரமெல்லாம் ஞானந் தோற்றும்
அறையேது? அல்லவென்று சமுசாரத்துள்
அழுத்துமப்பா தொய்தத்தி னுண்மை தானே.

ஆண்மை யென்றால் தொய்தத்தி னுண்மை யல்லோ 68
அகண்டமுத லண்டமெல்லாம் ஞானந் தோற்றும்
மாண்மையென்றால் வாய்ப்பேச்சாம் ஞானி வாயில்
மண்ணையள்ளிக் கூறுகொண்டு மலங்கப் பார்த்துக்
கேண்மைகொண்டே யுகமெல்லாங்கெடுத்தே ஆட்டிக்
கெடியான பெண்ணுபொன் னுணி னுலே
தான்மையென்ற பிறப்பிறப்பை மீறப் பாய்ந்து
சண்டாளக் கோபத்தைத் தள்ளு தள்ளு.

தள்ளுகின்ற வருப்பு வந்தால் கருவைக் கேளு; 69
சாதகமாய்க் குண்டலிக்குள் வாசி வைத்துத்
[illegible] பிராணாயம் பண்ணித் தீருந்
திரண்டொலியுஞ் சிலம்பொலியுங் காணும் காணும்.

நள்ளுகிற கண்டத்தே யங்கெங் றானும்
நலம்பெரிய புருவமையந் திறந்து போகும்
அள்ளுகிற கனிபோலே யமிர்தம் வீழும்
அப்பொழுது காயசித்தி யறிந்து கொள்ளே.

அறிந்திந்த மதியான விந்து விட்டும் 70
அப்பனே யோகமிதே யறிந்து கொள்ளு:
பரிந்திந்த விந்துமுதல் நாதஞ் சித்தி
பாங்கான சிவத்தோடு பரந்தான் கேளு;
அறிந்திந்தப் பராபரத்தோ டாறு கேளு
அப்பனே மவுனத்தைத் தூக்கிக் கொண்டால்
செறிந்து நின்ற ஞானத்தின் யோக மாச்சு;
செயல் தம்ப மவுனத்தைச் சென்று காணே.

காணப்பா பராபரத்தின் மேலே யாறு 71
கைவிட்ட அகண்ட முநிர்க் குணத்தா னென்று
பூணப்பா நிர்க்குணந்தான் நிராகா ரந்தான்
புகழான நிர்மலந்தான் போதத் தந்தம்
தோணப்பா விவையாறுங் காணப் போகச்
சொல்லுகிற வார்த்தையென்றால் கேட்டிருப்போம்
ஊணப்பா சடம்விட்டே அறிவு விட்டே
உற்று நின்ற அண்டத்தே யறித்து கொள்ளே.

அறிந்து கொள்ளு மதியளவு பிண்டத் துள்ளே 72
அப்பனே யாறுதலம் அறிந்து காணும்:
அறிந்து கொள்ளு விந்து வின் மேல் பாரத்தின் மட்டும்
அறிவுக்குள் சக்ரந்தா னப்பா கேளு;
அறிந்து கொள்ளு பரத்தின் மேல் போத மட்டும்
ஆதார நிர்மலத்தின் வரைகளாறும்
அறிந்துகொள்ளு மேலாறுங் காணப் போகா
ஆச்சரியம் கொங்கணரை விட்டுக் காணே.

காணப்பா தசதீட்சை கடந்த பின்பு 73
கைவிட்ட சூத்திரத்தை யாசான் காட்ட
ஊணப்பா அது மவுனம் மற்ற தெல்லாம்
உரவார்த்தை அகாரமுத லுகார மென்பார்
வீணப்பா சிரமேல் வேதாந்தக் காட்சி
விரைந்ததிலே யும்மென்றே ஊணென் பார்கள்
பூணப்பா வும்மென்ற நாத மாமோ
போக்கறியான் சொல்லுகிற ஞானந்தானே?

தானென்ற விடங்காட்டி நாதங் காட்டிச் 74
சாற்றுகிற மவுனத்தின் சார்பு காட்டி
வானென்ற வெளியோடாறு தலமுங் காட்டி
வாய்மூடி [illegible] வகையுங் காட்டி

ஊனென்ற வுடம்பைவிட்டுக் கேசரியுங் காட்டி
ஊமைநின்ற விடங்காட்டி யுரைக்கப் பண்ணிக்
கோனென்ற குருவெனும்வாய் பேசலாமோ
குறும்பரே குருசொல்ல விரண்டுமாமே.

ஆமிந்த வுலகத்தோர் ஞான வீதி 75
அறிந்தேறிக் கூடுவதும் அரிது மெத்த
ஓமிந்தக் குண்டலியைத் தொட்ட ரற்ற
ஊதுவது கடினமெத்த யோக மார்க்கம்
வாமிந்த வாமத்தே நின்று கொண்டு
மகத்தான பானமுண்ண வாய்க்கும் ரண்டும்
சோமிந்தச் சடைவைத்துச் சின்மயம் காட்டும்
சொற்பெரிய பூரணந்தான் சொன்ன வாறே.

வாறான குருவினுடைய வாழ்க்கை கேளு 76
மகத்தான சடையின் மேல் மதியுஞ் சூட்டித்
தாறான நெற்றியிலே தீயை வைத்துச்
சர்ப்பமல்லோ ஆபரண மாகப் பூண்டு
வீறான கரித்துகிலை மேலே போர்த்து
விளங்கியதோர் புலித்தோலை யிடையிற் கட்டிக்
கூறான சுடுகாட்டிற் குடியு மாகிக்
கொள்கின்றார் பலியெடுக்கக் கொள்கிறான் றாரே.

பலியெடுத்த குருவினிட வாம பாகம் 77
பகுந்துநின்ற என் தாயின் பரிசு கேளு;
பொலியெடுத்த அட்டமா சித்தி நிற்கப்
புகழ்பெரிய ரத்னவகை யாரம் பூண்டு
நலிவில்லா யோகப்பி யாசஞ் செய்து
நண்ணுமிரு பதச்சேவை காண்ப தற்கே
ஒலியெடுத்த நவகோடி தேவர் சித்தர்
ஒன்றாகக் கணநாதா போற்று வாரே.

அறிந்துகொள் என் தாயே துரைப்பெண் ணப்பா! 78
அப்பனோ எருதேறும் ஏழை யேழை
அறிந்துகொள் இவளை முன்னே யையா வைத்தே
ஆதரித்துக் கேட்டதெல்லா மருளிச் செய்வாள்
அறிந்துகொள் அகண்டத்தே ஞான சக்தி
ஆத்தாளைப் பூசித்தா லறுப தீவாள்
அறிந்துகொள் சடமெல்லா மவளே யாச்சே
அப்பனுக்கு மெலும் போடு நரம்பி ரண்டே.

இரண்டான வாயுவினி லொன்று சத்தி 79
ஈராகச் சிவமேது பிராண வாயு
ஒன்றாக நாடிநின்றால் சுழுனை யாச்சு
யோகமுமாம் ஞானமுமா [illegible]

தண்டான சுழுமுனைதா னடுவில் நிற்குஞ்
சாதகமா யிதற்குள் முக் கிரந்தி யுண்டு
நன்ருன சுழுமுனையிற் பிராண னேரில்
நாதாந்த யோகமிது நாடிக் காணே.

காணப்பா நெஞ்சினுள்ளே பிராண யோகங் 80
கண்டுகொள்ளு தாமரையில் நூல்போ லாடும்:
ஊணப்பா அதிலிரட்டி யபான வாயு
உற்றுநின்றி ரண்டையுநீ கண்டா யானல்
பூணப்பா விதற்குள்ளே ஞான யோகம்
புசுண்டருக்குச் சித்திகை லாய தேகம்
தோணப்பா நவகோடி மாறு கண்டார்
சுகயோக மாவது இந்தத் துறையு மாமே.

ஆமப்பா ஆசைவிடக் கருவைச் சொல்வேன் 81
அறிந்து கொண்டே அறிவாலே நின்று பாரு;
சேமப்பா திரோதாயி யாரென் றக்கால்
செகமெலாம் பெண்ணுன வுருத்தானப்பா!
ஓமப்பா பொன்மண்வா சனையி னுசை
ஒற்றிநின்ற விந்திரிய மயக்கத் தாசை
நாமப்பா வென்றுசொன்ன ஆண்மையாசை
நல்வினைக்குந் தீவினைக்கும் வித்து மாச்சே.



வித்துக்குள் பாவமென்ன புண்யமென்ன 82
வெகுகோடி புண்ணியத்தால் புருட சன்மம்
பத்துக்குள் வெகுகோடி பாவ புண்யம்
பாழான் பெண்சென்ன மெடுத்த வாறு
கொத்துக்கு ளிவையறிந்து பாவ மான
குழிக்குள்ளே வீழ்ந்தாரே கோடி யையோ!
எத்துக்கு ளிவையறிந்து வேருய் நின்றே
இகழ்ந்தவனே மெய்ஞ்ஞான வீச னுமே.

பூரணமே யகண்டமே யகத்தி னந்தம் 83
பொங்கின்ற நிர்க்குணமே யென்னை யீன்ற
காரணமே யுலகிற் பெண்ணுசை போலக்
கலந்துநின்ற சுகமில்லை கருதிக் கொண்டேன்.
ஆரணமே யதீதத்தில் சுகந்தா னென்ன
அப்பவே சொல்லுகிறே னறிந்து கொள்ளு;
வாரணமாங் குவிமுலையா ளாசை விட்டால்
மகத்தான மூவுலகும் விடுக்கும் நேரே.

நேரான பெண்ணுசை நீங்கிற் ருனல் 84
நிலையான திரோதாயி மாய்கை போச்சு
ஆரான வேதாந்த வெளியிற் சொல்லுரர்
சம்மென்ற சகஞ்சொல்வா யோகி யல்லை

வாராய்நீ யென்மகனே பெண்ணாற் சிக்கி
மகத்தான ரிடிகள்சித்தர் கோடி கெட்டார்:
தாரான சித்தரொடு பஞ்ச கர்த்தாள்
தயங்கி நின்று படும்பாடு சாற்று வேனே.

சாற்றுவேன் வீதிபடு குழிதா னுண்டு 85
தன்மேலே புல்லோடு செடியு மூடி
மாற்றுவேன் வீதியிலே நடந்தோன் வீழ்ந்த
வாருக்கும் பெண்ணுள மாயக்கூபம்
ஆற்றுவே னென்றாலு மாற்றப் போகா
அரகரா பெண்ணரவு கடித்த தானுல்
போற்றுவே னென்றாலும் பொல்லாக் காமம்
பொறிவிட்ட நெய்போலப் பொங்கும் பாரே.

பொங்குகின்ற காமமென்ன? சிவத்தின் கூறு:
பொல்லாத ஆசையென்ன? மாலின் கூறு.
மயங்குகின்ற மோகமென்ன? மகேசன் கூறு;
மருவியந்த மூன்றாலு மூலகம் பாழாய்த்
தங்குகின்ற யோகம்போய் ஞானம் பாழாய்ச்
சமாதியெல்லா மிந்திரியச் சார மூடித்
தொங்குகின்ற மோட்சத்தின் தரைபோ லாகச்
சூனியமாய் ஞானமெல்லாந் தோற்றுமாறே.



மாமுன பெண்ணாசை விட்டே னென்பார்; 87
மருவியவள் தனிப்பட்டால் சரணஞ் செய்வார்
தாமுன சயனத்திற் பெண்தான் சொல்லில்
சதாசிவனுல் முடியாது; மற்றோ ரேது?
கூறுன விந்துவிடக் கோப மோகங்
குறியழிக்கும் நினைவழிக்குங் கூட்டைக் கொல்லும்
வீறுன விந்துவுக்கு மேலே நின்று
விருதுபெற்ற மௌனியல்லோ வெட்டி னாரே.

வெட்டினார் மௌனியந்த விந்து பாம்பை 88
வேதாந்த மென்றதொரு வாளி னாலே
தட்டினார் மாய்கையைத்தான் சண்ணிக் கீழே
சச்சிதா னந்தவெள்ளச் சார்பி னாலே;
ஒட்டினா ரொட்டினநிர்க் குணத்தின் மட்டும்
உத்தமனே யதுவல்லோ ஞான வீதி?
தெட்டினார் தெட்டினார் சகல ரெல்லாம்
செகசால வித்தையென்று தெளிந்து பாரே.

தெளிவதுதா னெளிதல்ல வாய்ப்பேச் சல்ல; 89
சிங்காரப் பெண்கண்டால் ஞானம் போச்சே.
அழிவதுதான் சடலத்துக்கே யடுத்த கூறும்
அதிமூண்டு [illegible] மென்பார்

கழிவதுதான் காலேது வாசி யேது
கைவிட்ட மைதுனத்திற் கலப்ப தேது?
ஒழிவதுதா னெந்நாளோ வென்று லோகர்
ஒருகோடி மாண்டார்க ளுன்றிக் காணே.



காணப்பா பிறப்பிறப்புப் பெண்ணு லாச்சு; 90
கைகடந்த மாயமெல்லாம் பெண்ணு லாச்சு;
பூணப்பா இந்திரியம் பெண்ணுலாச்சு;
புகழ்பெரிய வாசனையும் பெண்ணு லாச்சு;
தோணப்பா மனம்புத்தி யாங்கா ரத்தில்
சொக்கிச்சுப் பெண்ணாலே சூட்டிப் பாரு;
ஊணப்பா வூணப்பா வுரைக்கச் சொன்னேன்;
உலகத்திற் றிரியாதே விண்ணி லாடே.

ஆடையிலே விண்ணுக்குட் சித்தர் கோடி 91
அந்தந்த மலைகளினுல் தாக்க வோடி
ஊடையிலே யண்டத்தில் முனிவர் கோடி
உற்றுநின்ற பதமளவும் ரிடிகள் கோடி
தேடையிலே சதாநித்தம் வேதம் பாரு
சேர்ந்துநின்ற வோசையிலே தெளியச்
சொல்வார்
நாடையிலே யெந்நேரம் மவுனம் நாடு
நரகமாம் வாசனைதான் நன்ருய்க் கேளு.

கேளப்பா இதைவிட்டே யுலக ஞானி 92
கேட்டதெல்லாஞ் சொல்லுகிறேன் மக்காள் மக்காள்!
நாளப்பா செகமெல்லாஞ் சாங்கமென்பான்
நலமான நூல்பாரான் தீட்சை யாவான்
காளப்பா மவுனமென்பான் விண்ணைப் பார்ப்பான்
காதகத்தை விட்டுச்சி வனத்திற் செல்வான்
நாளப்பா தினந்தோறுந் தர்க்கம் பேசி
நலமான பெண்ணோடு மயங்கு வானே.

மயங்குவான் பொன்தேடப் புரட்டுப் பேசி 93
மகத்தான ஞானமெல்லாம் வந்ததென்பான்;
தயங்குவான் மண்ணாலே சார்வு காணுன்;
சாதகமா யோகத்திற் சார்ந்தே னென்பான்;
தியங்குவான் நோய்வரிற்பூ ரணமே யென்பான்;
செகசால திரோதாயி சிரிப்பாள் பார்த்து;
முயங்குவான் சமாதிவிட்டே னையோ வென்பான்
மூடமொற்ற ஞானமெல்லா முலகிற் பாரே.

பாரப்பா சரீரமிது சமாதிக் காக! 94
பாழான தூலமிது வென்பார் கோடி
நேரப்பா வாதம்வந்தால் ஞானம் என்று
நேராக அலைந்தவர்கள் கோடா கோடி;

ஆரப்பா வுலகத்தில் ஞானி யுண்டோ?
ஆராய்ந்து நான்கண்டே னென்பார் கோடி;
ஏரப்பா வுழுதலோவெள் ளாமை யாகும்?
ஏரில்லா னறுத்தடித்த கதையு மாச்சே.

95
கதையாச்சே யுலகத்தில் ஞானம் வாதங்
கைகண்டாற் சொல்வாரே கல்போல் நெஞ்சே!
அதையாச்சே யிதையாச்சே யென்று சொன்னால்
அவன்கையி லொன்றுமில்லை யறிந்து கொள்ளே;
உதையாச்சே அரனுடனே தொழிலே நித்தம்
உதுவான வன்வாதி யுண்மை கேளு;
சுதையாச்சே ஆனாலும் பொங்கி யுள்ளம்
சுடுவான்பார் ரசயோகி ஞானி தானே.

96
தானென்ற வாதியிலே யிருவ ருண்டு;
சண்டாள வாதியென்று லுண்டு டுத்து
வானென்ற ஞானமென்ன வேதை பின்பு
மகத்தான பெண்ணோடே கூடி யாடிக்
கானென்ற ராககே ளிக்கை பார்த்துக்
கண்டபெண்ணைத் தாய்போலக் கருதிச் சென்றே
ஊனென்ற உடம்பெடுத்துப் போக வென்பான்
உலுத்தனுக்குச் செனனமென்ற நரகந் தானே.

97
நரகமென்ற பெண்மேலே யாசை விட்டு
நாதாந்த வேதாந்த சித்தாந் தம்பார்;
நரகமென்ன வுலகமெலா மனத்தில் வைத்து
நலமான தேவிகிரி யையிலே நின்று.
நரகமென்ன சடமுதல்நா மல்லவென்று
நாட்டினுள்ளே தசதீட்சை கடந்த பின்பு
நரகமென்ற சிவசொத்தை வறுமை தின்று
நாமறியோம் வாதமென்றே யிருப்பார் காணே.

98
இருக்கையிலே சதகோடித் தொழிலைச் செய்வார்:
இத்தனைக்கும் பொருளெதிவன் வறுமைக் கென்பார்;
இருக்கையிலே செயநீர்செந் தூரஞ் சுன்னம்
எடுத்தெடுத்தே யடுக்கிவைப்பார் அநேகங் கோடி:
இருக்கையிலே தொழிலெடுப்பா ரார்க்குங் காட்டார்:
இல்லையென்பா ருண்டென்பா ரனேகம் பேர்கள்
இருக்கையிலே சதாநித்த மறிவா லூட்டி.
இருப்பார்கள் மவுனமுத்த வாதி மாமே.

99
வாதியென்று லவன்வாதி மவுன வாதி
மகத்தான பிரபஞ்சத் திருந்தா லென்ன
வாதியென்றால் ரசவாதி ஞான வாதி
வாங்காமல் சமாதியிலே யிருந்த வாதி

வாதி யென்றால் நிசவாதி நிர்மல வாதி
வாய்திறக்க அண்டத்தே வாழ்ந்த வாதி
வாதியென்று லவரிடத்தே சித்தர் செல்வார்
மயக்குகின்ற செனனமில்லை முத்தி தானே.

முத்தியிந்த வாதிக்கு வருகுமென்று 100
மூச்சுமுதற் சிவன்சொன்னு ரென்று சொல்லிப்
பத்தியிந்த சிவசொத்தைப் பெண்ணுக் கீந்து
பாழான விடயமெல்லாம் பண்ணிப் பண்ணி
அத்தியென்ற பஞ்சகத்தைப் பண்ணிப் பாவி
ஆங்காரத் தால்திரிந்தும் வேதை போட்டு
மற்று நின்றே அலைந்தவர்க்கு நரக மெய்தி
மாளுவார் கோடி செனம மருளு வாரே.

மருளாம லிருக்கவல்லோ வாதஞ் சொன்னர்? 1
மாண்டிறந்து மாண்டிறந்து பிறக்கை நன்றோ?
வெருளாமல் மனம்பிடித்த வாதி யானல்
வெகுசுளுக்கே யேறுதற்கு ஞான வீதி
அருளாமோ பொருளாமோ வென்றே யெண்ணி
அலையாமல் நின்றவனே ஆதி யோகி
இருளாமோ வெளியாமோ வென்றே யெண்ணி
ஏகவெளி சுத்தவிரு ளாகிப் போமே.

ஆகவப்பா விருப்பத்தோ டஞ்சு நூறும் 2
அறைந்திட்டேன் வாதத்தை யறிந்து கொள்ளு:
ஆகவப்பா இதற்குள்ளே ஞானம் நூறு
அப்புறத்தே சொன்னதொரு ஞானம் நூறு
ஆகவப்பா இருபத்தோ டெழுநூ றுந்தான்
அறிந்த மட்டும் சொல்லி வந்தேன் வல்லோ ருண்டோ
ஆகவப்பா பார்த்தேயிக பரமுஞ் சித்தி
ஆதியென்ற குருவருளால் சொன்ன முற்றே.

## பின் ஞானம் நூறு

கைலாயப் பரம்பரத்தி லென்னை யாண்ட 1
கடவுளெனுந் தெட்சணு மூர்த்தி பாதங்
கைலாயத் தெனையீன்ற ஆயி பாதங்
கருணையுடன் போற்றி நித்தம் ஞானம் சொல்வேன்;
கைலாய நிர்க்குணநிர் மலமே தேவர்
காட்டுகின்றீர் கேசரிசின் மயமாய்க் கையில்
கைலாய பரம்பரையாய் வந்த பேர்க்குக்
கடைப்பின்னே ஞானத்தைப் பாடுவேனே;

2
பாடுகின்றேன் சரியை யென்ன? தேவி திட்சை
பரிவாகக் கிரியையென்ன? தேவி பூசை;
பாடுகிறேன் யோகமென்மா சற்ற அமுதம்;
பாங்கான ஞானமென்ன? மௌனத் தந்தம்
பாடுகிறேன் திடத்திரனு யீதோ கீதம்;
பாங்கான அஞ்சலிதான் மனமாந் தேகம்
பாடுகிறேன் பரன் முனிவ ளுக்கே யென்றால்
பரிவானால் ஞான வித்தை பலிக்குந் தானே.

3
தானென்ற ஞானத்தின் பூமி கேளு;
சாதகமா யோகமென்ற அபர வீடு
வானென்ற பூமியிலே வித்தை கேளு;
அறிவிற்கு மறிவான வுகார விந்து
வேனென்ற வெளியெல்லாம் படைத்து நின்று
வேதாந்த அண்டமென்ற மகார மாச்சு:
கோனென்ற நாதமங்கே குமுறியாடும்;
கூப்பிட்டாற் கேளாது கண்ணும் போச்சு.

4
போச்சப்பா தத்துவங்க ளனித்தியப் பட்டுப்
புலன்கெட்டு நிலங்கெட்டுப் பொறியியுங் கெட்டே
ஆச்சப்பா மனவரையில் மயங்கி நின்றே
ஆடுவோதர் படம்போல அசைந்து தள்ளு:
நீச்சப்பா கடநீச்சுத் திரோதாயி வெள்ளம்
நிலையேது கரையேது தவணை யேது?
மூச்சப்பா அடங்கு முன்னே மாயை வந்து
முற்றிமுதிர்ந் தறிவுதள்ளு மோசங் காணே.

5
காணப்பா மனவரையா மாறுக்குள்ளே
கடைத்தேறப் போகாது கலக்க மெத்த
ஊனப்பா வென்று சொன்னால் மன மூறுதே
உற்றுமெள்ளப் பிடித்தாலும் மாயை கட்டும்;
வீணப்பா வுலகத்தோர் ஞான மெல்லாம்;
வேதாந்த சித்தாந்த மென்பார் கோடி
தோணப்பா ஞானமென்ன கண்டிப் பில்லைச்
சுடர்கோடி யொளிபோலத் தோன்றுந் தானே.

6
தானென்ற நிர்மலமா மனத்தின் வீதி
தாண்டரிது தாண்டினு லறிவு போற்றும்
கானென்ற மனத்தின்சா தகத்தைக் கேளு
கற்பமுண்ண வத்துண்ணல் வாசிதோறும்
பானென்ற பாணத்தின் பாதை நில்லு
பகலாலும் கேசரத்தில் மனந்தா னெட்டும்
வானென்ற வெட்டவெளி வடிவு காணும்
மாச்சல்போத்த மாச்சல் மெத்த மருவி கூடே.

கூடுவது நிமைக்கு மூன்னே குளிகை கூட்டுங் 7
கூப்பிட்டால் பூரணந்தான் கூடப் பேசும்;
ஆடுவது மனவரையில் மாயம் போக்கும்
அருவிலே சொக்கின்றி ஆட்டுவிக்கும்
நாடுவது பூரணத்தி லேற்றிக் காட்டும்
நலமான சாணையார் கெவுனஞ் சூதம்
தேடுவது சித்தருக்குக் குளிகை கொட்டுச்
செகத்தோர்க்கு வாதமென்றே தேட்டுத் தானே.

தேட்டான வரைகடந்து மனமுந் தாண்டித் 8
தெளிவான அறிவினுடை வரையுந் தாண்டி
நீட்டான பூரணத்தின் வரைகா னென்று
நேரான மூன்றுவரை யேறிச் சொக்கிப்
பூட்டான பூட்டிறங்கி விட்டேன் மைந்தா!
புகழான வெறுவெளியி லேறப் போகா
ஆட்டான கைலாயப் பரம்பரை வந்த
ஆச்சரிய மூலகுரு வாக்குங் கேளே.



கேளப்பா மூலர்க்குகா லாங்கி பிள்ளை;
கெடியான காலாங்கி மைந்தர் போகார்;
நீளப்பா போகர்பிள்ளை கொங்க ணர்தான்;
நேராக நான்குமுறை பேர னுகித்
தாளப்பா மேருவிலே தவசு பண்ணிச்
சாதகமாய்க் கைலாய வர்க்க மானுர்;
ஆளப்பா பிள்ளையென்ரு லவரே பிள்ளை;
ஆச்சரிய மின்னமுண்டு சொல்லுவேனே.

சொல்லுகிறேன் சிங்கென்று முன்னே யூன்றிச் 10
சோதிகண்ட பின்பதிலே மனத்தை யூன்றிச்
சொல்லுகிறேன் அங்கென்று பின்னே யூன்றிச்
சோதியிலே அக்கரங்கள் தனமுங் கண்டு
சொல்லுகிறேன் பின்பல்லோ மவுன முன்னித்
தொடர்ந்தேறித் தளமெல்லாம் பார்த்துக் கண்டு
சொல்லுகிறேன் புருவமை யத்திற் கூடித்
துரியமென்ற அறிவினுள்ளே சொக்கினுரே.

சொக்கியல்லோ அறிவைவிட்டே அகண்ட மேறித் 11
துயரறவே சமாதியுள்ளே கற்ப முண்டு
சொக்கியல்லோ மூன்றுவரை சடத்தோ டொக்கச்
சுருபவரை காணவென்று துணிந்து பொங்கிச்
சொக்கியல்லோ ஏறுவதற்கிவ் விதமா மென்று
சோதித்துக் குளிகையெல்லாம் பார்த்துப் பார்த்துச்
சொக்கியல்லோக ஏற்றிவைக்குஞ் சுருபமணிபொன்று
குட்சமாய் மூலருடை நூல் பார்த்தாரே.

12
பார்த்தறிந்தா ரிந்தமணி வாத மென்று
பரிவான கயிலாய தெட்சணா மூர்த்தி
சேர்த்தறிந்த தம்முடைய வர்க்க மான
சீட ரிலே திருமூலர் சண்டி கேசர்
மாத்தமிஞ்ச சனகாதி நால்வ ரோடு
மருவி நின்ற வியாக்ரபதஞ் சலியி னோடு
போக்கறிந்த வடியெனுடொன் பதுபேர் பிள்ளை
புகழான பூரணத்தி லெழும்பென் றாரே.

13
எழும்பையிலே நிர்மலம்போந் சடமோ காணு
தேனென்றுற் பூரணந்தா னெதுக்குப் பேசும்
எழும்பையிலே குளிகைமுந்ற் காண்டிற் பத்தே
ஏற்றியதோர் தீபத்தின் சுடர்போற் காணும்
எழும்பையிலே தேகமில்லை கோடா கோடி
எடுத்தசடஞ் சூட்சுமமா யிருந்த தென்றால்
எழும்பையிலே மேலெழும்பி மௌன முற்றும்
இருந்துரைத்த சமாதியுடைப் பலந்தான் காணே.

14
காணப்பா சொருபமொன்று கலிதா னென்று
கையடங்கா தட்டமா சித்தி யொன்று
பூணப்பா கைகொடுசின் மயமாந் தேவர்
பொருளோடே அருளான போக்குக் காட்டித்
தோணப்பா தோன்றிநிற்கும் சும்மா அம்மா
சுபமாக இசைந்ததிலே சொக்கு மென்பார்;
வீணப்பா மற்ற தென்சின் மயத்தைக் காட்டி
வேதாந்த மூலத்தை விளம்பென் றாரே.

15
விளம்பினார் சனகாதி வேதங்கோடி;
விதத்தாரே மவுனத்தைச் சண்டி கேசர்
விளம்பினார் பதஞ்சலியு மனந்தங் கோடி;
விரித்தல்லோ திருமூல ரனேகஞ் சொன்னார்;
விளம்பினார் வாவாதா மென்று யானும்
விரியாம லிருநூறு ஞானஞ் சொன்னேன்;
விளம்பினார் வெகுவாக என்னூல் கொஞ்சம்
வேதாந்த மிருநூறும் விரைந்து காணே.

16
காணப்பா மும்மணிகை லாய வர்க்கம்
கழியாமற் பிள்ளைகட்கே மற்றோர்க் கில்லை;
தோணப்பா இவை மூன்றுஞ் சித்தர் சொல்லார்.
சொற்பெரிய பூரணமே சொல்ல வேணும்;
வீணப்பா ஆராலுஞ் சொல்லக் கூடா
வேதாந்த அந்தத்தில் வெளியிற் கூட்டும்
ஆணப்பா அறுபத்து நால் மரபுக் குள்ளே
ஆருமே யிவ்வயதை அறியார் காணே.

அறியாத குளிகையுடன் சாரணையிற் குத்து 17
அதன் பெருமை காணக்கொங் கணரைக் கேளு:
அறியாத அண்டமுதற் புவனம் பார்த்து
அருவியதோர் பதம்பார்த்துத் திரிந்தே ஆடிக்
குறியாகக் கற்பமெல்லா மேறிப் பார்த்துக்
கூருத பூரணத்தைக் காண்பே னென்று
நெறியாக மனமுரைக்கக் குளிகை கட்டி
நேராக மனவரையி லேறி ஞரே.

ஏறிஞ ரறுவரையி னியல்புங் கண்டே 18
இதமாக அறிவுடைய வரையிற் சென்று
தேறிஞர் மனமுரைத்தார் கண்டத் தேறச்
சேர்ந்தேறச் சேர்ந்தேறி வரையிற் ருண்டிக்
கூறிஞ ரிவ்வளவு மொன்ரு வென்ருர்
கூசாமல் மருவரையில் குதிரைப் போட்டார்
மாறிஞல் சென்றுமணம் பிடித்துச் சென்ருர்
வரைமூன்றுங் கடக்கவொரு கற்ப மாச்சே.

ஆச்சப்பா நாள்தரையி லேறும் போது 19
அரகரா வெழுகோடி யிடிபோல் நாதம்
மூச்சப்பா வோடாது முன்பின் ருேணு
முதிர்ந்தமன மாயையினுல் பின்னுஞ் சென்ருர்
கூச்சப்பா ஐவரையிற் போக்கி நின்ற
குருகுரென மொழிந்ததிலே மனமுந் தேறிப்
போச்சப்பா சடமொன்று நிராசை யாகிப்
புக்கினர் அறுவரையிற் புக்கினுரே.

புக்கியல்லோ சுழல்காற்றின் றுரும்பு போலே 20
புலம்பினர் மூலருடைப் பேரன் பேரன்
மக்கியல்லோ மனம் போச்சுக் குளிகை போச்சு;
மாருத மௌனமுன்னே மாண்டு போச்சு;
ஒக்கியல்லோ சிலப்பொலிதா னுள்ளே வாங்கி
ஓகோகோ குளிகையது கீழே வாங்கு
சொக்கியல்லோ யென் செய்வே னென்றே யேங்கித்
துரியத்தை விட்டு மெள்ளக் கீழ்க்கொண் டாரே.

கீழ்க்கொண்டார் கீழ்க்கொண்ட கொடியாஞ் சித்தர் 21
கேசரத்தை விட்டுமெள்ள அறிவில் நின்று
நாட்கொண்ட பாடெல்லாம் நினைத்துக் கொண்டு
நான்பிழைத்தே னுன்பிழைத்தே னென்று சொல்லி
ஆட்கொண்ட என்குருபூ ரணத்தில் நின்றீர்
ஆச்சரிய மெனையின்று மிவரை யையா!
வேட்கொண்டா யென்றவத்தை யீந்த னையா
வெறுவெளியதஞ் சிலம்பொலி [illegible] வென்றுரே.

22

மேவென்று சொல்லுமுன்மேற் கண்ட போகர்
வேதாந்த சிரோமணியைப் பெறுதி மைந்தா!
கோனென்ற குருவுக்கும் அவரே சீடர்
கோடிலட்சத் தொருசீட ருண்டோ காணேன்:
பானென்ற வேதாந்தஞ் சித்தாந் தம்பார்
பறக்கிறதோர் குளிகைமுதல் வாதம் பார்த்துத்
தேனென்ற கைலாய வர்க்கமாகிச்
சித்தருக்குச் சித்தராய் ரிடியா னாரே.

23

ரிடியென்ன சிலம்பொலியைக் கண்டா ருண்டோ
நேராக வதற்குள்ளே சேர்ந்தா ருண்டோ
ரிடியென்ன ரசவித்தை யறிந்தா ருண்டோ
நிமிடத்தில் கவனமுற்றுத் திரிந்தா ருண்டோ
ரிடியென்ன அண்டமுதற் புவனந் தாண்டி
நின்றநிறை பாய்க்கண்டு வந்தோ ருண்டோ
ரிடியென்ன மவுனமுற்றுச் சமாதிக் குள்ளே
நின்ற தனால் திகைமையாய் நினைவாய்க் காணே.

24

காணப்பா ரிடியாட்டுஞ் சித்த ராட்டுங்
காரணமாய் மவுனத்தே நின்றோ ராட்டும்
பூணப்பா பூரணத்தே நின்றோ ராட்டும்
பொன்னாகை மரமுதலால்ப் புகழ்ந்தோ ராட்டும்
ஓணப்பா வாசியுடைக் குதிரை யாட்டும்
ஒன்றுமற்றுத் தன்மயமாய் நின்றோ ராட்டும்
தோணப்பர் யிவைலோங் கொங் கணர்க்கே யல்லால்
சூழுலகிற் சித்தருண்டோ சொல்லி தீரே.

25

சொல்லிடமாய் ஞானமுண்டோ குளிகை யுண்டோ?
சூட்சித்த கற்பமுண்டோ வாசி யுண்டோ?
மல்சுட்ட வாதமுண்டோ சுன்ன முண்டோ?
மகத்தான சிக்கியுண்டோ செயநீ ருண்டோ?
வெல்லிடீர் விடமுண்டோ சாரணை யுண்டோ?
வெவ்வேறே கூட்டுசிற குடோரி யுண்டோ?
அல்லிடீர் வேதைசகு வணந்தா னுண்டோ?
அப்பனே பதினெழு மமைத்திட் டாரே.

26

அமைத்தவர்முக் காண்டம்பா டியதோ ரங்கம்
வந்தித்த பிள்ளைக்கு மறிவு தோன்றும்
அமைத்தவர் பாடினபொற் கம்பி போல
அறிவுகெட்ட மிலேச்சருக்கும் வாத சித்தி
அமைத்தவர் கருவெட்ட வெளிய தாக
அங்கங்கள் மறையாமற் சொன்னார் சொன்னார்
அமைத்தவர்பாட் டுக்குநம் முடைய நூல்தான்
அருகாக மறைப்பென்றே அறைந்திட் டாரே.

அறைந்திட்டாரைந்நூறு பிள்ளை வேண்டி 27
அப்பப்பால் வெகுதெளிவு சாத்தி ரந்தான்
நிறைந்திட்ட ஆரணம் போல் வெளிய தாக
நீங்காமற் றுறந்துவிட்டா ரருளொடு பொருளும்
குறைந்திட்ட புத்தியல்நிட் களமாம் புத்தி
கூருத பொருளையெல்லாங் கூறி விட்டார்
வறைந்திட்ட மவுனமெல்லாம் வெளிய தாக
வாய்திறக்கா வித்தையெல்லாம் விளக்கி ஞரே.

விளங்கியதோர் கொங்கணரால் மூல வர்க்க 28
மகத்துவந்தா னுண் டாச்சு மக்காள் மக்காள்!
விளங்கியதோர் கீர்த்தியுண்டோ வுங்க ளாலே
வெட்டவெளிக் கப்புறத்தே செல்ல மாட்டீர்;
முளங்கியதோர் குளிகையென்ன காயசித்தி
மூச்சற்ற விடத்திலே நோக்க மென்ன
பிளங்கியதோர் சித்தருட வர்க்க மென்ன
பேய்மக்கள் மூவைந்து பேரிற் றூனே.

தானென்று சொன்னதென்ன என்னைப் பெற்ற 29
சச்சிதா னந்தவெள்ளத் தயவுள் ளாரே
கோனென்ற மூக்குளிகை நமக்குண் டையா
கொடியதொரு மவுனவித்தை நமக்குண் டையா
பானென்ற வாசிவித்தை
நமக்குண் டையா
பாங்கான காயசித்தி
நமக்குண் டையா
வானென்ற வெட்டவெளி
யேறி யாடி
வருகிறேன் விடைகொடுத்து
வாழ்த்திடீரே.



வாழ்த்தியுன்னை யனுப்பினுல் 30
பூர ணந்தான்
வரைகடந்தே ஆறுவரை
யேறு வாயோ?
வாழ்த்தியுன்னை யனுப்பினுல்
நரகத் துள்ளே
மயங்காமற் செல்லுவையோ
மைந்தா சொல்லு
வாழ்த்தியுன்னை யனுப்பினு
லிடியிற் குள்ளே
மயங்காமற் றியங்காமல்
மருவு வாயோ?
வாழ்த்தியுன்னை யனுப்பினு
லென்ன முன்னுல்
வாய்ப்பேச்சே [illegible]
மார்க்கம் தானே?

மார்க்கமென்ன எனையின்கை லாய மூர்த்தி! 81
மகத்தான மொழியுன்னை கற்பம் வாழ்ந்தேன்
சேர்க்கமென்ன சிவாலயங்கள் பலியேற் றுண்டேன்
சிவமேது நீயன்றி வேறு காணேன்
ஆர்க்கமென்ன குளிகையிட்டுச் சென்று போறேன்
அங்கங்கே மனந்தேறிப் போறேன் போறேன்
தீர்க்கமென்ன செய்கினும் சொக்கப் போமறன
திரும்பினால் சடத்தோட திரும்பு வேனே!

திரும்புவையோ என் மகனே திடத்தா னுண்டோ 82
சிறுபிள்ளை புத்தியல்லோ செப்பு றாய்நீ
வளர் பிறையோ தேய்பிறையோ ரவியி னுள்ளே
வருவதுபோ லல்லவது மாட்டி வாங்கும்
பரும்பிறையோ யோகமது பிறவி கோடி
பாங்கான ஒளிக்குள்ளே கண்ணோ கூசும்
அரும்பிறையோ மனந்தளும்பு மேலெவாபீடாதே
அரகரா என் மகனே யறிவாய் நீயே.

அறியாத வரை பார்க்க நான்தா னேறி 83
அய்யனே மூன்று வரைக்குள்ளே சித்தி
செறியாக நால்வரையி லேறெட் டாமல்
கிபிடத்தி லறிவினிலே வந்து நின்றே
மறிவானம் படைத்த கொங் கணரே சித்தர்
மற்றோரை யான் காணேன் மைந்தா சொல்லு
நெறியான வழியடக்கிச் சூட்சமாகிப்
போனவரார் போகருடைப் பிள்ளை தானே.

பிள்ளையென்று லவரல்லோ போக ருக்குப் 84
புகழான டிகளெல்லாஞ் சித்த ரென்பார்
தள்ளையென்று லவர்தாமு மிடம் போன
சச்சிதா னந்த விம்பமான பிள்ளை
கொள்ளையென்று லவர் கொள்ளை ஞான வீதி
கொடிதான சிலம்பொருளைக் கேட்டு மீண்டார்
விள்ளையென்று வந்ததனால் கீர்த்திபாச்சு
வேதாந்த அர்த்தமெல்லாம் வெளியாய்ப்போச்சே.

போச்சென்று சொல்வதென்ன போய்வா னையா 85
புத்தி சொன்ன புத்தியெல்லாம் போட்டிட்டாயோ?
வாச்சென்று என்வயிற்றில் பிறந்த பிள்ளை
வந்தா லென்? கெட்டாலென் மகத்வ முண்டோ;
கோச்சென்ற காவமென்ன விடிந்தா லென்ன
கோடிரவி காந்தியென்ன பயமுண்டாமோ?
ஓச்சென்ற சிலம்பொலியைக் கண்டு வாரேன்
ஒரு மனமாய் பூரணத்தி லுன்னி டேரே.

கேளப்பா எமத்தைச் சொலவே நானுங் 46
கெடியான மேமுட னுசங் கொண்டு
வாளப்பா பிரணுபம் பிரத்யா காரம்
மாத்தான தியானமொடு தாரணை கேளு
தாளப்பா சமாதி யுடை விடை பங்கம்
தனித் தனியே சொல்லுகிறேன் நன்குருப்ப பாரு
வேளப்பா எமமென்ற பத்துஞ் சொல்வேன்
வேதாந்த பொறியறிந்தோர் பெரியோர் தாமே.

பெரியோர்கள் ரண்டமென்ற ஆன்மா நோக்கிப் 47
பேரான பரிச்சின்ன மனமுமாகி
அறியோர்கள் சாதியென்ற ஆச்சிரம் விட்டே
ஆசையென்ற விகற்பமெல்லா மடித்துத் தள்ளிப்
பரியோங்க ளிங்கிசையை நீக்கிப் போட்டுப்
பராபரத்தை நோக்குவதங் கிசமதாகும்
சரியோரா வஞ்சால மதத்தி னாலும்
தனித்தனியே கண்டிக்கப் படாதென் பாரே

என்பார்க ளிங்கிசைதா யிருக்கு மாண்பர் 48
எங்கெங்கும் நிறைந்திருந்த சருவ மூர்த்தி
அன்பார்க ளிதுவல்லோ சத்தி யந்தான்
ஆரதிக ஆன்மசரீ ராதி சுபாவம்
வன்பார்க ளபகரிப்பை விட்டு விட்டு
மனமுரைத்தா லாரதிக மென்று பேரு
தன்பார்கள் பிறசரீ ராதி சுபாவந்
தானென்ற தற்குலலட் சணந்தான் பாரே

பாரப்பா பிரமமது சுபாவமாகப் 49
பரவிபது நிரந்தரமுஞ் சரித்தா லன்று
நேரப்பா பிரமசரிய மிதுவாங் கண்டால்
நிரந்தர முந் தபவினுடைய நினைவு கேளு
தாரப்பா சரீரத்தில் வருத்தம் நீங்கிச்
சகலசனம் நம்மைப்போ லென்றே யெண்ணி
ஆரப்பா சுபானுபவ போதஞ் செய்வார்
அவரல்லோ தபவுடையோ ரறிந்து காணே

தாணப்பா வேதாந்த சாத்திரப் செப்மை 50
கரைகற்ற சமயமவாய் யென்று தள்ளி
ஆணப்பா திடப் பட்டாட தேசமென்பார்
வீட்சணமுஞ் சீவமுஞ் சுகதுக்கத்தால்
வீணப்பா மானுபீ மானம் வந்து
வெறும்வெளிபோற் சொப்பனமா மென்று தள்ளித்
தோணப்பா தாங்காம லகண்டத்தன்னை

காணப்பா விப்படியே தீர்த்தியானால் 56
கைகடந்த சிவபூசையென்று சொல்வார்
வீணப்பா சகல்நூ லென்று தள்ளி
விரைந்து வந்த விரத்தியெல்லாம் விட்டே யோடி
ஊனப்பா குருபிறகே நிழலைப் போலே
உத்தமனே சச்சிதா னந்த னாய்
ஆணப்பா தேவிக்கு பசித்து வென்று
அறிகிறதே சிரவணமென் றறிந்து கொள்ளே.

அறிந்திந்த வேதநிலை விட்டு நீயும் 57
அப்பனே வாசனைப்ர பஞ்சந் தாண்டி
மறிந்திந்த புத்ராதி பாசத் தாலே
மாயம்வந்து முட்டையிலே வச்சை யாக்கிச்
செறிதவகை படிச்சகமே சாந்தம் பார்த்துச்
சீராக நிற்கிறதே செம்மை யாகும்
நெறித்து நின்ற வேதாந்தப் பிரமந் தன்னில்
நினைவோடு வருகிறதே யாசை தானே.

ஆசையென்றும் மதியென்றும் அகங்காரம் 58
அப்பனே தாம்பிரம மென்றே ஆசான்
தேசையென்ற வுபதேசப் படியே யென்றும்
நேராக வேதாந்தப் பொருளென் றெண்ணிப்
பூசையென்று மற்றதெல்லாந் தள்ளி விட்டால்
உத்தமனே சிவமென்று சொல்லுவார்கள்
காசையென்றே என்னென்ன கார்யம் வந்தும்
கைவிட்ட துக்கம் வந்துங் கலங்கி டாரே.

கலங்காமல் தாம்பிரம மென்றே யெண்ணிக் 59
கவடற்ற நிரந்தரமே சாந்தம் பார்த்தே
மலங்காமல் நிற்கிறதே விரதமப்பா
மகத்தான நேமமென்ற பத்து மாச்சே
இலங்காம லிருப்பதையும் மனுட் டித் தாக்கல்
என்மகனே மனந்திடமா யில்லா விட்டால்
துலங்காத சுவர்சித்திரம்போ லாகும்
சுழிபதுதா னடிப்படைமுன் றென்றுஞ் வாறே.

வாருகச் சுகாசனமா யிருந்து கொண்டு 60
மருவியதோர் மூலத்திலங் கென்று பூரி
கூறுகக் கும்பித்துமாத் திரையை மாற்றிக்
குறிபோடே சிகாரத்தால் ரேசி ரேசி
சாருக விப்படியங் கென்று கும்பி
சாதகமா யிவைமூன்று தீர்ந்த பின்பே
ஆருக அகாரமுக லுகாரங் காட்டி
அப்பனே மவனத்தாற் கும்பித்து [illegible]

கும்பித்து மௌனங்காண் குவிந்த பின்பு 61
கொண்கையதோர் மூலத்தை விட்டு நீயுந்
தம்பித்துக் கண்டத்தே நின்றே யூது
தாலமுந்தி யுரைத்தபின் மேல் மூலம் நின்று
சொம்பித்தே யுதிவாடே வெளிச்சம் பூரி
சுகமாகப் பூரணத்தை யதற்குட் கும்பி
தம்பித்து மனத்தோடு ரேசகத்தைப் பண்ணு
தலமான பிரமமென்று பிராண னுச்சே

ஆச்சப்பா இதுவல்லோ பிராணா யாமம்? 62
அறிந்தவனார் சிவயோகி யறியார் மற்றோர்
ஓச்சப்பா பிராணஞ்ச வாசை விட்டே
ஒவ்வையுந்தான் மனத்தினுள்ளே சங்கியாமத்
வாச்சப்பா வந்ததென்ற காரண மாக
மருவியதோர் ஞான மென்ற மார்க்கந் தாடிக
கூச்சப்பா காமியத்தை நரகென் றெண்ணக்
கூறுன் கர்மமெல்லாம் விடுக்க நன்றே.

நன்றாக வேதாந்த சாத்திரத்தால் 63
நாம்சாட்சி யென்று நித்த முரைத்து நின்று
பன்றான மற்றவைநாம் அல்ல வென்று
பரவிநின்ற புலகமெல்லாம் மிதையென்று
நன்றாக வுரைப்புநிரந்த தரமு நினைவாய்க்
காரணகாரியங்களெல்லாந் தவிர்ந்து போட்டு
ஒன்றான வொரு பொருளாய் நின்று பாரு
உத்தமனே பிரத்தியாகார மாச்சே.

ஆச்சப்பா மாயையோடு மாய விந்தம் 64
அப்பனே சுத்த சைதன்ய மூன்றும்
போச்சப்பா ஆகாயம் போலே எங்கும்
ஓடியெங்கும் மறைந்திருக்குங் கண்டாலுந்தான்
ஆச்சப்பா அவர்களைத்தான் தீர்த்த மூர்த்தி
யாகஎனி தோத்திரமாய்த் தியானம் பண்ண
வீச்சப்பா பிரமமென்றே தியான மாச்சு
விளம்புகிறேன் ஐந்து வகைச் சமாதி தானே.

65
தானென்ற அதிட்டான சைதன் யத்தைத்
தன்னையளித்து நிலவறையில் தீபம் போல
ஆனென்ற வல்லவற்றுத் திடமதாக
அப்பனே அகண்டமது தானாய் நின்று
வேனென்ற தோற்றமற்றே யிருந்தா யானால்
விளங்கியதோர் தத்வயுபச் சமாதி யச்சு
வானென்ற சவ்விகற்பச் சமாதி கேளு
மருவியதோர் தத்வலயச் சமாதிக் குள்ளே.

உள்ளாக இருக்கையிலே பேசுஞ் சுற்றம் 66
உறவாகக் கேட்டாககாந் தானு வித்தைத
தன்னாகச் சவிகற்பச் சமாதி யென்று
தாமுரையார் பெரியோர்கள் கேளு கேளு
விள்ளாகத் திரிசானு விதை மார்க்கம்
விரவியந்தச் சமாதியிலே நிற்கும் போது
தள்ளாதே தன்னையனு சந்தானித்துத்
தகமான சந்தானந் திரிசான மாச்சே.

ஆச்சப்பா இதன் பேரசவ் விகற்ப மென்பார் 67
அருளிடதோர் நிருவிகற்பச் சமாதி கேளு!
ஓச்சப்பா தத்வமயச் சமாதி முத்தி
உத்தமனே சாந்தனுகூடுங் கேம றந்து
ஆச்சப்பா தச்சமூற்று மிநகம் போல
ஆச்சரியஞ் சத்தமெல்லாங் கேளா விட்டால்
கூச்சப்பா சித்தபதி சொரூபத் தன்னே
கொண்டாற் பூரணத்தநிவிரு விகற்ப மாமே.

ஆமப்பா சமாதிவிட்டுச் சரிக்கும் போதும் 68
அப்பனே சாத்திரங்கள் பார்க்கும் போதும்
ஓமப்பா காலமென்ற விரையு மில்லை
உத்தமனே பிரபஞ்சமில்லை யென்று
சோமப்பா விகாரந்தோற் றம்ப்ர பஞ்சஞ்
சொப்பனப்போல் பாசமென்ற மதிய டக்கில்
ஆமப்பா தீவிரமாம் பிறவி யார்க்கும்
அகத்தான காரணமு மொன்றே யென்னே.

எண்ணியல்லோ மனத்துள்ளே படாதே நீக்கி 69
ஏக்கமாய் நிருவிகற்ப மாகி நின்றே
அண்ணியல்லோ பிரபஞ்ச விகற்பந் தள்ளி
அனுபோக நிருவிகற்பச் சமாதி யாச்சே
ஒண்ணியல்லோ சொரூபத்திற் லயிச்சு நின்றே
உற்றிருந்த அகண்ட விர்த்தி காற்றில் தீபந்
தண்ணியல்லோ வுப்புண்டாற் போலே மைந்தா
சாதகமா யுன்னுருவங் கெட்டுப் போச்சே.

போச்சதுவுங் கடிகையொன்று தானாய் நின்றாற் 70
புகழான பெருமை சொல்ல வென்றார் கூடா
ஆச்சதுவு மவனமுற்ற வாயை மூட
ஆசையற்றே இனர்கல்லோ அகண்ட விதி
வாச்சதும்ப்ர பஞ்சத்திற் கண்ட தெல்லாம்
வடிலையு னு ரபாலும் மலேரோத் காணும்
கோச்சதுவுஞ் சித்தியுடை நாலும் போல
உறும்பு வெங்கப்போற் குறியைக் காணே.

பூணப்பா ஆனந்தமயமு மாகப்
பொங்கிற்றே பஞ்சநிறைவோதத் திக்குத்
தோணடபர நிறைஞ்ச மாயமாயை
சொல்லுகிறேன் சூட்சத்தைப் பூட்டிப் பாரே.

பூட்டியதோர் விசிட்டமென்றும் விராட மென்றும் 76
புழ்பெரிய ஏகதெப்ப போக்கெ சென்றும்
நீட்டிய தாரண்ட மென்றும் புவன மென்றும்
நேரான பதங்களென்றும் மாயை யாச்சே
ஆட்டியதோ ராட் மெல்லாம் மாயை யாட்டே
அறிந்து கொள்ளு முன்மலமேமட்டை மாயை
மூட்டியதோர் வனமும்வந்த வரைக்கே யிற்கும்
மூதண்ட மனங்கடக்க மூடிய ராவாரே

வாருன உலகத்திற் சுத்த வீரன் 77
மனக்கோட்டே போராடி யருவிக் மான்வான்
கூருன ஞானியென்ருன் லிங்கம் புக்குக்
குறிபான அம்பலத்தில் சேர்வானப்பா
தாருன வுலகத்தோர்க் கடுத்த ஞானஞ்
சகத்திரமாங் கோடியிலே யொருவர் சொல்வார்
வீருன சிலபேய்கள் சாங்கம் பேசி
விழிந் திறந்து விழித் திறந்து திரிவார் தானே.

தானென்ற பிரமருமோ ரறிவிற் சென்ருர் 78
சாதமாய் மாலென்ருல் அறிவிற் ருேன்றும்
கோனென்ற ருத்திரனே ரருவிலங்கு
கொவ்வின்ற மகேச்சுரனே ரறிவிற் ருேன்றும்
வானென்ற சதாசிவனே மணியைக் காண்பான்
மகத்தான ஐவருந்தா னுக்கிர் பீடம்
வேனென்ற பஞ்சகர்த்தாள் மட்டுஞ் சென்ருன்
வேதாந்தி யெனமட்டுஞ் சொல்வார் பாரே.

பாரப்பா சித்தர்ரென்ருர் குளிகை போட்டுப் 79
பகுத்தறிவா ருன்மனியைப் பரிந்து போற்றி
நேரப்பா தம்மோடுபூ ரணத்தி னின்று
நேராக வேடம்போல் நீஞ்சியாடிச்
சேரப்பா திருப்பிவந்து புகுந்து வதாரகள்
செகத் திலுள்ள சித்தருக்கே அடுத்தவாறு
கூறப்பா பூரணத்தில் பாதந் தாண்டிக்
கொங்கனர்தாம் சிலர்போலியைக் கூடினுரே.

கூடினுர் மூலகுரு பேரென்று 80
கோடானு கோடிசித்த ராடிப் பார்த்தார்
ஆடினு ராடினு ரேற மாட்டார்

ஓடினு ரோடினு ரனேகங் கோடி
ஒப்பில்லா சாத்தி லொன்றிப் போட்டுத்
தேடினார் தேடினார் குளிகை தன்னைச்
சித்தருக்குச் சொருபனிது இட்டும் வாறே.

வாறுன கருபமணி யாரின் வர்க்கம் 81
மாத்தான தெட்சணா மூர்த்தி வர்க்கம்
கூறுன தோன்றும்வீட் டௌங்க மாக்க்
குவிந்துநின்ற பொருளாகிக் கூறுறதை
தீரான தற்பதமாய் அதுவு மாருச்
சச்சிதா னந்தத்தில் நின்ற ஆசான்
பேரான பிள்ளைகட்கு மனையுமீந்து
பெரும்பாதை மாரமென்று பேசினாரே.

பேசியதற்க் கர்த்தமென்ன வென்று கேட்டால் 82
பெருவிரலோ டாட்காய் மெய் விரலே போத
மாசியது வற்றக்காத் தவிக்கு முன்னே
மக்களே யிந்தப்பாரென்று காட்டித்
தேசியது மாரமித்தை சென்று கூட்டிச்
செப்பாதே மகார வித்தை குளிர்ந்த ஞானம்
வாசியதக் கருவாகுங் கண்டு கொள்ளும்
மக்களே சின்முகத்தில் நடுப்பா ளாமே.

நடுவென்ன வெட்டவெளி யென்றுமில்லை 83
நானுமில்லை நீயுமில்லை யகண்டவீதி
நடுவென்ன லகுவென்ன மன்ஞ் செவ்வானல்
கண்டுகொள்ளு மென்று பசாலிக் கரத்திற் காட்டிச்
சுடுவென்ன தாபசமற்ற முனையை முந்திச்
சுடுகின்ற துத்தியென்ன மௌனத் தீதான்
விடுவென்ன இந்திரியப் பாம்மை நீயும்
விட்டகன்றே யறிவோடோ மேவு மேவே.

மேவுமென்கை லாயபரம் பரையா மாறு 84
செங்கோடி நீடிகளுக்கு மூப்பதே சித்தர்
மேவுமென்று சித்தரிலே யனேகங்கோடி
மேருவிலே யிருந்தார்க்கு மூப்பதே சித்தர்
மேவுமென்றேன் றேடுலகி னுறு பேர்க்கு
விளங்கியவர் பதம்பிடிக்க வுபதேசித்தார்
மேவுமென்றே யெழுவருடன் திருமூலர்க்கு
விளம்பினார்மெய்ஞ்ஞானம் விளம்பி னாரே.

விளம்பியதா மெல்லாங்கை லாய வர்க்கம் 85
மேருவிலே யெடுத்தவுடன் லெமக்கு மக்காள்
அளம்பினதோர் சங்கதி யைய விட்டே
அரைக்கணமும் பிரியார்க ளடியை விட்டுத்

நன்றான மௌனமல்லோ ரிடிகள் சித்தர்
    நாலுமிக்குஞ் சொரூபமல்லோ ஞானி யானோர்
நன்றான மௌனத்தைக் கண்டார் முன்னே
    நலமாகக் கூப்பிடுவது கண்டி லாரே.

கண்டிலார் மோனத்தி லனேக சித்தி 91
    கணுமப்பா சொல்லுகிறேன் நன்றாய்க் கேளே
அண்டமவர் மந்திரங்கள் செபிக்கும் போது
    அப்பனே மௌனமென்ற தீட்சை கேளு;
ஒண்டியாய் வாய்மூடிப் பேசாமற்றே
    ஒருசேரச் சமைத்தன்னு ஒருபோ தப்பா
விண்டிலா தெந்நேரஞ் செபித்தா யானால்
    விளங்கியதோர் கோடிலட்ச மந்த்ரஞ் சித்தே.

சித்தாகுஞ் சித்தியுமா மெட்டெட்டாதுந் 92
    திறமாக நின்றவர்க்கு மந்த்ரஞ் சித்தி
சத்தாகும் வேத மந்திரத்தைப் பாரி
    [illegible] பேச்சே விட்டார் கோடி
கத்தாதும் நாய்போலக் கத்தி யென்ன
    காசுக்கு மாகாது சித்தி யில்லை
முத்தான மௌனம் விட்டால் மசம்பா மாச்சு
    மோசமிந்த வேதமெல்லாம் பொய்யென் பாரே.

பொய்யென்றே யெண்ணி யெண்ணி யுலகங் கெட்டுப் 93
    போச்சதனு லேயகத்தின் பேத மாச்சு;
கையென்று யோகத்தில் மௌன முட்டக்
    கடுஞ்சித்தி யறிவு மட்டுங் கலந்த தாக்கு
ஐயமென்ற சித்தமப்பா ஆறிற் காணுஞ்
    சாதகமாய் மேல்மூலர் தாண்டிக் காணும்
மெய்யென்று பிடித்தக்கா லவனே யோகி
    விரைந்ததனை யறியாட்டால் விருதா பாடே.

விருதன்றோ வுலகத்தில் ஆசா மென்று 94
    வேடமிட்டு வேடமிஞ்சி மோடி பேற்றி
விருதன்றோ பணம்பறித்துப் பிழைப்பார் பையோ
    வேதாந்த மொன்றுமில்லை சாங்க மென்பார்
விருதன்றோ கெடுத்த விட்டார் குலகத்தோரை
    வேடமென்று மயக்காலே மடியுப் போனார்
விருதாவே சிறுமைப் பாவமெல்லாம்
    விளையாட்டுப் போல்வாங்கி விழுந்திட்டாரே.

விழுந்திட்டா ரென்றதிந்த கொங்கண ரேசர் 95
    வெகுபிள்ளை போற்றீர் மூன் றாள் பிள்ளை
நழுந்திட்ட பிள்ளையுண் டோ திருந்தா னுண்டோ
    நலமாக வுமைப்போல ஒரு முண்டோ

ஆணித்தப் படிநீங்கள் சாமாதி கொண்டே
அரைவிட்டால் குளிகையிட் டேர்டிப் பாரு
தோணித்தப் படிசொன் னேன் முன்னைத் தூக்குச்
சுழல்காற்றுத் திரும்பதுபோல் மவுன மாமே.

மௌனமென் றிறெனயாண்ட தட்சிணா மூர்த்தி 101
மலர்பணிந்தே ஞானமது நாடுஞ் சொன்னேன்
மௌனமென்ற நாதாக்கள் பதத்தைப் போற்றி
மகையோடே விகண்டாக வாதஞ் சொன்னேன்
மௌனமென்றீர் ஞானம்பொய் யென்று சொல்லி
வாகான மெய்யண்டி போட்டே நூற்றில்
மௌனமென்ற சமரசத்தால் மக்காவ மக்கள்
வாகான ஞானமுறை முற்றுங் காணே.



## நூல் இருபத்தாறு

## காகபுசுண்டர்

## பாடல்கள்

சிறந்தபரா பரமாகி யெங்கும் தானாய்த்
தீர்க்கமுடன் ரவிமதியுஞ் சுடர்மூன் றாகிப்
பறந்தரூப ஐம்பூத மாயைத் தோன்றிப்
பல்லுயிருங் கோடி அண்டம் படைத்த போதம்
வரம்பெருகி யனந்தமந்தம் உயிரு மாகி
மதபேத மாகவுந்தான் வடிவைக் காட்டிச்
சரம்பெருக அண்டத்தி லெழுந்து நின்ற
சச்சிதா னந்தமதைப் பணிகு வோமே

ஓமென்ற சுழுமுனையடா அண்ட வுச்சி 2
ஓமுயர்ந்த பட்டணத்துக் கப்பாற் சென்று
நாமென்று சொலலற்ற யோக ஞானம்
காட்டுகிறேன் அஞ்சனமுந் திலகப் போக்கும்
வாமென்ற வயித்திபமும் அட்ட கர்மம்
வாதமென்ற வித்தையெல்லாம் தெளிவ தாகக்
காமென்ற பீடமதிற் கண்டு தேறிக்
காட்டுகிறேன் மெய்ஞ்ஞானக் கருவைப் பாரே

பாரேநீ யோகமென்ற வழியைச் சொல்வேன்; 3
பத்தடா ஐம்புலனைப் பரத்தி னூடே
சேரொருவர் தெரியாமல் மதங்கள் பசித்
திருவான வுச்சியிலே சேர மற்றும்
ஆரொருவன் ஆதாரம் வெவ்வே றென்றே
அடுக்கடுக்காய்ப் பன்னிரண்டு தலங்க ளென்று
வீரேதான் பேசியே மெலிந்து போவான்
விட்டமுண்ட அண்டமதை விரும்பிக் காணே.

காணப்பா தலமெல்லாம் அண்ட வுச்சி 4
கமலமடா பதினெட்டாங் கோட்டிற் சென்று
பூணப்பா மந்திரமும் நான் பிசகொட்டாமற்
பூட்டடா பிரமத்திற் புகுந்தெந் நாளும்
வீணப்பா மந்திரங்க ளொன்று மில்லை
விதியில்லை மதியில்லை வேதியு மில்லை
தோணப்பா கோணுமடா மனமொன் றாக
சுத்தமுடன் நீயிருந்து தவஞ்செய் வாயே.

செய்யப்பா வாசிமுனி மகனே கேளு 5
தீர்க்கமுடன் முன்னுரைத்த ஆயிரத்தில்
மெய்யப்பா சரக்குநீற் றுவகை யெல்லாம்
மேன்மையுடன் கட்டினங்கள் உருக்கினங்கள்
பொய்யப்பா சொல்லவில்லை ரத்னப் பாகுப்
புனிதமுடன் சரியாகச் சொல்லிப் போட்டேன்
வையப்பா இந்நூலில் மவுன மெல்லாம்
வகையாகச் சொல்லுகிறேன் பணிந்து கேளே.

கேளப்பா கேசரமே அண்ட வுச்சி 6
கெட்டியாய்க் கண்டவர்க்கே மவுன மாகும்
ஆளப்பா பரப்பிரம யோக மென்றே
அநுக்கையிலே போதமுந்தான் உயரத் தூக்கும்
வாளப்பா கெவுனமணி விந்து நாதம்
வலுத்ததடா கெட்டியாய்த் திரண்டு போகும்
நாளப்பா அண்ட மெல்லாஞ் சத்தி யோடு
நடனமிடுஞ் சிலம்பொலியுங் காண லாமே.

காணலாம் பிரமத்தில் கிர்ண யந்தான் 7
காட்டுகிறேன் வாசிமுனி கருவாய்க் கேளு
பூணலாம் அண்டவுச்சி தனனில் நின்று
பொறிகளையு முண்டாக்கிப் புவனந் தன்னில்
தோணலாம் உயிர்ப் பயிரைப் படைத்தெந் நாளுந்
தொந்தமென்னும் ஏழுவகைத் தோற்றமாகி
ஆணலாம் நாலுவகை யோனி யாகி
அண்டமடா அனந்தனந்த மான வாறே. 8

வாறான பிரமத்தி னடுவே மைந்தா!
வந்தமடா ரவிமதியுஞ் சுடர்மூன் றாகிக்
கூறுகப் பின்னியடா கீழு பாயுவ
[illegible] இருக்கண்ணில் ஒளியைக் கேளு;

வீருன அண்டவுச்சி முனைக்கப் பாலே
வெற்றியுடன் நரம்பதுதான் விழுது போலே
நேராக இருகண்ணிற் பின்ன லாகி
நிச்சயமா யொளிவாகி நிறைந்தார் பாரே.

9
பாரப்பா பரப்பிரமம் ஒளிவி னலே
பத்தியே நரம்புவழி பாயும் போது
ஆரப்பா இருகண்ணில் ஒளிவ தாகி
அண்டமெல்லாம் ஏ மாய்த் தெரியலாச்சு
காரப்பா நரம்பென்ற விழுது வட்டம்
கபாலத்தில் முக்கூருய்க் சுழுனை யாச்சு
வீரப்பா காதுக்கும் நாக்குக் குந்தான்
வெற்றிபெற இன்னமுந்தா னுரைக்கக் கேளே.

10
கேளப்பா மூலமடா லிங்கந் தன்னில்
கிருபையுடன் தண்டுக்குங் கீழ்மே லாக
நாளப்பா தமர்போலே பிடரி மார்க்கம்
நன்ருக ஓடுமடா நரம்பி னூடே
வாளப்பா அண்ட முட்டி வுயர மைந்தா!
வலுவாக முன்சொன்ன நரம்பி னூடே
தேளப்பா சேர்ந்துமிகப் பின்ன லாகிச்
சிறந்திடவே புருவமத்தி யாகும் பாரே.

11
பாரடா புருவமத்தி யேதென் றக்கால்
பரப்பிரம மானதோர் அண்ட வுச்சி
நேரடா முன்சொன்ன நரம்பு மத்தி
நிலைத்ததடா சுழுனையென்று நினைவாய்ப் பாரு
வீரடா அண்ணுக்கில் நேரே மைந்தா!
மேவடா மனந்தனையுஞ் செலுத்தும் போது
காரடா சுழுனையிலே மனந்தான் பாய்ந்து
கலந்தைந்து பூதமுந்தான் ஒன்ருய்ப் போமே.

12
போமடா முன்சொன்ன நரம்பி னூடே
பூரித்து ரவிமதியுஞ் சுடர்தாம் மூன்றும்
ஆமடா பின்னியுங் கீழே பாயும்
அந்தரங்கந் தனைப்பார்க்க அடங்கிப் போகும்
நாமடா வெளிதிறந்து சொல்லி விட்டோம்
நாதாந்த பரப்பிரம நாட்டந் தன்னை
ஓமடா விந்துவுந்தான் அண்ட வுச்சி
உறுதியுடன் சித்தமதை யூன் றிப் பாரே.

13
பாரான சாகரமே அண்ட வுச்சி
பதினலு லோகமெல்லாம் பரத்தி னூடே
சீராகத் தெரியுமடா மவுன மார்க்கஞ்
சித்தான சித்துவினை யாடி நிற்கும்

வீரான மந்திரங்கள் பிறந்த தெப்போ?
விண்ணுவென்றும் பிரமனென்றும் வந்த தெப்போ
கூரான முகருணங்க ளுதித்த தெப்போ?
கூறுத அட்சரத்தின் குறியைக் காணே.

காணுர்கள் பிரமுந்தா னுதிக்கு முன்னே 14
கடலேணயுள் ள மந்திரங்கள் பிறந்த துண்டோ?
தோணுமல் மந்திரங்க ளனந்தங் கற்றுச்
சுழுனேயென்ற மூக்குநுனி தன்னைப் பார்த்து
வீணுகத் திரிந்து மிகப் பித்தர் போலே
வேரோடே கெட்டுமல்வான் விருதா மாடு;
கோணுமலண்ணுக்கில் நேரே மைந்தா!
குறிப்பறிந்து பார்த்தவர்க்கே முத்தி தானே.

முத்தியடா மந்திரத்தை நினைக்கும் போது 15
மோசமடா மனந்தானும் இரண்டாய்ப் போகும்
சத்தியடா மனந்தானே யேகமாகத்
தனித்திருந்து நித்திரையைத் தள்ளி மைந்தா!
புத்தியடா பிரமத்திற் புகுந்து கொண்டாற்
பூலோக மெல்லாந்தான் பணியு முன்னை;
எத்தியே திரியாமற் பிடரி மார்க்கம்
ஏறுகின்ற வாசியுந்தான் கற்பந் தானே.

தானென்ற கற்பமடா மதுவுண் டக்கால் 16
சஞ்சார சமாதியென்பதற்குப் பேரு
ஊனென்ற பசிதீரும் கோபம் போகும்
உதயகிரி தனிர்சென் றாடுருவிப் பார்க்கத்
தேனென்ற திரையெழுந் தீய்ந்து போகுந்
திரிவாரே உச்சிநடுச் சென்ற போது
கோனென்ற கருவியெல்லா மொடுங்கிப் போகுங்
கூற்றுவனு ராட்டமதைப் பார்க்கலாமே.

பார்க்கலாம் ஒருகாலே உயரத் தூக்கிப் 17
பாடுவா ரொருகாலைத் தாழ விட்டே
ஏர்க்கையிலே மேல்நோக்குங் காலைக் கேளாய்
என்மகனே மதியென்ப ததற்குப் பேரு
கார்க்கையிலே கீழ்நோக்குங் காலை மைந்தா!
கண்டுபார் ரவியென்று கருதலாகும்
மார்க்கமுடன் அண்டவுச்சி மேலேதானும்
மகத்தான வன்னியிருப் பிடந்தான் பாரே.

பாரப்பா இதையறியார் சித்தர் கூடிப் 18
பார் தனிலே அறுபத்து நாலு யோகம்
ஆரப்பா இருக்குமென்று வெவ்வே ருக
அலைந்தலைந்து கெட்டவர்க ளனந்தங் கோடி

நேரப்பா ராசாங்க யோகம் பார்த்து
நிலையறிந்து கண்டவனே கோடிக் கொன்று
வீரப்பா பேசாமல் மனக்கண் ணாலே
விந்துவடா பாய்ந்ததலம் வெளியைக் காணே.

காணாத காட்சியெல்லாங் கண்ணிற் கண்டு 19
காகமடா புசுண்டனென்று பேரும் பெற்றேன்
தோணாமல் நானலைந்து சிறிது காலம்
துருவமென்ற பிரமத்தை யடுத்துக் கேட்க
நாணாமல் அண்டவுச்சி தன்னி லேதான்
நாடியே மனத்தாலே நாட்ட மாகக்
கோணாமல் பாருமென்றே எனக்குச் சொல்லக்
கூசாமல் மனமொன்றா யிருத்தி னேனே.

இருத்திய இருதயத்தில் மனமொன் றாக 20
ஏகபர மாம்பொருளை யிருத்தி யொன்றாய்
நிருத்தியே வெகுகோடி கால மட்டும்
நிருவிகற்பச் சமாதியிலே நிறைந்தேன் நாளும்
பொருத்தியே லலாடக்கண் திறந்து பார்க்கப்
பூலோக மெங்குமொன்றாய் நிறைந்தேன் மைந்தா!
கருத்தொன்றாய் நிறுத்தியடா கபாடம் நீக்கிக்
காரணத்தைக் கண்டுவிளை யாடு வாயே.

விளையாடிப் போதமய மாக வுந்தான் 21
வெட்டாத சக்கரத்தின் வெளிச்சம் பார்த்து
நிலையான அண்ட மதில் நெற்றிக் கண்ணை
நீயறிந்தே அரவுவிடந் தன்னைப் போக்கி
அலையாம லாரொருவ ருறவு மற்றே
ஆயிழையாள் மோகமதை யதட்டித் தள்ளி
மலையாமற் பிரமமே துணையென் றெண்ணி
மவுனமென்று மனந்தனையு மடக்கி நில்லே.

நில்லென்றால் லோகத்தில் மனிதர் தாமும் 22
நிட்டையுடன் சமாதியுமே பொருந்தா மற்றான்
வல்லவர்போல் வேதபுரா ணங்காவ் யங்கள்
மந்திரங்கள் கோடானு கோடி யென்றும்
செல்லுவார் கோவிலென்றுந் தீர்த்த மென்றுந்
திருடர்கள்தா னலைந்தலைந்து திரிவார் மட்டை
வெல்வதொரு பிரமநிலை யறியா மாற்றான்
வேரற்ற மரம்போலே விழுவார் பாரே.

பாரப்பா மலரெடுத்து லிங்கம் வைத்துப் 23
பார்த்திப லிங்கத்தைப் பணியா மாற்றான்
[illegible] பூசை செய்து
வீணாகள்தாம் கத்தபம்போற் கதறுவார்கள்

தேரப்பா மலரதனைக் கிள்ளும் போது
　　செத்தசனம் போலாச்சுத் தெளிந்து பாரு
காரப்பா மனங்கொண்டு பரத்தி னூடே
　　கண்டவரே கயிலாசத் தேகந் தானே.

தானென்ற பிரமத்தை யடுத்தி டாமல் 24
　　தாரணியில் தெய்வமட்டா அனந்த மென்றும்
ஊனென்ற குருவென்றுஞ் சீட னென்றும்
　　உதயகிரி பாராத வுலுத்த மாடு
வேனென்ற பொய்களவு கொலைகள் செய்து
　　வேசையர்மே லாசைவைத்து வீண னாகிக்
கோனென்ற குருபாதம் அடைய மாட்டான்
　　கூடுவான் நரகமதில் வீழ்வான் பாரே.

பாரப்பா நாக்கையுந்தான் அண்ணாக் கேத்திப் 25
　　பார்தனிலே பார்த்தவர்க்குப் பலித மில்லை
ஆரப்பா கண்வெடிக்குந் தேகம் போகும்
　　அடயோக மென்பார்களாகா தப்பா!
சாரப்பா மனந்தனையண்ணாக்கில் நேரே
　　சார்ந்துமிகப் பார்க்கையிலே வாசி தானும்
வீரப்பா மேலடங்கும் கீழ்நோக் காது
　　வெட்டாத சக்கரத்தை யறிய லாமே.

அறியலாம் மனந்தானே உயிர்தா னாகும் 26
　　அண்டத்திற் சேர்ந்திடவே ஆகும் முத்தி
பரியேறிச் சவாரியுமே நடத்த லாகும்
　　பஞ்சமா பாதகங்கள் பறந்தே போகும்
விரிவான மனந்தனையும் அனுவ தாக்கி
　　விட்டகுறை தொட்டகுறை விதியைப் பார்த்துக்
குறியான குண்டலியா மண்ட வச்சி
　　கூறுகிறேன் முக்கோண நிலைய தாமே.

தாமென்ற உலகத்தில் மனித ரோடே 27
　　சஞ்சாரஞ் செய்யாமற் றனித்து நில்லே.
ஓமென்ற ஊண் மிகுந்து உண்டி டாதே
　　ஒரமாய் வழக்கதனை உரைத்தி டாதே
ஆமென்ற அட்சரத்தை மறந்தி டாதே
　　ஆயாச மாகவுந்தான் திரிந்தி டாதே
காமப்பேய் கொண்டவனோ டிணங்கி டாதே
　　காரணத்தைக் கண்டுவிளை யாடு வாயே.

விளையாடிக் கருநெல்லி பறித்தே உண்ணு 28
　　வேகாத தலையாகும் விரும்பிப் பாரு
மலையமல் வொண்சாரை பிடித்தே யுண்ணு
　　மைந்தனே சாகாக்கா லதுவே யாகும்:

அலையாமல் சோதியதன் பாலை யுண்ணே
அக்கினியாங் கம்பமடா சுழுனை யாச்சுக்
கலைநாலு போகிறதை யெட்டிற் சேரு
கபடமற்ற தேகமடா கண்டு பாரே.

29
கண்டுகண்டு மனந்தானே அண்டஞ் செல்லக்
கலைநாலும் எட்டிலையுஞ் சேர்ந்து போகும்
தண்டுமுண்டு செய்யாதே மனம்வே றுனல்
தற்பரத்தை யெப்போதும் அறிய மாட்டாய்
தொண்டுசெய்து பெரியோரை யடுத்து மைந்தா
தொழுதுநீ யென்னாலை யன்பாய்க் கேளு
விண்டுமவர் சொலாவிட்டா லிந்நால் சொல்லும்
வெற்றிபெற மனவடக்கம் வைத்துப் பாரே.

30
பாரப்பா விஞ்சைமந்த்ரம் என்பார் வீணர்
பாயடா விஞ்சைகிரி தன்னில் மைந்தா!
ஆரப்பா சென்றேறிப் பார்க்கும் போது
அதீதமுள்ள விஞ்சைமந்த்ரம் அனந்தங் காட்டும்:
நேரப்பா சிருட்டிப்புச் சங்கா ரங்கள்
நிமிடத்திற் செய்திடுவாய் நிலையைக் கண்டால்
வீரப்பா அமிர்தமுந்தான் குமிழி பாயும்
வேறில்லாக் கனிதனையு முண்க லாமே.

31
உண்கலாம் பிரமத்தி லடங்கும் போதே
உறுதியுள்ள அண்டத்தி லுருகிப் பாயுந்
திங்கலாந் தோணுமடா அமர்தச் சீனி
தித்திப்புப் பாலுடனே திடமாய் மைந்தா!
தங்கலாந் தேகமது அழியா மற்றுன்
சட்டையுமே கழன்றுமிகத் தங்கம் போலே
பொங்கலாம் மெய்ஞ்ஞானத் தீபத் தாலே
பூரித்துப் பார்த்திடவே புவன மொன்றே.

32
ஒன்றான பிரமமே வெவ்வே றாக
உலகத்தி லனந்தமடா கூத்து மாச்சு;
நன்றாச்சுத் தீதாச்சு நாலு மாச்சு
ஞாயிறு திங்களென்று பேருண் டாச்சு;
குன்றாச்சு ஊர்வனகள் அனந்த மாச்சு;
குருக்களென்றுஞ் சீடனென்றுங் குறிக ளாச்சு
நன்றாச்சு நாதவிந்தும் அடங்கி நின்ற
நாதனையு மொருமனமாய் நாட்டு வாயே.

33
நாட்டுவார் சித்தரெல்லாம் பேத மாக
நலம் போலே சாத்திரங்கள் கட்டி னார்கள்!
பூட்டியே மனிதரெல்லாம் நூலைப் பார்த்துப்
பூரணமாய் அண்டமதைப் பாரா மற்றுன்

காட்டிலே திரிந்தலைந்த மானைப் போலே
கபடமாய் வாய்ஞானம் பேசு வார்கள்;
கூட்டிலே அடைத்திருக்கும் குயிலைப் பாரார்
கூறாத மத்திரத்தின் குறியைப் பாரே.

குறியென்ற உலகத்திற் சுருக்கள் தானும் 84
கொடியமறை வேதமெல்லாங் கூர்ந்து பார்த்தே
அறியாமற் பிரமத்தைப் பாரா மற்றோன்
அகந்தையாய்ப் பெரியோரை அழும்பு பேசி
விரிவான வேடமிட்டுக் காவி பூண்டு
வெறுப்பிலுக்காய் அலைந்திடுவான் நாயைப் போலே
பரியாச மாகவுந்தான் தண்டு மேந்திப்
பார்தனிலே குறட்டிடு நடப்பான் பாரே.

பாரப்பா சேடர்களை அழைப்பான் பாவி: 85
பணம்பறிக்க வுபதேசம் பகர்வோ மென்பான்;
ஆரப்பா பிரமநிலை காட்டா மற்றோன்
ஆகாசப் பொய்களையு மவன்தான் சொல்வான்;
நேரப்பா சேடனுக்குப் பாவ மாச்சு:
நிட்டை சொல்லுங் குருக்களுக்குத் தோட மாச்சு:
வீரப்பா அடங்குமென்ற இடத்தைப் பாரான்
விதிபோலே முடிந்ததென்று விளம்பு வானே.

வானென்ற அண்டமதிற் சென்று புக்கு 86
வடவரையி லுச்சிநடுத் தீபங் கண்டு
தேனென்ற சுத்தசிவ கங்கை தன்னில்
தீர்த்தங்க ளாடித்திரு நாம மிட்டுக்
கோனென்ற மனமன்பாய் மலராய்ச் சார்த்திக்
கொடியமறை வேதமுந்தா னடக்கங் கண்டு
தேனென்ற சித்தமே புத்தி யாகத்
தெளிந்தவரே மெய்ஞ்ஞானி யாவர் பாரே.

பாரண்ட மதையொன்றாய்ப் பார்க்கும்போது 87
பலபேத மாயையெல்லாம் மருண்டே யோடுஞ்
சீரண்டம் அகிலாண்ட பிரம ண்டங்கள்
செனித்தவகை யுயிர்தோறும் நீயாய் நிற்பாய்
காரண்ட லாடக்கண் திறந்த போது
கண்கொள்ளாக் காட்சியெல்லாங் கலந்தே காட்டும்;
வீரண்ட மேல்வட்டம் விரிந்த சக்கரம்
மெய்ஞ்ஞான வெளியதனிற் றொடர்ந்து கூடே.

கூடுவதேன் குணமறிந்து மனமொன் றாகக் 88
கூத்தாடித் திரியாமற் கெவுன மாகப்
பாடுவது பல நூலைப் படித்தி டாமற்
பராபரத்தி னுச்சிநடு வெளியே சென்றே

ஆடுவது தொந்தோமென் றுட்டைப் பார்த்தே
அடுக்கடுக்கா யாயிரத்தெட்டிதழுங் கண்டு
வாடுகிற பயிர்களுக்கு மழைபெய் தாற்போல்
வாடாத தீபத்தை யறிந்து பாரே.

39

பாரென்று மெய்ஞ்ஞானம் பகர்ந்து சொன்னீர்
பராபரத்து நிலைதனுடைப் பாதஞ் சொன்னீர்
வீரென்ற அண்டமெல்லாம் பாழ தாகி
விராட பிரம மொன்றியாயிருக்கும் போது
சீரென்ற வுயிர்களெல்லா மிருப்ப தெங்கே?
சித்தருடன் திரிமூர்த்தி யிருப்ப தெங்கே?
கூரென்று நீர்தங்கு மிடந்தா னெங்கே?
குருபரனே! இந்தவகை கூறு வீரே.

40

கூறுகிறே னென்மகனே வாசி நாதா
குணமான வீச்சுரனார் சபையிற் கூடித்
தேறுகின்ற பிரளயமாம காலந் தன்னிற்
சிவசெந்து சித்தருடன் முனிவர் தாமும்
வீருடனே யெங்கேதா னிருப்பா ரென்று
விமலருந்தான் வினவுவையும் விவரங் கேட்கக்
கார்மேக மேனியலங் கவரை நோக்கிக்
கண்டுமிகப் பணிந்துயினிக் கருது வானே.

41

கருதுவான் ஆலிலைமேற் றுயில்வோன் யானும்
கனமான சிவசெந்தும் அனந்த சித்தர்
உறுதியா யென்றனுடைக் கமலந் தன்னில்
ஒடுங்குவா ராதரித்து மிகவே நிற்பேன்.
வருதியாய்ப் புசுண்டருந்தான் வருவா ரென்று
வலவனுடன் மாலானும் உரைக்கும் போது
சுருதியா யெனையழைத்தே சிவன்றான் கேட்கச்
சூத்திரமாய் நல்வசனம் மொழிந்தேன் பாரே.

42

பாரென்று சிவனுடைய முகத்தைப் பார்த்துப்
பல்லாயிரங் கோடியண்ட வுயிர்க ளெல்லாஞ்
சீரென்ற சித்தருடன் முனிவர் தாமுந்
திருமாலும் ஆலிலைமேற் றுயிலும் போது
கூரென்ற வுந்தியிடக் கமலந் தன்னிற்
கூடியே அடைந்திருப்பார் குணம தாக
வீரென்ற ஐவரையும் தாண்டி யப்பால்
வெகுசுருக்காய் வீதிவழி வந்தேன் பாரே.

43

பாரப்பா ஆகாயஞ் செல்லும் போது
பாலகனே சக்கரந்தான் சுற்றி யாட
ஆரப்பா சக்கரத்தைப் பிசகொட்ட டாமல்
அதன்மேலே யேறியுந்த னப்பாற் சென்றேன்;

நேரப்பா நெடுந்தூரம் போகும் போது
நிச்சயமாய்க் கம்பத்தின் நிலையைக் கண்டேன்;
வீரப்பா அக்கினிபோல் படர்ந்து நிற்கும்
வெளியொன்றுந் தெரியாம லிருக்குந் தானே.

இருக்குமடா எங்குமொன்ருய் அக்கினிக் கம்பம் 44
என்மகனே கம்பத்தின் நடுவே மைந்தா!
உருக்கமுடன் பெண்ணரசி யொன்றி நிற்பாள்:
ஓகோகோ அவள் முகத்தைப் பார்க்கும் போது
பெருக்கமுடன் முன்பார்த்தாற் புருட ரூபம்
புத்திரனே பின்பார்த்தாற் பெண்போல் ரூபம்
மருக்கமுடன் யான்ருனுங் கம்பத் தூடே
வத்தோடே வத்தாக இருந்தேன் பாரே.

பாரப்பா இப்படியே அனந்த காலம் 45
பராபரத்தி னூடே தா னிருந்து வாழ்ந்தேன்;
ஆரப்பா பிரமமுந்தான் மனமிரங்கி
அகண்டமதைப் படைப்பதற்கே அருளும் போது
வீரப்பா கம்பத்தி லிருந்த பெண்ணும்
விமலரென்றும் உமையென்றும் மிகவே தோன்றிச்
சீரப்பா சக்கரத்தி லிருந்து கொண்டு
திரு மலைத் தாளமைக்கத் திர்க்கம் பாரே.

பாரப்பா திருமாலுங் கமலந் தன்னில் 46
பல்லாயிரங் கோடி அண்ட வுயிர்க ளெல்லாம்
நேரப்பா அழைத்துமுக் குணத்தைக் காட்டி
நிலையான சமுத்திரங்கள் பூமி தானும்
சேரப்பா ரவியோடு திங்கள் தானுஞ்
சிறந்தெழுந்த மலைகாடு சீவ செந்து
வீரப்பா நவககிரகம் நட்சத் ரங்கள்
வெற்றியுடன் நால்வேதம் வகுத்த வாறே.

வாருன தெய்வமென்றும் பூத மென்றும் 47
வையகத்தில் வானமென்றும் பூமி யென்றும்
கூருன மாமேரு கிரிக ளென்றும்
கோவிலென்றுந் தீர்த்த மென்றுங் குளமுண் டாக்கி
நேராகப் பிரமமே சாட்சியாக
நிலத்தெங்கும் உயிர்தோறும் நிறைந்தா ரையா!
வீராகத் திரியாமல் மவுனம் பார்த்து
வெற்றிபெற இன்னமுந்தான் உரைக்கக் கேளே:

கேளப்பா இப்படியே பிரள யந்தான் 48
கிருபையுடன் ஏழுலட்சங் கோடி யானுல்
ஆளப்பா அரியயனும் சீவ செந்தும்
அகண்ட மென்ற பிரமத்தி லடங்கு வார்கள்;
நாளப்பா நானுமந்தப் படியே செல்வேன்:
நலமாக இன்னமுந்தான் அகண்ட மானுல்
வாளப்பா காகமென்ற ரூப மானேன்
வடவரையின் கூடுதொத்தி யிருந்தேன் பாரே

49

பாரடா இப்படியே யுகங்கள் தோறும்
பார்தனில் நா னிருந்தேன் எத்தனையோ கோடி
ஆரடா என்னைப்போல அறிவா ருண்டோ?
ஆதியென்ற சித்தருக்கும் ஆதி யானேன்
வீரடா விமலரிடஞ் செல்லும் போது
வெற்றியுட னெனையெடுத்து முத்த மிட்டார்;
காரடா கைலையின்மே லிருக்கச் சொன்னார்!
காகமென்ற ரூபமா யிருந்தேன் பாரே.

50

காகமென்ற ரூபமா யிருந்து கொண்டு
காரணங்கள் அத்தனையும் கருவாய்ப் பார்த்து
வேகமுடன் வெளியோட்ட நிலையாய்ப் பார்க்க
வெகுதூரம் சுற்றியின்னம் விவரங் காணேன்;
மோகமுடன் பரந்தமனம் அணுவ தாக்கி
மூர்க்கமுடன் பரவெளியை மனவெளி தாக்க
நாகரிக மாகவுந்தானண்ட மேவி
நடுவணைய மூச்சிநடு மத்தி தானே.

51

மத்தியமாம் வானதிலே வளர்ந்த லிங்கம்
மகாமேரு வுச்சியிலே வளர்ந்த லிங்கம்
சத்தியும் ஆயியுடை மான லிங்கம்
சஞ்சாரச் சமாதியிலே நிறைந்த லிங்கம்
புத்தியால் மனமொன்றாய்ப் புகழ்ந்த லிங்கம்
பூவருந் தன்னில்தான் முளைத்த லிங்கம்
எத்திசையும் புகழ்ந்திடவே வந்த லிங்கம்
ஏகபர மனதொரு லிங்கந் தானே.

52

தானென்ற சிறுவீட்டுக் குள்ளே சென்று
தலைமாறிப் போனதொரு வாசி யைத்தான்
கோனென்ற பிரமத்தி லடக்க மாகக்
குறித்திடுவாய் மனமடங்கிக் கூர்ந்து பார்க்க
வானென்றிப் போகுமடா பாணம் பாணம்
மைந்தனே! உண்டிடவே பசிதான் தீரும்;
தேனென்ற சட்டைகளுங் கழன்று போகும்.
தேவனுக்குந் தேவனா யிருக்க லாமே.

53

இருக்கலாம் எந்தெந்த யுகங்க ளுக்கும்
ஏகாந்த மானதொரு பிரமந் தன்னில்
பெருக்கவே மனமடங்கி மவுனம் பெற்றும்
பேராசை யாகவுந்தான் பிரமத் துள்ளே
குருக்களைப்போல் அரசனைப்போ லிந்தரனைப்போல்
குணமான மூவரைப் போற்பிரமத் தூடே
திருக்கெடுத்தே யெந்தெந்த அவதா ரங்கள்
செய்திடலாம் நிலையறிந்த பெரியோர் தானே.



தானவனே யென்குருவே புசுண்ட நாதா 54
தரணியிலே சிவசெந்தாம் அகண்ட மெல்லாம்
தோணதுவே மும்மூர்த்தி யிவர்கள் தாமுந்
துடியாகப் பிரமத்தி லடங்கு மென்றீர்
கோனவனே பின்னுந்தா னகண்ட மெல்லாங்
குறிப்புடனே படைக்கும் வகைக் குறியுஞ் சொன்னீர்
தானவனே மதுவுண்ணச் சொன்னீ ரையா
சத்தியமா யதன் விவரஞ் சாற்று வீரே.

சாற்றுகிறே னென்மகனே வாசி நாதா! 55
சத்தியமா யண்டத்திற் செல்லும் போது
போற்றுகிற அக்கினியும் பிரவே சித்துப்
புலன்களைந்தஞ் சேர்ந்ததனுற் போத மாகும்:
மாற்றிலையும் அதிகமடா வுன்றன் தேகம்
மைந்தனே! அபுரூப மாகு மப்பா!
வாற்றியே நிழற்சாய்கை யற்றுப் போகும்
வலுத்ததடா காயசித்தி யாச்சுப் பாரே.

ஆச்சென்ற அபுரூப மான போதே 56
அட்டமா சித்திவகை யெட்டு மாடும்:
மூச்சொன்றி யடங்கிப்போய்ப் பிரமத் தூடே
முன்னணியும் பின்னணியு மொன்றாய்ப் போகும்;
காச்சென்று காச்சிவிடு மவுனங் கண்டு
கலைமாறி நின்றிடுமே கனக பீடம்
நீச்சொன்று மில்லையடா வுன்னைக் கண்டால்
நிலைத்ததடா சமாதியென்ற மார்க்கந் தானே.

மார்க்கமுடன் தவசுநிலை யறியா மற்றுன் 57
மனந்தளர்ந்து திரிவார்கள் லோகத் துள்ளே
ஏக்கமுடன் முப்பாழுக்குள் மவுனங் கண்டே
இளவயசா யிருப்பார்கள் பெரியோர் மைந்தா!
காக்கவே சற்குருவின் பாதங் கண்டு
கருணையுடன் அவர் பதத்தை வணங்கிப் போற்றித்
தீர்க்கமுடன் பிரமத்தில் மனந்தான் செல்லச்
சிவனுக்குச் சிவனு யிருக்கலாமே.

இருக்கலாஞ் செடிபூடு கற்ப மில்லை 58
ஏகாந்த மானதொரு பிரமந் தன்னில்
உருக்கியே மனமடங்கிப் பார்க்கும் போதே
உத்தமனே காயமது வுறுதி யாச்சு;
மருக்கியே திரியாமல் மதம்பே சாமல்
வண்டரோ டிணங்கியடா மருவி டாமல்
குருக்கியே கோளரிடஞ் சேர்ந்தி டாமற்
குருபாதங் கண்டுமிகப் பணிந்து பாரே.

59
பாரென்று சொல்லியமெய்ஞ் ஞான மூர்த்தி!
பரத்தினுடை அடிமுடியும் பகுந்து சொல்லும்
சீரென்று சொப்பனங்க ளதிக மாகத்
திடப்படவே காணுமிடந் தீர்க்கஞ் சொல்லும்
காரென்று மனம்பிறந்த இடந்தான் சொல்லும்
கதிர்மதியுஞ் சுற்றிவரு மார்க்கஞ் சொல்லும்
வீரென்றே உயிர் பிறந்த இடந்தான் சொல்லும்
வெற்றிபெற இந்தவகை விளப்பு வாயே.

60
வாயாலே சொல்லுகிறேன் மகனே கேளு;
மகத்தான பிரமத்தின் பாதந் தன்னில்
ஓயாமல் முன்சொன்ன நரம்பு பின்னி
உத்தமனே ரவிமதியுஞ் சுற்றி யாடும்;
மாயாமல் வாசியுந்தன் நடுவே நின்று
மார்க்கமுடன் சுழுத்திபிடம் மனந்தான் சென்றால்
காயான சுழுத்தியென் றிதற்கு நாமம்
கண்டுபார் கண்டுகொள்ளாப் போதந் தானே.

61
தானென்ற பலரூப மதிகங் காணுந்
தன்னுடைய தேவதைபோற் பின்னும் காட்டும்
ஊனென்ற பெண்ணைப்போ லுன்னைக் கூடி
உத்தமனே சையோகஞ் செய்தாற் போலே
தேனென்று மயக்கி வைக்குஞ் சுழுத்தி யாலே
தித்திப்புப் போலேதான் ருசியைக் காட்டும்
கோனென்ற குருவருளைப் பணிந்து கொண்டு
குறிப்பறிந்து பூரணத்தின் நிலையைப் பாரே.

62
நிலையாத சமுத்திரமே சுழுத்தி யாச்சு;
நின்றிலங்கும் வாசியைத்தான் வெளியிற் சேரு;
தலையான அக்கினியப் படியே சேரு:
சத்தியமாய் ரவிமதியைக் கூடச் சேர்த்து
மலையாமல் ஏகபரா பரனே யென்று
மனமனங்கி அண்டவுச்சி தன்னைப் பார்க்க
அலையாது மனந்தானும் பரத்திற் சென்று
ஆகாய வீதிவழி யாட்டும் பாரே.

63
ஆட்டுமடா ஆசையற்று ரோச மற்றே
அன்னை சுற்றந் தனைமறந்தே அகண்ட மேவும்
பூட்டுமடா நவத்துவா ரங்கள் தம்மைப்
பொறிகளைந்துஞ் சேருமடா புனித மாகக்
காட்டிலென்ன நாட்டிலென்ன மவுனங் கண்டால்
காமதேனு கற்பகமும் உனக்கே சித்தி
வீட்டிலே தீபம் வைத்தாற் பிரகா சிக்கும்
வெளியேறி சூற்றீபம் விழலாய்ப் போமே.

64
போமடா புத்திசித்தம் என்ற தாக்கிப்
புசுண்டனென்று பேரெடுத்துப் புவனந் தன்னில்
ஆமடா வடசாளி மைந்த னென்றும்
அருமையாங் கன்னியுடை மைந்த னென்றும்

நாமடா ஐந்துபேர் தம்பி லேதான்
    நாட்டமுடன் முன் பிறந்தேன் நான்தான் மைந்தா!
வாமடா சாண்முழத்திற் காட்சி பார்க்க
    வத்துவுந்தான் ஈச்சுரனு ரென்பார் பாரே.

பாரப்பா என் குலந்தான் சொல்லக் கேளு; 65
    பார்தனிலே பிரமனுடை விந்து வாலே;
ஆரப்பா பிறந்துவிட்டோம் ஐந்து பேரும்:
    ஆகாய அண்டமதை யடுததே சென்றேன்;
நேரப்பா வெகுகோடி காலம் வாழ்ந்தேன்
    நிட்டை யிலே மனந்தவறு திருந்து கொண்டேன்:
வீரப்பா பேசுவோர் லோகத் தோர்கள்
    விட்டவிடந் தொட்டவிடம் விரும்பிக் காணே.

காணப்பா சாதிகுலம் எங்கட் கில்லை; 66
    கருத்துடனே என்குலஞ்சுக் குலந்தான் மைந்தா!
தோணப்பா தோணுமற் சாதி பேதஞ்
    சொல்லுவான் சுருக்கமாச் சுருண்டு போவான்;
வீணப்பா பிரமத்தில் ஆதி காலம்
    வீரமுடன் பிறந்ததடா உயிர்க ளெல்லாம்;
நானப்பா அப்படியே உதித்தேன் முன்னே;
    நன்றாக வுதித்தவிடம் நாடி னேனே.

நாடியே யுதித்தவிடம் அறியாத் தோடம் 67
    நடுவாக வந்தவிடம் பாரத் தோடம்
கூடியே பிறந்தவிடங் காணுத் தோடம்
    குருபரனை நிந்தனைகள் செய்த தோடம்
வாடியே வத்தோடே சேராத் தோடம்
    வம்பரோ டிணங்கியே திரிந்த தோடம்
கூடியே வுறவற்றே யிருந்த தோடம்
    கும்பியுங்கற் சிப்பியையும் அறியான் பாவி.

அறியாத பாவிக்கு ஞான மேது? 68
    ஆறுமுகன் சொன்ன தொரு நூலைப் பாரு;
பரிபாடை யாகவுந்தான் சொல்ல வல்லை;
    பராக்கிரமம் என்னுடைய நூலைப் பாரு;
விரிவாகச் சித்தர் சொன்ன நூலை யெல்லாம்
    வீணாக மறைப்பாகச் சொன்னா ரையா!
குறியாலே அண்டமதை யொளித்தே விட்டார்
    கூறினர் வெவ்வேறாய்க் குற்றந் தானே.

குற்றமது வையாமல் அண்டத் தேகிக் 69
    கூறாத மந்திரத்தின் குறியைப் பார்த்துச்
சித்தமொன்றாய் அந்திசந்தி யுச்சிக் காலம்
    தேவனுக்குப் பூசைசெய்து தெளிவு பெற்றுக்

குற்றமது வையாமல் மனமன் பாலே
குருபரனை நோக்கியடா தவமே செய்து
பற்றுசை வைத்துமிகப் பார்க்கும் போது
பராபரையுங் கைவசமே யாகு வாளே.

70

ஆகுவா ளந்திசந்தி யுச்சி யென்றால்
அப்பனே ரவிமதியுஞ் சுடர் மூன் றாகும்
ஏகுவாய் மூன்றுமொன் றாய்ப் பின்ன லாகி
இருந்திடமே பிரமாண்ட நிலைய தாகும்;
போகுமே நீ செய்த காமமெல்லாம்
புவனைதிரி சூலிகையுடைக் கிருபை யாலே;
வாகுமே வழியோடே சேர்த்தா யானால்
வாணியுந்தான் நாவில்நட னஞ் செய்வாள் பாரே.

71

பாரடா வாணியுந்தா னிருந்த வீடு
பாலகனே சொல்லுகிறேன் பண்பாய்க் கேளாய்;
ஆரடா அண்ணாக்கின் கொடியி னூடே
அண்டத்தைப் பற்றியடா வழுது போலே
நேரடா நரம்பதுதான் பொருந்தி நிற்கும்
நிலையான அக்கினியில் மத்தி தன்னில்
வீரடா அதுவழியே அருள்தான் பாய்ந்து
விண்ணுலகில் வேணதமிழ் சொல்லு வாளே.

72

சொல்லுவா ளனந்தமறை வேத மெல்லாம்
சுருதியடா மூடிந்தெழுந்த பிரமத் தாலே
வெல்லுவார் தனையறிந்த பெரியோ ரெல்லாம்
வீருண்மை பேசார் கள் மவுன மாகி
அல்லுபக லற்றதொரு பிரமந் தன்னை
ஆரறிவா ருலகத்தி லையா பாரு
சொல்லடங்கு மிடந்தன்னையுங் கண்டு தேறிச்
சூத்திரமாய்க் கல்லுப்பு வாங்கு வாங்கு.

73

வாங்கியே அண்டத்தில் மூளை சேர்த்து
வளமாக வப்பியையும் பிசறு மைந்தா!
தாங்கியே திருகுகள்ளிக் குள்ளே வைத்துத்
தமர்வாயைத் தான்மூடிச் சாபந் தீர்த்தே
ஓங்கியே திங்களுந்தான் மூன்று சென்றால்
உத்தமனே கள்ளியைத்தான் தரித்துக்கொண்டு
சாங்கமினிச் செய்யாமற் சீலை மண்ணுஞ்
சத்தியமாய்ச் செய்தபின்பே உலர்த்திப் பாரே.

74

பாரப்பா வுலர்ந்த தன்பின் எடுத்து மைந்தா!
பக்தியுடன் கசபுடத்திற் போட்டுப் பாராய்

ஆரப்பா ஆறினபின் எடுக்கும்போதில்
அருணனிறம் போலிருக்குஞ் செந்தூ ரந்தான்

நேரப்பா அணுப்போல சரக்குக் கெல்லாம்
நிச்சயமாய்ப் பூசியுந்தான் புடத்திற் போடு.
வீரப்பா நீருமடா நவலோ கந்தான்
வேதையென்ற வத்தையெல்லாங் கைக்குள் ளாச்சே.

ஆச்சடா வுடம்பிலுள்ள வியாதி யெல்லாம் 75
அணுப்போல வுண்டிடவே பறந்து போகும்;
வாச்சடா தேகசித்தி யதிக மாச்சு
வத்துடனே கூடியுந்தான் வாழ லாச்சு;
மூச்சடா தலைப்பிண்டங் கொடியு மாவும்
முத்திடடா வாங்கியபின் தயிலம் வாங்கி
ஏச்சடா தரியாமல் சூடன் சேர்த்தே
இன்பமுடன் வந்துவையும் பூசை செய்யே

பூசையடா செய்துமிகப் பதனம் பண்ணு 76
புத்திரனே பேய்ப்பீர்க்குத் தயிலம் வாங்கி
ஆசைபுல்லா மணக்கதவு மதுபோல் வாங்கி
அப்பனே கேசரியின் நெய்யுஞ் சேர்த்தே
ஓசையுடன் தேவாங்கு பித்துஞ் சேர்த்தே
உத்தமனே தலைப்பிண்டந் தயிலஞ் சேர்த்துப்
பாசையடா பேசாம லரைத்து மைந்தா!
பாலகனே சவாதோடு புனுகு சேரே.

சேரடா அணுப்போலே புருவத் திட்டுத் 77
தீர்க்கமுடன் நீ தானுஞ் செல்லும் போதில்
ஆரடா வுன்னைத்தான் ஆர்த்தான் கண்பார்?
அண்டமெனும் பிரமநதி னருளி னாலே
நேரடா திகைப்பூண்டு கொண்டு வந்து
நிச்சயமாய் முன்சொன்ன தயிலம் விட்டு
வீரடா அரைத்தபின்பு புருவத் திட்டால்
வெசையர்கள் வெகுபேர்கள் மயங்கு வாரே.

வாரான தில்லைப்பால் கருந்து ளசியும் 78
வவ்வாலின் பித்துடனே மந்திப் பித்துஞ்
சீராக முன்சொன்ன கருவை விட்டுத்
திடமாக அரைத்திடுவாய் சாம மொன்று
நேராக அரைத்ததையு மெடுத்து மைந்தா
நிச்சமாய்ப் புருவத்தி லிடடுப் பார்க்க
வீராகப் பாதாளம் பிளந்தே யோடும்
வேதாந்த சாரணையை விருப்பிப் பாரே.

பாரடா பரப்பிரமத் தூடே சென்று 79
பரிதிமதி அக்கினியும் மூன்று மொன்றாய்
நேரடா ஆதியுந்தான் எதிரி தன்னை
நிச்சயமாய்ப் பார்த்திடவே நீறிப் போவான்

கூரடா கோடானு கோடி சித்துக்
  குறித்திடவே ஆதுமடா பிரமத் தாலே
வீரடா இந்நூலைத் கொடுத் திடாதே
  வெற்றியுடன் என்பதுமே விளங்க முற்றே.

## II காகபுசுண்டர் உபநிடதம்



### காப்பு:

ஆதியெனை யீன்ற குரு பாதங் காப்பு.
  அத்துவிதப் பிரணவத்தி னருளே காப்பு:
நீதியா மாருட ஞானம் பெற்ற
  நிர்மலமாஞ் சித்தருடைப் பாதங் காப்பு;
சோதியெனப் பாடிவைத்தேன் முப்பத் தொன்றிற்
  றுரியாதீ தப்பொருளைத் துவக்க மாகத்
நீதிச்லாக் குணமுடைய பிள்ளை யானோர்
  சீவேச ஐக்யமது தெரியுந் தானே.

### நூல்

தானென்ற குருவினுப தேசத்தாலே 1
  தனுகரண அவித்தை யெல்லாந் தவறுண்டேபோம்;
வானென்ற சுவானுபவ ஞான முண்டாம்;
  மவுனநி யோகத்தின வாழ்க்கை யெய்தும்;
நானென்ற பிரபஞ்ச வுற்பத் திக்த
  நாதாதி தக்யானம் நன்று யெய்தும்;
கோனென்ற கொங்கணவர் தமக்குச் சொன்ன
  குறிப்பான யோகமிதைக் கூர்ந்து பாரே.

பாருநீ பிரமநிலை யார்தான் சொல்வார்? 2
  பகலை யாதெனினும் பவ்யமில்லை
சேருமிந்தப் பிரமாணந் தானுணர்ந்து
  தெரிவிக்கப் படாதருளிற் சிவசொரூபம்;
ஊருகின்ற காலத்ர யங்க ளாலே
  உபாதிக்கப் பர தத்வ முற்பத் திக்கும்
சாருமிந்த வுபாதான கார ணத்தின்
  சம்பந்த மில்லாத சாட்சிதானே.

சாட்சிசத்தா யதீதகுண தீத மாகிச் 3
  சட்சுமனத் தாலறியத் தகாது யாதும்
சாட்சியதே யேதுசா தலமுந் தள்ளிச்
  சகலவந்தர் யாமித்வ சர்வபூத
சாட்சியினை யிவ்வளவவ் வளவா மென்று
  தனைக்குணித்து நிர்ணயிக்கத் தகாது யோகம்
சாட்சியதே ஞாதாஞான ஞேயரூபஞ்
  சத்தாதி பிரமாதி தானே சொல்வாம்.

சொல்லுமெனக் கேட்டுகந்த மாணுக் காவுன் 4
தூலகா ரணப்பிரமந் துரியா தீதம்
அல்லுமல்ல பகலுமல்ல நிட்க ளங்கம்
அம்சோகம் அசபாமந் திரத்தி யானம்
செல்லுமவ னேநானென் றபிமா னிக்குச்
சித்தவிர்த்தி நிரோதகமாம் யோகத் தாலே
வெல்லறிஞர் பலபோக விர்த்தி யோகி
விவேகநியா ஞதிகளே மேலாம் பிர்மம்.

பிர்மசுரோத் ராதிஞானேந் திரிய மைந்தும் 5
பேசுதர்க்க வாக்காதியிந் திரிய மைந்தும்
கர்மமெனுஞ் சத்தாதி விடய மைந்தும்
சரணுதி நான்குபிரா ணுதி யைந்தும்
வர்மமிவை யிருபத்து நான்குங் கூடி
வருந்தூல சரீரவிராட் டெனவே சொல்லும்
தர்மவத்தைச் சாக்கிரபி மானி விசுவன்
தனக்குவமை யாங்கிரியா சத்தி தானே.

சத்தியுடன் ரசோகுணந்தான் நேத்ரத் தானம் 6
தனிப்போக மிதனேடே சார்ந்த ஆன்மா
வெற்றிபெறும் சீவாத்மா அகார மாச்சு
விவகார சீவனிதை விராட்டென் பார்கள்;
வித்தையெனு மவித்தையிலே பிரதி விம்பம்
விலாசமிந்தத் தூலசுக்க விருத்தி யாச்சு;
தத்வமசி வாக்குச்சோ தனேயி ஞலே
தான்கடந்து சூட்சுமத்திற் சார்ந்து கொள்ளே.

கொள்ளடா ஞானேந்திரி யங்க ளைந்து 7
கூடினவை கர்மேந்திரி யங்க ளைந்து
தள்ளடா பிராணுதி வாய் வைந்து
சார்வான மனம்புத்தி தானி ரண்டு
விள்ளடா பதினேழு தத்து வங்கள்
விர்த்தியெனுஞ் சூட்சுமமாம் இரண்ய கர்ப்பத்
துள்ளடா அபிமானி சைதன்ய ஞகுஞ்
சொப்பன வத்தையெனச் சொல்லும் நூலே.

நூலான சாத்மிகமம் அகங்கா ரத்துள் 8
நுழைந்தவிச்சா சக்தியல்லோ நுணுக்க மாச்சு?
காலான கண்டமெனுந் தானத் துள்ளே
கலந்திருக்கும் போகமல்லோ இச்சா போகம்?
நாலான ஆன்மாவே அந்த ரான்மா
ஞானமிந்தப் படியறிந்தா லுகார மாச்சு;
தூலமெனுஞ் சூட்சுமத்தைக் கடந்து நின்று
சொல்லுமேறன் காரணத்தின் சுயம்பு தானே.

விதிவிதிப் பிராரத்வ கர்மம் போச்சு;
    விடயபோ கத்தினிச்சை விட்டுப் போச்சு;
மதியெனுமோர் வாயுவது அமிர்த மாச்சு;
    வந்துவந்த காரணமா மதிமை யாச்சே;

30 மதிமையென்று யோகசா தனையி னாலே
    மாயகச் சிறுவிகற்ப மும்கை யாச்சே;
அகமேமென் னுணவத்தை நீக்க லாச்சே;
    அத்துவிதப் பிரமசிந்தா னந்த காரம்
சகலாதி தங்கடந்து என் இதத்தில்
    சாதித்தேன் நன்மனமாய்ச் சார்ந்து போச்சு;
பகலிருளில் லசாத வெளிக் கப்பா லாச்சு;
    பந்தமற்ற மாமோட்சப் பதம்பெற் றேனே.

31 பெற்றதனைச் சொல்லிவிட்டேன் வடநூல் பாடை
    பிரித்துமுப்பத் தொன்றனில் பிரம ஞானம்
தத்துவத்தைச் சொல்லிவைத் ததன் போதி யானும்
    சாதனைசெய் வானறி யாசைகள் பத்தில்
முத்திபடை வானதிலே விந்தைதன் செய்வான்!
    மும்முட்சுத் துவபரிக்க மூர்த்தி யாவான்
நித்யமெனு முபநிடதப் பொருள்நான் சொல்லும்
    நிலவரத்தால் யோகசிட்டை நிறைந்த முற்றே.

## 111 காகபுசுண்டர் உபநிடதம்

### காப்பு:

கணபதியே அடியாகி அகில மாகிக்
    காரணத்தின் குருவாகிக் காட்சி யாகிக்
குணபதியே கொங்கையின்றன் வெள்ளை ஞானக்
    குளிகையாய் ஆனவளெங்கும் சொம்பே ஞானக்
கனலினிலும் மின்னினிலும் ஒளியாய் நின்ற
    காரணத்தின் வடிவாகிக் கருத்த னாகிப்
பணியரவம் பூண்ட சிவ வாசி நேர்மை
    பாடுகின்றேன் காவியந்தா னெண்ணிப் பாரே.

### நூல்:

1 எண்ணியெண்ணிக் காவியத்தை எடுத்துப் பாராய்:
    என்னேரங் காமசிந்தை யிதுவே நோக்கும்
பண்ணிதன்னி பலகுட்டி போட்டா லென்ன?
    பசுவானைக் குட்டியொரு குட்டி யாமோ?
எண்ணியுன்னி யிந்நூலை நன்றாய்ப் பாரு
    சக்கரமு மக்கரமும் நன்றாய்த் தோணும்;
தன்னி கண்ணி யென்றகேந்தால் தாகம் போமோ?
    சாத்திரத்தை மேபுகட்டித் தள்ளி போறே.

இரையென்றால் வாய்திறந்து பட்சி போல
எல்லோருமப் படியே இறந்திட்டார்கள்;
நிறையென்ற வார்த்தைதனைச் சொன்னை தனால்
நிசங்கொள்ள நந்தரங்கம் நிசங் கொள்ளாதே?

சொன்னாமற் போவதுண்டோ மவுனயோகி; 6
கொடியிலே உன்னைப்போலறிடியோ காணேன்;
உன்னாக நிறிடி யாருவரில்லா விட்டால்
யுகவார்த்தை யாருரைப்பார் யானுங் காணேன்;
விள்ளாமற் தீராது முனிவனே! கேள்:
மெஞ்ஞான பரம்புகுந்த அன்பே மெய்ஞ் ஞானி;
தள்ளாமற் சபையிலுள்ளோ ரெல்லாரு கேட்கச்
சாற்றிடாய் முனிநாதா! சாற்றிடாயே?

'சாற்றுகிற னுன்னபடி யுகங்கள் தோறும் 9
தமக்குள்ளே சொல்லுவதே தவமாய்ப் போச்சு;
மாற்றுகிறேன் சுணைத்தின்று னுரைத்துப் போனேன்;
வாகாட்ட மௌனத்தைச் சே இனிமேல் சொல்வேன்?
சேற்றிலே நாட்டியதோர் கம்பம் போலத்
திரும்பினது போலச்சக யுகங்கள் தோறும்,
ஆற்றுகிற வண்மது ஆகும் போது
அரகரா அந்நேரம் டைக்கை கேளே,

'கேளப்பா நடந்ததை சிவமே யுண்மை 20
கெடியாகச் சக்கரங்கள் திரும்பும்போது
பாளப்பா திங்காதம் மவுனம் பாயும்;
பராபர மவுனமது பாத்திற் சாடும்:
ஏளப்பா அடுக்குகளும் இடிந்து விழும்.
இருந்தசதா சிவமோடி மணியில் மீளும்.
கேளப்பா இதுகேள் எவருஞ் செல்வார்
ஓநேரோ அண்டமெல்லாங் கவிழ்ந்து போமே,

'கவிழ்ந்தபோ மப்போது அடியே னங்கே 21
கருத்துவைத்துத் தியானமொரு தியான மூண்டு
தவழ்ந்து போங் காலப்போ திறந்து வென்யான்
சமையமதி லக்கினிபோல் தப்பங் காணுஞ்
சிவந்த வண்ணம் நீலவுருச் சுடர்விட் டோடும்:
சிவசிவா அக்கினிபோற் கொழுந்து வீசும்;
கவந்த அகார நகோனான் சென்று விந்தமேல்:
ங்காரமுத லஞ்செழுத்தும் வரக்காண் பேனே.

'காண்பேனே நகாரமது மகாரம் புக்கும் 22
கருத்தான மகாரமது சிகாரம் புக்கும்
தேன்பேனே சிகாரமது வகாரம் புக்கும்
சிவசிவா வகாரமது யகாரம் புக்கும்



## நூல்: இருபத்தெட்டு

## பூரணானந்தர்

# சிவயோக சாரம்

அவையடக்கம்; 'கனக வரை' என்னும் புருவத்திடை நடன ஒலி கேட்டானந்திக்கும் எந்தைமார்களே, உங்கள் பாதபங்கயங்கட்கு அனந்த வந்தனம்! அறிவிற் சிறியேன் குரு முகமாய் ஹிந்துஸ்தானியால் உணர்ந்த ராஜயோக மார்க்கத்தைப் பல நூல்களிலுள்ள அரும் பொருளோடு 'சிவ யோக சாரம்' என வரைதலுற்றேன். நீரைப் பிரித்துப் பாலைக் கொள்ளும் அன்னத்தைப் போலக் குற்றந் தவிர்த்துக் குணத்தைக் கொள்ளக் கோருகிறேன்.

ஏத முற்ற பேதையேன் இயம்பு மிந்த யோகநூல்
பேத மற்ற போதமுற்றோர் பேசு வார்க ளாசையால்;
வேத னைப்பட் டுழலுவாரிம் மெய்யுணராப் பொய்யரிப்
பூத லத்தி லுள்ளதீது; புதுமை யன்று புலவிர்காள்!

நீர் வளம் முதலியவைகளால் சிறப்புற்றோங்கும் உத்தர தேசங்களில் பஞ்சாபு என்னும் பாஞ்சால தேசத்தில் அவதரித்தவராய், ஜீவேசுவர பேதாபேத முணர்ந்து நித்தியானுபவம் செய்யும் பரம யோகீந்திரரால், ஸ்ரீ ஜனகாம்ஸ பூதரான உதாசி பாபா நானக்குக் குருபரம்பரையினர் அனேக வருட காலமாக அனுபவித்து வரும் ராஜயோகக் கிரமத்தை அச் சங்கத்திலொருவரும் ஞான சிரேஷ்டரும் தயாள குண பரிபூரணருமான குரு சரண்தாஸ் பாபாஜீ அவர்களால் இந்துஸ்தானி பாஷையில் உபதேசிக்கப் பெற்று ஸ்ரீமத் நாராயண தேசிகர் நியமனத்தினால் இந்தத் தக்ஷிண தேசத்திலுள்ள சகல வருணாச்சிரமிகளும் உய்யும் பொருட்டுத் தமிழில் மொழி பெயர்த்து, உபநிஷத்துகளிலும், யோக வாசிஷ்டம், பாதஞ்சலியம் அடயோகம் முதலியவைகளிலுமுள்ள அரும்பொருளைச் சேகரித்துச் 'சிவ யோக சாரம்' என நற்பெயரமைத்து இது வெளியிடலாயிற்று.

இந்நூலைச் சாங்கோபாங்கமாக உணரும் புண்ணியோத்கிருஷ்டர், அணிமா, மகிமா, கரிமா, இலகிமா, பிராத்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம் என்னும் அஷ்டமா சித்திகளை அடைவரென்பது திண்ணம்.

குரு வணக்கம்:

ஆரணசாத் திரமனைத்தும் உணர்ந்து சீடர்
அவித்தையெலாம் அகற்றியருள் புரியும் ஞான
பூரணனு மெழுந்தெளியேற் குபதே சித்துப்
'பூரணு னந்த' னென நாமந் தந்த
நாரணதே சிகனுமென் குருநா தன்றன்
நளினமல ரடியிணையைச் சிரமேற் கொண்டு
தாரணியிற் சிவயோக சார மென்னுந்
தகைபெறுமிந் நூலடியேன் சாற்ற லுற்றேன்.

காப்பு:

துவராடை யுள்ளோருந் தூயுடையா ருய்வான்
சிவயோக சாரமெனச் செப்ப—நவையில் புகழ்
கொண்டபர வைந்துகரக் கோநின் னடிகட்குத்
தண்டனிட் டேனருளைத் தா.

ஆசிரியர் நிலை: இந்த ராஜயோகத்தை அப்பியசிக்கும் ஆசிரியன், தெளிந்த ஆத்தும ஞானியாய், அடுத்தவர்களை ஆதரித்துப் போதிக்கத் தக்கவனுயிருக்க வேண்டும். அதாவது, சின்முத்திரையாகிய மௌன நிலை ஈதென்றும், அதைக் கைவல்லியப் படுத்துவதற்குரிய ஆசனம் முதலிய விதிகள் இவையென்றும், சாம்பவி முதலிய மகா முத்திரை இன்னவை யென்றும், குண்டலி சத்தி ஈதென்றும், அதை விழிப்பிக்கும் மார்க்கம் ஈதென்றும், இதுவே சிவராஜ யோகமென்றும், இந்த யோகம் செய்யத் தக்கவர் பெறத்தக்க நாதாந்தம் இதுவென்றும் இது வசமுற்றால் ஒரு மயக் கந் தோன்றுமென்றும், அது நீங்கும் வரையில் நின்ருல் அருள் தரிசனம் உதயமாகுமென்றும், அவ்வனுபவம் கிடைக்கில் காண்பானுதிகள் இறக்கு மென்றும் அங்ஙனம் இறக்கின் மனம் அசையாதிருக்குமென்றும், அப்போது அந்நாதாந்தத்தில் பஞ்சாக்ஷர முதலியவைகள் தோன்றுமெதாடுங்கு மென்றும், இத்தன்மைப் பட்ட சுவானுபவ சாக்ஷாத்காரத்தை உணர்ந்த ஆத்தும ஞானுசாரியனுய் இருக்க வேண்டும்.

மாணுக்கன் நிலை: உத்தம ஜென்மமாயும், வித்தைக்கு உடையவனு யும், சாந்த சற்குணமுடையவனுயும், பற்றில்லாதவனுயும், காம சங்கற்பம் இல்லாதவனுயும், கோபத்தை வென்றவனுயும், சத்திய தருமத்தை விரும்பினவனுயும், குரு பணிவிடையில் பிரியமுள்ளவனுயும், மாதா பிதாக்களை உபசரிப்பவனுயும், தனது கிருகத்திலிருப்பவனுயும் நல்லொ ழுக்க முடையவனுயும், சற்சீட னென்னும் பக்குவமுடையவனுயுமுள்ள மாணுக்கனே இவ்விராஜயோகத்துக்கு அதிகாரியென்று சொல்லப்படுவான்.

இத்தன்மைப் பட்ட நற்சீடன், சாக்ஷாத்காரத்தை உணர்த்த ஞானு சாரியனைக் கண்டடுத்து, அவன் திருவடிகளில் பணிந்து, அவன் மனங் களி கூறும்படி நடந்து, உடல் பொருளாவி மூன்றும் அச்சற்குருவின் திருவடி யில் தத்தஞ் செய்து, அநுக்கிரகிக்கும் திருவடித் தீக்ஷையையும் பிராணு யாமத்துக்குரிய மூல மந்திரத்தில் முதல் வாக்கியத்தையும், இந்த

யோகத்தின் விதிகளையும் உபதேசிக்கப் பெற்று, குருவின் சன்னிதியிலிருந்து, சற்குரு சொல்லாமற் சொல்லும் முதல் வாக்கியத்தை உன்னுமல் உன்னி யோக சாதனை செய்து வருங்காலையில் சுவானுபவத்தின் கண் அடையா நின்ற சம்சயங்களனைத்தும் தீரும்படி அவ்வாசிரியனிடத்தில் விண்ணப்பம் அடிக்கடி செய்து கொண்டு, அந்தச் சங்கற்பம் நசிக்கும்படி கேட்டுக் கொள்ள வேண்டும்.

பிராண வாயுவின் நிலை: மாணுக்கன் ஆரம்பத்தில் கவனிக்க வேண்டிய விதிகள் யாவையெனில், அவை சூரியன் சந்திரன் அக்கினி என்னும் மூன்று நாடிகளின் நடைகளெனப்படும்.

மூன்று கலையின் சுவாசத்தினுலுண்டாகும் சத்தத்தைக் கண்டறிய வேண்டும்.

அச்சத்தத்துக்கு 'அஜபா' என்பது பெயராம்.

அந்தச் சத்தத்தைக் கண்டுபிடிக்கச் சில விதிகள் கூறப்பட்டிருக்கின்றன. அவையாவன: வாயுக்கள் மூன்று: அவை இடைகலை, பிங்கலை, சுழுமுனை என்பன. இடைகலை என்பது இடநாசியிலும், பிங்கலை என்பது வல நாசியிலும், சுழுமுனை என்பது இரண்டு நாசியிலும் வரவும் போகவுமிருக்கிற சுவாசம். இதற்கு அஜபா என்பது பெயராம். இடைகலை என்பது சந்திரனும், பிங்கலை என்பது சூரியனும், சுழுமுனை என்பது அக்கினியுமாம்.

அன்றியும், இடைகலையானது சுக்கிலபட்சமாகிற அமாவாசையின் பிரதமை முதல் மூன்று நாளைக்குக் காலையில் தொடர்ச்சியாய் வரவேண்டும்.

சதுர்த்தி முதல் மூன்று நாளைக்குப் பிங்கலை நடக்க வேண்டும்.

இதே மாதிரியாகச் சுக்கிலபட்சம் முழுமையும் மூன்று நாளைக்கு இடைகலையும் மூன்று நாளைக்குப் பிங்கலையுமாய் நடக்க வேண்டும்.

இவ்வண்ணமாகச் சுக்கில பட்சத்தில் சந்திரகலை வராவிடில், அவனுக்குத் தேகம் அசவுக்கியப்பட்டுக் கவலை மேலிடுமென்றறிக. அதைச் சரிப்படுத்த வேண்டிய விஷயத்தைப் பற்றிப் பின் வரும் வாக்கியத்திற் காண்க

கிருஷ்ண பக்ஷம், அதாவது பௌர்ணமி, பிரதமை முதல் மூன்று நாட்களும் பிங்கலை நடக்க வேண்டும்.

பின் மூன்று நாளைக்கும் இடைகலை நடக்க வேண்டும்.

இத்தன்மையாய் இரண்டு கலைகளும் மும்மூன்று நாளைக்கொரு முறை மாறி மாறி நடக்க வேண்டும்,



இதை மாணுக்கன் குறிப்பாகத் தினம் தினம் கவனிக்க வேண்டும்

சுழு முனை கூடுவது கஷ்டமானதால், அதைச் சாக்கிரதையாய் அப்பிய சித்துப் பழகல் வேண்டும்.

மாணாக்கனுக்கு முக்கிய வேலை, இடைகலையும் பிங்கலையும் திக்குத் தவறி நடந்தால், அதை மாற்ற வேண்டிய விஷயத்தைப் பற்றிக் குரு மூல மாய்க் கேட்டுக் கொள்ளுதலே.

இடைகலையின் பலன்: இடைகலை நடக்குங் காலம் தாகம், ஜலவிருத்தி, தீர்மானம் செய்ய, வேலை செய்ய, நகை செய்ய, நகை அணிந்து கொள்ள, அன்னிய தேசத்திலிருந்து யாத்திரை போக, வீடு சத்திரம் கோவில் கட்ட, தருமஞ் செய்ய, சாமான் சேகரஞ் செய்ய, கிணறு குளம் வெட்ட, கலி யாணம் செய்ய, வஸ்திரம் கட்ட, வைத்திய சாஸ்திர அப்பியாசம், மருந்து கற்பங்கள் முதலியவை செய்ய, சினேகிதரைக் காண, வியாபாரஞ் செய்ய, தானியம் இருப்புச் செய்ய, வீட்டிற்குக் குடிபோக, விதை விதைக்க, சமாதானஞ் செய்ய, அன்னிய பாஷை அப்பியாசஞ் செய்ய, உபதேசஞ் செய்ய, பலனைப் பற்றி யாத்திரை போக, யானை குதிரை ஏறி வேட்டைக்குப் போக, எஜமானாக, ஆடல் பாடல் கற்க, ஒரு புதிய ஊருக்குப் போக, பந்துக்களைக் காண ஆகிய நடவடிக்கைகளுக்குப் பயன் படும்.

இடைகலையானது சரிவர நடந்தால், தேகம் சௌக்கியமாயிருக்கும். இதில் ஆகாசத்தின் அமிசமிருக்குமானால், முன் சொன்ன நட வடிக்கைகளுள் ஒன்றும் செய்யக் கூடாது. இரவாய் இருந்தாலும், பகலாய் இருந்தாலும் மேற்சொன்ன வேலைகளை இடைகலையில் நடத்த வேண்டும்.

பிங்கலையின் பலன்: வல நாசியில் உண்டாகிற பிங்கலையில் அதாவது சூரியநாடிக் காலத்தில், கஷ்டமான வேலை எதுவும் அப்பியசிக்க, எவ்விதக் கொடூரமான செய்கையும் செய்ய, போஜனம் செய்ய, மலம் கழிக்க, போகம் செய்ய, கடல் யாத்திரை போக, சண்டை செய்ய; படை எடுக்க, கஷ்டமான சாஸ்திரம் கற்க. குதிரை முதலாகிய நாற்கால் ஜீவன்களை வாங்க விற்க, மட்டமான மலை ஏற, குதிரை மல்யுத்தம் முதலாகிய பழக்கம் செய்ய, ஆறு குளம் கடல் முதலாகிய இடங்களில் நீந்த, உலோகங்களைக் குறித்த சாஸ்திரங்களைப் படிக்க, பாடம் எழுத, பணம் வாங்கக் கொடுக்க, எஜமானத்துவமான வேலை பார்க்க, அரசனைக் காண, இரண வைத்தியத் திற்கு மருந்து செய்ய, கடினமான ஆகாரம் ஜீரணிக்க, முயற்சி செய்யலாம்.

சுழுமுனையின் பலன்: சுழுமுனை நாடி. இரண்டு நாசியிலும் வரும் சுவாசம். அதை அதன் நடவடிக்கைக் காலத்திலேதான் அறியலாம்.

ஒரு கணத்தில் இட நாசியிலும் ஒரு கணத்தில் வல நாசியிலும் வரும் வாயுவானது, இரண்டு நாசியில் வரும்போது சுழுமுனையாம்.

இந்தச் சுழுமுனை நடக்கும் காலத்தில் உலக நடவடிக்கைகளை நிறுத்தி விட வேண்டும். தவறி நடந்தால் அபஜயமாம்.

எண்ணத்துக்கு விரோதமாய் நடக்கும் இந்த வாயுவின் காலத்தில் ஆத்தும தியானமும் பூஜையும் செய்யலாம்.

இந்த வாயு நடக்கும் காலத்திலேதான் சுவாசபந்தனம் செய்யக்கூடும்.

இந்தச் சுவாசம் கட்டுவதனுல் மனத்திற்கும் தேகத்திற்கும் இன்பம் உண்டாகிறது.

நாடிகளின் நிலே: முதல் ஆதாரமாகிய மூன்று நாடிகளேப் பற்றியும் விவரமாகச் சொல்லுவோம்.

மனிதர்களுக்கு எழுபத்தீராயிரம் நாடி நரம்புகள் இருக்கின்றன. அவற்றுள் முக்கியமானவை இருபத்து நான்கு. இவை எப்போதும் உறங்கிக் கொண்டிருக்கின்றன. இவைகளேக் குண்டலி சத்தி என்று ஆதி நாதர் அருளிச் செய்திருக்கின்றனர்.

குண்டலி சத்தி மத்திய ஸ்தானத்தில் இருக்கிறது. பத்து நாடிகள் மேலாகவும், பத்து நாடிகள் கீழாகவும், இரண்டு நாடி ஒரு பக்கத்திலும் இரண்டு நாடி மற்ருெரு பக்கத்திலும் இருக்கின்றன.

இந்தக் குண்டலி சத்தியானது, பாம்பைப் போலச் சுற்றிக் கொண்டு சுவாதிஷ்டானத்திற்கு மேலாகவும், மணி பூரகத்திற்குக் கீழாகவுமிருக்கின்றது.

இந்த இருபத்து நான்கு நாடிகளுள் பத்து நாடிகளே முக்கியமாக எடுத்திருக்கின்றனர்,

இந்தப் பத்து நாடிகளில் முன் சொல்லிய மூன்று நாடிகளே முக்கியமாயெடுத்திருக்கிறபடியால், அவற்றுள் இடைகலேயானது தேகத்தின் இடப் பாகத்திலும், பிங்கலேயானது தேகத்தின் வலப் பாகத்திலும், சுழுமுனேயானது தேகத்தின் மத்தியிலுமிருக்கின்றன.

இக்குண்டலி சத்தியைப் பற்றி விவரமாகப் பின்னே சொல்லப்பட்டிருக்கிறது.

ஆசன விதிகள்: பத்திரம், வீரம், பதுமம், கோமுகம், குக்குடம் ஆகிய ஐந்தும் ஞான சாதனத்துக்குரிய ஆசனமாகும்.

இவற்றுள் பதுமாசனமாவது, இரண்டு தொடைகளில் இரண்டு பாதங்களேயும் செவ்வையாக வைத்து உட்காருதல்.

இது சகல பாவங்களேயும் நாசம் செய்வதாகும்.

இதை மான்தோல், புலித்தோல், வெண்துகில், சித்திராசனம், தர்ப்பை இவைகளில் மேலிருந்து அனுபவிக்கலாம்.

இதில் இடை, வயிறு, கண்டம்; தலே சமனுய் ஸ்தம்பத்தைப் போல நிமிர்ந்திருக்க வேண்டும்.

அன்றியும், வடமுகம்நோக்கித் தக்ஷிணமூர்த்தமாய் எழுந்தருளியிருக்க வேண்டும்.

ஆத்தமஞான குருவின் சன்னிதிக்கு நேராய் உட்காரவேண்டும்.

இதைச் சுவஸ்திகா ஆசனம் என்பர். கிருகஸ்தருக்குப் பதுமாசனமும், சந்நியாசிகளுக்குச் சித்தாசனமும் ஹடயோக தீபிகையிலும் சொல்லப் பட்டிருக்கின்றன.

இரேசக பூரக லக்ஷணம்: பிராண வாயுவின் அசைவு எதுவோ அதுவே சித்தத்தின் அசைவென்று, மேலான் புத்திமான்கள் பிராணனது சலனத்தை ஜெயித்தலில் முயல்கிறார்கள். ஆகையால் ராஜஸ தாமஸ குணங்களை நீக்கி, சாத்துவிக குணத்தோடு பிராணாயாமம் செய்யவேண்டும். பிராணாயாமத் தில் வெளி வாயுவை உட்கொள்வது 'பூரக'மாம்: அவ்வாயுவை நிறுத்து வது, 'கும்பக'மாம். கும்பித்த வாயுவை வெளிப்படுத்துவது, 'இரேசகம்' எனப்படும். இதுவே பிராணாயாம அங்கமாகிய இரேசக பூரகலக்ஷணம்.

சூரிய நாடியாகிய பிங்கலையால் பிராணனை இழுத்து, மெள்ள மெள்ள வயிற்றை நிரப்ப, விதிப்படி பந்த பூர்வமாகிய கும்பகம் செய்து, மறுபடி யும் சந்திர நாடியாகிய இடைகலையால் இரேசிக்க வேண்டும்.

சந்திரநாடி சூரியநாடிகளுள் எந்த நாடியால் பூரிக்கிறானோ. அதனா லேயே இரேசித்து நிரோதித்தலால், வேர்வை நடுக்கம் முதலியவை உண் டாகும். அது வரையில் கும்பித்து எதனால் பூரகஞ்செய்யப்பட்டதோ, அதற் கன்னியமான நாடியால் மெள்ள மெள்ள ரேசிக்க வேண்டும். வேகமாய் ரேசித்தால் பலக்குறைவு உண்டாகும். எதனால் ரேசகம் செய்யப்பட்டதோ அதனாலேயே பூரகம் செய்யலாம், இடைகலையால் பிராணனைப் பூரித்துக் கும்பிக்கப்பட்ட பிராணனை. மற்றப் பிங்கலையால் இரேசிக்க வேண்டும்.பிங்க லையால் வாயுவைப் பூரித்துக் கும்பித்த வாயுவை இடைகலையால் இரேசிக்க வேண்டும்.இவ்வண்ணம் சந்திரனால் பூரித்துக் கும்பித்து சூரியனால் இரேசிக்க வேண்டும்: சூரியனால் பூரித்துக் கும்பித்து. சந்திரனால் இரேசிக்க வேண்டும். இவ்விதம் சூரிய சந்திர நாடிகளின் அப்பியாசத்தைத் தினமும் விஸ்தரிக்க வேண்டும், இதனால் நாடிகள் மூன்று மாசத்திற்கு மேல் சுத்தமாகின்றன.

அஜபாவின் நிலை: இந்த யோகத்துக்குரிய ஏகாந்த ஸ்தானத்தில் பதுமாசனமிட்டு உட்கார்ந்து உடனே அஷ்டகந்த தூபம் இடவேண்டும். இந்த யோகத்திற்காக ஏற்படுத்திய அறையானது மிக நலமாய் இருக்க வேண்டும். தான் தனியேஇருக்க வேண்டும். இதில் சொல்லிய நான்குகாலங் களில் எந்தக் காலமாவது வைத்துக்கொண்டு, அப்பியாசப்படுத்த வேண் டும்.

இடைகலையானது எப்போதும் வல நாசியிலும் ஹம்ஸம் எனவேயிருக் கும். ஹம்ஸமென்பது ஆத்துமாவின் பெயராகும். முதலில் வெளியே வரு கிற சுவாசத்தின் சத்தமாகிய 'ஹம்' என்பதையும் உள்ளே போகிற சுவா சத்தின் சத்தமாகிய 'ஸம் என்பதையும் கண்டறியவேண்டும், இந்த ஹம் ஸம் என்கிற சத்தத்தைக் கண்டறிந்தவன், இந்த அப்பியாசத்தில் முதற் படி தெரிந்தவன் இம் மாணாக்கன் எப்போதும் உலக ஆசையையும் குடும்ப மாகிய கட்டையும் நிவர்த்திக்கவேண்டும். ஒரே காலத்தில் நீக்கக் கூடாது, ஏனெனில் ஒரு வருஷ காலம் வரையில் மனக் கலக்கமும் பல விதக் கவலை யும் நேரிடுமாதலால், நாளுக்கு நாள் கொஞ்சம் கொஞ்சமாக நீக்க வேண்டும்.

மாணுக்கன் கூடிய அளவு மனத்தை ஸ்திரப்படுத்த வேண்டும்.

இதே மாதிரியாகத் தன் சுவாசத்தைக் குறித்து, அதனுல் உண்டாகும் ஹம்-ஸம் என்ற சத்தத்தைக் கண்டறியவேண்டும். இப்படி அப்பியசித்து மூன்று நாடிகளின் குணத்தையும் ஹம்-ஸம் என்ற சத்தத்தையும் கண்டறிந்தவுடன் தத்துவத்தை அறியவேண்டும்.

மூன்று நாடிகளைக் கண்டறியாமல், பஞ்சதத்துவத்தை ஆரம்பிக்கக் கூடாது. இந்த யோக அப்பியாசி ஜீரண சத்தியை உணர்ந்து தேகத்தைப் பலப்படுத்த வேண்டும்: அதாவது, அரிசி கோதுமை பச்சைப் பயறு துவரை உளுந்து கம்பு கேழ் வரகு நெய் பால், தயிர் மோர் முதலியவற்றை உபயோகிக்க வேண்டும். இந்த யோகி அரை வயிறு அன்னமும் கால் வயிறு ஜலமும் சாப்பிடவேண்டும். ஏனெனில், உள் வாயு மற்ற ஒரு பாகத்தில் சஞ்சரிக்க வேண்டுமென்றுணர்க

புளிப்பு, இனிப்பு, உவர்ப்பு கார்ப்பு, முதலியவை அதிகமாகச் சேர்க்கக் கூடாது. இத்தன்மைப்பட்ட யோகி சன்னியாசியாக வேண்டுவதில்லை எல்லாக் கிருகஸ்தரும் செல்வர்களும் ஏழைகளும் ஜாதிபேத நிற வித்தியாசம் பார்க்க வேண்டுவதில்லை; எவர்கள் திரிகரண சுத்தமாக இந்த யோகத்தைச் செய்வார்களோ அவர்களுக்கு இது சித்தியாகும் என்பது நிச்சயம்.

ஒருவன் பதினெட்டு வயதில் இந்த யோகம் அப்பியசித்தானுனல் ஐம்பதாவது வயதில் அந்தக் கேசரி முத்திரையே அடைவான். இத்தன்மையான யோகி மது மாமிசங்களைக் கண்டிப்பாய் நீக்கியிருப்பதன்றி, ராஜஸ தாமஸ குணங்களற்று, தத்துவத்தைக் கொண்டு சுறுசுறுப்பாக அப்பியசித்து அதி தீவிர பக்குவியாய் வாழ்வன்.

பஞ்ச தத்துவ நிலை: இனி, சூக்ஷ்ம பஞ்சாக்ஷரத் தியானத்தின் ஆதாரமாகிய பஞ்ச தத்துவங்களைக் குரு சம்பிரதாயத்தால் அறிய வேண்டுவதும் அந்தப் பஞ்ச 'தத்துவங்களின் குறிப்புகளின் விவரணமுங் கூறப்படும். அதாவது, முன் சொன்ன மூன்று நாடிகளின் குணங்களையும் சுத்தமாக அறிந்து கொண்டு, ஒன்றை ஒன்றில் மாற்றிக் குண்டலியை அடையாமல் தத்துவங்களை அப்பியசிக்கலாகாது.

முதலிற் சொல்லியிருக்கிற நாடிகளைத் தன் வசப்படுத்திக் கொள்ளாமல், யோகி தத்துவங்களைக் குறித்து ஆரம்பிக்கக் கூடாது. போஜனம், மலம் கழித்தல், போகஞ் செய்தல் இவை மூன்றுஞ் சூரிய நாடியில் செய்பவை. தாகம் ஜலவிருத்தி இவைகளை இடைகலையில் செய்யவேண்டும்.

பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம், என்னும் ஐந்து தத்துவங்களும் மூன்று நாடிகளில் நிமிஷத்திற்கு ஒரு முறை மாறிக் கொண்டே வருகின்றன. இந்தத் தத்துவங்களைக் கண்டறிவதற்குரிய வகையைக் கூறுவோம்:

எவர்கள் இந்த மூன்று வாயுக்களை அப்பியசித்திருக்கிறார்களோ, அவர்களே இந்த யோகத்திற்குரியவர்கள். இந்த உலகம் பஞ்ச பூதத்தால் சிருஷ்

டிக்கப்பட்டிருக்கிறது. இது கண்டு கொள்பவர்களுக்கு ஆயுள் விருத்தியாகும். அப்படிப்பட்டவர்கள் பூஜை முதலாகிய உபசாரங்கள் செய்யப் பெற்று மேலாவார்கள்.

இந்த ஐந்து தத்துவங்களும் சத்திய லோகம், பூலோகம், மிருத்யு லோகம் முதலாகிய இடங்களில் வியாபித்திருக்கின்றன. இவைகட்கு அன்னியமாக ஒரு வஸ்துவும் ஏற்படாது.

இப் பஞ்ச தத்துவத்தைக் கண்டறிவதற்கு விவரம் சொல்லுவோம்.

(1) தத்துவங்களின் நடை; (2) சுவாசத்தினால் தத்துவங்களை அறிதல்; [3] சுவாசத்தில் தத்துவத்தின் அடையாளம்; [4] தத்துவங்களின் நிறம்; [5] தத்துவங்களின் சுவை; [6] சுவாசத்தின் அளவு; [7] தத்துவங்களின் அசைவு; [8] தத்துவங்களின் பலன்.

இந்த எட்டு விதங்களினால் பஞ்ச தத்துவத்தைக் கண்டறிய வேண்டும்.

மாணாக்கன் எந்த வாயுவில் எந்தத் தத்துவம் நடக்கிறதோ, அதைக் கண்டறிய வேண்டும். மேலும், முக்கியமாகக் கவனிக்க வேண்டும் பஞ்சேந்திரியங்களைச் சண்முகி முத்திரையால் மூடிக் கொண்டு, தினம் தினம் கொஞ்சங் கொஞ்சமாக அப்பியசிக்க வேண்டும். அதிகமாக அப்பியசித்தால், அசௌக்கியம் நேரிடும். குரு எவ்வளவு பிரமாணஞ் சொல்லுவாரோ, அவ்வளவுதான் நடக்க வேண்டும்.

[1] இந்தச் சண்முகி முத்திரையை மூடிக் கொண்டு அப்பியசிக்குங் காலத்தில் மஞ்சள் நிறம் தோன்றினால், பிருதி என்றும்; வெண்ணிறம் தோன்றினால் அப்பு என்றும்: சிவப்பு நிறம் தோன்றினால், தேயு வென்றும், பச்சை நிறம் தோன்றினால், வாயுவென்றும், கறுப்பு நிறம் தோன்றினால், ஆகாயமென்றுஞ் சொல்லப்படும்.

[2] மாணாக்கன் கண்ணாடியைத் தனக்கு முன்னால் வைத்துக் கொண்டு, அதன் மேல் சுவாசத்தை விட்டால் அது நாற்சதுரமாயிருந்தால் பிருதிவி என்றும்; அரையுருண்டை வடிவமாய் இருந்தால் அப்புவென்றும், முக்கோணமாய் இருந்தால், தேயுவென்றும், அறுகோண உருண்டை வடிவமாயிருந்தால் வாயுவென்றும்சிறு புள்ளிகள் மாதிரியாயிருந்தால், ஆகாயமென்றும் அறிய வேண்டும்.

[3] மாணாக்கன் சுவாசம் விடும்போது சுவாசம் நேராகப் போனால், பிருதுவி; கீழாகப் போனால், அப்பு; மேலாகப் போனால், தேயு; ஒழுங்கினமாய்ப் போனால் வாயு; அடங்கிப் போனால், ஆகாசமென்று அறிய வேண்டும்.

[4] பிருதிவி, மஞ்சள்; அப்பு, வெண்மை; அக்கினி, சிவப்பு; வாயு பசசை; ஆகாயம், கறுப்பு என இவைகளைக் கண்டறிய வேண்டும்.

உணரும் விவரம்: ஒவ்வொரு [illegible] தனக்குப் பின்னால் வைத்துக் கொண்டு பதுமாசனத்தில் உட்கார்ந்து தனது

எண்ணத்தைக் கூட்டி, நிஷ்டையிலிருந்து கொண்டு, பஞ்ச தத்துவத்தில் எதையாகிலும் ஒன்றை நினைத்துப் பின்னால் இருக்கிற குண்டுகளில் ஒன்றை எடுப்பானாகில், அது தான் எண்ணிய நிறம் போல இருந்தால், இதை அறிந்தவன் ஆகிறான். இவ்வண்ணமே ஒவ்வொரு குண்டையும் எடுப்பானானால், முற்றுமுணர்ந்தவனாகிறான்.

[5] தித்திப்பு, பிருதிவி; துவர்ப்பு, அப்பு; புளிப்பு, தேயு; உவர்ப்பு; வாயு; ஆகாயம் கார்ப்பாகும்.

[6] சுவாசம் 12 அங்குலம் நீண்டால், பிருதிவி; 16 அங்குலம் நீண்டால், அப்பு; 4 அங்குலம் நீண்டால், தேயு; 8 அங்குலம் நீண்டால், வாயு; மூக்கினுள்ளாகவே இருந்தால், ஆகாயம்.

[7] அசையாத வேளை, பிருதிவி: அசையும் வேளை. அப்பு: கஷ்டமான வேளை, தேயு; துஷ்ட வேளை, வாயு; பூசை வேளை, ஆகாயம்.

[8] பிருதிவி தத்துவத்தில் ஆரம்பிக்கும் வேலை, கண்டிப்பாக இலாபத்தில் முடியும். ஜல தத்துவத்தில் அசையும்படியான வேலைகள் செய்யத் தக்கவை. ஏனென்றால் ஏதாவது ஒரு முடிவான வேலையை ஆரம்பித்தால் சீக்கிரத்தில் முடிந்து விடும்.

அக்கினி, வாயு, ஆகாயம் ஆகிய மூன்று தத்துவத்தில் எந்த வேலையை ஆரம்பித்த போதிலும் அது அபஜெயமாகவே முடியும். ஆகையால் மாணுக்கன் இவைகளை எந்தக் காலத்தில் உபயோகப்படுத்த வேண்டுமோ, அந்தக் காலத்தில் தத்துவத்தை அறிந்து உபயோகப்படுத்த வேண்டும்.

இந்தத் தத்துவத்தில் புத்தியைச் சரியாகச் செலுத்த வேண்டும். ஏனெனில், வியாதி முதலாகிய ஹிம்சைகள் வர வொட்டாமலும் பலவிதக் குணமில்லாமலும், நிரோதத்தை ஒரே குணமாக இருந்து பார்க்க வேண்டும்.

பிராணாயாம நிர்ணயம்: அதாவது முன்சொன்ன பிராணாயாமத்தின் பிரமாணத்தை உணர்த்துதல்; அதாவது, அருணோதய முதல் மூன்று நாழிகை வரையிலும் மத்தியானத்திலும், அஸ்தமிக்கிறதற்கு முன்னும் பின்னுமாக இரு முகூர்த்தமும், அர்த்த ராத்திரியிலும், பிரதி தினம் நான்கு முறை செய்ய வேண்டும். காலம் ஒன்றுக்கு 80 பிராணாயாமம் வரையிலும் நன்றாக அப்பியசிக்க வேண்டும்.

முகூர்த்தமென்பது, இரண்டு நாழிகையளவுள்ளதாம். நான்கு முறை செய்தால், தினந்தோறும் 320 பிராணாயாமமாகின்றன.

ஒரு புருஷன் அப்பியசிக்க வேண்டுமானால், காலையில் 60ம், மத்தியானத்தில் 40ம் சாயங்காலத்தில் அர்த்த ராத்திரியில் 20ம் ஆக மெள்ள மெள்ளப் பிராணாயாமம் செய்ய வேண்டும்.

அது கைவல்லியமாகும்போது முதலில் வேர்வையும், இரண்டாவது நடுக்கமும், மூன்றாவது தவளைக் கத்தும், அப்பியாசத்தால் பதுமாசனத்தில்

ருக்கையில் பூமியினின்று ஆகாயத் தெழும்புதலும் உண்டாகுமென்பது குருநாதரால் சொல்லப்பட்டிருக்கின்றது.

கிருகஸ்தாசிரமிகளுக்கு உபயோகம்: இந்தப் பிராணுயாமம் கிருகஸ் தனுக்குப் பாப சுத்தியின் பொருட்டும் யோகிகளுக்கு யோக சித்தியின் பொருட்டுமாம். கிருகஸ்தன் சங்கத்தை விட்டு ஏகாந்தத்திலிருந்து அப்பி யாசம் செய்ய வேண்டும். அதன் பின் ஆகாரத்தின் பொருட்டு வெளியே சங்கத்தில் பிரியமுடையவன் போல வியவகரிக்க வேண்டும், கருமத்தால் உண்டான யாவும் கருமத்தின்படியிருக்கின்றன; நிமித்த காரணமாக இவற்றைச் செய்வதில் ஒருக்காலும் தோஷமில்லை.

நல்ல விவேகி இந்த யோகத்தை அனுசரிப்பானுயின், அவன் அவசியம் சித்தியடைவான். இதிற் சம்சயமில்லை. அவன் புண்ணிய பாவங்களினின் றும் விடுபட்டு, தேகாபிமானத்தை நீக்கி, கிருகத்திலிருந்தே முத்தியை அடைவான். அந்த யோகியானவன் லோக சங்கிரகம் லோக பரிபாலன மாகிய தனது காரியத்தில் புண்ணிய பாவங்களைச் செய்யினும், அப் புண்ணிய பாவங்களினுல் பற்றப்படான்: கிடைத்ததில் சந்தோஷமுடைய வனுயும், உள்ளே கொஞ்சமும் பற்றில்லாதவனுயும். கால வரம்பு, இட வரம்பு. நடை வரம்பு என்னும் சகல வரம்புகளும் உள்ளவனுயும் யோக சாதனத்தில் பொருந்தியிருப்பான். யோகக் கிரியைகளோடு கூடிய கிருகஸ் தனுக்கு ஈஸ்வர வாக்கியமாகிய பிரணவத்தின் சத்தத்தால் சித்தி யுண்டாகும். ஆனுல், அவன் அதைச் செவ்வையாக அப்பியசிக்க வேண்டும்.

உதாரணம்:— 'கிருகஸ்தன் புத்திர தாராதிகளால் நிரம்பியவனுப் வீட்டில் இருந்து கொண்டு, அகப்பற்றில்லாமல் யோக மார்க்கத்தில் தன்னி டத்தில் சித்தியின் அடையாளங்களைக் கண்ட பிறகு எனது ஆஞ்ஞையைச் சாதித்துக் கிரீடிப்பன்,' என்று சிவசங்கிதையும் கிருகஸ்தனுக்குச் சித்தி உண்டாகுமென்று சாதிக்கின்றது.

மாத்திரை: ஆரம்பத்தில் ஒரு மனிதன் ஜாக்கிரத்தில் விடும் சுவாசம் வெளிப்பட்டு உள்ளே போகிறதெவ்வளவோ, அவ்வளவு பிராணுயாமத்தின் மாத்திரையாகும். அனுபவத்தின் பின் ஒரு புருஷன் நித்திரை செய்யும் போது சுவாசம் எவ்வளவு காலம் போய்த் திரும்புகிறதோ, அவ்வளவு காலம் பிராணுயாமத்தின் மாத்திரை எனப்படும்.

மாணுக்கன் அப்பியாச காலத்தில் பால் நெய் முதலியவற்ருேடு கூடிய உணவை உண்பது சிலாக்கியம். அப்பியாசம் திடமான காலத்தில் அப்படிப் பட்ட நியமம் வேண்டுவதில்லை என்றும், பிராணன், பிராணுயாமம் ரேசக பூரக கும்பக மாத்திரைகளென்றும், 'பிராணன்' என்பது தன் தேகத்தில் ஜீவித்திருக்கும் வாயுவென்றும், 'ஆயாமம்' என்பது அந்த வாயுவைத் தடுப்பதென்றும், நாரதீயத்திலும் சௌரவ புராணத்திலும் சொல்லப் பட்டிருக்கின்றன.

இரேசக பூரக கும்பக பேதத்தால் மூன்று விதமாயும் மூன்று வர்ண மாயும் இருப்பதால் பிரணவமே பிராணுயாமமெனப்படும். ... திலிருக்கும் புருஷன், நாசி நுனியில் சந்திரபிம்பப் பிரகாசங்களால் விரிந்த

அகார மூர்த்தியானது இரத்தாங்கமுடையது. அன்ன வாகனி தண்டங் கரத்தில் உடைய வாலையுமாகி, காயத்திரியாகின்றது; கருடவாகனி, எள் வர்ணமுடையது; சக்கரத்தைக் கரத்திலுடையது: சாவித்திரியாகின்றது; மகாமூர்த்தியானது கருமையான அங்கமுடையது; இடபவாகனி, வயது சென்றதும் குலந்தரித்ததுமாகிய சரஸ்வதியாகின்றது! அகராதி மூன்றிற்கும் காரணம், பரஞ்சோதியாகிய ஏகாக்ஷர பிரணவமாகிறதென்று தியானிக்க வேண்டும்.

இடையினால் வெளிவாயுவை மாத்திரையளவு பூரித்து, அகாரத்தைச் சிந்தித்து, பூரித்து வாயுவை 64 மாத்திரை அளவு கும்பித்து, உகாரத்தையே தியானித்து, கும்பிததலைப் பிங்கலையால் 32 மாத்திரையளவு இரேசித்து மகாமூர்த்தியைத் தியானிக்க வேண்டும்.

அன்றியும், பூரகம் பன்னிரண்டு ஓங்காரமாகவும், கும்பகம் பதினாறு ஓங்காரமாகவும், இரேசகம் பத்து ஓங்காரமாகவும் செய்ய வேண்டும். இது பிராணாயாம அப்பியாசமெனப்படும். பிரமன், விஷ்ணு, உருத்திரன் மூவரும் பூரக கும்பக இரேசகங்களுக்கு அதி தேவதைகளென்று சொல்லப் படுவர்.

முன் சொல்லிய குண்டலி சத்தியைச் சொல்லுகிறோம். அதாவது நித்திரை செய்யுங் குண்டலியானது குருப்பிரசாத மூன்றும் வாக்கியத்தால் எப்போது விழிக்கின்றதோ, அப்போது சகல பதுமங்களும் ஆறு சக்கரங்களும் பிரமகிரந்தி, விஷ்ணு கிரந்தி, உருத்திர கிரந்தி என்னும் மூன்று கிரந்திகளும் பேதத்தை அடைகின்றன.

அப்போது 'சூனிய பதவி' என்னுஞ் சுழுமுனையிற் பிராண வாயு இராச மார்க்கமாக அனுசரிக்கப்படுகின்றது.

சுகமாகப் போக்குச் சம்பவித்தால், சித்தம் நிராலம்ப நிர்விஷயமாகின்றது; சித்தம் நிராலம்பமாகுங்கால் காலனை வஞ்சிக்கக் கூடும்.

சுழுமுனை யென்றும், சூனிய பதவியென்றும், பிரமாந்திரமென்றும், மகாமேருவென்றும், பெருவழியென்றும், மயானமென்றும். சாம்பவி மத்திய பாகமென்றும் சொல்வதால்,இந்த குண்டலி பேதத்தினாலேயே ஷட்சக்கர பேத முதலியவை உண்டாகின்றமையால் முழு முயற்சியோடு பிரமரந்திரத்தின் சச்சிதானந்த லக்ஷணப் பிரமத்தை அடைவதற்கு பாயமாகிய சுழுமுனையின் வாயிலைமுகத்தால் முடிக் கொண்டு நித்திரை செய்யும் ஈஸ்வரியாகிய குண்டலியை விழிப்பிக்க மகா முத்திரை முதலியவற்றைச் செவ்வையாக அனுசரிக்க வேண்டும்.

இந்தக் குண்டலி சத்தியானது கந்தத்தின் மேல் பாகத்தில் யோகிகளுக்கு மோக்ஷத்தின் பொருட்டும், மூடர்களுக்குப் பந்தத்தின் பொருட்டுமாகத் தூங்குகின்றது. சகலயோக தந்திரங்களுக்கும் குண்டலி சத்தி ஆதாரமாயிருப்பதால், அக்குண்டலி சத்தியை எவன் அறிகிறானோ, அவன் யோக வித்தாவான் என்றும் யோகிகள் தூங்கும் குண்டலியை

விழிக்கச் செய்கிறவர்களென்றும் அடயோக தீபிகையில் சொல்லப்பட்டிருக்கின்றன.

குண்டலி ஸ்தான நிலே; மூலாதாரத்தில் பொருந்தும் உட்பாகமாகிய அக்குண்டலியைச் சூரியனுல் பூரிக்க வேண்டும். குதத்திற்கு இரண்டங்குலம் மேலும், இலிங்கத்திற்கு இரண்டங்குலங் கீழுமாகிய தேகத்தின் மத்தியானது சரீர நடுவாகச் சொல்லப்பட்டிருக்கின்றது.

கந்த ஸ்தானம் மனிதர்களுக்குத் தேகமத்திய மூலாதாரத்தினின்றும் ஒன்பதங்குலத்தின் மேல் நான்கு அங்குல அகலமும் நீளமும் உள்ளதாய், முட்டை போன்ற வடிவுள்ளதாய், துவக்குத் தோல் முதலியவற்ருல் அலங்கரிக்கப்பட்டிருக்கின்றது.

குதத்திற்கு இரண்டங்குலமேல் தேகமத்திய பாகம் ஓர் அங்குலத்திலிருந்து ஒன்பதங்குலம் வரை கந்த ஸ்தானமாம்.

ஆகப் பன்னிரண்டு அங்குலப் பிரமாணம், அதாவது ஒரு ஜாண். எழுபத்தீராயிரம் நாடிகளின் பலத்தைச் சோதிக்க வேண்டுமாயின், அதற்குச் சத்தி சலனமாகிய குண்டலி அப்பியாசமின்றி வேறு சுத்தி செய்யும் உபாயமில்லை.

இந்த மத்திய நாடியாகிய சுழுமுனையானது யோகிகளுக்குத் திடப்பியாசம் சுவஸ்திகா பங்கயாசனங்களாலும் பிராணுயாமத்தாலும் மகா முத்திரை முதலிய முத்திரைகளாலும் சௌக்கியமுண்டாக்குகின்றது. ஆகிலும், சமாதியினுல் அன்னிய விர்த்தி நிரோதிக்கலாகாது. ஏகாக்கிர தன்மையால் மனத்தைத் தாரணை செய்து அப்பியசித்து நிலைபெறச் செய்வதற்கு முயற்சி செய்ய வேண்டும்.

ஏனென்ருல், ராஜயோகமின்றிப் பரம புருஷார்த்த பலன் சித்தியாமையால் வாயுவின் கும்பக முத்திரை விதானமாகிய சகல விதிகளையும் மனத்தோடு அப்பியசிக்க வேண்டும். புத்திமான்கள் வாயுவின் விதிக்கு அன்னியமாகிய விஷயத்தில் மனே விர்த்தியைச் செலுத்தலாகாது. எவர் யோகிகளில் குருபரம்பரையாகிய சம்பிரதாயத்தால் வந்த சாம்பிரதாக்கியமாகிய மகா முத்திரை முதலியவற்றின் உபதேசத்தைத் தருகின்ருரோ, அவரே ஸ்ரீ குரு. அவரே சகல குருக்களுக்கும் சிரேஷ்டரானவர் அவரே பிரபு. அவரே சாக்ஷாத் பிரத்தியக்ஷ ஈஸ்வரர் என்றும் சொல்லப்படுவர்.

அன்றியும், அக்கினி மண்டலம் நாபியின் கீழ்ப்பாகத்திலிருக்கிறது. அது மனிதர்களுக்குத் தேகத்தின் மத்தியில் பொன்னிறமுள்ளதாய், முக்கோணமாய் இருக்கின்றது. அக்குண்டலியை எழுப்பும் விதமாவது; சூரிய உதய காலத்திலும் அஸ்தமன காலத்திலும் தினந்தோறும் இரண்டு முகூர்த்தம் பேதிக்க வேண்டும். சூரியனுல் பூரித்துச் சந்திரனுல் இரேசிப்பதால், அபானனும் அக்கினியை அடைந்து, உஷ்ண சொருபத்தால் பிராணனை அடைகின்றது.

அக்கினியின் உஷ்ணத்தால் [illegible] தகிக்கப்படுகின்றதால் தூங்குகின்ற குண்டலி சத்தி நன்ருய் விழிப்புடையதாகின்றது; தண்டத்

தால் அடிபட்ட சர்ப்பத்தைப்போல நிஸ்வாசத்தைச் செய்து நிமிர்ச்சி அடைகின்றது; அதன் பின் பிலத்திற் பிரவேசித்த பாம்பைப்போலச் சுழு முனையினுள் பிரவேசிக்கின்றது.

ஒரு புருஷன் சலனம் செய்து மூல ஸ்தானத்திலிருந்து குண்டலியை மேலே கொண்டு வருவானுயின், அவன் மேற்சென்று அமிர்தத்தை அடைவான். இந்தக் குண்டலி சத்தியை வாலைப் பிடித்து எழுப்பினுல் நித்திரையை விட்டு மேலே எழுப்புகின்றது. இதைக் குரு முகமாக அறிய வேண்டும்.

*அமிர்த நிலை:* சிகையின் மத்தியில் பரமாத்துமா பொருந்தியிருப்பதால், மேருவைப்போல உயர்ந்திருக்கும் சுழுமுனையினது மேல் பாகத்தின் மத்தியில் சோம ஜலம் ஒழுகிக் கொண்டிருக்கிறது. அந்தத் துவாரமான சந்திர மண்டலத்தினின்று சரீரத்திற்குச் சாரம் ஒழுகுகின்றது.

ஒழுகும் சந்திர அமிர்தத்தின் சுவை கார்ப்பு, உவர்ப்பு இவற்றிற்குச் சமானமாய் உள்ளதாயும், தேன், நெய், பால்களைப்போல இரசமுடையதாயுமானுல், அப்போது அவனுக்குக் காயசித்தி ஆகின்றது. அந்த சந்திராமிர்தமென்னும் சத்தை எவன் பானம் பண்ணுகிருனே, அந்த யோகி வியாதியில்லாதவனுய்த் தாமரைத் தண்டு போல மிருதுவான சரீர முடையவனுய், வெகுகாலம் ஜீவிப்பான்.

*சுவாசாங்குலப் பிரமாண நிலை:* இந்த மனித ஜன்மத்துக்குச் சாதாரணமாய்ச் சுவாசம் உள்ளே பத்தங்குலமும், வெளியில் பன்னிரண்டங்குலமும் போகும்: இதுவல்லாமல், நடக்கும்போது 24 அங்குலமும், ஓடும்போது 42 அங்குலமும், போகஞ் செய்யும்போதும் தூங்கும்போதும் 50, 60 அங்குலமும் போகும். சாப்பிடும் போதும் வாந்தியாகும் போதும் 18 அங்குலம் ஓடும்; சாதாரணமாய் 12 அங்குலம் ஓடும். ஆகையால், இந்தச் சுவாசத்தை யோக அப்பியாசிகள் கவனிக்க வேண்டும். இவ்வளவு நீளமாகப் போகிற சுவாசத்தைத் தன்னுல் கூடிய அளவு சிறிதாகக் குறைக்க வேண்டும்,

அது ஏனென்ருல், இந்த மனித ஜன்மத்திற்குக் கலைகளாகிய சுவாசம் 12 அங்குலம் ஓடி, 4 அங்குலம் கழித்து, 8 அங்குலந்தான் நின்ற இடத்தில் நோக்கும். இப்படிச் சாதாரணமாக 4 அங்குலம் கழிந்ததனுல் 120 வயதாகின்றது. மக்கள் படிப்படியாகச் சுவாசத்தைப் பந்தனம் பண்ணுவதனுல் நீண்ட ஆயுளை உடையவர்களாய் இருப்பார்கள்.

சாதாரணமாய் மனிதர்களுக்கு உண்டாகிய சுயபுத்தி போதாது. ஆகையால், அனுபவமுடைய யோகிகளின் புத்தியைக் கேட்டு நடக்க வேண்டும், அல்லாவிட்டால், துன்பம் நேரிடும். இந்த மூன்று வாயுக்களையும், பஞ்ச தத்துவங்களையும், சுவாசத்தையும் குணிக்க அறிந்துகொண்டால், வரப்போவதைச் சொல்லலாம். தைரியத்தினுல் சுறுசுறுப்பாய் மாதங்களில் இந்த [illegible] அப்பியசிப்பானுகில், இரண்டு மூன்று வருஷத்தில் அறியப்படுகிருன்.

மரண நிலை அறிதல்: இடைகலை அல்லது பிங்கலையில் ஓர் இராத்திரி சுவாசம் முழுவதும் இடைவிடாமல் நடந்தால், அம்மனிதன் மூன்று வருஷத்தில் மரணமடைவான். இதே மாதிரியாகப் பிங்கலையில் மாறுதலில்லாமல் இரண்டு இராத்திரி இரண்டு பகல் இடைவிடாமல் நடக்கும் மனிதனுக்கு மரணம் இரண்டு வருஷத்தில் நேரிடும். இடைவிடாமல் ஒரு நாசியில் சுவாசம் மூன்று நாளைக்கு நடக்கும் மனிதனுக்கு ஒரு வருஷத்தில் மரணம் நேரிடும். இராத்திரி மூழுதும் இடைகலையும் பகல் முழுதும் பிங்கலையும் இடைவிடாமல் நடக்கும் மனிதனுக்கு ஆறு மாதத்தில் மரணம் நேரிடும். பிங்கலை தொடர்ச்சியாக இடைவிடாமல் ஒரு பாகம் நடக்கும் மனிதனுக்குப் பதினைந்து தினத்தில் மரணம் நேரிடும். இடைகலையானது இதே மாதிரியாக ஒரு மாதம் நடந்தால் இந்த விதிப்பிரகாரம் முடியும்.

புருவத்தைப் பார்த்தால் தெரியாதவர்களுக்கு ஒன்பது நாளிலும், காது கேளாதவர்களுக்கு ஏழு நாளிலும், நக்ஷத்திரம் தெரியாதவர்களுக்கு ஐந்து நாளிலும், மூக்கு நுனி தெரியாதவர்களுக்கு, மூன்று நாளிலும், இரண்டு கண்களையும் கையால் அமுக்கினுல் தண்ணீர் வராதவர்களுக்குப் பத்து நாளிலும் மரணம் நேரிடும் என்பது குரு வாக்கியம்.

யோகிகளுக்கு மேலே கூறிய அடையாளங்கள் நேரிட்டால், உடனே வாயுவைச் சோதித்து, அதைச் சரிப்படுத்திக் கொள்ளுந்தன்மை உண்டு.

யோகிகளுக்கு மரணம் நேரிடுவது கஷ்டம், யோகிகள் அப்பியாசத்தால் வாயுக்களையும் தத்துவங்களையும் உணர்ந்து முத்திரையைப் பின் தொடருவார்கள்.

பிறகு கேசரி முத்திரை எவ்வளவு காலம் ஜீவித்திருக்க வேண்டுமோ, அவ்வளவு காலம் ஜீவித்திருப்பார்கள். இந்த யோகிகள் மூன்று வாயுக்களையும் அதிகமாகக் கவனித்து ஸ்திரப்படுத்த வேண்டும்.

சாதாரணமாய் மனிதர்களுக்கு இருபத்தோராயிரத்து அறுநூறு சுவாசம் நடக்கும் பக்ஷத்தில் 120 வருஷம் ஜீவித்திருக்கலாம்.

இப்போது மனிதர்கள் அறுபத்தோராயிரத்து அறுநூறு சுவாசத்துக்குமேல் விடுகிறுர்கள். எப்படியெனில், ஓடுவதனுலும், நடப்பதனுலும், தூங்குவதனுலும், போகம் செய்வதனுலும் சுவாசம் அதிகரிப்பதனுல். இந்த நூற்றிருபது வயதுக்குக் குறைவு நேரிடுகின்றது.

சாதாரணமாய் மனிதர் விடும் சுவாசம் எவ்வளவு குறையுமோ, அவ்வளவு வயது ஏறி வரும்: திடீரென்று சுவாசத்தைக் கட்டக் கூடாது.

மக்கள் அதிக விரைவாக ஓடக் கூடாது: அதிகம் சாப்பிடக் கூடாது; வேகமாய் நடக்கக் கூடாது; அதிக போகம் செய்யக் கூடாது.

இந்த விதிகளுள் ஒன்றும் தவறக்கூடாது. தவறி நடப்பார்களானுல் அதிக கஷ்ட நஷ்டமடைவார்கள்.

சாம்பவியின் முத்திரை: உள்ளாதார முதல் பிரமரந்திரம் வரையி லுள்ள சக்கரங்களுள் தன்னாற்கொள்ளப்பட்ட சக்கரத்தில் லக்ஷியமும், தேகத்திற்கு வெளிப்பிரதேசத்தில் மூடுதலும் திறத்தலும் இல்லாத திருஷ்டி பார்வையுமாக இருந்தல் எதுவோ, அது சாம்பவி முத்திரையாம்.

அது இருக்கு முதலிய வேதங்களிலும் சாங்கிய பதஞ்சலி முதலிய யோக சாஸ்திரங்களிலும் சொல்லப்பட்டிருக்கிறது.

சாம்பவிக்கு வெளித் திருஷ்டியும், கேசரிக்கு உள் திருஷ்டியும் சாம்ப விக்கு இருதயப் பார்வையும், கேசரிக்குப் புருவநடுப் பார்வையுமாம்: ஸ்ரீசாம்பவிக்கும் கேசரிக்கும் ஸ்தான பேதமுண்டு. சித்தம் லயானந்த மானால், பேதமில்லையென்பது கருத்து.

ஸ்ரீசாம்பவி முத்திரையால் ஸ்திரமனமுடையவனாய் நிஷ்பந்தத் தன்மையாலும் தேகேந்திரிய மனங்களின் நிர்சலனத் தன்மையாலும், சந்திர சூரியர்களை லயமாக்குகிறவனாய்ப் பிராண சஞ்சாரத்தை ஸ்தம்பிக் கிறவன் எவனோ, அவனே அதுவிதுவென்று சொல்லக்கூடாத பதமாகிய ஆத்தும சொருபத்தில் நிலைத்தவனாகிறான்.

கேசரி முத்திரை: இட வல நாடிகளிலுள்ள வாயு எந்த மத்திய தேசத்தில் செல்கிறதோ, அத்தேசத்தில் கேசரி முத்திரை ஸ்திரமுடைய தாகின்றது. இதில் ஐயமில்லை. சூனியத்தில் பிராணன் ஸ்திரமாகவே வாயுவை விழுங்குதலெனப்படும்.

சந்திர சூரியர்களென்னும் இடைகலை பிங்கலைகளின் மத்தியில் நிரா லம்பமாகிய உள் ஆகாயத்திலிருக்கும் ஆகாயங்களின் சமுதாயத்தில் செவ்வையாய்ப் பொருந்தி இருப்பது எதுவோ, அம்முத்திரையே கேசரி முத்திரை எனப்படும்.

இதன் அப்பியாசம்:—முன்னமே சுழுமுனையைப் பிராணனால் பூரிக்க வேண்டும்,

அப்போது நிச்சயிக்கப்பட்ட கேசரி முத்திரை உண்டாகிறது.

புருவமத்தி சிவமென்னும் சுக வடிவமாகிய பரமாத்துமாவின் ஸ்தான மாம்.

சிவத்தில் ஒடுங்க வேண்டும். எவன் மனத்தை நிராலம்பமாக்கி ஒன் றையும் சிந்தியாதிருக்கின்றானோ அவனே கேசரி முத்திரையை உணருவான். எவன் பிரமகாய விரக்தியைப் பரவைராக்கியத்தால் விடுகிறானோ, அவன் உள்ளும் வெளியும் இருக்கும் ஆகாயத்தில் கடத்தைப்போல நிற்பான். இது நிச்சயம்.

ஒருவன் தேகத்தினுள்ளும் வெளியுமுள்ள வாயுவைத் தனக்குள் கேசரியில் எப்படி இலயமாக்குகிறானோ, அப்படியே தேகத்திலிருக்கும்

வாயுவையும் இலயமாக்குவான்; இதில் ஐயமில்லை. அன்றியும், பிராண னது ஸ்தானத்தில் ஸ்திரத் தன்மையும் அடைவான்; வேறு ஒன்றையும் சிந்தியான்; அப்போது சொரூபத்தில் நிலைத்தலாகிய ஜீவன் முத்தனுவது திண்ணம்.

அஜபா காயத்திரியின் நிலை: பூரக ரேசகம் செய்யுங்கால் (ஹம்ஸம் ஸோஹம் என்று) நேராகவும் தலைகீழாகவும் பிரகாசிக்கின்றன.

அஜபா மந்திரத்தினுல் தத்துவமசி என்னும் மகா வாக்கியத்தில் சொல்லப்பட்டிருக்கிற ஜீவப் பிரம ஐக்கியம் அடிக்கடி சிந்திக்கப்படு கிறது.

இந்த ஸோ என்னும் அஜபா காயத்திரியை ஈஸ்வர நாமத்தைப்போல ஜெபிப்பது. சித்த சுத்திக்கு ஹேதுவாகும். வெகு காலம் வரையில் ஜெபம் செய்யின் விருத்தி அந்தர் முகப்படும்.

அப்போது சுவாசம் [வெளிப்படுங்கால், சகாரமாகிறதை (ஸோ, என் னும் சுவாசத்தை) உட்கொள்ளுங்கால். அகாரத்தை 'ஹம்' என்றே தியா னிக்க வேண்டும். இந்த அகாரம் மறுபடியும் உட்செல்லுகின்றபடியால் 'ஹம்ஸம், ஹம்ஸம்' என்றே மஹா மந்திரத்தை ஜீவன் எப்போதும் ஜெபிக்கிருன். குருவாக்கியத்தினுல் இந்த மந்திரத்தின் ஜெபம் சுழுமுனை யில் விபரீதமாயுண்டாகிறது.

அது 'ஸோஹம், ஸோஹம்' என்றடையப்படுகின்றது. சகாரம் 'கேசரி' எனப்படுகின்றது. த்வம் பதமென்று நிச்சயிக்கப்படுகின்றது; அகாரம் பரமேசுவரனுகிருன்.

தற்பதமென்று நிச்சயிக்கப்பட்டிருக்கின்றது.

சகாரத்தைத் தியானிக்கும் ஆன்மா நிச்சயமாய் அகாரமே ஆகிருன் என்பதை யோகபீஜம், யோக சூடாமணி உபநிஷத்து, யோக தத்வ உபநிஷத்து முதலியவற்ருல் காண்க.

இது அஜபா காயத்திரியாம். இதை முக்கியமாகப் பிரவர்த்தியுடைய வன் எவனே, அவன் அதிகாரியாவன். அது சோபாதி கதியானமாம்.

இவற்றினின்றும் சகாரம் அகாரமென்னும் மெய்யெழுத்துக்களை அடக்கி எஞ்சி நிற்கும் 'ஓம்' என்னும் அக்ஷரத்தைத் தியானித்தால் நிரு பாதிகமாம். 'ஓம், ஸோஹம்' என்னும் இவ்விரண்டு சத்தங்களும் பிரத்தியேகாத்துமாவோடு பின்னமாகிய பிரமமென்னும் ஒரே அர்த்த முடையன. சுத்தமாய் இருத்தலால், நிருபாதிகமாயினும், 'ஓம்' என்னும் அக்ஷரத்தின் சகார அகாரமென்னும் உபாதிகளைச் சேர்த்ததால், 'ஸோஹம்' என்னும் சத்தமுண்டாகிறது.

ஆகையால் சோபாதிகமெனப்படுவது, விசார சாகரம், பதார்த்த மஞ்சுஷரம் முதலிய நூல்களிலும் விஸ்தாரமாகச் சொல்லப்பட்டிருக்கின்றது.

நாதானுசந்தானம்; இந்த நாதானுசந்தானத்தை முதலில் அப்பியாசிக்கும் மாணாக்கன், சுரராஜ குமார வைரி ரந்த்ரத்தில தனது கைவிரல்களிரண்டினால் நிரோதித்து உள்ளே பரவும் சமுத்திரம் போன்ற திரமான நாதத்தைச் சீக்கிரமாகக் கேட்பான் அதனால் எவனுக்குச் செவ்வையாயெழுப்பிய நாதமும் வாயுவும் சுத்தமாய் ஜெபிக்கப்பட்டவைகளாகின்றனவோ அந்த மகா குணமுடையவனுக்கு அணிமாதி குணங்களால் அளவிறந்த புண்ணியமும் ¦உண்டாகின்றன என்பது சொல்லப்பட்டிருக்கின்றது.

சுரராஜன் இந்திரன். அவன் குமாரன் அர்ச்சுனன் அவன் வைரி கர்ணன் அக்கர்ண ரந்தரத்தில் என்பது பொருளாம். 'அனாகதம்' என்னும் நாத வெளியிலுண்டாகும் சுரோத்திராதி இந்திரியங்களுக்கு விஷயமாகிய தொனி சூழ்கின்றது இந்த நாத அப்பியாசி ஒரு பட்சத்தில் சகல சித்த சஞ்சலங்களையும் ஜெயித்து, விஜானந்த முடையவனாகிறான்.

முதலில் அப்பியசிக்குங்கால் சமுத்திரம் போலும் பேரி முதலிய வாத்தியம் போலும் நானாவிதமாகிய நாதம் கேட்கப்படும். பின் நாதானுசந்தானம் விர்த்தியாகுங்கால் சூட்சும சூட்சுமமாகக் கேட்கப்படும். ஆதியில் வாயு பிரமரந்திரத்திற் செல்லுங்காலத்து சமுத்திர சச்சரம், மேகம் பேரிகை, கனக தப்பட்டை என்பவற்றால் உண்டாகும் சத்தத்தைப் போன்ற நாதமும் அப்படியே பிரமரந்திரத்தில வாயு ஸ்திரப்பட்ட பின், மத்தளம், சங்கு, கண்டாமணி காகளம் என்பவற்றால் உண்டாகும் சத்தத்தைப் போன்ற நாதமும், அந்தத்தில் பிராணன் பிரமரந்திரத்தில் மிகவும் ஸ்திரமான பின் கிண்கிணி வேணு, வீணை தந்திரி, வண்டு என்பவைகளின் சத்தங்களைப் போன்ற நாதங்களும். இன்னும் நானாவிதமான நாதங்களும் தேகத்தின் மத்தியில் உளவாகக் கேட்கப்படும். மேகம், பேரி முதலியவற்றாலுண்டாகிய பெருஞ் சத்தங்கள் கேட்கப்படினும், அவற்றுள் சூட்சும தமும் சூட்சுமமாகிய நாதத்தை யோசிக்க வேண்டும் சூட்சுமமாகிய நாதம் நெடுநேரமிருப்பதால், சித்தம் நெடுநேரம் ஸ்திரமுடையதாய் நிலைக்கும்.

கனநாதத்தை விட்டுச் சூட்சுமத்திலும், அல்லது சூட்சுமத்தை விட்டுக் கனநாதத்திலுமாக ஆரம்பிப்பதாயிருக்கினும் கனசூட்சுமமென்னும் இரண்டிலொரு நாதத்தைக் கொள்ளுதல் தள்ளுதல் கூடாது. ஏனெனில் அப்படிக் கொள்ளும் ராஜச குண இயல்பதனால் அவ்வித ராஜச குணத்தை வரவொட்டாமல் சுத்த சாத்துவிக குணச் செய்கையான சூட்சும நாதத்தில் மனத்தைச் செலுத்த வேண்டும்!

அங்ஙனமாயின், நாதங்களில் இரமிக்கும் மனமே, சமாதியை யடையும் என்பது கருத்து அதாவது மலர்ந்த புஷ்பரசத்தைக் குடிக்கும்

வண்டு கந்தத்தை விரும்பாதது போல, சூட்சும நாதத்தில் சித்தம் திளைக்க வேண்டும். சப்தாதி விஷயமாகிய உத்தியானத்தில் சஞ்சரிக்கும் மனமென்னும் மதயானையை அடக்குவதில் இந்த அனாகதத் த்வனியானது கூரிய அங்குசம் போன்ற வலியுடையதென்பது சொல்லப்பட்டிருக்கின்றது.

வாசியையடக்கி அடையும் பலன்: இந்த யோக அப்பியாசிகள், சூரிய சந்திர கலைகளில் பிராணவாயு செல்லுங்கால், பிருதிவி அப்பு, தேயு, வாயு, என்னும் நான்கு தத்துவங்கள் வந்து விலகும். அப்போது அப்பிராண வாயு ஆகாய தத்துவத்தில் அடையும் அச்சமயத்தில் சுவாசம் குறைந்து வரும் அக்காலத்துச் சுவாசபந்தனம் செய்யக் கூடும்.

அப்போது ஓர் அங்குலம் குறைந்தால், இவ்வுலகத்திச்சையினின்று சுவாதீனப்படுவான் இரண்டங்குலம் குறைந்தால் மனம் ஆனந்திக்கப்பட்டு ஞானச் செல்வமுண்டாகும் மூன்றங்குலம் குறைந்தால், விவேகவான. நாலங்குலம் குறைந்தால், தூர தேசத்தில் நடக்கும் நடவடிக்கைகளைச் சொல்லுவான் ஆறங்குலம் குறைந்தால் ஆகாசத்திலுள்ள சகலமும் கண்டுணர்வான் ஏழங்குலம் குறைந்தால் சரீரம் காய சித்தி பெறுவன். எட்டங்குலம் குறைந்தால், அணிமாதி சித்திகளை அடைவான் ஒன்பதங்குலம் குறைந்தால், நவகண்டங்களில் சஞ்சரிப்பான். பத்தங்குலம் குறைந்தால், ஒரு தேகத்தைவிட்டு மற்றொரு தேகத்தில் பிரவேசிப்பான. பதினொரு அங்குலம் குறைந்தால் தனது ஆன்மாவைக் கண்டு வசனிப்பான பன்னிரண்டங்குலம் அடங்கும் சுவாசமானது உதித்த இடத்திலேயே சுழன்று கொண்டிருக்கிறபடியால். அந்தப் பரமயோகி எந்நாளும் [illegible] [illegible] நீங்கி அசைவற்றிருப்பான். சமாதியிலுட்கார்ந்த யோகிகள் இடகலையைப் பிங்கலையிலும் பிங்கலையை இடைகலையிலும் மாற்றக் கற்றுக் கொண்ட பின், பகல் முழுவதும் இடைகலையிலும் இரவில் அதை அடைத்து விட்டுப் பிங்கலையிலும் நடத்தப்படுவான்.

இதற்காகப் பழம்பருத்தியிற் கொஞ்சம் சுத்தம் பண்ணி வைத்துக் கொண்டு இடைகலை நடக்க வேண்டியிருந்தால் வலநாசியிலும், பிங்கலை நடத்த வேண்டியிருந்தால் இட நாசியிலும் அடைத்து விட வேண்டும் இப்படிச் சரிவர நடந்தால், மனிதர்கள் நூற்றிருபது வயது ஜீவித்திருக்கலாம்.

மற்றச் சங்கதிகளைச் சாதிக்கும் பக்ஷத்தில் யோகிகளுக்கு வயதே இல்லை.

சாத்திர விதிகள் எப்படியிருந்தாலும், இந்த விதிகள் யாவும் கிருகஸ்தர்களுக்காகவே ஏற்பட்டிருக்கின்றன.

இதை அப்பியாசிகள் எப்போதும் இவ்விதிப் பிரகாரம் நடத்துவார்கள் அப்போது தேக சௌக்கியமும் நீண்ட ஆயுளும், மன ஒடுக்கமும், சித்த சாந்தியும் உடையவர்களாய் இருப்பார்கள்.

மனோலய நிலை: பிராணவாயு சுழுமுனையாகிய மத்திய நாடியிற் செல்லுங்கால் [illegible] குணம் தேசகால [illegible]

நாத பிரமத்தில் பிரவேசிக்கின்றது. அப்போது சித்த நிரோதமுள்ள யோகவித்தானவன், பிராரத்தத்தோடு சகல கருமங்களையும் நிர்மூலமாக்குகிறான். எதுவரையிலும் பிராணனும் இந்திரியங்களும் ஜீவித்திருக்கின்றனவோ, அதுவரையில் மனத்தில் ஞானம் எப்படி உண்டாகும்? பிராணன் மனம் என்னும் இவ்விரண்டையும் எவன் லயமாக்குகிறானோ, அவன் மோக்ஷத்தை அடைகிறான்.

பிராண மனோலயங்களில்லாதவன், எவ்விதத்திலும் மோக்ஷமடைவான். மூலஸ்தானத்தில் இருந்துகொண்டு சுழுமுனையென்னும் மத்திய நாடியை நன்குரூப்போதிக்கும் தன்மையைக் குரு முகமாய் அறிந்து, பிராணவாயுவை மத்தியிற் செலுத்துவதாகிய பிரமரந்திரத்தில் நிரோதித்தல் வேண்டும். இப்படி அப்பியசித்தால், பிராணனது அசைவிற்கு க்ஷயம் வரும். அப்போது மனம் மிகவும் சாந்தியடைகின்றது. அக்காலம் நிர்வாணம் மிஞ்சுகின்றது.

சூரியனும் சந்திரனும் இராப்பகல் வடிவமாகிய காலத்தைப் புசிப்பவர்களாயிருக்கிறார்கள். இது ரகசியமாய்ச் சொல்லப்பட்டது.

இரண்டரைக் கடிகை சூரியனோடுங்கால் பகலென்றும் சந்திரனோடுங்கால் இரவென்றும் சொல்லப்படுகின்றன. எப்போது சுழுமுனை மார்க்கத்தால் வாயு, பிரமரந்திரத்தில் ஒடுங்குகின்றதோ, அப்போது இராப்பகல் வடிவமான காலமில்லாமையால், அச்சுழுமுனைக் காலத்தைப் புசிப்பதாய் இருக்கின்றது.

எந்த யோகியால் பிராண வாயு கட்டப்படுகின்றதோ, அந்த யோகியால் மனமும் கட்டப்படுகின்றது. எவனால் மனம் கட்டப்படுகின்றதோ, அவனால் பிராணனும் கட்டப்படும்.

மனம் பிராணன் என்னும் இரண்டில் ஒன்றைக் கட்டினால் மற்றொன்றும் கட்டப்படும். ஆதலால் மனம் ஒடுங்காதவரையில் வாசனை நசியாது. வாசனை நசியாத வரையில் சித்தம் நசியாது. சித்தம் நசியாத வரையில் தத்துவ ஞானம் உண்டாகாது.

இவற்றுள் [மனம் பிராணனென்னும் இரண்டினுள்] ஒன்று நசித்தால், மற்றொன்றும் நாசமாம். ஒன்றின் பிரவிர்த்தியால் மற்றொன்றும் பிரவிர்த்திக்கின்றது. இவ்விரண்டும் லயமானால், மோட்ச சித்தி உண்டாகும்.

மனம் ஸ்திரப்பட்டால் பிராணன் ஸ்திரமாகும். சுரோத்திரம் முதலிய இந்திரியங்களுக்கு மனம் நாதனாகிறது. மனத்திற்குப் பிராணன் நாதனாகிறது. பிராணனுக்கு மனோலயம் நாதனாகிறது. அம்மனோலயம் நாதத்தை ஆசரித்திருக்கின்றது.

அதாவது, மனம் நாதத்தில் ஒடுங்குகின்றது. 'சுவாச நிசுவாசங்கள் நஷ்டமாகிறது சத்தாதி விஷயக் கிரகணம் நஷ்டமாகிறதும் சேட்டைகள் நீங்குவதும், [illegible]

லம் எதுவரையில் ஆகவில்லையோ, அது வரையில் இந்திரிய விஷயங்கள் ஜயமாகா. இந்திரிய விஷயங்கள் ஜயமாகா வரையில் நானென்பது எப்படி நீங்கும்? நானென்பது நீங்காத வரையில் யானென்னும் அகந்தை எப்படி நீங்கும்? யானென்னும் அகந்தை நீங்காத வரையில் மனச் சுத்தம் எப்படி ஆகும்? மனம் சுத்தமாகாத வரையில் அபரோக்ஷ ஞானம் எப்படி உதயமாகும்? அபரோக்ஷ ஞானம் உதயமாகாத வரையில் பிரம சைதன்னியம் சமாதியின்கண் எப்படிப் புலப்படும்? பிரம சைதன்னியம் சமாதியின்கண் புலப்படாத வரையில் திடஞானம் எப்படி உதயமாகும்? திடஞானம் பெற்ற மகான்களுக்குத் துவைதமேது? பேதமேது? மாய்கையேது? பந்தமேது? ஜன்மமேது? அப்போது அந்த யோகி ஜன்மரகிதனாகின்றான்.

ஆகையால் இந்த யோகத்தை அனுஷ்டிக்கும் பக்குவமுடைய முமுக்ஷுக்கள் முக்கியமாய்க் கவனிக்க வேண்டியது யாதெனில், வாசி யோகத்தையன்றி மற்ற ஹடயோகம், கெண்ட யோகம் அம்பிகா யோகம் முதலிய யோகங்களால் சாக்ஷாத்காரத்தை அடைய இயலாதென்பதை உணர வேண்டும். அஃதெப்படியெனில், ஒருவன் கைகளினால் விசாலமான விண்ணை மூடுவது போலாகும். இந்த வாசி யோகமெனில் அப்படியன்று. கண் மூட விண் மறையுமென்பதாம். ஆகையினால் இந்த யோகத்தை அனுஷ்டித்தவர்கள், இந்த நூலை வாசித்தவர்கள் வாசிக்கக் கேட்டவர்கள் மனம் இவ்வாசியை நாடுவதால், சித்தம் நிலைத்து ஞானம் உதயமாய், அணிமாதி சகல ஐஸ்வரியங்களும் அடைந்து ஜீவன் முக்தர்களாய், நிரதிசயானந்தத்தில் சதா காலமும் நிலைத்து வாழ்வார்கள் என்பது குருவாக்கியம்.

கலி விருத்தம்

வாழ்க காரண தேசிகர் வானருள்!
வாழ்க அன்னவர் மாணவர் யாவரும்!
வாழ்க இந்நூல் படிப்பவர் கேட்பவர்!
வாழ்க இந்தச் சிவயோக சாரமே!



## நூல் இருபத்தொன்பது

# இராமலிங்க சுவாமிகள்

# திருவருட்பாத் திரட்டு

## (சிவநாமாவளித் திரட்டு)

### 1. சிவநாமாவளி

திருச்சிற்றம்பலம்

இந்துஸ்தான் பியாக்] [ஆதி தாளம்

சிவசிவ கஜமுக கணநாதா! சிவகுண வந்தித குணநீதா!
சிவசிவ சிவசிவ தத்துவ போதா!
சிவகுரு பரசிவ சண்முக நாதா!
சிவசிவ சிவசிவ சின்மய தேஜா! சிவசிவ சுந்தரகுஞ் சித நடராஜா
அம்பலத்தரசே அருமருந்தே!- ஆனந்தத்தேனே அருள்விருந்தே!
பொதுநடத் தரசே! புண்ணியனே-புலவரெலாம்புகழ் கண்ணியனே!
மலைதரு மகளே! மடமயிலே!- மதிமுக அமுதே! இளங்குயிலே!
ஆனந்தக் கொடியே! இளம்பிடியே!- அற்புதத்தேனே! மலைமானே!
சிவசிவ சிவசிவ சின்மய தேஜா!- சிவசுந் தரகுஞ் சிதநட ராஜா!
நடன விவேக பரம்பரவேதா!-நடன சபேச சிதம்பர நாதா!
அரிபிர மாதியர் தேடிய நாதா!- அரகர சிவசிவ ஆடிய பாதா!
அந்தண அங்கண அம்பர போகா!-அம்பல நம்பர அம்பிகை பாகா!
அம்பர விம்ப சிதம்பர நாதா!-அஞ்சித ரஞ்சித குஞ்சித பாதா!
தந்திர மந்திர யந்திர பாதா!-சங்கர சங்கர சங்கர நாதா!

கனக சிதம்பர சங்கர புரஹர! - அனக பரம்பர சங்கர ஹரஹர
சகல கலாண்ட சராசர காரண! - சகுண சிவாண்ட பராபர பூரண!
இக்கரை கடந்திடில் அக்கரையே - இருப்பது சிதம்பர சர்க்கரையே.
என்னுயி ருடம்பொடு சித்தமதே - இனிப்பது நடராஜ புத்தமுதே
ஐயா திருச்சபை ஆடகமே :- ஆடுதலானந்த நாடகமே.
உத்தர ஞான சிதம்பரமே சித்திசெல்லாந் தருமம்பரமே.
அம்பலவாசிவ மாதேவா! - வம்பனை வாவிங்கு வாவாவா!
நடராசனெல்லார்க்கும் நல்லவனே:- நல்லவெல்லாஞ் செய வல்லவனே
ஆனந்த நாடகங் கண்டோமே - பரமானந்த மோனங் கொண்டோமே'
சகலவுலகை யிட்டவ னாதா! உகள சததள மங்கள பாதா!

சந்தத முஞ்சிவ சங்கர பசனம் - சங்கீதமென்பது சற்சன வசனம்
சங்கர சிவசிவ மாதேவா! - எங்களை யாட்கொள வாவாவா!
அரகர சிவசிவ மாதேவா! - அருளமுதந்தர வாவா!
நடனசிகாமணி நவமணியே - திடன் கமாமணி சிவமணியே,
நடமிடு மம்பல நண்மணியே - புடமிடு செம்பல பொன்மணியே.
உவட்டாது தித்திக்கும் உள்ளமுதே! - தெவிட்டாது தித்திக்குந் தெள்ளமுதே.
நடராச வள்ளலை நாடுதலே: நற்றொழி லாம் விளையாடுதலே.
அருட்பொது நடமிடுந்தாண்டவனே! அருட்பெருஞ் சோதியென் ஆண்டவனே.
நடராச மாணிக்க மொன்றதுவே; கண்ணுதலாணிப் பொன்மன்றதுவே
நடராச பலமது நம்பலமே; நடமாடுவதுந்திரு வம்பலமே,
நடராசப் பாட்டே நறும் பாட்டு; ஞாலத்தார் பாட்டெல்லாம் வெறும்பாட்டு
சிதம்பரப் பாட்டே திருப்பாட்டு: சீவர்கள் பாட்டெல்லாந் தெருப்பாட்டு
அம்பலப் பாட்டே அருட்பாட்டு; அல்லாத பாட்டெல்லா மருட்பாட்டு.
அம்பல வாணனை நாடினனே; அவனடி யாரொடுங் கூடினனே.
தம்பத மாம்புகழ் பாடினனே; நர்த்தன வென்றுகூத் தாடினனே
நான் சொன்ன பாடலுங் கேட்டாரே; ஞான சிதம்பர நாட்டாரே.
இனித்துயர் படமாட்டேன் விட்டேனே: என்குருமேலாணை யிட்டேனே
இனிப்பாடு படமாட்டேன் விட்டேனே; என்னப்பன் மேலணை யிட்டேனே.

வசீகர சேகர தினகர சசிகர புர! மகர வாரவர புரஹர ஹரஹர!
பரமானந் திரிசக வாசக காரணா! படனந் திரதிச மாகம சரணா!
அனந்த கோடிகுண கரசர சோவிதா! அகண்ட வேதசிர கரதர பவிதா!
பரிபூரண ஞான சிதம்பர பதிகாரண நாத பரம்பர!
சிவஞானப தாடக நாடக! சிவபோதப ரோசக கூடக!
சகல லோகபர காரக வாரக! சபள போகசர பூரக தாரக!
சத்வ போதக தாரண தன்மய! சத்ய வேத பூரண சின்மய!
வரகே சாந்த மகோதய காரிய பரபர சாந்த சுகோதய சூரிய!
டணித நிரக சோபித பாதா! லணித ரூ.ஸ்தாபித நாத!
அனுர்த போபகரு ணாம்பக நாதா! அமிர்த ரூபதரு ணாப்புச பாதா
அம்போருகபத அரஹர சங்கர! சம்போ சிவசிவ சிவசிவ சங்கர!
சிதம்பரகாசா பரம்பிர காசா! சிதம்பர ரேசா சுயம்பிர காசா!
அருட்பிர காசம் பரப்பிர காசம்! அகப்பிர காசம் சிவப்பிர காசம்
நடப்பிர காசம் தவப்பிர காசம்; நவப்பிர காசம் சிவப்பிர காசம்,
நாத பரம்பரனே! பர நாத சிதம்பரனே! நாத சிதம்பரனே!
தச நாத சுதந்தரனே!
ஞான நடத்தவனே! பர ஞான யிடத்தவனே!
ஞான வரத்தவனே! சிவ ஞான புரத்தவனே!
ஞான சபாபதியே! மறைநாடு சாதகதியே!
தீன தடாவிதியே! பரதேவியு மாபதியே!
புத்தர் திரும்போதா! வித்தர் தருந்தாதா!
சித்திதரும்பாதா! சித்தர் திரும்பாதா!

திருச்சிற்றம்பலம்

## 2. அருள் விளக்க மாலை

### எண்சீர் விருத்தம்

கல்லார்க்குங் கற்றவர்க்குங் களிப்பருளுங் களிப்பே!
காணார்க்குங் கண்டவர்க்குங் கண்ணளிக்குங் கண்ணே!
வல்லார்க்கும் மாட்டார்க்கும் வரமளிக்கும் வரமே!
மதியார்க்கும் மதிப்பவர்க்கும் மதிகொடுக்கும் மதியே!

நல்லார்க்கும் பொல்லார்க்கும் நடுநின்ற நடுவே!
    நரர்களுக்கும் சுரர்களுக்கும் நலங்கொடுக்கும் நலமே!
எல்லார்க்கும் பொதுவில்நட மிடுகின்ற சிவமே!
    என்னரசே! யான்புகலு மிசையுமணிந் தருளே!

2

தனிச்சிறியேன் சிறிதிங்கே வருந்தியபோ ததனைத்
    தன் வருத்த மெனக்கொண்டு தரிபாதக் கணத்தே
பனிப்புறுமவ் வருத்தமெலாந் தவிர்த்தருளி மகனே!
    பயமுனக்கேன்? என்றென்னைப் பரிந்தணைத்த குருவே!
இனிப்புறுநன் மொழிபுகன்றென் முடிமிசைநின் மலர்த்தாள்
    இணையமர்த்தி யெனையாண்ட வென்னுயிர் நற் றுணையே!
கனித்தநறுங் கனியேயென் கண்ணேசிற் சபையில்
    கலந்தநடத் தரசேயென் கருத்து மணிந் தருளே!

3

இருளிரவி லொருமூலைத் திண்ணையில்நான் பசித்தே
    இளைப்புடனே படுத்திருக்க வெனைத்தேடி வந்தே
பொருளுணவு கொடுத்துண்ணச் செய்வித்தே பசியைப்
    போக்கியருள் புரிந்தவென்றன் புண்ணியநற் றுணையே!
மருளிரவு நீக்கியெல்லா வாழ்வுமெனக் களித்து
    மணிமேடை நடுவிருக்க வைத்தவொரு மணியே!
அருளுணவும் அளித்தென்னை ஆட்கொண்ட சிவமே!
    அம்பலத்தென் னரசேயென் அலங்கலணிந் தருளே!

4

நான் பசித்த போதெல்லாம் தான்பசித்த தாகி
    நல்லுணவு கொடுத்தென்னைச் செல்வமுற வளர்த்தே
ஊன்பசித்த இளைப்பொன்றுந் தோற்றாத வகையே
    ஒள்ளியதெல் லாமெனக்கிங் குவந்தளித்த ஒளியே!
வான்பதிக்கும் நெடுமாற்கும் நான்முகற்கும் அரிதாம்
    வாழ்வெனக்கே யாகியுற வரமளித்த பதியே!
தேன்பரித்த மலர் மணமே! திருப்பொதுவில் ஞானத்
    திருநடஞ்செய் யரசேயென் சிறுமொழியேற் றருளே!

5

திசையறிய மாட்டாதே திகைத்தசிறி யேனைத்
    தெளிவித்து மணிமாடத் திருத்தவிசி லேற்றி
நசையறியா நற்றவரு மற்றவருஞ் சூழ்ந்து
    நயப்பவருட் சிவநிலையை நாட்ட வைத்த பதியே!
வசையறியாப் பெருவாழ்வே! மயலறியா அறிவே!
    வானடுவே யின்பவடி வாயிருந்த பொருளே!
பசையறியா மனத்தவர்க்கும் பசையறிவித் தருளப்
    பரிந்தநடத் தரசேயென் பாட்டுமணிந் தருளே!

6

வன்மையெலாந் திரண்டெனக் குரைத்தோடித் திரியும்
    நாய்க்குலத்திற் கடையான நாயடியேன் குற்றம்
புன்மையெலாம் பொறுமையொடு பொறுத்தருளிப் புலையேன்
    பொய்யுரைமெய் யுரையாகப் [illegible]

தன்மையெலா முடையபொருள் தனிச்சோதி முடியுந்
தரித்தருளி ஐந்தொழில்செய் சதுரந்த பதியே!
இன்மையெல்லா நீங்கடியா ரின்புறப் பொதுவில்
இலங்குநடத் தரசேஎன் இசையுமணிந் தருளே!

மதமென்றுஞ் சமயமென்றுஞ் சாத்திரங்க ளென்றும் 7
மன்னுகின்ற தேவரென்றும் மற்றவர்கள் வாழும்
பதமென்றும் பதமடைந்த பத்தரனு பவிக்கப்
பட்டவனு பவங்களென்றும் பற்பலவா விரித்த
விதமொன்றுந் தெரியாதே மயங்கியவென் றனக்கே
வெட்டவெளி யாயறிவித் திட்டவரு ளிறையே!
சதமொன்றுஞ் சுத்தசிவ சன்மார்க்கப் பொதுவில்
தனிநடஞ்செய் யரசேஎன் சாற்றுமணிந் தருளே!

அருளுடையா ரெல்லாருஞ் சமரசசன் மார்க்கம் 8
அடைந்தவரே யாதலினா லவருடனே கூடித்
தெருளுடைய அருள்நெறியிற் களித்துவிளை யாடிச்
செழித்திடுக வாழ்கவெனச் செப்பியசற் குருவே!
பொருளுடைய பெருங்கருணைப் பூரணமெய்ச் சிவமே!
போதாந்த முதலாறும் நிறைந்தொளிரு மொளியே!
மருளுடையார் தமக்குமருள் நீக்கவணிப் பொதுவில்
வயங்குநடத் தரசேயென் மாலையுமேற் றருளே!

காலையிலே யென்றனக்கே கிடைத்தபெரும் பொருளே! 9
களிப்பேயென் கருத்தகத்தே கனிந்தநறுங் கனியே!
மேலையிலே இளமையிலே ஓரையிலே தவத்தால்
மேவுகின்ற பெரும்பயனும் விளைவையெல்லாந் தருமச்
சாலையிலே யொருபகலிற் றந்த தனிப் பதியே!
சமரசசன் மார்க்கசங்கத் தலையமர்ந்த நிதியே!
மாலையிலே சிறந்தமொழி மாலையணிந் தாடும்
மாநடத்தென் னரசேயென் மாலையணிந் தருளே!

தலைகாலிங் கறியாதே திரிந்தசிறி யேனைத் 10
தான்வலிந்தாட் கொண்டருளித் தடைமுழுதுந் தவிர்த்தே
மலைவறுசெய் கதியளித்தே அருளமுதம் அருத்தி
வல்லபசத் திகளெல்லா மருவிடப் புரிந்து
நிலையுறவே தானுமிடி யேனுமொரு வடிவாய்
நிறைவிலுறை வித்துயர்ந்த நிலையதன்மே லமர்த்தி
அலர் தலைப்போ ரருட்சோதி அரசுகொடுத் தருளி
ஆடுகின்ற அரசேயென் அலங்கலணிந் தருளே!

## ௩. முறையீடு

மருந்தறியேன் மணியறியேன் மந்திரமொன் றறியேன்
மதியறியேன் விதியறியேன் வாழ்க்கைநிலை யறியேன்
திருந்தறியேன் திருவருளின் செயலறியேன் அறந்தான்
செய்தறியேன் மனமடங்குந் திறத்தனிலோ ரிடத்தே

இருந்தறியேன் அறிந்தோரை எந்திடவும் அறியேன்
எந்தைபிரான் மணிமன்றம் எய்தவழி யேதோ?
இருந்திசை சொலவறியேன் எங்ஙனம் நான் புகுவேன்?
யார்க்குரைப்பேன் என்ன செய்வேன் ஏதுமறிந் திலனே!

அலங்காரத் தொடுங்கிழங்கை அகழ்ந்தெறிய அறியேன்
அறிவறிந்த அந்தணர்பாற் செறியுநெறி அறியேன்
நலங்காண முறுவத்தேபோல் நலம்புரிந்து மதியேன்
நச்சுமரக் கனிபோலே இச்சைகனிந் துழன்றேன்;
மலங்காணும் புலவரொடு கலந்து தொழ நடிக்கும்
மணிமன்றங் கண்டடையும் வழியுமறி வேனோ?
இலங்காணத் திரிகின்றே னெங்ஙன நான் புகுவேன்?
யார்க்குரைப்பேன் என்ன செய்வேன் ஏதுமறிந் திலனே!

கற்குமுறை கற்றறியேன்; கற்பனைகற் றறிந்த 3
கருத்தர் திருக்கூட்டத்திற் களித்திருக்க அறியேன்;
நிற்குநிலை நின்றடியே னின்றுநிலை நடித்தேன்;
நெடுங்காமப் பெருங்கடலை நீந்துவகை அறியேன்;
சிற்குணமாம் மணிமன்றிற் றிருநடனம் புரியுந்
திருவடியென் சென்னிமிசைச் சேர்க்கவறி வேனோ?
இற்குணஞ்செய் துழல்கின்றே னெங்ஙனநான் புகுவேன்
யார்க்குரைப்ப னென்செய்வே னேதுமறிந் திலனே!

தேகமுறு பூதநிலைத் திறஞ்சிறிது மறியேன் 4
சித்தாந்த நிலையறியேன் சித்தநிலை யறியேன்:
யோகமுறு நிலைசிறிது முணர்ந்தறியேன் சிறியேன்
உலகநடை யனைத்தும் நீத்த உழைப்பரிற் கடையேன்;
ஆகமுறு திருநீற்றி னொளிவிளங்க அசைந்தே
அம்பலத்தி லாடுகின்ற அடியையறி வேனோ?
ஏகவனு பவமறியே னெங்ஙனநான் புகுவேன்?
யார்க்குரைப்பே னென்செய்வே னேதுமறிந் திலனே!

வரையபர மார்க்கமொடு பரமார்க்கம் அறியேன் 5
மரணபயந் தவிர்த்திடுஞ்சன் மார்க்கபதை அறியேன்;
திரையறுதன் கடலறியேன் அக்கடலைக் கடந்தே
தெள்ளமுத முண்ணவறியேன் சிவமடுக்க அறியேன்;
உரையுணர்வு கடந்ததிரு மணிமன்றந் தனிலே
ஒருமைநடம் புரிகின்றார் பெருமையறி வேனோ?
இரையறுபொய் யுலகினிடை யெங்ஙனநான் புகுவேன்?
யார்க்குரைப்பே னென்செய்வே னேதுமறிந் திலனே!

## 4. ஆனந்த மேலீடு

திருச்சிற்றம்பலம்

இராகம் சஹானா] குறள் வெண்செந்துறை ஆதி தாளம்]

1
கையறவி லாதுநடுக் கண்புருவப் பூட்டு;
கண்டுகளி கொண்டுதிறந் தண்டுநடு வீட்டு;

ஐவர்மிக வும்பும்வகை அப்பர்வினை யாட்டு.
ஆடுவதென் றேமறைகள் பாடுவது பாட்டு.

சிற்சபையும் பொற்சபையுஞ் சொந்தமென தாச்சு! 2
தேவர்களு மூவர்களும் பேசுவதென் பேச்சு;
இச்சமைய வாழ்விலெனக் கென்னையினி யேச்சு?
என்பிறவித் துன்பமெலா மின்றோடே போச்சு!

ஐயரருட் சோதியரசாட்சியென தாச்சு; 3
ஆரணமும் ஆகமமும் பேசுவதென பேச்சு;
இவ்வுலக வாழ்விலெனக் கென்னையினி யேச்சு?
என்பிறவித் துன்பமெலா மின்றோடே போச்சு!

ஈசனரு ளாற்கடலில் ஏற்ற தெருவோடம் 4
ஏறியக்கரை பேறினனிங் கிருந்தசொருமாடம்;
தேசுறும் அம்பாடுத் தெய்வமணிப் பீடம்;
தீபவொளி கண்டவுடன் சேர்ந்ததுசந் தோடம்!

மேருமலை உச்சியினில் விளங்குகம்ப நீட்சி 5
மேவுமதன் மேலுலகில் வீறமர சாட்சி;
சேருமிதிற் கண்டபல காட்சிகள்கள் காட்சி
செப்பலரி தாமிதற்கென் அப்பனருள் சாட்சி

தாரிடமலை மேலுலகோ தார் சோதிவள நாடு! 6
தோன்றுமதி லுயர் நடஞ் செய்யுமணி வீடு;
தெரியுமது கண்டவர்கள் காணிதுயி லோடு
செத்தவரை மூவரென்று கைத்தாகும் போடு.

சொல்லால அப்பரிய சோதிவரை மீது 7
தூயதரி யப்பதியில் நேயமறை யோது;
எல்லாஞ்செய் வல்லசித்தர் தன்மையுறும் போது
இறந்தாரெழுவரென்று புறத்தாரை யூது.

சிற்பொதுவும் பொற்பொதுவும் நான்றிய லாச்சு;
சித்தர்களும் முத்தர்களும் பேசுவதென் பேச்சு;
இப்பெரிய அவ்வுலகி லென்னையினி ஏச்சு?
என்பிறவித் துன்பமெலா மின்றோடே போச்சு!

வலது சொன்ன பேர்களுக்கு வந்ததுவாய்த் தாழ்வு; 9
மற்றவரைச் சேர்ந்தவர்க்கும் வந்ததலைத் தாழ்வு;
வலதுபுச மாடநம்மால் வந்தருள் வாழ்வு;
மற்றுநமைச் சூழ்ந்தவர்க்கும் வந்ததால் வாழ்வு.

அம்பலத்தி லெங்களையர் ஆடியநல் லாட்டம் 10
அன்பொடுது இத்தவருக் கானதொல் லாட்டம்

வம்புசொன்ன பேர்களுக்கு வந்ததுமல் லாட்டம்;
வந்ததலை யாட்டமன்றி வந்ததுபல் லாட்டம்.

சாத்திரஞ்சொல் கின்றவர்தம் நாக்குமுடை நாக்கு; 11
சற்குருசொல் கொள்ளுவது நாறியபிண் ணாக்கு
சீர்த்திபெறும் அம்பலவர் சீர்புகன்ற வாக்கு
செல்வாக்கு நல்வாக்குந் தேவர்திரு வாக்கு.

# வேட்கைக் கொத்து

## தலைமகள் பாங்கியொடு கூறல்:

விண்படைத்த புகழ்த்தில்லை அம்பலத்தா னெவர்க்கும் 1
மேலான அன்பாளர் மேவுநட ராசன்
பண்படைத்த எனையறியா இளம்பருவந் தனிலே
பரிந்துவந்து மாலையிட்டான் பார்த்தறியான் மீட்டும்;
பெண்படைத்த பெண்களெல்லாம் அவமதித்தே வலது
பேசுகின்றார் கூசுகின்றேன் பிச்சியென லானேன்:
கண்படைத்தங் குழிதல்விழக் கணக்குமுண்டோ? அவன்றன்
கணக்கறிந்தும் விடுவேனோ கண்டாயென் றோழி!

சித்தமணி யம்பலத்தான் என்பிராண நாதன் 2
சிவபெருமான் எம்பெருமான் செல்வநட ராசன்
வாய்த்தவென்னை யறியாத இளம்பருவந் தனிலே
மகிழ்ந்துவந்து மாலையிட்டான் மறித்துமுகம் பாரான்;
ஆய்த்தகலை கற்றுணர்ந்த அணங்கனையார் தமக்குள்
ஆர்செய்த பிழைதனையோ! ஆறுவு மிதுவே;
காய்த்தமரம் விளையாத கணக்குமுண் டோ? அவன்றன்
கணக்கறிந்தும் விடுவேனோ கண்டாயென் றோழி!

என்னுயிரிற் கலந்துகலந் தினிக்கின்ற பெருமான் 3
என்னிறைவன் பொதுவினடம் இயற்றுநட ராசன்
தன்னையறி யாப்பருவத் தென்னைமணம் புரிந்தான்
தன்னையறிந் தபருவத் தெனையறிய விரும்பான்;
பின்னையன்றி முன்னுமொரு பிழைபுரிந்தே னிலையே;
பெண்பரிசா யங்கணவன் பெருந்தகைக்கும் அழகோ?
கன்னலென்றால் கைக்கின்ற கணக்குமுண் டோ அவன்றன்
கணக்கறிந்தும் விடுவேனோ கண்டாயென் றோழி!

தெருளமுதத் தனியோகர் சிந்தையிலும் ஞானச் 4
செல்வரறி விடத்தும்நடஞ் செய்யுநட ராசன்
அருளமுதம் அளிப்பெனென் றென்றுமணம் புணர்ந்தான்
[illegible]

# 7. பிரியேனென்றல்

1
அப்பாநான் பற்பலகால் அறைவதென்னே அடியேன்
அச்சமெலாந் துன்பமெலாம் அறுத்து விரைந்தே
இப்பாரில் இத்தருணம் என்னையடைந் தருளி
எண்ணமெலா முடித்தென்னை ஏற்றுக்கொளாய் எனிலோ
தப்பாமல் உயிர்விடுவேன் சத்தியஞ்சத் தியநின்
தாளிணைகள் அறிகவிது தயவுடையோய் எவர்க்குந்
துப்பாகித் துணையாகித் துலங்குமெய்த் துணையே!
சுத்தசிவா னந்தவருட் தனிநடத் தரசே!

2
படமுடியா தினித்துயரம் படமுடியா தரசே!
பட்டதெலாம் போதுமிந்தப் பயந்தீர்த்திப் பொழுதென்
உடலுயிரா தியவெல்லாம் நீயெடுத்துக் கொண்டுன்
உடலுயிரா தியவெல்லாம் உவந்தெனக்கே அளிப்பாய்!
வடலுறுசிற் றம்பலத்தே வாழ்வாங்கென் னுள்ளும்
மணியேஎன் குருமணியே! மாணிக்க மணியே!
நடனசிகா மணியேஎன் நாயகமணியே! ஞான
நன்மணியே! பொன்மணியே! நடராச மணியே!

3
உன்னைமறந் திடுவேனோ மறப்பறியேன் மறந்தால்
உயிர்விடுவேன் கணந்தரியேன் உன்னாணை யிது நீ
என்னைமறந் திடுவாயோ மறந்திடுவா யெனில்யான்
என்செய்வேன் எங்குறுவேன் எவர்க்குரைப்பேன் எந்தாய்!
அன்னையினுந் தயவுடையாய் நீமறந்தா யெனினும்
அகிலமெலாம் அளித்திடுநின் அருள்மறவா தென்றே.
இன்னுமிகக் களித்திங்கே இருக்கின்றேன் மறவேல்
இத்தருணம் அருட்சோதி எனக்குவிரைந் தருளே.

4
பெரியருட் பெருஞ்சோதிப் பெருங்கருணைப் பெருமான்
பெரும்புகழைப் பேசுவதே பெரும்பேறென் றுணர்ந்தே
துரியநிலைத் தவரெல்லாந் துதிக்கின்ற பேரமை
துதித்தல்பெரி தளவின்றே துதித்திடவன் றெழுந்த
அரியபெரும் பேராசைக் கடல்பெரிதே அதுவென்
அளவுகடந் திருக்கின்ற காதலினால் விரைந்தே
உரியவருள் அமுதளித்தே அணைந்து இனிப்பித் தருள்வாய்
உலகமெலாங் களித்தோங்க ஓங்குநடத் தரசே!

5
கவலையெலாந் தவிர்ந்துயிர்கள் களிபெறுதல் விழைவே
கைகுவித்துக் கண்களினீர் கனிந்துசுரந் திடவே
சவலைமனச் சலனமெலாந் தீர்ந்துசுக மயமாய்த்
தானேதா னாகியின்பத் தனிநடஞ்செய் துணைதான்
தவலருஞ்சீர்ச் சொன்மாலை யணிந்துவணங் கணிந்து
தானறிவா னருநடத் தருணமிது தானே
குவலயத்தா ரதிசயிக்க எழுந்தருளி வருவாய்
குருவேஎன் குற்றமெலாங் குணமாகக் கொண்டவனே!

## 8. வாதனைக்கிரங்கல்

படமாட்டேன் துயர்சிறிதும் படமாட்டேன் இனிநான் 1
பயப்படவு மாட்டேனும் பதத்துணையே பிடித்தேன்:
விடமாட்டேன் ஏமாந்து விடமாட்டேன் கண்டீர்
மெய்ம்மையிது நும்மாணை விளம்பினனும் மடியேன்:
கெடமாட்டேன் பிறர்மொழிகள் கேட்டிடவு மாட்டேன்;
கிளரொளியம் பலத்தாடல் வளரொளிநும் மல்லால்
நடமாட்டேன் என்னுளத்தே நான்சாக மாட்டேன்
நல்லதிரு வருளாலே நன்றுநான் றுனே!

சாகாத கல்வியிலே தலைகாட்டிக் கொடுத்தீர் 2
தடையறியாக் கால்காட்டித் தரம்பெறவும் அளித்தீர்:
மாகாத லுடையவனுன் மனங்கனிவித் தழியா
வாலமுதும் மெய்ஞ்ஞான மருந்தமுணப் புரிந்தீர்:
போகாத புனலாலே சுத்தவுடம் பினராம்
புண்ணியரும் நண்ணரிய பொதுநிலையுந் தந்தீர்:
நாகாதி பதிகளுநின் றேத்தவளர் கின்றீர்
நடராச ரேநுமக்கு நானெதுசெய் வேனே?

வேதாந்த நிலையுமதன் அந்தத்தே விளங்கும் 3
மெய்ந்நிலையுங் காட்டுவித்தீர்; விளங்கியசித் தாந்தப்
போதாந்த நிலையுமப்பாற் புகலரிதாம் பெரிய
பொருள்நிலையுந் தெரிவித்தீர் புண்ணியரே! நுமது
பாதாந்தம் அறிவித்தீர்; சுத்தவலி வுடனே
பகர்பிரண வாகாரப் பரிசுமெனக் களித்தீர்;
நாதாந்தத் தனிச்செங்கோல் நான்செலுத்தக் கொடுத்தீர்
நடராச ரேநுமக்கு நானென்செய் வேனே?

பாயிரமா மறைகளெலாம் பாடுகின்ற பாட்டுன் 4
பாட்டேயென் றறிந்துகொண்டேன் பரம்பொருளுன் பெருமை
ஆயிரமா யிரங்கோடி நாவுடையோ ரெனினும்
அணுத்துணையும் புகலரிதேல் அந்தோவச் சிறியேன்
வாயிரங்கா வகைபுலத் துணிந்தேனென் னுடைய
மனத்தாசை ஒருகடலோ? எழுகடலிற் பெரிதே
சேயிரங்கா முனமெடுத்தே அணைத்திடுந்தாய் அனையாய்!
திருச்சிற்றம் பலம்விளங்குஞ் சிவஞான குருவே!

5
அந்நாளில் அடிச்சிறியேன் அம்பலவா யிலிலே
அருளைநினைந் தொருபுறத்தே அயர்ந்தழுது நின்றேன்;
முன்னாளில் யான்புரிந்த பெருந்தவத்தா லெனக்கு
முகமலர்ந்து மொழிந்தவருள் மொழியை நினைந்தந்தச்

செந்நாளை எதிர்பார்த்தே பன்னாளுங் கழித்தேன்;
    சிந்தைமலர்ந் திருந்தேனச் செலவமிகு திருநாள்
இந்நாளே யாதலினால் எனக்கருள்வீ ரென்றேன்
    என்பதன் முன் அளித்தீரநும் அன்புலகிற் பெரிதே!

திருச்சிற்றம்பலம்

## 9. ஆனந்தக் களிப்பு

நாதநாமக்கிரியை] [ரூபக தாளம்

பல்லவி:

நல்ல மருந்திம் மருந்து—சுகம்
நல்கும் வயித்திய நாத மருந்து

சரணங்கள்:

அருள்வடி வான மருந்து-நம்முள்
    அற்புத மாக அமர்ந்த மருந்து
இருளற வோங்கு மருந்து-அன்பர்க்
    கின்புரு வாக இழிந்த மருந்து நல்ல

சஞ்சலந் தீர்க்கும் மருந்து-எங்குந்
    தானேதா னாகித் தழைக்கும் மருந்து
அஞ்சலென் றருளும் மருந்து—சச்சி
    தானந்த மாக அமர்ந்த மருந்து நல்ல

வித்தக மான மருந்து-சதுர்
    வேத முடிவில் விளங்கும் மருந்து
தத்துவா தீதமருந்து-என்னைத்
    தானாக்கிக் கொண்ட தயாள மருந்து நல்ல

பிறப்பை ஒழிக்கும் மருந்து-யார்க்கும்
    பேசப் படாத பெரிய மருந்து
இறப்பைத் தவிர்க்கும் மருந்து- என்னுள்
    என்றும் மதுரித்தி னிக்கும் மருந்து நல்ல

அம்பலத் தாடும் மருந்து-பர
    மானந்த வெள்ளத் தழுத்தும் மருந்து
எம்பல மாகும் மருந்து-வேளூர்
    என்னுந் தலத்தி லிருக்கும் மருந்து நல்ல

சேதப் படாத மருந்து-உண்டால்
தேன்போ லினிக்குந் தெவிட்டாத மருந்து
பேதப் படாத மருந்து-மலைப்
பெண்ணிடங் கொண்ட பெரிய மருந்து நல்ல

பால்வண்ண மாகும் மருந்து-அதிற்
பச்சை நிறமும் படர்ந்த மருந்து
நூல்வண்ணம் நாடும் மருந்து-உள்ளே
நோக்குகின் றோர்களை நோக்கும் மருந்து நல்ல

பார்க்கப் பசிபோம் மருந்து-தன்னைப்
பாராத வர்களைச் சேரா மருந்து
கூர்க்கத் தெரிந்த மருந்து-அனு
கூல மருந்தென்று கொண்ட மருந்து நல்ல

கோமளங் கூடும் மருந்து-நலம்
கொடுக்கத் துசங்கட்டிக் கொண்ட மருந்து
நாமள வாத மருந்து-நம்மை
நாமறி யும்படி நண்ணும் மருந்து நல்ல

மூவர்க் கரிய மருந்து-செல்வ
முத்துக் குமரனை ஈன்ற மருந்து
நாவிற் கினிய மருந்து-தையல்
நாயகி கண்டு தழுவும் மருந்து நல்ல

## 10. மெய்யருள் வியப்பு

செஞ்சுருட்டி] [ரூபக தாளம்

பல்லவி:

எனக்கு முனக்கு மிசைந்த பொருத்த மென்ன பொருத்தமோ!
இந்தப் பொருத்த முலகில் பிறருக் கெய்தும் பொருத்தமோ!

சரணம்

தனக்கு நிகரிங் கில்லா துயர்ந்த தம்ப மொன்றதே
தாவிப் போகப் போக நூலின் தரத்தில் நின்றதே!
கனக்கத் திகைப்பற் றங்கே நானுங் கலங்கி வருந்தவே
கலக்க நீக்கித் தூக்கி வைத்தாய் நிலைபொ ருந்தவே. என

இங்கோர் மலையி னடுவி லுயர்ந்த தம்பம் நணுகவே
ஏறிப் போகப் போக நூலின் இழைபோல் நுணுகவே
அங்கே திகைத்து நடுங்கும் போதென் நடுக்கம் நீக்கியே
அதன்மே லுயர்ந்த நிலையில் வைத்தாய் அடிமை யாக்கியே! என

இரவிற் பெரிய வெள்ளம் பரவி எங்குந் தயங்கவே
யானுஞ் சிலரும் படகி லேறியே மயங்கவே
விரவித் தனித்தங் கென்னை யொருகல் மேட்டி லேற்றியே
விண்ணி லுயர்ந்த மாடத் திருக்க விதித்தாய் போற்றியே! எ

மேலைப் பாற்சிவ கங்கை யெனுமோர் தீர்த்தந் தன்னையே
மேவிப் படியிற் றவறி நீரில் விழுந்த என்னையே
ஏலத் தகிலு முடம்பும் நனையா தெடுத்த தேயோன்றோ
எடுத்தென் கரத்திற் பொற்பூண் அணிந்த இறைவன் நீயன்றோ? எ

என்ன துடலு முயிரும் பொருளும் நின்ன அல்லவோ?
எந்தா யிதனைப் பெருக வெளநான் இன்று சொல்லவோ?
சின்ன வயதி லென்னை யாண்ட திறத்தை நினைக்குதே
சிந்தை நினைக்கக் கண்ணீர் பெருக்கி உடம்பை நனைக்குதே! எ

அப்பா நின்னை அன்றி எங்கும் அணைப்பா ரில்லையே!
அந்தோ நின்னை அன்றி எங்கும் அருள்வா ரில்லையே!
எப்பா லெவர்க்கும் நின்னை அன்றி இறைமை இல்லையே!
எனக்கும் நின்மே லன்றி யுலகி லிச்சை இல்லையே! எ

அரசே உன்னை அணைக்க எனக்குள் ஆசை பொங்குதே!
அணைப்போ மென்னு முண்மை யாலென் ஆவி தங்குதே!
விரைசேர் பாதம் பிடிக்க என்கை விரைந்து நீளுதே!
மேவிப் பிடித்துக் கொள்ளுந் தோறும் உவகை ஆளுதே! எ

தனியன் மேல்நீ வைத்த தயவு தாய்க்கும் இல்லையே!
தகுமைந் தொழிலும் வேண்டுந் தருதல் வல்லையே!
வினவு மெனக்கென் னுயிரைப் பார்க்க மிகவும் நல்லையே!
மிகவும் நான்செய் குற்றங் குறித்து விடுவாய் அல்லையே! எ

என்னை யாண்ட வண்ணம் எண்ணில் உள்ள முருகுதே!
என்னை விழுங்கி எங்கும் இன்ப வெள்ளம் பெருகுதே!
உன்ன வுன்ன மலமு முயிரு முடம்பு மினிக்குதே!
உன்னோ டென்னை வேறென் றெண்ணின் மிகவும் பனிக்குதே! எ

உன்பே ரருளை நினைக்குந் தோறும் உடம்பு பொடிக்குதே!
உண்டு பசிதீர்ந் தாற்போற் காதல் மிகவுந் தடிக்குதே!
அன்பே அமையு மென்ற பெரியார் வார்த்தை போயிற்றே!
அன்போர் அணுவும் இல்லா எனக்கிங் கருள லாயிற்றே! எ

## 11. திருவருள் விலாசப்பத்து

சிவசண்முக சிவஞான தேசிகன் திருவடி வாழ்க!

ஆறுமுகப் பெருங்கருணைக் கடலே! தெய்வ
பரஞ்சுடரே! மணிக்குன்றே! அரசே! எங்கள்

பேறுமுகப் பெருஞ்சுடர்க்குட் சுடரே! செவ்வேல்
பிடித்தருளும் பெருந்தகையே! பிரம ஞானம்
வீறுமுகம் பெருங்குணத்தோர் இதயத் தோங்கும்
விளக்கமே! ஆனந்த வெள்ளமே! முன்
தேறுமுகப் பெரியவருட் குருவா யென்னைச்
சிறுகாலை ஆட்கொண்ட தேவ தேவே!

கண்ணிமதி புனைந்தசடைக் கனியே! முக்கட்
கரும்பேயென் கண்ணேமெய்க் கருணை வாழ்வே!
புண்ணியநன் னிலையுடையோ ருளத்தில் வாய்க்கும்
புத்தமுதே! ஆனந்த போகமே! சீர்
எண்ணியமெய்த் தவர்க்கெல்லாம் எளிதி லீந்த
என்னரசே! ஆறுமுகத் திறையாம் வித்தே!
திண்ணியவென் மனமுருகக் குருவா யென்னைச்
சிறுகாலை ஆட்கொண்ட தேவ தேவே!

பன்னிருகண் மலர்மலர்ந்த கடலே! ஞானப்
பரஞ்சுடரே! ஆறுமுகம் படைத்த கோவே!
என்னிருகண் மணியேயென் தாயே! என்னை
ஈன்றருளே! என்னரசே! என்றன் வாழ்வே!
மின்னிருவர் புடைவிளங்க மயில்மீ தேறி
விரும்புமடி யார்காண மேவுந் தேவே!
சென்னியினின் அடிமலர்வைத் தென்னை முன்னே
சிறுகாலை ஆட்கொண்ட தேவ தேவே!

## 12. பாங்கியர்க்கு அறிவுறுத்தல்

ஆனந்த பைரவி] கண்ணிகள் [ஆதி தாளம்

அம்பலத்தில் ஆடுகின்றார் பாங்கிமாரே!—அவர்
ஆட்டங்கண்டு நாட்டங்கொண்டேன் பாங்கிமாரே! 1

ஆடுகின்ற சேவடிமேற் பாங்கிமாரே—மிக
ஆசைகொண்டு வாடுகின்றேன் பாங்கிமாரே! 2

இன்படி வாய்ச்சபையிற் பாங்கிமாரே!—நடம்
இட்டவர்மே லிட்டம் வைத்தேன் பாங்கிமாரே! 3

ஈனவுடற் கிச்சைவையேன் பாங்கிமாரே—நட
னேசர் தமை எய்தும் உன்னம் பாங்கிமாரே! 4

உத்தமர்பொன் னம்பலத்தே பாங்கிமாரே!-இன்ப
உருவாகி ஓங்குகின்றார் பாங்கிமாரே! 5



ஊன்வுல கைக்கருதேன் பாங்கிமாரே-மன்றில் 6
உத்தமருக்குறவானேன் பாங்கிமாரே!

கற்பனையெல் லாங்கடந்தார் பாங்கிமாரே!-என்றன் 7
கற்பனைக்குட் படுவாரோ பாங்கிமாரே!

கண்டிலர் நான் படும்பாடு பாங்கிமாரே!-மூன்று 8
கண்ணுடைய ரென்பாரையோ பாங்கிமாரே!

கன்மனமெல் லாங்கரைப்பார் பாங்கிமாரே!-மனம் 9
கரையாரென் னளவிலே பாங்கிமாரே!

கள்ளமொன்று மறியேனுன் பாங்கிமாரே-என்னைக் 10
கைவிடவுந் துணிவாரோ பாங்கிமாரே!

கற்பழித்துக் கலந்தாரே பாங்கிமாரே!-இன்று 11
கைநழுவ விடுவாரோ பாங்கிமாரே!

கண்டவரெல் லாம்பழிக்கப் பாங்கிமாரே-என்றன் 12
கன்னியழித் தேயொளித்தார் பாங்கிமாரே!

காமனைக் கண் ணுலெரித்தார் பாங்கிமாரே-என்றன் 13
காதலைக்கண் டறிவாரோ பாங்கிமாரே

காவலையெல் லாங்கடந்து பாங்கிமாரே!-என்னைக் 14
கைகலந்த வள்ளலவர் பாங்கிமாரே!

காணவிழைந் தேனவரைப் பாங்கிமாரே!-கொண்டு 15
காட்டுவாரை யறிந்திலேன் பாங்கிமாரே!

கிட்டவர வேண்டுமென்ருர் பாங்கிமாரே!-நான் 16
கிட்டுமுன்னே எட்டிநின்ருர் பாங்கிமாரே!

கின்னரங்கே ளென்றிசைத்தார் பாங்கிமாரே-நான்
கேட்பதன்முன் சேட்படுத்தார் பாங்கிமாரே!

கிள்ளையைத்தூ தாவுடுத்தேன் பாங்கிமாரே-அது 18
கேட்டுவரக் காணேனையோ பாங்கிமாரே!

கீதவகை பாடிநின்ருர் பாங்கிமாரே-அது 19
கேட்டுமதி மயங்கினேன் பாங்கிமாரே!

கீழ்மைகுறி யாமலென்னைப் பாங்கிமாரே!-மனக் 20
கேண்மைக்குறித் தாரேயன்று பாங்கிமாரே!

கீடமனை யேனெனையும் பாங்கிமாரே! அடிக் 21
கேடயுமை மெகொண்டாரன்று பாங்கிமாரே!

குற்றமெல்லாங் குணமாகப் பாங்கிமாரே!-கொள்ளும் 22
கொற்றவரென் கொழுநர் காணீர் பாங்கிமாரே!

குற்றமொன்றுஞ் செய்தறியேன் பாங்கிமாரே!-என்னைக் 23
கொண்டுகுலம் பேசுவாரோ பாங்கிமாரே!

குஞ்சிதப்பொற் பாதங்கண்டார் பாங்கிமாரே! 24
குறையெல்லாந் தீருங்கண்டீர் பாங்கிமாரே!

கூற்றுதைத்த பாதங்கண்டீர் பாங்கிமாரே-எங்கள் 25
குடிக்கெல்லாங் குலதெய்வம் பாங்கிமாரே!

கூறரிய பாதங்கண்டு பாங்கிமாரே!-களி 26
கொண்டுநிற்க விழைந்தேனுன் பாங்கிமாரே!

கூடல்விழைந் தேனவரைப் பாங்கிமாரே!-அது 27
கூடும்வண்ணங் கூட்டிடுவீர் பாங்கிமாரே!

## 13. வெண்ணிலா

புன்னாகவராளி] கண்ணிகள் [ஆதி தாளம்

தன்னையறிந் தின்பமுற வெண்ணிலாவே!-ஒரு 1
தந்திரம் நீ சொல்ல வேண்டும் வெண்ணிலாவே!

நாதர்முடி மேலிருந்த வெண்ணிலாவே! அங்கே 2
நானும்வர வேண்டுகின்றேன் வெண்ணிலாவே!

சச்சிதானந் தக்கடலில் வெண்ணிலாவே!-நானும் 3
தாழ்ந்துவிழ வேண்டுகின்றேன் வெண்ணிலாவே!

இராப்பகலில் லாவிடத்தே வெண்ணிலாவே!-நானும் 4
இருக்கவெண்ணி வாடுகின்றேன் வெண்ணிலாவே!

தேசுநிற மாய்நிறைந்த வெண்ணிலாவே!-நானுஞ் 5
சிவமயம தாய்விழைந்தேன் வெண்ணிலாவே!

போதநடு வூடிருந்த வெண்ணிலாவே!-மலப் 6
போதமற வேண்டுகின்றேன் வெண்ணிலாவே!

[illegible]மலிங்கே வெண்ணிலாவே!-அரு 7
ளாளர்வரு வாரோசொல்வாய் வெண்ணிலாவே!

அந்தரங்க சேவை செய்ய வெண்ணிலாவே!-எங்கள் 8
ஐயர்வரு வாரோசொல்வாய் வெண்ணிலாவே!

வேதமுடி மேலிருந்த வெண்ணிலாவே!-மல 9
வேதையுள வேதுசொல்வாய் வெண்ணிலாவே!

குண்டலிப்பால் நின்றிலங்கும் வெண்ணிலாவே!-அந்தக் 10
குண்டலிப்பால் வேண்டுகின்றேன் வெண்ணிலாவே!

ஆதியந்த மென்றுரைத்தார் வெண்ணிலாவே!-அந்த 11
ஆதியந்த மாவதென்ன வெண்ணிலாவே!

வித்திலாம லேவிளைந்த வெண்ணிலாவே!-நீ தான் 12
விளைந்தவண்ண மேது சொல்வாய் வெண்ணிலாவே!

முப்பொருளு மொன்றதென்பார் வெண்ணிலாவே!-அப்த 13
மூன்றுமொன்றாய் முடிந்ததென்ன வெண்ணிலாவே!

நானதுவாய் நிற்கும் வண்ணம் வெண்ணிலாவே!-ஒரு 14
ஞானநெறி சொல்லுகண்டாய் வெண்ணிலாவே!

ஞானமய மாய்விளங்கும் வெண்ணிலாவே!-என்னை 15
நானறியச் சொல்லுகண்டாய் வெண்ணிலாவே!

வாசி வாசி என்றுரைத்தார் வெண்ணிலாவே!-அந்த 16
வாசியென்ன பேசக் கண்டாய் வெண்ணிலாவே!

ஐந்தலைப்பாம் பாட்டுகின்றார் வெண்ணலாவே-அவர் 17
அம்பலத்தில் நின்றதென்ன வெண்ணிலாவே!

ஓரெழுத்தில் ஐந்துண்டென்பார் வெண்ணிலாவே!-அது 18
ஊமையெழுத்த தாவதென்ன வெண்ணிலாவே!

அந்தரத்தி லாடுகின்றார் வெண்ணிலாவே!-அவர் 19
ஆடுகின்ற வண்ணமென்ன வெண்ணிலாவே!

அம்பலத்தி லாடுகின்றார் வெண்ணிலாவே!-அவர் 20
ஆடும்வகை எப்படியோ வெண்ணிலாவே!

அணுவிலணு வாயிருந்தார் வெண்ணிலாவே!-எங்கும் 21
ஆகின்றன வண்ணமென்ன வெண்ணிலாவே!

அண்டபகி ரண்டமெல்லாம் வெண்ணிலாவே!-ஐயர் 22
ஆட்டமென்று சொல்வதென்ன வெண்ணிலாவே!

அம்பரத்தி லாடுகின்ருர் வெண்ணிலாவே!-என்னை 23
ஆட்டுகின்ற ரிப்பரத்தே வெண்ணிலாவே!

## 14. காட்சிக் கண்ணி

எதுகுல காம்போதி] [அட தாளம்

பல்லவி

ஆணிப்பொன் னம்பலத் தேகண்ட காட்சிகள்
அற்புதக் காட்சியடி- அம்மா
அற்புதக் காட்சியடி!

சரணங்கள்

சோதி மலையொன்று தோன்றிற் றதிலொரு
வீதியுண் டாச்சுதடி-அம்மா!
வீதியுண் டாச்சுதடி! (ஆணிப்)

வீதியிற் சென்றேனவ் வீதி நடுவொரு
மேடை இருந்ததடி-அம்மா!
மேடை இருந்ததடி! (ஆணிப்)

மேடையி லேறினேன் மேடைமே லங்கொரு
கூட மிருந்ததடி-அம்மா!
கூட மிருந்ததடி! (ஆணிப்)

கூடத்தை நாடவக் கூடமே லேழ்நிலை
மாட மிருந்ததடி-அம்மா!
மாட மிருந்ததடி! (ஆணிப்)

ஏழ்நிலைக் குள்ளு மிருந்த அதிசயம்
என்னென்று சொல்வனடி-அம்மா!
என்னென்று சொல்வனடி! (ஆணிப்)

ஓர்நிலை தன்னில் ஒளிர்முத்து வெண்மணி
சீர்நில மாச்சுதடி-அம்மா!
சீர்நில மாச்சுதடி! [ஆணிப்]

பாரோர் நிலையிற் கருநீலஞ் செய்ய
பவளம தாச்சுதடி!-அம்மா!
பவளம தாச்சுதடி! [ஆணிப்]

மற்ருேர் நிலையில் மரகதப் பச்சைசெம்
மாணிக்க மாச்சுதடி-அம்மா!
மாணிக்க மாச்சுதடி! (ஆணிப்]

பின்னேர் நிலையிற் பெருமுத்து வச்சிரப்
பேர்மணி யாச்சுதடி-அம்மா!
பேர்மணி யாச்சுதடி. [ஆணிப்]

வேருேர் நிலையில் மிகும்பவ ளத்திரன்
வெண்மணி யாச்சுதடி-அம்மா!
வெண்மணி யாச்சுதடி! [ஆணிப்]

புகலோர் நிலையிற் பொருந்தி பன்மணி
பொன்மணி யாச்சுதடி-அம்மா!
பொன்மணி யாச்சுதடி! [ஆணிப்]

பதியோர் நிலையிற் பகர்மணி யெல்லாம்
படிகம தாச்சுதடி-அம்மா!
படிகம தாச்சுதடி! [ஆணிப்]

பொற்றம்பங் கண்டேறும் போதினில் நான்கண்ட
புதுமையென் சொல்வனடி-அம்மா!
புதுமையென் சொல்வனடி! [ஆணிப்]

ஏறும்போ தங்கே எதிர்ந்த வகை சொல
என்னள வல்லவடி-அம்மா!
என்னள வல்லவடி! [ஆணிப்]

ஆங்காங்கே சத்திகள் ஆயிர மாயிரம்
ஆகவந் தார்களடி-அம்மா!
ஆகவந் தார்களடி! [ஆணிப்]

வந்து மயக்க மயங்காமல் நானருள்
வல்லபம் பெற்றேனடி-அம்மா!
வல்லபம் பெற்றேனடி! [ஆணிப்)

வல்லபத் தாலந்த மாதம்பத் தேறிநான்
மணிமுடி கண்டேனடி-அம்மா!
மணிமுடி கண்டேனடி! [ஆணிப்]

மணிமுடி மேலோர் கொடுமுடி நின்றது
மற்றது கண்டேனடி-அம்மா!
மற்றது கண்டேனடி! [ஆணிப்]

கொடுமுடி மேலா யிரத்தெட்டு மாற்றுப்பொற்
கோயி லிருந்ததடி-அம்மா!
கோயி லிருந்ததடி! [ஆணிப்]

கோயிலைக் கண்டங்கே கோபுர வாயிலிற்
கூசாது சென்றேனடி-அம்மா!
கூசாது சென்றேனடி! (ஆணிப்]

கோபுர வாயிலுட் சத்திகள் சத்தர்கள்
கோடிபல் கோடிடடி-அம்மா!
கோடிபல் கோடியடி! [ஆணிப்]

ஆங்கவர் வண்ணம்வெள் வண்ணம்செவ் வண்ணமுன்
ஐவண்ண மாகுமடி-அம்மா!
ஐவண்ண மாகுமடி! [ஆணிப்]

அங்கவ ரெல்லாமிங் காரிவ ரென்னவும்
அப்பாலே சென்றேனடி-அம்மா!
அப்பாலே சென்றேனடி! [ஆணிப்]

அப்பாலே சென்றேனங் கோர்திரு வாயிலில்
ஐவ ரிருந்தாரடி-அம்மா!
ஐவ ரிருநதாரடி! [ஆணிப்]

மற்றவர் நின்று வழிகாட்ட மேலோர்
மணிவாயி லுற்றேனடி-அம்மா!
மணிவாயி லுற்றேனடி! [ஆணிப்]

எண்ணுமவ் வாயிலிற் பெண்ணோ டாணாக
இருவ ரிருந்தாரடி-அம்மா!
இருவ ரிருந்தாரடி! [ஆணிப்]

அங்கவர் காட்ட அனுகத் திருவாயில்
அன்பொடு கண்டேனடி-அம்மா!
அன்பொடு கண்டேனடி! [ஆணிப்]

அத்திரு வாயிலி லானந்த வல்லியென்
அம்மை யிருந்தாளடி-அம்மா!
அம்மை யிருந்தாளடி! [ஆணிப்]

அம்மையைக் கண்டேன் அவளருள் கொண்டேன்
அமுதமு முண்டேனடி!-அம்மா!
அமுதமு முண்டேனடி! [ஆணிப்]

தாங்கும் அவளரு ளாலே நடராசர்
சந்நிதி கண்டேனடி-அம்மா!
சந்நிதி கண்டேனடி! [ஆணிப்]

சந்நிதியிற்சென்று நான்பெற்ற பேறது
சாமி யறிவாரடி-அம்மா!
சாமி யறிவாரடி! [ஆணிப்]

ஆணிப்பொன் னம்பலத் தேகண்ட காட்சிகள்
அற்புதக் காட்சியடி-அம்மா!
அற்புதக் காட்சியடி! [ஆணிப்]

## 15. அக்கச்சி

எதுகுல காம்போதி] கண்ணிகள்: [அடதாளம்

வானத்தின் மீது மயிலாடக் கண்டேன்
மயில்குயி லாச்சுதடி-அக்கச்சி!
மயில்குயி லாச்சுதடி!

துள்ளலை விட்டுத் தொடங்கினேன் மன்றுடும்
வள்ளலைக் கண்டேனடி-அக்கச்சி!
வள்ளலைக் கண்டேனடி!

சாதி சமயச் சழக்கைவிட் டேனருட்
சோதியைக் கண்டேனடி-அக்கச்சி!
சோதியைக் கண்டேனடி!

பொய்யை ஒழித்துப் புறப்பட்டேன் மன்றுடும்
ஐயரைக் கண்டேனடி-அக்கச்சி!
ஐயரைக் கண்டேனடி!

## 16. திருவொற்றியூர் எழுத்தறியும் பெருமான் மாலை

### தரவு கொச்சகம்

சிந்தை மயங்கித் தியங்குகின்ற நாயேனை 1
முந்தை வினை தொலைத்துன் மொய்கழற்கா ளாக்காதே
நிந்தையுறு நோயால் நிகழவைத்தல் நீதியதோ
எந்தைநீ ஒற்றி எழுத்தறியும் பெருமானே!

மத்தனைவன் னெஞ்சகனை வஞ்சகனை வன்பிணிகொள் 2
பித்தனை வீணுட்போக்கும் பேயேனை நாயேனை
முத்தனையா யுன்றன் முளரித்தாட் காளாக்க
எத்தனைநாட் செல்லும் எழுத்தறியும் பெருமானே!

நன்னெறிசேர் அன்பர் தமை நாடிடவும் நின்புகழின் 3
சென்னெறியைச் சேர்ந்திடவுஞ் செய்தா யெனக்குனக்கும்
முன்னறியேன் பின்னறியேன் மூடனேன் கைம்மாறிங்
கென்னறிவேன் ஐயா! எழுத்தறியும் பெருமானே!

மைப்படியுங் கண்ணார் மயலுழக்கச் செய்வாயோ? 4
கைப்படிய வுன்றன் கழல்கருதச் செய்வாயோ?
இப்படியென் றப்படியென் றென்னறிவே னுன்சித்தம்
எப்படியோ ஐயா! எழுத்தறியும் பெருமானே!

நில்லா வுடம்பை நிலையென்றே நேசிக்கும் 5
பொல்லாத நெஞ்சப் புலையனே னிவ்வுலகிற்
சொல்லா மனநோயாற் சோர்வுற் றலையுமல்லல்
எல்லா மறிவாய் எழுத்தறியும் பெருமானே!

தீதறிவேன் நன்கணுவுஞ் செய்யேன் வீணுட்போக்கும் 6
வாதறிவேன் வஞ்சகனேன் வல்வினையேன் வாய்மையிலேன்;
சூதறியேன் மாலயனுஞ் சொல்லரிய நின்பெருமை
யாதறிவேன் ஐயா! எழுத்தறியும் பெருமானே!

மாறாத வன்பிணியால் மாழாந்து நெஞ்சயர்ந்தே 7
கூறாத துன்பக் கொடுங்கடற்குள் வீழ்ந்தடியேன்
ஆறாத தரற்றி அழுகின்றேன் நின்செவியில்
ஏறாதோ ஐயா! எழுத்தறியும் பெருமானே!

உண்ணாடும் வல்வினையால் ஓயாப் பிணியுழந்து 8
புண்ணாக நெஞ்சம் புழுங்குகின்றேன் புண்ணியனே!
கண்ணாளா! உன்றன் கருணை எனக்களிக்க
எண்ணாயோ ஐயா! எழுத்தறியும் பெருமானே!

புன்செய்கை மாறாப் புலையமட மங்கையர் தம் 9
வன்செய்கை யாலே மயங்குகின்ற வஞ்சகனேன்
கொன்செய்கை மாறாத கூற்றங் வருவானேல்
என்செய்வேன் ஐயா! எழுத்தறியும் பெருமானே!

சங்குடையான் தாமரையான் தாள்முடியுங் காண்பதரிதாம் 10
கொங்குடைய கொன்றைக் குளிர்சடையாய்! கோதையொரு
பங்குடையாய்! ஏழை முகம் பாராது தள்ளிவிட்டால்,
எங்கடைவேன் ஐயா! எழுத்தறியும் பெருமானே!

'மன்றி னிடைநடஞ்செய் மாணிக்க மாமலையே! 1
வென்றிமழுக் கையுடைய வித்தகனே! என்றென்று
கன்றின் அயர்ந்தழுமென் கண்ணீர் துடைத்தருள
என்று வருவாய் எழுத்தறியும் பெருமானே!

'மன்னளவிற் சோதி மணிபோல்வாய் மாதவத்தோர் 2
தென்னளவும் வேணிச் சிவனே!' எனவொருகாற்
சொன்னளவிற் சொன்னவர்தந் துன்பொழிப்பாய் என்பரது
என்னளவிற் காணேன் எழுத்தறியும் பெருமானே!

மின்போல்வார் இச்சையினால் வெம்புகிறேன் ஆனாலுந் 3
தன்போல்வாய்! என்னின்ற தாய்போல்வாய்! சார்ந்துரையாப்
பொன்போல்வாய்! நின்னருளிப் போதடியேன் பெற்றேனேல்
என்போல்வா ரில்லை எழுத்தறியும் பெருமானே!

பூமாந்தும் வண்டெனநின் பொன்னருளைப் புண்ணியர்கள் 4
தாமாநதி நின்கடிக்கீழ்ச் சார்ந்து நின்றார் ஐயோநான்
காமாந்த காரமெனுங் கள்ளுண்டு கண்மூடி
ஏமாந்தேன் ஒற்றி எழுத்தறியும் பெருமானே!

பன்னருமிப் பார்நடையிற் பாடுழன்ற பாதகனேன் 5
துன்னியநின் பொன்னடியைச் சூழாதே னாயிடினும்
புன்னிகரேன் குற்றம் பொறுக்கப் பொறுப்புனக்கே
என்னருமைத் தாய்நீ எழுத்தறியும் பெருமானே!

வீட்டுக் கடங்கா விளையாட்டுப் பிள்ளையெனத் 6
தேட்டுக் கடங்காத தீமனத்தா லாந்துயரம்
பாட்டுக் கடங்காநின் பத்தர் அடிப்புகழ்போல்
ஏட்டுக் கடங்கா தெழுத்தறியும் பெருமானே!

பன்னும் மனத்தாற் பரிசிழந்த பாதகனேன் 7
துன்னுமல வெங்கதிரோன் சூழ்கின்ற சோடையினால்
நின்னருணீர் வேட்டு நிலைகலங்கி வாடுகின்றேன்
இன்னுமறி யாயோ எழுத்தறியும் பெருமானே!

கல்லை நிகராங் கடைமனம்போம் கானெறியிற் 8
புல்லைமதித் தையோவைம் பூவிழந்த பொய்யடியேன்
ஒல்லைபடு கின்ற ஒருவே தனைதனக்கோர்
எல்லை அறியேன் எழுத்தறியும் பெருமானே!

பொன்னைமதித் தையாநின் பொன்னடியைப் போற்றாத 9
கன்னிகரும் நெஞ்சாற் கலங்குகின்ற சைதவனேன்
இன்னல் உழக்கின்ற ஏழைகட்கு மேழைகண்டாய்;
என்னை விடாதே எழுத்தறியும் பெருமானே!

மாசுவரே என்னும் மலக்கடலில் வீழ்ந்துலகோர் 20
ஆசுவரே என்ன அலைவேனை ஆளாயேல்
கூசுவரே கைகொட்டிக் கூடிச் சிரித்தடியார்
ஏசுவரே ஒற்றி எழுத்தறியும் பெருமானே!

ஊர்சொல்வேன் பேர்சொல்வேன் உத்தமனே! நின்றிருந்தாள் 21
சீர்சொல்வேன் என்றனைநீ சேர்க்கா தகற்றுவையேல்
நேர்சொல்வா யுன்றனக்கு நீதியீ தல்லவென்றே
யார்சொல்வார் ஐயா! எழுத்தறியும் பெருமானே!

நீக்கமிலா மெய்யடியர் நேசமிலாப் பொய்யடியேன் 22
ஊக்கமிலா நெஞ்சத்தின் ஓட்ட கலச் செய்வாயேல்
தூக்கமிலா ஆனந்தத் தூக்கமின்றி மற்றுமிங்கோர்
ஏக்கமிலேன் ஒற்றி எழுத்தறியும் பெருமானே!

போகின்ற வஞ்சகரைப் போக்கியுன்றன் பொன்னடிக்காள் 23
ஆகின்றமேலோர் அடிவழுத்தா நாயேற்குப்
பாகின் தனிச்சுவையிற் பாங்காகும் நின்னருளை
ஈகின்ற தென்றோ எழுத்தறியும் பெருமானே!

'ஊழை அகற் றஉளவறியாப் பொய்யனிவன் 24
பீழைமனம் நம்மைப் பெறுதம் மனங்கொடிய
தாழையென எண்ணியென்னைத் தள்ளிவிட்டா லென்செய்வேன்
ஏழைநான் ஒற்றி எழுத்தறியும் பெருமானே!

மடுக்க முடியா மலவிருட்டிற் சென்றுமனம் 25
கடுக்கமுடி யாப்புலனாற் கட்டிச் சுமக்க வைத்த
தொடுக்க முடியாத துன்பச் சுமையையினி
எடுக்கமுடி யாதே எழுத்தறியும் பெருமானே!

முள்ளளவு நெஞ்ச முழுப்புலைய மாதர்களாம் 26
கள்ளளவு நாயிற் கடைப்பட்ட என்றனக்கே
உள்ளளவும் அன்பர்க் குதவுமுன்றாட் கன்பொருசிற்
றெள்ளளவு முண்டோ எழுத்தறியும் பெருமானே!

பண்ண முடியாப் பரிபவங்கொண் டிவ்வுலகில் 27
நண்ண முடியா நலங்கருதி வாடுகின்றேன்
உண்ண முடி யாவமுதாம் உன்னையன்றி எவ்வெவர்க்கும்
எண்ணமுடி யாதே எழுத்தறியும் பெருமானே!

வெங்கொளித்தேள் போன்ற வினையால் வெதும்பிமனம் 28
அங்கொளிக்கா துன்னை அழைத்தழுது வாடுகின்றேன்;
இங்கொளிக்கா நஞ்சமுண்ட என்னருமை அப்பா! நீ
எங்கொளித்தாய் ஒற்றி எழுத்தறியும் பெருமானே!

பித்தனைக்குங் காமப் பெரும்பேய் மயக்குமயல் 29
வித்தனைத்தாம் ஆணவம்பொய் வீர மழுக் காறுசினம்
[illegible]
இத்தனைக்கும் நான்காண் எழுத்தறியும் பெருமானே!

ஒல்லையே நஞ்சனைத்தும் உண்ட தயாநிதி நீ 30
அல்லையோ! நின்றிங் கயர்வேன்முன் வந்தொருசொற்
சொல்லையோ ஒற்றியூர் தூயதிருக் கோயிலுள்நீ
இல்லையோ ஐயா! எழுத்தறியும் பெருமானே!

நினையுடையாய் நீயன்றி நேடிலெங்கும் இல்லாதாய் 31
மனையுடையார் மக்களெனும் வாழ்க்கையிடப் பட்டவமே
இனையுடையான் என்றிங் கெனையாள்வ துன்கடனே
எனையுடையாய் ஒற்றி எழுத்தறியும் பெருமானே!

# 17. திருமுல்லை வாயில் திருவிண்ணப்பம்

## கலி விருத்தம்

தாயின் மேவிய தற்பர மே! முல்லை 1
வாயில் மேவிய மாமணி யே! உன்றன்
கோயில் மேவிநின் கோமலர்த் தாள்தொழா
தேயில் மேவி இருந்தன னென்னையே!

தில்லை வாய்ந்த செழுங்கனி யே! திரு 2
முல்லை வாயில் முதற்சிவ மூர்த்தியே!
தொல்லை யேனுன்றன் தூய்த்திருக் கோயிலின்
எல்லை சேரவின் றெத்தவஞ் செய்ததே!

வளங்கொ ளும்முல்லை வாயிலின் மேவிய 3
குளங்கொ ளுங்கட் குருமணி யே! உனை
உளங்கொ ளும்படி உன்றிருக் கோயிலிக்
களங்கொள் நெஞ்சின்ன் கண்டதுங் கண்டதே!

மலைவி லாமுல்லை வாயிலின் மேவிய 4
விலையி லாமணி யே! விளக் கேசற்றும்
கொலையி லாதவர் கூடுநின் கோயிலின்
தலைநி லாவத் தவமென்கொல் செய்ததே!

சீர்சி றக்குந் திருமுல்லை வாயிலில் 5
ஏர்சி றக்கும் இயல்மணி யே! கொன்றைத்
தார்சி றக்குஞ் சடைக்கனி யே! உன்றன்
ஊர்சி றக்க உருவதெவ் வண்ணமே?

சேற்கொள் பொய்கைத் திருமுல்லை வாயிலிற் 6
பாற்கொள் வண்ணப் பரஞ்சுட ரே! விடை
மேற்கொள் சங்கர னே! விமலா! உன்றன்
சாற்கொள் அன்பர் கலங்குதல் நன்றதோ!

வண்ண மாமுல்லை வாயிலின் மேவிய 7
அண்ண லே! அமு தே! நுதற்
கண்ண னே! உன்னைக் காணவந் தோர்க்கெலாம்
நண்ண ருந்துயர் நல்குதல் நன்றதோ?

மண்ணின் ஓங்கி வளர்முல்லை வாயில்வாழ் 8
கண்ணுள் மாமணி யே!கரும் பே உனை
எண்ணும் அன்பர் இழிவடைந் தாலது
பண்ணு நின்னருள் பாரிடை வாழ்கவே!

தீதி லாத திருமுல்லை வாயில்வாழ் 9
கோதி லாத குணப்பெருங் குன்றமே!
வாதி லாதுனை வாழ்த்தவந் தோர்தமை
ஏதி லாரென் றிருப்பதும் என்கொலோ?

தேசு லாவிய சீர் முல்லை வாயில்வாழ் 10
மாசி லாமணி யே! மருந் தே! சற்றும்
கூசி டாமனின் கோயில்வந் துன்புகழ்
பேசி டாத பிழைபொறுத் தாள்வையே!

## 18. நடேசர் கும்மி

ஆனந்த பைரவி] [ஆதி தாளம்

பல்லவி:

கும்மியடி பெண்ணே கும்மியடி—இரு
கொங்கை குலுங்கவே கும்மியடி.

அனுபல்லவி;

நம்மை யாளுபொன் னம்பல வாணனை
நாடிக் கும்மி யடியேடி-பதம் பாடிக் கும்மி யடி யேடி!

சரணங்கள்:

காமம் அகற்றிய தூயனடி—சிவ 1
காம சவுந்தரி நேயனடி!
மாமறை யோதுசெவ் வாயனடி—மணி
மன்றெனு ஞானவா காயனடி!

ஆனந்தத் தாண்டவ ராசனடி—நமை 2
ஆட்கொண் டருளிய தேசனடி!
வானந்த மாமலை மங்கைமகிழ்—வடி
வாளன டிமண வாளனடி!

கல்லைக் கனிவிக்குஞ் சித்தனடி—முடி 3
கங்கைக் கருளிய கர்த்தனடி!
தில்லைச் சிதம்பர சித்தனடி—தேவ
சிங்கம டியுயர் தங்கமடி!

பெண்ணொரு பால் வைத்த மத்தனடி—சிறு 4
பிள்ளைக் கறிகொண்ட பித்தனடி!
நண்ணி நமக்கருள் அத்தனடி—மிக
நல்லனடி யெல்லாம் வல்லனடி!

அம்பலத் தாடல்செய் ஐயனடி—அன்பர் 5
அன்புக் கெளிவரு மெய்யனடி!
தும்பை முடிக்கனி தூயனடி!—சுயச்
சோதிய டிபரஞ் சோதியடி!



## நூல்: முப்பது

சங்கரனார் திருவுளம் மகிழ்ந்து
உமாகேஸ்வரிக்கு அருளிச் செய்த

# ஞானசர நூல்

[மூலமும் உரையும்]

காப்பு] [நேரிசை வெண்பா

வாழ்த்துவாம் உள்ளம் வருவிப்பாம் நெஞ்ச முன் பிற்
சூழ்த்துவாம் மேன்மேல் துதி செய்வாம்—தாழ்த்த
பரநூலை முற்றும்பா லித்தருள் கூட்டுஞ்
சரநூலை யோதமுன்னோன் தாள்.

நாமகள் துதி:

உமைமாதுக் கீசன் உரைத்தசர நூலின்
அமையாப் பொருளும் அமையுப்—எமையாள்
புவிமடந்தை பூமடந்தை போதமெய்ஞ் ஞானக்
கவிமடந்தை யிக்கலைகோர் காப்பு.

அவையடக்கம்:

செய்ய மனந்துணிந்து சீர்முன்னோர் சொற்சர நூல்
ஐயமற வோத அருள்புரியைங்—கையரென்றன்
முன்னிற்பா ரென்று மொழிந்தேன்போற் கற்றுணர்ந்தோர்
மன்னிப்பா ரென்று மனு.

நூற்பயன்] [எண்சீர் விருத்தம்

'சந்திரபா னிலக்கணமுங் கோளும் நாளும்
தயங்கியபக்கங் கரணம் யோகம் வாரம்

வந்துசொல்லுஞ் சோதி—த்தை அறியா தார்கள்
மன நினைவால் அறியும்வகை யுளதோ?' என்ன,

'இந்த உடல் உயிர் நிலையை அறியா தாருக்
கியாமறிய இயம்பும்வகை யாதோ என்னிற்

பைந்தொடியே யாம்சொல்லுஞ் சர நூல் தன்னைப்
பரிந்துநீ பார்' என்று பரமன் சொல்வான்:

(இ-ள்.) 'சந்திரன், சூரியன், கோள், நாள், பக்ஷம், கரணம், யோகம், வாரம், இவை முதலாகச் சொல்லப்பட்ட சோதிட இலக்கணத்தை அறியாதவர்கள் தத்தம் மன நினைவினாலே அறிந்துகொள்ளும் மார்க்கம் உள்ளதோ? உண்டாயின் அருளிச் செய்ய வேண்டும்.' என்று உமையவள் கேட்க. சங்கரனார், 'அழகிய வளையல்கள் பூண்— கைகளையுடைய பெண்ணே. யாஞ் சொல்லுஞ் சர நூலாகிய இந்த சாஸ்திரத்தைப் பரி வுடன் பார்ப்பாயாக; பார்க்கில், நன்கு உணர்வை,' என்று சொல்லு கிறார். 1

சொல்லாரும் நெடுங்கயிற்றின் வருண மான
சுரத்தினூற் றுவக் கெனுமாச் சிரமந் தன்னில்

கல்லாரு மூக்கணாங் கயிறு கோத்து
நலந்திங்காய் வருகின்ற நஞ்சுட் கொண்டு

பொல்லாத காலப்பாம் புண்டு மிழ்ந்து
பூதலத்திற் பிறந்திறந்து போவ ரேனும்

எல்லாரும் யாஞ்சொல்லுஞ் சர நூல் தன்னை
இகழாதார் சுரர் மூகர் இகழ்வோர் தாமே.

[இ—ள்.] சொல்லப்பட்ட நாற்புரி கூடிய நீண்ட கயிற்றைப்போலப் பரம்பரையாய் விருத்தியாகி வருகின்ற பிரம, [க்ஷத்திரிய, வைசிய, சூத்தி ராதி வருணாச்சிரமம் பெற்ற இந்த மானிட தேகத்தில் இச்சரம் நாசிகை யின் வழியாய் நின்று எருதுக்கு ஒரு மூக்கணாங்கயிறிருந்து ஆட்டுவிப்பது போல நன்மை 'தீமையென்னும் நஞ்சினையூட்டுவிக்கும். கொடிய காலனென்னும் பாம்பானது உன்ன நஞ்சினை ஊட்டக் கொண்டு,

வும் உமிழவுந் தாமுட்பட்டு இருவினைக்கிசைந்தவராய்ப் பிறந்தும் இறந்தும் போவார்கள் ஆயினும், நான் சொல்லி வருஞ் சர நூலை இகழாமல் குரு முகாந்திரத்தில் அறிந்து அனுபவித்து, அந்நெறியில் நிற்பவர் யாவரேனும், ஒருங்கே தேவராவர். அப்படி அறியமாட்டாதவர்கள், ஊமைகளுக்குச் சரியாவார்கள். 2

சரம் பார்க்க ஆசன விதி:

மூங்கிற் பாய் மிடி; கல்லு நோய். மண் துக்கம்;
முரிபலகை நன்மையில்லை; முடைந்த புல்லு

நீங்கிவிடுங் கீர்த்தி; தாழை மன நடுக்கம்!
நிகரில்கலைத் தோல் ஞானம்: நிறைபுலித்தோல்

ஓங்கியசெல்வம்: வீடு மூன்கு சைப்புல்;
ஒளிர் தூசு நன்மை; உயர் படந்தா னென்று

தூங்கிய தூக்கம்போக்கும் நன்மை யாகத்
துலங்கியவா தனத்திருந்து தோகை! சொல்வாம்;

[இ—ள்.] மயில் போன்றவளே, மூங்கில் தடுக்கு ஆசனம், வறுமை கல். வியாதி; மண் [ஆதனமில்லாமல் வெறுமணலில் உட்கார்ந்து கொள்ளுதல்] துக்கம்; உடைந்த அல்லது அறுபட்ட பலகை பணை நன்மையில்லை; கோரைப்பாய் முதலிய புற்பாய்கள். கீர்த்தி நாசம்: பச்சிலைத்தழை. மன நடுக்கம்; மான் தோல். ஞானம்; புலித்தோல், செல்வம்; தர்ப்பாசனம், மோக்ஷம்; வெள்ளை வஸ்திரம், தீமையில்லை; சித்திராசனம் அல்லது இரத்தின கம்பளம். நன்மை, இவைகளில் நன்மையாய் விளங்கும் ஆதனத்திலிருந்து சரம் பார்க்க வேண்டும்; மற்றுஞ் சொல்லுகிறேம்; கேள்; 3

சரம் பார்க்கும் மார்க்கம்

சொல்லியவா தனங்கள் பல; அவற்றுள் நன்றில்
துய்யபங்க யாதனமாயிருந்து தோன்றும்

அல்லலறுத் தேகமன மாக்கி ஓட்டி
யாணபந்த பிராணயா மங்கள் பண்ணி,

எல்லையிலுந் தியின்கீழா மெழுத்தைப் பற்றி
எழுபத்தீ ராயிர நா டியிலீ ரைந்து

நல்லனவாம்; அதில்மூன்று நாடி யோடும்;
நலந்தரும்பே ரவ்வெழுத்தை நவ்வி! பாரே.

---

"சரம்" என்பன, காற்று, மனம், சிவன், சுவாசம், மூச்சு, பிராணன், ஆவி, உயிர், உயிர்ப்பு இவை முதலாகச் சொல்லப்பட்டவை தான் என்றறிக.

[இ—ள்.] மான் போலுங் கண்களையுடைய பெண்ணே, முன் கூறப்பட்ட ஆசனங்கள் பலவுண்டு. அவற்றுள் தீங்கில்லா ஆசனத்தில் பதுமாசனமெனப்பட்ட அங்கமாயிருந்து [பார்க்கும் போது], மனத்துக்கு மிகவும் நினைவினால் அல்லல் வரும். அப்படி வரும் அல்லல்களை நீக்கி, வேறு நினைவில்லாமல், ஒரே மனமாக்கி, ஒட்டியாணபந்தம் என்று சொல்லும் பிராணயாமஞ் செய்து, அதன் மேற்பார்க்கில், எல்லையில்லாத திருவருளுக்கிடமாகிய உந்தியின் கீழிருக்குமெழுத்தைத் தொடங்கி, எழுபத்தீராயிரம் நாடிகள் இந்தத் தேகத்திலுண்டாவன வை தெரியும். அந்நாடிகளுள் பத்து நாடிகள் நல்லனவாம் அப்பத்து நாடிகளுள் மூன்று நாடி நல்லன. அம் மூன்றின் வழியாய்த்தான் சரம் எளிதிற்கான ஓடும் இவையறியப் பெரிதாகிய நன்மையினை அளிக்கும் அவ்வெழுத்தைப் பார்.

குறிப்பு:—இதன் விவரத்துக்கு மற்றும் வருவனவற்றுள் 85 ஆம் 4
கவியைப் பார்க்க.

நவ்விவிழி யாய்! இதய கமலந் தன்னில்
நன்றாக அசுவையுயிர் நடக்கும் போதுஞ்

செவ்வையுடன் மீளும்போ திருபத் தோரா
யிரத்தறுநூ றதுசெப்பி லொருநா ளாகும்.

அவ்வியல்மூ லாதாரஞ் சுவாதிட் டானம்
மணிபூரம் அனாகதம்வி சுத்தி ஆஞ்ஞை

பவ்வமற யாஞ்சொல்லுஞ் சரநூல் தன்னைப்
பார்ப்பவரே பராபரத்தின் பயன்பார்ப் பாரே:

[இ—ள்.] மான் போலும் விழிகளையுடைய பெண்ணே, இருதய கமலத்தின் வழி ஊடுருவிக் கொண்டு யாதொரு தீங்குமில்லாமல் அசுவையுயிரெனப்பட்ட இச்சரம், நாசிகையின் வழியாய்ப் போகும் போது [4 அங்குலங்கள் போக மற்றவை] செவ்வையாய்த் திரும்பி வரும் போதும் [கணித்துப்பார்க்கில்] இருபத்தோராயிரத்தறுநூறு தரம் நடக்கும். அது 60 நாழிகை சேர்ந்த ஒரு நாளாகும். அப்பரிசெல்லாம் மூலாதாரம் சுவாதிட்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆஞ்ஞை என்று சொல்லப்பட்ட பரநிலையிலே பரிசுதான் [அங்கிருந்து உண்டாயின எனுங்கருத்து] இதனைக் காணும் வழி யாதெனில், யான் சொல்லுஞ் சரநூலை மயக்கமறப் பார்ப்பதுதான். அப்படிப் பார்ப்பவர் பரமாகவும் அபரமாகவும் விளங்குகின்ற ஒரு வஸ்துவினாலுண்டாகும் பிரயோசனத்தை அறிந்து 5
கொள்வர்.

## சந்திரர், சூரியர், சுழுமுனை இலக்கணமும் யாத்திரைப் பலனும்:

பார்க்கிலிடை யிடமதுவே திங்களாகும்;
பகலவனும் பிங்கலையே வலம தாகும்;

ஏற்கவுரை சுழுமுனைதா னடுவாம் அங்கி:
இடையான சந்திரனே அமுத மாகும்:

தீர்க்கமுடன் பொருள் விளக்கும் கரிய வண்ணம்;
திரராசி யாமவனே செப்புங் காலே;

வேற்றடங்கண் மடமாதே! விரும்பிக் கேளாய்:
விரிவாக இவையனைத்தும் விளங்கச் சொல்வாம்;

(இ—ள்) வேல்போலுங் கண்ணிணையுடைய பெண்ணே, ஆராய்ந்து பார்க்கில், 'இடைகலை என்பதுவே இடைப்பக்க நாசியில் வருஞ் சுவாசம்: அதுவே 'சந்திரகலை' எனப்படும். பிங்கலை என்பதுவே வலப்பக்க நாசியில் வருஞ்சுவாசம். இதுவே சூரியகலை எனப்படும். யாவருக்கும் ஒக்கச் சொல்லுங் காலத்தில், சுழுமுனை என்பது நடுவாகும் அக்கினி எனப் படும். பின்னும் அந்தச் சந்திரனைச் சொல்லுமிடத்தில், அமுதம் தீர்க்க மாக: எப்பொருள்களையும் உண்டாக்குவன். நிறங் கறுத்த தன் ராசியில் திர ராசி, மற்றுமுண்டாகிய அனைத்தும், பரிஷ்காரமாகச் சொல்ல, நீ விருப்பமுற்றுக் கேட்பாயாக.

குறிப்பு:—அச்சுழுமுனை இரண்டு நாசிகையிலும் பரவியோடும் அதற் குப் பூரணம் என்பது பெயர். 6

இதுவும் அது.

சொல்லுங்காற் கதிரவனுஞ் சகவி யாபி.
சுத்தநிறம் வெண்மைசர ராசி யாகும்:

கொல்லுமெலாக் கருமங்கள் கொடிய வன்னி,
கூறுங்கால் நிறஞ்சிவப்பாம் உபய ராசி:

நல்லவிடை தெரிந்துணரிற் றிங்கள் பெண்ணும்,
நலம்பயில்பிங் கலைகதிரோன் புருட னாகும்:

செல்லுமிகு பதின்காத வழிக்கப் பாலாந்
திசைக்கிடமாய்ச் செல்வலமூர் சேரக் கேளே:

(இ-ள்.) சூரியனுடைய குணங்குறிகளைச் சொல்லுமிடத்து, அந்தச் சூரியன் உலகத்தில் வியாபகமுற்றவன். பரிசுத்தமான வெண்மை நிறத்தை யுடையவன்; ராசியில் சரராசி, சுழுமுனை, யென்னும் அக்கினியைச் சொல்லவென்றால், சகல கருமங்களையும் அழிக்கும்: பொல்லாதது: நிறம் அக்கினி: சிவப்பு ராசியில் மேற்சொல்லிய இரண்டு ராசியுங் கூடியது. இன்னமும் நன்றாய்த் தெரிந்து பார்க்கில் இடைகலையென்று சொல்லப் பட்ட சந்திரன் பெண்பால்; பிங்கலையென்று சொல்லப்பட்ட அந்தச் சூரியன் ஆண்பால், சுழுமுனையெனப்பட்ட அந்த உபய ராசியானது அஃ றிணைப்பால் அல்லது அலியாகும். அன்றியும், இரு பதின்காத வழிக்கு மேற்பட்ட தொலைவான தேசத்துக்குப் போகும்போது, சந்திர கலை ஓடும் போது புறப்பட்டுச் சூரியகலை ஓடும்போது அத்தேசத்தில் போய்ச் சேர வேண்டும். இன்னமுஞ் சொல்லுகிறேன்; கேள்: 7

சந்திரனிலக்கணமும் அச்சந்திரன் நடக்கும்போது
இன்னவை செய்யலாம் என்பதும்:

கேட்கிலிடந் தூதாடை யணிபொன் பூணல்
கிளருமணம் அடிமைகொளல் கிழ்நீர் கிண்டல்

வாழ்க்கைமனை யெடுத்தல்குடி புகுதல் விற்றல்
மன்னவரைக் காணலுண்மை மருவல் சாந்தி

வேட்கை தெய்வப் பதிட்டைசுரம் வெறுப்புத் தீர்த்தல்
வித்தைபெறல் தனம்புதைத்தல் மிகவும் ஈதல்

நாட்கமல மலர்முகத்தாய்! நரகந் தீர்த்தல்
நன்றேயா மிவையெல்லாம் நயந்து பாரே.

(இ-ள்) அன்று மலர்ந்த தாமரைப் பூப்போலு முகத்தினையுடைய பெண்ணே, 'சந்திரகலை இடநாசிகையில் நடக்கும்பொழுது எந்தெந்தக் காரியங்களைச் செய்யலாம்?' என்று வினவினால், அந்த இடைகலையில் ஒருவரைத் தூதனுப்புதல், தானே தூதுபோதல், புதிப வஸ்திரந் தரித்தல், ஆபரணாதிகள் பூண்டு கொள்ளல், விவாகஞ் செய்துகொள்ளுதல் (தாலிகட்டல்) ஒருவனை அடிமையாகப் பெற்றுக் கொள்ளல், கிணறு குளம் ஏரி முதலியன வெட்டுதல், வாழும் வீடு மனை வாங்குதல், ஒரு வீட்டிற் குடி போதல், ஒரு வஸ்துவை விற்றல், நூதனமாய் அரசரைக் காணல், தனக்கு ஒருபடி மேற்பட்டவரானாலுஞ் சரி, தான் உண்மையாகிய வஸ்துவைச் சார்தல், சாந்தி கழித்தல் இஷ்ட தெய்வம் பிரதிஷ்டை செய்தல், சுரந்தீர்த்தல் [ஒருவனைச் சமாதானஞ் செய்தல்]. கல்வி கேட்டுக் கொள்ளுதல், தனந்தானிய முதலிய ஆஸ்தி சேர்த்து வைத்தல், தியாகங் கொடுத்தல், பாப விமோசனஞ் செய்தல் ஆகிய இவையெல்லாம் நன்மையாகும். மற்றக் காரியங்கள் மத்திமம் என்றறிக. 8

குறிப்பு:—இன்னமும் இதிற்செயலறியவென்றால், 47-ஆங் கவியையும், 48-ஆங் கவியையும் பார்க்க.

சூரியனிலக்கணமும், சூரியன் நடக்கும்போது இன்னவை
செயலாகும் என்பதும்:

பார்க்கில்வலம் உபதேசம் வித்தை சேவை
படையோட்டல் பயிர்செட்டுக் களவு சூது

போர்க்கவொண வழக்குக்கரி பரிதே ரூர்தல்
பிறங்குமெழுத் திடுதல்சங் கீதம் பாடல்

வார்த்தைபகை பக்கங்கோள் பசாசு தீர்த்தல்
மந்திரஞ்சா தித்தல்மருந் துணிலு றங்கல்

கோத்தபுன லாடல்கொல் விடங்கள் தீர்த்தல்
கொடும்பிணிதம் பனபோகங் குறிக்குங் காலே.

(இ-ள்) 'வல நாசிகையில் சரமோடும்போது எவை செய்யத் தக்கவை?' என்று விசாரித்துப் பார்க்கும்போது, குருவுபதேசம் பெறல், தாமொருவருக்கு உபதேசம் பண்ணல், வித்தை பாராயணஞ் செய்தல், வித்தை ஒருவருக்கோதல், ஒருவனை வணங்கல், எதிரியின் படை துரத்தல், பயிர் விளைத்தல், வியாபாரஞ் செய்தல், திருடல் சூதாடல், ஒருவனுலுந் தீர்த்தற்கரிதாகிய வழக்குப் பேசல், யானை குதிரை தேர் இவைகளிலேறிச் சவாரி போதல், விளங்கி வரும்படியான எழுத்தெழுதல், சங்கீதம் பாடல் பேசத் தொடங்கல், பகைமையுண்டாக்கல், ஒருவனைப் பங்கம் பண்ணல், கோள் சொல்லுதல், பிசாசு ஓட்டுதல், மந்திர நிட்டை சாதித்தல், மருந்து சாப்பிடுதல், போசனம் புசித்தல், நித்திரை செய்தல், ஸ்நானஞ் செய்தல், கொல்லுதற்கேதுவாகிய விஷயங்களை நிவர்த்தி செய்தல், கொடிய வியாதியைத் தீர்த்தல், தம்பனயோக சாதனஞ் செய்தல், இவைகளையெல்லாங் குறித்தனுபவித்துப் பார்க்கில் நன்மையாகும்.

குறிப்பு-மற்றிச் சூரிய சந்திரர் இருவருக்கும் விவரத்திற்கு 46 ஆங் கவியையும், 48 ஆங் கவியையும் பார்க்க. 9

சுழுமுனை பூரண சூனிய பலன்:

காலிரண்டு மொத்தக்காற் சமாதி நன்றும்;
 கருதியதொன் ருகாது; காணு காணு;
சேலிருந் தவமுடையாய்! நன்மை இல்லை;
 தீயவா குங்கருமஞ் சேரக் கூடும்:
சாலநிறை பூரணத்தில் வழக்கு வாது
 தர்க்கம்போ ரரங்கமன்னர் தம்மைக் காண்டல்
மூலமறுஞ் சூனியத்தி னிறுத்தில் வெல்வன்!
 முயல்வதெல்லாங் கயல்விழியாய்! முயல லாமே.

(இ-ள்) சேல் மீன் போலும் கண்களையுடைய பெண்ணே, 'சுழுமுனையாய் இரண்டு சரமும் ஒத்தோடுகையில் என்ன செய்யலாம்?' என்றால் சமாதி யோகஞ் செய்தல் [கருவி கரணங்களோயச் சும்மாவிருத்தல்,] நன்மை; நினைத்த காரியம் ஒன்றேனுமாகாது, அப்போது ஒருவன் வந்து 'இப்பொருள் அகப்படுமா?' என்றால், அஃது அகப்படாது. சீலம், பொருந்திய தவமுடைய பெண்ணே, இந்தச் சுழுமுனை நடக்கும்போது நன்மையே இல்லை; கெட்ட காரியங்களெல்லாம் பலிக்கும். இது இங்ஙனம் நிற்க, [சரம்] மூக்கில் எந்தப் புழையில் ஓடுகின்றதோ, அந்தப்பக்கம் பூரண மென்றும், சரம் ஓடாத பக்கம் சூனிய மென்றும் பேர் பெறும், இப்படியான குறைவில்லாத பூரண பக்கத்தில் நின்று வழக்குப் பேசுகிறவர்களை, தர்க்கம் பண்ணுகிறவர்களை சண்டை பண்ணுகிறவர்களை ஒருவன் போய்க் காணும் அரசனை [அல்லது] தனக்கு மேறபட்டவனை, இவ்வாறு கூறப் பட்டவர்களை இதனால் காணலாமென்று ஒரு சாட்சியும் இல்லாதபடி சரமோடாத பக்கமாகிய சூனிய பக்கத்தில் நிறுத்தினால், பூரண பக்கத்திலிருக்கின்றவன் வெல்வன்: அல்லாமலும், ஒருவன் இப்படிப்பட்டவர்களைத் தனக்குச் சரமோடாத சூனிய பக்கத்தில் நிறுத்தினால், அவன் பேச்சே

மேலாய், வெல்வன், எவ்வெவ்வற்றை எவ்வெவ்வாறு நாட்டமுற்று அறிய வேண்டுமோ, அவ்வவ்வாறேயறியலாம். 10

### யாத்திரை பிரயாணம் போகும்போது சரம் இசைவு பிசகாய் இருந்தால் அதற்கு உபசாந்தம்:

முயலுங்காற் பூரணத்தி லிடத்தி ரண்டு
 முன்வலமேல் மூன்றடிபோம் மொழியும் யாத்ரை;

கயலடருங் கண்மடவாய்! கருமம் மூற்றும்
 கருதுவடக் குங்கிழக்கும் இடத்தே போகில்

இயலுமொரு பகையுண்டாம்; மீள மாட்டார்;
 இசைந்தவலந் தெற்குமேற் கேக வென்னிற்

புயலடரும் புனல்புகுந்து மரண மாவார்;
 புணர்முலைக்கச் சிறுமிடையாய்! போற்றிக் காணே.

[இ-ள்] கச்சினுல் இறுகி நெருங்கிய தனங்களையும் இப்போது
தான் அற்றுப்போவது போலத் தோன்றுகின்ற இடையினையுமுடைய
பெண்ணே, பின் 1?-ஆங் கவியில் சொல்லியபடி மேற்றிசையும் தென்றிசை
யும் சந்திரன் றிசை: வடக்கும் கிழக்கும் சூரியன் றிசை. இஃது இங்ஙனம்
நிற்க, சொல்லப்பட்ட யாத்திரை போக நாடியவன், சந்திரனில் சந்திர
திசையே போக வேண்டும்; சூரியனில் சூரிய திசையே போக வேண்டும்:
அல்லாமலும் முன் ஏழாங்கவியிற் சொல்லியபடி. இருபதின்காத வழிக்
கப்புறமான தலங்களுக்கும் சந்திரனில் புறப்பட்டுச் சூரியனில் ஊர் போய்ச்
சேர வேண்டும் அப்படிச் சேரத் தருண பேதமாய்ச் சரமும் இசைவு
பிசகாய் மாறியோடினுல், [அதற்கு உபசாந்தம் யாதெனில்] சூரியகலை
யிற் போகவேண்டிய திக்கின் யாத்திரைக்குச் சந்திரகலையாயிருந்தால்,
அந்தச் சந்திரன் சுவாசத்தை ஏறவுள்ளே இழுத்துப் பூரணமாக்கி இந்தக்
கலையே இரண்டு தரம் முன்னிட்டு வைத்துப் பின்பு சுதாவாய், நடந்து
வழியில் சிறிது தூரம் நிற்காமல் போக வேண்டும். [இது சாந்தி]
சந்திரன் பலன் கெட்டுப் போகும். தீமையில்லை. சந்திரகலையிற் போக
வேண்டிய திசையின் யாத்திரைக்குச் சூரிய கலையாயிருந்தால், சூரியன்
சுவாசத்தை ஏற உள்ளேயிழுத்து, அக்கலையே மூன்றடி முன்னிட்டு
வைத்துப் பின்பு சுதாவாய் நடந்து வழியில் சிறிது தூரம் நிற்காமல்
போக வேண்டும். [இது சாந்தி.] சூரிய பலன் கெட்டுப் போகும்; தீமை
யில்லை; போகிற காரியம் ஜெயமாகும் இப்படியல்லாமல் வடக்குத் திசை
யும், கிழக்குத் திசையும் சந்திரன் நடக்கும்போது யாத்திரை போனுல்
போகிறவிடத்தில் ஒருவருக்கொருவர் விரோதப்பட்டுப் போவர்; திரும்ப
மாட்டார். மேற்குத் திசையும் தெற்குத் திசையும் சூரியகலை பாயும்
போது யாத்திரை போனுல், சலத்தினுல் அல்லது மழையினுல் இறந்து 11
போவர். இதை நீ விசுவாசித்துப் பார்.

### ஒருவனுக்கு நன்மை தீமை சொல்லும் மார்க்கம்:

காணவொரு கருமத்தைக் குறித்து வந்தோன்
 கருதியமுன் னும்மிடமும் மேலும் இந்து

பேணுவல முங்கீழும் பின்னும் வெய்யோன்
பேசியசொல் லெழுத்திரட்டை சோம னாகும்;

மாணுமெழுத் தொற்றையேற் கதிரோ னாகும்;
மதிக்குமவன் பூரணத்தில் வந்து கேட்கிற்

பூணவுரைத் தனவெல்லாம் நன்றே யாகும்;
பொல்லாது சூனியத்திற் புகலு வோர்க்கே.

[இ-ள்] நாம் விழையுங் காரியம் நன்றோ தீதோ, கண்டறிவோம்! என்று வந்தவன், முன் 10-ஆங் கவியிற் சொல்லியபடி சூரியகலை நடக்கும் போது, அவன் அப்பூரண பக்கமாகவே இருந்தானாகில், அவன் பொருந்தச் சொன்ன காரியங்களெல்லாம் அவனுக்குச் சித்திக்கும். அப்படியல்லாமல் வலப்பக்கத்தில் நின்றாலும், சரம் பார்க்கிறவன் மேலிருக்க வந்தவன் கீழிருந்து கேட்டாலும், நேர்நேரே பின்னிருந்து கேட்டாலும் அச்சூரிய கலைக்குரிய பலிதமே சொல்க. சந்திரகலை நடக்கும்போது அவன் அப்பூரண பக்கமாவேயிருந்து வினவினானாகில், அவன் சொன்ன காரியங்களெல்லாம் அவனுக்குப் பலிக்கும். அப்படியில்லாமல் இடப் பக்கத்தில் நின்றாலும், நேர் நேரே முன்னே நின்றாலும், மேலிடத்திலிருந்தாலும், அச்சந்திர கலைக் குரிய குணமே சொல்க. இது தவிர, சரம் ஓடாத சூன்ய பக்கத்தில் நின்று கேட்பானானால், அவன் கேட்ட காரியம் பொல்லாததாகும்; பலிக்கமாட்டா தென்க. அல்லாமலும் அவன் முதல் வாய் திறந்து சொன்ன வார்த்தையின் எழுத்தை எண்ணிப்பார்த்து, ஒற்றைப் பங்காகில், சூரியனுடைய குணஞ் சொல்க. இரட்டையாகில் சந்திரனுடைய குணஞ்சொல்க. மேல் கீழ் என்றது மெத்தை வீட்டையும் கிணறு முதலிய பள்ளக்குழிகளையும் குறித்த தென்றிக. 'இப்படியாக 5, 6 வகையிற் சொல்லியிருக்கின்றதே! இவை யெல்லாம் ஏககாலத்தில் ஒத்திருக்க வேண்டும் என்பதில்லை. ஏதாவது ஒன்றைப் பார்த்துச் சொல்லலாம், என்பது கருத்து, மற்றும் வருவனவற் றாற் காண்க. இன்னமும் விரித்துச் சொல்லுமளவில் சந்திரனுடைய திசை யும் பக்கமும், அது பூரணமானாலுஞ் சரிதான், கிஞ்சித்து மத்திமம். சூரிய னுடைய திசையும் பக்கமும், அது சூனிமானாலுஞ் சரிதான், திரணமாயி னும் நன்மையுண்டே யல்லது வியர்த்தமாகாது. இதற்குப் பிரமாணமாக 6-ஆங் கவியிலும் 7-ஆங் கவியிலும் சந்திரனைத் திராசியென்று செப்பி யிருப்பதனையறிக. இக்கவிகளில் உரி, பண்பு அல்லது அடைமொழிகளைச் சேரவிடாமல் பதவுரையாய்ச் சொல்லி வருவோமென்றால் விரிவுரைக்கு இசைவுபட்டு வருவதரிது; ஆயினும் அவ்வுரிகளை மாத்திரம் சேர்த்துக் கொண்டு வருவோமென்றால், ஒரு பெண்ணானவள் தன் புருஷனுக்கு அமளியிற் சம்போக காலத்தில் கால் கை படுதல் முதலிய கற்புடைமை தவறுதல் கூடாதென்று அங்கும் அவைகளை இருக்கக் காண்பிக்கப் புகு வாள். புகுந்தால், அச்சதிபதிகள் கொண்ட கருத்து ஒருமித்துத் தடை யின்றி நிறைவேறுமோ? நிறைவேறாதது போல, இங்கும் விகாரமில்லாமல் உரை புணர்வு மாட்டாதாதலால், சமயோசிதமாய் நேர் படுத்தவும் நிராக ரிக்கவுமாயிற்று. 12

இதுவும் அது:

முன் 10-ஆம் கவியிற் சொல்லிய பூரண சூனியங்களின் விகற்பம்:

கேடென்றேன் பறிகொடுத்தோன் நஞ்சு தின்றேன்
கிடையினிற் சாவென்றேன் கிளர்நோய் கொண்டோன்

பாடொன்று மில்லை; சூனியத்தே யாகிற்
பலித்துவிடும்; பூரணத்திற் பகர்ந்த வெல்லாம்

ஆடும்பை யரவன்ன அல்கு லாளே!
அடுத்தொருவன் வந்ததிசை சோம ஞகி

நீடுஞ்சொல் இரவியாய் நிற்கு மாகில்
நினைத்தமொழி யாகாது; நின்று பாரே.

[இ—ள்] ஆடும் பையரவு அன்ன அல்குலையுடைய பெண்ணே, ஒருவன் வந்து 'நானின்னதனுல் கெட்டுப் போனேன், என்ருலும், 'நானின்னதைப் பறி கொடுத்தேன், என்ருலும். 'விடங்கடித்து அல்லது விடமுண்டேன்,' என்ருலும் 'இதோ படுக்கையிற்ருனே பிராணன் போகின்றது!" என்ருலும், அல்லது இவை முதலாகச் சொல்லப்பட்ட அபாய குணங்குறிகள் எவையாயினுஞ் சரி, சரம் ஓடாத சூனிய பக்கமாய் வந்து நின்ருனுகில் 'ஒரு வருத்தமுமில்லை; நிவர்த்தியாகிப் போகும்,' என்க. அட்படியல்லாமல் சரம் ஓடுகிற பக்கமாகிய பூரண பக்கத்தில் வந்து நின்று சொல்லுவானுகில் வந்தவன் எப்படி எப்படிச் சொன்னுனே அப்படியப்படியே லயித்துப் போகும், பறிபோன பொருள் வாராது; நஞ்சு மீளாது; படுக்கையில் நோயாளி தேருன். அன்றியும். சூனியத்தில் எவனுவது வந்து எதையாவது சொன்னுனுகில் அஃது ஒரு காலத்தில் அபத்தமான வார்த்தையானுலுமாகும் பூரணத்திற்சொன்ன சொல் உண்மையாயிருக்கும். இதுவல்லாமலும், வந்தவனுடைய திசையையும், 12-ஆங் கவியிற் சொல்லியபடி எழுத்தையும் எண்ணிப் பார்க்கில். அவன் திசை சந்திரன் கூருகவும். முதற் சொன்ன சொல் சூரியன் கூருகவுமிருந்தால், மேற்சொல்லிய காரியங்களுக் குக் கிஞ்சித்து மத்திமமாயினும், முழு மோசமன்று;—இன்னமுஞ் சொல்லுகிறேன்; கேள்: 13

கருப்பக்குறி:

கேட்டவனு ருயிர்தன்னி லேறி நிற்றல்
கிளர்கையி லுயிருளவை பிடித்து நிற்றல்

வாட்டமற வருமகலை யிடத்திற் பெண்ணும்:
வலமாகி நின்றுரைத்தால் மைந்த னுகும்;

ஈட்டமில்சூ னியத்துரைக்கில் கேடே யாகும்;
இருஞ்சுமுனை மேலுரைக்கில் அலியே யாகும்;

நாட்டுமொழி சூனியம்பூ ரணத்தே யாகி
நடுக்கமுடன் மகவுயிர்க்கக் கிடைக்கும் அன்றே.

[இ—ள்] ஒருவன் கருப்பத்தைக் குறித்துக் கேட்குங்காலத்தில்; வந்தவன் ஒரு சீவன் மேல் ஏறிக்கொண்டிருந்தானுனுலும், உயிருள்ள யாதொன்றைக் கைட்பிடித்துக் கொண்டிருந்தானுனுலும், ஒரு சீவனைத் தொட்டு நின்ருனுனுலும் அவன் நின்ற பக்கம் வலமாகில், அதிலும் பூரணமானுற்ருன் ஆண்பிள்ளை பிறக்குமென்க; இடமாகில் பூரணமானுற்ருன் பெண்ணென்க. அப்படிப் பூரண பக்கமல்லாமல் சூனிய பக்கமாயிருந்து எதனைத்தொட்டு

நின்றாலும் வலமாகில் ஆண்தான்; இடமாகில் பெண்தான். ஆனால் பிறக்கிற பிள்ளை சாகும். அப்போது சரம் பார்க்கிறவனுக்குச் சுழுமுனையாயிருந்தால், பிள்ளை ஆணுருவின தல்லாமலும். பெண்ணுருவின தல்லாமலும், அலியாகுமென்க. இப்படியாக வந்தவன் முன் வலத்தில் நின்று அவன் வந்த காரியத்தைச் சொல்லிக் கொண்டு பின் இடத்தில் வந்து நிற்கில், தாய் வயிற்றிலிருக்கிற பிள்ளை வருத்தப்பட்டுப் பின்பு பிறக்குமென்க. அன்றே-அசை. 14

கர்ப்பக்குறியும் போர் வெல்லும் குறியும்;

கிடக்கின்ற மைந்தனுஞ்சூ னியத்திற் கேடாப்;
 கெடாதிருவர் பொருவதுசூ னியத்தி லோத;

வடுக்கின்ற மொழியின் முதற் சொன்னோன் தோற்பன்;
 மருவியபூ ரணத்தின் பின்பு சொன்னோன் தோற்பன்;

நடக்கின்ற சுழுமுனையில் வேட்ட பேர்கள்
 நட்பாகும்; வலத்தியங்க நடப்போன் வெல்வன்:

இடத்தியங்கி ஐந்தடிபோ யெதிர்த்தோன் வெல்வன்;
 இருஞ்சுழுனை நிற்கிலிடரில்லை பாரே.

[இ—ள்] முன் கவியில் சூனியத்திற்கேட்ட பிள்ளை மரிக்குமென்றும் போர் வழக்கு வாதைக் குறித்து ஒருவன் வந்து இன்னவன் இன்னவன் எவன் வெல்வானென்றால் வந்தவன் சூனிய பக்ஷத்திலிருந்து சொன்னானாகில், முன் சொல்லப்பட்ட பெயரையுடையவன் தோற்பன். பூரணமாகில், பின்பு சொல்லப்பட்ட பெயரையுடையவன் தோற்பன், அப்போது சரம் பார்க்கிறவனுக்குச் சுழுமுனை நடந்தால், அவ்விருவரும் ஒருமித்துப் போவார். இதல்லாமலும், சண்டை வாது வழக்கு நேர்கிறவனுக்கு அப்போது சூரியகலையாயிருந்தால் வெல்வன்; சந்திரகலையாயிருக்கிறவன் தோற்பன். சுழுமுனையாகில். ஒருமித்துப் போவர். அப்படிச் சந்திரகலை நடக்கப்பெற்றவன் முன் 11-ஆங் கவியிற் சொல்லியபடி சரத்தை உள்ளிழுத்துப் பூரணமாக்கி அச்சரம் நடக்கிற காலையே முன்னிட்டு ஐந்தடி போய்ப் பின்பு நேர் நடந்தால் வெல்வன். 15

சரத்தின் ஸ்பரிசம்;

பார்க்குங்கா லிடமெனினும் வலமு மொக்கும்
 பஞ்சபூ தந்தியக்கம் பகருங் காலை

சாற்றியதன் டுடன்சேரிற் பிருதிவி யாகும்:
 தப்பாமல் அப்பினுக்குத் தாழ வோடும்.

மேற்றிசையை நோக்கியெழும் அங்கி வாயு
 மெய்யுணர்ந்தோர் புறத்தோடும் மேன்மை குன்று

நீர்த்தறையா நாற்றிசையுஞ் சிதறி யோடில்
 நெடுவானென் றுரைத்திடுநீ நிலத்துளோர்க்கே.

[இ-ள்] [இடைகலை பிங்கலை சுழுமுனை என்று சொல்லப்பட்ட இம் மூன்று கலைகளையும் இவற்றின் பயன்களனுபவத்தையும் பரீக்ஷித்துப்] பார்க்குங் காலத்தில் ஓத்துவரும் அந்தந்த நாடிகளுக்குள் பஞ்ச பூதியங்கள் நடப்பதுண்டு. அவற்றைத் தேர்ந்தறிந்து அநுபவிப்பதே அரியதாகும். யாதெனில் மூக்கிலிருந்து வருகிற சரம் அம்மூக்குத் தண்டைச் சார்ந்து வந்தால், பிருதிவியின் கூறென்றறிக; கீழ் நோக்கியோடில் அப்புவின் கூறென்றறிக; மேலாகப் பாய்ந்தால், தேயுவின் கூறென்றறிக; அத்தண்டிற்கு நேராகிய மற்றொரு புறத்தைச் சார்ந்து வீசினால் வாயுவின் கூறென்றறிக. இப்படி நான்கு பக்கங்களுள் ஒரு பக்கமல்லாமல் அந்நான்கு பக்கமும் கலந்து நடந்தால், அஃது ஆகாயத்தின் கூறென்றறிந்து, உலகத்துள்ளவர்களுக்குச் சொல்க. [இப்பஞ்ச பூதியம் இடத்திற்கும் வலத்திற்கும் ஒன்றுதான்.] 16

சரத்தின் வடிவமும் நிறமும் இரகசியமும்:

நிலம்பொன்மை யிரதநெடுங் கோண நான்காம்
　　நீளம்பன் னிருவிரலாம் நீர்தான் வெண்மை

இலகுபிறை வடிவுகண்டந் துவர்த்திருக்கும்
　　எட்டிரண்டு விரலோடு மெரிதான செம்மை

நலங்கொண்ட முக்கோணம் அழற்சி மேலாய்
　　நாலிரண்டு விரலோடு நளிர்கா னீலம்

துலங்குபுளி யறுகோண மொருபக்கத்தில்
　　துய்யநால் விரலோடுஞ் சொல்லுங் காலே.

[இ-ள்] பஞ்ச பூதிய சரம் நடப்பதை இன்னமெப்படிக் கண்டு தெளியலாமெனில், பிருதிவி சரம் பொன்மை: அப்புச்சரம் வெண்மை; தேயுச்சரம் செம்மை: வாயுச்சரம் கருமையாயிருக்கும் அப்போது கண்டத்தில் எவ்வித உணர்ச்சியாகுமெனில் பிருதிவிக்குக் கண்டந் தித்திக்கும்; அப்புவிற்குத் துவர்க்கும்; தேயுவுக்கு உவர்க்கும், அல்லது அழற்சியாயிருக்கும்: வாயுவுக்குப் புளிக்கும். எவ்வடிவாயிருக்குமெனில் பிருதிவி எண்கோணம்; அப்பு எட்டு நாள் பிறை போல இருக்கும். தேயு முக்கோணம்: வாயு அறுகோணம். அன்றியும், அவை ஓடுகின்ற நீட்சியைச் சொல்லுங்கால், பிருதிவி 12 அங்குலம்: அப்பு 16 அங்குலம்; தேயு 8 அங்குலம், வாயு 4 அங்குலமென்றறிக. இதல்லாமலும், இக்கவியில் இரதமென்று தனியே போட்டபடியினுல், முதல் இரசமாகவே வைத்துக் கொள்ளலாயிற்று. உலகத்தவருக்குச் சொல்லுங் காலத்தில் இப்பேதங்களை அவர்களறிவது அரியதென்று ஒரு பூதியத்திற்கு நான்கு குறி சொல்லியிருக்கின்ருர். ஒன்றில்லாவிட்டாலும் மற்றொன்றிலாவது தெரிய வேண்டும். 17

அப்பூதியம் நடக்கையில் செய்கருமங்களின் குணகுணம்:

சொல்லியவான் வடிவதுதான் வட்ட மாகும்.

　　[illegible]
ஒவ்வநிறம் படிகம்கைப் பிரதம் வாயும்
　　ஓடிவரும் பூதங்கட் குளதோ சொல்க:

மல்லல்நில நீர்க்குமிகு பயனுஞ் செந்தீ
மத்திமமாம் பகர்காலும் வானுந் தீதாம்:

பல்வளையாய்! சரம்பார்ப்போன் தன்னைப் போற்றிப்
பாசிலையென் றூதிட்டுப் பணிந்து பாரே.

[இ-ள்] பல வளையங்களைத் தரித்த கரத்தையுடைய பெண்ணே, ஆகாய பூதியம் நடக்கும்போது நிறம் படிகம்: இரசம் கண்டங்கசக்கும்; வடிவு வட்டம்: நீட்சி ஓரங்குலம், இப்படியாகப் பூதியங்களின் குணகுணங்களைச் சொல்லவெனில் பிரதிபிக்கும், அப்புவுக்கும் உத்தமம்; தேயு, மத்திமம்; வாயுவும் ஆகாசமும் தீதாம் சரம் பார்த்துக் குறி சொல்லுகிறவனுக்குத் தாம்பூலம் முதலானவைகள் கொடுத்து உபசாராதிகள் செய்து பின்பு கேள். 18

இஃது இங்ஙனம் நிற்க, முன் 7. 8-ஆம் கவியிற் சொல்லியபடி சூரிய சந்திரகலையிற் செய்ய வேண்டிய கருமங்களுக்கும் இக்கவியை அனுசரிக்க வேண்டும். 48, 49-ஆங் கவியைப் பார்க்க வேண்டும் அதிலும் சரம் பார்க்கிறவன் தாம்பூலந் தரித்துக்கொள்ளுகையில் வினவிக் கேட்கிறவனுக்குஞ் சொல்லுகிறவனுக்கும் நன்கு ஒருவன் பேரைக் குறித்து வினவில், அவனுக்குரியவைகளைக் கூறுகின்றார்:]

பாராகும் முதுகுநீர் கால தாகும்;
பைந்தழல்மா ரனிலங்கை படர்வான் சென்னி:

பேராமல் வினவினபோ துதித்த பூதம்
பேர்படைத்த இடங்களிலே பிழையில் லாமல்

ஏராகும் பூரணமாம் பக்கந் தன்னில்
ஏறிவெட்டுங் கோல்படுத்த லிசைந்த தெல்லாம்

கூராழி மால் வந்து விலக்கி னாலும்
குறையாமல் வடுப்படுங்காண் குறிக்குங் காலே.

[இ-ள்] முன் 15 ஆங் கவியிற் சொல்லியபடி இருவரைச் சுட்டிக் காட்டாமலும், சூனிய பக்கத்திலிராமலும், பூரண பக்கமாயிருந்து சண்டைக்குப் போகிறவன் என்னவானெனில் ஆயுதங்களினால் காயம்பட்டு வருவானென்று சொல்க; அதிலும் அப்போது பிருதிவி நடந்தால், முதுகில் படுமென்க அப்புவாகில், காலில்; தேயு, மார்பு: வாயு, கை; ஆகாயமாகில், தலையில் படுமெனச் சொல்க, விஷ்ணுதேவன் வந்து விலக்கினாலும் தப்பித்துக் கொண்டு வரமாட்ட ானென்க. 19

இந்த இந்தப் பூதியத்துக்கு இந்த இந்த ஆயுதம் எடுத்துப் போக இவ்விடத்தில் நிற்கவென்பது:

கால்மூலை தொடங்கியழல் மூலை யேறக்
கயிறெனவே கீறிமதி கதிரோ னாகிக்

கோல்மேற்குத் தெற்குவடக் கதனைக் கொள்க.
கொழுங்கதிரோன் கிழக்குவடக் காகக் கொள்க:

சேல்போலும் நெடுங்கண்ணுய்! புவிக்குக் கத்தி;
சேர்ந்தசலம் வாள், அழற்குச் சிலை: காலுக்கு

மேற்றண்டாம், வானுக்கா யுதங்கல். அந்த
அந்தநிலத் திற்பொருதல் வெற்றி யாமே.

[இ-ள்] சேல் மீன் போலும் கண்களையுடைய பெண்ணே, மேற்கூறிய படி சமர் செய்ய வேண்டிய வாயு மூலை தொடங்கி அக்கினி மூலையளவாக ஒரு கயிறு பிடித்தாற்போலச் சரியாய்ப் பாவனை செய்து, அதன் மேற்கையும் தெற்கையும் சந்திரன் கூருகவும், வடக்கையும் கிழக்கையும் சூரியன் கூருகவுங் கொண்டு, போர் செய்கிறவனுக்கு அப்போது சூரியகலை இயங்கில், தான் அச்சூரியன் திசையிற்றானே நின்று எதிரியைச் சந்திரன்றிசையில் நிறுத்திச் சமர் செய்ய வேண்டும். அப்படிச் செய்கையில் சந்திரனுலுஞ்சரி, சூரியனுலுஞ் சரி எடுத்தெறியும் ஆயுதங்கள் எவையெனில், பிருதிவியாகில் கத்தி; அப்புவாகில், வாள், தேயுவாகில், தண்டு, ஆகாயமாகில், கல், இப்படியாக அந்த ஆயுதங்களேந்தி, விதிப்படி அந்தந்த நிலத்தில் நின்று சண்டை செய்தால் வெற்றியடைவன். 20

நோய்க் குறி:

ஆகியநோய் புருடர்க்குப் புருடர் கேட்கில்
ஆறுமென்க மாதருக்கு மாதர் கேட்கில்;

சோகமிலிம் முறைதப்பிற் பொல்லா தென்க:
தொலையாது நாட்சென்று மீளு மென்க;

தோகை சில நாட்செலுநீர் கடுகு மீளும்:
சுடுதழல்நாள் மூன்று தப்பிற் றுஞ்சப் பண்ணும்:

ஏகிடுங்கா னிரண்டின் மிகுந்தாற் கொல்லும்;
எழில்வான மன்றுதப்பி லிறக்கும் பின்னே.

[இ-ள்] புருடன் கொண்ட பிணிக்காகப் புருடனே வந்து சரம் பார்க்கிறவனைக் கண்டு, 'இந்நோய் இலகுவாகுமா?' என வினவிலும் அந்நோய் இலகுவாகும். சரம் பார்க்கிறவனுக்கு வலப் பக்கத்தில் நின்று கேட்கிலும், நிவர்த்தியாகும். ஐயமில்லை, ஸ்திரீ கொண்ட நலிக்காக ஸ்திரீயே வந்து வினவினுலுங் குணமாகும். வந்தவள் அவனுக்கு இடப் பக்கத்தில் நின்று கேட்கில், மீளும். சந்தேகமில்லை [முன் பதின் மூன்றுங் கவியிற் சொல்லியபடி சூனிய பக்கமாகவே இருந்தாலுமுத்தமம் ] இப்படியல்லாமல், ஆணுக்குப் பெண் வந்தாலும் பெண்ணுக்கு ஆண் வந்தாலும் அவ்வியாதி தீர்வது துர்லபம், அன்றியும், ஒருவன் வலப்பக்கத்தினின்று குறி கேட்டுக் கொண்டே இடப்பக்கத்தில் வந்து நின்றாலும், ஒருத்தி இடப் பக்கத்தினின்று குறி கேட்டுக் கொண்டே வலப்பக்கத்தில் வந்து நின்றாலும், நோய் போக்குக் கடினம் ஆயினும், மெல்லென நாட்சென்று சொஸ்தப்படும். அப்படிஅப்படியே சரியாய் வந்து கேட்கில், அவன் நோய் நீங்குமென்க, அதிலும் 'எப்போது தீரும்?' எனில், அந்நேரம் பூதம் பிருதிவிடாகில், சில நாட்செல்லுமென்க; அப்புவாகில், விரைவிலென்க: அக்கினியாகில், மூன்று நாட்களில் விமோசனமென்க; மிகுந்தாற் கொல்

லும், வானமாகில், அன்றைக்கே நோய் பிரிந்து காணும்: மிஞ்சில், மறு நாள், மரிக்குமென்க. 21

[இதன் முன் கவியிற் சொல்லிய இயல்பும் அதன் மேற்கவிகளிற் செப்பிய பூதியங்களின் குணமும், முன் 9-ஆம் கவியிற் கூறியபடி சரம் பார்க்கிற வன் ஓரிடத்துக்குப் போக வேண்டுவது இத்தருணமென்பதும், பேச வேண்டுவது இத்தருணமென்பதுங் கூறுகின்றார்:]

இறக்குமுப யந்தனக் கைந்து நாளில்
ஏகினக்காற் சாவில்லை யிதுவுண் மையே;

பிறக்குமொரு பூதத்தி லைந்து பூதம்
பிரிந்தோடு மதுவுடனே பேசக் கேட்டுச்

சிறப்புடைய பயனறிவ தெல்லாம் நூலின்
செயலதனுல் தேவர்களுந் தெரிய மாட்டார்:

நிறக்கு மதிக் கிருந்தழைத்தால் வந்து கேட்டால்
நீள்வெயிலாச் செல்சொல்க நினைந்து கேளே.

[இ-ள்.] இதற்கு முன் கவியிற் கூறிய பூதியங்களின் இயற்கையாகிய குணங்களுக்குரியவை சொல்லக் கூடாது. அதற்கு முன் 10-ஆங் கவியிற் சொல்லியபடி சுழுமுனை நடக்கில், ஆகுமென்பது ஆகாது. ஆகாதென்பது ஆகும். அதுபோல இப்போதும் ஒருவன் நோயைக் குறித்துக் கேட்கும் போது சுழுமுனை நடந்தால் அந்நோயாளி ஐந்து தினங்களுள் மரிப்பன். அப்படி மரிக்காமல் தப்பினுல், அவனுக்கினி ஒரு விபத்து வருமளவுஞ் சாகான் இது மெய்ம்மை அன்றியும். முன் 4-ஆங் கவியிற் சொல்லிய வண்ணம் ஒரு பக்கமோடுகிற சரத்தில் ஐந்த வகைப்பட்ட பூதியங்களுண்டு. அப்பூதியம் ஒவ்வொன்றிற்குள் ஐந்து பிரிந்து நடப்பனவுண்டு அவை எவையெனில், பிருதிவியிற் பிருதிவி, பிருதிவியிலப்பு, பிருதிவியிற்றேயு, பிருதிவியில் வாயு பிருதிவியில் ஆகாயம், இப்படி இவ்வைந்துக்குள் ஐந்தாயோடும். இதனையும் மற்றிந்நூற்பயன் யாவையும் குரு முகாந்தரத்திலறிந்து கொள்வதல்லால் தேவர்களேயானுலும், தனியே சுருதியைக் கொண்டு குருவைத் தள்ளிச் சுயானுபவத்தால் இந்நூலைக் கொண்டே அறிவது கூடாது. அல்லாமலும், சரம் பார்க்கிறவனை ஒருவன் வந்தழைத்தால், அவன் சூரியகலை யியங்கும் போதே போக வேண்டும். பேசுவதானு லும், சூரியன் இயங்கும்போதே பேச வேண்டும். மற்றப்படி கூடாது, மிஞ்சி நடக்கில், மத்திமமென்றறிக, இன்னமுஞ் சொல்லுகிறேன்; மனம் உவந்து கேள். 22

முன் 16-ஆம் கவியில் சொல்லிய பூதிய சரங்களின் இயல்பு:

கேளிதனை நிலநீருங் குணமே யாகும்;
கெர்ப்பமெனி லாணுகுங் கிளர்ந்தா ராயின்

நாளின்மிகு லாபங்கள் சாந்தி போக்கு
தனருகு மங்கிதனி லரங்கம் வெல்லும்;

வாளமரிற் பொல்லாது; கெர்ப்பங் கேடாம்:
வாயுவெனிற் பெண்ணாகும் மற்போர் தோற்கும்:

நீள்விசும்பில் தனுவித்தை யோகந் தானும்
நீடுமிக கொட்டமெனில் அலியாய் வீயும்.

[இ-ள்.] பெண்ணே, கருத்துற்றுக் கேட்பாயாக; முன் 6-ஆங் கவியிற் சொல்லிய பூதிய சரங்களினிபல்பு கூறுமிடத்தில், பிருதிவியும் அப்புவும் நன்மைகளை தருவன இதன்பின் 33-ஆங் கவியிற் சொல்லியபடி ஐந்து நாழிகைக்கு மிஞ்சி நடக்கையில் இவ்விரண்டு பூதயங்கள் அதிகமாக நடந்தால், இலாபமுண்டு வேண்டில் 18-ஆங் கவியையும் பார்க்க, சதிங்கனம் நிற்க, முன் 14-ஆங் கவியிற் சொல்லியபடி ஒரு பிராணியைக் கைப் பற்றாமலும் அதன் மேலூர்ந்து நில்லாமலுந் தனித்து வந்து சூனியத்தில் நிலவாமல் பூரணத்தில் நின்று, கெர்ப்பக் குறி கேட்டால், அப்போது சரம் பிருதிவியாவது அப்புவாவது நடந்தால், ஆண்பிள்ளை பிறக்குமென்க 6-ஆம் கவியிற் சொல்லியபடி சாந்தி பண்ணுதல், போக்குக் கழித்தல் செய்ய வேண்டும். அங்ஙனஞ் சொல்லிய கலையில் இவ்விரண்டு பூதங்களில் ஏதாவது நடக்கும்போது செய்தால், பலிக்கும். இதன்றித் தேயு பூதியம் நடக்கையில் போரரங்கம் புரியில் வெல்லும். அப்போரில் வாளெடுத்தால் மத்திமமாம். அப்போது கெர்ப்பத்தைக் கேட்டால், அஃது அழிந்து போகும். வாயு நடக்கையிற் கெர்ப்பம் பெண்ணாமென்க; மற்போர் தோல்வியடையும். ஆகாயமாகில், விற்சமர் ஜெயிக்கும். இப்போரிலக் கணஞ் செப்பிய 20. ஆங் கவியையும் 18-ஆங் கவியையும் 10-ஆங் கவியையும் பார்க்க. 9-ஆங் கவியிற் சொல்லிய யோகம் புரிய நன்மை. ஆகாயச் சரம் நடக்கையில் கெர்ப்பங் கேட்டால், அலியாய்ப் பிறக்கும்; பிறந்து மிறக்கும் என்க. 23

[திதி வார நட்சத்திர காலசர பலன் முன் 4-ஆங் கவியிலும் 35-ஆங் கவியிலுஞ் சொல்லியபடி பிராதக் காலத்தில் சரம் பார்க்க வேண்டிய கிரமத்தில் விசேஷமாய்ப் பார்க்க வேண்டுவது;]

வீயாத பிரதமை முன் விளங்கும் பக்கம்
விரவிவரும் முப்பதினும் மும்மூன் றாக

மாயாது வருஞ்சோமன் இடமதாக
வருகின்ற அருக்கனுக்கும் வலமதாகச்

சாயாது புதன்வெள்ளி திங்கள் மூன்றுந்
தப்பாது சந்திரனுஞ் சாற்றுங் காலை;

தேயாது கதிர்செவ்வாய் சனிவியாழன்
செங்கதிரோன் தினமென்று தேறு நீயே.

[இ-ள்.] முன் 4-ஆங் கவியிலும் பின் 35-ஆங் கவியிலுஞ் சொல்லியபடி பிராதக்காலத்தில் சரம் பார்க்க வேண்டிய கிரமத்திலும் விசேடமாய்ப்

பார்க்கவேண்டுவதெதுவெனில், பொழுது விடிய 5 நாழிகை இருக்கையில் எழுந்து, மேல் 4-ஆங் கவியிற் சொல்லியபடி சரம் பார்க்கும்போது வளர்ப்பிறைப் பிரதமைக்கும் துவிதியைக்குந் திரிதியைக்கும் சந்திர கலை யுதித்து நடக்கவேண்டும். இப்படி இம்மூந்நான்கு பன்னிரண்டும் போக, தேய் பிறையில் பிரதமைக்குந் துவிதியைக்குந் திரிதியைக்குஞ் சூரியகலை உதித்து நடக்கவேண்டும். பொழுது விடிய 5 நாழிகை இருக்கையிலுதித்த சரம், மற்றஐந்து நாழிகையுங் கலங்காது ஓடவேண்டும். திதியாகவாரங் களிலெவை நிகழவேண்டுமெனில் ஞாயிற்றுக்குஞ் செவ்வாய்க்குஞ் சனிக்கும் வியாழத்திற்கும் சூரியகலை உதித்தோட வேண்டும் திங்களுக்கும் புதனுக்கும் வெள்ளிக்குஞ் சந்திரனுதித்தோட வேண்டும். இப்படி உதிக்குஞ்சரம், எந்தப் பூதியத்தில் உதிக்க வேண்டுமெனில், பின் 45-ஆங் கவியைப் பார்க்க வேண்டும் இதில் பூதியங்கள் அதிகமாய்க் கதித்தோடில், பயன்கள் என்ன வாமெனில் முன் 23-ஆங் கவியிற்றெரியும். அன்றியும், இதன் விவரம் 33-ஆங் கவியிற் காண்க. 24

[நட்சத்திரங்களுக்கு நடக்கவேண்டிய காலசரம் இதன் மேற் கவியிற் கூறிய வாரங்களுக்குரியனவாகிச் சரிவரில் இடரில்லை; பிழைக்கில், இன்ன இன்ன நிகழும் என்பது;]

தேறிடுநீ யொன்பதுநாள் பூர மாதி
சிறந்தரோ கிணிசதய முத்திரட் டாதி

கூறிடுஞ்செங் கதிரோனு ளாகக் கொள்க;
கூறுநாள் அடையமதிக் கென்று கொள்க;

வீறிடுஞ்செங் கதிர் பிழைக்கி னேய்கா ரிக்கு
மிடித்திடுமண்டலஞ் செய்யும் வெம்போர் சாவாய்

பாறிடும்பொன் பிழைக்கின் மன்னர் கேடாம் புந்தி
பதிக்கதிபன் கேடுமிந்து கிளைஞர் போக்கே.

[இ-ள்] பெண்ணே, திதி வாரமென்று இரண்டு வேறுபாடாய்க் கூறிற்றென்று தயங்க வேண்டுவதில்லை. விவரம், மேற்கவிகளிற் றானே சொல்லியிருப்பதனைக் காண்க. இவ்விரண்டினுள் கீழ்வரும் நட்சத்திர பலனாகிய மூன்றனுள்ளும் ஏதேது கஷ்டமோ அதிலும் ஏதேது இஷ்டமோ அதிலும் தெரிந்து வீக்கந்தூக்கம் நோக்கிப் பார்ட்டதென்று காண்க. கண்டுதேறியிரு, அந்நட்சத்திரங் களுக்கு நடக்க வேண்டிய காலசரம் ஏதெனில். பூரம் உத்திரம் அஸ்தம், சித்திரை, ஸ்வாதி, விசாகம், அனுஷம், கேட்டை, மூலம், உரோகிணி, சதயம், உத்திரட்டாதி இப்பன்னிரண்டிலுஞ் சூரியன் நடக்க வேண்டு மெனக் கொள்க. மற்றப் பதினைந்திலுஞ் சந்திரன் நடக்க வேண்டும். அல்லாமலும், மேற்கவியிற் கூறிய வாரங்களுக்குரியனவாகிய காலசரங் களில் ஞாயிறு தப்பினால் வியாதி; சனி வறுமை; செவ்வாய், சண்டை, சாவு; வியாழன்: தன் மன்னனுக்குக் கேடாம்: புதன், அவ்வூரதிகாரிக்குக் கேடு; திங்கள், சுற்றத்தாருக்குக் கேடு வரும் [தன்மன்னனென்பதும் அவ்வூரனென்பதும், சரம் பார்ப்பவனுக்குரியனவாம்.] வெள்ளியின் பலன்

கவியிற் காண்க. சனி, வறுமையுடன் தன் கையிலிருப்பதும் போகும். பொன் பிறைக்கில் மன்னர் கேடாம் என்பதில், தன் தாதாவிற்கு வருத்தம் வரில் தனக்கு எப்படிப் பொருள் வரும்? வராது. பதிக்கதிபன் கெடுமென் பதில், அவனிவனால் பறிகொடுக்கப் பட்டானென வரும். 25

[இதில் மேற்கவியிற் கூறுத வெள்ளி பிறைக்கில் நிகழ்வன இவையென வும், மற்றதன் மேற்கூறிய திதி பிறைக்கில் நிகழ்வன இவையெனவுங் கூறு கின்றார்:]

போக்கரிய புகர் பிறைக்கில் ஊர்விட் டேகல்
பொருந்தியதோர் மெய்ந்நோதல் புணர்ந்தோர் சாதல்

ஆக்கமதி லிடராம்மூற் பக்கந் தன்னில்
அருங்கலகம் இரண்டாகில் அர்த்த நாசம்;

ஊக்கமுடன் மூன்றதனிற் போக்குண் டாகும்
உரைத்தநான் கிற்கிளை ஞர்க் குறுநோ யுண்டாம்;

தேக்கியவைந் திற்றேச மலையும்; ஆறிற்
செகத்தரசன் கெடும்ஏழிற்; சேரும் நோவே,

[இ-ள்,] வெள்ளி தப்பில், தான் வசிக்கும் பதியை விட்டு ஒழிந்து போதலாகவேனும், அவ்வெல்லையை விட்டு மற்றொரு எல்லையைப் போய் மிதிப்பதாக வேனும் வரும், தேக நலி வரும். தன் மனைவிக்குச் சாவு வரும். [சாவென்பதில் சண்டை பிணக்கு நோய் முதலிய வருத்தமாதலையும் சகிபதிகளுக்குப் பொருத்தம் போதலையுங் காண்க.] நூலாசிரியர் புணர்ந் தோர் காதலென்றும் சாமுடி வரைக்கும் வருத்தம் வருமென்றுந் துணிந்து கூறினமையால், நன்மையே தவறுக, அட்டமாசித்தி மட்டும் பெருகு மென்ற கருத்தக்கண்டு இதன் மேற்கவியில் கூறியது காண்க. மற்றதனிற் சொல்லியபடி ஊருக்கும் மன்னனுக்கும் அதிகாரிக்கும் வந்தாலும் வரும், இதன்றி, வளர்பிறைக் காலத்தில் பிரதமை தப்பில், யாதேனுமிடர் வரு வது துவிதியை, கலகம்; திரிதியை, பொருட் சேதம்; சதுர்த்தி, போக் குண்டாகும் [சகலவித நஷ்டத்துக்குங் காண்க.] பஞ்சமி. பந்துக்களுக்கு வியாதி; சஷ்டி. அத்தேசத்தாருக்கும் அரசனுக்கும் வருத்தம்: சப்தமி. நலி அரசனுக்குந் தேசத்தாருக்குமேயுண்டு. தனக்கில்லையென்று ஏமாறியிருத்தல் கூடாது. தன்னாலே அவர்களுக்கு வருத்தம் வந்ததன்று அவதூறானபொச்சாப்பினாலாவது தான் வருத்தப்பட வருமென்ற விவரம் மேற்கவியிற்றானே செப்பியிருப்பதனைக் காண்க 26

திதி பிறைக்கில் நிகழ்வன இவையென்பதும்
சந்திர சூரியர் இயல்பும்;

நோவுடனே சாவாமெட்டாகில்; மற்றை
நுவலாத பக்கமுமிம் முறையே கொள்க;



தாவில்வெங் கதிரதனின் மதிய முண்டாஞ்
சந்திரனுள் வெங்கதிருந் தப்பா துண்டாம்;

ஓவரிய இவர்களையே உணரும் போதில்
உற்றசரங் குருமுகத்தா லுணர்ந்து கொள்க;

தேவர்பிரா னுரைத்தருள உமையாள் கேட்ட
செவ்வியிதன் முறைமைதனைத் தெளிந்து தேறே.

[இ-ள்.] அஷ்டமி பிழைக்கில், நோவுஞ் சாவும் வரும். வளர்பிறை இங்ஙனமிருக்கத் தேய் பிறைக்கும் இம்முறையே கொள்வது. இதல்லாமலும் சூரியனுக்குள் சந்திரனும் சந்திரனுக்குள் சூரியனும் ஒன்றுக்கொன்று கரந்து தோன்றுவது முண்டாம், உமையவளே தன் சுயவல்லமையினால் தெரிந்து கொள்ள வல்லமையற்றவளாய் பின் சங்கரனருளினால் தெரிந்து கொள்ளத் தக்க சிறப்பினதாகில் இந்நூலை யார்தான் தம் மாற்றாமே தெரிந்து கொள்வர்? தெரிந்து கொள்ள மாட்டார். ஆதலால், குருவருளாற்றெளிக. 27

[மேற்கவிகளிற் கூறிய சரம் பிழைக்கில், இடர் வரும்; வந்தாலும், அதற்கு உபசாந்தம் கூறுகின்றார்;]

தெளிகதிர்செய் மூன்றடியாந் தெற்கு மந்தன்
செம்பொன் மூன் றடி மேற்குத் திங்கள் வெள்ளி

இளகியநா லடிவடக்குப் புந்தி முன்போல்
இரட்டையடி கிழக்கிரவி யெழுதல் முன்னே.

வளமுடனே பூரணபக் கத்திற் சென்று
வந்திருந்து நமைநினைந்து வழுத்தல் செய்தே

உளமகிழ்ந்து போகிலெல்லாம் பலிக்குந் துன்பம்
உண்டாகா தவையனைத்தும் உணர்ந்து தேறே.

[இ-ள்] பெண்ணே, மேற்கவியிற் சொல்லியபடி காலசரஞ் சரிப்பட்டு வருமோ, வராதோ! ஊழ்வினைப்படிக்கல்லவோ நடக்கும்! அதை நம்முடைய வசமாக்கல் இலேசோ! எனத் தளர்வுற்றிருக்க வேண்டுவதில்லை, சரம் பார்க்கிறவன் முன் கவிகளிற் சொல்லியபடி பிராதக் காலத்தில் அருணோதயத்திற்றுன் முன்னெழுந்து, ஞாயிறு செவ்வாய்க் கிழமைகளுக்குத் தென்புறமாய் மூன்றடி மண் 11-ஆங் கவியிற் சொல்லியபடி சரத்தைப் பூரணமாக்கி அக்காலையே முன்னிட்டுக் கொண்டு போகவும்; திங்கள், வெள்ளிக்கு நாலடி வடக்கே போகவும், புதனுக்கு இரண்டடி கிழக்கே போகவும்; இப்படியாகப் போய் வந்து, ஒரு திவ்யமாகிய ஆதனத்திலிருந்து, என்னை நினைத்துத் துதி செய்து. பின்னெழுந்து எங்கே சென்றாலும் அல்லது எங்கேயிருந்தாலும், முன்கவிகளிற் கூறிய துன்பங்களுள் யாதும் அடராது. 28

[இதில் மேற்கவிகளிற் கூறிய ஒரு வாரத்திற்குச் சரந்தப்பில் இன்னின்ன யாதமெனவும், ஏழு நாட்களுஞ் சாவரில் இன்னவையாம் எனவுங் கூறுகின்றார்;]

தேறுநீ யிவையெலாஞ் செவ்வி தாகச்
செங்கதிரோன் தன்னுளிற் றிங்க ளோடி

மாறிவருங் கதிரவனுஞ் சோம நாளில்
மறிந்தோடி வருங்கிழமை யேழு மாறிற்

கூறுபட வுடலுயிர்விட்டேகு மென்க;
குணமாகு மிக்கிழமை கோணு தோடில்;

சிறிவருங் காலனையும் செயிப்பர் மற்றச்
சித்தயோ கத்து நிலை சித்தி யாமே!

[இ-ள்.] இவையெல்லாந் தேர்ந்தறி. சூரியன் நடக்க வேண்டிய நாளிற் சந்திரன் நடந்து, சந்திரன் நடக்க வேண்டிய நாளிற் சூரியன் நடந்து, இப்படியாக மாறுபட்டு, ஒரு வாரம் முழுதும் நடந்தால், மரித்துப் போவன். அப்படி யல்லாமல், கிழமை ஏழுந் தவறாமல், மேற் கண்ட நாழிகையுங் கோணாமல், திக்கு நோக்கிச் செல்வதுடன் பிராணாயாமமும் மாறாமல் நிகழ்ந்து வருமாகில், இயமன் அடரான்; பிராணனுக்கழிவில்லை; சீவன் முத்தனாய் வாழ்ந்திருப்பன்; அஷ்டமாசித்தியும் அவனுக்குச் சித்திக்கும். 29

குறி சொல்லும் மார்க்கம்:

சித்தமுட னிரேசகத்தில் வந்து கேட்டாற்
செப்பியவப் பொருள்களெல்லாந் தீதே யாகும்;

உத்தமமாம் பூரகத்தில் வந்து கேட்டால்
உரைத்தபொருள் அத்தனையும் உண்மையாகும்;

மெய்த்தியகும் பகத்துரைக்கில் நன்றேயாகும்
வேண்டாரை ரேசகத்தில் விளியப் பார்க்க.

வைத்தமலம் வாயுநீர் கழிபோ தென்னின்
மாற்றலர் தாங் கெடுவரிது மாறி லாதே.

[இ-ள்.] சரம்பார்க்கிறவன் ரேசகஞ் செய்போதில் வந்து கேட்டால், கெட்ட காரியஞ் சித்தியாது; பூரகத்திலென்னில், நன்மை; அவன் சொல்லுகிறது முண்மையாயிருக்கும் கும்பகஞ் செய் காலத்திலாகில், நற்காரியம் சித்திக்கும். மலம், சலம், வாயு கழியும் போதானால், பகைவர் கெட்டுப் போவர். இன்னம் இதற்கு விவரம் குரு முகாந்தரத்திற்றெரிந்து கொள்ள வேண்டும். அல்லாமற்றெரியாது. 30

சனி வியாழன் பலன்:



மாறிவளர் கும்பக்கங் குறையும் பக்கம்
மதிநாடி கதிர்நாடி வளர்பொன் னேடிற்

பேறுமிக வுண்டாகும் பிராண னிற்கும்
பின்புரைத்த காரியங்க ளெல்லா மேழாய்க்

கூறுகின்ற சனிநாளிற் பகலி ராவிற்
குலவுசரம் வலமிடத்திற் கோணு தோடின்

நாறுமலர்ப் பெருந்திருவே! சொன்னே மிந்த
ஞாலமெங்கும் புகழ்பெறவே நடக்கு மென்றே.

[இ-ள்] மணமலரைச் சூடிய பெருந்திருவனையவளே, வளர்பிறை வியாழத்திற் தச் சந்திரனும் தேய்பிறை வியாழனுக்குச் சூரியனும் தப்பாமல் நடந்து கொண்டு வந்தால், சிறந்த பேறுண்டாகும், ஜீவன் முத்தனுய்த் தளர்வின்றி வாழ்வான். இதல்லாமல், சனிக்கிழமைக்கு இரவிலும் பகலிலும் சந்திர சூரிய சரங்கள் மாறுபாடில்லாமல் நடக்க வேண்டும். நடந்தால் இவ்வுலகமெங்கும் மெச்சத்தக்க கீர்த்தி வந்துறும். மற்றும் மூன் கால சரஞ் சொல்லிய கவியை நோக்க வேண்டும். 31

குறி சொல்லும் மார்க்கம்

நடப்புடைய ஒருவனெங்கென் றொருவன் கேட்கில்
நானிலத்தில் அகத்திருப்பன்; நன்னீர் முற்றம்;

அடக்குமழு வாகிலுள்ளூர்; வாயு வேற்றூர்;
அம்பரமேல் மலையேறத் துயில லாகும்;

விடப்போனன் புவிக்குநிலே; நீர்க்கு மீண்டான்;
வெவ்வழற்கு வருகின்றான்; வெயில்கா லுக்கு

மடற்குழலாய்! ஊர்வந்தான்; வான மாகில்
வருவனொரு நாழிகையில் மாறி லாளே!

[இ-ள்] மடற்குழலாய், மாறுபாடில்லாதவளே, ஒருவன் வந்து, 'இன்னனெங்கே யிருக்கிறான்?' எனில் அப்போது சரம் பிருதிவியாகில், வீட்டுக்குள்ளிருக்கிறான்; அப்புவாகில், முற்றத்திலிருக்கிறான்; தேயுவாகில், அக்கிராமத்தெல்லைக்குள்ளேதானேயிருக்கிறான்; வாயுவாகில், எல்லைக்கப் புறப்பட்டான்; ஆகாயமாகில், மலையேறுகிறான் அல்லது தூங்குகின்றான் என்று சொல்ல வேண்டும் இது விடப் புறத்தேசம் போனவனைக் குறித்துக் கேட்டபோது பூதியமைந்தில் முதலாகில், அவ்வூரிலேதானே நிலையாயிருக்கிறான்; இரண்டாகில் திரும்பி வருகிறான்; மூன்றாகில் திரும்பினவன் நில்லாமல் நடந்து வருகிறான்; நான்காகில், அவனிருக்குமூருக்குள் வந்தான்; ஐந்தாகில் ஒரு நாழிகைக்குள் வந்து வீடு சேர்வானென்று சொல்ல வேண்டும். 32

இச்சரம் மனத்துடன் லயப்பட்டால் இன்னவையாமென்பது:

மாறிவரு வாயுமனே வலயந் தன்னில்
மயக்கவுயிர் சித்திநிற்க அதுதா னிற்கும்;

கூறுசம யங்கூற்றுற் பயமு மில்லை;
குறித்திருமண் ஒன்றரைநா ழிகையாகக் கொள்க;

தேறுபுனற் கொன்றேகால்; வன்னிக் கொன்று;
சிவன் முக்கால் வானமரை சிறந்த நாடி.

பாறுமைந்து நாழிகைக்குள் வரினற் குன்றிற்
பழுதுபடு முடம்பிலிது பற்றிப் பாரே.

[இ-ள்.] இடப்பக்கத்திலும் வலப்பக்கத்திலும் ஒன்றை விட்டொன்று மாறி மாறி நடக்கும் இச்சரமானது, தேகத்தினூடே லயப்பட்டுப் போகுமேயானால், பிராணனுக்கழிவில்லை. அப்படி லயப்பட்டு நிற்கில், மன முதலிய அந்தக் கரணங்களுக்கும் வேலையில்லை. அவை அசைவற்றிருப்பனவாகும். பின்பு மற்றெச்சமயத்தாராலும் பயமில்லை; யமனாலும் பயமில்லை; முன் சொன்னபடி இடப்பக்கமும் வலப்பக்கமும் மாறியோடுஞ் சரம் ஒவ்வொரு பக்கத்தில் எந்நேரந்தரித்து நடக்குமென்னில், ஐந்து நாழிகையாம் அதிலும் பூதியங்களின் கூறுக்கெவ்வாறு பகுப்பதெனில், மணணில் ஒன்றரை நாழிகையும், நீரில் ஒன்றேகாலும், நெருப்பில் ஒன்றும், காற்றில் முக்காலும், வெளியில் அரையும் ஆக நிறைந்தோடும். இப்படியாகிய பூதியங்கள் கூறுகொண்ட ஐந்து கடிகைகளும் ஒவ்வொரு பக்கத்திற்குச் சரியாய்ச் சிதையாதோடவேணடும் இதைவிடக் குறைந்தாலும் வளர்ந்தாலும் தேகநலியாம். சரம் லயப்படும் வழி தேட வேண்டும், தேடில், முன் கண்ட பயனுண்டாம் இல்லையேல் நாடியொன்றுக்கு ஐந்து நாழிகை பூதியங்களினளவே சிதருமல் நடப்பிக்க வேண்டும். அதுவுமின்றெனில் தேக நலியே வரும். 33

தத்தம் வாழ்நாட் பிரமாணமறியும் அயன சங்கற்பம்:

பற்றினுஞ் சொன்னபடி அயனம் முன்னுட
பாலொருபோ துண்டுபரி சுத்தனுகி

மற்றைநா ளுத்தரமாம் அயனந் தன்னில்
மாறியிடந் தனிலோடும் வலந்தெதற் காகும்;

பெற்றதொரு நாழிகைதா னைந்து நூறும்
பெறுங்கடிகை தனிற்குறையிற் பிராண நாசம்;

உற்றொருமா நாழிகைக்கோ ராண்டு காழும்;
உமையே! நான் சொன்ன கணக் குண்மை தானே.

[இ-ள்.] 'சரம் பார்க்கிறவனுக்குச் சென்ற நாட்கள் போக, மற்றும் நின்ற நாட்கள் எவ்வளவோ?' என்னுங் கருத்துக்கொண்டு பார்த்துத் தெளியுமாறு யாதெனில், அயன சரமாம். அதனைப் பார்ப்பது எவ்வாறெனில் தைம்மாத முதற்றேதியில் உத்திராயணகாலம்; ஆடிமாத முதற்றேதி முதல் தக்ஷிணாயன காலம்; இவ்வயன காலத்திற் முன்னுள் பகலில் ஒரு

பொழுதன்னமுண்டு தத்துவங்களைப் பரிசுத்தமாக்கித் தேகம் மெலிவதனால் மனத்துக்கும் மற்ற வாயுவாதி காரணங்களுக்கும் வருமிடை யூற்றினை ஒருவி, தைம்மாதமுதற்றேதியில் சொமூ விடிய ஐந்து நாழிகையிருக்கை யில் பார்க்கும்போது சரம் வரும். திதி நட்சத்திரங்களைத் தள்ளி இடப் பக்கத்திலுதித்த முன் கவிகளிற் சொல்லியபடி ஐந்து நாழிகைகளுஞ் சிதறு மல் ஓடுவதனைப் பார்க்க வேண்டும். இது போக, ஆடி மாத முதற்றேதி யில் இதே பிரகாரமாய்ப் பார்க்க வேண்டும் அப்போது சரம் வலப்பக் கத்திலோடும். அப்படியோடிய சரம் முற்கூறிய வண்ணம் ஐந்து நாழி கைகளுஞ் சிதறு மலோடினால் சரம் பார்க்கிறவன் தான் செய்யும் பிராணு யாமவுதவியினால் அன்று தொட்டு வரும் நூறு வருஷ காலம் வாழ்ந்திருப் பான். இதுவன்றிக் குறைந்தால், அவ்வைந்து நாழிகையை நாற்ருருமா ஐந்தாக நூருக்கிக் குறைந்த நாழிகை ஒரு மாவோ, இரண்டு மாவோ, அல்லது அதை மேற்றேகைப்பட்டவையோ, அதற்கு ஒவ்வொரு வருஷத் தைக் கூட்டிப்பார்த்து, குறைந்த ஒவ்வொரு மா நாழிகையின்மேல் கணக் காக்கிக் கொள்ள வேண்டும். முழுவதுமே தப்பிச் சரம் இடத்திற்கு வல மாகவும் வலத்திற்கு இடமாகவும் ஓடினால், அவனுக்கு க்ஷீணகால மென்றறிக. 34

## போசன விதி:

உண்பவனுக் சப்புவிட மதிக்கு வெய்ய
உவர்த்தல்நகைத் தல்நகர்த்த லுண்க முன்னே

பண்பயில்செங் கதிர்க்கு நெய்பால் புளித்தல் கன்னல்
பாகுடனே துவர்த்தலமு னுண்டு பார்க்க

நண்பனம வயிற்க்குச் சோறு பாதி
நன்னீர்கால காற்றுக்கா லாக நல்கிக்

கண்பயின டிகள்சுத்தி பண்ணித் தூபங்
காட்டடிமலர் சூட்டியிருள் கழியுங் காலே

[இ-ள்.] முன் கவியிற்சொல்லியபடி சரம் பார்க்கிறவன் சூரியகலை யியங்கி வருகிற மட்டும் போஜனமில்லாமல் மற்றதனுக்காகக் காக்க வேண்டுவதில்லை; சந்திரன் நடக்கும் போதுஞ் சாப்பிடலாம். எப்படி யெனில் உஷ்ணமான பண்டங்களும், உப்பு, கசப்பு, காரமாகிய பண்டங் களும் வைத்துக்கொண்டு தாகபானத்தை நிறுத்தியுண்ண வேண்டும். சொல் லியபடியே சூரியன் நடக்கில் நெய், பால், புளித்தல், தித்தித்தல், துவர்த்தலாகிய பண்டங்களுடனே சாப்பிடலாம் தாகபானம் அப்போதே செய்யலாம். சந்திரனுக்கு அப்போது கூடாதாயினும், பின்பு சூரியன் நடக்கில் சாப்பிட வேண்டும். இது மாறினாலும், ஆத்திரத்தினாலும் அவா வினாலுஞ் சூரியனுக்காகக் காத்திராமல் அடுத்தடுத்துச் சந்திரனிற்றானே தின்று கொண்டு வந்தாலும் நலியாப் இப்படியாகச் சாப்பிடுகிறதாயி னும், அவ்வுணவு வயிற்றுக்குப் பாதிதானாகும்; மிஞ்சலாகாது. மற்றப் பாதிக்குச் சலம் காலாகக் கொள்ள வேண்டும்; கொண்டு தசநாடிகளையும் பிராணனையும் ........ சுத்தி செய்து, ........ சித்தனைச் சரம் பார்க்க வேண்டும். 35

சரத்தை ஏறவொட்டாமலும் குறையவொட்டாமலும்
தன் வசப்படுத்திக்கொள்ளும் மார்க்கம்:

கால்கொண்டு கணக்கறிபவார்க் கியாதுந் தப்பா;
கருதியவெல் லாமுடியுங் காண்போர்க் கெல்லாம்;

மேல்கொண்ட புவியுடனே அப்பு வன்னி:
விளங்கியகால் வானமுடன் வினவு வார்க்குப்

பால்கொண்ட மொழியாளே! பவனங் கட்டிப்
பற்றியவா ருதாரம் பரிசு பார்த்துச்

சால்கின்ற முதல்நாடி தன்னுள் நின்ற
தபனன்மதி செந்தழலாந் தன்மை பாரே.

[இ-ள்] பால்போலும் இனிய சொல்லையுடைய பெண்ணே, சரம் பார்க்கிறவனுக்கு அனுபவம் இரநூற் சொல்லிபடி வருமோ? மற்றவ் விதிப்படி பிறழாது பிராணாயாம முறைமையும் வந்தொத்துக் கொள்ளுமோ? மிகினும் குறைவாயினும் நோய் செய்யுமோ? எளிதிற் சரிப்பட வாராதோ? வாராதெனில், தானெப்படி நன்கடைவன்? என வினவுவார்களுக்கு அவ்வாறாய் நன்றெனவும் தீதெனவும் ஊழறிந்தெடுத்தோதுவன் என்று ஐயுற வேண்டுவதில்லை. சரம் பார்ப்பான் பரம்பார்ப்பானென்பது போலச் சரத்தை நக் கணக்கின்படி யறிந்து பார்க்கிறவனுக்கு எந்தக் காரியமானாலுந் தப்பிப் போகாது; அவனைக் கண்ட பேர்களுக்கும் நினைத்த காரியமெல்லாம் முடியும் அதெப்படியெனில், பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயமாகிய பஞ்ச பூதியங்களின் கூறு கூடிய வாயுவினைப் பாழ் போகாமல் மனவறிவுடனே கட்டி ஆறுதாரத்திலுள்ள பரிசினை யறிந்து, தசநாடிகளுக்கும் முதல் நாடியாகிய பிராண நாடியினின்று மற்றங்கிருந்து உதித்தோடுஞ் சந்திரன் சூரியன் அக்கினி என்னும் இம்மூன்றினுடைய 36
குணங்களையும் பார்த்தால், கைக்கனி போல இலைசிற்றெரிய வரும்.

[சரம் பார்க்கிறவனுக்கு நன்மை தீமை மரண காலமறியும்படி
சாயா புருஷ தரிசனம் கூறுகின்றார்:]

பாரிலொத்த நிலத்தகல்வான் களங்க மற்றால்
பத்தடிக்க தளைந்தடியாம் பருவந் தன்னிற்

சீரியமெய் நிழல்கழுத்துக் கைகால் சென்னி
சிமிட்டிப்பார்த் திமையாமற் றிகழ்வான் பார்க்கில்

கூருருவம் பொன்கண்டா ற்செல்வம் வெள்ளை
குறைவிலுயிர்; செம்மையுபி ரிளைக்கும் குற்றம்;

காருருநோய், ஆறபிறை கைகால் குன்றின்,
தம்முறையின் முப்பிறையிற் காட்டுஞ் சாவே:

[இ-ள்] பூமியிலே மேடுபள்ளமில்லாத இடத்தில் ஆகாயத்தில் மேக மறைவில்லாமல் வெயில் காயும்போது தன்னிழல் ஐந்த நீளமுதல் பத்த டிக்குட்பட்ட தருணத்தில் தான் அந்நிழல் முகமாய் நின்று கைகளிரண் டையுந் தொங்கவிட்டுக் கண்களிமையாமல் அந்நிழலைக் கழுத்து, கைகள், கால்கள் இவ்வுறுப்புகளுளொன்றைப் பார்த்து அப்படியே இமையாமல் ஆகாயத்தைப் பார்த்தால் அங்கே அவனுருவம் தோன்றும் அவனுருவம் பொன்னிறமாயிருந்தால், அவனுக்குச் செல்வம் வரும், வெண்மையாகில், பிராண பயமில்லை. ஆயுள் வளரும், செம்மையாகில் ஆயுள் தேயும், அதற் கொரு குறைவு வரும், கருமையேல், நலி, இது விட அவ்வுருவில் கைகளா வது கால்களாவது தோன்றாமலிருந்தால், ஆறு மாதங்களுள் மரணம் இது வன்றித் தலையே காணாமல் கவந்தமாய்த் தோன்றினால், மூன்று மாதத்தில் மரணம் அல்லாமலுஞ் சந்திரனிலுமப்படியே பார்ப்பதுமுண்டு இந்தச் சாயா புருஷ தெரிசனத்தை விடாமல் பன்னிரண்டு வருஷம் பார்த்துக் கொண்டே வந்தால், தன் முன்னிற்கும் அந்நிழல் தன்னுடன் பேசும். பேசினால் அதன் முகாந்தரமாய் அஷ்டமா சித்தியையும் பெறலாகும்; பெறுவதன்றிப் பின்னுஞ் சில நாட்களில் அந்நிழல் ஓராளுருவாகித் தன்னு டனே திரியும், படுத்தால் தானும் படுக்கும். எழுந்தால் உடன் எழும். இவனுக்கு வரும் நன்மை தீமைகளை முன்னதாகவே உணர்த்தும், இன்ன மும் இப்படிப்பட்ட அனேக அற்புதங்கள் விளக்குமென்று பெரியவர்கள் சொல்வார்கள். 87

## மரண இலக்கணம் வில்லுருவின் வயன்

காட்டியகால் நிழல்தனக்கு முன் பின்னாகக்
கடிபுனலவாய் கொண்டகலவான் களங்கமாற்றால

பூட்டியநீர் தகள்பிறக்க உமிழ்ந்தால் வானில்
பொருத்தியவில் ஐந்துருவாய்ப் பொலிந்து தோன்றும்;

ஈட்டியவில் லுருவுளதேல் ஆண்டு வாழ்வன்:
இதுமுறியில் அவ்வாண்டி னிறந்து போவன்;

கோட்டியவில் லுருமுறிய அணங்கு தோன்றிற்
கொண்டு போம் பிறையாறிற் குறித்துக் கூறே.

[இ-ள்] வானிற் களங்கமில்லாமல் சூரியன் எரிக்கையில் மரநிழல் விட்டுத் தாழ்வார நிழல் இப்படிப்பட்டதொரு நிழல் தனக்கு முன்னிருக் கச் சரம் பார்க்கிறவன் பின்னின்று வாய் நிறைய நீர் கொண்டு அந்த நிழ லருகில் தகள் பரந்து அணுப்போலப் பறக்க ஒரே சரமாய் உமிழ்ந்து, அத்துகளைப்பார்த்தால், அதில் இந்திர தனுசு அமைந்து வர்ணங்களுடனே தோன்றும்: தோன்றினால், பார்க்கிறவனுக்கு அன்று முதல் ஒரு வருஷ மட் டுஞ் சாவில்லை; இல்லையேல், அது வரும்; வருவதிலும், அவ்வில் நிறமாறி அங்ஙனே ஒரு பெண்ணுருத்தோன்றினால், ஆறு மாதங்களிலிறப்பன். 88

## சந்திரசூரியரைப் பார்க்கும் இலக்கணம்:

குறிகொள் நிறை மதியுங்குறை மதியுந் தன்னில்
குலவியதோர் செப்பகலில் கோநெய் யைவிட்

டெரிகின்ற மதிக்கதிரைப் பகலைப் பார்த்தால்
இயல்வெண் செம் பொன்பசுமை கருமை யென்னின்

நெறிகொண்ட வுயிர்வாழ்வு கெடல்நோய் சாவு
நிரல்நிரையே யறியிதனிற் றெற்கும் மேற்கும்

அறியும்வடக் குடன்கிழக்கு நடுக்கு றைந்தால்
அறுதிங்கள் மூன்றொன்று நாட்பத் தாமே.

[இ-ள்] ஒரு செம்பு அகலில் பசுவின் நெய்யை உருக்கிவிட்டு, அதிற் பூரண சந்திரனை அல்லது அமாவாசையின் போது சூரியனைப் பார்த்தால், அதிற்றோன்றுகிற சந்திரன் அல்லது சூரியன், வெண்மை செம்மையெனில், வாழ்வுண்டாம்: பொன்மையாகில், கேடு; பசுமையானால், நோய்: கருமையோ, சாவு வரும்; அப்படிச் சாகிறவனுக்குக் காலமெப்போதெனில், தென்புற வட்டங் குன்றந்தால் ஆறு மாதம். வடப்புறம் மூன்று மாதம்; கீழ்ப்புறம் ஒரு மாதம்; நடுவே கொள்ளையாயிருந்தால், பத்து நாள்: 39
[நிறைமதியம்-பௌரணை; குறைமதியம்-அமாவாசை.]

சரீரப்பழுது முதலான மரண இலக்கணம்,

அழிந்திடுங்கை கால்நெற்றி கன்னந் தம்மில்
அடர்ந்துடிப் புறவாண்டு திங்க ளாறு.

மொழிந்ததிங்கள் மூன்றுநாள் பத்திலாவி
முடிந்துவிடும்: இதுவொழியச் செவியி லோசை

ஒழிந்திடினு ளேழுகண்ணி லொளிதா னைந்தாம்;
உயர்ந்த மணம் மூன்றிரண்டில் உரைவே றுனல்;

கழிந்திடுநல் லுயிரென்று கருதி யீசன்
கழலிணையைப் போற்றில்வினை கழிந்து போமே.

[இ-ள்] கை கால், நெற்றி, கன்னம் இவை அடர்ந்து துடித்தால், மரணகாலம் வந்ததென்றறிக. அதிலும் கை துடிக்கில் ஒரு வருஷம்; கால் ஆறு மாதம்; நெற்றி மூன்று மாதம்: கன்னம் பத்து நாள் என்று கொள்ள வேண்டும். இது வொழியக் காது கேளாவிட்டால் ஏழு நாளில் மரணம்; கண் பார்வை மங்கினுல், ஐந்து நாள்: மூக்கில் கந்தம் மபானுல், மூன்று நாள்; வாய் குழறிப் பேச்சழிந்தால், இரண்டு நாள். இதையறிந்து கடவுளுடைய பாதங்களை நினைத்துப் போற்றி செய்தால், வினையென்பதிராது. அங்ஙனே கலந்து போதலுமாகும் 40

உசுவாச நிசுவாசங்களின் பயன்:

போம்வாயு சிவம்; உள்ளே புகுதற் சத்தி:
போகில்விடம்: புகிலமுதம்: புகன்ற வெல்லாம்

ஆம்வாயு புகிற்போகி எல்ல வாகும்:
அடங்கிவ்விடங் கெடும்: போகி லகலு மப்பால்;

தேமேவு சத்தியிரண் டொற்றை யீசன்;
செவியிற்போ வார்வருவர் சரமீள் வாகில்

ஓவேவு முயிர்போகில் நோயாம்: மற்ற
தட்புகினு யாகாமெய் யுரைத்தோம் நாமே.

[இ-ள்.] உசுவாசப், நிசுவாசம் அல்லது ரேசக பூரக காலபலனைச் சொல்லுமிடத்தில், உடலை விட்டுப் போகிற வாயுவே சிவம்! உட்புகுவது சத்தி, சரம் வெளிப்பட்டுப் போவதெல்லாம் விடமுண்பதற்குச் சரி; சரம் உட்பட்டுப் போவதெல்லாம் அமுதமுண்பதற்குச் சரி சரம் உள்ளே போகும் போத ஒருவன் சொன்னது அல்லது நினைத்த கார்யம் ஆகும். வெளிக் கொள்ளுகையில் ஆகாது. அந்த வாயு கும்பகத்தடங்கினுல், உண்ட விடம் கெடுமெனச்சரி: அடங்கியது நடு நாடிவழிப் போமாகில்பாவமென்ப திக்கே: இதன்றி. ஒருவன் வந்து குறி கேட்கையில் அவன் முதற்சொன்ன சொல்லின் எழுத்தை எண்ணிப்பார்க்கில், ஒற்றையாகில் சிவன் கூறென் றும், இரட்டையாகில், சத்தி கூறென்றுங் கொள்ளவேண்டும். சரம் வெளியே போதும்போது ஒருவன் வந்து, 'இன்னுன் போவானே?" எனில் போவான் வாரான்: உட்புகையில் வருவான் சரம்போகும் போது வரு வானுவென்றும் புகும் போது போவானு என்றும் மாறுபட்டு வினவில் சரிப்படாது: போகும்போது போவானேயல்லது வாரான்; புகும்போது வருவானேயல்லது போகான். சரம் போகும் போது நோய் தீருமோ என்னில் தீராது; புகும் போது தீருமெனக. 41

## குறி சொல்லவும் போர் புரியவும் மார்க்கம்:

உரைத்தொருவன் நிறைகுறைவி லுறத்தீ தாகும்;
உயிரில்புறத் தூறைந்து நிறை யுறமத் திமமாம்!

நிறைத்துநிறை பக்கத்தினின் றிடினன் மையாம்.
நிறைமதியந் தனிலேகில் நேர்ந்திடும்போர்,

வரைத்தசெழுங் களம்வெட்ட வலவன் தோற்பன்;
வாகான சந்திரனேல் வெல்ல மாட்டான்.

விரித்தகதி ரினிலேவெங் களத்தில் வெட்ட
மேனியிலும் வடுப்படான் வெல்வான் முனே.

(இ-ள்) குறிகேட்க வந்த ஒருவன், தன் காரியத்தைச் சொல்லிக் கொண்டே முன்னர்ப் பூரணத்தில் வந்தாலும், பின்னர்ச் சூனியத்தில் வந்துவிடுவானுகில், அக்காரியம் தீதாம். முன்பு சூனியத்தில் நின்று பின்பு பூரணத்தில் வருவானெனில் மத்திமம். இவ்விரண்டு மாறுபாடு மில்லாமல் வந்தவன் சுதமுமல் பூரண பக்கத்தினின்றே இருந்து தான் வந்த காரியத்தைச் சொல்லி முடித்துவிடுவானெனில் அக்கருமம் நன்மை

தாம் என்றறிக. போர்க்குறியைச் சொல்லுமிடத்து. சந்திரகலை இயங்கும் போது சென்று சூரியன் இயங்கும்போது களத்திலெதிர் எதிரி எப்படிப் பட்டவனாலும் தோற்பன். இப்படியல்லாமல், சந்திரனியங்கும்போது புறப்பட்டுச் சந்திரனிற்றுனே போர் கலக்கில் தோற்பன். இது நிற்க, சூரியனிற்றுனே புறப்பட்டு அச்சூரியனிற்றுனே போரில் வெல்வதனாலும் தன் மேலொரு படை படாமல் வென்று வருவான் 42

போர் வெல்லும் மார்க்கம்:

வெல்வனமர் இருவர்பே ரெழுத்து மெண்ணின்
மிகுமெழுத்துள் அ இ உ எ ஒ என்னும்

நல்லெழுத்துள் ஆ ஈ ஊ ஏ ஓ கூட்டி
நலந்திசம்பா லன்குமரன் அரசன் விருத்தன்

சொல்லும்பேர் முதலெழுத்தி லுயிரெ ழுர்தைத்
துலங்கியவத் தானந்தக ளறவே கூட்டில்

எல்லாமுதற் றுனவெழுத் தடையோன் வெல்வன்;
இருவனவ ராலிரட்டை யெழுத்தோன் றுனே.

(இ-ள்) அ, ஆ, இ ஈ, உ, ஊ, எ, ஏ, ஒ, ஓ—இவற்றுள் முதலாவது பாலன் கூறெனவும், இரண்டாவது குமரன் கூறெனவும், மூன்றாவது அரசன் கூறெனவும், மற்ற இரண்டும் விருத்தன் கூறெனவும் கொள்ள வேண்டும். இதில் சண்டைக்காரனுடைய பேரில் முதலெழுத்தைப் பார்க்கும்போது ஆவோவியேல் ஆவுடனேயும். ஈயொலியேல் ஈபுனேயும் ஊ ஒலியேல் ஊவுடனேயும், ஏயொலியேல் ஏயுடனேயும் ஒவொலியேல் ஒவுடனேயுங் கூட்டிக் கொண்டு அவர்களை இவ்வெழுத்துக்களின்படி பாலன் குமரன், அரசன், விருத்தனுக்கி; பாலன், குமரனையும் அரசனையும் வெல்வானெனவும்; விருத்தன் மற்றவர்களால் படுவானெனவுஞ் சொல்ல வேண்டும் அதிலும் எ ஏ ஒ ஓ விருத்தன் கூறு; இவ்விரண்டெழுத்துக் கொண்டவன் அவர்களாற்படுவான். 43

கருப்பக் குறியின் முறை:

இரட்டையாம் உபயத்திற் கேட்ட பிள்ளை;
இனியபூ ரணத்திலாண்; சூனியப்பெண்

மருக்குழலா ளிடத்துயிரை விடியற் காலம்
மகனைவலத் துயிரதனை வாங்க நட்பாம்:

தரிக்குநிலம் புதன்; வெய்யோன் அப்பு: மந்தன்
சந்திரன்தீ; வியாழஞ்சேய் தண் கால்: வெள்ளி

நெருக்கியவம் பரம்பூ; தங் கிழமை யிந்த
நேற்றிநின் தன்னையின் ... தானே.

[இ-ள்] முன் சொன்ன கருப்பக்குறிகளுமல்லாமல், இதுவுமொன் றெனக் காண்க; யாதெனில், உபய சரங்கள் நடக்கும்போது கேட்கப் பெற்ற பிள்ளை, இரட்டைப் பேறெனலாம். எப்பக்கமாயிருக்கினும், பூரண பக்கம் ஆண்; சூனிய பக்கம் பெண். ஆனாலும் மேற்கவிகளிற் சொல்லிய பயன்றானுகுமெனக் கொள்க. இது நிற்க. வைகறைப்பொழுதில் மனை விக்குச் சரம் இடப் பக்கத்தில் நடந்து, ஆணுக்கு வலத்தில் நடந்தால், அதை அம்மகிணன் அவ்வலச்சரத்தாற்றானே, வாங்கி உட்கொள்ளும் அப்பி யாசஞ் செய்து கொண்டு வருவானெனில் மனைவி அவன் வயமாவள், அப்படி வாங்குவது பன்னிரண்டு தரம் வாங்கியுட்கொள்க என்றுஞ் சொல்லு வார்கள். அதல்லாமலும் வார சரங்கள் எந்தெந்தப் பூதியங்களில் உதிக்க வேண்டுமெனில், புதன், பிருதிவியில்; ஞாயிறு, அட்புவில்; சனியுந் திங் களும், தேயுவில்; வியாழனுஞ் செவ்வாயும் வாயுவில்; வெள்ளி, ஆகா யத்தில் உதிக்க வேண்டும். உதிக்கில் அவ்வாரஞ் சரியாய் நடந்து, அதனால் வரும் நன்மைகள் மிகு பலனை விளைவிக்கும். 44

இன்னதற்கு மூலம் இன்னதென்பது:

நிகழ்புவிக்கு மூலம்நீர் வாயு சீவன்
நெறிதாது கனல்விண்ணும் நினைக்குங் காலே;

புகழுடனே பூதத்திற் குளவே சொல்க
பொருவில்சர ராசிவெய்யோன் புதுவெண் டிங்கள்

மகிழ்கொள்திர ராசியாம் உபய ராசி
மறங்கிளருஞ் சுழுமுனையாம் வாரந்தோறும்

பகுதல்படர் துயர்பலிக்கு நிலமை தன்னைப்
பங்கயவா தனத்திருந்து பரிந்து பாரே.

(இ-ள்) பிருதிவிக்கு மூலம்-அ-வ-வா; சீவன்-க; ஆ-தாது. இப்படி நிரல் நிரையே ஒன்றுக்கொன்று ஆதாரமாய் வரும். அவை விளங்க இங் ஙனம் விவரமாய்ச் சொல்லவில்லையாயினும், இதனையும் சர ராசியெனப் பட்ட சூரியனையும், திரராசியாகிய சந்திரனையும் உபயராசியாகிய சுழு முனையையும் மற்றவற்றின் பயன் முதலிய கூறுபாட்டையும் பங்கயாசனத் திலிருந்து பரிவுற்றுச் சிவயோகஞ் செய்தாலல்லது நன்குணர்தலரிது. உயிர் பாழ் போகாது. சீவன் முக்தனுதலுக்கு அது மார்க்கம். இல்லையேல், அவம் போகுமென்றறிக.

மூன்று நாடிகளின் முறைமை.

பாரிதனைக் கதிர்மதிதான் வாழ்வு கேடு
பண்டைநிலை யிம்மூன்றும் பரிந்து கேட்கில்

சீரடருஞ் செல்வம் வரும் வெய்யோனுகில்;
வெண்மதியங் கேடாகும்; விரைந்து வாயு

நீரமிகு சுழுமுனைதா னாகில் முன்பிற்
சிறுகாலும் பெருகாது: தேவ ரானோர்

போரருகில் வருமெனினு மதியில் வாரார்;
பொங்கியசெங் கதிர்வருவர் புகன்றோம் நாமே.

(இ-ள்) நாம் சொன்ன இச்சர நூலைப் பரிவுடன் பார்ப்பாயாக. சூரியன் சந்திரன் சுழுமுனை என்னுமிம் மூன்று நாடிகளுள்ளும் வாழ்வு, கேடு, நிலைமையென்கிற மூன்று கரும நிதானப் பலன்களைக் கேட்குமிடத்தில் சூரியனாகில் நன்மையும் மிகுந்த செல்வத்தையுமடைவார்கள்; சந்திரனாகில் கேடு முதலிய கண்ணியக் குறைவாகும்: சுழுமுனையாகில், முன் உள்ளபடி ஏறாமல் குறையாமல் நிறைவாகும். அன்றியும் தேவாதி தேவர் களாலே வசிகரிக்கப்பட்டவனாகிலும், ஜெயாபஜெயத்தின் முன்னிலையில் வருவோமென்று உறுதியாகச் சொல்லினுஞ் சந்திரனை அதிகமாக இயங்கி டில் வாரார்; சூரியனே அதிகப்படில் வருவாரென்று காண்க. 46

உப சாந்தம்;

நாமுரைத்த தொகையளவுஞ் சூர்ய னோடாம்;
நன்மதிய மேல்வாயு நடக்கு மாகல்;

தாமிளைத்தல் கிளையிளைத்தில் பொருள்கே டாதல்
சத்துருவுண் டாதலிவை தப்பா வாகும்;

போமிடத்தில் மதியாகில் சரத்தைப் போக்கிப்
பொருந்துமடி யிரட்டித்துப் போக நன்றாம்;

தேமருவு கதிராகில் உயிருள் வாங்கித்
திகழும்வலக் காலொற்றிச் செல்ல நன்றே.

[இ-ள்.] முன் சொன்னபடி சந்திரனே அதிகமாய் நடந்தால். நமக்குக் கேடு வருவதல்லாமலும் பந்துக்களுக்குமதுவே வரும்; சத்துருக்கள் தோன்றி வருவது தப்பாது. சந்திரனிற் போகவேண்டிய காரியமல்லாத காரியார்த்தமாய்ப் போகும்போது சந்திரன் நடந்தால் சரத்தை. நீள வெளி விட்டு அப்பக்கக் காலையே இரண்டு மூன்றடி முந்தி வைத்துக் கொண்டு போக வேண்டும் சூரியனிற் போகவேண்டிய காரியமல்லாத காரியார்த்தமாய்ப் போகும்போது சூரியன் நடந்தால், அச்சரத்தை ஏற வுள்ளே வாங்கி, அவ்வலக்காலை முன்னிட்டுக்கொண்டு போகவேண்டும். அப்படிப் போனால் போங்காரியம் நன்று. 47

சந்திரகலையில் நடக்கும் பூதியங்கள்:

செல்லுமதி தனிலேதே சஞ்சரிக்கச்
சிவாலயங்கள் மதிற்செய்தல் இல்லங் கட்டல்

நல்லமுடி சூட்டல்குடி புகுதல் போக்கு
நயந்துமரம் வைத்தனன்று: நளிர்நீந் தன்னில்

ஒல்லைநறு வாவிகுளஞ் சோலை வைக்க
உழவிரைக்க மணமுளதே லுவக்க லாகும்;

நல்லழலில் தீப்பிணியாம்; காற்றி லானை
நற்பரிதேர் ரோட்டாகும் நாவா யோட்டே.

[இ-ள்.] சந்திர கலையில் பிருதிவி நடந்தால், சிவாலயம் மதில், வீடு கட்டல் குடிபுகுதல் போக்கு சாந்தி கழித்தல், மரம் வைத்தல், இவை நன்றும்; அப்புவாகில், குளம் முதலிய எடுத்தல், சோலை வைத்தல், நிலத்தை உழுதல், விதைத்தல், விவாகம் செய்தல் நன்றும்; தேயுவாகில் பிணி தீர்த்தலாம்; வாயுவாகில், குதிரை, தேர், கப்பல் ஓட்டலாம். 48

இதுவுமது:

ஓட்டியவா னிற்செபிக்க விற்போர் செய்ய
உள்ளபிங் கலைக்குமொக்கும் ஈதே செல்க:

நாட்டுமதி வெங்கதிரோ னிற்கிலந்த
நாடிகளிற் பூரணச்சேர் நன்றே யாகும்;

ஈட்டுதிசை பிடித்தவைகள் செயல்கள் ஆண்பெண்
இயங்கிடலுஞ் சூனிய ரணமெ ழுத்தும்

வாட்டமற மதித்தெண்ணி நிருமித் தற்கு
வல்லவனே சரம்பார்க்க வல்லன் நன்றே.

[இ-ள்:] ஆகாயத்தில் மந்திரஞ்செபிக்க, விற்போர் செய்ய நன்று. இது சூரிய கலைக்கு மொக்கும் இது நிற்க. சந்திரன் திசைபானாலும் அல்லது சந்திரனேயானாலும் சூரியனேயானாலும், வந்தவன் பூரண பட்சத்தில் நின்றால், அவன் வந்த காரியம் நன்றும்; இது போக திசை. ஆண் பெண், சூனியம், பூரணம், எழுத்து இவை முதலாய்ச் சொல்லப்பட்ட இச் சர நூலின் நுட்பப் பொருள்களைக் கண்டு, இஃது இன்னதென்றும் அஃது இன்னதென்றும் நிருபிக்க வல்லவன். சரம் பார்க்க வல்லவன்; அல்லாதவனென்றறிக: 49

சரம் பார்ப்பார் இயல்பு:

நன்றான மறைவல்லோர் குலமா ரெனின்?
நாமுரைத்த சர நூலின் நடைதப் பாமல்

என்றும் பார்ப்பவரே பூமி தேவர்
இசைநதமா னிடப்பிறவி னின்பங் கொள்வர்:

குன்றாத மாபறவை யெறும்பு தாரு
கொடி மருந்தி னளவறிந்து கொண்டு வாழ்ந்து

பொன்றாத தெய்வீகம் பொருந்து வார்கள்;
புகுதுவார் புன்பிறப்பிற் புகலா தாரே.

[இ-ள்.] நல்ல பிராமண குலத்தவராய்ப் பிறந்தாலும், என்னும்? அல்லது இழிந்த கு ்த்தவராய்ப் பிறந்துமென்னும் இச்சர நூலுணர்ந்து இதன் நடைதப்பாமல் பார்ப்பவரே பிராமணராவர். சராசரங்களினுடைய தன்மைகளை அறிந்தவராக இப்பூமியின் கண் இவரே தேவரென யாவராலும் பூசிக்கப்பட்டு வாழ்ந்து பரம்பொருளிற் சாயுச்சியமடைவர். பார்க்கமாட்டாதவர் இழிந்த குலத்தினராய் புன்பிறப்புப் பிறந்து கொண்டிருப்பார்கள். 50

புன்பிறப்பிற் பிறக்கினுஞ்சற் குருமு கத்தாற்
பொருந்தியவிச் சரநூலைப் புகலக் கேட்டு

நன்குணர்ந்து நெறிநடப்பான் யாவ னேனும்
நாமவனென் றிரண்டில்லை நன்றாய்க் கேட்கின்

மின்பிறக்குஞ் செந்தழலை அடுத்த வெல்லாம்
மிக்கதழல் வடிவான விதமே போலத்

தன்பிறப்பி லினிப் பிறவான் அவமே சாகான்
சடைமேனும் அணிந்தசந் திரனாப் பானே.

[இ-ள்] இழிந்த குலத்திற் பிறந்தவனானாலும். குரு முகாந்தரமாய் இச்சர நூலைச் சொல்லக் கேட்டு இதனை உணர்ந்து இவ்வழி நடப்பவன் யாவனானாலும், அவன் யாமேயாவான்: வேற்றுமையில்லை. நெருப்புத் தன்னை அடைந்தவற்றையுந் தன்னுருவாக்கிக் கொள்ளும் இயல்புபோல; அவன் யாமே; அவன் அவமாய்ப் பிறந்திறவான்; இன்னம் விசேஷமாய்ச் சொல்லுகையில், சடாபாரத்தில் நாமணிந்திரானின்ற சந்திரன் போன்று எம் முடி மேல் வீற்றிருப்பான். 51





## நூல்: முப்பத்தொன்று

# சிவானந்தபோதம்

காப்பு] [நேரிசை வெண்பா

சிவானந்தபோதமாஞ் சித்திமுத்தி தந்து 1
பவானந்த மாலவினை பாழாய்-நவானந்த
ஈசனே தானாகும் என்வடிவுத் தாளிணையைப்
பாசமுடன் முன்றொழுவான் பார்.

தியாகரருள் போதஞ் சிவசுந் தரன் சொல்
தயாபரியென் றுய்வடிவந் தானும்-செயாவெனவே
பொய்யா விநாயகனும் பொற்குருவாஞ் சண்முகனும்
அய்யாவு மென்னுள்ளே யாம்.

முத்திபெறு மென்னெஞ்சு மூர்க்கருட னேயிணங்கிச் 3
சித்தந் தருப்பிச் சிதருமல்-முத்தனும்
பட்டினத்தார் சாட்சி பகுத்தறிந்த விந்நூலைத்
தொட்டவர்க்கு முண்டாஞ் சுகம்.

பணியுறத்த லாகப் பரபோகங் கொண்டு 4
துணிவுறுத்த நெஞ்சுக்குச் சொல்லின்-அணியாய்ப்
படபடென்னும் நெஞ்சம் பகருசிவா னந்தத்
திடமுறுவார் தாமே சிவம்.

சிங்கா தனமுடைய செல்வ அடியார்கள் 5
தங்காற் சிரமேற் றரித்திட்டேன்-பொன்கால்
ஏற்றிப் புகழ்ந்தன்பா லிந்நூலென் புன்கவியால்
சாற்றத் துணிந்தேன் சரண்.

நூற்பயன் [அறுசீர் விருத்தம்]

அறிவதனை மனங்கேட்கச் சிவானந்த போதத்தை அறிய நன்றாய் 6
நெறியுடைய மூத்தார்கள்தன் திருவடியிற் பணியவருள் நிலைக்கக் காட்டிக்
குறியு னே அனுபவித்து வழிபடைந்து கதிபெறவே கூறவென்றும்
[illegible] பேசு மேற்று.

## மாணிக்கவாசக சுவாமிகள் துதி:

நிறைந்தபரி பூரணமாய் நிர்க்குணமாய் நிர்மலமாய் நித்த னாகித் 7
துறந்தமன முடையோர்க்குந் துரியனுமாய் அதீதனுமாய்ச் சோதி
[யாகிக்
கறந்தமுலைப் பாலாகிப் பாலிலுள்ள ருசிகாட்டுங் கர்த்த னாகிச்
சிறந்தகுரு மாணிக்கச் சுவாமிகளை எம்முளத்திற் றொழுதல் செய்வாம்.

## சமயாசாரியர் மூவர் துதி:

இசைக்குருகிப் பரந்தானே யெழுந்தருளி வேண்டியதோ ரின்பந்தந்து 8
மிசைக்குளவா யெதி த்தவரை மதித்திடாச் சிவசமய மேலாய்ச் செய்து
திசைக்குளவோர் புகழ்ந்தேத்தச் சிவாலயத்திற் றேவாரஞ்
சிறக்க வோதிப்
பசைக்கருதி யருள்பெருகு மூவரிணை மலரடியிற் பணிகின் றேனே.

## பசவண்ணர் அல்லமாப்பிரபு துதி:

பத்திநிலை தவறுமற் கிருபையுமே வழுவாமற் பாரின் மீதே 9
உத்திசிவ கணேசருக்குப் போதமுற்றுப் பூசைசெய்தே யுகந்து ஞானத்
தத்துவமே யுணர்ந்தசிவந் தானுதம் பசவண்ணர் சாட்சாத் கார
மூர்த்திதரும் அல்லமாப் பிரபீச ரிருவர்தாள் முடிக்கொள் வோமே.

## மருத்துமலைத் தேசிகர் துதி:

பன்னுறை சாத்திரங்கள் ஆகமங்கள் விரிந்தநூற் பலத்திற் சென்றே
உன்னுகின்ற மனத்தாலே பிறப்பிறப்பாம் நோய்பலவற் றுற்றி டாமற்
பொன்னுடைய அம்பலவர் கழல்பணியச் சிந்தையற்றுப் பூசை செய்ய
என்னதென்றே எனையாண்ட மருத்துமலைத் தேசிகனருள்
இறைஞ்சுவோமே

## நூல்.

## அறிவுக்கும் மனத்துக்கும் வாக்குவாதம்

### அறிவு கூறுதல்:

ஆன நெஞ்சமே! இமைப்பொழு தாகிலும் அலைவறுத் திருந்தாயோ?
போன நாளிலே நடந்தது மிருந்ததும் புதுமைக் கறியாயோ?
ஈன மாகிய கவலையை நீக்கியைம் பொறியினி லிணங்காமல்
தானமொத்துநான் சொல்மொழி கேட்டுநீ சரியென்று மகிழ்வாயே.

---

பாக்கள், அறிவு சொல்வன; வசனம், மனம் கேட்பது.

மனம் கேட்டல்: ஏதேது! விபரீதமாய் இருக்கிறதே! இமைப் பொழு தாகிலும் பிரியாமலிருந்த நீ இப்போதென்னை அன்னியமாகக் குறித்துச் சொற்படி கேட்கச் சொன்னதும் சந்தோஷமாயிற்று! ஆகிலும், உதவி யான காரியமாக இருப்பிற் கேட்கவேண்டுந்தானே! ஆதலாற் சொல்க, என்று மனம் கேட்க, அறிவு கூறுகின்றது.

அறிவு கூறுதல்:

முத்திபெறும் அழகான நெஞ்சமே! பணியறுத்தல் மொழியக்கேள் நீ;
சத்துசித்தா னந்தபரா பரமேநற் கதியென்றுஞ் சார்ந்திடாமல்
முத்தர்களும் ஓதிவைத்த நூலதனை யாராய முனைந்திடாமற்
பத்திநிலை நில்லாமற் சிந்தனையு மோயாமற் பார்ப்ப தென்னே!

மனம் கேட்டல்: ஆயின் யாதோ பரத்தைச் சாரவில்லையெனவும், நூலினுட் பொருளையறிந்து முனை கொள்ளவில்லை யெனவும், பத்தி நிலையில் நிற்கவில்லையெனவும், சிந்தனைகளை அறுக்கவில்லையெனவும் சொல்கிற வற்றை எக்காலத்திலும் யானறியாதவனாய் இருக்கிறேன். இஃதந்தரங்கப் பாஷையாய் இருக்கின்றது. மாடு, மக்கள், பெண்டிர், சுற்றம், வாழ்நாள் முதலியனவே பொருளென்று உன்னியிருந்த எனக்கிப்போது திடீரென்று நான்கு வகையில் சிந்திக்கச் சொன்னாய், ஸ்பஷ்டமாகப் புலப்படுமாறு புகல்க,' என்று மனங்கேட்க, அறிவு கூறுகின்றது:

அறிவு கூறுதல்:

மாடும் மக்களுஞ் சுற்றமும் பெண்டிரும் மாளிகை யுடன்வாழ்வும்
நாடு ராச்சிய மாண்டிடும் புகழ்ச்சியும் நமதென்றே தேகத்தின்
ஊடு சென்றுநீ எனதுடல் யானென வுழன்றலுத் திடு நெஞ்சே!
வீடு விட்டுயி ரேகிடும் போதினில் வினைவழி நுழைந்தாயே.

மனம் கேட்டல்: 'தேகத்தினுள்ளே புகுந்து, மாடு, மக்கள், சுற்றம் பெண்டிர் உயர்வாழ்வு, தேசாதுபத்தியப் புகழ்ச்சி முதலியவை சதமென்று 'தேகம் நான் எனது' என்று பாராட்டி உழலுகிறாயென்றும், முடிவு காலத்தில் வினை வழியிலேயே உயிரை நுழைக்கிறாயென்றுஞ் சொல்லு கிறாய். நீ இதுகாறும் கூட இருந்தாயா இல்லையா? இதுகாறும் யாதும் புகலாதிருந்தவாறென்னை? இப்போது இங்ஙனஞ் சொல்லுதற்குக் காரண மென்னை?' என்று மனங்கேட்க அறிவு கூறுகின்றது;

அறிவு கூறுதல்:

சேணி நெஞ்சமே! உன்னிள வயதிலே கிடந்துனை நீ தனைமுன்னாள்
வீணிலேபல செனனமு மெடுத்ததின் நீமேலிந் திடும்போந்த
ஊணிலேயெனை யானறி யாமலே யுத்தமர் நோக்கத்தாற்
காணு மிப்படி மானிட தேகமும் கண்டதும் அறிவாயே.

மனம் கேட்டல்: 'அனேகம் ஜென்மத்தில் ... பிறந்திறந்ததின் தாகவுஞ் சொன்னாய்; அவற்றுளிம்மானிட தேகம் அருமையாகப் பெற

யோர் கிருபாநோக்கத்தாற் கிடைத்ததாகவுஞ் சொன்னாய்; அது தெரியும் படிக்குச்சொல். என மனம் கேட்க, அறிவு கூறுகின்றது.

அறிவு கூறுதல்:

நாலுவகை யோனியிலும் எழுவகையின் தோற்றத்தும் ஈனின மாக
மேலுகந்த மானிடந்தா னெடுப்பவே அருமையாய் மெய்ய னாகிப்
பாலுபோல் மனமுடைத்தாய்ப் புண்ணியமே மிகுந்துபவங்
கோய்த் தள்ளி
நூலணர்வ தருமை நெஞ்சே! இருவினையி லொருவினையை
நொறுக்கித் தானே.

மனம் கேட்டல்: 'ஆனால், மானிட தேகம் எடுப்பதருமையென்று சொன்னாய்; அதிலும் மெய்யனாகிக் கள்ளமற்றுப் பாவம் போக்கிப் புண்ணியம் மிகுந்து நூலுணர்வது அருமையென்றுங் காட்டுகிறாய், அப்படியானால், மானிட தேகத்திலேதானே பலவிதமாய் அருமையாகிய தேகமுண்டோ? என்று மனங் கேட்க அறிவு கூறுகின்றது;

அறிவு கூறுதல்:

மனிதரிலும் பறவையுண்டு விலங்குண்டு கல்லுண்டு மரமு முண்டு;
மனிதரிலும் நீர்வாழுஞ் சாதியுண்ட னேககுல மனித ருண்டு:
மனிதரிலும் மனிதருண்டு; வானவரு மனிவராய் வருவ துண்டு;
மனிதரிலே பிறப்பறுக்க வந்ததே அருமையென வகுத்தார் முன்னோர்.

மனம் கேட்டல்: 'ஆனால் தேகமெடுப்பது எவ்விதம்? வினையென்பது ஒன்றோ இரண்டோ? இவற்றில் சகாய வினையெது? வினை வழியாய்த் தேகமெடுக்கிறது யாராலே?' என்று மனங் கேட்க, அறிவு கூறுகின்றது:

அறிவு கூறுதல்:

எழுவகையின் தோற்றமாய்க் கடந்தோறும் பலவிதமாய் இன்ப முற்றே
பழுதறவே தேகம்வரும் பேய்மனமே! நீ செய்த பண்பினாலே;
உழிதருமிக் காலத்தும் ஒழியாம லிருவினையா லுகந்து நிற்கும்;
கழிதருமிவ் விருவினையி லொருவினையை நோக்குவது கடினந் தானே.

மனம் கேட்டல்: 'ஆனால், என்னாலே வினையுண்டாகிறதென்றும்' வினையினாலே தேகமெடுக்கிறதென்றும் சொன்னாய்: வினை வழியாய்ப் பலயோனி தோறும் எப்படிப் புகுந்து ஜனன மரணமுண்டாகின்றன?' என்று மனங் கேட்க, அறிவு கூறுகின்றது.

அறிவு கூறுதல்:

மனம்வாக்குக் காயத்தான் மருவுஞ் செய்கை
மலர்மணம்போ லுறுசன்ம மயக்கத் தாலே

இனமாக்கும் பிறவியினி லிழுத்துக் கொண்டே
எத்தனையோ சன்மத்த லிறக்கச் செய்யும்

தனவாக்காய்ப் பிரமாவுஞ் சிருட்டி செய்யத்
தான்றனே வளர்ந்திந்தத் தரணி மீதே

இனமாச்கு வெம்பாசந் தன்னிற் சிக்கி
இறந்தார்கள் பிறந்தார்க ளின்னம் நெஞ்சே!

மனம் கேட்டல்: 'ஆனல் பிறந்தாலும் இறந்தாலும், வேதாகம சாத்திரச் சொற்படி நடந்தால், தேவேந்திர பதவி பிரமபட்ட முதலானவை அடையலாமென்று சொல்லுகிறார்களே? அது சுகமல்லவோ?' என்று மனங் கேட்க, அறிவு கூறுகின்றது.

அறிவு கூறுதல்:

முந்த சன்மமாம் புண்ணிய மிகுந்திடின் முக்கிய முண்டாகும்;
பிந்த சன்மமாம் பாவமே மிகுந்திடிற் பெரியதோர் துயராகும்;
அந்த ரண்டை யு மறுத்திடி லொளிதரும் அரண்கழற் றுணையாகும்;
பந்த மானதோர் புராணமும் வேதமும் படைத்ததை யறிவாயே.

மனம் கேட்டல்: ஆனல் மும்மூர்த்திகள் பட்டமாயிருந்தாலும் தேவேந்திர புகழ்ச்சி பெற்றாலும், பின்னும் பூலோகத்திலே பிறப்பதுண்டோ? என்று மனம் கேட்க அறிவு கூறுகின்றது.

அறிவு கூறுதல்:

வாழும் மாலயன் உருத்திரன் இந்திரன் வானவ ரானலும்
சூழும் மாயுகம் பிரளயந் தன்னிலுஞ் சுகமுடன் வாழ்ந்தாலும்
தாழு மானதொல் லுலகில்வந் துறுவர்கள் தரணியோ புகழ்ந்தேத்த
வீழும் நெஞ்சமே! அரனடி சேர்ந்திடில் வினைக்குழி யழுந்தாயே.

மனம் கேட்டல்: 'ஆனல், வேதாகம புராணங்களுண்டாக்கி வைத்தார்! அவற்றாலே என்ன பிரயோஜனம்?' என்று மனம் கேட்க, அறிவு கூறுகின்றது:

அறிவு கூறுதல்:

நரசன் மந்தனை யெடுத்துமப் பவத்தினில் நழுவிடா திவ்வணமே
திரம தாகவே யீசனுத் தரவினிற் செய்வர்புண் ணியமென்றே
வரமு டைத்தநல் வியாசருஞ் செய்தனர் வழங்கிடு மதனாலே
பரவ டியையுறு முத்தர்க ளிருவினைப் பற்றறப் பார்த்தாரே.

மனம் கேட்டல்: 'ஆனல், ஒருவர் செய்கிற பாவ புண்ணியம் ஒருவருக்கு உண்டென்கிறது எவ்விதம்?' என்று மனம் கேட்க, அறிவு கூறுகின்றது.

அறிவு கூறுதல்:

ஒருவர்செய்த பாவபுண்ய மொருவ ருக்கிங்
குண்டென்று சொல்லுகின்ற வூமை நெஞ்சே!

தருகுமவ ரவருயிர்க்குத் துணையார்? சொல்வாய்:
தந்தைதாய் பெண்டுபிள்ளை துணையு மாமோ!

வருகுமந்த வியாதிகளும் வினைதா னல்லோ?
மக்கள் பெண்டு தந்தைதாய் வாங்கிக் கொண்டு

திருகுமவர் பின்னொருவர்க் கீந்த துண்டோ?
திருட்டாந்தங் கண்டுநீ தெளிந்தி டாயே.

மனம் கேட்டல்: 'அப்படியானால், புராணங்களிலே ஒருவர் செய்த பாவபுண்ணியம் மற்றொருவருக்கு உண்டென்று பொய் சொல்ல வேண்டிய தென்ன?' என்று மனம் கேட்க, அறிவு கூறுகின்றது:

அறிவு கூறுதல்;

பாசபந்த மானதொரு மூடர்க் கிந்தப்
பற்றுதல்வை யாவிட்டால் நம்ப மாட்டார்:

ஆசைகொண்டு செய்யார்கள் விகாதஞ் செய்வார்:
அதனாலே பொருத்தம்வைத்துச் சொன்ன தல்லால்.

நேசமிது போலவே பகைத்தார் பாருள்
நீங்கினால் வேறுகதி நிலத்தோர்க் குண்டோ?

மோசமிது நம்பாதே நெஞ்சேச கேளாய்:
முனைந்தவர்க்குச் செய்தபலன் முடியுந் தானே.

மனம் கேட்டல்: 'ஆனால் ஒருவர்க்கொருவர் நன்மை தீமைக் கூட்டுற வில்லையே? அப்படியிருக்க, ஒரு குடும்பத்திலேயுள்ள பந்து ஜனங்கள் ஒருவர்க்கொருவர் பிறவற்றிற்கு இடங்கொடாமல் உள்ளுக்குள்ளே அநேக விகற்பத்தோடு மனம் பேதித்து வாழ்கிறார்களே! எந்தப் பற்றுதலைக் கொண்டு ஒன்று போல இருக்கிறார்கள்?' என்று மனம் கேட்க, அறிவு கூறுகின்றது.

அறிவு கூறுதல்:

பெண்ணாலும் பொன்னாலும் பூமி யாலும்
பெருக்கவே பிச்சைகொண் டொன்றுக் கொன்று

தின்னார்க ளூறவாடிச் செத்தா ரல்லாற்
சேர்ந்துமன மொன்ருகிச் சிறந்திட் டாரோ?

கண்ணாலே பார்த்துநீ சுகங்கண் டாயோ?
கவலைக்கே யாளாகிக் கருத்தி ழந்து

புண்ணுகிப் பிறப்பிறப்பிற் புகுந்திட்ட டாய்நீ
பூமலர்த்தாள் துணையென்று புகழ்வாய் நெஞ்சே!

மனம் கேட்டல்: ஆனால், வினை வழியே உயிர் இத்தேகத்தை விட்டு இனிமேல் தேகமெடுக்கிறது எந்தத் தேகமோ, அதைத் தெரியும்படி இத் தேகத்தை விடும்போது யாதொரு குறிண்டோ?' என்று மனங்கேட்க, அறிவு கூறுகின்றது:

அறிவு கூறுதல்: நேரிசை வெண்பா:

தேகந் தனிற்பொறியுஞ் சீராம் புலன் கரணம்
ஆகந் துறக்குமப்போ தந்நேரம்—போகந்தான்

எவ்விடத்துச் சென்றதோ ஏற்குங் கடவடிவம்
அவ்விடத்தை நன்ரு யறி.

மனம் கேட்டல்: 'ஆனால், வினைப்பயனுமறிந்தேன்; இந்த அருமையாகிய மானிட தேகம் வந்ததும் அறிந்தேன்: வேதாகம புராண சாத்திரங்களது கட்டுப்பாடுமறிந்தேன்: பிறப்பு இறப்பென்கிற விவரமுமறிந்தேன்: வினை வழியே தேகமெடுக்கிறதென்னும் விபரத்தையும் என்னால் வினையுண்டாகிறதென்பதையும் அறிந்தேன்! ஒருவருக்கொருவர் நன்மை தீமை உதவியில்லையென்பது மறிந்தேன்: ஒரு குடும்பத்திலே பல மக்கள் ஒருங்கு கூடிவாழ்கிற பந்தத்தையும் அறிந்தேன், எல்லாமுள்ளபடி ஒத்துக் கொண்டேன்; அரனது திருவடி நிழலை அடைகிறதே சுகமென்று ஆசை கொண்டேன். இத்தனை நாளாக என்னை நம்பியிருந்த குடும்பத்தாரெல்லாரும் இளைஞர்களாய் இருக்கிறபடியினாலே, அவர்களை விட்டுவிட்டால் வேறு கதியின்றி அவர்கள், வருந்துவார்களாதலால் அவர்கள் பக்குவகால பரியந்தமிருந்து காக்கவேண்டுமென்று பரிதாபப்படுகின்றமையால், அதற்கொரு வசனஞ்சொல்லுக,' என்று மனம் கேட்க. அறிவு கூறுகின்றது.

அறிவு கூறுதல்: எண்சீர் விருத்தம்:

அவரெல்லாம் இருக்கவிப்போ துன்னை யேமன்
அழைத்துவிடி லியாதுசெய்வாய் அழகு நெஞ்சே!

இவர்களுக்குப் பிழைக்கும்வகை திரும்பி வந்தே
ஏதுவாய் முடிப்பதுண்டோ? எண்ணிப் பாராய்;

தவறிநீ கடம்விட்டுப் போகும் போது
தாம்கூட மாண்டாரோ பிழைப்பில் லாமல்?

அவரவர்க்குச் சிவன்றுணையென் றெண்ணி டாமல்
ஐயத்தா லிப்படியே அலைவுற் ருயே!

மனம் கேட்டல்: 'ஆனல், அறியலானேன்: இனிமேற் பாசபந்தத்தில் வீழ்வேனே? திருவடியை அடையாமலிருப்பேனே? ஆனல், இன்னுங் கொஞ்சகாலம் பொறுத்துத்தான் திருவடியை அடைவதற்கு ஏது பண்ணிக் கொள்ளக் கூடாதோ? இப்போதுதானே துணிந்துகொள்ள வேண்டுமோ?' என்று மனம் கேட்க. அறிவு கூறுகின்றது;

அறிவு கூறுதல்.

காயமன வாக்குதான் தளர்ந்த போது
கருத்தழிந்தே யுறுதியற்றுப் பாசம் மீறி
நேயமந்த மாய்கையினிற் பற்றிக் கொண்டால்
நெற்றிக்கண் படைத்தவர் தாம் நிலைப்பிப் பாரோ?
மாயபந்த மானவிந்தக் காயந்தானும்
வல்லமையோ? எத்தனை நாள் வாழு மோசொல்;
காயமது நிலையல்ல வென்று முன்னோர்
கண்ணிெனளி மழுங்குமுன்னே கதியுற் ருரே.

மனம் கேட்டல்: 'அப்படியானல், சாலவும் அச்சங் கொண்டேன்! இனித்திருவடி அடைவதற்குப் போந்த வழி சொல்,' என்று மனம் கேட்க அறிவு கூறுகின்றது;

அறிவு கூறுதல்: நேரிசை வெண்பா:

முந்துபரி பூரணமாய் முத்தி யடைந்தவர்கள்
சிந்தைமகிழ்ந் தோதுஞ் சிவ நூலை—உந்தியுந்திப்
பார்த்தறிநீ நன்ருய்ப் பகுத்துப் பகுத்து நெஞ்சே!
சேர்த்தறிநீ யென்வசத்திற் செல்.

மனம் கேட்டல்: அப்படியே சொல்லுகிற சில நூல்களைப் பார்த்தேன்; திருவள்ளுவ நாயனர் முப்பால் வைத்துக் குறள் சொன்னதிலே,

'துறந்தார்க்குந் துவ்வா தவர்க்கும் இறந்தார்க்கும்
இல்வாழ்வா னென்பான் துணை,'

என்று சொற்றனர். 'அஃதென்னகொல்?' என மனம் வினவ அறிவு கூறுகின்றது.

அறிவு கூறுதல்: அறுசீர் விருத்தம்:

யாவர் இருக்கும் நிலையதனை அவர்க்கே அதனி னிலையமர
மூவர் முதலாம் ரிடியோர்க்கும் முழுக்கத் துறந்தோர் காமியர்க்குந்

தேவரீர்க்குந் திறமுதலாய்ச் சிறக்கக் காட்டுங் கண்ணொளிபோல்
நாவிலிருந்தே அஞ்சனமாய் நவின்ற மொழியென் னுபகமே.

மனம் கேட்டல்: 'ஆனால், முத்தி நிலையை மாத்திரம் தனிமையிற் பேசுகின்ற நூல் தான் எவ்விதமாகச் சொல்லும்?' என்று மனம் கேட்க, அறிவு கூறுகின்றது;

அறிவு கூறுதல்: நேரிசை வெண்பா:

தேகம் எடுத்ததவஞ் சிந்தை யுடைத்ததுவும்
போகசமு சாரத்திற் புக்கதுவும்—தாசமது
கொண்டு தவிர்த்ததுவுங் கூறுங் கனவெனவே
கண்டுசொல்லும் நூலதனைக் காண்.

மனம் கேட்டல்: 'ஆனால், அந்த நூலும் பார்த்தேன்; அதிலுள்ள பொருளைச் சங்கையற இப்படியிருக்குமென்று தெரிந்து கொண்டாற் போதுமோ?' என்று அதிவினயத்துடன் மனம் கேட்க, அறிவு கூறுகின்றது.

அறிவு கூறுதல்;

அறிவுக்கே சாட்சிகொண்டு நூலைப் பேசி
அங்கத்தைத் தானழித்தே அகத்தை நோக்கி

குறிவைத்த படியிருந்து மெய்யைப் பொய்யாக்
குற்றமென்றே பொய்யைத்தான் பொய்யாய்க்கண்டு

நெறியுற்றே இருவினையும் நீக்கிப் போட்டு
நேசமுடன் ஈசனுடன் பாசம் வைத்துப்

பிறிவற்றே ஒன்றாகி வாழ லாகும்.
பேதித்துப் போகாதே பேணிக் கூடே.

மனம் கேட்டல்: 'அந்தப்படி தானே அனுபவிக்கிறதா, அல்லது மற்றொருவருடைய சகாயமும் வேண்டியிருக்குமா?' என்று மனம் கேட்க அறிவு கூறுகின்றது.

அறிவு கூறுதல்:

புகர்ச்சமய மாகின்ற பலசமயந் தன்னிலே புகுந்திடாமல்
அகச்சமய மாகின்ற சிவசமயத்திற் சைக்கே யகப்பட்டால்நீ
மிகப் பெரிதாம் புத்தியை நீ படைத்திருந்தும் பெரியோரை
மேவிடாமல்
தகப்படவே பிறவியென்ற நோய்க்குள்ளே இருந்துதான்
தளர்வதேனோ

மனம் கேட்டல்: 'ஆனால், பெரியவர்களைச் சாரவும் வேண்டுமோ?' என்று மனங்கேட்க அறிவு கூறுகின்றது.

அறிவு கூறுதல்:

பெரியோரைச் சாராமல் அவர்களுக்கே அன்பு செய்து பேசிடாமல்
தரியமா மதிதத்தில் சிவபூசை செய்யாமல் சுற்றிச் சுற்றி
அரியனுங் காணாத பரமசிவ மென்றதையு மறிந்திடாமல்
சரியென்று வினைப்பயனுங் கொண்டதுவே கோலமாய்ச் சாதித்தாயே.

மனம் கேட்டல்: ஆனால், தெளிந்த பெரியவர்களுக்கு ஜகத்திலே பிரயோஜனமில்லையே! அவர்கள் எவ்விடத்தில் இருப்பார்களோ! அவர்களைக் கண்டு தரிசிக்கலாமோ?' என்று மனங்கேட்க, அறிவு கூறுகின்றது;

அறிவு கூறுதல்;

தெளிந்த துறவி இகந்தனிலே தேகப் பிராரத் துவப்படிக்குப்
பொழிந்தே கரணத் தனு போகப் புவனத் திருந்து மெச்செயலும்
ஒழிந்து சிந்தை தெளிவுற்றே ஒன்றே சிவமென் றிருப்பார்கள்
இழந்த பேரும் அவரைக்கொண் டேறு வார்கள் இகத்தோரே.

மனம் கேட்டல்: 'ஆனால், இகத்தில் சஞ்சரிக்கிறதனால் பெரியவர்களுக்கு இடர் வாராதோ?' என்று மனம் கேட்க, அறிவு கூறுகின்றது;

அறிவு கூறுதல்:

கருவி யகன்றிவ் வுலகத்தைக் கனவென் றிருக்கக் கருத்ததனுள்
உருவைக் கண்டொப் புவமையற்றே யுள்ளும் புறம்பு மொன்றாகிக்
குருவைப் பணிந்த பூரணத்தில் குலாவு மடியார் சகந்தனிலே
மருவப் பொருந்தி வாழ்ந்தாலும் மாசற்றிருப் பார்வல்லவரே.

மனம் கேட்டல்: 'ஆனால், விபரீதம் மிகுந்து வந்ததானால், அதை நீக்கிக் கொள்ள வல்லமையுண்டோ?' என்று மனம் கேட்க, அறிவு கூறுகின்றது;

அறிவு கூறுதல்

மூந்த இருந்த அஞ்ஞான மூடமான சத்தியையும்
பந்த மறவே தணிந்துபரா பரனைத் தினமுங் கைக்கொண்டு
சிந்தை தெளிந்தே குருபரனைச் சிவமென் றெண்ணுந் தனிவதனால்
தொந்தம் அறுத்துச் சிவானந்தச் சோதி யதுவாய்ச் சுகிப்பாரே

மனம் கேட்டல்: 'அப்பேர்ப்பட்ட பெரியவர்கள் எந்தச் சாதியாயிருந்தாலும் தொண்டுபடலாகுமோ?' என்று மனம் கேட்க, அறிவு கூறுகின்றது;

அறிவு கூறுதல்:

சாதி பேதந் தனைக்குறித்துத் தயங்கி மயங்கித் தளராதே!
சாதி யாவ தெவரறிவர்? சருவ வுடலு மொன்ருச்சே!
சாதி யாவ ரெவரென்னில் தன்னையறிந்து சிவமான
சாதி பெரிய சாதியென்று சாற்றும் மறைகள் சத்தியமே!

மனம் கேட்டல்; 'ஆனல் பெரியவர்களைச் சாதி பிரித்துச் சொல்லுகிற தனலே குற்றமுண்டோ?' என்று மனம் கேட்க அறிவு கூறுகின்றது.

அறிவு கூறுதல்:

ஞானம் பதியா இழிகுலத்தோர் நாட்டிப் பிரித்தே சாதி தன்னை
ஈனசாதி யாரென்றே இகழ்ந்தார் மூத்தர் பத்தரையும்:
ஆன பெரியோர் தங்களையும் அவரி லொன்ருய்க் குறித்துக்கொண்
டீன முரைத்தே யருநரகி லிழிந்து போனரிகத்தோரே.

மனம் கேட்டல்: 'இப்பேர்ப்பட்ட பெரியவர்கள் ஜகத்தோர் இகழத் தக்கவராகத் திரிவானேன்? ஜகத்தோரிகழுவானேன்? இதனல் யாருக்குத் துன்பம், யாருக்கு இன்பம்? என்று மனம் கேட்க, அறிவு கூறுகின்றது:

அறிவு கூறுதல்: எண்சீர் விருத்தம்

பெரியோரைப் பித்தரென வுலகத் தோர்கள்
பேயரென்ன இகழ்வதென்ன பிரித்துக் கேளாய்:

திரிவார்க ளிச்சைபடி சகத்தோர் பார்த்துத்
தீவினையும் நல்வினையும் திரட்டிக் கொள்வார்;

சரியாச்சென் றிருவினையு மொழித்துப் போட்டுச்
சச்சிதானந்தமென்ற பதத்திற் சார்ந்து

துரியாதீ தப்பொருளைப் பெற்ற மந்தச்
சுயஞ்சோதி யாகியே சுகமுற் ருரே.

மனம் கேட்டல்: 'ஆனல், பெரியவர்கள் இருவினையும் ஜகத்தோருக்கு ஒப்பித்துச் சுகம் பெற்ருர்களே! அவர்களை இகழ்ந்த உலகத்தாரென்ன லாபம் பெற்ருர்கள்?' என்று மனங்கேட்க, அறிவு கூறுகின்றது:

அறிவு கூறுதல்:

பெரியோரை இகழ்ந்தவர்கள் பெற்ற லாபம்
பேசக்கேள் நெஞ்சமே! பெருமையாகப்

பரியேறிப் போனவன்றான் தீயில் வீழ்ந்து
 பதைத்துப்போய் அடிவயிற்றில் நெருப்பைக் கூட்டி

நரிவாயில் பொருள்பறிக்கு மின்பம் போல
 நகைத்திகழ்ந்தே எரிவாயின் நரகம் புக்கு

விரிவான எழுநரகில் விழுந்தி ளைத்து
 மெலிந்திடுவா ரென்றுமறை வீசுந் தானே.

மனம் கேட்டல்: 'ஆனால், பெரியவர்கள் மகத்துவம் இப்படியென்றும் அறியலானேன்; அப்படிப்பட்ட மகாத்துமாக்கள் தெரிசனங் கண்டு கொள்ளுதற்கு மார்க்கமுண்டோ?'' என்று மனம் கேட்க, அறிவு கூறுகின்றது:

அறிவு கூறுதல்: அறுசீர் விருத்தம்

குற்ற மேதுங் குறியாமல் குணமும் பலவாய் விரியாமல்
ஒத்துப் பொறிகள் புலனைந்தும் உறவாய் நீயு முகந்திதனைப்
பத்தும் பதன மாகத்தான் பட்சம் மிகவும் வைத்துரைத்தாற்
சித்த மதனைச் சிவமாக்குஞ் சிவா னந்த போதமிதே.

மனம் கேட்டல்: 'ஆனால் எவர்களிடத்திலும் சாத்திரத்தின் கேள்வி கேட்டுத் தெரியும்படி செய்து கொள்ளுகிறதுதானே. அவர்களாக்கினைக்கு உட்பட்டுத் தொண்டுபண்ண வேண்டுமோ?' என்று மனம் கேட்க, அறிவு கூறுகின்றது:

அறிவு கூறுதல்; எண்சீர் விருத்தம்

ஐயமின்றி யுடல்பொருளும் ஆவி மூன்றும்
 ஆண்டவனே யுன்னவென் றளித்துப் பின்னும்

துய்யகுரு நாதனுக்கே அடிமை யாகிச்
 சொன்னபடி கேட்பதற்கே தொண்டனாகி

மெய்யென்றே அவர்மனமுங் களிக்கும் மட்டும்
 வேண்டினதோர் சோதனைக்கு மிதத்தி டாமல்

செய்யதிரு மலரடியிற் காத்திருந்தாற்
 செவியதனி லுபதேசம் செய்வார் தாமே.

மனம் கேட்டல்: 'ஆனால், வெகு பிரயாசையாய் இருக்கும்போல இருக்கிறதே! சாத்திரக் கேள்வி மாத்திரங் கேட்டுக்கொண்டு புத்தியினாலே அனுபவித்து முத்தியடையக் கூடாதோ? குரு சமூகத்தில் தொண்டு பட்டு தான் முத்தியடைய வேண்டுமோ?' என்று மனம் கேட்க, அறிவு கூறுகின்றது:

அறிவு கூறுதல்:

இருவினையுஞ் சமமடைந்தே யெழுந்து வந்த
என்குருவாம் மாணிக்க ஈச னூர்க்கும்

குருவடிவாய் அம்பலவ ரூபதே சித்த
குறிப்பைத்தான் அறியாயோ குருட்டு நெஞ்சே!

மருவுமிந்த வுடலுக்கு ளுடலைக் காட்டி
வாக்குக்கு வாக்கருளி மனமு மொத்துத்

திருவடியில் அடையகுரு முகூர்த்தம் அல்லாற்
சிவானந்த போதமுந்தான் தெளிந்தி டாதே.

மனம் கேட்டல்: 'அப்படியானால், ஞானசாரியரிடத்தில் அனுக்கிரகம் பெற்றுக் கொண்டால் போதாதோ? சாத்திரமும் பார்க்க வேண்டுமோ?' என்று மனம் கேட்க அறிவு கூறுகின்றது;

சேறுபோல் தளதளென அலைபூ மிக்குள்
திடமான கம்பத்தை நாட்டி னக்கால்

மாறுகொண்டு விழுந்திடுமென் றதனைச் சுற்றி
மணற்கல்லைக் கெட்டித்து முறைக்கு மாபோல்

கூறுகின்ற சாத்திரத்தின் சாட்சி தந்து
குலையாதிடாத் திடமுற்றுக் குறித்து நின்று

வீறுகொண்டு நெஞ்சே! நீ அனுப வித்தால்
மெய்ஞ்ஞான வீடதனில் விளங்கு வாயே.

மனம் கேட்டல்: 'ஆனால், சாத்திரம் தெரியாத பேர்கள் சற்குருவினிடம் உபதேசம் பெற்றுச் சாதித்து அனுபவமடைந்த பேர்கள் பெற்ற காட்சி நூலிலுள்ள பொருளுக்கு ஒத்துக் கொள்ளுமோ?' என்று மனம் கேட்க அறிவு கூறுகின்றது.

அறிவு கூறுதல்:

உறுதிகொண்ட பிள்ளையென்றால் ஆசான் வைத்து
உபதேசங் கேட்டளவி லுறுதி கொண்டே

இருதயத்தில் நாட்டினது நழுவி டாமல்
எப்போது மதின் குறிப்பது தவறி டாமல்

மறுகவலை சாராம லூன்றப் பெற்றால்
வழங்குநூல் பேசுகின்ற வன்மைக் கொக்கும்

கிருபைதரும் முத்தியே அடைய லாகும்
கிட்டினவாக் கேதுகுறை? கேடில் நெஞ்சே!

மனம் கேட்டல்: 'ஆனால், ஞானானுபவம் ஒருவர் பெற்றிருந்தால் பெறாதவர்கள் அந்த அனுபவத்தைச் சொல்லென்றும் காட்டென்றும் சொன்னால், அவர்களுக்கு ஒத்துக் கொள்ளும்படி சொல்லலாமோ? அப்படி இப்படியென்றுங் காட்டலாமோ? ஆகிலும் மெய்ப் பொருளின் பிரகாசத்தைப் பேசனால், மனமொத்துக் களிப்பார்களோ?' என்று மனம் கேட்க, அறிவு கூறுகின்றது;

அறிவு கூறுதல்:

ஒருவர்தின வொருவர்சொரிந் தற்ற போதே
உற்றவர்க்கோ சொரிந்தவர்க்கோ வுற்றுப் பாராய்;

மருவுமந்தச் சொப்பனத்திற் கண்ட காட்சி
மகிழ்ந்தவர்க்கோ கண்டவர்க்கோ மதித்துப் பாராய்;

உருசியுடன் அறுசுவைகொண் டுண்ட வர்க்கோ
உவகையுடன் கண்டவர்கோ வூன்றிப் பாராய்;

தெரிசனமுங் கண்டுசிந்தை யற்ற பேர்க்குச்
சிவஞானம் அவரவர்க்கே தெளியுந் தானே.

மனம் கேட்டல்: 'ஆனால், மெய்ப்பொருளினுடைய பிரகாசம் அவரவர்கள் கண்டு களிக்கப்பட்டதுதானோ?' என்று மனம் கேட்க அறிவு கூறுகின்றது.

அறிவு கூறுதல்:

நீதானே அறிந்தல்லோ நிலைக்க வேண்டும்?
நிட்டூரர் சொல்லுகின்ற நெறியிற் சென்றால்

போதாது போதாது; பொந்துக் குள்ளே
புலியிருக்கு மென்னவதிற் புகுநது பார்த்தால்

வேதாள மென்றதொரு மயக்கந் தீரும்
மெய்யடியார் மனங்களிக்க மேவி வாழ்வாய்

வாதாடி முத்தர்களை விட்டி டாதே
மனமே! நீ யுள்ளபடி வணங்குவாயே.

மனம் கேட்டல்: 'ஆனால் தனித்தனியே சுகமடைவதாயிருக்க, பெரியவர்கள் ஒருவரோடொருவர் கூடிக்கொண்டு ஆனந்தம் மிகுந்து உறவாடுகிறார்களே! அஃதெவ்விதக் காரணம் பற்றி?' என மனம் கேட்க, அறிவு கூறுகின்றது.

அறிவு கூறுதல்

மறப்பான மூன்றுடலும் இழந்த முத்தர்
மனவெளியாம் பெருவெளியில் மருவ லாலே

துறப்பான ஆகாச மொன்றுந் தன்னில்
சூரியன்றன் பிரகாசத் தோற்றம் போலச்

சிறப்பாகத் தேகத்தி லிருந்த முத்தர்
திருட்டியினுற் கலந்தொன்றாய்த் தியானிப் பார்கள்;

மறைப்பான தில்லைநெஞ்சே! கண்ம ணிக்குள்
வன்னியொளி மருவுமந்த வண்மை பாரே.

மனம் கேட்டல்: 'ஆனால் சாத்திரம் சரியை, கிரியை, யோகம், ஞானமென்று சாற்றுகின்றதே! அவற்றுள் முன் சொல்லிய முத்தொழிலும் செய்து முடிந்த பின்னரன்றோ ஞானம் அறிய வேண்டும்? அப்போதன்றோ ஞானசாரியர் கிருபாகடாட்சம் வேண்டும்?' என்று மனம் கேட்க, அறிவு கூறுகின்றது:

அறிவு கூறுதல்;

சரியை முதல் முத்தொழிலுச் செய்கின் றோர்கள்
சாயுச்சிய முத்திரையைப் பணிய வேண்டும்;

உருசியுடன் அமுதளித்துப் பாத பூசை
உண்மையுட னுபசாரஞ் செய்ய வேண்டும்;

பரிசைகொண்டு சோதித்து நிந்தை சொல்லிப்
பகைத்துவிடின் நசித்திடுவர்; பலனே பாழாம்

விரிவுகொண்டு மயங்காதே உற்றுப் பாராய்:
வீணருடன் கேள்விவிட்டு மெய்யைப் பாரே.

மனம் கேட்டல்: 'ஆனால் அவ்வளவு மகத்துவம் இருக்கிறபடியினாலே அம்முத்தொழிலினது இலாபமுங் கூலியிலே முடித்துக் கொள்ளலாகாதோ?' என மனம் கேட்க, அறிவு கூறுகின்றது:

அறிவு கூறுதல்:

சாயுச்சிய முத்திரையை அடுத்துக் காத்துச்
சங்கைபற்றுத் திருவுளத்துப் பாங்குக் கொத்தால்

நீயுச்சிய மாகவென்று கிருபை நோக்கில்
நேரான முத்தொழிலி னிலாபம் நேர்ந்து

மாயுச்சிய மாகவே அம்பலத்தான்
மலரடிக்கே அன்பாகச் செல்வாய் நெஞ்சே!

பாயுச்சிய மாகவே பெற்றோ ருண்டு
பராபரத்தை அடைந்ததன் பண்பிஃதாமே.

மனம் கேட்டல்: 'ஆனால் இத்தகைய அனுபவத்தை இல்லறத்தி னின்று பெற்றுளார் எவரேனுமுண்டுகொல்லோ? அன்றேல் துறவறம் பூண்டு, சந்நியாசியாய்ப் பற்பல விரத வைராக்கியமும் சர்வ சங்க நிவர்த்தி யுஞ் செய்து ஜெகத் சஞ்சாரத்தை விட்டகன்று, ஆரணிய சஞ்சாரமுற்று வருபவர்களின் ஞானமென்னும் அறிவுப் பிரகாசமாகிய ஸ்பஷ்டப்பட்டு ளரோ? இவர்களிலுந் தன் மனத்துட்குடி கொண்ட அஞ்ஞானந்தகாரத்தை யோட்டும் வன்மையிலராகி, மூடராதலுமுண்டோ?' என்று மனம் கேட்க, அறிவு கூறுகின்றது.

அறிவு கூறுதல்:

சன்னியாசி யானவருள் மூட ருண்டு
சமுசாரஞ் செய்பவருள் ஞானி யுண்டு

முன்னாலே ஏதுவாம் பிராரத் வங்கள்
மூட்டிவிட்டு ஞானிக்கு முறைதப் பாது

பின்னாலே இருவினையுந் தொடரச் செய்து
பெற்றிடுவார் ஆசான்றன் கிருபை கொண்டு

பின்னுபின் னங்களா லென்றெண்ணாதே
பெருஞ்சோதி முத்திரையைப் பேணிக் கூடே.

மனம் கேட்டல்: 'ஆனால், இல்லறத்திலேயிருந்தும் ஞானம் பெற்றுக் கொள்ளலாமென்கிறது சுளுவாய் இருக்கிறதே! உலகத்திலுள்ள பலரும் ஞானாசிரியரிடத்து அனுக்கிரகம் பெற்றுக் கொண்டு மூத்தியை அடைவது அருமையாயிருக்கிறதே! அதிலென்ன பிரயாசை?' என்று மனம் கேட்க, அறிவு கூறுகின்றது.

அறிவு கூறுதல்

யாவர்களும் பெரியோரை அடுத்துக் காத்தே
அவரடிக்கே பணிந்துமிக அன்பு செய்தே

ஆவலுடன் பன்னிரண்டு வருடங் காத்தும்
அப்போது பக்குவத்தை அறச்சோ தித்துத்

தேவர்முதல் மூவர்களுந் தேடிக் காணுத்
திருவடியும் முடிநடுவுந் தெரிசிக் கத்தான்

நாவதனு லுபதேசஞ் செய்வார் நெஞ்சே!
நல்லறிவால் வெகு பூசை நவின்ற தாமே.

மனம் கேட்டல்: 'ஆனால், புண்ணியம் மிகுந்தது, சிவாசார பத்தி, நேயம், சிவார்ச்சனை வெகு காலஞ் செய்து, பின்னே நல்லறிவு பிரகாசித்திருக்கும் பேர்களுக்குப் பெரியவர்கள் தரிசனம் கிட்டும். அப்பேர்ப்பட்டவர்கள் ஆசான் திருவுளத்துப் பாங்குக் கொத்து நடந்து பரகதியடைவார்கள் என்று சொன்னதும் அறியலானேன் ஆகிலும், பெரியவர்களை அடுத்து, அவர்கள் திருவுளத்துக்குப் பாங்குபோல நடந்து, தீக்ஷையும் பெற்றுக் கொண்டு, சாத்திரத்திலுள்ள பூட்டை அனுபவத்துக்கும் ஒப்பும்படி தெரியவுங் கேள்விப்பட்டுக் கொண்டு ஆசாரியாரைக் கவனியாமல், மதங்கொண்டு ஆசாரியர் திருவடி சூட்ட மகிழ்ச்சியில்லாமலும், பூரண தீக்ஷயாகாமலும், தட்டிப் போகிறதுண்டோ?' என்று மனங் கேட்க, அறிவு கூறுகின்றது:

அறிவு கூறுதல்:

அடியருக்குத் தொண்டாவ தருமை நெஞ்சே!
அவரவர்க்கு விட்டகுறை அடுத்த காலம்

பிடியாம லிருப்பாரோ? தொட்டுக் கொள்வார்;
பேதைமைக ளாலுகப் பிணக்கு வந்து

குடியாகும் அதனாலே நழுவிப் போவார்
குற்றமறச் சற்குருவைக் குறிக்கச் சொல்லும்

விடியாத காலத்தி லிருளே யாகும்
விடிந்த பின்பு கண்ணுக்கு வெளிச்ச மாமே.

மனம் கேட்டல்: நீ உலக விபரீதம் வருகிறதாகவும், அதனாலே ஆசானை விட்டு நழுவும்போது ஆசானைக் குற்றமாகக் குறித்துக்கொண்டு போகிறதாகவும் சொன்னதை அறியலானேன் ஆகிலும், இவ்வளவிலே

நழுவினாலும் இன்னொரு ஜென்மம் புண்ணியம் மிகுந்த மானிடமாயெடுத்து,

சடுதியிலே விட்டகுறை முடியும்படி ஞானி சாத்திரியார் கிருபையடைந்து, முத்தியடைவார்களோ?' என்று மனம் கேட்க, அறிவு கூறுகின்றது.

அறிவு கூறுதல்:

இவ்வளவுந் தொட்டேகும் போது மீண்டும்
இகபோக விபரீதம் வந்தா லுந்தான்

அவ்வளவுந் தான்குருவின் திருவுளத்துக்
கன்புதவ ருமலே அகன்ரு ளுகில்

தெவ்வளவாய் விட்டகுறை தாக்குஞ் சேர்க்குந்
தேசிகனைக் குற்றமென்னில் தெளிந்து மேலாம்

நல்வளவா யிழிந்துவிடும்; பின்னு மந்த
ஞானகுருத் துரோகமுற்று நரகெய் வோர.

மனம் கேட்டல்: 'ஆனால், ஞானுசாரியரிடத்தில் ஒத்தாற்போலிருந்து தெரிந்துகொண்டு, ஞானகுருத் துரோகி தானே தான் தெளிந்தவன் போலப் பேசுகிருனே! உலகத்தார்களுஞ் சில பேர்கள் அதைக் கேட்டு மயங்கி ஒத்து வணங்கிருர்களே! அவர்களுக்கும் இவர்களுக்கும் என்ன இலாபங் கிடைக்கும்?' என்று மனங் கேட்க, அறிவு கூறுகின்றது:

அறிவு கூறுதல்:

புலித்தோலைப் பசுவுரித்துப் போர்த்துக் கொண்டு
புலியென்ருற் புலியாமோ? இன்னங் கேளாய்:

பலிப்பாகப் பெண்போலப் புருடன் வேடம்
பகட்டினுல் அவனுருவம்பாவை யாமோ?

சலிப்பான நரகத்தில் வீமு மாண்பர்
சற்குருவின் றன்னிடத்திற் கற்றுக் கொண்டு

நலிப்பாகப் புலிப்பாயு மியல்பு போல
நானிலத்தோர் வணங்கினதா லீன மாச்சே.

மனம் கேட்டல்: 'ஆனால் அவன்ருனுங் குருத் துரோகியானபடியினுலே எவ்வளவு தெளிவாய்ப் பேசினுலும் முத்தி விலக்கனென்பது சரியே. அவன் நிச்சயவானென்று நேசிக்கிறவர்கட்கு என்ன இலாபம்?' என்று மனம் கேட்க, அறிவு கூறுகின்றது:

அறிவு கூறுதல்:

மரப்பசுவின் முலையதனிற் பாலுண் டாமோ?
மலடிக்குச் சுதனுடைய மகிழ்ச்சி யுண்டோ?

தூரத்தறியாத் தண்ணீர்ப்பாம் பதன்த லையில்
துலங்குமணி யிரத்தினமுந் தோன்றுமோசொல்;

பரத்தினுடை நிலையதனைக் குருமுன் பாகப்
பதியாத மூடனையே பணிந்த தாலே

விருத்தமே யல்லாம லுதவி செய்ய
மெய்ஞ்ஞான முண்டாமோ? விளம்பு நெஞ்சே!

மனம் கேட்டல்: ஆனல், அறியலானேன். பெண்டிர்க்கு ஞானம் யாராதென்றும் புருடர்க்கு மாத்திரம் ஞானமுண்டென்றும் கூறுதல் எதனுலே? அது விளங்குமாறு சொல்க' என்று மனம் கேட்க, அறிவு கூறுகின்றது;

அறிவு கூறுதல்:

அஞ்சுகின்ற பெண்ணென்றும் ஆணென் றுந்தான்
அஞ்சுபஞ்ச பூதத்திற் பிரிந்த துண்டோ?

நெஞ்சிலுள்ள வஞ்சகங்கள் வேறு முண்டோ?
நிறம்வேறு, குணம் வேறு, நேசம் வேறு?

மிஞ்சுகின்ற உயிர் தானுண் பெண்ணென் றுண்டோ?
மெய்கண்ட நூலதிலே பிரித்த துண்டோ?

சஞ்சலத்தாற் சொற்கேட்டு மயங்கி டாதே
சங்கையற முன்னூலைச் சார்ந்து பாரே.

மனம் கேட்டல்: 'ஆனுல் பேதைமை யென்பது மாதர்க்கு அணிகலம், என்று ஔவையார் கூறியதென்கொல்?' என்று மனம் வினவ-அறிவு கூறுகின்றது;

அறிவு கூறுதல்:

ஆணுக்கும் பெண்ணுக்கும் அறிவொன் றேயாம்:
ஆனலும் பேதைகுணம் பெண்ணுக் குண்டு.

வீணுக்கே எடுத்தசன்மம் அனந்தங் கோடி
விவேகமுத்தி யடைந்தவர்கள் அவருளுண்டு;

ஊணுக்குத் தேடியுண்டே உறங்கிச் செத்த
உலுத்தருண்டு புருடரி லேயனந்தங் கோடி:

தாணுக்கே ஏகசரா சரந்தாம் நெஞ்சே!
[illegible]குருவுங் [illegible]டியே சார்ந்து பாரே.

மனம் கேட்டல்: 'ஆனால், அதுவுமறியலானேன். நான் கேட்ட சங்கைக்குச் சரியென்னும்படி சமாதானங் கூறி நன்றாக அருமையாய்த் தெளிவுடனே யார் சொல்லப் போகிறார்கள்? இனிமேல் நடக்க வேண்டுவ தென்ன?' என்று குதூகலங்கொண்டு மனம் கேட்க, அறிவு கூறுகின்றது:

அறிவு கூறுதல்:

இன்னமின்னம் பிறவிதனில் பிறத்தல் நன்றோ?
இனிமேலும் பிறவாம லிருக்கை நன்றோ?

உன்னுகின்ற நினைவேது, கருத்தங் கேதோ?
ஓதுகின்ற வாக்கேது, செவிதா னேது?

பன்னுகின்ற கலையேது, பண்தா னெங்கே?
பாடுகின்ற சத்தந்தான் தொனித்த தெங்கே?

முன்னிலையாய் ஞானகுரு மொழிந்த தேது!
முத்திநெறி யாய் மனமே முனைந்து பாரே.

மனம் கேட்டல்; 'ஆனால் எவ்விதத்திலேயும் பார்க்குமளவில் இந்தக் குடும்பச் சேற்றில் உழைத்துக் கொள்ளுகிறதும், அதற்கொத்தாசையாய் உலகத்தார் சொல்லை விசுவாசமாய் ஒத்துக்கொள்ளுகிறதும் துக்கமே யொழிய, உள்ளபடி குடும்பத்தார் என் மேல் பிரியமாயிருக்கிறதேயில்லை. எப்படியெனில், நான் சில நாள் சம்பாதனையில்லாமலும் தேக சௌக்கிய மில்லாமலும், ரோகஸ்தனாய் இருக்கும்போது சர்வத்திர பேர்களும் என் மேல் மனம் சலிப்புற்றிருந்தது கண்டேன்; ஏவல் பணிவிடையில் வெறுப் பானதுங் கண்டேன; சாலவும் பிரஞ்ஞை தப்பியிருக்கும்போது பெண்டு பிள்ளைகளை எதிர் வீட்டார் ஆஸ்தியைக் கேட்கச் சொன்னதுங் கண்டேன்: அவரவர்களழும்போது ஒப்பாரி சொல்லி அழுகிற வயணமுங் கண்டேன்; எல்லாம் பொருளை இச்சித்திருப்பதென்பதையும் அறியலானேன்; எனக்கு உரிமையான பேர் ஒருவரையும் காணேன்; அல்லது சில நாளுழைத்து மக்கள் முதலாகிய பேர் சம்பாதிக்கச் சாமர்த்தியம் வருந்தனையும் உழைத் துப் போட்டு அதன் பின் சும்மா இருப்போமென்றாலும், என்னிச்சைப்படி நடக்கமாட்டாது, அதுவுமறியலானேன். ஆகையால் சத்துருவாகிய இந்தப் பேய்க் கூட்டங்களை விட்டுக் காயம் தளராமுன் சிவன்றிருவடி அடைவதற்கு நீ சொன்னபடி சத்தியமாய் நடப்பேன்;' என்று மனஞ் சொல்ல அறிவு கூறுகின்றது.

அறிவு கூறுதல்: அறுசீர் விருத்தம்

பொன்னின் நெஞ்சமே! சொற்படி கேட்கவும் பொருந்தியே நன்றாக
இன்ன மின்னமும் பேதைமை கொள்வையோ? இல்லறந் தனைவிட்டுத்
தன்னைத் தானறியாமலுஞ் சிவனடி சார்வது மிழந்தக்கால்
பின்னம் பின்னமாய் இரண்டுங்கெட்டானென்றே பேதைமை
கொள்வாயோ?

மனம் கேட்டல்: 'இதனால், நான் தெளிந்த விதத்திலே பேதைமை என்பதிருக்குமிடங் காணேன்; சர்வபணியுமறுத்து விட்டேன்; ஆனால் தெளிவாய்க் கேட்பதற்குத் தெரியும்படி செய்யுமுதவி வேண்டும்' என்று மனங் கேட்க, அறிவு கூறுகின்றது:

அறிவு கூறுதல்;

சுத்த நெஞ்சமே! சற்குரு மலரடி தொழவகை கேட்பாயேல்.
பத்த னாகிய மானபி மானமும் பற்றற விட்டேநீ
குற்ற மேதுமற் றெவ்விடங் காண்கினுங் கூறுடற் களிப்புற்றுப்
பற்று மாகிய திருவடி கதியெனப் பண்புடன் பணிவாயே,

மனம் கேட்டல்: 'ஆனால், மானபிமானம் விட்டு, குருவை எவ்விடங் காண்கினும் மனோவாக்குக் காயம் ஒத்து அன்பு களிகூர்ந்து எண்சாண் தேகத்தை இரு கையாக்கி, நன்மலரை அவர் திருவடிக்குச் சார்த்தி, தீர்க்க தண்டம் பண்ணச் சொன்னாய்; அதிற் சந்தேகமில்லை: இவ்வளவும் இழந்த நான் இதற்கு அஞ்சுவேனோ? அப்படியே செய்வேன், ஆனால், அதிகமாக உலகத்தார் இகழத் தக்கவராகக் குரு மிகுந்த அசங்கிய ரூபமாயிருந்தால் நான் பணியுமளவிலே நிந்திப்பார்களே! அல்லது அவ்வாறிருக்கினும், அப்படித்தான் செய்தல் முறைமையோ?' என்று மனங் கேட்க, அறிவு கூறுகின்றது;

அறிவு கூறுதல்:

எண்சீர் விருத்தம்

குவலயத்தோர் சொல்கின்ற கேள்வி யாலே
கூசுகின்ற நெஞ்சமே கூறக் கேளாய்:

அவலமாங் கடலுக்கு ளாழு மாண்பர்
அபிமானம் வந்துன்னை அண்டிற் றானல்

சவலையாய் நழுவிடுவாய் முத்தி மார்க்கந்
தான்கிடைப்ப தருமையதைச் சார்ந்தே நீதான்

சிவனடியை யடைவதற்குச் சற்கு ருத்தாள்
திருவுளத்துக் கொத்தவழி செல்லு வாயே.

மனம் கேட்டல்: 'ஆனால், சற்குருவின் திருவடியில் சரணஞ் செய்வதற்கு மார்க்கமுண்டோ?' என்று மனங் கேட்க, அறிவு கூறுகின்றது;

அறிவு கூறுதல்:

ஓம்நமசி வாயவென்ற அட்ச ரத்தை
[illegible] புருவவாய் மூக்கு நாசி

தாமதங்க ளில்லாமல் மூக்கா லுந்தான்
சற்குருவின் றிருவடியில் தான மூத்தி

நேமமா யிப்படிஞ் செய்வதுந்தான்
நேரான சரணத்தின் தீட்சை யாகும்;

ஆம்பின்னே யென்றெண்ணி யிருந்தி டாதே
ஐயனுள்ளங் களித்திடவே யாசை வைப்பாய்.

மனம் கேட்டல்: 'ஆனல் சரண தீட்சையுமறிந்தேன்: செய்யவுந் துணிந்தேன்; கருத்தில் செய்யும்படி குறித்தால் போதாதோ? காயத்தினுலும் மிகுதியாய் வணங்கிக்கொள்ள வேண்டுமோ?' என்று மனங் கேட்க, அறிவு கூறுகின்றது:

அறிவு கூறுதல்:

காயமன வாக்கினுல் அடைந்த கன்மம்
காயமன வாக்கினுற் கடக்க வேண்டும்:

காயமன வாக்கினு லொன்றெரு ளித்தால்
கடமெடுக்க ஏதுவாய் கண்டு பாராய்;

நேயமுள ஐம்புலனும் சூழ்ந்த துன்பம்
நீக்குதற்கு முறையிதுதான் நிலைத்துப் பார்நீ;

மாயவித்தை யாமென்று நழு விடாதே
வஞ்சகத்தை நீவிட்டு வணங்கு வாயே.

மனம் கேட்டல்; 'ஆனல், அப்படியே செய்கிறேன்; இன்னஞ் சற்குரு திருவுளத்துக்குப் பாங்காய் நடக்கும் மார்க்கங்கள் சொல்லுக' என்று மனங் கேட்க, அறிவு கூறுகின்றது:

அறிவு கூறுதல்:

வஞ்சனைபொய் சூதுகப டங்கள் நீக்கி
மானவபி மானமுதற் பெருமை நீக்கி

அஞ்சுகின்ற கோபமாங் காரம் நீக்கி
ஆசையதைப் பாதியடி யோடே நீக்கித்

துஞ்சவே சோதித்துப் பார்த்தா லுந்தான்
துணிவாகித் திருவடியே கதியென் றெண்ணித்

தஞ்சமென்றே ஐயனது நிழல்போற் காத்துச்
சரணத்தி லேவல்செய்து தழைத்தி டாயே.

மனம் கேட்டல்: 'அப்படியே தொண்டு செய்கிறதற்கும் ஆளானேன்; எத்தொழிலுமில்லாமல் சர்வ ஆசையுமிழந்து, நிரந்தரமாய் இருக்கிற பெரியவர்களிடத்தில் தொண்டுபட்டிருந்தால், வயிற்றுப்பசிக்கு அன்னம் வேண்டியிருக்குமே! அதற்கென்ன வயணம்?' என்று மனம் கேட்க, அறிவு கூறுகின்றது:

அறிவு கூறுதல்:

அறுசீர் விருத்தம்

இச்சையுடன் எத்தனை நாள் இவ்வுலகில் வாழ்ந்தாலும் இடரே சொல்வார்
நச்சைவரு மிதனாலே தெளிவுற்ற மனமென்று நல்லோர் சொல்வார்;
கச்சடியை விட்டுவிடு; முப்பொருளை ஓர்பொருளாய்த் தனித்துப் பாராய்;
பிச்சையென்ன விசாரமென்ன? தலைமேலே சுமந்துவரப் பெருமானுண்டே.

மனம் கேட்டல்: அப்படியிருக்கச் சிவ சொருபத்தைப் பெற்றிருக்கின்ற பேர்கள், ஆசாரத்துக்காகப் பல விதங்களான தொழில் செய்கிறதும், சித்துகள் வித்தைகள் செய்கிறதும், பொய் சொல்லுகிறதும், சிவ சின்ன வேடத்தைக் கபடமாகத் தரித்துக் கொள்ளுகிறதும் என்ன?' என்று மனம் கேட்க, அறிவு கூறுகின்றது;

அறிவு கூறுதல்:

ஆனைமுதல் எறும்புகடைக் கழுதளித்துக் காக்குமொரு வரனேயல்லால்
சேனைவித மாகவிந்த மானிடர்கள் செய்வதெல்லாஞ் செகத்தின் மாயை;
வானைமுதல் சுமந்தவரார்? உண்டபின்பு களித்தவரார்? உற்றுப் பார்க்கில்
தேனையுண்டு ருசிகண்ட திருடனைத்தான் கண்டவர்க்குத் தெரியுந் தானே.

மனம் கேட்டல்: 'ஆனால், அறியலானேன்; பெரியவர்களிடத்தில் பக்தி வைராக்கியத்துடனே நிமிட நேரமாகிலும் பிரியாமல் சரணடைந்து ஏவலுஞ் செய்து கொண்டிருக்கிறவர்களுக்கு எந்தப் பதவி கிட்டும்?' என்று மனம் கேட்க அறிவு கூறுகின்றது;

அறிவு கூறுதல்:

ஆசான் இருபை மிகுந்ததனால் அந்த உடல்போய் மறுவுடலில்
இருந்தும் தன்னண்டைக் குறைவொன் றில்லா நிறைவாகத்

தேசா நேசர் சூழ்ந்திருக்கத் திருவோலக்கஞ் சேவிக்க
ஈசா வென்றே மறைபோற்ற எய்தும் பரம பதம் நெஞ்சே!

மனம் கேட்டல்: 'ஆனால், நிழல் போலப் பிரியாமல் சரணத்து ஏலலுஞ் சலியாமற் செய்கிறேன்; ஐயா! எத்தனை பிறவியோ எடுத்து வந்து நொந்திருக்கிற நான், இன்னுமொரு பிறவி பிறப்பேனோ! முழுதும் பிறவாமலிருக்கிற மார்க்கம் உண்டோ? அதைச் சொல்லுக,' என்று மனங் கேட்க, அறிவு கூறுகின்றது:

அறிவு கூறுதல்: எண்சீர் விருத்தம்

உடல்பொருளும் ஆவியுஞ்சற் குருநா தற்கே
உண்மையுடன் உதகத்தால் தாரை வார்த்து

நடமாடு மிம் மூன்று மெனவென் றெண்ணி
நாயகனுஞ் சிவனையே யடிமை யாக்கு:

திடவாக்குத் தவறாமல் நிலைத்து நெஞ்சே!
தேகந்தா னொழியளவும் உதவி செய்தால்

படமாடும் அரவத்தை அணிந்த ஈசன்
பதம்பெறுவாய் உள்ளபடி பகர்ந்திட்டேனே.

மனம் கேட்டல்: 'ஆனால், நல்லதாயிற்று! இது வரைக்கும் நானே உடல் பொருள் ஆவி மூன்றுக்கு முடையவனென்று நீ சொன்ன படி கேட்டுச் சருவ சங்கையுமிழந்து நிருவிகாரியாய் என்ன கதியென்று கேட்கு மளவிலே சிவனுமொன்றும், சிவனுக்கு உடல் பொருளாவி சொந்த மென்றும், அவற்றைக் குருவுக்குத் தத்தஞ் செய்து சிவனை அடிமையாக்கி ஆசான் சொற்படி நடந்து சிவேசனுகிறதாய்ச் சொன்னாய்: மகாசந் தோஷமாயிற்று! அப்படியே சீடன் முத்திபடைகிறதனுல். நானித்தனை பிரயாசைப்பட வேண்டியதென்ன? நான்-நீ யார்? இவ்வளவு நான் சந் தேகமற்றுத் தெளிவு கொண்ட இலாபமென்னவாகப் போகிறது?' என்று கேட்க, அறிவு கூறுகின்றது:

அறிவு கூறுதல்:

சிவனே நீயாகும்: அறிவும் நீயாம்;
சிவன்றானே நீயாகும்; பரமும் நீயாம்;

தாவுகின்ற செயலுடனே மனமென் றுன்னைச்
சாற்றியதோர் நாமமாஞ் சர்வ சங்கை.

மேவவே மொழிகிறது மனதால் நெஞ்சே!
மெல்லமெல்லச் சொற்படியே மேவினக்கால்

நாவுதனிற் பிரிக்கின்ற பேத மற்று
நாம் சிவமாய் வாழலாம் நாடிப் பாரே.

மனம் கேட்டல்: 'ஆனால், அறியலானேன். இனி உடல் பொருளாவி மூன்றும் குருவுக்குத் தத்தம் பண்ணிச் சொன்னாய்; இந்த மூன்றையுந் தெரியப்படுத்துக,' என்று மனம் கேட்க, அறிவு கூறுகின்றது:

அறிவு கூறுதல்:

உடலென்றாற் சடாதார உடலே யாகும்:
உயிரான பிராணனே யாவி யாகும்;

திடமாக இரண்டையுந்தா னெனதென் றுற்ற
சீவனே சிற்றம்பலப் பொருள தாகும்:

அடைவாக இம்மூன்றுங் கொடுத்துத் தன்னை
அடிமையெனச் சத்தியமா யிருந்தால் நெஞ்சே!

இடமான கதிபெறவே உபதேசிப்பார்:
இப்படியே குருபதத்தில் இட்டம் வையே.

மனம் கேட்டல்: 'அப்படியே செய்யலுற்றேன்; இனித் தீட்சையென்பதும், நூலென்பதும், குருசொல்லென்பதும், சாதகமென்பதும், முத்தி வீடு என்பதும் தெரியச்சொல்லுக,' என்று மனம் கேட்க, அறிவு கூறுகின்றது:

அறிவு கூறுதல்:

தீக்கையது நூலாகும்: நூல்வி ளக்காம்;
திறமான சற்குருசொல் உபயமாகும்;

தாக்குகின்ற சாதகந்தா னேணியாகும்:
சபையென்ற வெளிதானே வீட தாகும்;

மார்க்கமென்ற திதுநெஞ்சே! முன்னோர் கூட
வாழ்ந்தவரும் இப்படியே மருவிப் பாராய்;

நோக்கையிடல இதிலொன்று நழுவிற் றானல்
நொந்துநொந்து பிறவினியில் நுழைக்கும் பாரே.

மனம் கேட்டல்: 'எல்லாம் உள்ளபடியென்றும் அறிந்து கொண்டேன். இனிமேல் சற்குருவினுடைய திருவுளம் மகிழ்ந்து, நான் கடைத்தேறும் பொருட்டு உபதேசஞ் செய்யும்படி சொல்லுக,' என்று மனங் கேட்க, அறிவு கூறுகின்றது:

அறிவு கூறுதல்:

அப்படியே செய்விப்போம் அழகு நெஞ்சே!
ஆசான்றன் திருவடிக்கே அன்ப தாக

எப்படியா கிலுமுன்னை மாயை கிட்டி
இதம்போலாம் செனனமதற் கிடங்கொ டாதே

செப்படிபோல் வந்ததொரு செனனம் நீங்கிச்
சிவானந்த போதகமாய்த் தெளிவாய் நீயும்;

மைப்படியுங் கண்ணியங்கன் குருவாய் வந்து
வாதனையைத் தீர்த்திடுவான் வணங்கு வாயே.

பொதுக் கவனிப்பு: இது வரையிலுஞ் சிவனைப் பின்னிட்டு மனத்தை முன்னிட்டு, சற்குருவைப் பின்னிட்டு அறிவு முன்னிட்டுக்கொண்டு மனத்திலுடையபணியறுத்துச் சற்குரு கடாட்சம் பெற்றுக் கொள்ளும் வகை கூறினது. இனி மனத்தைப் பின்னிட்டு ஜீவனை முன்னிட்டு ஜீவனுக்குள் மன மோடுங்கி முத்தியடையத் தக்கதாக அறிவைச் சிவனுக்குப் போதித்து நீ நானென்று இரண்டில்லாத பரிபூரணமாய் ஆக்கும் பொருட்டுச் சிவனுக்குக் குருசிவானந்தம் போதிக்கும் மார்க்கம் கூறுகின்றது.

ஜீவன் சொல்லுதல்: எண்சீர் விருத்தம்

ஆதியே! அந்தமே! அருமையான
அருட்க டலே! ஐயனே! அகண்ட மூற்ற

சோதியே! சொரூபமே! சுகத்தைக் காட்டும்
சுத்தனே! சித்தனே! சுயம்பிற் பொங்கும்

பாதியே! பரமனே! பாரின் மீதே
பரம்போகச் சுந்தரமா யெழுந்து வந்த

நீதியே! என்னுடைய பிறவி நீக்கு
நிச்சயமே திருவடிக்குச் சரணென் றேனே.

குரு சொல்லுதல்:

தீக்கைமுறை யாகவே சரணஞ் செய்த
செல்வனே! ஞானமென்ற தீரம் பெற்றுப்

பாக்கியமாய் மெய்ப்பொருளைக் கொள்ள வேண்டிப்
பாரினிலே வெகுபேர்கள் பதைத்து வந்தார்.

பாக்கியத்தாற் சிதறினர் சிலராம் பேர்கள்:
பாழ்மனத்தாற் சிதறினர் சிலராம் பேர்கள்.

தாக்கியதோர் சாதகத்தில் தாளா மற்றுன்
தவறுண்டே போயினர் சங்கை யுற்றே.

சங்கையது விட்டாற்போல் தொண்டு பட்டுச்
சாத்திரத்தின் பூட்டுகளைத் தெரிந்து கொண்டு

மங்களமாய்த் தீட்சைதனைப் பெற்று நன்றாய்
வையகத்தின் சுழலினிலே மயங்கிச் சென்று

பங்கமாய் அபிமானத் தொழிலே செய்து
பதுங்கினர் குருமுகத்துக் காகா மற்றுன்

திங்களணி சடையார்தம் பாதஞ் சேராத்
தீவினையில் மெலிந்திட்டார் சிலராம் பேர்கள்

அப்படியே நீநழுவித் தடத்தை விட்டே
அம்பலத்திற் சேகாமற் காலன் பாசந்

தப்பவகை யறியாமற் பிறவி தன்னிற்
சாருவையோ நிலைகொண்டு சாதிப் பாயோ?

ஒப்பவே யுடற்பொருளுமாவி மூன்றும்
உதகத்தால் தாரைவிட்டே யுனை நா னென்று

செப்பவுந்தா னுவிழந்தே அடிமை யாகிச்
சிந்தையற்றுச் சிவமாகி வாழ்க நீயே.

ஜீவன் சொல்லுதல்:

பாக்கியங்கள் பெறவேண்டிக் குருவ டிக்குப்
பதறியே வந்ததொரு பாரி லுள்ளோர்

வாக்கினல் மனத்தாலுஞ் சாத கத்தின்
வருத்தத்தாற் சிதறினபே ரார ரையா!

நோக்கினதிற் றவறாமற் பிடித்து முத்தி
நுண்ணறிவாற் பூரணத்தை அடைந்த தாரோ?

தாக்கிய தோர் மைந்தர்களை யறியச் சொல்லும்
குருமூர்த்தி சொல்வாய் நாதா!

குரு சொல்லுதல்:

எத்தனையோ மைந்தர்களைப் பெற்றே னப்பா!
எடுத்துரைப்பேன் மதலையே இன்பமாகப்

பத்திவை ராக்கியமும் நழுவி டாமல்
பாரிலுள்ளோர் தங்களுக்குச் சொந்த மாக

முத்திபெற மனக்கண்ணும் பிரகா சித்து
மூதறிவால் தத்துவத்தை முழுது மாளச்

சத்துசித்தா னந்தமுமாய்ப் பூரணத்தைச்
சார்ந்திட்டால குழந்தையென்ற தங்கந் தானே.

ஆமென்றே வந்தவர்க ளின்ன முண்டிங்
கவரவர்க்குத் தீட்சைவைத்தாம் அன்ப தாக

ஓமென்ற முத்திநெறிக் கொவ்வு வாரோ!
ஓதுங்கயே பதுங்கியே யோடு வாரோ!

நாமென்ற அகங்கொண்டு நழுவிப் போனார்
நாதனையே தூடித்து நம்பப ருமல்

போமென்றே தள்ளவில்லை அவர்கள் தாமே
பொல்லாங்கைக குறித்தல்லவோ போய்விட்டாரே.

நிலைக்கவென்று வந்தவரில் தவறிப் போன
நெஞ்சினரைச் சொல்லக்கேள் நினைவாய் நீயும்;

மூலைகருதிக் கைப்பிடித்துப் பாலுண் ணுமல்
மூடத்தால் நாயென்னு மகந்தை யுற்றுக்

கலைகருதி நில்லாமல் சாதிக் காமல்
கற்றபொருள் போதுமென்றே பெருமை கொண்டு

கொலைகளவாம் வஞ்சகத்தை விடாமற் ருனே
குலைந்திடான் வைத்யலிங்கன் குருரன் ருனே.

ஜீவன் சொல்லுதல்:

அப்பனே! மைந்தர்கள் தம் திறத்தைக் கேட்டேன்
அறிந்திட்டேன் முத்திபெற்றோர்க் கடியேன்ருனே;

செப்பமாஞ் சரணங்கள் கோடி செய்தேன்;
சிதறினவர் பால்மனமுஞ் செல்ல ஒட்டேன்:

கொப்பெனவே எனையாள இங்கு வந்த
கொற்றவனே! உனைப்போலத் துலக்கங் காணேன்:

இப்பொழுதே யடிமை கொண்டு காக்க வேண்டி
இரங்கியே யருள்புரிவாய் என்றன் கோவே!

அறிவாள ளுகியே பணிய றுத்தே
அச்சங்க ளெல்லாந்தான் அறுத்துப் போட்டுக்

குறியாள ளுகவே துணிந்து வந்த
கொடும்பாவி ஏனையாளக் கூச்ச மென்னே?

தறியாள ளுகிநின்ற வுலகத் தேதான்
சங்கையது வந்தாலுந் தாள மாட்டேன்!

முறியாள வந்தகுரு நாதா! உன்றன்
முகிழ்மலர்த்தாள் கதியென்று மூனந்திட் டேனே.

குரு சொல்லுதல்:

நிலமதனைச் சலத்தினுற் சுத்தி செய்து
நிராமயமாய்க் கணபதியை நாட்டி வைத்துப்

பலமுடைய சோதிமலர் சார்த்தி மிக்க
பரிவான புகைதூபங் காட்டிப் பின்னுந்

தலமுடைய வெளியதனை நிவேத னஞ்செய்
சரணஞ்செய் என்மகனே! உபதே சிப்போம்.

பலமுடனே இடம்வலமாய்ச் சுற்றி வந்து
பெருவிரலைப் பற்றிக்கொள் பேரின் பத்தே.

அன்புடனே யுடல்பொருளும் ஆவி மூன்றும்
அறுதியாய் அளித்துவிட்டு நீதா னையா!

தென்புடனே அடிமையெனச் சத்தி யஞ்செய்:
கிதருமல் நில்லப்பா! தீட்சை வைப்போம்:

பின்புன்றன் செவிதானே யோனி யாகப்
[illegible] லிங்க மாச்சே;

இன்பமுடன் அனுபோகத் திருக்க வென்றே
இருசெவியி லுபதேச மேற்று வேனே.

ஜீவன் சொல்லுதல்:

அப்படியே பஞ்சசத்தி பூசை செய்தேன்;
அழகாகச் சரணம்பிர காரஞ் செய்தேன்;

செப்பினதோர் பெருவிரலைப் பற்றிக் கொண்டேன்;
தேகமுடன் பொருளாவி தத்தந் தந்தேன்;

ஒப்பதுவா யானுமே யடிமை யானேன்;
உகமுழுகத் தடைவரினும் அசையா நிற்பேன்;

தற்பரனே! தீட்சைசெய்வாய் கருணை வைத்துச்
சற்குருவே! திருவடியிற் சரணென் றேனே.

குரு சொல்லுதல்: அறுசீர் விருத்தம்

ஞான மென்பதில் நால்வகை யுண்டவை நாமுரைத் திடக்கேளாய்;
தான முற்றனர் சரியையுங் கிரியையுஞ் சாருமே சிவயோகம்,
மோன முற்றமெய்ஞ் ஞானமே நான்கதா முடிவதைப் பெறுவாயே.
ஈன மற்றவென் மைந்தனே! உன்னுடை இன்பமே துரைப்பாயே.

ஜீவன் சொல்லுதல்:

தேசிகா! இந்த நால்வகை யென்றவை தெரியவும் உரைத்திட்டால்
மோச மாயின்ப முற்றிருப் பததனை மொழிந்திடுகெனக் கேட்பேன்:
ஆசை யற்றதா யிருந்திடி லுழைத்திட அதிசயங் கொள்வேனுன்:
நேச முற்றதிற் பத்தியே யுரைத்திடில் நிலைத்திடு மையாவே!

குரு சொல்லுதல்:

அங்க சுத்தியும் ஆலயந் தொழுவது சஞ்ரியையென் றறைவார்கள்;
மங்க ளத்துடன் அட்ட மா சித்தியும் வரையுஞ்சக் கரபூசை
பொங்க மானது கிரியையாம்; வாயுவைப் புரண்டிடா திழுத்திட்டுத்
தங்கி நின்றதோர் யோகமென் றிதனையே சாற்றிடும் மறைதானே.
ஞான மேதெனக் கேட்டிடின் தத்துவம் நானென வுணர்ந்திந்த
ஊனை நானென வுரைத்திதை யகன்றுபினனெழிவறத் தனைக் கண்டு
மானம் வெட்கமுந் துக்கமுங் கவலையும் வஞ்சனை தான்போக்கி
ஈன மற்றுநான் சிவமெனத் துணிந்தது மிழந்தது முடிவாமே.

ஜீவன் கேட்கக் குரு சொல்லுதல்:

இந்த நாளினில் இன்பமுற் றிருக்கையி லிச்சடம் விழுந்திட்டால்
தொந்த மானதோர் பலனென்ன? தெரிந்திடச் சொல்லுவாய் குருமூர்த்தி!

சொந்த மாகவே கேள்மக னே! மதன் சுகமதை யறிவிப்போம்:
தந்த னங்களாய் விடாமலே கேட்பது சரியென மகிழ்ந்தேனே.
சரியையென்பது குறைவறச் செய்துமே தன்கடம் விழுந்திட்டால்
கிரியை செய்யவே எடுத்திடுங் கட மது கிரியையும் முடிந்தேகில்
உரிசை யாகிய யோகமே செய்யவு முடலெடுத் துழைக்குங்காண்:
பரிகொள் யோகமு முற்றவு முடிந்துடற் பாரினி லுருவாமே.
ஞான பேபெற எடுத்திடும் அவ்வுடல் நழுவிடா துரைத்திட்டால்
ஈனமாகிய செனனமும் போக்கிடும் ஈசனே தானாகி
வான முற்றதோர் சச்சிதா னந்தமாய் வாக்குரைக் கெட்டாத
மோனமுற்றுதான் எங்குமாய் நிறைந்தது முத்தியென் றுணர்வாயே.

ஜீவன் சொல்லுதல்:

அப்ப னே! எனை அடிமையாய்க் கொண்டவோர் அழகுள்ள குருமூர்த்தி!
தப்ப வேகதி வேறெனக் கில்லைநின் ருளது கதியென்றே
ஒப்ப வேசிவ ஞானமும் உணர்ந்திடி லுகந்தகி லூன்றிக்கொண்
டிப்ப வேபர வீடதி லேகுவன் ஈசனே! அருள்வாயே.

குரு சொல்லுதல்:

தத்துவ மேயுடல் தானெனு மானது தன்னை யறிந்திடு நீ;
சித்தது வாகிப் பிராணனி ரானதில் திரண்டதைக் கண்டிடுநீ;
கற்றுமே காணுக் கண்மணி யானதைக் கண்டு மதெளிந்திடுநீ;
முற்று சிவானந்த போதக மானது முத்தியுமிதுதானே.

அறிவுபோ தகமென்ற நூலைப் பாராய்.
அதற்குமுன்னே உடலறியும் விளக்கம் பாராய்:

பிறிவின்றி மேவின்றி மறைப்பு மின்றிப்
பேரின்ப அமுதமழை பெய்த நூல்தான்

நெறிகொண்ட அந்நூலை நினைந்து பாராய்;
நிலைக்கவே அப்படியே தீட்சை வைப்போம்;

பொறிவிட்டுச் சபைபுகுவாய் புக்கோ வில்லை;
பெரும்பொருளைக் கைக்கொண்டு பிழைத்துக் கொள்ளே.

ஜீவன் சொல்லுதல்:

அப்படியே போதித்த முத்தி பெற்றேன்;
அரியயனுங் காணாத வடிவுங் கண்டேன்;

தப்பியே யிளைக்காமற் பிழைத்துக் கொண்டேன்;
சஞ்சலத்தை இழந்துநான் சுகத்தைப் பெற்றேன்;

ஒப்புவமை சொல்லவொரு வரையுங் காணேன்;
உனைப்போலே தெளிவுரைக்குக் குருவுங் காணேன்;

செப்பவே நாவிழந்தேன் பரமா னந்தத்
தீவிநிலே சேர்ந்திட்டேன் வாழ்ந்திட் டேனே.

ஞானியென்ற பெயர்களையே கண்டு கொள்ள
நல்லதொரு கண்பெற்றேன்; பேச வென்றால்

ஈனமறச் சொற்கற்றேன்; சிரவ ணத்தால்;
ஏகாந்த பரகவனம் எய்த லானேன்;

மானமற்ற அடியருடனுசை கொண்டேன்;
மருவுமுடல் குருவுக்கே வணங்கிப் பெற்றேன்;

தானமுற்றேன் சிவானந்தந் தனிலே நின்றேன்;
சச்சிதா னந்தமென்றே தழைத்திட் டேனே.

வாழ்வுமுதற் சம்பத்தை மதித்தி டாமல்
மலைமேலே ஏறினதோர் பறவை யானேன்;

தாழ்வுகளாய் உலகோர்சொல் நிந்தை யெல்லாம்
சகாயமென்றே எண்ணிச்சந் தோட மானேன்;

விழ்வுதரு நரகிலுள்ள மாண்பர்க் கெல்லாம்
விழாம லேமனிதர் மேலு மானேன்;

ஏழுலகும் மேலேழும் நானே யானேன்;
ஏகாந்தத் தீவினிலே இறங்கி னேனே.

குரு சொல்லுதல்:

மைந்தனே! உனைப்போல ஓடி மெள்ள
வாதனையே தீர்த்துமதி மயங்கி டாமல்

பந்தமறுத் தேபின்பு குருவைத் தேடிப்
பரமாகி வாழ்ந்தவர்க ளுண்டோ அப்பா!

சிந்தையற்ற பெரியோரை வணங்கிக் கொள்வாய்;
சிவஞானி தன்னுடனே நேசஞ் செய்தே

என்றன்னைப் பெற்றவனே! அப்பா! அப்பா!
ஏகாந்தத்தே அம்பரத்தில் இருப்போம் யாமே.

ஜீவன் சொல்லுதல்; நேரிசை வெண்பா

மறந்தேனோர் வார்த்தை மகிழ்ஞான மூர்த்தி!
துறந்தே னினித்தெரியச் சொல்வாய்—சிறந்திலகு
பத்திசெய் வோர்க்குப் பலனே தகைக்கெடுக்கும்
சுத்திரருக் கென்ன குணம்?

குரு சொல்லுதல்: எழுசீர் விருத்தம்

எண்ணிலாத் தவங்கள் யாகங்கள் செயினும்
ஈசுவர விண்ணுவா லயங்கள்
பண்ணுலாங் கவிதை பாடினும் அனேகம் பாரினில் வருபல னேது?
கண்ணுலா வியநற் சுருதிமெய்ப் பொருளைக்
கண்டர னடியவர் தமக்கின்
குன்னலா மமுத மளித்தவ னடையும் பலனுரைக் கவுமுடியாதே.
வேதமா கம சாத்திரபுரா ணங்கள் விரிந்தநூ லறிந்திடா விந்து
நாதமே யுருவாம் அத்விதா னந்த ஞானமே பெற்றிட வேண்டி
ஓதவல் லவர்சத் துச்சித்தா னந்த முற்றநல் லடியவர் தமக்குப்
பாதபூ சனைகளடங்கலுஞ் செய்தார் பலனெம துரைக்கடங் காதே.

கட்டளைக் கலித்துறை

அன்ன மளிப்பவ ரைக் கலைப் பார்இவ் அவனிமிசை
இன்ன லவர்க்குப் புரிவார் நினைப்பார் இகழ்ந்திடுவார்
மன்னவ ராயிருந்தே மரிப் பாரை மறலியினி
என்னென்ன வேதனை செய்வான் முடிவி லியம்பரிதே.
சிவனருள் பெற்றுயர் மேலோர் தமக்குஞ் சிவனையுன்னித்
தவஞ்செய்அன் பர்க்குஞ் சிவவேடம் பூண்டிடு தன்னியர்க்கும்
உவந்தே பணிபுரி வார்மே லுலகவ ருண்மையதாய்
அவஞ்செய் தவரை யிகழ்வோ ரடைவர் அருநரகே
பெரியோர்க்குத் தொண்டுசெய் வாரைத் தடுத்திடும் பேதையரும்
சரியா நடுநில சார்ந்தவர்க்கு அல்லல் சமைப்பவரும்
பரிவான தீட்சைகொண் டாரை மறிக்கும்அப் பாதகரும்
எரிவாய் நரகத்தி லெண்ணில் துயரி லிருப்பரன்றே.

நேரிசை வெண்பா

இந்நூலைப் பார்ப்போர் எடுப்போர் படிப்பவர்
நன்னூ லெனமனத்தி லிடுவோர்—பொன்னூற்
படியேறித் தாண்டிப் பவசாக ரத்தைக்
கடவுளர்க்கு முன்னிற்பர் காண்.

சந்தேக மாதிகளைச் சாராம லேஅகற்றிப்
பந்தபா சங்களைப் பாழாக்கும்—இந்த நூல்
எந்தநா ளும்மழியா தேகாந்த வீடதனைச்
சொந்தமாக் கும்மெனவே சொல்.

தரவு கொச்சம்

அரனங் கிரிவாழி! அம்பிகைதாள் வாழி!
பெருமான் பதம்வாழி! பின்னைசர ணம்வாழி!
பரமேட்டி யடிவாழி! பாரதிபா தம் வாழி!
கரிமுகவன் கழல்வாழி! கந்தனடி வாழியவே!

வான்வாழி! வானையளி மாத வரும்வாழி!
கோன்வாழி! குருவாழி! குவலயத் தோர்வாழி!
ஆன்வாழி! அமரர்முத லிருடிசித் தர் வாழி!
நான்நீ யெனலகற்று நாதாக்கள் வாழியவே!

## நூல்: முப்பத்திரண்டு



குருஞான சம்பந்த சுவாமிகள்

# சிவபோக சாரம்

1. அடிகள் வணக்கம்] [நேரிசை வெண்பா

சித்திதரும் நாதன் தென்கமலை வாழ்நாதன் 1
பத்திதரு நாதன் பரநாதன்—முத்திப்
பெருநாதன் ஞானப் பிரகாசன் உண்மை
தருநாதன் நங்குருநாதன்

அருவும் உருவும் அருவுருவும் அல்லா 2
ஒருவன் உயிர்க்குயிராய் ஓங்கித்—திருவார்
கமலைவரு ஞானபிர காசனென வந்தே
அமலபதந் தந்தெனையாண் டான்

ஆரறிவார் நீதிவழி, ஆரறிவார் சித்திமுத்தி, 3
ஆரறிவார் நற்றவங்கள் அன்பனைத்தும்—பாரெவர்க்கும்
கத்தன் கமலையில்வாழ் ஞானபிர காசனெனும்
அத்தனென்போல் வந்திலனே லால்?

அரியயற்கு முன்னாள் அடிமுடியுங் காணாப் 4
பெரியவனே வந்து பிறந்து—துரியம்
பெருக்கின்றான் ஞானப் பிரகாச னாகி
இருக்கின்றான் நம்மில் இன்று.

கண்டேனிப் பாசங் கழிந்தேன் அமுதைமுகந் 5
துண்டேன் சுகானந்தத் துள்ளிருந்தேன்—வண்டிமிர்காத்
தேனைப் பொழிகமலைச் செங்கமலப் பொற்பாத
ஞானபிர காசனையே நான்.

உள்ளிருந்தே என்று முணர்த்துகினுங் கண்டிலரென் 6
றுள்ளும் புறம்புமா வோமென்று—மெள்ள
நரகுருவாய் ஆரூரில் வந்தான் நமையாண்
டருள்புரிஞா னப்பிரகாசன்.

இருளுதயம் நீக்கும் இரவியைப்போல் என்னுள் 7
அருளுதயம் நன்றாய் அருளி—மருளுதயம்
மாற்றியவன் ஆரூரன் மாமறையும் ஆகமமுஞ்
சாற்றியஞா னப்பிரகா சன்.

ஒழியாத பேரின்பத் துள்ளாய் உலகில் 8
விழியா திருந்திடவே—அழியாத
பூரணா! செங்கமலப் பொற்பாதா! தென்கமலை
ஆரணா! நாயேற் கருள்.

தேடுந் திரவியமுஞ் சிற்றறிவும் பற்றுதலுங் 9
கூடும்பொய் யென்றருளிற் கூட்டினான்—நாடறிய
ஞானப்ர காசனுயர் நற்கமலை மாநகர்வாழ்
வானப் பிறையணிந்த மன்.

காண்பதும்பொய் கேட்பதும்பொய் காரியம்போ லேயிதமாய்ப் 10
பூண்பதும்பொய் எவ்விடத்தும் போகமும்பொய்;—மாண்பாகத்
தோற்றியின்ப வெள்ளமாய்த் துன்னியென்னுட் சம்பந்தன்
வீற்றிருப்ப தொன்றுமே மெய்.

2. பெறுதற்கருமை

ஒருமையுடன் ஈசனருள் ஓங்கியென்றுந் தூங்கல் 1
அருமை அருமை அருமை!—பெருமையிடும்
ஆங்காரம் கோபம் அபிமானம் ஆசைவினை
நீங்காத போதுதா னே.

தன்பெருமை எண்ணுமை தற்போத மேயுறத்தன் 2
மின்பெருமை யாஞ்சகத்தை வேண்டாமை—தன்பால்
உடலைத் தினம்பழித்தல் ஓங்கிசிவந் தோன்றல்
நடலைப் பிறப்பொழியும் நாள்.


[illegible] உணவுநந்தால் மாயைத் 3
திரைபிறந்தாற் காண்கின்ற தேவை—வரைபெருக

வாசிப் பதம்நாவால் வாழ்த்துவதும் நாடகமாய்ப்
பூசிப் பதுஞ்சுத்தப் பொய்.

4

பரம ரகசியத்தைப் பாழான வாயால்
இரவுபகல் எந்நேர மின்றிக்—குரனெரியக்
கூப்பிட்டுங் காணுமோ கோழைமட நெஞ்சமே! மால்
பூப்பிட்டுங் காணுப் பொருள்?

5

ஒரு கோடி ஆகமங்கள் எல்லாம் உணர்ந்தும்
பெருகுதவஞ் சித்தியெல்லாம் பெற்றும்—குருவருளால்
வைத்த படியிருக்க மாட்டாத மாந்தர்க்குச்
சித்தசல மம்மாந் தினம்.

6

அன்புமிக உண்டாய் அதிலே விவேகமுண்டாய்த்
துன்ப வினையைத் துடைப்பதுண்டாய்—இன்பம்
தரும்பூ ரணத்துக்கே தாகமுண்டாய் ஓடி
வருங்கா ரணர்க்குண்மை வை.

3. அறியும் பகுதி

1

உருவை அருவை ஒளியை வெளியை
இருளைச் சிவமென்றி ராதே—மருளைப்
பிறந்தறிவிற் கண்டிதனைப் பின்னமற எங்குஞ்
செறிந்தபொருள் தானே சிவம்.

2

அகமாதி கண்ட அறிவாகி எங்குஞ்
சுகமாகி யின்பச் சுகமாய்ச்—சுகாதீதத்
தானந்த வெள்ளம் அதுவாய் சுகத்தையகன்
ஞானந்த மாதியிலா தான்.

3

இந்தனத்தில் அங்கி எரியுறுநீர் தேனிரதங்
கந்தமலர்ப் போதுவான் காலொளிகண்—சந்ததமும்
அத்துவிதம் ஆவதுபோல் ஆன்மாவும் ஈசனுமாய்
முத்தியிலே நிற்கும் முறை.

4

ஆறாறு தத்துவமும் ஆணவமும் நீங்கியுயிர்
வேறாக நின்றவிடஞ்சொல்லின்—மாறா
இருளாய பாவனையற் றெங்குமாய் நின்ற
பொருளேகா ணீயே புணர்.

5

நனவாதி அந்தத்தில் நாடுசுகந் தன்னைக்
கனவாதி அந்தத்திற் கண்டு—நனவாதி
தோற்றிடும்போ தாந்தச் சுகரூபங் கண்டவர்கள்
மாற்றிடுவ ரென்றும் மலம்.

தத்துவங்கள் எண்ணித் தலையெடுத்துக் கொள்ளாதே 6
சத்துவங்க ளேதென்னிற் சாற்றக்கேள்:—மெத்துஞ்
சுகாரம்ப மாஞ்சிவத்திற் றோயாத மாயா
விகாரங்கள் தத்துவமா மே.

ஆறாறு தத்துவமும் ஆணவமும் வல்வினையும் 7
நீறாக முத்திநிலை நிற்போர்க்குப்—பேறாகப்
பார்விரித்த நூலெல்லாம் பார்த்தறியிற் சித்தியிலே
ஓர்விருத்தப் பாதிபோ தும்.

## 4. உபதேச விளக்கம்

பரவிமனம் போகாப் பரத்தடைய நாளும் 1
இரவுபகல் அற்ற இடத்தே—திரமாக
நில்லென்றான் கண்டவெல்லாம் நேதிபண்ணி மும்மலமும்
கொல்லென்றான் ஞான குரு.

காயங் கரண முதல் நான்கிற்குங் காரணந்தான் 2
ஆயவிருள் மாயை அதுவென்றால்—தூயபொருட்
போதனே! செங்கமலப் பொற்பாத னே! எனைநீ
ஏதென்று சொல்லா யினி.

என்னை யறிவென்றான் என்னறிவில் ஆனந்தத் 3
தன்னைச் சிவமென்றான் சந்ததமும்—என்னையுன்னைப்
பாரா மறைத்ததுவே பாசமென்றான் இம்மூன்றும்
ஆராய்ந் தவர்முத்த ராம்.

எங்கும் இருக்கும் அறிவுநீ; ஏகமாய் 4
அங்கங் குணர்த்தும் அறிவுநாம்—பொங்கும்
மலமறைத்தல் மாயை; மயக்கல் விகாரப்
பலமனைத்துங் கன்மமலம் பார்.

செங்கமலப் பொற்பாதன் சீர்பாத வல்லபங்கள் 5
நங்கமலை வாழ்கிளியே! நாடிக்கேள்—சங்கையிலாத்
தத்துவத்தைக் காட்டியதிற் றத்துவத்தைக் காட்டியருட்
டத்துவத்தைக் காட்டியது தான்.

தேசு செறிகமலைச் செங்கமலப் பொற்பாதன் 6
பேசுதமிழ் ஞானப் பிரகாசன்—பாசவினை
வாட்டினான் மீட்டுநான் வாரா வகையருளைக்
காட்டினான் கூட்டினான் காண்.

நானிங்காய் நீயங்காய் நாட்டமற வைத்ததற் பின் 7
நானெங்கே நீயெங்கே நாதாவே—வானெங்கும்
ஒன்றாகி நின்ற உணர்வுநீ; உன்னறிவில்
நின்றாகத் தோன்றுசுகம் நான்.

அலைவற் றிருந்த அறிவுநீ ஆங்கே 8
நிலைபெற் றிருந்தசுக ஞேய—மலைவற்
றிருந்ததுகண் டாயே இருந்தபடி யத்தோ
டிருந்துவிடெப் போதும் இனி.

அகத்தை இழந்தருளாய் அவ்விடத்தே தோன்றுஞ் 9
சுகத்தில் அழுந்திவிடச் சொன்னான்—மகத்தான
சிற்பரனூ ரூர் தனில்வாழ் செங்கமலப் பொற்பாதா!
தற்பரஞானப் பிரகா சன்.

கிட்டாத ஈசனுனைக் கிட்டி அருள்புரிந்த 10
நிட்டாநு பூதி நிலையிலே—முட்டா
திருவன்னி சேர்ந்துமாற் றேறியபொன் போல
வருமின்பப் பூரணமா வை.

அநாதிசுக ரூபி அரளாடிக்கீழ் என்றும் 11
அநாதி சுகரூபி ஆன்மா—அநாதி
இருந்தமலம் போக்கி இறையருளி னாலே
இருந்தபடி யேகண் டிரு.

இற்றை வரைக்கர ணத்தோ டிணங்கினையே 12
இவற்றைவரைச் சென்ம மெடுத்தனையே—இற்றைவரைத்
துன்பவெள்ளத் துள்ளே துளைந்தனையே ஈதறநல்
லின்பவெள்ளத் துள்ளே இரு.

தேகாதி நானல்ல என்றிருந்தால் சித்தமயல் 13
போகாத தென்னையோ புண்ணியா!—தேகாதி
தன்னளவே அம்மயக்கஞ் சத்தியமாய் எப்பொழுதும்
உள்ளளவே இல்லை உணர்.

ஆறாறு தத்துவநீ அன்றென் றறிந்தனையே 14
ஆறாறுங் கண்டறிவ னாயினையே—மாறாமல்
உன்னறிவில் ஆனந்தத் தோங்கினையே ஓராமல்
நின்னறிவை விட்டதுவாய் நில்.

மாதா பிதா சுற்றம் என்று மயங்கினையே 15
நீதான் தனுவாகி நின்றனையே—ஈதெல்லாம்
பொய்யென் றறிந்தனையே பூரணா னந்தவெள்ளம்
மெய்யென் றறிந்தனையே மெய்.

மனையில்வரு போகத்தின் மாதர்மக்கள் பாச 16
வினையின் அழுந்தி விடாதே—உனையிழந்து
காணாமற் கண்டானைக் காட்சி அறக்கலந்து
பூணாமல் எப்பொழுதும் பூண்.

சுத்தவத்தை நாடியிடுஞ் சுத்த இராப்பகலா 17
மெத்தவத்தை நாடி விடுவையேற்—சுத்தவத்தை
தானு மிரண்டுந் தவிர்த்த சிவானந்த
வானுவை நீயே மதி.

சுத்தநிலம் உன்றனக்குச் சொல்லக்கேள்; தொல்லைவினை 18
தத்துவங்கள் ஆருறுந் தாம்பெருக—கத்திடுவர்
எல்லாம் இழந்த இடமே அதுவாக
நில்லாய் அதுவே நிலை.

நெருப்பென்ருல் வாய்சுடுமோ? நெய்பால்தேன் கட்டிக் 19
கருப்பென்னூற் றித்தியா காணீ—விருப்பமுடன்
நீபிரம மென்றக்கால் நீபிரமம் ஆயினையோ
நீபிரமஞ் சற்குருவா நில்.

ஆர்க்குந் தெரியாத ஆனந்த இன்பவெள்ளம் 20
மேற்கொண்டு கொண்டு விடுகுதில்லை—யார்க்குந்
தெரியாப் பரபிரமஞ் சேர்த்தாய் உனக்குச்
சரியார் சிதம்பர நாதா!

5. அனுபூதி நிலை

உள்ளங் கரைய வுடல்கரைய ஆனந்த 1
வெள்ளங் கரைபுரண்டு மேலாகக்—கள்ளமலம்
பொய்யாக என்னுட் புகுந்தவா றென்கொலோ
ஐயா தியாகவினோ தா!

ஏதேது செய்தாலும் ஏதேது சொன்னாலும் 2
ஏதேது சிந்தித் திருந்தாலும்—மாதேவா!
நின்செயலே என்று நினதருளா லேயுணரில்
என்செயலே காண்கிலே னே.

மாயைமலம் எங்கே மறைந்ததோ! மாயைதனில் 3
ஆயசகம் எங்கே அழிந்ததோ—காயமதில்
தங்கும் புருடனெங்கோ! சச்சிதா னந்தவெள்ளம்
எங்கு மிகக்கோத்த தே!

நானுஞ் சுகவடிவாய் நண்ணினேன் நின்னருளால் 4
வானுஞ் சுகவடிவாய் மன்னிற்றே;—வானுஞ்
சுகரூப மன்றுமணந் தோற்றநிலம் போலுன்
அகரூப மட்டே அது.

ஈசன் அடியில் இருக்கையிலே எங்கெங்கும் 5
ஈசனடி தேடி இளைத்தேனே!—பேசரிய
பொற்பதத்தன் செங்கமலப் பொற்பாதன் றன்னுடைய
நற்பதத்தைக் காணுமுன் நான்,

6

நற்பதஞ்சேர் ஆரூரின் ஞானபிர காச னெந்தை
தற்பரனோர் ஞானவாட்டந்தானே—சொற்பனத்தும்
காரார் மறலியயன் கண்ணனுக்கும் அஞ்சேனை
யாரால் மென்னசெய்ய லாம்?

7

வெறும்பாழிற் பெரின்ப வெட்டவெளி தன்னிற்
குறும்பாவர் காணுக் குடலின்—உறும்பாசம்!
ஓட்டியெனை வைத்தனனே யுற்றபிர பஞ்சமெல்லாம்
ஆட்டியஞா னப்பிரகா சன்.

8

என்றுஞ் சிவத்தோ டிணைபிரியா தேயறிவாய்
நின்றபடி தன்னை நிகழ்த்தினன்—மன்றில்
நடமாடும் ஆரூரன் ஞானபிர காசன்
திடமாக என்னுள்ளத் தில்.

9

நாதனார் தென்கமலை நாயகனார் எவ்வுயிர்க்கும்
போதனார் செங்கமலப் பொற் பாதர்—போதமற
ஒன்றிரண்டு தானறவே உண்மையிலே கூட்டியெனை
இன்றறவே வைத்துவிட்டா ரே!

10

நன்னெஞ்சே! நீகேட்ட நன்மையெல்லாஞ் சொல்லுதற்குக்
கன்னெஞ்ச மாலயனுங் காணுதோன்—வன்னெஞ்சர்
இன்னகுறை யுண்டென்று ஈசன் எதிர்வந்தான்
என்னகுறை சொல்லாய் இனி.

11

இட்டசனம் எங்கே? இதமகிதந் தாமெங்கே!
துட்டசனம் எங்கே தொழிலெங்கே?—சிட்டருடன்
கூடியிருந்ததெங்கே குன்றாச் சிவானந்தம்
நாடியது வாயிருந்த நாள்?

12

வாக்குமனக் காயத்தான் வந்தபொருள் அத்தனையும்
வாக்குமனக் காயமுடன் மாயுமே—வாக்குமனக்
காய முடனிழந்து காண்ஞா திருஞான
ஞேயம் இழந்தநிலை.

13

புசிப்போஞ் சிவபோகம் பூரணமாய் எங்கும்
வசிப்போம் உலகில் வசியோம்—முசிப்பின்றி
வாழ்வோஞ் சிவத்தையுணர் மாதவர்தம் பொன்னடிக்கீழ்
தாழ்வோம்; எமக்கார் சரி?

6. உபாய நிலை

1

அறிவுநீ என்ன அறிந்தறிந்து மாயைச்
செறிவுநா னென்றென்று சேர்ந்தால்—அறிவு
தெரிந்திடுமோ, இன்பசுகஞ் சேர்ந்திடுமோ, பின்னைப்
பிரிந்திடுமோ சென்மப் பிணி?

அரணங்கள் தாமெரித்த அத்தரே! என்னுட் 2
கரணங்க ளோட்டும் வகை காட்டீர்—கரணங்கள்
நீயதுவாய் நில்லாமல் நின்னறிவைக் கண்டருளிற்
போயதுவாய் நின்றுவிடப் போம்.

தானல்லா தத்தனையுந் தானென் றுழலாமல் 3
தானெல்லா மாயதனுட் டாக்காமற்—றானெல்லாம்
ஆனேம் எனும்போத தாக்காமல் ஈசனிடத்
தானேனே யாயினவ னும்.

தேகநாம் என்னென்று செப்புவீர் ஈதில்வரும் 4
போகநா மென்று புலம்புவீர்—நோக
வருந்துவீர் தீவினையின் மாறுத இன்பம்
பொருந்துவீ ரெப்படிநீர் போம்?

தன்னை இழந்திடத்தே தானே சுகவடிவாய் 5
இன்னபடி என்றறியா எங்கோனும்—பின்னமற
நின்றநிலை தானுந் தெரியாதே நின்றவர்கட்
கன்றோ பிறப்பறுக்க லாம்?

உன்னுதே பற்று துரையாதே ஒன்றியதில் 6
நின்னும யில்லை நிகழாதே—பன்னுட்
பறைபிறந்து நிற்கும் பயனணைந்தார் நெஞ்சிற்
நிறைபிறந்து நிற்குஞ் சிவம்.

அருளறிந்து தானும் அறிவறிந்தே ஆங்குட் 7
பொருளறிந்து தானடங்கிப் போகா—இருளகல
விம்மா திருந்து விகற்பமற ஒன்றாகிச்
சும்மா இருக்கை சுகம்.

சேரியுந் தனுவாதி சேர்ந்தறிந்து நின்ற 8
அறிவை அறிவால் அறிந்தே—அறிவிழந்து
நின்றாற் சுகானந்த நீடுநிலை வேறு
சென்றால் சுகங்கிடையாதே.

தத்துவத்தை விட்டருளிற் றான்கலந்து தன்னிழப்பின் 9
மெத்துஞ் சுகத்தின் மிகவழுந்திச்—சுத்தமாய்
ஒன்றாகி நின்ற உணர்வும் ஒழிந்தக்கால்
அன்றோ சிவபோகமாம்?

சுட்டறிவு கெட்ட சுகாதீத உண்மையிலே 10
விட்டகலா தென்றும் விரவுவோர்—இட்டமுடன்
போகசுகமாகிய உட்புறம்பாம் பூசைகளும்
ஆக நினையார் அவர்.

நின்னறிவில் யானொளித்து நீயாகி நின்றதுபோம் 11
என்னறிவில் நீயொளித்தே யானாகி—எந்நாளும்
நிற்கவல்லை யாமாகில் நின்சனனம் போக்குதற்குக்
கற்கவல்ல தேதுமில்லை காண்.

இன்பசுகத் துள்ளே இருக்கலாம் எப்போதுந் 12
துன்பவினை யுன்னைத் தொடராது—வன்பா
மருட்டேக மாயடங்கி மாயாமல் நெஞ்சே!
அருட்டேக மாயடக்கு வாய்.

தேகம் மறந்து திருவருளாய் நின்றசிவ 13
போகம் விளையப் புணர்நெஞ்சே!—நோக
வருந்தாமற் றீவினையில் வாடாமற் றுன்பம்
அருந்தாமல் நீ பிறவாமல்.

பூதாதி பாசமன்றோ பூரணா னந்தமன்றோ 14
பேதமற நம்முட் பிரானன்றோ வாதனைகள்
விட்டாற் சுகமன்றோ என்றுணர்வில் வேண்டுவதுங்
கேட்டாற் பிறப்புங் கெடும்.

அழுந்தாதே பாசத் தனுதினமும் ஐயோ! 15
விழுந்தால் எழுந்திருக்க வேண்டுஞ்—செழும்பாகை
மீறித் தருமிரத வீட்டின்ப மாமலை மேல்
ஏறித் திரும்பலா மே.

என்றுஞ் சனனத் திடர்க்கடலி லேழுழ்கிப் 16
பொன்றுமன மேயுனக்கோர் புத்திகேள்;—நன்று
தனிச்சங்கஞ் சேராமற் றற்பரனைச் சேரில்
இனிச்சங்கஞ் சேரா திரு.

## 7. பணி யறுத்தல்

அவரவருக்குள்ளபடி ஈசனரு ளாலே 1
அவரவரைக் கொண்டியற்று மானால்—அவரவரை
நல்லார்பொல் லாரென்று நாடுவதென் னெஞ்சமே!
எல்லாஞ் சிவன்செயலென் றெண்.

எங்கே நடத்துமோ எங்கே கிடத்துமோ 2
எங்கே இருத்துமோ என்றறியேன்!—கங்கைமதி
சூடினான் தில்லையிலே தொந்தோந்தோம் என்று நடம்
ஆடினா னெங்கோன் அருள்.

போகம் புவனம் பொருந்துமிடம் எங்கெங்குந் 3
தேகங் கரணந் திரியுமே—ஆகிலது
தன்னை நீ என்று தவியாதே நெஞ்சமே!
நின்னையே கண்டருள்ளில் நல்.

ஏதேது செய்திடினும் ஏதேது பேசிடினும் 4
ஏதேது சிந்தித் திருந்திடினும்—மாதேவன்
காட்டிடுவ தானவருட் கண்ணைவிட்டு நீங்காது
நாட்டம் அதுவாய் நட.

எடுத்தவுடற் கேய்ந்தகன்மாம் எப்போது மூட்டும்; 5
விடுத்துவிட்டோமென்பர் விழலர்;—விடுத்த
ததுவன்றே யைந்துமலம் ஆறும் நீத்த.
இதுவன்றே யாந்துறவென் பேம்?

எவ்வுயிருங் காக்கவோர் ஈசனுண்டோ இல்லையோ? 6
அவ்வுயிரில் நாமொருவர் அல்லவோ?—வவ்விப்
பொருகுவதும் நெஞ்சே! புழுங்குவதும் வேண்டா
வருகுவதும் தானே வரும்.

மூப்பதுசென் றூல்விடியும் மூப்பதுசென் றுலிருளும்; 7
அப்படியே ஏதும் அறிநெஞ்சே!—எப்பொழுதும்
ஆங்காலம் எவ்வினையும் ஆகும்; அது தொலைந்து
போங்காலம் எவ்வினையும் போம்.

ஆவலுற்றி டுஞ்சகலத் தாவதுவும் ஆங்கவரே 8
கேவலத்தின் மூழ்கிக் கிடப்பதுவும்—நாவரற்றல்
இல்லாத சத்தத் திருப்பதுவும் இம்மூன்றும்
இல்லான் செயலென் றிரு.

பாசஞ் சடமுயிரோ தானுகப் பற்றறியா 9
ஈச னிரண்டு மிணைத்தாட்டிப்—பூசலென்றுஞ்
செய்பவனே தானே திரும்பியருள் செய்யாமல்
உய்பவர்க ளுண்டோ? உரை.

முற்றின்ப மாமருளில் மூழ்தவதும் மோகமிகு 10
சிற்றின்ப மாமருளிற் சேர்குவதும்—உற்றிங்
கறிந்தால்நஞ் னெஞ்சே! அகிலாண்ட மெங்குஞ்
செறிந்தான் செயலே தெளி.

என்னிடத்தில் நின்செயலே இல்லையென்றுல் யாதுறினும் 11
நின்னிடத்தில் யான்வேண்டல் நிச்சயமே;—என்னிடத்தில்
இன்மை யுயிர்க்குயிர்நீ இன்மை யிருந்தியற்றில்
நன்மைதின்மைக் கேதுவா நான்?

நாம்பெரிய ரென்னுமதை நாடா தடக்குமவர் 12
தாம்பெரிய ரென்றுமறை சாற்றியிடும்;—நாம்பெரியம்
என்பார் இழியர்; இவரலால் இன்றுபயில்
துன்பார் சுமப்பார்கள்? சொல்.

13

கட்டமாங் காயங் கலையனைத்துங் கற்றாலும்
அட்டமா சித்தி அடைந்தாலும்—இட்டம்
பரம சுகமே பதியாத போது
திரம சுகமே தெளி.

14

மனவாக்குக் காயமுயிர் மண்ணிசைப் பானும்
அனமாதி போகமளிப் பானும்-நனவாதி
கூட்டிவிடு வானுமுத்தி கூட்டுவா னும்பிறப்பில்
ஆட்டிவிடு வானும் அரன்.

15

முன்னைவினைக் கேடா முதல்வன் அருணமைக்கொண்
டென்னவினை செய்ய இயற்றுமோ!—இன்னவினை
செய்வோந் தவிர்வோந் திரிவோ மிருப்போமிங்
குய்வோ மெனும்வகையே தோது.

16

ஊட்டும் வினையிருந்தால் உன்னுனை உன்பதத்தைப்
பூட்டிப்பிடித்துப் புசிப்பிக்கும்—கேட்டுத்
திரியாதே வந்துதில்லைத் தெய்வமே என்றென்
றெரியாத நெஞ்சே! இரு.

17

என்னதன்று நின்செயலை என்றறிந்தால் யான்விரும்பி
என்னவென்று வாய்திறப்பேன் ஈசனே! இன்னுமின்னம்
எப்படியோ நாயேனை ஈடேற்ற வேண்டுமுனக்
கப்படியே செய்தருளு வாய்.

18

வன்மைபுரி காய மரப்பாவை தன்னையரன்
கன்மமெனுஞ் சூத்திரத்தாற் கட்டியே-நன்மைதின்மை
ஆட்டுவதும் நாடா தறிவிலார் தஞ்செயலாய்
நாட்டுதல்போ லுண்டோ நகை?

19

ஆறாறு தத்துவமும் ஆணவமும் நீங்கியுயிர்
பேறாக ஆனந்தம் பெற்றாலும்—வேறாகப்
பார்த்திருப்ப தன்றியே பாழான கன்மத்தை
நீத்திருக்க லாமோ நிலத்து?

20

ஊனசுக துக்கத் தழுந்துகினும் ஞானிகடாம்
யானெனதென் றெண்ணி இயைந்திடினுந்—தானதற்கு
வேறென் றருளால் விரளமாய்க் காணிலென்றும்
ஏறுமோ கன்ம மிலை.

21

சத்துருவுந் மித்துருவும் தாரணியில் வேறில்லை
சத்துருவும் மித்துருவுந் தன்னெஞ்சே!—பெத்தமலம்
வீட்டும் படிக்கு வுனைக்கி டுனைத்தனுவோ
டாட்டுஞ் சிவனென் றறி.

இன்னவினை இன்னதலத் தின்னபொழுது இன்னபடி 22
இன்னதனுல் எய்தும் எனவறிந்தே—அன்னவினை
அன்ன தலத் தன்னபொழுதன்னபடி அன்னதனுற்
பின்னமறக் கூட்டும் பிரான்.

அன்றே அநாதி அமைத்தபடி அல்லாதொன் 23
றின்றே புதிதா யியையுமோ?—என்றுஞ்
சலியா தியற்றுவான் றன்னையே நோக்கி
மெலியா திருந்து விடு.

ஆர்பெரியர் ஆர்சிறியர் ஆருறவர் ஆர்பகைஞர் 24
சீர்பெரியர் ஆனந்த சிற்சொருபர்—பேர்பெரியர்
எங்கெங்குந் தாமா யிருந்துசட சித்தனைத்தும்
அங்கங் கியற்றுவதா னுல்?

நன்கருத்தே தென்கமலை ஞானபிர காசனே! 25
என் கருத்தே உன் கருத்தென் றெண்ணுமல்—உன்கருத்தே
என்கருத்தென் றெண்ணியே யான்பட்ட துன்பமெல்லாம்
உன்கருத்தே தீரவறியும்.

அமைத்தவினைக் கேடா அனுதினமுஞ் செய்வ 26
திமைப்பொழுதும் வீண்செயலொன் றில்லை—உமைக்குரியசன்
எல்லாம் அறிந்தெங் கியற்றுவதுந் தன்னடிமை
வல்லார் தமக்குணர்த்து வான்.

கள்ள அரனே! கருணையுடன் என்னறிவில் 27
உள்ளசுகந் தந்துவிட ஒண்ணுதோ?—மெள்ள
வருத்துவதுந் தீவினையில் வாட்டுவதும் ஞானம்
பொருத்துவதும் என்னுன்? புகல்.

கேளா தெனைமலத்திற் கிட்டியெடுத் தாளாக்கி 28
மீளா தளித்தபர வீட்டிலெனை—ஆள
உனக்குப் பொறியோ? உனைத்தொடர்ந்தாள் என்ன
எனக்குப் பொறியோ இனி?

சும்மா தனுவருமோ? சும்மா பிணிவருமோ? 29
சும்மா வருமோ சுகதுக்கம்?—நம்மான் முன்
செய்தவினைக் கோச் சிவனருள் செய் விப்பதென்றால்
எய்தவனை நாடி இரு!

பொல்லாத தீ வினையிற் போகார்கள் போனுலும் 30
எல்லாஞ் சிவன்செயலே என்றிருப்பார்—நல்லார்கள்
நத்துங் கமலையில்வாழ் ஞானபிர காசனருள்
பெற்றுள்ள பேர்களவர்.

கூட்டுவதுங் கூட்டிப் பிரிப்பதுவும் ஒன்றொன்றை 81
ஆட்டுவதும் ஆட்டி அடக்குவதுங்—காட்டுவதும்
காட்டி மறைப்பதுவுங் கண்ணுதலோன் முன்னமைத்த
ஏட்டின் படியென் றிரு.

உள்ளதுதான் போமோ? மற் றில்லா ததுவருமோ? 82
பள்ளமே வெள்ளம் பரவாதோ?—கள்ளமாய்ப்
பித்துப்போ லேபிதற்றும் பேதைமட நெஞ்சமே!
செத்துப்போ ஞனே சிவன்?

ஈசன் பலவீனன் என்றக்கால் ஆலயத்தின் 83
மோசம்வந்த தென்று மொழியலாம்—ஈசனே
ஆக்குவதும் ஆக்கி அழிப்பதுவுந் தானனல்
நோக்குவதென் யாம்பிறரை நொந்து?

தேசஞ் சிவாலயங்கள் சேர அலையவொரு 84
மோசம்வந்த தையோ முதல்வனே!—தேசத்து
மன்னைவெறுப் பேனே வருவினையை யூட்டுவிக்கும்
உன்னைவெறுப் பேனோ? உரை.

8\. துறவின் பகுதி

துரத்தியுன்னை ஆசை தொடராமல் என்றும் 1
விரத்தியினல் ஆங்கவத்தை விட்டுப்—பரத்திலன்பு
செய்யடா செய்யடா சேரப்ர பஞ்சமெல்லாம்
பொய்யடா பொய்யடா பொய்.

அனைத்துலகும் நம்பால் அனுக்கிரகம் பெற்றென்? 2
அனைத்துலகும் நம்வசமாய் ஆயென்?—அனைத்துலகுங்
கொண்டாடி லென்னை? வினைக் கொத்தறுத்துப் பேரின்பங்
கண்டாடில் அன்றோ கதி!

அறிவிழந்து நின்றசுக ஆனந்தத் துள்ளே 3
குறியிழந்து நின்று குலாவிப்—பிறியா
திருந்தாற் பிறப்பறுமோ, இச்சைமால் கொண்டு
திரிந்தாற் பிறப்பறுமோ? செப்பு.

எத்திசையும் எவ்வுலகும் எத்தொழிலும் எப்பயனும் 4
நித்தியமென் றெண்ணின் நிலையாதே!—புத்தியினற்
கண்ணுடி யிற்றோன்றி மாய்ந்துவிடுங் காணிவற்றைக்
கண்ணுடி யிற்கனவிற் காண்.

எத்தனை தான் கற்றாலும் எத்தனை தான் கேட்டாலும் 5
எத்தனைசா தித்தாலும் இன்பறு;—சித்தமே!
மெய்யாகத் தோன்றி விடுமுலக வாழ்வனைத்தும்
பொய்யாகத் தோன்றுத போது.




மின்போலத் தோன்றி விடுமுலக வாழ்வனைத்தும் 6
என்போ லிகள்திரமென் றெண்ணுவார்;— தன் போகம்
இல்லார் சிவபோக மென்றும் அருந்தியிடும்
நல்லார் திரமிதுவென் ஞர்.

தேசமூர் பேர்காணி சீர்வரிசை சாதியெனும் 7
ஆசையால் நெஞ்சே! அலையாதே— நேசப்
[illegible]
திருப்பானைப் பார்த்தே யிரு.

ஆகம் பகையாவ தன்றிப் பகையுண்டோ? 8
மோகந் தவிர்ந்த முனிவோர்க்கிங்—கேகன்
இருவர் அறியாத ஈசனருள் அல்லால்
ஒருவர் துணை யுண்டோ? உரை.

அளவிலாச் செல்வத் தடைந்தாலும் ஆகந் 9
தளவிலாச் சித்திகளுண்டாயும்—அளவில்லை
ஆய்ந்தாலும் என்னை. சுகர் அல்லர்? சிவானந்தம்
தோய்ந்தார்கள் அன்றோ சுகர்?

ஆகாத காரியஞ்செய் தாஞ்சுகமும் அங்கதனாற் 10
போகாத துக்கம் பெருக்குவதும்—போகா
உரைக்கிலனு வக்கும் உயர்ந்தமா மேரு
வரைக்கும் விகார மது.

பொய்யில்வருந் துன்பம் பகுத்தறிந்தும் பூரணமே 11
மெய்யில்வரு மின்ப விளைவறிந்தும்—ஐயா!
தெளியாத தென்னநலந் தீங்குண்டு சேறுங்
களியாத தென்ன மயக்கு?

ஆகுஞ் சிறைச்சாலை அக்கரணங் காவலாள் 12
போகம்புவனம் பொருத்துமிடம்—ஓகோ
இதனுட் படுமுயிர்கட் கேமுற்றஞ் செய்வான்
அதனுக் கிறைவன் அரன்.

அதிட்டானம் ஈசன் அருளன்றி மற்றை 13
அதிட்டான மெல்லாம் அநித்தம்—அதிட்டானம்
பொய்யென் றறியாமற் பூதலத்து நெஞ்சமே!
மெய்யென் றுழல்வதெல்லாம் வீண்.

விண்ணை மதிக்கின் விளக்கறிபர் செல்வம் வினை; 14
வின்னை யறிஞரென நீ வினையின்—வின்னுஞ்
சிறியார் வறுமைவினை; சிந்தைபுக வென்றுங்
குறியா இருமையை துக்கம் போன்.

9. அறிவோர்ப் புகழ்ச்சி

அனித்தியத்தை நித்தியமென் றுதரிக்கும் பொல்லா 1
மனித்தருடன் கூடி மருவார்—தனித்திருந்து
மோனந்த மாஞ்செல்வத்தின் மூழ்கி மகத்தையறுத்
தானந்த மாயழுந்து வார்.

2
தாகம் மறந்து சதிர்மறந்து தான் மறந்து
தேகமறந் தட்டமா சித்திமறந்—தாகத்தின்

வந்தத்தி யாதிருந்த மாருச் சிவானந்தஞ்
சந்ததம்வாழ் வார்க்கார் சரி.

உள்ளமலம் நீங்கி ஒழியாச் சிவானந்த 3
வெள்ளந் திளைந்து விளையாடும்—பிள்ளைகாள்!
அத்துவித மானீர் நம் ஆகம் பிரிந்தோமென்
றித்துவித மென்னுவா னேன்?"

அறிவாய் அறிவிழப்பில் ஆகின்ற இன்பச் 4
செறிவாய்ச் சுகமாய்த் தினமும்—பிறியா
திருந்தங் கதீதமாம் ஏய்ந்தசிவா னந்தம்
பொருந்துவார் முத்தரெல்லாம் போய்.

10. மடவோர்ப் பழிப்பு

தன்னை யறியார் ஈசன் றன்னையறியார் பாச 1
வினையறியார் ஆனந்தம் மேவார்—தனையறியுஞ்
சிட்டர்தமக் கில்லாத தீங்குரைப்பார் பொல்லாத
துட்டர்தமக் குள்ள தொழில்.

தன்னை அறியார் தலைவன் றனையறியார் 2
முன்னை வினையின் முடிவறியார்—பின்னைக்
குருக்களென்றும் பேரிட்டுக் கொள்வார்கள் ஐயோ!
தெருக்கள் தமிலே சிலர்.

வாயுவெளி தானசையா வாற்றிருந்தாற் போலென்றும் 3
நீபதுவும் பூரணமாய் நிற்கவே—காயத்துக்
குள்ளுள்ளே தான்சிவமென் றற்றுப்பார்ப் பாருசிப்
பொள்ளலால் வான்பார்ப்பார் போல்.

கற்கவிடாப் பட்டு மிகக் கற்றவெல்லாம் கற்றார்பால் 4
தர்க்கமிட்டு நாய்போலச் சள்ளென்பவோ?—கற்கருணை
வெள்ளம் அடங்கும் விரிசடையார்க் காளாகி
உள்ளம் அடங்கவல்ல வோ?

அறியார் கலையினிலும் ஆனந்த ரூபம் 5
அறிவார் தமையும் அடையார்—அறிவார்கட்
கிலாத தீங்கே—எடுத்துரைப்பார் இவ்வுலகிற்
பொல்லார் தலையிற் பொறி.

11. பொது விதி.

நீதியிலா மன்னர் இராச்சியமும் [illegible] 1

பூதியிலார் செய்தவமும் பூரணமாஞ்—சோதி.

காஞ்சிகமுக் குன்றமறைக் காடருணை காளத்தி
வாஞ்சியமென்; முத்தி வரும்.

**தனிப் பாடல்** **கட்டளைக் கலித்துறை**

ஆய்வார் பதிபசு பாசத்தி னுண்மையை ஆய்ந்தறிந்து 1
காய்வார் பிரபஞ்ச வாழ்க்கையெல் லாங்கல்வி கேள்வியல்லல்
ஓய்வார் சிவானந்த வாரியுள் ளேயொன் றரண்டுமறந்
தோய்வார் கமலையுள் ஞானப்ர காசன்மெய்த் தொண்டர்களே

கனக்கும் பொதிக்கும் எருதுக்குந் தன்னிச்சை கண்டதுண்டோ? 2
எனக்குமுடற்கு மெனதிச்சை போவினங் கர்ப்பூரத்தைச்
சினக்குங் கமலையில் ஞானப்ர காச சிதம்பரனின்
றனக்கிச்சை எப்படி அப்படியாக உரைத்தருளே.

எல்லா முனது செயலென் றறிந்து பெண்துணைத்தநிற் 3
பொல்லாத சங்கற்ப மென்வரு மோபுர மூன்றெரிக்க
வல்லாய்! கமலையில் ஞானப்ர காசவரத! இது
சொல்லாய் கரண மடக்கமன்றோ? என் சுதந்திரமில்லையே!

**கலி விருத்தம்**

அவரவர் வினை வழி அவரவர் வந்தனர்;
அவரவர் வினைவழி அவரவர் அனுபவம்;
எவரெவர்க் குதவினர்? எவரெவர்க் குதவிலர்?
தவரவர் வினைவழி தடையுணர் வதுவே.



வெம்புவேன் றன்னை விடுத்தான்வ தேபாரஞ்
சம்புவே! சொக்கநா தா!

என்றால் உனையடைய வல்லேன் எனிவிடரில் 7
இன்னல் அளவு மிருப்பேனோ?—பன்னாகம்
பூண்டவா! வேணிப் புனிதா! மதுரை நகர்
ஆண்டவா சொக்கநா தா!

எல்லாமும் வல்லசித்தர் என்றக்கால் என்னுடைய 8
பொல்லாக் கருத்தகற்றப் போகாதோ?— நல்லாடும்
பொங்கரா வேணிப் புனிதா! மதுரைநகர்ச்
சங்கரா! சொக்கநா தா!

பேசாநு பூதி பிறக்க எனதுளத்தில் 9
ஆசா பசாசை அகற்றுவாய்— தேசாருஞ்
சிற்பரா னந்தா திருவால வாயுறையுந்
தற்பரா! சொக்கநா தா!

இறந்தும் பிறந்தும் இளைத்தேன். இனியான் 10
மறந்தும் பிறவா வரந்தா— சிறந்த புகழ்
ஞாலவா யாமுடிக்கு நாட்டுகு லாமணியாம்
ஆலவாய்ச் சொக்கநா தா!

உலக வெறுப்பும் உடல் வெறுப்பும் உள்ளத் 11
திலகு மனவெறுப்பும் எல்லாம் அலகிறந்த
நந்தாத இன்ப சுக நாட்டின் விருப்பமுறத்
தந்தாள்வை சொக்கநா தா!

எப்போது மும்மலம்விட் டேறுவேன்? பூரணமாய் 12
எப்போதுன் இன்பசுகத் தெய்துவேன்?— எப்போதும்
நித்தியா! சுத்தா! நிராமயா! சொற்றவருச்
சத்தியா! சொக்கநா தா!

காயமோ காலன் கருத்தோ பகைகாலன் 13
ஞாயமோ சற்றும் நடப்பதில்லை —பேயனேன்
மாளுவனோ தென்மதுரை மாமணியே! என்னையுகந்
தாளுவையோ சொக்கநா தா!

எரிசுடுவ தல்லால் இரும்பு சுடுமோ? 14
அரியயற்கும் வாசவற்கும் யார்க்கும்— பெரியவர்க்கும்
பூணுமே தத்தொழினிற் பொன்னருளாற் றென்மதுரைத்
தாணுவே! சொக்கநா தா!

ஆரிடத்தில் வந்தும் அழுவேன் [illegible] 15
ஓரிடத்தி லுற்பவித்து உள்ளபடி— பாரிடத்தில்

நாயே னுளமகிழ நன்கு வுணர்த்திடுவாய்
தாயேநீ சொக்கநா தா!

சித்தம் எழுந்தருளி நின்மலனே! என்றனக்குப் 16
புத்தி மிகமிகவும் போதித்துச் சித்தமயல்
போக்குவாய் இன்பசுக பூரணத்தி ரண்டறவே
ஆக்குவாய் சொக்கநா தா!

மறையா கமவிதியும் வந்தவுட றயனின் 17
விறையூழ் விதிமுன்னை னின்றன் மறைவிதிக்கே
ஏற்கவே செய்வே னினைந்தாலுன் வேறதனை
யார்க்காவேன் சொக்கநா தா!

மனம் விளக்கு முன்பதத்தி ஞானவைப்ப தல்லால் 18
மனவிளக்குஞ் சோறருந்த வைத்தாய்—சலம் விளக்கும்
சென்னியா! மாமதுரைச் செல்வா! எல் லாம்வல்ல
தன்னியா! சொக்கநா தா

ஆர்வந்தேன் அரிபோவென் ஐயாவுன் ஆனந்தச் 19
சிருளத்தே யென்றுஞ் செறிந்திலேதற் காரிருண்ட
கண்டனே! ஓர்புருடன் காதல் கொண்டான் பொன்மதுரை
அண்டனே! சொக்கநா தா!

கான்றசோ றுயுகைக் காணவில்லை இன்பவெள்ளத் 20
தூன்ற அடியே னுறங்கவில்லை ஏன்ற
இருள்சகல நீங்கவில்லை ஏழையேற் குன்றன்
அருளுறுமோ சொக்கநா தா!

நீயே பரமசிவ ஞானக்கால் நின்மலனே! 21
நாயே னுளமகிழ நன்றாகப் பேயேன்
கருத்தடங்க நின்கருணை காட்டி யின்ப வெள்ளம்
அருத்திடுவை சொக்கநா தா!

விதிமார்க்க மெப்பொழுதும் வேவறிபே னூழின் 22
விதிமார்க்க மல்லாது மெய்யாங்— கதிமார்க்கம்
காட்டுவாய் நாயேன் கரையேற எவ்வுலகும்
ஆட்டுவாய் சொக்கநா தா!

அருவருப்பே மெத்திடும் ஆகத்தைச் சற்றும் 23
அருவருக்கத் தோற்றுதில்லை ஐயா!— அருவருக்கத்
தோற்றியிடா வென்வினை துய்ப்பித் தறுப்பதற்கோ
சாற்றியுடாய் சொக்கநா தா!

தவமோ சிறிதறியேன்: தாரணிமேற் செய்யும் 24
அவமோ அறிகிலே; ஆனற்— சிவமோ

பெருமா றென் கூடற் பிரானே! மும்பாசம்
அறுமா றென் சொக்கநா தா!

அனைத்துயிர்க்கும் பாசம் அறுத்துமுத்தி கூட்ட 25
மனத்துயரஞ் செய்தல் மருந்தோ?–மனத்துயரஞ்
செய்யாமற் றீர் மருந்து சித்தா! அறிந்திலையோ
ஐயாவென் சொக்கநா தா!

உணர்த்திடில் உணர்வேன் உணர்த்தாயேல் நாயேன் 26
கணத்தும் உணரும்வகை காணேன்!–உணர்த்திடுவன் றுட்
பூண்டமல மாயை கன்மம் போக்கிச் சிவானந்தத்
தாண்டருள்வை சொக்கநா தா!

பிறந்தேன் மனத்துன்ப பேரருளினா லே 27
அறிந்தேன் உனையன்று ஐயா! செறிந்தவின்பப்
பூரணா! செங்கமலப் பொற்பாதா! கூடலில்வாழ்
ஆரணா! சொக்கநா தா!

நெடுங்காலம் வந்தாற் கெடும்பவம்: நதியில் 28
விடுங்காலம் வந்தால் விடுமோ;–கொடுந் தவங்கள்
பண்ணிடினும் பாவம் பயிற்றிடினு மாரேனும்
அண்ணலே! சொக்கநா தா!

என்னவினை நாயேற் கிருக்கிறதோ இக்காயத் 29
தென்னவினை யின்று ளியற்றுமோ!–என்னவினை
வந்திடுமோ என்றறியேன்! வந்தாலும் நின்னருளே
தந்திடுவாய் சொக்கநா தா!

ஆறாறு தத்துவத்தும் ஆணவத்துங் கன்மத்தும் 30
மாறுதெந் நாளும் மயங்காமற்–பேருள
சித்தனே! சின்மயனே! சிற்பரத்தில் ஆன்மதுரை
அத்தனே சொக்கநா தா!

அடியேன் உன்னை வேண்ட அப்படியே என்றும் 31
கொடியேன் சரித்திசைக் கூறி–அடியேனை
மீண்டுபிற வாதுன் விரை மலர்த்தாள் சூட்டியெனை
ஆண்டவனே சொக்கநா தா!

ஆசான் உளத்திருந்தும் ஆன்மா உளத்திருந்தும் 32
ஆசார் மலத்தை அறுத்தருளி நேசா;
ஒளித்திருந்த இன்பவெள்ளம் ஒன்றவுயிர்க் கென்றும்
அளிப்பவனே சொக்கநா தா!

ஆற்றையணி வேணி அமலனே! மெய்யதினில் 33
நீற்றையணி புனிதனே! விமலனே!–கூற்றைக்

குழைத்தவனே! என்சிரத்துன் றேகவைத் தாளை
அமைத்தவனே? சொக்கநா தா!

கால வசமோ கடியேன் வினைவசமோ 34
ஞாலவச மோவருளை நாடியே—கோலமறச்
சிற்பரா னந்தவெள்ளஞ் சேர்ந்தறிந் துஞ் சேர்கிலேன்
தற்பரா! சொக்கநா தா!

நீணாட் பிறந்திறந்து நிற்றதுயர் கூறிலை; 35
வீணாட் கழிந்து விடமேலே—பூணவருள்
எண்ணரிய பேரின்ப வீடு அதுவாக,
அண்ணலே! சொக்கநா தா!

ஆறாறு தத்துவத்தும் ஆணவத்துஞ் சாராமல் 36
மாறாத பேரின்ப வாரிதியே—பேறாகச்
சார்ந்திருக்க வல்ல சதுரர் உள்ளத்ததுவாய்
ஆர்ந்திருக்குஞ் சொக்கநா தா!

காடோ வனமோ கனகிரியோ காசினியோ 37
நாடோ சகலகலை ஞானமோ—வாடி
ஒடுங்குவதோ மெய்வீ டுயிர்க்களித்தல் போதம்
அடங்குவதோ சொக்கநா தா!

நின்றுபர மானந்தச் சோதியினி ரண்டற்று 38
நின்றுவிட என்னை நிறுத்துவாய்—அன்று
கமலனே காண்பரிய கண்ணுதலே! கூடல்
அமலனே! சொக்கநா தா!

எக்காலம் இக்காயம் இற்றிடுமோ! என்வினைகள் 39
எக்காலம் மும்மலங்க ளிற்றிடுமோ எக்காலம்
ஆனந்த சாகரத்தில் ஆடுமோ என்னுள்ந்தான்
ஆனந்தா! சொக்கநா தா!

எக்காலம் மெய்க்கே இரையிடுதல் இற்றிடுமோ! 40
எக்காலம் இக்கரணம் இற்றிடுமோ!—எக்காலம்
பேசாறு புத்தி பிறந்திடுமோ என்னுளத்தில்
ஆசானே! சொக்கநா தா!

வாக்கிலுரை பொய்யே; மன நினைப்ப துங்கேடே; 41
ஆக்கைதினஞ் செய்வ தவித்தையுமே;—நோக்கில்
திரிவிதமு மிப்படி நீ செய்வித்தால் முத்தி
தருவதுமேன் சொக்கநா தா!

இக்காலத் தின்னவினை ஏறன்மைப்பை; அப்படியே 42
அக்காலத் [illegible] மறுத்திடுவை;—இக்கால்

தப்புவா ருண்டோ தமியேற்குத் தப்பரிதேன்
அப்பனே! சொக்கநா தா!

43 மோகாதி பாசமின்னும் முற்றும் மறக்கவில்லை
தேகாதி மானஞ் சிதையவில்லை;—ஓகோ!
உனையடைந்தும் பாசம் ஒழியவில்லை கூடல்
தனையடைந்த சொக்கநா தா!

44 பத்திமெத்தச் சித்தம் பதியவில்லை: அட்டமா
சித்தி அவாவெறுக்கச் செய்யவில்லை;—முத்தியுளங்
கூடவில்லை என்னாளுங் கூடலிலே மாறி நடம்
ஆடவல்ல சொக்கநா தா!

45 என்னைவளை பாசவரன் இன்னமுந் கொள்ளவில்லை
அன்னை யனை நீபதவ மன்றாலும்—முன்னைமலம்
ஓடவே எவ்வுயிர்க்கு மோட்டு மருட்சேனை
சாடியிடுஞ் சொக்கநா தா!

46 சேகரத்தி னுச்சியின்மேற் சென்றேனுக் கிச்சித்தே
போகவச மாகுமோ போகாதா!—நாகமே
மிகவறவே யுள்ளத்தில் வேண்டிலுன்றாட் சேர்ந்தேன்
அகமுறுமோ சொக்கநா தா!

47 அடியார் பரிபாக மெல்லாம் அறிந்து
படிகீழ்ப் பதமேற் பதத்தில்—கொடுபோய்
இருந்திடுவை சேர இனிமேலாம் போகம்
அருத்திடுவை சொக்கநா தா!

48 வாழைம் மலத்தால் வருந்தி மிகவுடைந்த
ஏழையனுக் கையோ இரங்குவாய்—கோழையனாய்ப்
போனேன் புலப்பகையாற் பொன்னடியை யின்னருளால்
தானேதா சொக்கநா தா!

49 எக்காலந் தாகங்கள் இற்றிடுமோ! காயங்கள்
எக்காலம் ஆசைகளும் இற்றிடுமோ;—எக்காலம்
நல்லோர் குணம்வருமே; நாதாவெல் லாமுமாய்
அல்லானே சொக்கநா தா!

50 உள்ளமுனை அல்லாலொன் றுள்ளவில்லை; வின்றெருளிக்குங்
கள்ளமற நீயுங் கருதவில்லை;—எள்ளளவும்
நற்றவமோ செய்யவில்லை; நாயேன் உனையடைதற்
கற்றதென்ன சொக்கநா தா!

51 ஆர்க்கும் இடைக்கும் அடியேன்முன் வந்தமைகைத்
[illegible] கைப்பேவ—யார்க்குங்

தெரிவரிய வேதசிகை சித்தா வுரைத்தாய்
அரியறியாச் சொக்கநா தா!

எவ்விதையை மாக்கள்பயிர் இட்டார்கள் இட்டவரே 52
அவ்விதையின் போகம் அருந்துதல்போற்—செவ்வி தாய்த்
தன்மார்க்கஞ் செல்வார்க்குத் தோன்றும் பிறப்புமுத்தி
சன்மார்க்கஞ் சொக்கநா தா!

எல்லார் கருத்தும் இதமா வுரைக்கறியேன் 53
நல்லாங்கு தீங்கிதென னா . றியேன்—எல்லாரும்
நீறு நம் வேணி விமலா! மதுரையில்வாழ்
ஆரூரா! சொக்கநா தா!

உரையுறந்த பேரின்ப உல்லாச வீட்டிற் 54
றிரையிருந்து தூங்கித் திளைப்பேன்—வரைபெருகப்
பேசுவேன் யானென்றோ பெற்றவர்தம் உள்ளத்துக்
காசுவே சொக்கநா தா!

ஆறாறு தத்துவமும் அத்துவறை மூர்த்திகளும் 55
பேறும் வினையினையும் பொதித்து—மாறுமல
ஆட்டுவது நீயானால் ஆகா மியமென்பார்
சாட்டுவதென் சொக்கநா தா!

முன்னளவில் மாக்களுக்கு முத்தி கொடுத்தவருள் 56
என்னளவிற் சும்மா இருப்பதென்?—முன்னளவிற்
சீர்பெற்றா ரேனுந் திருவருளைத் தாசையின்றி
ஆர்பெற்றார் சொக்கநா தா!

நோயால் வருந்தியுனை நாமுகுறாற் கூப்பிட்டால் 57
நீயா ரெனுறிருக்கை நீதியோ!—தாயாய்
அலை கொடுத்த தேமுல் அருங்குழவிக் கன்று
முலைகொடுத்தாய் நீயலவோ முன்?

தாயார் மகவருந்தஞ் சற்றுந் தரியார்கள் 58
ஆயவினைக் கேடாய் அமைத்தாலும்—காயம்
பரிக்குந் துயரமெல்லாம் பார்க்கவுனக் கென்றுந்
தரிக்குமோ சொக்கநா தா!

தீவினையாய் இன்னமின்னந் தேகமுறச் செய்வையோ, 59
தீவினையற் றுன்பயமாய் செய்வையோ!—தாவிதமாய்
இன்னபடி மேல்விளைவ தென்றறியேன் சதறிந்த
அன்னையே சொக்கநா தா!

என்னதியான் என்பதுவும் யான்பிறர்செய் தாரெனலும் 60
[illegible]—இன்னமின்னஞ்

யோகாந்தா னீங்கி யொழியாச் சிவானந்த
ஆனந்தா சொக்கநா தா!

70

மோகங் கரைய முழுதும் மலங்கரைய
ஆகங் கரையவறி வானந்த— யோகமாய்ப்
பூரணமா யெங்கெங்கும் பொங்கி யெழுவித்த
ஆரணனே! சொக்கநா தா!

71

ஊனாரு வானீவு டலோ டனைகாமலருஞ்
ஆனசிவ போகமது வாயருள்வாய் —ஞானக்
கரும்பொருளே! வாழ் மதுரைக் கண்ணுதலே! யார்க்கும்
அரும்பொருளே! சொக்கநா தா!

72

பூண்ட மலம் மாண்டுவிடல் போந்த சிவா னந்த வெள்ளத்
தாண்டு மெனை மீண்டு விடம் ஆகுமோ?— நீண்டமால்
வீரென்பார் தார விமலா! எனைக்கண்டார்
ஆரென்பார் சொக்கநா தா!

73

முன்னை மலமகற்றி மூதறிவா னந்தமயர்
தன்னை யறிந்த போ தருள்— என்னையுநீ
ஆண்டுபார்ச் சொக்கநா தாந்தமருள் கூடலிலே
தாண்டுபார்ச் சொக்கநா தா!

74

கருணை நிதியே! கடவுளே அன்பர்
பொருளான பேரின்ப பொற்கே! ஒருநாளும்
நீங்கா தனைத்தறிவில் நின்ற சுகா னந்தமே
ஆங்காணீ சொக்கநா தா!

75

நீரிலே மூழ்கினுமென், நீதமருச் சிக்கிலுமென்
பாரிலே சுற்றிப் டணியிலுமென் —வேறிலே
உற்றிருந்தால் அன்றோ உயர்க்குறுதி; ஒன்றிரண்டும்
அற்றவனே! சொக்கநா தா!

76

என்செயலே என்றேன் றியற்றுவதும் என்செயலும்
உன்செயலே என்றறிந் துணர்த்துவதும் —நின்செயல
தானுமே என்ன அடைவற் குணர்த்திலுமீ
ஆருமே சொக்கநா தா!

77

ஈன்றுமெனை ஆண்டமீயே எவ்வினைக்கி டாகாமே
வேண்டும் பலன்களினீ விட்டாலும்—பூண்டருளால்
அங்கங்கே என்னோ டன்னியமாய் என்றுருவின்
றங்கியருள் சொக்கநா தா!

78

உன்னைவி: நீங்குமயிர் ஒன்றில்லை: ஆதலினால்
என்னைவி— நீங்குவது இல்லை பொன்னைவிடப்

பூந்தேன் அலருடையாய்! பொங்குமது ராபுரியில்
வேந்தே! பிரிபாவிடை,

அன்பர்க் கருள்புரிவ தல்லமமற் றேவரீர்
வன்பர்க்கருள் புரிபமாட்டீரே—உம்பர்தொழும் 79
நல்லோர் புகழ்மதுரை நாதரே! தேவரீர்க்
கெல்லாமும் கைவசித்த ரேன்

நரகம் இனிநாட நாடோம் உமையாள்
வீரகர் தமிழ்மதுரை மேவித்—தரகப்பரி 80
ஆக்கினார் வைகாசியினி ராடிநேரும் அவ்வெல்லைப்
போக்கலாம் யாந்திரிந்திப் போது.

நானே தனுகரணம் நானே மலமாயை 81
நானே இவைகள் நடத்துவது—நானேதான்
பூண்ட வினைபறுப்போன். புண்ணியபாவம்புரிவோன்?
ஆண்டவனே! சொக்கநா தா!

அரும்பாச நன்மை தின்மை யாகம் அதன்மேல் 82
விரும்பாது விட்டையிலே மேவித்—திரும்பாத
வானந்தா ஈன்னறிவில் மாருது பொங்கிபெழும்
ஆனந்தா! சொக்கநா தா!

நிஞ்சப் பிணமென்னச் சுற்றத்தார் விட்டத்தாரி 83
அஞ்சச் சலிக்க அருவருக்க— கொஞ்சமுற
வந்த தனுவிருந்து வாழ்த்திநா னென்னவைத்த
தந்திரமென் சொக்கநா தா!

தனுவாதி யாக்கையுயிர் தன்னிலிசைத் தாட்டி 84
எனுமாக மங்கணொரு என்றுந்—தினமுநீ
ஆச்சரியம் யானென தென் னுட்டல்மறந் தொன்றுரைத்தல்
ஆச்சரியஞ் சொக்கநா தா!

தேகாதி யெல்லாஞ் சடம் பிணம்பொய் யென்றிருக்க 85
மோகாதி யெல்லாம் முடிந்திருக்க—ஏகமாய்
எப்போது மின்பவெள்ளத் தேயிருக்க வாழ்வையென்னுள்
அப்போதே சொக்கநா தா!

வின்பாடல் என்று வினைப்பாடல் அன்றியே 86
என்பாடல் எங்கே இறைவனே!—வின்பாடல்
ஆமே தனுவாதி ஆம்நால் வாக்காதி
ஆமே! சொக்கநா தா!

நீயற்ற ஓர்பொருளை நிச்சயித்த கம்முனுளம் 87
[illegible] புரிகுவேன்—நீயற்றல்

ஆக்கா தணுவும் அசையுமோ? அவ்விகற்பந்
தாக்காத சொக்கநா தா!

அன்றுமுதல் இன்றளவும் மேலும் அடியேனுக் 88
கென்றுமே நன்மைசெய்வ தன்றியோ—ஒன்றேனுஞ்
செய்யுமா றெங்ஙன்? சிவனே! இனிநாயேன்
உய்யுமா றெங்ஙன்? உரை.

அறிவுபர மானந்தம் ஆவதில்லை! ஆகம் 89
பொறிகரணம் யாவுமன்றாம் போக—நெறிதவஞ்சேர்
பேரன்போ இல்லை; பின்னொன் உனக்கடிமைக்
காரென்பேன் சொக்கநா தா!

வின்னளவில் ஆனந்தம் நின்கருணை சந்தேறனும் 90
என்னளவிற் றேற்று திருந்தக்கால்—வின்னளவிற்
பூரணப் பொய் யானந்தம் பொய்க்கருணை பொய்யுரைத்த
ஆரணம்பொய் சொக்கநா தா!

தேவே! மதுரைநகர்ச் சிற்பரனே! எவ்வுயிர்க்குங் 91
கோவே! எனையாளுங் கோமானே!—நாவே
உனைத் துதிக்கச் சிந்தை உனை நினைக்க என்றுங்
கனத்தி லுனைவணங்கக் காண்.

உன்னைச்சிங் காரித் துனைதழுவு பாராமல் 92
என்னைச்சிங் காரித் திடர்ப்பட்டேன்;—பொன்னை
அரிவையரை யெவீசும் அன்பிலேற் குன்றுன்
தருவையோ சொக்கநா தா!

சொக்கநா தாவுனையே சொல்லுமடி யேனுடைய 93
பக்கமாய் நின்றுவினை யாற்றியே—எக்காலும்
மீண்டுவா ராகதி மேவுவிப்பாய் தென்மதுரை
ஆண்டவனே! சொக்கநா தா!

ஆறுதலை இல்லை அடியேனுக் கன்பாகத் 94
தேறுதலை சொல்வார் சிலரில்லை—வேறெனக்குந்
திக்காரு மில்லை சிவனே! பழிக்கஞ்சி
சொக்கேச! நின்றாளே துணை;

புண்டரீகத் தாளைப் புகழ்ந்து தினம் 95
அண்டமரர் கொண்டிறைஞ்சும் ஆதியே—தொண்டுபடு
நாயேனை யாண்டுகந்து நன்னெறிகள் காட்டுவித்த
தாயே நீ சொக்கநா தா!

மீண்டு செய்யு மும்மலமு மிக்கவினை நல்குரவும் 96
[illegible]—தொண்டுபோய்

நின்னருளிற் சேர்க்க நினைகண்டாய் தென்மதுரை
மன்னவனே! சொக்கநா தா!

கூரியவெம் பாசக் குளிர்நீங்க நின்னருளாஞ் 97
சூரியனெப் போதுவந்து தோன்றுமோ!—பாரறியக்
கொட்டமிட்ட சண்டனுயிர். கொள்ளையிட்ட மாமதுரை
இட்டமிட்ட சொக்கநா தா!

உனக்குப் பணிசெய்ய உன்றனையெந் நாளும் 98
நினைக்க வரமெனக்கு நீதா—மனக்கவலை
நீக்குகின்ற தென்மதுரை நின்மலனே! எவ்வுலகும்
ஆக்குகின்ற சொக்கநா தா!

சன்மார்க்கஞ் செய்யுந் தபோதனரோ டென்னையு நீ 99
சன்மார்க்கஞ் செய்ய வருள் நாடுவாரீ—துன்மார்க்கஞ்
செய்கின்ற முப்புரத்தைத் தீயாக்கித் தென்மதுரை
வைகின்ற சொக்கநா தா!

வந்த பொருளாசை மண்ணாசை பெண்ணாசை 100
இந்தவகை ஆசையெலாம் என் மனத்துள்—வந்தினிச்
சேராமல் வாழ நினைகண்டாய் தென்கூடற்
போராத சொக்கநா தா!

மதுரையின் மாண்பு

தண்டுவரும் குண்டுவரும் தானை வரும் ஆனைவரும் 101
வண்டில்வரும் ஆள்வரும் மாடுவரும்—மிண்டிப்
பெருங்கோட்டை யுஞ்சனையும் பின்வரும் கூடல்
அருங்கோட்டை வாசலிற் சென் றால்.

(குறிப்பு—95 முதல் 101 வரை உள்ள வெண்பாக்கள் சில பிரதிகளில் மட்டும் காணப்படுவன.)





## நூல்: முப்பத்து நான்கு

# அருணாசல குரு நிஜானந்த போதம்

**குரு துதி:** 　　　　**நேரிசை வெண்பா**

*சித்தவிசும் பிற்சத்தந் தேசலருஞ் சாசுவத*
*வத்துமயஞ் செய்தவன்ருள் வந்தித்து—நித்த*
*நிருமலப்பே ராரும் நிசானந்த போத*
*மருமமிசைப் பேனுள் மகிழ்ந்த.*

**மகான்கள் வணக்கம்:**

*மனத்துருசங் கற்ப மயமாயா லோகம்*
*அனைத்துமகண் டாகார மான—தனைத்தவிர*
*அன்னியமன் ருமெனக்கண் டாரவர்கள் தாள்துகள்நஞ்*
*சென்னிகொடு சேவிப்பம் சீர்.*

**சித்தர் வணக்கம்:** 　　　　**பன்னிருசீர் விருத்தம்**

*சீரார்ந்த துணர்மலிபு தளிகன் பண் பட்டவிதி*
*திகழ்நின்ற பொதிகை முனிவர்*
*திவ்யகுண போகர்நந் தீசர்புண் ணாக்கீசர் சிலகரு வூரெங்கும்*
*பேரார்ந்த சுந்தரா னந்தரா னந்தர்திரு பெருமைச்சர்*
*கொங்கண முனி*
*பிரமமுனி ரோமமுனி வாசமுனி யமலகுரு பிரமமுனி கமல முனிவர்*
*ஏரார்ந்த கோரக்கர் சட்டைமுனி மச்சமுனி*
*இடைக்காடர் முதலியவர்களோ*
*டின்னமுயர் மூத்தருயர் முத்தர்நவ நாதர்புவி யிவர்மரபி லுற்றபுனிதர்*
*காரார்ந்த சுந்தரக் கடவுளடி டார்மலர்க் கண்ணனடி யாரிவர்கடம்*
*கனமிகுந் திடுவனச பாதமல ரென்றும் கருத்திலஞ் சலிசெய்குவாம்.*

**இராயவேலூர் அமுதசித்தர் வணக்கம்:**

*செய்யவே லூரமுத சித்தரே! நாயடியேன்*
*உய்ய வொருதரநீ ரோதினுல்—வையகத்தில்*
*பொய்யனைத்தும் பாழாகிப் புண்ணியத்துக் காதரவாய்*
*மெய்யனைத்தும் மேலாகு மே.*

போனூர் பிரமம் ஸ்ரீஸம்பத்துகிரி அச்சுததாசரவர்கள் இயற்றியது

உருவருவின்மை யாகி ஒருபொருட் டன்மை யாகித்
திருவருணன்மை யாகித் திகழ்நிசா னந்த போதம்
கருவருத் தங்கடந்து களமுலகுய்யச் சொற்றான்
குருவருணாசலன்றன் குறியுள்ள குணச்சுன் மாதோ.

இராயவேலூர் முனிசிபல் ஆபீசு இரத்தின முதலியாரவர்கள் இயற்றியது

உலகிலோர் சரநூலின் உண்மையெல்லாம்
உணர்ந்ததன்மேல் நிசானந்த போதந் தன்னை
நலம்பெறவே யடைவரெனச் சித்தர் சொன்ன
நூலையாராய்ந்து நயப்பினோடு.

திலதமணி முகம்போலத் தெளிவா யார்க்குந்
தெரிந்தடவே வெளியிட டான் திருத்த மாகப்
பலகலைகள் உணர்ந்தபண் டிதனுயிந்தப்
பாரிலருணாசலப்பேர் படைத்தா னன்றே.

உருவாய அன்னமய மாதிபஞ்ச கோசம்
ஒன்றொன்றாய் நீங்கியதை யுணர்வறிவு தானாய்.
இருவாதனைகணீங்கிச் சகலகே வலமும்
இராப்பகலில் லாதநிட்டை தனிலிருந்தெப் போதும்
பொருவில்லா நிரதிசயா னந்தமது மேவும்
புண்ணியர்க ளெச்சமய சாதிகளி லேனும்
நிருபாதி சுப்பிர வாரிதியின் மூழ்கும்
நிலைமையரே பிரமகுலம் நிகழ்த்திடவும் தகுமால்.

'நல்லார் பிறர் குற்றம் நாடார்; நலந்தெளிந்து கல்லார் பிறர் குற்றம் காண்பர்.' ஆதலினாலே, இந்நூல் கண்நோக்குறும் அன்பர்கள் இதிலடங்கிய நன்னிலையுண்மையினை அனுபவம் பெற்ற அஷ்ட மூர்த்தமாயும் சத்த சித்தானந்தமாயும் விளங்கும் பெரும்பொருளின் திருவருள் விலாசமுற்று மார்க்கண்டர் மதிபின் கலை சோடசமும் குறைவிலா நிலைபெற்று என்றும் 16 வயது பெற்றது போலச் சிரஞ்சீவிகளாய் இருப்பார்களென்று கருதி அங்ஙனம் செய்யக் கடவுளை யாம் பிரார்த்திக்கிறோம். 'கற்றதனால் தொல்லை வினை கட்டறுமோ? நல்ல குலம் பெற்றதனால் போமோ பிறவி நோய்?' போகாது; சாதி பேதம், சமய பேதம் பொருள் பேதமெனக் குதர்க்க மொழிகளைப் பாராட்டுவதை நீக்கி முன்னோர்கள் நின்ற நிலை சுதன்றுணரும் சித்தசுத்தி பெற்ற மகானிடப் பிறவிகளே பிறவியென யாவராலும் புகழப்படுவர்.

 

## நூல்

### குறள் வெண்செந்துறை வெண்பா:

அறிவான படம்நாலு வாலோ ஒன்றும்
அப்பனே! ஐந்துதலை விரித்தே யாடும்

குறியான நாவதுவும் கூழை கூழை
குறித்துப்பார் சைவசமா யாகும் பாரே.

### எண்சீர் விருத்தம்

பூதலத்தில் பலவிதமாய்ப் பேச லான 1
பெருமையினை ஒருவழியி லிருந்து பார்க்க

மாதலத்தி லறிவுடைய பிள்ளாய்! கேளாய்;
மகத்தான மேருகிரிச் சிகரந் தன்னில்

பாதலத்தும் மீதலத்தும் எங்கு மான
பரம்பொருளாயரும் பொருளாய்ப் பிரகா சிக்கும்

சீதமுறு மதிபிரவி சுடரு மாகிப்
பொற்கொடிபோல் காந்தியுநும் பொருளு மாமே.

மெய்யான பொருளென்ன சோதி சோதி; 2
மேவிநிக்ற தலமென்ன வன்னி வன்னி;

மெய்யான தலமென்ன அப்பு வப்பு;
மேகாந்த வெளியென்ன வாயு வாயு;

மெய்யான தெய்வமென்ன அண்ட மண்டம்
மேவிநின்ற இடமென்ன மண்ணு மண்ணு;

மெய்யான தெய்வமென்ன பஞ்ச கர்த்தாள்
மேவுசடாட் சரமுடிவி லமர்ந்த மூலம்.

உரைத்திடவே ஓங்காரம் ஒன்றே கோணம்; 3
ஓங்குமதில் சுழி யொன்று நடுவி ராகம்;

வரைத்திடவே யிகாரவட்டந் தனிலே வாசி
வளமாகத் தீர்ந்தபின்பு சுவாச முண்டாம்;

கரைத்திடவே யிடைகலைபிங் கலையு மாகிக்
கனததபரி உலையம்பால் சுழன்று பொங்கி

அரைத்திடவே சுழுமுனையால் ரேசகபூ ரகமாய்
அமர்ந்துநின்று சுவாசமது கும்ப கத்தில்

உரைத்திட வே ஒன்றுக்கொன் றுதவி யாகி
[illegible] பார்த்தே.

உருதியென்ற ரேசகமும் வன்னி வன்னி;
உண்மையென்ற பூரகமும் அப்பு வப்பு; 4
கருதியென்ன ரேசகத்தால் கும்பித் தக்கால்
கடுகிடென்று சுழன்றும்—யிகாரம் புக்கும்
வருதியா யிந்தவகை மாகூட் சந்தான்
உளமாகச் சகலமுந்தா னடங்கிப் போச்சு;
மருகாமல் மாய்கைவிட்ட மாண்பருக்கு
மாசித்தந் தொழிலெல்லா மவர்க்கீ டாமே.

வாங்கவே நவக்கிரகம் தன்னால் மைந்தா!
வளமான அனுக்கிரகம் தன்னைக் காணாய்; 5
தாங்கவே அனுக்கிரகம் விந்து விந்து;
தனதான நவக்கிரகம் நாதம் நாதம்;
பாங்கவே முடியடிதான் அனுக்கிரக மாகும்;
பரமான கற்பமது நவக்கர கந்தான்
மாங்கவே அனுக்கிரகக் மிரவி யுச்சம்,
மைந்தனே! நவக்கிரகம் பகல்தா னுச்சம்.

உச்சமென்ற வளர்பிறைக்கிவ் விதமாய் மைந்தா! 6
உதகமென்ற தேய்பிறைக்கு நவக்கிரக முச்சம்
உச்சமென்ற தேய்பிறைக் கனுக்கிரகம் பெண்ணு:
உதகாதி நவக்கிரகம் ஆணு வாணு;
உச்சமென்ற வளர்பிறைக்கனுக் கிரகம் ஆணு;
உண்மையென்ற நவக்கிரகம் பெண்ணு பெண்ணு;
உச்சமென்ற அனுக்கிரகம் நவக்கிரகம் கூடும்
உண்மையெல்லா மரைநொடியி லுரைத்திட் டேனே.

ஈனையென்ற நோய்வந்தால் நாளைப் பார்த்தே 7
இறக்கிவிட உபாயத்தை இனிமேற் கேளாய்
சானையென்ற கிழமையொடு நட்சத் திரமும்
சாருந்திதி மூன்றதையும் எண்ணிப்பார்த்து
வேனையென்ற மிவன்பேரை வட்டத் திட்டு
விதித்தபிணி நாள்கட்சி யாக்கிக் கொண்டு
சானையுமே வராமே லுருவே சேவி
தணிந்துவிடு மின்னமிது சைகை கேளே.

சைகையென்ன அவன்படுத்த நாள்முதல் வரவே 8
தானான திங்களிமுன் தாக்கிச் சேவி;

மாய்கையென்ன செவ்வாயைக் கடைசி யாய்வை
மையற்ற வாரமுமப் படியே சேவி;

ஏய்கையென்ன மதிபிரவி காரி வெள்ளி
ஏதகுரு புந்திசெவ்வா யென்று சேவி;

வாய்கையவன் பிணிதணியு மேழா நாளில்
வாங்குமடா அதுநிற்க வேறே கேளே;

வேறென்னப் பரணிக்கு வருமுன் மின்னே 9
விளம்படா முன்மொழியி னுபாயம் போல;

கூறென்னக் கார்த்திகையை முன்னே கூறிக்
குதிரையின்பேர் பிறதேரா கிணிதொட் டெண்ணு;

மாறென்னப் பரணிதன்னைத் தொடர்ந்திடாதே;
மணையடுப்புக் கடையாகத் தரவே தாக்கு;

பேறென்ன மூதொன்ப துக்கு மிந்தப்
பிரயோகம் சேவிக்கப் பிணிகள் போமே.

பிணிபோமே திதிக்குமிந்தப் படியாம் அப்பா! 10
பிரயோக மந்திரத்தை இனிமேற் கேளு;

அணியணியாய் வாரம்நாள் நட்சத்தி ரங்கள்
அடுக்கடுக்கா நீயோதி அவன் நோய் நாமம்

தணியநசி நசியென்னக் கணக்கா லுள்ள
சாத்திரமே யுருவோதி விபூதி போடு

பணியென்னக் கொண்டபதி னைந்து பக்கம்
பத்திரண்டே மூக்கும்நட் சத்ர மாமே.

ஆமப்பா நாளுக்கே யுருவென் னப்பா! 11
அப்படியேகிரகபலன் அதற்கு மாகும்;

போமப்பா திசைபலனப் படியே யாகும்;
பொல்லாத நாள் போச்சுக் கோளும் போச்சு;

ஆமப்பா லக்கினத்தின் பதியா ரூடம்
நட்பாட்சி யுச்சமுரு நவக்ர காதி

ஏமப்பா சாபமது பிடியா தப்பா!
எடுபடுமே வியாதிமுத லெல்லாந் தானே.

எல்லாரு மறியவொரு மருந்து கேளு; 12
எந்தெந்த நோயாளி தனக்கும் செய்ய



[illegible]
மருந்துடனே முன்சேர்த்து மாப்புக் கூட்டிக்

கொல்லானோ எமனையிந்த மண்ணை வாரிக்
கூறிட்ட வைத்தியனோ குருவாச் சப்பா!

பொல்லாத பேர்களுக்கு மிம்மார்க் கத்தைப்
புகலாதே பூராய குருவெவ் றெண்ணே.

எண்ணியே கைபார்க்கும் போது நீயும் 13
இரக்கவா னுனக்காய் பிணிகொண் டோனை

நண்ணியே யவன் தலையில் நடுவே தீயை
நாட்டியதி லாதிட்டு நாசி மூச்சால்

நுண்ணியே மூச்சடக்கி யுருஞ்சிப் போடு
உனக்குவரும் நாய்ச்சலிர்க்கும் முபாயம் கேளு;

தண்ணீரிலே சுரதிநிரி யென்று மூழ்கிச்
தானபா னஞ்செய்து தீர்த்து கோள்ளே.

தீர்த்தமதி லாடிநீ நவக்ர காதி 14
செபஞ்செய்து முப்பதுநா ழிகைக்குள் ளாக

வேர்த்துவிடு முன்தேக காந்தல் போகும்
விபூதியிலே சதுரமிட்டுப் பிறையும் போடு;

பார்த்திருக்கும் போதல்லோ தானும் நல்ல
பண்டிதன்மா ருபாயமது பார்மேல் செய்வர்;

கோத்திரத்தி லுனக்குவெகு புண்ய முண்டாய்
உலகருக்கு மிதுவயணங் கொண்டு செய்யே.

கொண்டுவா நிதமுமிந்தப் படிதண் ணீரில் 15
குறியிட்டு மூசுரங்கைக் கங்கை நீரை

உண்டுவா பூதியங் கையிற் கிறி
யூட்டினமே யுணக்குவர மாட்டா தப்பா!

மூண்டுவா ரவரவரைச் சினேகி யாதே;
முகூர்த்தமிட்ட ஏழாநாள் சீயைச் சேரு:

பண்டுபார் பெரியோரை யடுத்துக் காத்துப்
பரிகாரி பரிபாகி யர்வாய் தானே.

பிரமன் விண்டு ருத்திரர் மகேசர் சதாசிவமான பஞ்ச மூர்த்திகள் மூலாதார கணபதியோடு ஆறு ஆதாரங்களிருப்பதாக மறை கூறுகின்றது. மண், நீர், அக்கினி, காற்று, ஆகாயம் சர்வ நால்வகை யோனி வடிவச்சீவர்களுக்கும் ஆதாரமாயிருப்பன. அனைவருக்கும் நாசியில் உஸ்வாச நிஸ்வாசமாய் உலவிவரும் இடைகலை பிங்கலையாகச் சுழுமுனை ஆதாரத்தில் மாறி நடந்துவரும் சத்தி சிவ சந்திர சூரியரெனும் சுவாசமான வாசியானது நாளொன்றுக்கு 2, 11000 600 சுவாசமாய் நடந்து வருகின்றது. அப்படி நடந்துவருவது ... மாகவும் வாசியாகவுமிருப்பதில் நான் ஒன்றது

12 வட்டமாயும் சந்திர பாகத்திலும் சூரிய பாகத்திலும் ஐம்பூதப் பிரிவாய்ப் பிரிந்து கட்டுகின்றது. இடபடிக் கலையில் நடக்கும் ஐம்பூதங்கள் அந்தக் கரண வியாபாரத்தால் அறிவைத் தோற்றுவிக்காமல் ஆயுளையும் க்ஷீணப்படுத்தி, நரை திரை மூப்பை எளிதில் உற்பவம் செய்து விடுகின்றன.

சத்தியென்ற வடிவேதிங் கொளியாய் நிற்கும் 16
சாதகமாம் சிவமேதிங் கொளியாய் நிற்கும்

வெத்தியென்ற வொளிவெளியதொன்றிற் றானால்
வேதாந்தஞ் சித்தாந்த மிரண்டு மொன்றாய்

முத்தியென்ற வடிவாகத் தோற்றும் பாரு
மூதண்ட ரூபமென்கே சரியுமாகும்.

வெத்தியென்ற விந்தையெல்லாம் வெளியாய்ப் போகும்;
வேதமென்ற முடிவுதனைப் புகன்றிட் டேனே.

ரூபமென்றால் ரூபமல்ல; பச்சை யல்ல; 17
உத்தமனே! மஞ்சளல்ல; வெள்ளை யல்ல;

ரூபமென்றால் கறுப்பல்ல; புகை மேக மல்ல;
ஊன்றிப்பார் மனமிதனி லின்ன தென்று;

ரூபமென்றால் அடியல்ல; முடியுமல்ல;
ஓகோகோ சிவரூபம் தன்றாய்த் தோன்றும்;

ரூபமென்றால் விளக்கொளியின் பிரகா சம்போல்
உண்மையிதை யறிந்தவனே தலைவ னாமே.

"பாரி டங்க ளுள்ளதும் பரந்த வான முள்ளதும் 18
ஓரி டம்மு மன்றியே ஒன்றி நின்ற தொன்றடா

ஆரி டம்மு மன்றியே அகத்து ளும்பு றத்த ளும்
சீரி டங்கள் கண்டவர் சிவன்தெரிந்த ஞானியே!"

பாரப்பா! பிராணனெனும் பிராண வாயு 19
பத்தியுடன் தடனிபங்கும் வகையைக் கேளு;

நேரப்பா; நடனரவி சுழிபிற் றோன்றி
நின்றுசுத்தி நொடியிற்சிம் மெனவி றங்கிச்

சாரப்பா! ஓமெனவே மூலா தாரம்;
சார்ந்திருந்து நாபியிலே ஆவென் றெட்டிக்

காரப்பா! சாவென்கதிர் மதியிற் சென்று
கபாலத்தைச் சுற்றிநடு நாசி காணே.

பிராண வாயுவானது தச வாயுவாய்த் தசவிதத் தொழிலை நடத்தி முடிவில் பிராண வாயுவாய் நிற்கும். மன அசைவால் பிராணனும் வாயு

களுதிப்பு; மன அசைவிலாதிருந்தால், வாயுக்களுக்குத் தொழிலில்லை; மனமாகிய வாசியே மனம்; மனமானது சலம் கனல் வாயு இம் மூன்றும் கூடியது.

'தானான மூலமுத லாறு வீடும்
சாக்கிரத்தின் கோட்டையிலே சார்ந்து நிற்கும்.

கோனான பஞ்சகர்த்தா விருக்குமிடம்'
என்று இவ்வனுபவங்களை மேலோர் கூறியிருப்பதும் காண்க.

'ஒன்பது வாயில் ஒருமந் திரத்தால்
ஐம்புலக் கதவை அடைப் பதுங் காட்டிக்
கருவிக ளொடுக்குங் கருத்தறி வித்தே
தலமொரு நான்கும் தந்தெனக் கருளி.

இடைபிங் கலையின் எழுத் தறி வித்துக்
கடையிற் சுழு முனைக் கபாலமுங் காட்டிக்
குண்டலி யதனிற் கூடிய வசபை
விண்டெழு மந்திரம் வெளிப்பட உரைத்து
மூலா தாரத்தின் மூண்டெழு கனலைக்
காலா லெழுப்பும் கருத்தறி விக்க"

என ஔவையார் கணபதியைப் பிரார்த்திப்பதால் செனனமெடுத்த ஒவ்வொருவரும் மேற் கண்ட அனுபவத்தைச் கருதி குருவால் சுவானுபவம் பெற்று வாழ்வதே நற்பயனாகும்

வகையான வாசியது மனமும் கண்ணும் 20
மயங்காதே சிவாயமென்று புலம்பி டாதே;

பகையாதே அட்சரங்கள் ஐம்பத் தொன்றும்
பரிபாடை யாயுரைத்த நாம பேதம்;

திகையாதே நாமமென்றட் சரங்க ளொன்றும்;
செபியாதே யறிவுகெட்ட மனித ரைப்போல்

நகையாதே மானிடர்பல் சாதி யென்று;
நம்பாதே நல்வழியின் காலைப் பாரே.

திரிமூர்த்தி தேவர்முதல் மனித ரோடு 21
சிவயோகம் பெற்றிருந்த மார்க்கந் தன்னைப்

பிரியமுட னெனைத்தொழு து கேட்ட பிள்ளாய்!
பிங்கலையு மிடைகலையும் மாறும் போதங்

கறிவான சுழுமுனையில் மனத்தை வைத்தே
அசையாம லொருமனமாய்க் காக்கும் போது

குறியான சிவயோகம் சித்தி யாச்சு;
[illegible] சென்மம் சித்தரைப்போல் வாழலாமே.

'எட்டுத் திசையும் பதினாறு கோணமு மெங்குமொன் றாய்
முட்டித் ததும்பி முளைத் தோங்கு சோதியை மூடரெல்லாம்
கட்டிச் சுருட்டித் தம் கக்கத்தில் வைப்பர் கருத்தில்வையார்
பட்டப் பகலை யிரவென்று கூறிடும் பாதகரே!'[1]

இரேசகம், வன்னி; பூரகம், அப்பு; பிராண வாயு அமிசம், வாசி; தச நாடிகள் இருதயத்தினசைவு; அறிவு: நேத்திரக் கருமணி ஒளிவு; நாசி மூலமாய் வெளிக் கழிவது, விடம் பொருந்திய சூரிய கலை; ஆகாய சந்திர கிரகணங்கள் முன்னிலையில் அமுதம் உள் புகுவது சந்திரகலையென்றும்; உள் செல்லும் சுவாசந்தோறும் அமுதம் உள் புகுவது சந்திரகலையென் றும் உள் செல்லும் சுவாசந்தோறும் அமுதம் உள்சென்று உதிரத்தில் கலந்து உதிர சுத்தியும் செய்து சிவனுக்கு ஆதாரமாயிருக்கின்றன. இவ் வமுத பலத்தால் தவசிகள் தேகத்தைப் போஷித்து நெடுங்காலமிருப்ப தாக மதியமுதம் உட்கொள்ளும்படி செப்பியிருக்கின்றனர். கைலாயமென் னும் சுழுமுனை வீட்டில் ஓங்காரித்துக் கொண்டு தலையெழுத்தாக இருப்பது உணர்வு. அவை அசைவற நிற்கில் சிவமாம்: அசைவுறில், சீவனாம்; மூச் சாகவும் பேச்சாகவும் சப்திப்பது சத்தி; இவையே பேசுமெழுத்துப் பேசா வெழுத்தெனப் புகல்வன. பேசுமெழுத்து மனம் பேசாவெழுத்து வாசி; சாகா வேகா தலை போகப் புணர்ப்பென மறை கூறும் வாசியாகிய வாயு; வையும் ஆகாய வெளியையும், ஆவியாகிய வன்னியையும். எச்சமய மகான்களும் அடைய வேண்டும்.

கால் என்பது, பிருதிவி: தலையென்பது, ஆகாயம்; மத்தி, அப்பு; உடல், வாயு; உயிர், அக்கினி அறிவு மயமாய் நின்றன.

தானாகித் தான் முடிந்த சூட்சந் தன்னைத் 22
தரணிதனி லறியாமல் தான்தா னென்றே

ஊனாகி நின்றதிரு உடலைக் காணான்
உடலில்நின்ற அட்சரத்தி னுறுதி காணான்

ஆனாகி நின்றதிரு வாசி காணான்
அமர்ந்துநின்ற வாசிதரு நயனங் காணான்

வானாகி நின்றவடி முடியுங் காணான்
மதிகெட்டு விதியழிந்து மாளு வானே.

ஆகாய ரவியினிடத்து உஷ்ணக் கிரணமும் மழைக் கிரணமும் பனிக் கிரணமும் உண்டாகியது போல, அறிவினிடத்தில் இடைகலை பிங்கலை சுழு முனையென்று மூன்று கிரணமுமுண்டாயின.

மணி மந்திர ஔஷத பரிகாரமாகிய மூன்றில், சரமாகிய வாசியின் லக்ஷியம் தெரிந்து, அவ்வனுபவத்திலிருந்து பிணியாளன் வியாதியை நேத் திரத்தால் கண்டு, வாசியினால் ஆகருஷ்ணம் செய்வதே மணி மந்திர பரி



1. பட்டினத்தார், பொது, 30.

காரமாகும். ஔஷதாதிகளால் வியாதியை நிவர்த்திப்பதாயிருந்தாலும், வைத்தியனுக்கும் மற்றவர்களுக்கும் சர அப்பியாசம் வேண்டியிருப்பதால், அதற்குரிய அனுபவிகளையடைந்து, இரேசக பூரக கும்பகம் இன்னவை யென்றுணர்ந்து அடைதலே சன்மார்க்க நிலையாகும்.

சரியை கிரியை யோக ஞானமாவன: மன்னுயிரும் தன்னுயிர் போல எண்ணுவது சரியை; மனு நீதியும் குரு மொழியும் தப்பாதிருப்பது கிரியை: ஒன்றுமே அலையும் மனமொடுங்குவது யோகம்: எப்போதும் தற்பரமாய் நின்றதுவே ஞானம்

நான்கு பதமாவன: கடவுள் சிருஷ்டித்த உலகில் வசிப்பதே சாலோக பதம்: கடவுளை எதிரிட்டுப் போற்றி வாழ்தலே சாமீப பதம்; குரோதாதி குணங்களை நீக்கிச் சத்துவ குணமாயிருப்பதே சரூப பதம்: துவித பாவனை நீக்கி, ஆத்தும விசாரணை செய்து, கடவுளோடு இரண்டறக் கூடி அது தானாய், தானதுவாய் நிற்பதே சாயுச்சிய பதமாகும்.

அஷ்ட கர்மமாவன. பிராணாயாமத்தால் வாசியை வசப்படுத்திக் கடவுள் திருவருள் மீது மோகித்து நித்திரையை நீக்கிக் கண் பார்வையைப் பகிர்முகப்படுத்தாமல். ஐம்பொறிகளை வித்து வேஷித்து. நானெனும் அகங்காரத்தைப் பேதித்தும் பூரணத்தில் மனத்தை ஐக்கியஞ் செய்து, சஞ்சித வினைகளை மாரணம் செய்வதாகும்.

அஷ்டாங்க யோகமாவன: காமமாகிய இச்சையைத் தோன்றாமற் செய்து, தக்க ஆசனத்திலிருந்து, நாம ரூபத்தை நாடும் மனத்தை இந்த யாம்பரத்திலிருத்தி புறவிடயங்களை நீக்கி. விகற்பமில்லாமல் தத்சொரூபத்தை நாடி, வெளி ஒலி தானே தானாய் ஒத்து நிருவிகற்பமாகுதலாம்.

அணிமாதி சித்தியின் விவரம்: அணிமா. சூஷ்ம காரண மகாகாரண சரீரமென்பதில் மகாகாரண சரீரமாய், அணுவிலசைவாக நுழைவது; மஹிமா, விஸ்வரூபமாய்த் தோன்றல்: ஹரிமா அதிக கனுவாயிருத்தல்: லஹிமா தக்கையைப் போல் இலேசாய்க் காட்டல், பிராப்தி. இரவி மதியாரை வசப்படுதல்: பிரகாமியம் பிறர் காயத்தில் நுழைந்து. நினைத்தவிடம் அக்கணமே தோன்றல்: ஈசத்துவம். பஞ்சகிர்த்தியத் தொழிலை நடத்துதல்: வசித்துவம், அண்டர் முதலிய அனைவரையும் தன் வசமாய் இருக்கச்செய்தல்.

தேகமைந்தின் விவரம்: அவை இருள் தேகம், மருள் தேகம், சுத்த தேகம். பிரணவ தேகம். ஞான தேகம் என்பன.

இருள் தேகமாவது ஸ்தூல தேகத்தில் அபானத்தில் மல குற்றம். நாவில் நாடிக் குற்றம், கண்டத்தில் கபக் குற்றம் மேல் மூலத்தில் திரைக் குற்றம், மனத்தில் ஆணவ மலம் பொருந்தி நானெனும் அக்கியான குற்றமாவது.

மருள் தேகமாவது, மாயா சம்பந்தமுற்று தனக்கு விருத்து தெரியாமல் அகங்காரங் கொள்வது.

சுத்த தேகமாவது, கருவி கரணாதிகளிறந்து அறிவு அருள் வடிவாய்ப் பார்வைக்குத் தேகம் தோற்றுவது.

பிரணவ தேகமாவது, தேகம் தோற்றினும் கைக்குப் புலப்படாததும் நிழல் சாயை இல்லாததுமாம்.

ஞான தேகமாவது, கண்ணுக்குத் தோற்றாமல் அறிவிற்குப் புலப்படுவது.

திருக்கு திருசியமாவன: நாமரூப பிரபஞ்சம், இந்திரியங்களுக்கு விஷயம்; இந்திரியம், கரணங்களுக்கு விஷயம்; கரணங்கள், சீவனுக்கு விஷயம்: சீவன், சீவ சாட்சிக்கு விஷயம்: சீவ சாட்சி விவேக ஞானத்திற்கு விஷயம்: விவேக ஞானம் பரிபூரண சைதன்னியமென்னும் அறிவொன்றுக்கும் விஷயமாகாது. இந்தச் சொரூப நிலையே தானென்றுணர்ந்து அதுவாய் விளங்குவர் ஞானியர்.

## ஞானிகள் தேக சித்தியாதற்குத் தச தீட்சை விவரம்:

முதல் தீட்சையில் ரோம துவாரங்கள் வழியாகக் கெட்ட நீர்கள் வியர்வையாய்க் கசியும்; இரண்டாவதில் முத்தோஷமாகிய வாத பித்த சிலேத்தும தோஷம் நீங்கும், மூன்றாவதில் பழைய கெட்ட உதிரங்கள் கசியும்: நாலாவதில் சர்ப்பம் தோலுரிப்பது போலச் சரீரத்தில் தோலுரியும்; ஐந்தாவதில் சட்டை கழன்று தேகம் சிவந்த நிறமாகப் பஞ்ச மூர்த்திகள் கோரியதைக் தருவார்கள்: ஆறாவதில் சட்டை கழன்று, சுழுமுனை வாசல் திறந்து, தூரதிருஷ்டி தெரியும்; ஏழாவதில் சட்டை வெளுப்பாய்க் கழன்று, தேகம் தீபம்போலப் பிரகாசிக்கும்; எட்டாவதில் சடத்தை உயரத் தூக்கும்; இலாகிரியுமாகும்: கூடு விட்டு கூடு பாயும். ஒன்பதாவதில் தேகம் சூரியப் பிரகாசமாய் அஷ்டமா சித்தியும் கைவல்யமாய்த் தேவர் ஏவல் புரிவர்; பத்தாவதில் தேகம் தீபம்போலப் பிரகாசித்து தேகத்தை வெட்டக் கத்தியோடும்; சொரூப சித்தியாம்; அண்டத்தில் மௌனம் நரை திரை மூப்புப் பிணி மரணம் ஏற்படா.

தவசிகளுக்கு ஆதாரம் வாசி 'வாசி' என்பது பிராண வாயு: இதைக் கொண்டு சகல சித்திகளையும் பெற்றனர். சடரான சுழுமுனையில் சந்திரன் சேரில், பஞ்ச பூதமும் அறிவும் ஒடுங்கும்; இரவி சேரில், ஐம்புலனும் அறிவும் பெருகும்; இரவி மதி ஒன்றாய்க் கூடிச் சுழுமுனையிடம் ஒடுங்கில், அறிவும் தச வாயுவும் ஒடுங்கும். வாசி நடு நிலையிலும், மூலத்திலும் நாசியிலும், கண்டத்திலும், சுழியிடமும் சதா நிற்கப் பெற்றவர்கள் தாம் மெய்ஞ் ஞானிகள்;

சாகாக் காலையும் வேகாத் தலையையும் மணியாடும் கோணத்தையும் ஆசான் முன்னிலையில் தெரிந்து, மும்மூலமாகிய உந்திமார்பு நெற்றிக் கண்ணிடமிருப்பர். அமாவாசை அன்னந்தண்ணீர் மங்குமிடம். பருவம் அன்னரசம் பிரிக்குமிடம். நாதமென்பது, தீ மனம்; விந்தென்பது வாசி தலையானது வாசிமேதேற விலையும். சாகாக்கால் வாசி வாயு வேகாத்தலை

ஆகாசவெளி போகாப்புனர் ஆவியான வன்னி ஆக மூன்றும் கூடியது நாத மென்றும் பசந்தமண்ணும் தண்ணீருமான இரண்டும் விந்துவென்றும் விளங்கும்.

எழுத்து-3
பதி, பசு, பாசம்.
அறிவு-வாசி, சோதி.
ஸ்தூலம்-சரீரம்.
சூக்ஷுமம் - ஆவி.
காரணம்-பரம்.
பதி-பரம்.
பசு-வாசி
பாசம் சயிறு.
சத்தி-தீ.
சிவம்-வாசி.
பூரணம்-சலம்.
அடி-சந்திரன்.
நடு-சுழி.
முடி-சூரியன்.
ரேசகம-சூரியன்.
பூரகம்-சந்திரன்.
கும்பகம்-சுழுமுனை
காமட்பால்-ரவி
கானற்பால்-மதி.
சோமப்பால்-அக்கினி
சீவாத்மா-மூலத்தீ
பரமாத்மா-வெளி
பேசுமெழுத்து-மனம்.
பேசா எழுத்து-வாசி.
அந்தி-சூரியன்.
சந்தி-சந்திரன்.
உச்சி-சுழுமுனை,
விட்டவிடம்- ஆகாய வெளி.

தொட்டவிடம்-வாசி.
மூல அனல்-வாசி.
வாசி-பிராணன்.
பிராணம்-தீபம்,
தீபம்-யோகம்.

மதம்-3
சாதி மதம்
பொருள் மதம்
கல்வி மதம்
குலம்-சக்குலம்
சட்டை உரிப்பன 96
தத்துவம் 96
புளியால்-திரை.
உப்பால்-நுரை

துவாரு 10:
சிவத்துவரு
விகாரத் துவாரு
அங்கத் துவாரு
விசேட சாதி துவாரு
ஆசிரமத் துவாரு
நாமத் துவாரு
சம்ஸ்காரத் துவாரு
வேஷத் துவாரு
கிரிகையாதி துவாரு

மணி 3:
ரவி-சொரூபமணி
மதி-கமலினி
சுடர்-அட்டமாசித்தினி

பூமி-சக்தி.
ஆகாயம்-சிவம்.
சத்தி-உடல்.
சிவம்-உயிர்.
தீபம்- அறிவு.
வாசி-மூல அனல்.
பிராணம்-தீபம்.
நர்தி- நேத்திரம்,
மனோன்மணி-மனம்
புருவமூலை-சொர்க்க வீடு.
பரகதி- துவாதசாந்தம்
அகாரம்-சத்தம்;
அதுவே ஆத்மா;
அந்த யகாரத்தைத் தியானிக்கஅகத்தீச ராஞர்
ரவி மதி சுடர் மூன்றும் ஒன்ருனல் நவநீத கிருஷ்ணனென புகலும்,
சந்திரனை நோக்க வெட்ட வெளிபோலக் காணும். அது சிவபதமாகும்.
ரவியைப் பார்க்க இருதயத்தில் ரவிபிரகாசம் தோன்றும். அது சத்தி பாதிபமாகும்.

ஸ்தூல தேகத்தைப் போஷிக்க ஆகாரம் கொடுப்பது போல சூக்ஷ்ம தேகமாகிய ஆவியாகிய வன்னிக்கு ஆகாரம் சந்திர கிரணங்களின் அமுதத்தைக் கொடாததால் மூல அனலுக்கு ஆவி குறைந்து ஆயுள் க்ஷீணப்படுகின்றது.

'குலம் என்பதும் 'சாதி என்பதும் முடிவாகப் பார்க்கில், மானிடப் பிறவியில் ஆண் பெண்ணாக விளங்குவதில், கொலை, களவு, கள், காமம், பொய்யாகிய ஐந்து பாதகத் தொழிலை நிக்கிரகித்துச் சத்துவ குணத்தோடு பரமமெனும் பொருள் யாதோ காரணம் விவரமறிந்ததுதானே சூசனையென ஆத்தும விசாரணை செய்து முடிவை நாடி நிற்பவரே மேலும் குலமெனப்படுவர். ... கைக்கொண்டு நன்று தீதெனத் தெரிந்து நடவாமல், புலால் மதுபானங்களையுண்டு, ஊன் உறக்க மைதுனமே பெரும்

போகமமென வாட்நாட்களை மிருகாதிகளின் பாவமாயிருந்து கழிப்பவரே நீழ்க்குலமெனப்படுவார். மனத்தை ஒருமை செய்யாமல், காவிகாம்பிர தண்டு கமண்டல விபூதி பூசினும் துவாதச நாமந் தேகத்தில் சார்த்தினும், சதா ஆலயம் புகினும். ஐந்து கால சபதப சந்தியா வந்தனம் புரியினும், யாதொரு பயனுமிராது; தனக்குத்தானே வஞ்சகக் கள்வனுவான்.

"மணி கடல் யானை வார்குழல் மேகம்
மணிவண்டு துப்பி வளைபேரி கையாழ்
தணிந்தெழு நாதங்கள் தாமவை பத்தும்
பணிந்தவர்க் கல்லது பார்க்கவொண்ணாதே."

மானிட சரீரத்தில் தசவித நாதங்களும் பகிர்முக நோக்கில்லாமல் அந்தர் முக நோக்குடையவர்க்கு விளங்கும் சத்தம் ஓசை எனப்படும்; அதுவே நாதமாகும். நாதம் ஆகாயத்திலுற்பவம். சத்தம் பிறந்த இடத்தில் சகல கலையுமுதிக்கும், நாத விந்து கலை எனப் புகல்வது. நாதமானது பெண்பாலிடமெனறும். விந்தையென்பது புருடனிடமிருப்பதென்றும் கூறுவது. சமசமாயிருந்தாலும் ஆணிடத்திலும் பெண்ணிடத்திலும் நாத விந்திருப்பது உண்மையாயிருக்கும். இதை அனுபவத்தால் நிச்சயிக்கக் கூடும். குளவியானது கீடமாகிய புழுவை எடுத்துக் கொண்டு போய் மண் கூட்டிலடைத்துச் சிறுவழி விட்டு, அவ்விடம் குளவியானது தனது வால் முள்ளினுல் பல தரமும் புழுவைக் குத்தி ரீங்காரமான பிரணவ நாதத்தை ஒலிக்க, குளவி குத்திய துன்பத்தைச் சகயாத மகா துன்பத்துடன் நாத ஒலியைக் கேட்டிருந்த புழுவானது, அந்த வடிவம் நீங்கிக் குளவி வடிவம் பெற்றது. அது போல, மானிட தேகமுடையவரும் தமக்கு எதிரிட்டிருக்கும் மரண பாதைக்கு மிகப்பயந்து. சதா ஆகாய அமுசமான பிரணவ நாதமின்னதென்று ஆசிரியரிடம் கேட்டு, மானத்தை அதில் இலயப்படுத்திருக்க, சூக்ஷும சரீரம் சித்தியாகும்.

எஞ்செய லாலெய்து மிவ்விதியு மல்லாது
தஞ்செய லாலுண்டோ தந்தைவிதி-எஞ்செயலோ
முன்னு ளமைந்த மொழிதவ ருதந்நாள்
இந்நா ளமைப்பது மில்.

எனவும்.

'தந்தை விதியல்லவோ அண்ணே இந்த விதிகளெல்லாம்?' எனவும்,

'பாதகங்கள் போமென்றீர் பாவ மென்ன
பரமான என் குருவே! அருளிச் செய்வீர்;

சூதகமாம் நாதத்துள் விந்து பூத்த
சுகம்போல இருந்ததடா! அதுவே பாவம்;

பேதையரைப் பெண்டாமை தனமே செய்து
பிறந்தாயே அவள் வயிற்றுட் சென்மித் தேதான்;

மாதாஎன் தாயெனவும் பாவித் தான்
மகவாகப் புறப்பட்டால் ஞான மாமே!

ஆதாரமாகிய ஆகாய அமிசத்தில் ஒரு கோடியே ஒன்பது லட்சத்து அறுபதாயிரங் கணமான 50 நாள், 414 நாழிகை, ஆயிரத்தறுநூறு நொடிக் கணக்காய்ப் புருடனிடம் சுக்கிலத்தில்.

"மேவிய சீவன் வடிவது சொல்லிடில்
கோவின் மயிரொன்று நூறுடன் கூறிட்டு
மேவிய கூறது ஆயிர மாயினால்
ஆவியின் கூறு நூறாயிரத் தொன்றே."1

"அணுவில் அணுவினை ஆதிப் பிரானை
அணுவில் அணுவினை ஆயிரங் கூறிட்டு
அணுவில் அணுவை அணுகவல் லார்கட்கு
அணுவில் அணுவை அணுகலு மாமே"

"அணுவுள் அவனும் அவனுள் அணுவும்
கணுவற நின்ற கலப்ப துணரார்
இணையிலி யீச னவனெங்கு மாகித்
தணிவற நின்றான் சராசரந் தானே."

புருடன் சுக்கிலத்தில் அணுவுக்கணுவாய் முன் கண்ட நாளளவாகக் கீட வடிவாய்க் கர்ப்பமிருந்து மோகங்கொண்டு ஸ்திரீயை நினைத்துப் புணர்ந்து ஸ்திரீ சுரோணிதத்தில் சுக்கிலத்திலிருந்து கீடம் சம்பந்தமாகும் முறையான ஆண் பெண்ணுடலுமவுமுறையால் மோசமிக்கு; கருவங்கே தரிக்கும் பாரு. இரு மனமும் ஒருமையுடனிருக்க வேண்டும். அவ்வகை உத்தமப் புணர்ச்சியில் ஸ்திரீயின் மனமானது புருடன் வடிவமீது நோக்க மாயிருக்க வேண்டும்; வேறு ரூபத்தின் மீது மனம் வைக்கலாகாது ஒன்றான இருவரும் கூடியேயுற்று உள்ளம் கணவன்றன் மேலுறல் நன்றதான கணவன்றன உருவமாம். நாடும் காதல் மேல நநாட்டமுறில நின்ற தாயுருவே வடிவாயுறும், நேசமாதலன் போலுருநதால வழியன்றியே அவள் முன்னவன் பின்னவனுத மைந்தன் கூறுமெனு நீள்மறை. இவ்வண்ணமாக வடிவம் பொருந்தும். புருடன் கலை சூரியனுயிருந்தால், கரு ஆண் வடிவமும் சந்திர கலையாயிருந்தால், பெண் வடிவமும், பிருதிவி, அப்பு தேயு வாயு பூதியமாயிருக்கல் அவையவைகளுக்குரிய கணக்கின்படி ஆயுளுமவதாயும் இருக்கிறது. அப்படியமைந்த கருவானது 280 நாள் அல்லது 30. நாள் பெண் வயிற்றில வளர்ந்து வெளிகண்டது. அவ்வகை செனித்த சிசு, எழுவகைப் பருவமடையும்; அதை ஏழு பிறவி என்றும் புகல்வர் அவை யாவன;புருடன் ஸ்திரீயை நினைந்து மோகங் கொண்டது 1; சம்பந்தமுற்றுச சுரோணிதத்தில சம்பந்தமானவை, 2; கருப்பையில் வளர்ந்தது 3; வெளித் தோன்றிய குழந்தைப் பருவம் 4; வாலிப பருவம், 5; எவ்வகை காயாதிகளாலவுமுறும் பருவம், 6; நரை திரை மூப்புப்பிணி மரணப் பருவம், 7; இந்த ஏழு பருவங்களிலும் வடிவமும் குணமும் நடக்கையும் பேதங்களாகவேயிருக்கும் புருடன ஸ்திரீ இருவருக்கும் மோக வுற்பவ விவரம்.

---



1. திருமந்திரம், 2011

கேளப்பா மனமான வாயுக் கூடிக்
  கெடியான சித்தமா காயம் பொங்கி

வேளப்பா வாங்கார சிகார மிஞ்சி
  மேவுதற்குப் பெண்மேலே மோக மாகும்;

நாளப்பா ஐந்திற்கும் பலமே தென்றால்
  நலம் பெறவே சொல்லுகிறேன் நன்றாய்க் கேளு;

தாளப்பா மனத்தோடே வியானன் கூடித்
  தனியான நாதத்தி லபானன் றானே.

தானென்ற விந்துவினிற் சமானன் கூடும்
  தனியான சித்தத்தில் வியானன் கூடும்;

தானென்ற ஆங்காரங் கொர்ச்சிப் போடு
  கலந்துநிறகும் உதானனப்பா கண்டு கொள்;

வேனென்ற பத்துமொன்றாய் மனமுங் கூடி
  மேவியவன் கலந்துவந்து விழுகும் போது.

மானென்ற மௌனபர வசமே யாவான்
  மருவுகின்ற பெண்ணுக்கப் முறைதான் காணே.

ஒன்றான விந்துவிலே விட்டகுறை வந்து உருத்தரிக்கும். அவ்வுருவே அவனவனுமாவார் என்றும், தனது நல்வினை தீவினையளவாகப் பெண் கர்ப்பத்தல்தானே பிறவி எடுத்து அனுபவிக்க வேண்டுமென்றும் அனுபவிகள் கூறியது மகாவாக்கியம்.

பிராண வாயு பித்தம் அக்கினி சலத்தில்; அபானவாயு வாதம் மலத்தில் சமான வாயு அய்யம் சுழி விந்தில்.

தீயும் காற்றும் மலத்தில் சார, வாத வாயுவும் அக்கினியும் காற்றும் ஆகாயத்தில் சாரப்பித்தமுறும், சகலமும் காற்றும் சுழியில் சார சிலேற்பனமுறும்.

வாசிமூலவிடம் ஐந்து: நாசிமுனை, சகஸ்திரம், பிடரி, நெஞ்சு, மூலம்.

முத்தியின் விவரம்; குதஸ்தானத்தியொன்று, ருத்திர ஸ்தானத்தியொன்று, புருவ மையச் சதாசிவ ஸ்தானத்தியொன்று.

சந்திர சூரிய அக்கினி இடமாவன; மூலத்தில் அக்கினி: மார்பில் சூரியன்; முடியிற் சந்திரன்.

உலவுமிடம்: சூரியகலை நடக்கும்போது சுவாசம் பிடரி வழிச் சென்று வரும்: சந்திரகலை நடக்கும்போது 312 பாகமாகிய மூளையில் சென்று வரும். மந்திரங்கால் மதி முக்காலென்பது, மந்திரம் சூரியன் கால்; மதி சந்திரன் முக்கால்: அங்குஷ்டப் பிரமாணமென்னும் அகத்தீசர் ஓர் அங்குலமுள்ள நேத்திர ஸ்தானமிருந்து ஆயிரத்தெட்டுக் கிரணங்கள் பொருந்திப் பகிர்முக நோக்காக யாவும் பார்த்ததும் தான் சர்வ சாக்ஷியாய் விளங்கும்.

ஸ்தூல பஞ்சீ கரணம்
பிருதிவியில் பிருதிவி-அஸ்தி
பிருதிவியில் அப்பு-மாமிசம்
பிருதிவியில் தேயு-சர்மம்
பிருதிவியில் வாயு-நரம்பு
பிருதிவியில் ஆகாயம்-ரோமம்
அப்பினிலப்பு-மூத்திரம்
அப்பினில் பிருதிவி-உமிழ்நீர்
அப்பினில் தேயு-வியர்வை
அப்பினில் வாயு-உதிரம்
அப்பினில் ஆகாயம்-சுக்கிலம்
தேயுவில் தேயு-பசி.
தேயுவில் பிருதிவி-தாகம்
தேயுவில் அப்பு—நித்திரை
தேயுவில் வாயு-ஆலிசம்
தேயுவிலாகாயம்-சங்கமம்
வாயுவில் வாயு-ஓடல்
வாயுவில் பிருதிவி-நடத்தல்
வாயுவில் அப்பு-இருத்தல்
வாயுவில் தேயு-தத்தல்
வாயுவிலாகாயம்-கிடத்தல்
ஆகாயத்திலாகாயம்-மோகம்
ஆகாயத்தில் பிருதிவி-ஆசை
ஆகாயத்தில் அப்பு-துவேஷம்
ஆகாயத்தில் தேயு-பயம்
ஆகாயத்தில் வாயு-வெட்கம்

சூக்ஷ்மபஞ்சீகரணம்:
ஆகாயமுமாகாயமும்- நேத்திரம், அறிவு
ஆகாயமும் வாயுவும்-கண்டம்
ஆகாயமும் தேயுவும்-மார்பு
ஆகாயமும் அப்பும்-நாசி; சித்தம்
ஆகாயமும் பிருதிவியும்-இருதயம்: அகங்காரம்
வாயுவும் பிருதிவியும் கூடில்-இருதயம்: பிராணன்
வாயுவும் அப்பும்-குதம்; அபானம்
வாயுவும் தேயுவும்-கண்டம்; உதானன்
வாயுவும் வாயுவும்-சர்வ சரீரி, வியானன்
வாயுவும் ஆகாயமும்-நாபி; சமானன்
தேயுவும் ஆகாயமும்-செவி
தேயுவும் வாயுவும்-சரீரம்
தேயுவும் தேயுவும்-நேத்திரம்
தேயுவும் அப்பும்-சிங்குவை
தேயுவும் பிருதிவியும்-நாசி
அப்பும் ஆகாயமும்-சத்தம்
அப்பும் வாயுவும்-பரிசம்
அப்பும் தேயுவும்-பார்வை
அப்பும் அப்பும்-இரசம்
அப்பும் பிருதிவியும்-கந்தம்
பிருதிவியும் ஆகாயமும்-வாக்கு
பிருதிவியும் வாயுவும்-பாதம்
பிருதிவியும் தேயுவும்-பாணி
பிருதிவியும் பிருதிவியும்-குதம்
பிருதிவியும் அப்பும்-குய்யம்

ஐவகை உற்பவம்: பிருதிவியினிடம் சராயுசமான வித்துகளாம் புல் பூடு கொடி செடி மர முதலியவைகள்.

அப்புப் பூதம்: உற்பிஜம். பைனிடமாக மானிடம் பசு. ஆடு மிருகாதிகள்.

தேயு பூதம். சுவேதசம். வியர்வை வெப்பத்தால் ஈ, பேன், கீடம், கம்பளிப் பூச்சி, புழு.



வாயு பூதம், அண்டசம் முட்டையில் கோழி. வாத்து, பல்லி, ஓந்தி சர்ப்பம், கோட்டான், கருடன்.

மந்திர பீசம்: ஆகாயம், இது மகான்களால் சிருஷ்டிக்கப்படும்.

இதில் ஓரறிவுடையவை புல் மரம் செடி; இவை பரிசமறியும்.

ஈரறிவு: சிப்பி, சங்கு, இவை பரிச ரசமறியும்.

மூவறிவு: கறையான்' எறும்பு, இவை பரிச ரச கந்தம் அறியும்.

நாலறிவு: தும்பி, வண்டு, இவை பரிச ரச கந்த ரூபம் அறியும்,

ஐயறிவு: பறவை, மிருகங்கள், இவை சத்த பரிச ரூபரச கந்தமறியும்.

ஆறறிவுடைய மானிடர்கள்; ஞானமாகிய அறிவும் பொருந்தியவர்கள்.

ஆணவம் கன்மம் மாயை ஆகிய மும்மலமும் நீங்கில், ஆத்துமா அருளோடு கூடிய ஞானமாகும்.

ஒரு பாசையுமின்றித் தானுயிருப்பது பிரமம்: பிரமம் மாயையாகிய அவித்தையிற்பிரதிபலித்த போது சீவன்: சீவன் அவித்தையிற் கூடியபோது சுழுத்தி; சுழுத்தி அந்தக் கரணத்தில் கூடில் சொப்பனம்: சொப்பனம் ஐந்து இந்திரியத்தில் கூடில், சாக்கிரம்; சாக்கிரம் 96 தத்துவங்களுடன் கூடில், விவகாரம்.

ஆச்சப்பா தேகமென்ற ஆதாரத்தில்
அவத்தையென்ற அஞ்சையும்மே சொல்லக் கேளு:

மூச்சப்பாலலாடத்திற் சாக்கிரந்தா னென்று:
மூணையான கண்டத்திற் சொப்பனந்தா னென்று:

நீச்சப்பா மார்பின் கீழ்ச் சுழுத்தி யொன்று:
நிசமான வுந்தியிலே துரிய மொன்று:

வீச்சப்பா விந்தின் மேல் துரியா தீதம்
விளங்கிநின்ற அவத்தையஞ்சும் கண்டு கொள்ளே.

விரசுகொண்டே ஆடுகிற சக்கரத்தை
வினயம்கொண்டு பாராமல் வீணுய்ப் போன

பிரசைகளைக் கண்டதனு லேதுண் டப்பா?
பிலமான மூலமதில் மனத்தை வைத்தே

உரவான வாசியினுல் மைந்தா மைந்தா!
.ணடாடும் சக்கரத்தை யுன்னி நாட்டத்

திரமாகச் சீவர் களைக் கதிகொண் டாடும்
தீர்க்கமுடன் கேசரியிலிருந்து பாரே.

கனையான சீவகலை தீபம் போலே
கண்டதடா எண்ணெய்திரி மரண்ட போது

கலையான சிவகலை யெங்கே போச்சு?
கனலொளியின் பூரணந்தா னெங்கே போச்சு?

கலையான கதலிகுலை சாயும் போது
காரணமாய் முன்போலே பின்புண் டாமே.

கலையான சிவகலை பக்கத் தேதான்
கண்வெடித்த கதையாச்சுச் சிவன் காணே.

தானாகித் தான்முடிந்த சூட்சந் தன்னைத்
தரணிதனி லறியாமல் தான்தா னென்றே

ஊனாகி நின்றதிரு உடலைக் காணான்
உடலில் நின்ற அட்சரத்தி னுறுதி காணான்

ஆனாகி நின்ற திருவாசி காணான்
அமர்ந்துநின்ற வாசிதிரு நயனங் காணார்

வானாகி நின்றவடி முடியுங் காணான்
மதிகெட்டு விதியழிந்து மாளு வானே.

மாளுவது மிரண்டுவிதம் மைந்தா கேளாய்:
மகத்தான சிவகலை மாறும் போது

ஆளுவது பூரணமாய் அறிவோ டய்யா!
அடங்குவது பராபரத்தே அமைப்பே யாகும்;

சூளுவது நோயுடனே பாசம் சூழ்ந்தால்
சுளுவான மதிமயங்கி அலைவான் பாராய்;

காலுநிலை யறியாமல் அலைந்து கெட்டுக்
கானலிலும் நீரினிலும் கரைந்து போமே.

ஆகையால், அந்தக்கரண வியாபாரங்களை நீக்கி, அந்தர்முக நோக்காய்ப் பேச்சுக்கும் மூச்சுக்கும் மத்தி, கண்ணுக்கும் காதிற்கும் மத்தி, கங்குல் பகலாகுமிடத்திற்கு மத்தி, இரவி மதிக்கு மத்தி அறிவிற்கும் மனத்திற்கும் நடுநிலையில் நின்றவர்க்கே மெய்ப்போதமுதயமாகும்,

நினைவை நீக்கி நோக்கியிடின் நிமல சொரூபந் தோன்றிவிடும்:
நினைவை மேவி நோக்கியிடி னிலையில் உலகந் தோன்றிவிடும்:
நினைவில் உலகம் அறிந்ததுவும் நீங்கிச் சொரூபம் அறிந்ததுவும்
நினைவி னேக்கிற் றுனில்லை; நிகழு மாயா மோகமதில்
தன்னை மறைத்த பந்தமதைத் தள்ளி நீங்கிற் றுன்விளங்கும்:
தன்னை மறந்த தேபந்தம்; தன்னை அறிந்த தேமுத்தி;
தன்னை விடவோர் பொருளில்லை; தானே பிரம மாயையும்பின்

தன்னை விடவே றுய்விளங்கா; தானே யாகி விளங்கிவிடும்,

க்ஷண சிருஷ்டிப் பிரளயம் தின சிருஷ்டிப் பிரளயமாகின்ற நினைத்தலும் மறத்தலும் நித்திரையிலே தன்னையே மறத்தலாகின்றபடி; மரண காலம் எதிரிட்டிருப்பது இன்ன நாள் என்று தெரிந்து, அதற்குள் அடைய வேண்டிடும் பயனை அடையாத நமது இகபோக சுகமும் நடக்கையும் மன விகாரமும் யாது பயன் தரும்?

ஐம்புலனை வென்றவன் வீரமே வீரம், கடவுள் ஒன்றெனத் தெளிந்த பேரறிவே அறிவு. பிறர் ஏவாமல் உண்பதே ஊண். தான் சாகாமல் கற்பதே கல்வி. ஆதலால், ஆதி சிருஷ்டி கால முதல் யோனியாசை கொண்டு யோனி மூலமாகவே இச்சை கொண்டபடி சென்மித்து வருகிறோம். அவ்வகை யோனி வழியாக அளவிறந்த சென்மங்கள் எடுத்தும், இப்போதாகிலும், 'பிறந்து விட்டேன்; இனிப் பிறவாதிருக்க வரந் தரவேண்டும்,' எனப் பட்டினத்தச் சுவாமிகள் கேட்டபடி. இனிப் பிறவி பெருவண்ணம் வேண்டுமல்லவா? தேகம் நரை திரை மூப்புச் சாக்காடு பெற்று நசிப்பது சித்தம். தேகத்திலிருந்த சத்து எக்காலமும் நசிப்பதில்லை என்றனைவரும் புகல்வது பழமொழியாயிருந்தாலும், அது அனுபவத்தில் சித்தாந்தமாக வேண்டும்.

இப்புவி அத்திப்பழம் போலும்பேரண்டம்; அதற்குள் அமைந்த வித்துகள் போல்வன சிற்றண்டங்கள், பேரண்டம் ஆயிரத்தெட்டுக் கூடியது ஒரு புவனம்; இவ்வகை கொண்ட புவனம் 224 கூடியது ஒரு சாகரம்; சாகரம் ஏழு கூடியத ஒரு பதம்; இப்படி 844 பதம் கூடியதைப் பிரபஞ்சமென மேலோர் கூறினர்.

'தரணி சலனம்கனல் கால் தக்க வாவம்
அரணிய பானு அருந்திங்க ளங்கி
முரணிய தாரகை முன்னிய ஒன்பான்
பிரணவ மாகும் பெருநெறி தானே.'

சிவம்சத்தி நாத பிந்து சதாசிவம் திகழு மீசன்
உவந்தருள் ருத்தி ரன்மா லயனிவை யொன்றி னொன்றும்;
பவந்தரும் அருவம் நாலின் உருவம்நல் லுபாய மொன்றாய்
நவந்தரு பேத மகா நாதனே நடிப்ப னென்பர்.

பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம், உகாரநாத ரவி, மகார விந்து சந்திரன். ஓங்கார மகமேரு சுழுமுனை ஆக அஷ்ட மூர்த்தியாயும் விளங்கு பவர் கடவுளென வேதம் கூறும்.

ஆச்சுதே அறிவொன்றின் விசாரணையே
அனைத்தையுமே பார்த்திருந்தே அகண்டந் தன்னில்

கோச்சுதே குருவாய்த்தத் துவங்களாகிக்
கொடியதீ வினையுநல் வினையு மாகிப்

போச்சுதே பெண்ணுணைப் ப்ரபஞ்ச மாகிப்
புகழரிய நிர்குணநிர் மலமு மாகித்

தீச்சுதே சிவமாகிச் சிவ னுகிச்
செழுஞ்சுடரின் கதிரொளியாய்ச் சிறந்த வாறே.

'எட்டுத் திசையும் பதினாறு கோணமு மெங்குமொன்றாய்
முட்டித் ததும்பி முளைத்தோங்கும் சோதியை மூடரெல்லாம்
கட்டிச் சுருட்டித்தம் கக்கத்தில் வைப்பர் கருத்தில்வையார்
பட்டப் பகலை யிரவென்று சொல்லுமப் பாதகரே.

மேலோர் முன் குறித்த வாக்கியங்கள் உண்மையென விளங்குவனவேயாம். ஐயமின்றித் தெய்வவுருத் தியானித்தாலதுவாம்; அருவுருவைத் தியானித்தால் அட்டமூர்த்தியுமாம்; பொய்யா இரண்டையும் தவிர்த்துத் தானுயிருந்திடில், பூரணமாம்; சீவனெதிர்ப் பொருந்துமதுவாயின், மையலுற மனம் விடயத்தாசையுற்றே அதுவாய் மரண செனனமும் விளைந்தவாறே தென்றே உணர்ந்து மெய்யறிவே தானாகப் பாவித்தால் அதுவாய் விளங்குவர் யாவரும்; செனியா வீட்டையுமெய்துவாரே.

''ஐயுணர் வெய்தியக் கண்ணும் பயனின்றே
மெய்யுணர் வில்லா தவர்க்கு''

வாரசரம்; ஞாயிறு, செவ்வாய், சனி வலநாசியில் சூரிய கலையாகவும்; வெள்ளி, திங்கள், புதன் இட நாசியில் சந்திர கலையாகவும்; பூர்வபக்ஷ குருவாரம் சந்திர கலையும் அமர பக்ஷ குருவாரம் சூரிய கலையுமாகவும் காலை 4 மணிக்கு நடக்க வேண்டும். அவ்விதம் நடந்தால், தன் காரியங்களைத் தம் சித்தியாகும். அவ்வகை நடவாமல், பேதமாய்ச் சூரியன் நடக்க வேண்டிய தினம் சந்திரனும் சந்திரன் நடக்க வேண்டிய தினம் சூரியனுமாய் நடந்தால், அடியிற் காணும் பலனாக நடக்கும்;

ஞாயிறு சந்திரன், சளி இருமல்; திங்கள் சூரியன், சலதோஷம், சுற்றத்தார்க்குக் கேடு; செவ்வாய் சந்திரன். சுரம் சண்டை சாவு; புதன் சூரியன் நீரேற்றம், தலைக்குத்தல், தீங்கு; வளர்பிறை வியாழன் சந்திரன், தேக நோய்: வெள்ளி சூரியன் கண் காது நோய், வெளியூர்ப் பிரயாணம்; சனி சந்திரன், சீதள சன்னியாகும்.

சந்திர சூரியர் இரு கலையினும் ஐம்பூதம் நடப்பதுண்டு. பிருதிவி நிறம் பொன்மை, தித்திப்ப; அப்பு வெண்மை, துவர்ப்பு; தேயு செம்மை, உவர்ப்பு; வாயு கருமை, புளிப்பு; ஆகாயப் படிகப். கசப்ப; பூர்வ பக்ஷத்தில் குரு பிருதிவி; சுக்கிரன் அப்பு; குரு தேயு; புதன் வாயு; சனி ஆகாய பூதியமாகக் கொள்க.

ஞாயிறு ஆர்தையாகிய அப்பும், திங்கள் செவ்வாய் வியாழன் காகமாகிய தேயுவும், புதன் வல்லூறாகிய பிருதிவியும், வெள்ளி கோழியாகிய வாயுவும், சனி மயிலாகிய ஆகாயமும் பூதியமாக நடக்க மிக உத்தமம்.

பூதியங்கள் பிருதிவி அப்பு நடந்தால் சத்வகுணம்; தேயு ராசதமாகிய தேயுவும் புதன் வல்லூறாகிய பிருதிவியும். வெள்ளி கோழியாகிய வாயுவும், சனி மயிலாகிய ஆகாயமும் பூதியமாக நடக்க மிக உத்தமம்.



பூதியங்கள் பிருதிவி அப்பு நடந்தால் சத்வகுணம்; தேயு ராசதமாகிய இச் கோபமாங்காரம் பெண்ணிச்சை: வாயு அலைவுறும்; ஆகாயம் பர இச்

சையை நாடும், காலை படுக்கையிலிருந்து எழுந்திருக்கும்போதே சுவாசத்தை உள்ளிழுத்துக் கொண்டு எழுந்திருக்க வேண்டும். ஆகவேண்டிய காரியங்களுக்குப் போகும்போது இரவியில் பிருதிவி அப்பு நடக்கச் சென்றால், தாமதத்தில் பலன் சித்திக்கும்; படுக்கும்போது இடக் கையைக் கீழ் வைத்து வலக் கையை மேலாக வைத்துக் கால் நீட்டிப் படுக்க வேண்டும். அவ்வகையில் படுக்கும்போது மனத்தைப் பலவாறு சிந்தனையில் செல்லவிடாமல் சுவாச மீது செலுத்தியிருக்க வேண்டும். அவ்வகை அப்பியாசம் செய்து வருகையில் சொப்பனாதி அவஸ்தைகள் நீங்கி, அந்தர்முக விவகாரங்கள் விளங்கும். இவ்வகை நடப்பதுமன்றி, வயிற்றில் ஆகாரமில்லாமலிருக்கும்போது பசி அதிகமாயிருப்பதென்று சொல்வது: அப்போது மேற் கூறியபடி படுத்திருந்து பார்க்கப் பசி எழும்பிய பரமிடம் நன்றாகத் தோன்றும். அமாவாசைத் தினக் காலை இரவியை இராகுவும், பருவத்தின் சந்திரனைக் கேதுவும் மறைப்பது போல, நமது இரவி மதியை இராகு கேது சாயை மறைப்பதால், மனத்தை இருளாகிய மாயை மூடியது. சந்திரன் மனத்திடமும் சூரியன் நேத்திரத்திலுமிருப்பதால் இரவியிடம் மதியை செலுத்த மதிக்குக் கிரணங்கள் குறைவுபடாமல், அறிவு உதயமாகும்.

ஆகாயமும் வாயுவம் கலந்திருக்கின்றன. மண்ணும் சலமும் கலந்திருக்கின்றன. அக்கினி மத்தியமாக நின்றது; மாமிச உதிரசலம். ஒன்றாயிருக்கிறது; சரமாகிய வாயு ஆகாய வெளியில் சம்பந்தமாயிருக்கிறது. அக்கினி பொது நிலையாய் நின்றது.

தானென்ற சித்தர் முதல் முனிவர் ரிடிகள்
தன்மயமே தானாகத் தவமே செய்து

ஊனென்ற உடல் வெறுத்துப் பசியடக்கி
உதித்தகலை வாசியென்ற தாரகத்தால்

வானென்ற ஆகாச வெளியில் சென்று
மகத்தான சோதியுடன் சோதியானார்;

ஏனென்று வந்ததவும் சோதி சோதி
எங்கும்சிவ மயமான சோதிதானே.

சோதியென்ற சோதியிலே சோதியானார்;
சூழ்ந்ததடா அண்டமதில் நன்றாய்ப் பாரு;

ஓதியதோர் மந்த்ரகலை சோதி யெல்லாம்
ஒளிவிளக்காய் நின்றதடா அங்கே பாரு;

நீதியுடன் பார்க்கையிலே அண்டந் தன்னில்
நிறைந்துநின்ற நட்சத்ர சோதி யெல்லாம்

ஆதியென்ற நாதாக்கள் காந்தி காந்தி
அண்டமதில் சூழ்ந்ததடா அங்கே பாரே.

[illegible] சத்தி, சந்திரனாம். இதில் உயிர்ப்பாகிய உயிர் சூரியர் சிவமாகும் பிறவிகுரு நாசியிடமாக வாசனையறிதலும், அப்புச் சுக்கில

நாவிடம் சுவையறிதலும், தேயு அங்காரகர் நேத்திரமிடம் ரூபமறிதலும், வாயு புதன் சரீரத்தில் பரிசமறிதலும். ஆகாயம் சனி செவியினிடம் ஆகாய சத்தமறிதலுமாகும். இராகு கேது சாயையென்றும், அவை குதம் குய்யம் இத்தானனமிட மிருப்பனவென்றும் வேதம் புகலும்.

கடினமென்று தள்ளாதே வாசி யோகம்
கண்மூக்கு மத்தியிலே கருதிப் பாரு;

துடிமிகுந்த சுழுமுனையி னூடு தொக்குச்
சூரியனும் சந்திரனும் ஒன்றாய்ப் போகும்;

குடியிருப்புச் சாக்கிரத்தின் கோட்டை யாச்சு;
கோடானு கோடியுகம் வாழ லாச்சு;

நொடிநிமைக்கும் நேரமல்லோ பிரமன் வாழ்க்கை?
நுண்ணிமையாய்ப் பார்த்தறிந்து நுடங்கு வாயே.

சாக்கிர பகிர்முக விவகாரங்களிலிருந்து நித்திரை சொப்பனத்தில் அநேக விஷயங்களைக் கண்டதாயும், செய்ததாயும். சென்றதாயும், நடத்தியதாயும் அனேகமாய்க் காண்கின்றோம். நித்திரை நீங்கிய பிறகு யாதொரு பயனையும் அடையாதவர்களாகின்றோம். அவைகளன்றி, ஒரு பெண்ணைக் கூடிச் சம்போகம் செய்ததாகக் காண்கிறோம். அப்படிக் கண்டு நித்திரை நீங்கிய பிறகு ஸ்கலிதமான விந்தைப் பிரத்தியக்ஷமாகக் காண்கின்றோம்.

இதைப் புத்திமான்கள் அறிவு முன்னிலையில் யூகமாய் யோசிக்க, விந்தின் செயலும் பெருமையும் அறிந்து, அதில் தேறும் அனுபவ சித்தாந்த நிலையில் சதா ஆனந்த பரவசராய் விளங்குவர்: இது வேத சம்மதமாகவிருக்கும்.

மாயாள் வசத்தே சென்றிவர் வேண்டிடில்
ஓயா இருபக்கத் துள்வளர் பக்கத்துள்
ஏயாவெண் ணுளின்ப மேற்பனி மூன்றிரண்
டாயா அபரத்து ளாதிநாள் ஆருமே.

'ஆறைந்து பன்னொன்று மன்றிச் சகமார்க்கம்
வேறன்பு வேண்டுவோர் பூவரிற் பின்னந்தோ
டேறும் இருபற் றொருநா ளிடைத்தோங்கும்
ஆறின் மிகுத்தோங்கும் அக்காலம் செய்யவே'

'செய்யும் அளவில் திருநான் முகூர்த்தமே
எய்யுங் கலிகாலம் இந்து பருதிகால்
நையு மிடத்தோடி னன்காம நூல்நெறி
செய்க வலமிடந் தீர்ந்து விடுக்கவே'

'கலக்குநாள் முன்னாள் தன்னிடைக் காதல்
நலத்தக வேண்டிலந் நாரி யுதரக்
கலத்தின் மலத்தைத்தன் [illegible] த்தைத்
விலக்கு வன்செய்து மேலணை வீரே'

'விழுந்தது லிங்கம்; விரிந்தது யோனி;
ஒழிந்த முதலைந்து மீரைந்தொ டேறிப்
பொழிந்த புனல்பூதம் போற்றுங் கரணம்
ஒழிந்த நுதலுச்சி யுள்ளே யொளித்தே'

'மாத ரிடத்தே செலுத்தினு மவ்விந்து
காதலி னல்விடார் யோகங் கலந்தவர்;
மாத ருயிராசை கைகொண்டே வாடுவர்
காதலர் போன்றங்ஙன் காதலாஞ் சாற்றிலே'

மூலாக்கினி பசித் தீபாக்கினி, கோபாக்கினி, ஸ்திரீ தாபாக்கினி, யோக ஞானக்கினி என்னும் இவற்றுள் ஆதியுமந்தமும் தவிர மற்ற மூன்று அக்கினியும் உற்பவமாய்த் தோன்றலை யாவரும் சரீரத்தில் கண்டிருக்கிறோம்.

'உரமடி மேதினி யுந்தியி லப்பாம்;
விரவிய தனமூலை மேவிய கீழங்கி
கருமூலை மீமிசை கைக்கீழிற் காலாம்;
விரவிய கந்தர மேல்வெளி யாமே.'

'சத்தமுஞ் சத்த மனமும் மலக்கருத்
தொத்தறி கின்ற விடமும் அறிகிலர்
மெய்த்தறி கின்ற விடமறி வாளர்க்கு
அத்த னிருப்பிடம் அவ்விடந் தானே'

'அங்கி மதிகூட வாகும் கதிரொளி;
அங்கி கதிர்கூட வாகும் மதியொளி;
அங்கி சதிகதிர் கூடவத் தாரகை
தங்கி யதுவே சகலமு மாமே'

'பத்து மிரண்டும் பகலோ னுயர்கலை
பத்தினொடாறு முயர்கலை பான்மதி
ஒத்தநல் லங்கிய தெட்டெட் டுயர்கலை
அத்திற னின்றமை யாய்ந்துகொள் வீரே.

மேலாம் பதத்தையளிக்கும் பூரண அக்கினியை நாம் கேவலவிடயங்களிற் செலவிட்டு வாழ்நாட்களைக் கேவலப்படுத்துகின்றோம். அவ்வகை செய்யினும் அதனால் அனேக வியாதி அனுபவிக்க நேரிடுகின்றது.

'உண்ணும்போ துயிரெழுத்தா லுயிரை வாங்கி உறங்குகின்ற போதெல்லா மதுபோலாகும்; பெண்ணின்பா லிந்திரியம் விடும்போ தப்பா! பேணியுயிர் மேல்வாங்கு' என்று மேலோர் செப்பியதை நான் ஏன் அனுபவத்தில் கொண்டுவரக் கூடாது?

விந்து அதிகமாய்ச் செலவழிவதால் பிணி மூப்புச் சாக்காடு எளிதிலடையக்கூடும். ஆகாரத்திற் பிரிந்த அன்ன ரசமானது. உதிரமாய்,

நாள் சுக்கிலமாகின்றதை விரயம் செய்யாமல். மாதத்தில் இரண்டு தரம் ஸ்திரீ பூர்வ காலத்தில் பயன்படுத்தும் தினம் சையோகிப்பதில் அவ்விதம் தரிக்கும் சருச்சிசுவானது. ஆயுள் விர்த்தியும் தேக திடமும் பெற்றுப் பிணியில்லாமலும் இருக்கும்.

உந்தியிலிருக்கும் உதான வாயுவால் காமம் கண்ட ஸ்தானக்குழியிடமிருந்து சமான வாயுவானது கமலப் பிறை சொலிக்கும் ஸ்தானமடையுமாகில், கபால சூலைபிடி, அசதி, வயிற்றிரைச்சல், பேதி, நாவுலரல் முதலிய வியாதி புருடருக்கும் ஸ்திரீக்கு வயிற்றுநோய், தேக வெளுப்பு, குதக வாய்வு முதலியவும் நேரும்.

ஓமென்ற மூலகாண பதியே காப்பு
　　உண்மையுடன் நடுமனைவி லுகந்து நின்றே

ஆமென்ற அமுதகலை புள்கொண்டேதான்
　　அடங்கவந்த மனோமணியின் கிருபை யாலே

ஊமென்ற வுண்மைதனை மவுன மாக
　　உருட்பெற்றுக் கருப்பெற்றே யுறுதி பெற்றுத்

தாமென்ற மதிதனையே ரவியில் தாக்கச்
　　சச்சிதா னந்தமென்ற ஆதி காப்பாம்.

புருவமென்ற சுழுமுனையி லேல மைந்தா கேளு
　　போதமென்ற அருள்ஞானச் செந்தீப் பற்றித்

திருவிருந்த மாளிகையில் தீபங் காணும்
　　செங்கமலக் கண்ணாலே நன்றாய்ப் பாரு;

குருவிருந்த இருதயமாம் முக்கோ ணத்தில்
　　குவிந்துமனக் கண்ணாலே தன்னைப் பார்த்தால்

கருவிருந்த பதியதுதான் மைந்தா மைந்தா!
　　கண் காணத் தோன்றுமடா கருவைப் பாரே

விண்ணைப்பார் தன்னைப்பார் மண்ணைப் பாரு
　　மேன்மைபெறு குருவருளை மேவிப் பாரு;

பெண்ணைப்பார்த் தலையாதே; பெண்தான் தேகம்
　　பிரியமுடன் தேகமதைப் பேணிப் பார்த்தால்

கண்ணப்பா துலங்குமடா! அந்தக் கண்ணால்
　　காணலாஞ் சித்தவெகு கண்ணில் காணும்;

மண்ணப்பா என்றசடந் தன்னைப் பேணு
　　மாந்தருக்கு மென்னவரும் மண்தா னாமே.

புரண்டுமனம் நிலையாத பித்த ருண்டு;
　　புராணநிலை யறியாத மூட ருண்டு;

[illegible] ருண்டு;

　　மோகமென்ற மாய்கையிலே திரிவா ருண்டு;

திரண்டகோள் முனிநுனியை அறியா ருண்டு;
 செகத்திலிப் படியதிகஞ் செப்பப் போமோ?

அருண்டகண் ணு மிருண்டகண் ணும் அறியாப் பாவி
 அடக்கமென்ற காவியத்தை அறிந்து பாரே.

தன்னிலையைத் தானறியா மூடர் காணும்
 சாத்திரத்தின் பயனறியாய்ச் சண்டி மாடு;

கண்ணறிந்து விண்ணொளியைக் கருதிப் பார்க்கக்
 கருத்துடனே வாசிநிலைகாலைக் காணு;

எண்ணிறைந்த அட்சரத்தி னியல்பு காணார்;
 எட்டிரண்டு மறியாமல் ஏக மென்பார்:

விண்ணிறைந்த ஏகபரா பரந்தான் மைந்தா!
 மெய்ஞ்ஞான மானதிரு விளக்குத் தானே.

மகான்கள் வாக்கிய அனுபவத்தைப் பெருமல் வாய் மதமாய்ப் பேசின வர்கள் பெருங்குடலும் சிறு குடலும் புரண்டு மகா துன்பமடைவார்கள். மகான்களைத் தரிசிக்க வேண்டிய அந்தர் முகமாய் அடியிற்கண்டபடி தியா னிக்க. அவர்கள் பிரத்தியக்ஷமாய்த் திருவருள் பாலிப்பார்கள்;

செய்ததமிழ் தனையறிந்து பதினெண் பேரைச்
 செம்மையுடன் காண்பதற்கு மூலங் கேளு;

சைதன்ய மானதொரு தன்னைப் போற்றிச்
 சதாகாலம் ஓம்ஙிங்ரங் அங்சிங் கென்று

மெய்தவருகப் பூரணமா யுருவே செய்தால்
 வேதாந்தச் சித்தரைத்தான் வசமாய்க் காண்பாய்:

உய்தமுடன் அவர்களைத்தான் வசமாய்க் கண்டால்
 உத்தமனே! சகலசித்துக் குதவி யாமே.

புரியட்டமாவன : சடம், பிரமன் கூறு; உதிரம், மாலின் கூறு; இதில் சூட்சுமமாவன; சிகரம் தீ, சிவன்; வகரம் காற்று மகேசன்; யகரம் ஆகாயம் சதாசிவம்; விந்துநாகம், சத்தி சிவன், விராட்டு, பரை ஆக 8. இதன் மீது வெளி பாழ், ஒளி பாழ், வெளியொளிபாழ் இவைகள் கடந்து, உள் மனையாளிடமென்றும் அவ்விடமிருப்பவர் சிவயோகிகளென்றும் மறை கூறும், இவ்வனுபவம் பெறுவத, தக்க ஆசான் கிடைத்ததும், அவரது சாயைபோல அவருடனிருந்து, சதா அவரால் பெற்ற திருவருள் நோக்கத் தில் நெடுங்காலமிருப்பவர்களுக்கு அமையும் பதமாகும் ஆகிலும், அனைத் திற்கும் மனமே முன்னிலைக் காரணமாயிருக்கிறது மனம் அலைவுறுதிருக்க வேண்டும், மனமானது எப்போதும் ஒன்றை நாடியே நிற்கும். அசைவற்று நிற்கும் சுபாவம் அதற்கில்லை. நன்மார்க்கத்தி லேனும் துன்மார்க்கத்திலே னும் செல்லுவது மனமாயிருக்கிறது. மனத்தசைவை நிறுத்துவதே நல் லோர் கடமை.

## ஔவையார் குறள்

'தருமம் பொருள்காமம் வீடெனும் நான்கும்
உருவத்தா லாய பயன்.

'ஈச னெனக்கருதி யெல்லா வுயிர்களையும்
நேசத்தால் நீநினைந்து கொள்.

'மெய்ப்பால் அறியாத மூடர்தம் நெஞ்சத்தின்
அப்பாலே நிற்குஞ் சிவம்.

'உடம்பினுற் பெற்ற பயனுவ தெல்லாம்
திடம்பட ஈசனைத் தேடு.

'தன்னை யறியு மறிவு தனைப்பெறில்
பின்னைப் பிறப்பில்லை வீடு.

'எண்ணிறந்த யோனி பலவாய்ப் பரிந்தெங்கும்
உண்ணிறைந்து நிற்குஞ் சிவம்.

'விண்ணிறைந்து நின்ற சுடர்போலச் சீவர்கள்
கண்ணிறைந்து நிற்குஞ் சிவம்.

'நினைப்பும் மறப்புமில் லாதவர் நெஞ்சந்
தனைப்பிரி யாது சிவம்.

'நரம்பெனும் நாடி யிடையினுக் கெல்லாம்
உரம்பெறும் நாடியொன் றுண்டு.

'உந்தி முதலாகி ஓங்காரத் துட்பொருளாய்
நின்றது நாடி நிலை.

'உந்தியி னுள்ளே ஒருங்கச் சுடர்பாய்ச்சில்
அந்தி யழலுருவ மாம்.

'நாபி யகத்தே நலனுற நோக்கிடில்
சாவது மில்லை யுடம்பு.

'ஆவிபாழ் போகா தடக்கி யிருந்தபின்
ஓவிய மாகு முடம்பு.

'மயிர்க்கால் வழியெல்லாம் மாய்கின்ற வாயு
உயிர்ப்பின்றி யுள்ளே பதி.

'மூலத்திற் றோன்றி முடிவிலிரு நான்காகிக்
கால்வெளியிற் பன்னிரண்டாங் காண்.

'வாசலீ ரைந்து மயங்கிய வாயுவை
ஈசன்றன் வாசலி லேற்று:

'சத்தியாஞ் சந்திரனைச் செங்கதிரோ னூடுருவில்
முத்திக்கு மூலம் அது.

'வாயு வழக்கம் அறிந்து செறிந்தடங்கில்
ஆயுட் பெருக்கமுண் டாம்;

'அசபை யறிந்துள்ளே அழலெழ நோக்கில்
இசையாது மண்ணிற் பிறப்பு.

'ஓசையி னுள்ளே உதிக்கின்ற தொன்றுண்டு
வாசமலர் நாற்றம்போல் வந்து.

'துரியங் கடந்த சுடரொளியைக் கண்டால்
மரணம் பிறப்பில்லை வீடு.

'அடைத்திட்ட வாசலின் மேல்மனம் வைத்துப்
படைத்தவன் தன்னையே பார்.

'எழுஞ்சுட ருச்சியின் மேல்மனம் வைக்கத்
தொழிலொன் றிலாத சுடர்.

'கண்ணகத்தே நின்று களி தருமே காணுங்கால்
உன்னகத்தே நின்ற வொளி.

'உரைசெயு மோசை உரைசெய் பவர்க்கு
நரைதிரை யில்லை நமன்.

'பேசு மெழுத்துடன் பேசா எழுத்துறில்
ஆசான் பரநந்தி யாம்.

'நின்ற எழுத்துடன் நில்லா எழுத்தினை
ஒன்றுவிக்கி லொன்றே யுளது.

'வாக்கும் மனமும் இறந்த பொருள்காணில்
ஆக்கைக் கழிவில்லை யாம்.

'கூடக மான குறியெழுத்தைத் தானறியில்
வீடக மாகும் விரைந்து.

'பிறந்திட மாலிடம் பேரா திருப்பின்
இறந்தடம் வன்னி யிடல்.

'வலத்தில் சனிக்கே யிராப்பகல் வாயு
செலுத்துப்பே ராது செயல்;

'மயிர்முனையிற் பாதி மனத்தறி வுண்டேல்
அயிர்ப்புண்டங் காதி நிலை:

'உறக்கம் உணர்வு பசிகெடப் பட்டால்
பிறக்கவும் வேண்டா பிறப்பு.

'நினைப்பும் மறப்பும் நெடும்பசியும் அற்றால்
அனைத்துலகும் வீடாம் அது.

'மறவா நினையா மவுனத் திருக்கில்
பிறவா ரிறவார் பின்;

'அண்டத் திலுமிந்த வாறென் றறிந்திடு:
பிண்டத் திலுமதுவே பேசு.

'சூரியன் வன்னியொன் றாகிடிற் சோமனும்
பாருமின் ஈது பயன்.

'மதியொடு வன்னியொன் றாகவே வந்தால்
கதிரவ னாமென்று காண்.

'தோற்றுங் கதிரவ னுண்மதி புக்கிடில்
சாற்றும் அமாவாசை தான்.

'மதிக்குட் கதிரவன் வந்தங் கொடுங்கில்
உதிக்குமாம் பூரணைச் சொல்.

ஓசையில் சத்தம், முட்டையில் உயிர்ப்பு, வித்தில் சத்தாகிய முளை, பூவில் வாசம், பழத்தில் சுவை, இரும்புண்ட நீரைப் பிரித்துக்காட்ட இயலாமை போல நிறைந்த எள்ளிலெண்ணெய், பாலில் நெய், கரும்பிற் சர்க்கரை, தேயுவில் அக்கினி, சொல் முடிவில் பொருள் தோன்றுதல் போல அகநோக்குடையவர் காண்பர். நால் வகைத்தோற்றத்தில் மானிடமென்னும் வடிவங்கொண்டும் மேற்கண்ட அனுபவங்களை அடையாமல், உலகம் மெச்சச் சரீரமீது பல வேடங்களைத் தரித்து, 'நான் யோகி; சோகி; பரதேசி; தம்பிரான்; சாமி; தவசி; தாசன்; பத்தன்' என்று வீண் காலங்களைப் போக்குவதனால் அருமையான பிறவி வீணாய்ப் பிருதிவியில் இலயமாய்விடும்; 'தான் தான் என்பது யாது? அதைச் சூழ்ந்த கருவி கரணாதிகள் எவ்வாறுதித்து எவ்வாறொடுங்கும்?' எனச் சித்தாந்தமுற்று நிற்பதே செம்மைத்தாகிய பெரும் நிலையாகும்.

திருவருள் போகத்தையளித்து, சென்ன மரணத் துயரத்தை நீக்கி, துரியாதீத நிலையிலிருத்தும் குருவிற்கு உடல் பொருளாவியெனும் மூன்றையும் [சரீரத்தையும், உயிரடபையும், அறிவையும்] தத்தம் செய்த மாணுக்கருள் மந்த, மந்தரதர, தீவிர, அதிதீவிர பக்குவத்திரயங்கள் நான்கு விதமாயிருக்கின்றன. அவருள்ளும் பிரமசரியம் கிருகஸ்தம், சந்நியாசம், வானப்பிரஸ்தம், அதிவர்ணுசிரமம் பெற்றவர்களாயுமிருக்கின்றனர்.

இருக்கு, எசுர் சாம, அதர்வணமாகிய நான்குவேதத்தில் இருக்கும் ஞானகண்டத்துள், தைத்திரிய உபநிஷத்தில் பிரக்கியான பிரமமெனும் குரு வாக்கியம், அறிவே பிரமம் என்பது. எசுர் வேத அயித்திரிய உநிஷத்தில். 'அகம் பிரமா அஸ்மி, என்பது சீடன் வாக்கியம், நானே பிரமம்' என்பது சாம வேத ஞான கண்டத்துள் சாந்தோக்கிய உபநிஷத்தில், 'தத்தவம் அசி' எனும் வாக்கியம் நீயானுய் அதர்வண வேத ஞான கண்டத்து மாண்டோக்கிய உபநிஷத்தில், 'என்னுடைய ஆத்துமாவே பிரமமாய் விளங்குகின்றது. இவ்வனுபவம் ஒரு கடாக்ஷத்தால் சுவானுபவமாக வேண்டும்.

பஞ்சாக்ஷரம்: நகரம், அருட்சத்தி தேகத்தைத் தரும்; பிராரத்துவத்தை அனுபவிப்பது, மகரம் ஆணவமலம், அசுத்தமாயை; சிகரம், சிவம்; வகரம், அருள்; சகரம், சீவன்; ஆதலால், மகா அசுத்த மாயை நீங்கில், அருட்சத்தி செய்கையான நகரச் செய்கையொடுங்கும். பிறகு யகர, சீவன் வகர அருளால் சிவத்தையடையுமெனவும் நகரமாகிய சேரியை நஞ்செ‌ன வெறுத்து மகரமாகிய மயலெல்லாம் வேரறக்களைந்து, வகரமாகிய வனத்தினிலிருந்திளைப்பாறி, சிகரமாகிய சிவகதியடைந்தனன் சீவனென்பது அனுபவிகள் வாக்கியம். ஆகையால், நகரமகாரத்தை நீக்கி மற்ற மூன்று அட்சரங்களை இருதலை மாணிக்கமாகத் தியானிக்கின்றனர். இவை ஆகமவிதிப்படி கூறியவாறிருக்கின்றன.

பிரணவ பஞ்சாக்ஷர விவரம்: கணபதி நாசி சுவாச முன்னிலையில் 4 வித பேதங்களையறியும்; அப்பேதங்கள் அறிவது, இடைகலை பிங்கலையும் சுழுமுனையில் கூடில் நீங்கும், ஓங்கார சித்தி, பிரமன், நாவு பிருதிவியில் 6 விதச் சுவைகளறியும், அறிவது நீங்கில், நகாரம் சித்தி, நேத்திரம் சலம் அப்பு 10 வித பேதங்களாகிய பஞ்சவர்ணம் உபரம் குள்ளம் சிறுத்தல் பெருத்தலாமென அறிவது நீங்கில் மகார சித்தியாகும்.

சர்மம்: தீ தேயு இவை முன்னிலையில் சூடு குளிர்ச்சி மிருது கடினமென அறியும் பரிச பேதம் 12-ம் அறிவது நீங்கில், சிகர சித்தியாகும்.

செவி வாயு ஆகாய அமிசம்; 16 வித அக்ஷர பேதங்களை அறிவது நீங்கில், வகரம் சித்தியாகும்.

புருவமத்தி ஆகாயம்: அவ்விடம் விருப்பும் வெறுப்புமறியும் இரண்டு தன்மை நீங்கில், யகார மனம் சித்தியாகும். இவ்வகை சத்த பரிச ரூப ரச கந்தங்களறியும் மனம் அம்பலமாகிய உச்சிக் குழியில் சங்கல்ப

மிலாததாகிய அறிவு சுயம்பிரகாசமாய் விளங்குமெனத் தவத்தினர் செப்பி யிருக்கின்றனர். இதை 51 அட்சரமென்று புகல்வர்.

ஆகிருஷ்ணம் தம்பனம் நகரம். மோகனம் மகரம், பேதனமாரணம், சிகரம், வித்வேஷ்ணம் உச்சாடனம் வகரம், வசியம் யகரமாகும்.

நகரம் ஆண் என்றும், அதற்கு மூன்ருவது சிகரம், பெண்ணென்றும், ஆண் எழுத்தைச் சுற்றிப் பெண்ணெழுத்து இருக்க, அவ்வகையாக ஒவ் வோர் எழுத்திற்கும் மூன்ருவது எழுத்துப் பெண்ணெழுத்தாகச் சக்கரங் களிலடைகின்றன.

'பன்னிரண்டு காலான புரவி யப்பா.
பாங்கான மூலவெளி தன்னில் நிற்கும்;

நன்னயமாய் வாசிதனி லேறிக் கொண்டு
நாட்டி யந்த நடுவீதி தன்னில் நின்ருல்

முன்னின்ற முப்பாழுக் கப்பா லேயோர்
மூகப்புண்டு மூச்சந்தி வந்து கூடும்;

சின்னஞ்சிறு வாசல்கடந் தப்பாற் சென்ருற்
சிதம்பரமும் காணமுத்தி சித்தி யாமே.

பிரணவமென்னும் ஓங்காரத்தில் அகார சோதி பிந்து உதித்து, இதில் நகரமகரமுதித்து உகாரவொலியால் நாதமுதித்து இதில் சிகர வகர முதித்து, மகரத்தில் யகர ஆன்மா தோன்றியதெனவும், நகரம், திரை; மகரம் மால், சிகரம், பதி; வகரம். திரை; யகரம் சிவாக்ஷரமாய் விளங்கும். ஏகாக்ஷரம், திரியாக்ஷரம். பஞ்சாக்ஷரம். சடாக்ஷரம் அஷ்டாக்ஷரமாகச் சிந்திப்பதெல்லாம் பகிர்முக நோக்குடையதாயிருக்கிறது. அக்ஷரமானது அச்சரமாம் எனக் கூறுவதில் சரம் பார்ப்போன் பரம் பார்க்கக்கூடும்.

அகாரமான நேரத்தில் மனோன்மணியென்னும் மனமானது அறிவு சதாசிவமாயிலங்கும். அறிவு என்பதில் அகாரம் சூரிய கலையாகவும், உகா ரம் சந்திர கலையாகவும். மிகர்ரம் சுழுமுனையாவுமிருக்கின்றன. இம்மூன் றுங் கூடியது அறிவு. இவ்வகையுடையவர் அறிவுடையவர். சிங்கார இடைபிங்கலை சங்காரவழி போகாமல் பொங்க நிறுத்தி எங்கள் குருராயன் பாதம் போற்றும்படி முத்துத் தாண்டவ சுவாமிகள் செப்பினர். இச்சா பிராரத்துவம், அனிச்சா பிராரத்துவம். பரஇச்சா பிராரத்துவமாக அனுப வித்து வருவதில், இவனது செயலால் யாதொரு விவகாரத்தையும் நடத்தா மல், யாவும் கடவுள் செயலாக முடியவேண்டுமென நிச்சயமுடையவரானுல் அவர் அடிமை திரமாக ஆட்கொள்ளக்கூடும்.

எதிரிட்டிருக்கும் மரணத்திற்குள் கொடுமையான காலனுக்கு ஏவலாளி களாகிய 4448 வியாதிக்கும் மரணத்திற்கும் மிகப் பயந்தவர்கள் உள்ளம் அதி தீவிரமாய் தன் முயற்சியிலிருப்பார்கள்.

புவியின்கண் மானிடங்கள் அடியிற் காணும் பேதங்கள் ஒருவாரெனக் கூற யாவரால் முடியும்?

ஆத்துமம்:

வேதாந்திகள்; இவர்கள் ஞப்தி மாத்திரமே ஆத்துமா என்றுரைப்பார்கள்.

கூடஸ்தர்: பிரமம் விடயங்களைத் தெரிந்து அவைகளில் மறைந்த பிறகு அவை கன்ன ரூபமென்று அறிவதே ஆத்தும விஷய சிதாகாச சீவன் என்பர்.

பாசுபத கபாலிகா விரதர்: நித்திய வியாபக சைதன்னியமே ஆத்துமா என்பர்.

சாங்கிய பதஞ்சலிகர்: அசங்க சின்மாத்திரமே ஆத்துமா என்பர்.

நியாய வைசேடிகர்: ககனம் போல் மகத் பரிணுமனுப் பரிஷாணம் போல் சட ரூபனுனலும் மனம் சம்போகத்தில் சித்து சம்யுக்தனுயிருப்பது ஆத்துமா என்பர்.

சைனர்: தேகாதி விலக்ஷணனுய், தேகபரிணமிதனுய், பரிணமித மத்தியில் சாங்கோச விகாச தர்மமே ஆத்மா என்பர்.

கவுள யாமள சாத்துவீகர்: ஆனந்தமாக நிற்றலே ஆத்துமா என்பர்.

லௌகீகர்: தேக புத்திர களத்திராதிகளின் ரூபமே ஆத்துமா என்பர்.

உலக வாசிகள்: தூல சரீரமே ஆத்துமா என்பர்.

சார்வாகர்: தேகம் நீங்கியபோது பார்த்தேன் கேட்டேனென்று சொல்வதும் நீங்குவதால் பஞ்சேந்திரியமே ஆத்துமா என்பர்:

சார்வாக ஏகதேசர்: பிராண வாயு போன பின்பு இந்திரிய மில்லாமையால், பிராண வாயுவே ஆத்துமா என்பர்.

உபாசகர்: மனமில்லாதபொழுது பிராணவாயு நீங்கலால், மனமே ஆத்துமா என்பர்.

க்ஷணிக வாதியர்: புத்தியில்லாத போது மனம் சலிக்கிற படியால் புத்தியே ஆத்மா என்பர்.

பௌத்தர்: சுழுத்தியில் அந்தக்கரணமுதல் சகல இந்திரியங்களும் இலயமடைகின்றபடியால், சூனியமே ஆத்மா என்பர்.

பட்டாசாரியர்: சுழுத்தியில் சூனியமென்று அறிந்து சாக்கிரத்தில் வந்து சொல்வதால் சத்தே ஆத்துமா என்பர்.

அந்தராளர், ஆகடஸ்தர்: சூக்ஷ்ம நாடி மூலமாய்ச் சஞ்சரிப்பதால் அணுவே ஆத்துமா என்பர்

திகம்பரர்: பாதாதி கேசமுதல் அறிவு வியாபித்திருப்பதால், புருஷ ரூபமே ஆத்துமா என்பர்.

தார்க்கிகர், பிரபாகரர்: ஆத்துமா கண்டமாயிருந்தால் நசித்து விடுமாதலால், ஆத்துமா பரிபூரணமென்றும் சடமென்றும் புகல்வர்.

பாட்டர்: ஆத்துமா சுழுத்தியில் சடமாயும், சாக்கிரத்தில் அறிவாயுமிருப்பதால், சடசித்தெனப் புகல்வர்.

சாங்கியர்: பரிபூரணத்திற்கு இரண்டு லக்ஷணம் கூடாவாகையால், ஆத்துமா அறிவாயும் பரிபூரணனுயுமிருக்கும், சுழுத்தியில் காணப்படும் சடம் அந்தந்த ஆத்துமார்க்களுக்குச் சுக துக்கத்தைக் கொடுப்பதால் ஆத்துமா சுபாவம் என்பர்.

யோகியர்: பிரகிருதி என்னும் சுபாவத்திற்கு நடத்துவோனில்லாவிடில் சேஷ்டிடாதாகையாலும், ஆக்கினை செய்து காப்பாற்றுகிறவனில்லையாகில், சிவர்களுக்குப் பந்த மோக்ஷமில்லாமையாலும் ஈஸ்வரன் சீவர்களுக்கு அன்னியமாயிருக்கிறுன் என்பர்.

பதஞ்சலி மதத்தார்: பிராணிகளின் மனத்தில் அந்தரியாமியாயிருப்பது ஆத்துமா என்டர்.

தார்க்கீகர்: அந்தக்கரணமில்லாவிட்டால், சங்கல்பமில்லை, ஆனபடியால் அந்தக்கரணமொற்றுமைப்பட்டபோது இரணிய கர்ப்பனுயிருப்பதே ஆத்துமா என்பர்.

விஸ்வ ரூபர்: தூலத்தை விட்டுச் சூழ்மமிராதாகையால் கிருஷ்ணன் விஸ்வ ரூபமெடுத்து எங்கும் காலைக் காட்டியபடியால், விராட்டு விஸ்வ ரூபமே ஆத்துமா என்பர்.

மதாபிமானிகள் கூறுவதில் உண்மை இன்னதென்று உணர்பவர்கள் ஞானிகள்.

உலகில் இவ்வகைப் பேதங்களாகப் புகல்வர்.

## மோக்ஷம்

வேதாந்திகள்: ஆணவம் மாயை காமியம் இம்மும்மலங்களும் நீங்கி, ஆத்துமா அருளோடு கூடி நிற்பதே முத்தி; பரமாத்துமா ஐக்கிய ஞானத்தால் விவகாராதி சமுசார பந்த நிவர்த்தியே மோக்ஷம் என்பார்கள்.

பாதஞ்சலிகர்: யோக அப்பியாச பலத்தால் மனோலயத்தால் அஞ்ஞானமழிந்ததே மோட்சம் என்பர்.

சாங்கியர்: பிரகிருதி புருஷ விவேகத்தால் அவித்தை நாசமானதே மோட்சம் என்பர்.

சங்கிராந்த வாதி, பாலிகமா வாதி: பசு கரணம் கெட்டுச் சிவகரணமாகிறதே, காத்தருவமான சமுசாரபாவத்தை விட்டு ஞப்திமாத்திரமாயிருப்பது மோட்சம் என்பர்,

பார்க்கரியன் பேதவாதி: ஆத்துமா கெடுகிறதென்று ஆணவமலம் கெடுகிறதே மோட்சம் என்பர்.

மாயா வாதியர்: சரீர தொந்தனேயிட்டு நிற்கிற சீவாத்மாவிற்கு விவேக ஞானம் உண்டாகிறதே மோட்சம் என்பர்.

பிரபாகரன், அமணன்: எங்கு மரிந்த காமிய கன்மங் கெடுகிறதோ, முக்குணங்கள் கெடுகின்றனவோ அங்கு மோட்சம் என்பர்.

புத்தர்: உருவம், வேதனே, குறிப்பு, பாவனே, விஞ்ஞானம் கெடுகிறதே மோட்சம் என்பர்.

சம வாதியர்: சுத்த மாயா சரீரமழியாதாகையால் நித்தியமாயிருப்பதே மோட்சம் என்பர்.

பாஷாண வாதியர்: ஆத்துமா கேவலத்தில் கிடக்கும் தன்மையைப் போல முத்திலும் ஒன்றுமறியாமலிருப்பதே மோட்சம் என்பர்.

சாத்துவிக சார்வாக லௌகிகர்: ஆனந்த பிராப்தி மரணமே மோட்சமென்பர்.

பூர்வமீமாங்கிசிகள், உலகாயதர் மோட்சம் சுவர்க்காதி லோக பிராப்தி என்றும், மதிளிரிடத்துண்டான போகமென்றும் கூறுவார்கள்.

ஜைனர், கௌலயாம்மளர்: மோட்சம் ஆகாசமத்தியத்துளுத்திரோத்ர கமனம், ஆகாசகமனுதி சித்திபிராத்தி என்பர்.

பௌத்தர் : சுகதுக்காதிகளால் மயக்கப்படாமலிருக்கும் சுத்த புத்தி சித்தியே மோட்சம் என்பர்.

பாஞ்சராத்திரிகள்: வாசுதேவாத்துமாகப் பிரகிருதியில் சொரூப ஆனியில்லாமலடங்குவது மோட்சம் என்பர்.

இலௌகிகர் : இகத்தில் புத்திராதிகளுடன் கூடி வியாதி துக்கமில்லாமல் சுகத்திலிருப்பது மோட்சம் என்பர்.

நியாய வைசேடிகர் : ஆத்துமஞ்சரீரேந்திராதி 211 துக்க ஆத்யந்த நாசத்தால் பாஷாணம் போல இருப்பது மோட்சம் என்பர்.

பாசுபதர் ; பிரவாகேஸ்வத்தால், ஈஸ்வரத்துவம் அன்னியருக்குக் கொடுத்து ஆத்துமன் ஞெப்தி மாத்திரமிருப்பது மோட்சம் என்பர்.

மாந்திரசமிமாஞ்ஞா சித்தாதிகள் : ஆத்துமன் சடத்துவாதீத சிவ சமானத்துமாவதே முத்தி எனப் புகல்வார்கள்.

மதி லக்கினுதி கன்மாதி மூவரும் நட்பாகக் கலந்திருக்கில் நரை திரை நீங்கி நெடுநாளிலிருந்து மோட்சம், குரு கோபுராமிசம் பெற்று, கேந்

திரத்தில் நிற்க, வெள்ளி திரிகோணத்தில் பரவதாமிசம் பெற்று நிற்க, கடக லக்கினமானால் உகாந்தவரையிருப்பன். கடக லக்கினமாய் மதி குருவிருக்க, நேத்திரத்தில் வெள்ளி புதனிருக்க, மற்றவர் 8-6-11-ல் இருக்க, ஆயுளில் அளவில்லை குரு சனி ஒரு பாகைக்குள் கூடிப் பாக்கியத்திலிருக்க, மற்றவிடமாகிலும் இப்படியிருக்க, நற்கோள் பார்க்கப் பானு உதயத்தில் பிறந்தவன் முனீஸ்வரனவன், பாக்கியத்தில் புதன், குரு, ராகு, கூடி சனி அங்கிசத்லைத மேவிடாதிருந்து, தனது அங்கிசமேற மதியுதயத்திலிருக்க யுகாந்தகாலமிருப்பன். இராகு குசன் சனிசர அங்கிசத்தை மேவி, குரு வெள்ளி ஸ்திர அங்கிசத்திருக்க, மற்றவர் உபய அங்கிசத்திலிருக்கும் ஆயுள் 1000, இலக்கினம் உபய ராசியாய், உபயத்தோன் கேந்திரமுச்சம் மூலதிரி கோணத்திருக்க சனி அட்டமாதி கூடில் 100. ஆயுள் இலக்கினாதிபதி குரு 6-8-ஆமிடத்தில் பாபக்கிரகம் நிற்க, ஒன்பதாமிடத்ததிபதியும் சுபாளும் 9-ஆமிடமில்லாதிருக்கில், பரதேசியாய்த் திரிவன். வாக்காதிபதியும் குருவும் கூடியிருந்தால், சாஸ்திர விசாரணையும் மந்திர உபதேசம் செய்யும் திறமுமாகும். அங்காரகர் சனி சூரியன் குஜன் இந்நால்வரும் இலக்கனத்திலிருக்க, திரிகோண கேந்திரங்களில் சுபர் இல்லாதிருந்தாலும் சந்நியாசிவன். குரு சந்திரன் சூரியன் இவரிலொருவர் இலக்கினத்திருக்க, அல்லது 10-ஆம் இடமிருக்கினும், சனி 12ல் இருக்கினும் சந்நியாசிவன், சுக்கிரன் பகை நீச்சம் பெற்று, அவருக்கு 5-9ல் பாபர் நின்று, இலக்கினத்தைச் சுடக்கிரகம் நோக்காதிருந்தால் முத்தி பெறுவன். 5-ஆம் இடத்ததிபன் இலக்கினத்திற்கு 9ல் இருக்க அவர் குருவாகில் ஆகாய கமனமும், சந்திரனாகில், காந்தருவ சித்தியும், புதனாகில் அவிழ்தப பிரயோக சித்தியும் குரு சுக்கிரன் சனியாகில், பொன் வெள்ளி ரசவாத சித்தியுமாகும். இராகு கேது 8-ஆம் இடமிருக்கில் கல்வியுள்ளவன்; செவ்வாய் ஆட்சி உச்ச கேந்திரங்களிலிருக்கில், பெருந்தவசி; சுவமனோகர ஞானி, தலாத்தோர்க்கு வாசி மேவிட யோகம், மந்திரம், குளிகை, வாதம், காயசித்தியுமாகும். கன்னி மீனம், மத்திம சித்தி, மேடம் தனுசு தாயைப் போற்றிச் சித்திகள் பெறுவர். செனன காலமானாலும், யோகம் பூசை செய்தாலும் மாதம் சிங்கம் சிலை கோல் மீனம் ரிஷபம் கடகம் சுறா, வாரம் குருமதி புகர் புந்தி, லக்கினம் மீனம் வில் துலாம் கன்னி, திதி. பஞ்சமி சஷ்டி சட்டமி தசமி திரிதியை சதுர்த்தி, யோகம் அமுத யோகமாயிருக்கில் உத்தமம். ஞான சித்தராவர். செனன நாள் உத்திரம் அஸ்தம் சித்திரை சுவாதி மூலம் உத்திராடம் அஸ்வனி பரணி உத்திரட்டாதி. காய சித்தி யோக சித்தியாகும்.

கர்ப்பம் உண்ணத் தனது இலக்கினத்திற்குச் சாரத்தில் கிரகங்கள் சுக்கிரன் 5ல், குரு 9ல், குஜன் 2ல், புதன்-11-ல், சூரியர் 7,ல் சந்திரனிருக்க வேண்டும்; கர்ப்பமென்பது முப்புவென்றும், அவரை ரவிமதி சுழி என்றும், பகிர் முகத்தில் தாது மூலசிவமாயுள்ளவையில் எப்பொருளாக அமைந்திருக்கும் முட்டைக் குரு தெளிந்து, அவை கொள்ளுவதற்கு முந்தி, லோக கருவாகிய அயக்காந்தச் செந்தூரத்தை அகத்தியர் செந்தூரம் 300ல் கூறியபடி கொள்ள வேண்டும். சந்திர கலையில் பிருதிவி பூதம் நடக்கும்போது சிவாலயம், வீடு கட்டல், குடி புகுதல், மரம் வைத்தல், சாந்தி கழித்தல் அப்புக்குக் குளமெடுத்தல், சோலை வைத்தல் விவாகம் செய்தல், உழவு விதை விதைத்தல் தேயு பிணி தீர்த்தல் வாயு குதிரை தேர் கப்பல் ஏறுதல் ஆகாயம் மந்திரம் சாதித்தல், பூரிய பிரிவு தெரியாவிடில் இட நாசிப் பக்கம் கலை சந்திரனையால், அப்படி நடக்கும்போது வஸ்திர ஆபரணம் புனைதல் ... விவாகம்

செய்தல். கிணறு வெட்டல், குடி புகுதல், அரசரைக் காணல், சாந்தி தெய்வப் பிரதிஷ்டை செய்தல், சுரம் தீர்த்தல், சமாதானம் செய்தல், தனம் வைத்தல்; வலநாசிச் சூரிய கலையில் உபதேசம் பெறல் வணங்கல் யுத்தம் வியாபாரம் சூது வழக்குரைத்தல் சவாரி செய்தல் சங்கீதம் பாடல், நித்திரை செய்தல், பிசாசு ஓட்டல், போஜனம் செய்தல் ஔடதம் புசித் தல் ஸ்நானம் செய்தல் உத்தமம்.

சத்தியாய்ச் சிவமாய்த் தாண்டவமாடும் தாசியாகும் சரீரத்தில் துடி பயன்: அடர்ந்து கை துடிக்கில். ஒரு வருடம் கால், 6 மாதம்; நெற்றி, 3 மாதம்; கன்னம், 10 நாள்; காது கேளாவிடில், நாள் 7; பார்வை தெரியா விடில், நாள், 5; வாசனை தெரியாவிடில் நாள் 3; நாக்குழறில், நாள் 2ல் மரணமெனக் கொள்க. வாயில் சலம் வைத்து நிழலிலிருந்து ரவியில் உமிழ அதில் இந்திர தனுசு பஞ்சவர்ணமாகத் தோன்றுமாகில், ஒரு வருடம் வரையில் மரணமில்லை: முறிந்திருக்கில், அந்த ஆண்டில் மரணம்; நிறம் மாறிப் பொன்னுநத் தோன்றில், 6 மாதத்தில் மரணமாவர் அமாவசை ரவியிலாகிலும், பருவ சந்திரனிலாகிலும் உருக்கிய நெய்யைக் கிண்ணத்தி லிட்டுப் பூமியில் வைத்து முன் கண்ட ரவி மதியில் ஒன்றைப் பார்க்க வெண்மை நிறமாகக் காணில் பிராண பயமில்லை; செம்மை, வாழ்வு; பொன்மை, கேடு; பசுமை; நோய், கருமை சாவு, தென்புறம் வட்டம் குறைந்து காணில். ஒரு வருடம்: மேற்புறம் குறைந்தால் 6 மாதம் வடபுறம் குறைந்தால் 3 மாதம்; நடுவே தொள்ளையாயிருக்கில், 10 நாளில் மரணமாம், விசேட பலனைச் சரநூலிற் பார்க்க.

வேதம் 4; உபவேதம், 4; அங்கம். 6; உபநிஷத்து. 28. ஸ்மிருதி 19; சிவபுராணம். 10; விஷ்ணு புராணம், 4; பிரம புராணம், 2; சூரிய புராணம், 1: அக்கினி புராணம், 1: உபபுராணம் 18; இதிகாச ராமயண பாரத பாகவத வாசிஷ்ட பகவத் கீதை, பிரபந்த தேவாரஞான நூல். சித்தர் வாக்கியங்கள். இன்னமனேகமாயுள்ள கிரந்தங்களும். குர் ஆன் பைபிள் முதலியனவும், கடவுள் ஒன்றெனத் தெளிந்து விகற்பமற்ற அகண் டாகாரப் பொருளில் இயலுமுறும்பொருட்டேயன்றி வேறில்லை. நீர் நுழை யாவிடம் நெய் செல்லும்; நெய் செல்லாவிடம் புகை செல்லும்: புகை செல்லாவிடம் மனம் செல்லும்; மனம் செல்லாவிடம் அறிவு செல்லக் கூடும்.

ரவி நிழல் அல்லது மதி பிரகாசத்தில் தனது நிழல் பூமியில் தனது உருவ அளவாயிருக்கும்போது அந்த நிழலைத் தனது நேத்திரம் இமையாமல் பார்த்துக் களங்கமில்லா ஆகாயத்தைப் பார்க்கில் தனது உருவம் பெரிய தாய்த் தோற்றும், அது பொன்னிறமாகில் செல்வம்; வெண்மை ஆயுள் வளரும்: செம்மை, ஆயுள் குறையும்; கருமை நலி; அவ்வுருவில் கைகால் தோன்றுவாகில் 6 மாதத்தில் மரணம்; தலை தோன்றுமலிருந்தால், 3 மாதத்தில் மரணம்; இந்தச் சாயை வடிவமானது தனது மனமும் நேத் திரமும் ஒற்றுமையாய்த் தோற்றமாயிற்று, 'சாயை மறைபாதோ தன்னு டம்பு தன் வெளிக்குள் ஒய அகத்தினிடை ஓடாதோ?' என்று கூறியபடி கண்ணும் கருத்தும் ஒற்றுமை செய்த அகநோக்குடையவர்கள் இருந்தபடி சராசரங்களின் இயல்பையும் மூன்று கால வர்த்தமானங்களையும் தெரிந்து கொள்ளக்கூடும், சாயை தீப பிரகாசமிருப்பது தெரிந்த விஷயம். அஃது [illegible] தென்று கவனிப்பதில்லை அஃது எங்கும் நிறைந்திருப்பது தெரியா

மையால் சிலருக்குச் சங்கை தரும். ஒரு வீட்டில் நால்வராகக் கூடி, அந்த வீட்டில் ஒரு பொருளையாவது ஒரு கட்டடத்தையாவது நால்வரும் நினைந்து கொண்டு தாம் நினைந்த சங்கதியறியாத ஒருவன் நேத்திரத்தைத் துணியால் மூடி, அவன் தோள்மீது நினைந்த நால்வர் கையும் வைத்து, அவன் இஷ்டப்படி போகும்படி சொன்னால், அவ்விடம் விட்டு நால்வர் குறித்த இடமே போய் நிற்பான்; குறித்ததைத் தன் கையால் தொடுவான். இதன்றியும் ஒருவனை நமது சுவாசம் உள் செல்லும்போது நினைந்தால், அதே சமயம் அவன் நம்மை நினைக்கின்றான்; எதிரிலிருக்கும் ஒருவனுக்கு நடக்கும் கலையும் அதிற் பூதியமும் நாம் தெரிந்து கொள்ள வேண்டுமானால், நமது கலையைப் பார்த்தால், அப்போது கலையும் பூதியமும் நின்று எதிரிக்கு நடக்குங் கலையும் பூதியமும் நடந்து தெரிவித்து உடனே முன் நமக்கு நடந்ததுபோல நடக்கும். கடவுள் எங்கும் வியாபகராயிருப்பதற்கு இன்னுமனேக திருஷ்டாந்தங்களிருக்கின்றன. அனேக சமய வாதிகள் பேதா பேதங்களாய்.' எங்கள் சாமி உயர்ந்தவர்; உங்கள் சாமி தாழ்ந்தவர்.' என்று தர்க்கிப்பது சரியன்று. பார்க்குமிடத்து, பூமி ஆகாயம், சந்திரர், சூரியர், இடி, மின்னல், மேகமிவைகளும், மத்தியில் உலவும் வாயுவும் யாவருக்கும் பொதுவாயிருக்க, நூல் விசாரணையும் நல்லோர் பழக்கமும் அவர்களால் பெற்று அடையவேண்டிய பயனுமடையச் சக்தியில்லாதவர் கூறும் வீண் வாதமாய் இருக்கின்றன. எம்மதச் சார்பிலுதித்தவராகிலும், எதிரிட்டிருக்கும் மரண பயத்திற்கஞ்சித் திகிலடைந்து, உலகில் சத்து இன்னதென்றுணர்ந்து சதா எதை நாடி நிற்க வேண்டுமோ அதில் நின்று முடிவு பெறுவதே மானிடமாகும். சிவம், விஷ்ணு, அல்லா, பராபரன் என்பன அவரவர்கள் சார்பின்படி கடவுள் நாமம் அனேகமாய்ப் புகன்றாலும், அப்படிப் புகலும் வஸ்து யாது? அதை இன்னதென்றுணர்ந்தால், எம்மதச் சார்பிருந்தாலும் கடவுள் ஒன்று எனத்தெளிந்த பேரறிவாளரென யாவராலும் புகழப்படுவர். மாயையின் கூறுகிய அசத்து, சடம், துக்கம், அனித்தியம், கண்டமிவைகளை நீக்கி, சிவத்தின் கூறுகிய சத்து, சித்து ஆனந்தம், நித்தியம், பூரணமாகிய இவ்வைந்தின் தாத்பரியங்களையுணர்ந்தவர் இந்நூற்குரியவராவர்.

சாதிகுலம் பிறப்பிறப்புப் பந்தமுத்தி அருவுருவத் தன்மை நாமம்
ஏதமின்றி யெப்பொருட்கும் எவ்விடத்தும் பிரிவறநின் றியக்கஞ் செய்யுஞ்

சோதியைமாத் தூவெளியை மனதவிழ நிறைவான துரிய வாழ்வைத்

தீதிலபர மாம்பொருளைத் திருவருளே நினைவாகச் சிந்தை செய்வாம்.'

சரியை கிரியை யோக ஞானமாகிய நான்கு பக்குவர்களும் மோக்ஷமாகிய முத்தியடைய வேண்டும் என்பதே கருத்து. அதிலும், சரியை கிரியை யுடையவர் இப்பிறவியிலாகிலும் அல்லது மறுபிறவி மானிடமாகத் தோன்றியாகிலும் அதிக இகபோக சுகங்களையடைய வேணுமென்ற ஆவல் பூண்டவர்களாகவும் இருக்கின்றனர். எவரெவர் உண்மையாக எந்தவித பாவனையும் கோரிக்கையுமாயிருந்து வருகிறார்களோ, அவற்றிலே ஆத்துமா தேகத்தைவிட்டு நீங்கும்போது எண்ணம் உதிக்குமென்று, கோரிக்கைப்படி செனனமும் இச்சுகமும் பெற்று அனுபவிக்க வேண்டுமென்று ஆகம

நூல் கூறுகின்றன. யோகவான், ஞானி இவர்கள் முடிவு பெறும்போது 96 தத்துவங்களும் ஒன்றிலொன்று ஐக்கியமாய், அவைகளுக்கு ஆதாரமாயும் அணுவுக்கணுவாயுமிருந்த ஆன்மா தேகத்தை விட்டு மகாகாயத்தில் இலயமாவதும் அல்லது அத்தேகத்தில் தானே ஐக்கியமாவதும் நமது சிற்றறிவிற்கு விளங்காது. அல்லது வினைக்கீடாய் வேறு பிறவி எடுப்பதற்கு எவ்வகையாக ஒரு புருடன் சுக்கிலத்தில் அணுகினவன் ஆத்மா சிவனென்பது போய்ச் சம்பந்தமுற்றதும், உண்மை இவ்வாறென அறிந்தால் மாத்திரம், நரக மோக்ஷம் உண்மை என்பதும், அனேக பிறவிகளெடுத்து அவற்றின் புண்ணிய பலத்தால் மானிடம் பெறுவதும், கைலாய வைகுந்த பரமபதமிடமும், எமலோக நாகமிடமும் கால தூதரும் நன்முக விளங்கும். ஆகையால் கால தாமதம் செய்து உலக வியாபாரப் பெருந்திரை யிலாழாமல் மனத்தை ஒருவாறுக நிறுத்தி நூல் விசாரணையும் சாதுக்கள் சங்கமும் பெற்று, நிரதிசயானந்தப் பேரானந்த சுகம்பெற நன்னிலை பெறுங்கால் மேற்கண்ட சங்கைகள் நிவர்த்தியாகும் சுக்கில சுரோணித சம்பந்த காலம் அமைந்தபடி. செனன மெடுத்தும் மரணமாகும் வரையில் அனுபவிக்க வேண்டியதிருக்க நாம் மத்தியில் என்ன முயற்சி செய்தாலும் யாதும் பயன்படாது என்று சிலர் புகல்வர் அவ்வகை கருதுவது நமது அக்கியானம் அனுபவிக்க வேண்டுவதை அனுபவிக்க வேண்டுவதானாலும், கடவுள் சித்தை சதா உடையவர்களாகில் பரஇச்சா பிராரத்துவமாகச் சகல சுபங்களையும் கடவுளளித்து ரக்ஷிப்பர். வலக்கையை முகத்து நாசிக்கு நேராக நிறுத்தி இரண்டு கண்ணினாலும் கைந்நாடி துடிக்குமிடத்தில் இமை ஆடாமல் பார்க்கக் கை சிறிய துரும்பு கனமாகத் தோற்றும். அப்படித் தோன்றுமாகில், 6 மாதவரை மரணமில்லை; அல்லது கைப்பிரமாணமாகவே தோன்றுமாகில், சீக்கிரம் மரணமென்றறிக, முன் கண்ட பார்வையாகப் பார்த்து, கை சிறியதாகத் தோன்றிப் பின்பு இருளாகத் தோன்றும், அவையும் நீங்கித் தீப்பிரகாசமாக வெளிச்சமுண்டாகும் அப்படித் தோன்றிய பிறகு அப்படிச் செய்யும் அப் யாசிகள், அந்தப் பிரகாசத்தில் அனேக அற்புதங்களைக் காணுவதுண்டு. பிந்தச் சாதமாகச் சிலகாலஞ் செய்தவர்களுக்கு விளங்கும் நிழலுள்ள தாழ்வாரத்தில் வெளியாயிருக்குமிடத்தில் உட்கார்ந்து கொண்டு, முகம் பார்க்கும் கண்ணாடியை வலக்கையிலெடுத்து, தனது முகத்தின் வல நேத்திரக் கருமணியில் விளங்கும் வடிவைக் கண்ணிமையாடாமலும் மனம் வேறு வழி செல்லாமலும் பார்த்திருந்த கண்ணிலிருந்து சலம் வடியும். அதற்கும் இமையாமல் பார்க்க, இருளாகத் தோன்றும். அந்த இருளை அசைவறப் பார்த்திருக்க வெளி தோன்றும். அந்த வெளியினிடத்திலும் அனேக அற்புதங்களை அனுபவிகள் காண்பார்கள். உலகில் அஞ்சனமென்னும் கறுப்பு நிறமுள்ள மையைக் கையில் பொட்டுப்போல வைத்து. தீப முன்னிலையில் கண்ணிமையாடாமல் மையைப் பார்த்து, அதில் அனேக தேவதைகளைக் கண்டதாயும். தாங்கள் கோரிய இடம் பொருள் இவைகள் தெரிந்ததாயும் சொல்ல நாம் கேட்டிருக்கிறோம். சத்த பரிச ரூப ரச கந்தமாகிய ஐந்தும் கூடியது அஞ்சனம். இதைப் பார்க்குமிடத்துக் 'கண்ணாரமுதமாய், விளக்கொளியாய் நின்றானை' என்று கூறிய வாக்கியம் உண்மையாக விளங்குகிறது. மகான்கள் உரைத்த லக்ஷியங்களைப் பரிபாக பக்குவப்படிக்குச் சாதித்து, அவைகளினால் முடிவு பெறும் பயனைத் தேகம் பிணமென்று புகலாமுன் அனுபவ முதிர்ந்து நிரதிசயானந்த நிர்விகல்பமாய் ஜீவன் முத்தனாக மனம் வாக்குக் காயத்தால் மகான்களைப் போற்றுவதே நமது கருத்தாகும்.

உலகில் நால்வகை யோனியுண்டு. அவை, பையினிடம், முட்டையிடம்' வியர்வை, வெப்பம், வித்துகளால் உற்பவம். அவற்றில் 84 லக்ஷ பேத

மாவன: தேவர், 14; மானிடம். 9; மிருகங்கள், 10; ஊர்வன [சர்ப்ப வகை] 11; நீர் வாழும் பிறவிகள். 10; தாவரம், 20; பாதாள ராக்ஷல யோனி, 10; ஆக 84 லக்ஷ பேதமெனச் சாஸ்திரம் கூறும்.

பூதம், 5: பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம்.

பொறி, 5: சுரோத்திரம், தொக்கு, சட்சு, சிங்குவை, ஆக்கிராணம்.

தொழில், 5: தேவ, தானம், விசர்க்கம், ஆனந்தம், பயம்,

கோசம், 6: அன்ன மயம், பிராண மயம், மனோமயம். விக்கியான மயம், ஆனந்த மயம்.

சயம், 5: அமர சயம், பக்குவாசயம், மலசயம், சலசயம், சுக்கில சயம்.

புலன், 5: சத்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தம்.

கரணம், 4: மனம், புத்தி, சித்தம், அகங்காரம்.

குணம், 3: சாத்துவிகம், இராசதம், தாமதம்.

மலம், 3: ஆணவம், மாய்கை, காமியம்,

கன்மேந்திரியம், 5: வாக்கு, பாதம், பாணி, பாயுரு, உபத்தம்.

இராகம், 8: காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாற்சரியம், இடும்பை, வேகம்.

நாடி, 10: இடைகலை, பிங்கலை, சுழுமுனை, சிங்குவை, புருடன், காந்தாரி, அக்கினி, அலம்புவி, சங்குனி, குரு.

ஆதாரம், 6. மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அனாகதம், விசுத்தி, ஆக்கினை.

மண்டலம், 3: அக்கினி மண்டலம், ஆதித்த மண்டலம், சந்திர மண்டலம்.

அவத்தை, 5: சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், அதிதுரியம்.

தோஷம், 3; வாதம், பித்தம், சிலேத்துமம்.

ஏஷணை, 3: அர்த்த ஏஷணை, புத்திர ஏஷணை, லோக ஏஷணை.

வாயுக்கள், 10: பிராணன், அபானன், வியானன், உதானன், சமானன், நாகன், கூர்மன், கிருதரன், தேவதத்தன் தனஞ்சயன்.

வினை, 2: நல்வினை தீவினை.

அறிவு, 1:

கைலாய வர்க்க வேடம்: 6 முகமுள்ள 16 ருத்திராக்ஷ சபமாலை மணி விரல் 36 கொண்ட யோக தண்டு ... 1 ... 16 ...

குண்டலம், 96 அங்குலமுள்ள யோக வேட்டி. 4 அங்குலமுள்ள கவுபீனம் புலி அதளாசனம் இரசலிங்கக்கடகம் உப்புமணி.

திருமூல வர்க்க வேடம்: சபைப் பிரம்பு 5 பட்டை உப்பு, கதை, படிக மணி, யோக வேட்டி, படிக லிங்கம் காதில் செம்புருட்டு, புத்தகம் ருத்திராக்ஷம், பாதக்குறடு, புலித்தோல்.

ஆசனங்கள்: மான் தோல், ஞானம்; புலித்தோல். செல்வம்; தர்ப்பாசனம் மோக்ஷம்: சித்திரக்கம்பளம் நன்மை: வஸ்திரம், தீமை நீங்கல்,

'உடலுக்குள் நீர்நின் றுலாவினதைக் காணாமல்
கடமலைதோ றுந்திரிந்து காலலுத்தேன் பூரணமே!
'நானே நீ நீயேநான் நாமிரண்டு மொன்றானல்
தேனின் ருசியதுபோல் தெவிட்டாய்நீ பூரணமே!
'கண் காணி யில்லென்று கள்ளம் பலசெய்வார்
கண்காணி யில்லாவிடமில்லை காணுங்கால்
கண் காணி யாகக் கலந்தெங்கு நின்றானைக்
கண் காணி கண்டார் களவொழிந் தாரே?

இவ்வனுபவம் பெறுபவர்கள் மெய்ஞ்ஞானிகள்.

மந்திர மென்னும் மனத்திர தியானத்தால் பிணிமுதலியவை நீங்க வாயில் செபியாமல் மனத்தால் தியானிப்பது சித்தர்கள் வாக்கியம். சகல வியாதிகளும் நீங்க மஞ்சளால் கணபதி வைத்து அறுகு புட்பம் சார்த்தி தாம்பூலம் தேங்காய் பழம் தூபதீபம் செய்து நேத்திரப் பார்வையைப் புருவ மையம் வைத்து இடக்கையில் விபூதியைப் பரப்பி அதில் பிரணவ மெழுதி 'அம் ஒங்கிலி' என்று தியானம் ஆயிரத்தெட்டுச் செய்து விபூதியை நோயாளியை உட்கொள்ளும்படி கொடுத்து வர நோயும் தீரும்; பிசாசும் போகும்.

கர்ப்ப நோய் தீர்ந்து, கர்ப்பமாகத் தேனும் முலைப்பாலும் கூட்டி 'ஓம் சிறி சிசு' என்று 18 தரம் தியானித்து, பெண்களை உட்கொள்ளச் செய்க.

பிரசவ கால நோய்க்கு வெண்ணெய் 'டங் டம்' என்று தியானித்து வயிற்றில் பூசப் பிரசவமாகும்.

சிலந்தி கட்டிகள் உடையவும் வீக்கம் வாடவும் வெண்ணெயை 'உம், வங், தம் ஒங் றீங், நசி, மசி' என்றாகிலும் அல்லது 'உம், வங், தம்' என்றாகிலும் தியானித்துத் தடவி விபூதி உள்ளுக்குக் கொடுக்கவும்.

கண் புகைச்சல் மாலைக்கண் சூடு, குத்தல், சதைப்படலம் தீர ஒரு பாத்திரத்தில் சலத்தை விட்டு அதைக் கையில் வைத்துக்கொண்டு

'லா, ஆ, லீ' என்று தியானித்து அந்தச் சலத்தினால் 'கண்ணைக் கழுவி வரச் செய்யவும்.

விஷமிறங்க சலத்தை 'ஓம், கிலீ, நசி, நசி' என்று 108 தியானித்து சலத்தை உள்ளுக்குக் கொடுக்கவும்.

சகல பாபமும் நிவர்த்தியாக 'ஓம், றங், றீம், யநம, சிவ சகல பாப நிவாரணீயாமி' என்றோதவும்.

'ஓங்கார கம்பம்' என்பது உணர்வெழுத்தாகச் சப்திப்பது தேவியாகும். 'இருண்டவன் கண்ணுக்கு மருண்டது பேய்' எனப் புகல்வது போல அக்ஞானத்தால், பேய் பிசாசு காட்டேரி சாமுண்டி துர்க்கி காளி முனி அனுமார் வீரபத்திரன் முதலிய நாமங்களுடையவைகளிருப்பதாயும் அவற்றை மந்திரங்களால் உருவேற்றி வசியம் செய்து கொண்டு அதனால் இக அஷ்டகர்மங்களை நடத்துவதாகவும் மந்திரவாதிகள் சொல்வதை நாம் கேட்டிருக்கிறோம். அவை முடிவாகப் பார்க்குமிடத்து அவரவர் கற்ற நூலளவும் விசாரணையும், எவ்வளவு மனத்திடம் நிச்சயப்பட்டிருக்கிறதோ அவர்கள் பாவப்படி கடவுள் எங்கும் நிறைந்தவராதலால் கோரியவண்ணம் தோற்றிப் பலனளிக்கக்கூடியே விளங்குகின்றன. பாவமும் தோற்றமும் அழிவும் வருமெனவும் நிறைந்த பரிபூரணம் முடிவென்றும் வேதமும் அனுபவிகளும் கூறுவர். சிரசையாட்டிச் சரீரமசைத்து நடக்கையாலும் மல்லாந்து மார்மீது கை வைத்தும் புரண்டு புரண்டும் இரு கரத்தையும் தொடைக்குள் வைத்தும் நெடுமூச்சு விட்டுப் படுக்கையாலும் மலசல மடக்கலாலும் மனவேகத்தாலும் இராசத தாமத உணர்வினாலும் வியாதிகளுற்பவமும் சொப்பனாதி அவஸ்தையும் நேரும்.

'ஈரா றேபார் சமாதிதனி லியங்கி நடக்கி லீரெட்டாம்;
மாரா தோடில் ஐயைந்தாம்! மருவித் துயில லவ்வாறும்;
காரார் குழலா ருடன் கூடிக் கலவி கழித்த லெட்டெட்டாம்;
நேரே நோக்கி நிலைநிறுத்த நிற்குஞ் சிவமு மதுதானே.'

'நெடிகான தாரையொன்று சங்கி ரண்டு
நின்றூதும் திருக்கோவி லறையி னுள்ளே

வடிவாக ஒரு பாதம் ஆடி நிற்கும்
மற்றொருகால் தூக்கிநின்ற சிவனைக் கண்டோர்

கடிதாக உடல்வெறுத்துத் தவங்கள் செய்து
கண்மூடிப் பூசித்துக் கலங்கு வாரோ?

படிமீதில் திருக்கோவில் நதிகள் தேடிப்
பரிதவித்தே யுழல்வதென்ன பகர்ந்தி டீரே.''

'உருத்த ரித்த நாடி தன்னி லோடுகின்ற வாயுவைக்
கருத்தி னாலி ருத்தியே கபால மேத்த வல்லரேல்
விருத்த ராரும் பால ராவர் மேனியுஞ் சிவந்திடும்;
அருட்டரித்த அம்மை யாணை அப்பனாணை உண்மையே;

'பொய்யென்று சாத்திரத்தைச சொல்வா னாகில்
புழுவான பாழ்நரகில் வீழ்வான் பாவி;

மெய்யென்று குருபதத்தைத் தொண்டு பண்ணி
வேதாந்தப் பலநூலும் விரித்துப் பார்த்துக்

கைமுறையும் குருமுகமாய்க் கண்டு தேறிக்
கற்றவரை வணங்கியே சொல்லக் கேட்டுப்

பொய்மறந்து மெய்யுகந்த அறிவிற் கூடிப்
பூரணமே தெய்வமென்று போற்றி நில்லே.'

ஆணுக்கும் பெண்ணுக்கும் அறிவே யொன்றும்
ஆனாலும் பேதை குணம் பெண்ணுக் குண்டு;

வீணுக்கே எடுத்த சன்மம் அனந்தங் கோடி;
விவேகமுத்தி யடைந்தவர்கள் அதிக முண்டு;

ஊணுக்குத் தேடியுண்டே யுறங்கிச் செத்த
உலுத் தருண்டு புருடரிலே அனந்தங் கோடி;

தானுக்கே ஏகசரா சரந்தான் நெஞ்சே!
சற்குருவின் சொற்படியே சார்ந்து பாரே.'

'பேதைமை யென்பது மாதர்க்கணிகலம்.' மாதர்கள் மனம் கேவலத்தில் எக்காலமும் செல்லும். அநேகமாய்க் கூடிய பாவங்கள் திரண்டு பெண் வடிவமாக ஜனிப்பதென்று அகஸ்தியர் செப்பியிருக்கின்றனர்.

முத்தரையும் பெத்தரையும் முகக் குறியான்
நகக்குறியான் முழுதுந் தேறின

மெத்தனவா கியமொழியும் ஆனந்தப்
பரவசத்தான் மிகுந்த சோர்வுஞ்

சித்தநிலை தெரியாத செல்வமுமா
யிருப்பர் நல்லோர்; தீயோ ரெல்லாம்

இத்தகைமை யோர்களையும் இகழ்ந்து புகழ்ந்
தோர்க்குறவா யிருப்பர் தாமே.

'போகாம லிருக்கவென்று லசான் தன்னைப்
பொற்பூவைச் சாத்தியல்லோ காக்க வேண்டும்?

வேகாத தலையல்லோ முன்னே கேளு;
விளம்பியபின் சாகாலை விரும்பிக் கேளு.

வாகாக வாதவித்தை கண்டார்க் கையா!
வலது முழந் தாழிலொரு மறுவைப் பாரு;

ஆகமுடன் கண்டமது சாய்வு காணும்
அப்பனே இன்னமொரு வங்கம் கேளே;

'கேளப்பா இடமுதுகில் மறுத்தான் காணும்;
கெடியான இடக்கையில் சங்கு சக்ரம்

நாளப்பா இக்குறியை நன்றாய்ப் பாரு;
நாசியிட நாசியிலே மறுவைப் பாரு;

வேளப்பா இடமுதகில் மறுவைப் பாரு;
வேதாந்த வாதியெனிக் குறியே பாரு;

ஆளப்பா இப்படியே அடையாளங்கள்
ஆறையும் நீ கண்டவரை யடுத்துக் காணே

நெற்றியில் சூல ரேகையுமிருக்கும்.'

மாணாக்கருக்கு உபநயன, சந்தியா வந்தனம், உபதேசம், காயத்திரி ஜபதப முதலியவைகளை ஆசிரியராகும் குரு செய்து வைக்கின்றனர்.

'வேதமென்ற ஆகமங்களாறு சாத்ரம்
வெவ்வேறு மதபேதம் சமய பேதம்

காதமென்ற காதியும்நால் பதினெட் டாகக்
கவுத்துமா யுலகோரை மபக்கங் காட்டிக்

கீதமென்று லரிகீதம் சிவகீத மென்றும்
கிருபையுடன் வெவ்வேறாய்ப் பிரித்துக் காட்டிப்

பாதமென்று சாவதுவே நிசந்தா னென்று
பாடினார் சாத்திரத்தைப் பாடினாரே!

என வியாசர் கூறியதாக அகஸ்தியர் கூறிபிருக்கின்றனா.

உபநயனமென்பது, மூன்றாவது நேத்திரம். அறிவு, உணர்வு, அதனால், சந்தியா வந்தனமென்பது இரவி மதிதனதிடம் ஒற்றமையாகும் காலம். உபதேசமாவது பகிர்முக நோக்கு நீங்கி, ஞான தேகமாகிய அகமுக சுத்த வெளியிடமிருந்து சபதபங்களைச் செய்விக்கக் குரு திருவருள் புரிவது.

வசிஷ்டர் இராமமூர்த்திக்கருளிய நிலை:

ஆதலா லுயிரசைவால் வாத னைப்பால்
அழுத்தத்தா லறிவைவிரி வாக்கா யென்னில்

ஓதுபிறப் பறுமறிவின் விரிவே யுள்ளம்.
உள்ளத்தா லிவ்வனந்த வுயிர்கள் வாழ்வாம்;

சேதனயோ கிகளெல்லாம் பிராணா யாமம்
தியானமருந் தூகத்தின் திறங்க ளாலே

பேதன மொடுங்குவது பொருட்டா யன்றோ
பிராணவா யுவைநிறுத்திப் பிடிக்கின்றாரே!'

உண்டாகி எவ்விடத்தும் உற்ற போதம்
உயிரசைவா லுணர்வுறும்ப போதந் தன்னை

மண்டாமற் றடுக்கைபெரு நன்மை யாகும்;
வளர்போதங் காண்பவற்றை மருவு மாலால்
தண்டாமற் காண்பவையே மனத்துக் கென்றுந்
தவிராத துயராமத் தனிப்போ தந்தான்;
மிண்டாத சுழுத்தியிற்போ தம்போல் நிற்கில்
வீடதுபே றதுவிமல பதம்வே றில்லை'

தாயுமான சுவாமிகள்

'கருவிகரணங்களோய்ந்த தொண்டர்களிடத்திலே நீ வீற்றிருப்பவன்.' என்றதும்,

'அதுவென்றால் எதுவெனவொன் றடுக்குஞ் சங்கை:
ஆதலினால் அதுவெனலும் அறவே விட்டு
மதுவுண்ட வண்டெனவுஞ் சனக னாதி
மன்னவர்கள் சுகர்முதலோர் வாழ்ந்தா ரென்றும்
பதியிந்த நிலையெனவும் என்னை யாண்ட
படிக்குநிருவி கற்பத்தாற் பரமா னந்தக்
கதிகண்டு கொள்ளவுநின் னருள் கூரிந்தக்
கதியன்றி யுறங்கேன் மேற் கரும்ப பாரேன்.'

என்றதும் உண்மை வாக்கியம்.

இந்நிலையிலிருக்கும் மகான்களின் கிருபை பொருந்திய தலங்கள்:

அகஸ்தியர்-அனந்த சயனம்
கும்பமுனி-கும்பகோணம்.
புலத்தியர்-பாபநாசம். ஆவுடையார் கோவில்.
திருமூலர்-சிதம்பரம்.
திருமூல வர்க்கம்-நெடுங்குன்றம்
திருமூலர் நோக்கம்-மேலைச் சிதம்பரம்
சட்டைமுனி-சீகாழி, ஸ்ரீரங்கம்
கோரக்கர்-திருக்கோண மலை
கருவூரார்-திருக்காளத்தி
பதஞ்சலி-ராமேஸ்வரம்
இராமதேவர்-அழகர் மலை
அழுகண்ணர்-நாகப்பட்டினம்
நாரதர்-திருவிடை மருதூர்
மார்க்கண்டர்-கருவைநல்லூர்
மச்சமுனி-பரங்குன்றம். மயிரேசகம். திருவானைக்காவல்
கொங்கணர்-திருப்பதி. கோடிதுறை. திருக்கணங்குடி
பாம்பாட்டி சித்தர்-திருஞாலம். துவாரகை.
புண்ணாக்கீசர்-நான்கனுசேரம்
காலமா-குற்றால

வரதர்-தென்மலை
கன்னி சித்தர்-பெருங்காலூர்
தன்வந்திரி- வசிட்டர், வைதீசர் கோவில்
போகர்-திருக்கழுக் குன்றம்'
நந்தி விஸ்வாமித்திரர்-காசி. திருவாவடுதுறை காலாங்கி'
கடுவெளிச் சித்தர்—
திருக்காஞ்சிபுரம்
இடைக்காடர். கௌதமர்-திருவருணைசேது,
திருவிடை மருதூர்
கமலமுனி. சந்திரானந்தர்-மதுரை.
சுந்தரர்-ஆரூர்.
வாரிஷு-திருவாஞ்சி,
காலாங்கி-திருக்குடையூர். திருப்பணந்தாள்.
வால்மீகர்— அகப்பேய்ச் சித்தர்.
எட்டிக்குடி- திருவையாறு.
போகநாதர்-பழனி கதிர்காமம்
திருச்செந்தூர்- தணிகை. பரங்குன்றம்.
இவ்வகைகள் போகர் 500ல் கூறப்பட்டிருக்கின்றன.

'போமடா வெளியோடே வெளிதான் சேரும்!
புதமையடா வாயுவொடே வாயு சேரும்:

ஊமடா தீயோடே தீதான் சேரும்:
உத்தமனே அப்புடனே அப்புச் சேரும்;

ஆமடா மண்ணு னே மண்தான் சேரும்:
அவரவர்க ளினத்தோடே அவர்கள் சேர்ந்து

தாமடா தன்னிலையி லறிவை யூக்கிச்
சதானந்த பூரணமா யிருந்து வாழே.'

இருந்தறிவு சுழிமுனையில் புக்க தானல்
ஏகாந்த மானதொரு லிங்க மாகும்;

அருந்தவஞ்சேர் அவ்வறிவு ரவியில் சேர்ந்தால்
அரகரா சத்தியமய மான தெய்வம்

புரிந்தறிவு மதிதனிலே சேர்ந்து நின்றால்
புத்தியில்லாப் பிறவியிலே புகுவான் பாரு;

வருந்திமனக் கனிவாலே குருவைக் காத்து
மதிகதிரில் நின்றகுறி வணங்கிப் பாரே.'

60 நாழிகை கொண்டது ஒரு நாள்: நாழிகை ஒன்றுக்குச் சுவாசம் 360: 60 நாழிகைக்குச் சுவாசம் 21600.

நாள் ஒன்றிற்கு 2 லட்சத்துப் பதினாயிரம் நொடி. நொடி 60 கொண்டது ஒரு விநாடி. 60 விநாடி கொண்டது ஒரு நாழிகை: நாழிகை 60 கொண்டது ஒரு நாள்; 360 நாள் கொண்டது ஒரு வருடம்; 21600 நாழிகை கொண்டது ஒரு வருடம்; 21600ஐ 80-ஆல் பெருக்கக் கிரேதா யுகமாம்; 60-ஆல் பெருக்கத் திரேதா யுகமாம்; 40-ஆல் பெருக்கத் துவாபர யுகமாம்; 20-ஆல் பெருக்கக் கலியுக மொத்த ஆண்டாகும்.

யுகந்தோறும் மகான்கள் பெற்ற தபோ பலத்தால், அரசு சிருஷ்டியாதிகள் நடத்தி வருவதாகக் கூறியிருக்கின்றனர்.

அடியிற் காணும் ஔஷதங்கள் உபயோகப்படுத்தும் போது அறுசுவை, புகையிலை, அபினி, கள், சாராயம், பெண் போகம், மச்ச மாமிசங்கள், கோபம் அதிக நித்திரை நீக்கவும்.

1. மேகநீர் நீங்கிச் சுத்த உதிரம் பெருக: பாலில் வேக வைத்த நெல்லிக்காய்ச் சூரணம் சுத்தி செய்த நெல்லிக்காய்க் கந்தகத் தூள் சமனெடையாகக் கூட்டி, அரை விராகனெடை தேனில் குழைத்து, நாளைக்கு இருவேளையாக ஒரு மண்டலம் கொள்ளவும்.

2. மலச்குற்றம் நீங்க: கடுக்காய் 4, திப்பிலி 1. சுக்கு 1. சீரகம். 1 ஓமம் 1. திப்பிலி மூலம் 1. இந்துப்பு 1. சூரணங்கள் தனித்தனி செய்து. மேலே கண்ட எடைகளாகக் கூட்டி கடிகைச் சூரணம் வெந்நீரில் கொள்ளவும்.

3. அய்யச் சீதம் கழல: வெள்ளைக் காக்கணவேர். கடுக்காய். நெல்லி வற்றல் ஒவ்வொன்றும் புன்னைக்காயளவு 4 பலம் சிற்றாமணக்கு நெய்யில் கலந்து காலையாக 3 நாள் உள்ளுக்குக் கொள்ளவும்.

4. தேகத்திலிருக்கும் சுண்ணாம்பு நீங்க: பச்சை மஞ்சள் சமூலம் 3-1 ஆக வடித்து, பூநீர் சுழஞ்சு அரையும் படிகாரச். சுன்னம் கழஞ்சு அரையும் கூட்டிக் கொள்க. இவ்விதம் 3 நாள் கொள்ளவும்.

6. வாய்வு நீங்க: சுக்கு, மிளகு, திப்பிலி: சீரகம். இந்துப்பு. கரிவேப்பிலைச் சூரணம் வகைக்குப் பலம் ஒன்று பொரித்த காயம் பசுப்பால் கூட்டிக் கடிகைப் பிரமாணம் அன்னத்திலிட்டுப் புசிக்கவும்.

7. தாகம், மயக்கம், சூடு, மூர்ச்சைக்கு: தாசிளிசபத்திரி, சுக்கு. சீரகம் வகைக்குப் பலம் ஒன்றாகக் கியாழம் வடித்துக்கொள்வதாலும், அதிமதுரம், சிறு தேக்கு, பனங்கற்கண்டு கியாழம் வடித்துக்கொள்வதாலும் நீங்கும்.

8. மேகவெட்டை. மூலச்சூடு, காந்தல், பித்தவெறி, கபாலப் பித்தம் தீர: சுத்தி செய்த சீந்திற்கொடிச் சூரணம், கற்கண்டு கூட்டிக் கடிகைப்பிரமாணம், தேனில் ஒரு மண்டலம் கொள்வதாலும், சரந்தைச் சூரணம் 4, சீனி 1 கூட்டிக் கடிகைப்பிரமாணம் 10 நாள் கொள்வதாலும் நீங்கும்.

9. மேகநீரால் சருமத்தில் காணும் வியாதிக்கு: கிழா நெல்லிச் சமூல சூரணம். சீனி, நெய், தேன் கூட்டிப் பாகப்படுத்தித் தான்றிக்காய்ப் பிரமாணம் 6 மாதம் அல்லது ஒரு வருடம் உட்கொண்டு வரக் குட்டவியாதியும் தீரும்

10. கண் துலக்கமாய், நரை வாராதிருக்க: காக்கணம், மேனி. கரந்தை. வல்லாரை. அவுரி, பொற்றலை. பொடுதலைப் பிரமாணம் தேனில் ஒரு மண்டலம் கொள்க.

11. மந்தபுத்தி மதிமயக்கம், சோகை, எரிபித்தம், நீர்க்கட்டு, மலபந்தம், பித்த மூர்ச்சை நீங்க: மேனி, சிறு செருப்படை, கரிசலை சமனெடைச் சூரணம் கூட்டி இவைகளுக்கு 4க்கு கற்கண்டு கூட்டி ஒரு மண்டலம் கொள்க.

12, உதிரத்தில் மேகநீர் நீங்க; திரிகடுகமும் ஓமமும் வறுத்துத் தூளாக்கிப் பனை வெல்லப்பாகில் கிளறி, உதயத்தில் கழற்சிக்காய்ப் பிரமாணம் உட்கொண்டு வரவும்.

கருங்குருவைப் பச்சமுதும் சிறுபயறுங் கூட்டிப் பொங்கி, சர்க்கரை பசும் தேன் ஆவின்பால் மு பழங் கூட்டி உண்பதும் மேல்கண்ட அமுதும் உண் பாலும் கூட்டிப் பொங்கி தேங்காய்த்துருவலும் சர்க்கரையும் கூட்டி சர்க் பதும் முன்னமுதும் துவரைப்பருப்பும் பொங்கித் தேங்காய்த்துருவல்

கரை நெய் கூட்டி உண்பதும், அமுது பொங்கி, ஏலரிசித் தூளும் சர்க்கரையும்கூட்டி உண்பதுமுண்டு. அமுது, சீரகம், சர்க்கரை கூட்டி உண்ணப் பித்த மயக்கந் தீரும்.

கிராம்புக் கியாழத்தில் அமுதிட்டுப் பொங்கி, சர்க்கரை கூட்டி உண்டு வர மூலவியாதி தீரும்

பருத்திக்கொட்டையின் பாலையெடுத்து அமுதிட்டுப்பொங்கிச் சர்க்கரைதேன் கூட்டி உண்டுவர, மேகம் நீங்கித் தாதுக்கள் வலுப்படும்,

பழைய கம்பு அல்லது தினையைப் பசுவின் பாலில் பொங்கிச் சர்க்கரை தேன் கூட்டி உண்டுவர, தசையிலுள்ள பித்த நீர்கள் நீங்கிக் குளிர்ச்சியாகும்.

அமுதும் பயறும் ஆவின்பாலும் பொங்கிக் கருவேப்பிலை, மிளகு சூரணம், அமுரி உப்புக் கூட்டி உண்பதுமுண்டு,

இதில் கண்டவைகளில் தனது சரீரத்தன்மைக்கு ஒற்றுமையானதாகப் பாகப்படுத்திக் கொள்க.

## ஆகாரம் :

உச்சிக்கால போஜனம் செய்து இரவில் ஆவின்பாலை உட்கொண்டு தமது சாதனத்தில் இடைவிடாமலிருப்பவர்கள், சத்துவகுண முடையவர்களாவார்களென்று கர்ப்பநூலில் அனுபவிகள் கண்டிருக்கின்றார்கள்.

கண்டத்தில் கபம் காலனாயிருப்பதால் ஆவின் நெய்யுடன் பொற்றலை ரசம் சமனாகக் கூட்டி ரவியில் வைத்துச் சுண்டிய பிறகு உதியத்தில் பெருவிரலில் கொஞ்சமெடுத்து உண்ணாவில் தேய்த்துவரக் கபங்கள் நீங்கும்.

கபாலக்கொதிப்பும் நேத்திர எரிவும் சூட்டினாலிருந்தால்: ஆவின் பால் படி 8; பொன்னாங்காணி ரசம் படி கூட்டிக் காய்ச்சி இறக்கிக் கீழ் வைத்து ஆறிய பிறகு பிரை மோர் விட்டு மறநாள் மத்திட்டுக் கடைந்தி வெண்ணெயெடுத்து உருக்கி நெய்யாக வடித்து வைத்துக் கொண்டு, பக்ஷத்திற்கொருதரம் சிரசில் தேய்த்து ஸ்நானஞ் செய்து வரக்குணமாகும்.

/ பஞ்ச கர்ப்ப ஸ்நானம்: நெல்லிப் பருப்பு, வேப்பம் பருப்பு, மிளகு கஸ்தூரி மஞ்சள் கடுக்காய் இவ்வைந்தும் பசும் பாலிலரைத்து சற்றுக் கொதிப்பித்து சிரத்தில் தேய்ந்து ஸ்நானஞ் செய்து வர வேண்டும்.

சிலர் அம்பாள் பூசை செய்வதாக மது மாமிசாதிகளைப் படைத்து, அவற்றைத் தாங்களுண்டு சுபாவகுணத்தையும் போக்கிப் போதைமயக்கத்தில் ஆழ்ந்துவர்.

'மதுவுண்டா நாங்களெல்லாம் ஞானிகளாவோம்? ஆத்தாளுக்கென் செய்யும் கள்ளும் கள்ளும்?' என்று தவசிகாமணிகள் கூறியிருக்கின்றார்கள்.

'மூக்கா லுணவன்றி யெத்தேசி கட்கு முழுவுணவில்
அக்கா ரணமன்ன சாகாதி கூடி யரையதிர் பால்
சிக்க வமுதம் புகக்கிரங் காலுண்டிச் சேடம்வெளி
வைக்கா விடிலுண்டி வேகா தனலும் வளியுமன்றே?"

உண்ட மறுநாள் திப்பி நீங்கி அன்னரசமாம்: 3-ஆம் நாள் உதிரமாகும்: 4-ஆம் நாள் மாமிசமாகும்; 5-6 ஆம் நாள் மேதையாகும்; 7-8-ஆம் நாள் மச்சையாகும்: இதற்கு மேல் இந்திரியமாகுமென வைத்திய நூலில் கண்டிருந்தாலும், ஐரோப்பியப் பண்டிதர் கிரமமாகக் குறிப்பிட்டிருப்பதைப் பார்க்க உண்மை தெரியவரும்.

கைந்நாடித் துடிப்பு: 8 துடித்தால், 2 தரம் சுவாசம் நடக்கும்; குழந்தைகளுக்கு நாடி 120 துடித்தால், சுவாசம். 814 நடக்கும். இதில் பேதமாக நடக்கில் நுரையீரலிலும் இரத்தாசயத்திலும் வியாதியாகும்.

நாடித் துடிப்புக்குக் காரணம்: இரத்தாசயத்திலிருந்து ரத்த நரம்புகளின் வழியாய் உதிரம் ஓடி வரும்போது உண்டாகும் அதிர்ச்சியே நாடியெனக் கூறப்படும் துருத்தி விரிந்து குவிதல் போல், இரத்தாசயப்பை விரிந்து நுரையீரலிலிருந்து சுத்தமான இரத்தத்தையுட்கொண்டு, திடீரெனச் சுருங்குவதனாலே. அதனுள்ளிருக்கும் இரத்தம் விரைவாக இரத்த நரம்புகள் வழியாய்ச் சென்று தேகமெங்கும் வியாபிக்கும்.

சரீர உள்ளுறுப்புகளில் விவரத்தை ஆயுர் வேதச் சுருக்கம் என்னும் வைத்திய கிரந்தத்தில் விரிவாய்க் காணலாகும்.

'திலமத் தனையே சிவஞானிக் கீந்தால்
பலமுத்தி சித்தி பரபோக மூந்தரும்;
நிலமத் தனை பொன்னை நின்மூடர்க் கீந்தால்
பலமுமற் றேபர போகமுங் குன்றுமே.'

'உள்ளத்தி லுள்ளே யுளபல தீர்த்தங்கள்
மெள்ளக் குடைந்து நின் றாடார் வினைகெடப்
பள்ளமும் மேடும் பரந்து திரிவரே
கள்ள மனமுடைக் கல்வியி லோரே."

'உள்ளத் துள்ளே யுணரு மொருவனைக்
கள்ளத்தி னுருங் கலந்தறி வாரில்லை;
வெள்ளத்தை நாடி விடுமவர் தீவினைப்
பள்ளத்தி லிட்டதோர் பத்தலுள் ளாமே.'

'மனத்தி லெழுந்ததோர் மாயக்கண்ணாடி
நினைப்பின் அதனின் நிழலையுங் காணார்
வினைப்பயன் போக விளக்கியுங்கொள்ளார்
புறக்கடை யிச்சித்துப் போகின்ற வாறே.'

'உடலில் துவக்கிய வேடம் உயிர்க்காகா;
உடலில்கழன் றால்வேட முடனே கழறும்;
உடலுயி ருண்மையென் றோர்ந்து கொள்ளாதார்
கடலி லகப்பட்ட கட்டையொத் தாரே.'

'குருட்டினை நீக்குங் குருவினைக் கொள்ளார்
குருட்டினை நீக்காக் குருவினைக் கொள்வர்;
குருடுங் குருடுங் குருட்டாட்டமாடிக்
குருடுங் குருடுங் குழிவிழு மாறே.'

'தொழிலறி வாளர் சுருதிகண் ணாகப்
பழுதறி யாத பரம குருவை
வழியறி வார்நல் வழியறி வாளர்
அழிவறி வார்மற்றை யல்லா தவரே.'

'உள்ளம் பெருங்கோயி லூனுடம் பாலயம்,
வள்ளற் பிரானார்க்கு வாய்கோ புரவாசல்
தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம்;
கள்ளப் புலனைந்துங் காளா மணிவிளக்கே.'

—[திருமந்திரம்;]

புலஸ்தியர் 100-ல் பதினான்கு சீர்விருத்தம்

'காணுமுச் சடக்கி விழியது முருட்டிக் கபாலமுந் திறந்தனர் கோடி;
கனத்தவாய் வதனால் குன்மநோய் அணுகிக் கலங்கின
ரவரொரு கோடி;

தோணுமெய் மறந்து கழன்றட னெழும்பிச்
சொக்கினா ரவரொரு கோடி;
சூலைவாய் வணுகிச் சுவாலையு மெழும்பிச் சுரமதா லிறந்தனர் கோடி;
ஊனைவுண் ணாக்கண் ணாக்கையுள் தூக்கி டிள்ளடங் கினர்களுங் கோடி;
உயரசா ணிள முழுவது மெழும்பி ஓங்கியே ஓடுங்கினோர் கோடி:
பேணதி சாரப் பேதிவந் தணுகிப் பிறவியு மிழந்தனர் கோடி;
பெருமையாய்க் காப்ப சாதனை யறியாப் பிராணனு
மழிந்துமாண் டனரே.'
இனமறி யாம விருத்தியே வாய்வை இறந்தன ரவரொரு கோடி;
இனியதம் பனஞ்செய் தெழும்பியே கும்பித் தேங்கின
ரவரொரு கோடி
கனமறி யாமல் கரத்தைவா யுவினால் கருதியே யிறந்தனர் கோடி:
கண்டுவா சியினி லொன்றைவிட் டொன்று கலங்கியே மடிந்தனர்
கோடி;
தினமொரு நாழி வாசிகொண் டிழுத்துச் சிவபுர மேகினோர் கோடி;
தெளிந்திடு கண்மூக் கெனுமதைப் போற்றிச் சிறந்தன
ரவரொரு கோடி;

தன்பெரு விரலா லண்ணுக்கை யேற்றித் தயங்கின ரவரொரு கோடி:
சலமதில் மூழ்கிச் சாதலை யதீதச் சாக்காடு வந் தெய்தினா ரறிந்தே

அறிவதிவ் வாறின் கருத்தினை யம்ம அவனியின் மாந்தருட் சிலபேர்
அம்புவி தனிலே மறையவுங் குறிசெய் ததனிலும் பதுங்கினார்
கோடி;

சரிந்திடு கதலி வாழையின் குலைபோல் தக்களித் தனவவை போலும்;
தயங்கின ரனேகர் சாகர மதனில் தாம்விழுந் தலைவது போலும்;

தரணியிற் சிலபேர் தாமரை யிலைதண் ணீரெனத் தவித்தன ரப்பா!
பாருல கதீதம் தேடியும் குருவின் பதமடை யாமலும் மாண்டார்;

தெரிந்துமிப் பரிசே யுத்தம ரனேகர் தெளிந்தவ ரறிந்துமே
செப்பச்
சீறறிடும் வாசி யோகத்தின் பெருமை திருத்தமா யுரைத்திட லாமே.'

வாசியோ கத்தின் மகத்துவ முரைக்க வருக்கரே சகத்தின் திறப்பை
மாத்திரை முப்பத் திரண்டுமே வளமாய் மாறவு மதனை நீ ரையா

வீசுபூ ரகத்தில் அறுபத்து நாலு விளங்கியே மாறிமா றிடவும்
விகற்பம்வந் தணுகா வாசிநின் றுலவு மேகுறி திறவுகோ லறிதல்

பாசம்வந் தணுகா கும்பக மதில்பதி னாறென அறிந்துமே தீரு;
பழக்கமி தாகு மகத்துக ளுரைக்கும் பரிபூர ணானந்த தீட்சை

பூசித மாகும் வாசிதான் வசியம் பொருந்திடுங் கால்தலை மாறி;
புனல்சொரிந் திடவும் சுழியது நாடிப் புகலவும் சூட்சமி தாமே;

'நாடிடு மினிகேள் மாராச யோகம் நாட்டுவேன் வயிராக்ய ஞானம்;
நடத்தையென் றறிய வாசியோ கத்தின் நற்குறி விளக்கவும் நடத்தைத்

தேடுபூ ரகத்தில் முப்பத் திரண்டு சிவசிவா ரேசகம் பதினாறு
தெளிந்தகும் பகத்தில் அறுபத்துநாலு திருத்தமாய்த்
தீருமிவ் விதமாய்க்

கோடுதப் பாமல் சுழுமுனை மேவிக் குறித்திரு கண்ணதின் கூறு
கும்பியும் வாசி யொளியது வீசும் குறிப்பதா மொளியினில் கூடக்

கூடுமே யிதுதான் மாராச யோகங் கொண்டுமாத் திரைக்கொரு
தீட்சை
கோருமே யிதுபார் தலைசுற்றி நொடிக்கக் குறித்தொன்று
மாச்சுதிவ் வாறே.'

[திருமூலர் 3000-ல் தரவு கொச்சகம்]

'ஏறுதல் பூரக மீரெட்டு வாமத்தால்
ஆறுதல் கும்பக மறுபத்து நாலதில்
ஊறுதல் முப்பத்தி ரண்டதி ரேசகம்
மாறுத லொன்றின் கண் வஞ்சக மாமே.'

'வளியினை வாங்கி வயத்தி லடக்கில்
பளிங்கொத்துக் காயம் பழுக்கினும்
பிஞ்சாம்;
தெளியக் குருவின் திருவருள் பெற்றால்
வளியினும் வேட்டு வளியனு
மாமே.'

'எங்கே யிருக்கினும் பூரி யிடத்திலே
அங்கே யதுசெய்ய ஆக்கைக் கழிவில்லை;
அங்கே பிடித்தது விட்டள வுஞ்செல்லச்
சங்கே குறிக்கத் தலைவனு மாமே.'

'ஏற்றி யிறக்கி யிருகாலும் பூரிக்குங்
காற்றைப் பிடிக்குங் கணக்கறி வாரில்லை;
காற்றைப் பிடிக்குங் கணக்கறி
வாளர்க்குக்
கூற்றை யுதைக்குங் குறிபது வாமே.'

'மேல்கீழ் நடுப்பக்க மிக்குறப் பூரித்துப்
பாலா மிரேசகத் தாலுட பதிவித்து
மாலாகி யுநதியுட் கும்பித்து வாங்கவே
ஆலால முண்டா னருள்பெற லாமே.'

'வாமத்தி லீரெட்டு மாத்திரை பூரித்தே
ஏமுற்ற முப்பத் திரண்டு மிரேசித்துக்
காமுற்ற பிங்கலைக் கண்ணாக இவ்விரண்
டோமத்தா லெட்டெட்டுக் கும்பிக்க
வுண்மையே.'

இட்டதவ் வீடிள காதிரே சித்துப்
புட்டிப் படத்தச நாடியும் பூரித்துக்
கொட்டிப் பிராணன் அபான னுங்
கும்பித்து
நட்ட மிருக்க நமனில்லைத் தானே.

அண்டங்க ளேழு மகண்டமு மாவியுங்
கொண்ட சராசர முற்றுங் குணங்களும்
பண்டை மறையும் படைப்பளிப்
பாதியுங்
கண்ட சிவனுமென் கண்ணன்றி
யில்லையே.

'பெண்ணல்ல ஆணல்ல பேடல்ல
மூடத்துள்
உண்ணின்ற சோதி யொருவர்க்க
றியொண்ணாத
கண்ணின்றிக் காணுஞ் செவியின்றிக்
கேட்டிடும்
அண்ணல் பெருமையை யாய்ந்தது
மூப்பே!'





## நூல்: முப்பத்தைந்து

# பட்டினத்தார் ஞானம்

(பட்டினத்தாரின் பெயரில் வேறு ஒருவர் இதனைப் பாடியிருக்கலாமெனச் சிலர் கருதுகின்றனர்)

நேரிசை வெண்பா

**காப்பு:**

நண்பான நெஞ்சுக்கே ஞானத்தால் நல்லபுத்தி
வெண்பாவாய் நூறும் விளம்பவே—பண்பாக்
ககனப் பதமுறவக் கன்ம மருகக்
ககனகதிர் வேல்முருகன் காப்பு.

நெஞ்சுடனே தாப்புலம்பி நீலநிறத் தாளின்ற 1
குஞ்சரத்தை யாதரித்துக் கும்பிட்டால்—நஞ்சமுடன்
காமமுதல்; மும்மலத்தின் கட்டறுத்து ஞானமுடன்
பூமிதனில் வாழ்வரெப்போ தும்.

எப்போ திறைவன் எழுத்தைவிட்டுத் தப்புவோம்? 2
எப்போ தெழுத்திரண்டை ஏத்துவோம்?—எப்போது
காமன் வலையறுப்போம்? காரொளியைக் கண்டு நெஞ்சே!
ஏமன் வலையறுப்ப தென்று?

என்றும் பயமறவே ஈரெழுத்தும் ஓரெழுத்தாய் 3
நின்றசிவ லிங்கத்தை நெஞ்சே! கேள்;—உண்டுறங்கித்
தேசமெல்லாம் நின்றசைந்த தீயெழுத்தே லிங்கங்காண்
ஆசைவிந்தே ஆவுடை யாள்.

ஆவுடையா ளோடிருந்தேன் அருளானந் தம்பெறவே 4
கோவுடையாள் நின்றதினங் கூடியே—பூவுடையாள்
கட்டழுகி யைத்தான் கடந்து பெருவெளியில்
இட்டமுடன் நெஞ்சே! இரு.

இருவினைக்கு ளாகாதே என்னுடைமை எண்ணாதே 5
பெருந்தசினங் கொண்டுபினற் றூதே—மருவுமலக்
கள்ளமெல்லாம் விட்டுங் கரைந்துருகி
உள்ளுணர்ந்து நெஞ்சேபார் ஒன்று.

ஒன்றும் அறியாதே ஓடி அலையாதே 6
சென்று மயங்கித் திரியாதே—நின்ற
நிலைபிரியா தேநெடிய நெஞ்சே! கொடிய
புலைவினையு மாற்றும் பொருள்.

பொருளுடைமை நம்பாதே பொய்வாழ்வை நத்தி 7
இருளுறவை நம்பி இராதே—பொருளுறவு
கொண்டறிவி னாலே குறித்து வெளியதனைக்
கண்டுபிடித் தேறுநெஞ்சே! காற்று.

காற்றுடனே சேர்ந்து கனலுருவைக் கண்டவழி 8
மாற்றி யினிப்பிறக்க வாராதே—ஏற்றபடி
ஓடி அலையாதே ஓங்காரத் துள்ளொளியை
நாடியிருப் போம்மனமே! நாம்.

நானென தென்றுவினை நாடி அலையாதே 9
தானவனே யென்று தரியாய்நீ;—ஏன் மனமே!
வீணவல் கொள்ளாதே மேலாம் பழம்பொருளைக்
காணவல் கொள்ளாய் கருத்து.

கருத்தவே றாகாதே கண்டிடத்தோ டாதே 10
விரித்தப் பலவேடம் மேவாப்—பெருத்தவொரு
சஞ்சலத்தை விட்டுச் சலமறிந்து காண் மனமே!
அஞ்செழுத் தாலொன் பது.

ஒன்பதுவாய்க் கூட்டை யுறுதியென்று நம்பாதே 11
ஐப்புல னேயென் றணுகாதே—இன்பமுடன்
சிற்பரத்தி னுள்ளே தெளிந்தபர மானந்தத்
துட்பொருளே மெய்யென் றுணர்.

மெய்யுணர்ந்த பாரா விரிந்தகன்று போகாதே, 12
அய்யன் திருவிளையாட் டாநெஞ்சே!—செய்யதோர்;
ஆணெழுத்தும் பெண்ணெழுத்து மாகி நடுநின்ற
காணும் பொருளுரைக்குங் கல்.

கல்லான நெஞ்சே! கவலைக் கருத்தாகிப் 13
பொல்லாப் பவக்கடலில் போகாதே—எல்லாம்
சலக்குமிழி யென்றுநினை; செம்பொனம்ப லத்தைக்
கலக்கமறப் பார்த்தே கரை.

கரைதெரியா இன்பக்-கடலில் மூழ் காதே 14
வரைகடந்த வாழ்வை நத் தாதே—உரையிறந்த
ஓசைவிந்து வேமனமே! உற்றசபை யாலறிந்து
நேசமுள்ள பாக்கியத்தி னில்

பாக்கியத்தைக் கண்டு பரிந்து மகிழாதே 15
தாக்குமிடி வந்தால் சலியாதே—நோக்குமே
ஒருத்தன் றிருவிளையாட் டென்றுணரு நெஞ்சே!
கருத்தாலே நின்று கருது.

கருதாதே மங்கையர்கள் காமவலைக் கேங்கி 16
உருகாதே நெஞ்சே! ஒருவன்—இருகாலைக்
காத்தயர்ந்து சேர்த்துக் கனலைக்கண் காட்டினகண்
போற்றிப்பார் ஒத்தநல்ல பொன்.

பொன்னுசை மண்ணுசை பூங்குழலா ராசையெனச் 17
சொன்னுசை யென்றறிந்து சோராதே—எந்நாளும்
ஈசன் அமைத்தாங் கிருக்குங்கா ணிம்மூன்றும்
பாசமது நெஞ்சே பரிந்து.

பரிந்து திரியாதே பார்வினைக்கஞ் சாதே 18
அறிந்தருகிச் சிந்தித் தலையேல்—வருந்தி
நடந்தசித்ர நாடியிலே நாதமறி நெஞ்சே!
உடைந்திடு முன்னே உடம்பு.

உடம்பழிந்த பின்மனமே! ஒன்றுங் கிடையா 19
துடம்பழியு முக்கண் டுணரா—துடம்பிற்
கருநிறத்தைச் சேர்ந்து கருமலைச்சிற் றற்றுப்
பருகு கலைமதியப் பால்.

பாலிருக்கும் தோல்தனத்தைப் பாராதே மங்கையர்கள் 20
காலிடுக்கை நத்திக் கரையாதே—கோலெடுத்து
வீர மரலி வருமுன் வினையறுக்கும்
பாரவழி யின்னருளைப் பார்.

பார்த்தவிட மெல்லாம் பரமென் றிருமனமே 21
காற்றனல்மண் நீர்வெளியாம் கண்டவெல்லாம்—மாத்திரண்ட
ஐம்புலனு நில்லா ஆசைகளும் நில்லாவே
என்புடலும் நில்லா தினி.

இனியசுகம் ஐம்புலனென் றெண்ணுதே நெஞ்சே 22
இனிய சுகமற வாதே-இனியசுகம்
கண்டதெல்லா மெவ்வுலகு காணுத இவ்வுலகில்
நின்றதோ நில்லாத தோ?

நில்லாமல் ஓடுகின்ற நெஞ்சே! நிலையில்லா 23
எல்லாம் பகையா யிருக்குங்காண்—பொல்லாக்
கருமுகிலை வேரறுத்த தன்ம வினை யானல்
திருக்கறுக்க வேண்டுந் தினம்.

தினந்தினைப்போ தாகிலுந்தான் தீதறநில் லாமல் 24
இனம்பிரிந்த மான்போல் இருந்தாய்—தினந்திகழும்
ஓங்காரத் துள்ளொளியை யுற்றுணர்ந்து நீமனமே!
ஆங்கார அச்சம் அறு.

அச்சத்தால் ஐம்புலனும் ஆங்காரத் தால்மெய்ந்த 25
கச்சத்தா னிச்சயமாய்க் கள்ளதோ—மெச்சத்தான்
அண்டமெல்லாம் ஊடுருவ ஆகாச முங்கடந்து
நின்ற நிலைதான் நிலை.

நிலையறிந்து நில்லாமல் நீபாவி நெஞ்சே 26
அலைமதிபோ லேதினமு மானாய்;—கலையறிந்து
மாரனையுங் கூற்றினையும்மா புரத்தை யும்புகைத்த
வீரனைத் தேட விரும்பு.

விரும்பித் தனித்தனியே மெய்யுணரா தேமாய் 27
இரும்புண்ட நீர்போல ஏகும்—கரும்பதனைத்
தின்றாலல் லோதெரியும் நெஞ்சே! நின் ஐம்புலனை
வென்றாலல் லோவெளிச்ச மாய்?

வெளிச்சமில்லா வீடே விளக்கேற் றினதாக் 28
களிசிறந்து நின்றதைக்கா நெஞ்சே!—வெளிச்சமற,
தொண்ணூற் றறுதத் துவமொன்றாய்த் தோன்றுங்காண்
எண்ணிலவை காணா திருட்டு.

இருட்டனைய மாய்கையா லெவ்வுலகுந் தாய 29
பொட்டனையே மூடைம் புலனால்—திருட்டுமன
வண்டருடன் கூடாதே வாழ்மனமே! நாமிருவோம்
கண்டுகொள்வோம் காணா தது.

காணா ததைக்கண்டால் கண்டதெல்லாங் காணாது 30
வீணாவல் கொண்டுள் மெலியாதே—நாணாதே
இந்திரியத் தோடு மிணங்காதே பாவி நெஞ்சே!
செஞ்சொல் மறை அக்கரத்தைத் தேடு.

தேடினா லைந்துதிரு வக்கரத்தைச் சென்றுவெளி 31
நாடினால் நெஞ்சே! நலம்பெறலாம்;—வாடியே
பொல்லாப் புவிகாணப் போகமதை நம்பாதே!
எல்லாம் வெயில் மஞ்ச ளே.

மஞ்சனைய கூந்தல் மடவாரைக் கண்டுருகும் 32
பஞ்சமல நெஞ்சே! பகரக்கேள்;—மஞ்சள்
மயங்காணும் இந்தவுடல் மாயவரும் வெல்லாம்
[illegible] திரம்.

33

சூத்திரத்தா லாடும் சுழுமுனையைத் தான்திறந்து
பார்த்திருந்தால் வாராது பாவமெலாம்;—சூத்திரத்தைப்
பாராம லேயிருந்து பாவிமன மேபிறக்க
வாராம லேயிருக்க வா!

34

வாசி தனைப்பிடித்து வன்கனலோ டேசேர்த்துச்
சீசி யெனவே திரியாமல்—மாசி
இருளா னதைச்சேர்ந் திருந்தாயே நெஞ்சே!
பொருளா னதைமறந்துபோட்டு!

35

போட்டுவிக்கும் பொல்லாப் புழுச்சொரியும் நாய்விடக்கே.
கூட்டங் குலைந்து குலைந்திடுமுன்—காட்டிடிற்
தாழ்வுறாய் நெஞ்சே! தராதர மாயெங்கும்
மூழ்வா னதையுயிர்போம் முன்.

36

முன்னே யமனெழுதும் மூன்றுவினை கண்டுமுன்று
பின்னுந் தெரியலையே பேய்மனமே!—தன்னை
அறியா திருந்தால் அவனறி வானோ!
குறியான புத்தியென்றே கொள்.

37

கொள்ளைக்குட் பட்டுக் குடிகேட ரோடிருந்து
கள்ளக் கருத்தால் கருதாதே—மெள்ள மெள்ள
ஆய்ந்தாய்ந்து பார்த்துநீ ஆறுறுக் கப்பாலே
தேர்ந்தாய்ந்து பார்த்துத் தெளி.

38

தெளிந்தநீர் பட்டமுதம் சேர்ந்தால் தெளியா
தெளிந்தநீர் காட்டா தவைபோல்—தெளிந்தால்
சகல பொருள்தோற்றும் தாழ்வுறு தோன்றும்
பகலிரவில் லாத பதி

39

பதிபசுபா சங்களையும் பற்றி யுறவப்
பதிதனிலே தங்கிப் பலரும்—கதிபெறவே
வீணாமோ நெஞ்சேகேள் வேதாந்தத் துட்பொருளைக்
காணுமலாமோ கணக்கு?

40

கணக்கறியா மாயக் கருவிகாணு திப்
பிணக்கறியா மற்பேதை நெஞ்சே!—இணக்கம்
அறிந்திணங்க வேண்டும் அருள்வெளியி னுள்ளே
செறிந்தவிந்து நாதத்தைச் சேர்.

41

சேராதே மாய்கைதனை; சேர்ந்து கருக்குழியைப்
பாராதே நெஞ்சே! பதையாதே;—சீரான
சித்திரத்தைப் பார்த்துத் தினமனமே சித்திரத்தில்
சித்திரத்தைக் கொள்ளா யுகந்து.

உகந்தது நெஞ்சமே! ஓரெழுத்தி னாலே
அகந்தனையே சுத்தி பண்ணி யாய்ந்து—முகந்து 42
குடியாம லாமோ? குலவுமல மான
மிடியா னது தீர வேண்டு.

வேண்டுந் திரவியமும் மேலுடர்ந்த பள்ளியெல்லாம்
ஆண்ட திரைநாடு மம்பலமும்—மாண்டுபெரும் 43
காடுயர்ந்தா ரேமனமே! கண்டாயோ மாயனயன்
தேடரிய ஈசன் செயல்.

செயபாகா நெஞ்சே! திருட்டுமலக் கோட்டைப்
பயமறவே வெட்டிப் பரப்பி—நயமான 44
வாசியினல் சுட்டு பதிமயங்கக் கண்டிருப்போம்
பேசியநாம் பேசாம லே

பேசாத ஞானப் பெருமைக் கிடப்பதுதான்
ஆசாபா சங்களில்லா தார்க்கல்லோ?—கூசாமல் 45
தேசமெல்லாம் ஓடித் திரிகின்ற யேமனமே!
ஆசாபா சங்களும்நீ யாய்,

பாசங் களைந்து பதியி லிருந்துகொண்டு
பேசரிய காலைப் பிடித்திருக்க—நேசமுடன் 46
நாமிருவ ருங்கூடி நாதாந்த ஞானத்தைத்
தாமொருவ ளுய்ருக்கத் தங்கு.

தங்கு நெடுவலையில் சாலங் களுங்கடந்து
எங்குதான் ஞளுயிருக்காமல்—மங்கு 47
கருவானாய் நெஞ்சே! கரிக்கால தூதன்
வருவானே யென்ன வகை?

என்னவகை செய்தோம் எமதூதன் வந்தக்கால்
பின்னையென ஓட்டானே பேய்நெஞ்சே!—சொன்ன 48
படியேகேள் தூதன் பரிந்துவரு முன்னே
அடிதேடிக் கொண்டே அமர்.

அமரும் மனம்புத்தி யாங்கார மேசித்
தமரும் பொழுதவே ஞானேர்—அமரும் 49
கோவென் றுரைத்தநமன் கொண்டுபோம் போதறிவு
வாவென்றால் நெஞ்சேவா ராது.

வாராது நெஞ்சே! மயக்கம் வருமுன்னே
வேரா னதைப்பிடித்து மேலேறிட்—பாராமல் 50
பொய்யிலே நில்ல தேபுத்திகெடா தேயிருந்தால்
மெய்யிலே நின்றறிவோம் மெய்.

மெய்யாறு வீடுகளாய் மேலாம் படைவீடாய் 51
ஐயாறு மாறும் அறுபதாய்—மெய்யாகக்
கண்டதெல்லாம் நான்காண்; காணாத தைத்தேடிக்
கண்டுருகி நெஞ்சே கனி.

கனியருந்த மாட்டாமல் காயருந்து கின்றாய் 52
கனிருசி போலாகுமோ காய்தான்?—இனியதுகேள்;
நானும்நீ யுங்கனிகாண்; நடுவிருந் தேருசிகாண்:
தேனும்பா லும்போல் சிவன்.

சிவதலங்க ளைத்தேடிச் சிலெழுத்த றுத்துச் 53
சிவதலங்க ளைத்தேடிச் சேரா—தவதவங்கள்
பண்ணாதே நெஞ்சே கேள்; பாரவினை வந்தக்கால்
எண்ணாதே அஞ்சியேங்கா தே.

ஏங்காதே நெஞ்சே! கேள்: எவ்வினைகள் வந்தாலும் 54
ஏங்காதே சற்றும் இளைக்காதே;—தாங்காமல்
கொண்டவனும் செத்தவனும் கூட்டத்தா னும்வந்தான்
இன்றுகுறித் தன்மையிதென் றெண்.

எண்ணரிய நெஞ்சே! இனியநற் பாலதனை 55
அன்னந்தண் ணீர்நீக்கி யேடருந்து—தன்மைபோல்
துன்பங் களைந்து தூயவெளி யூடுருவாய்
இன்பங் களைச்சேர்ந் திரு.

சேர்ந்திருவோ ரும்பாலும் தேனும்போ லேகலந்து 56
வார்ந்ததிலே யுள்ளுரிசி வாங்காமல்—போங்காலம்
வைத்தமறக் காலன் வருவானே வந்தக்கால்
ஏய்த்திடுவா னெஞ்சே! எவன்?

எவனிருந்து நெஞ்சே! எதிர்ப்பாரு முண்டோ 57
கவனமற நின்று கருதின்—புவனமெல்லாம்
வித்துயிரெல் லாங்சமூண்டு விண்ணுடைந்த தேமனமே!
மற்றுடலே யுண்கிறதே மண்.

மண்ணெழுந்தும் நீரெழுந்தும் வாய்வெழுந்தந் தீயெழுந்தும் 58
விண்ணெழுந்தங் கூடியொரு வீடாகி—நண்ணரிய
மாயமெல்லா முண்டாக்கி வைத்தான்காண் நெஞ்சே! இச்
காயமெல்லாம் நானுக் கரு.

கருவழிந்தால் வித்தையில்லாக் காரணம்போல் நெஞ்சே! 59
கருவழிந்தெல் லாம்கண்ட தெல்லாம்—கருதித்
திரியாதே நெஞ்சே! சிவன் செயலே யல்லால்
மரியாதில் வாதக்கால் வந்தி.

வந்ததுவும் நாதாந்த வாசனைக்கண் டேவணங்கித் 60
தந்திரமாய்ச சென்று தரியாமல்—அந்தரத்தில்
விட்டபட்டம் போலலைந்து வெவ் வினையி னுல்மனமே!
தட்டுகெட்டுப் போகாதே தான்.

தானந் தவமுயற்சி தாளாண்மை யோடுநெஞ்சே! 61
வானம் பிளந்து வழிகூடின்—நானுமதில்
நீயு மொருநிழலில் நின்றங் கிளைப்பாறித்
தோயுமதி தானே தொடங்கு!

தொடங்கு வினையறுத்துச் சுற்றமெலா நீத்தே 62
அடங்கு மிடத்திலடங் காமல்—கிடந்து
பருந்தெடுத்த குஞ்சாய்ப் பதைத்தாய் மனமே!
அருஞ்சரத் தம்மதனடி.

மதனசரத் தால்மனமே! வையம் மயங்கி 63
விதனத் துறல்லால்வே றில்லை—மதனுலே
தத்துச் சுகத்தைநத்தித் தானலைய வேண்டாகாண்
மெத்த சுகத்தை வெறுத்து.

வெறுத்துவெருக் கொண்டதுபோ ல்வீணிலே நெஞ்சே! 64
பொறுத்த மயக்கிற்போ காதே—குறித்தெடுத்துத்
தேடியே வாசிதனைச் சேர்ந்து கலந்தபொருள்
கூடினு லாமே குணம்.

குணங்கள் பலவிதமாய்க் கொள்ளாதே நெஞ்சே! 65
வணங்குங் குணமாக வந்து—வணங்கியே
மண்டலமெ லாங்கடந்து மாவீட்டை நீதிறந்து
கண்டெடுத்துக் கொள்வாய் கனம்.

கன தனத்து மாதர் கழிகாதல் கொண்டே 66
வினையார் நகைக்குருக வேண்டா—தினமனமே
சோதித்தா னல்லால் சுபகாரி யமாகப்
போதித்தால் கொள்விலையோ புத்தி?

புத்திதரும் வித்தைதரும் பொல்லாப்பில் லாமல்நெஞ்சே! 67
சித்திமுத்தி பேரின்பம் சேர்ந்திடலாம்:—நித்தநித்தம்
தானநத மானவொரு சற்குருவோ டேபழகி
ஆனந்த முண்டிருந்தக் கால்.

காலவழிச் சென்று கருப்பைக் குழிக்குக்கீழ் 68
மூலமற்ற நல்வழியே மூழ்கின்ற—மாலை
இருட்டறுத்துப் போடாமல் என்பாவி நெஞ்சே
திருட்டுவித்தை செய்கிறாய் சென்று

69
சென்று சிவனடியில் சேர்ந்த பெரும்பாம்பு
ஒன்றுமிகவாசியைத்தான் ஓட்டாமல்—நன்ருய்
நிலையாக நில்லா தலைவாய் மனமே!
அலைவாயி னில்துரும்ப தாய்.

70
தாய்தந்தை பெண்டுபிள்ளை தானென் றிரங்கி நித்தம்
காய்பறிக்கி ருயே கனியிருக்க!—தாய்தந்தை
எத்தனைபேர் பெற்ருரோ எல்மனமே! நாமுந்தான்
எத்தனைபேரைப்பெற்றேரும் இங்கு?

71
இங்குமங்கு மாய்மனமே! ஈடழிய வேண்டாகாண்;
அங்கம் பொருளா அறிந்துகொண்—டெங்கெங்கும்
நாமே சிவமாக நாடினுல் ஞானமொழி
தாமே அருளைத் தரும்.

72
அருளில்லா தார்க்கும் அருளறிவங் காமோ?
அருளறிவு தானே ஆனந்தம்?—அருளறிவு
தேடுவதுங் கூடுவதும் சிந்தையானந்தமுடன்
நாடுவதுந் தானறிவி ஞல்.

73
நாடிலெழுத் தாறும் நடுவெழுத் தீரைந்தும்
ஓடி ஞெருபதினு லாகுமே—ஓடாய் நீ
ஓரெழுத்தைக் கண்டுறங்கி உன்னை டுறங்கிநெஞ்சே,
ஓரெழுத்தி லேசென் றுரை

74
உறைகலத்தி னுய்போலே உள்ளமல மெல்லாம்
அறுத்தடைந்து நெஞ்சே அறதி—நிறைத்துப்
புளியம் பழத்தோடு போலிருக்க வேண்டும்
களிடமியும் காலத்துக் கே.

75
காலங் கழித்துக் கடைவாயில் பாலுறுமுன்
வேலங் கனைய விழிமடவார்—ஏலக்
குழியில்வைத்து மாரடித்துக் கூப்பிடுமுன் மாய்கைக்
கழியெடுத்துப் போடுமுன்கண் ணுல்.

76
கண்ணுலே ஞானம் கருதாமல் நெஞ்சே! நீ
எண்ணுத மாய்கையெல்லா மெண ணுகிருய்—நண்ணுப்கேள்
பார்க்கவேண் டுந்தனையும் பத்தரைமாற் றுத்தங்கம்
ஆக்கப்போ காதோ உன் னுல்?

77
உன்னுலே நெஞ்சமே! ஊழ்வினை வந்தாலும்
எந்நாளும் பாம்பின்வாய்த் தேரைபோல—முன்னுல்
அப்பிட்டுப் போகாதே ஆனந்த மெய்விளக்கு
நம்பி [illegible]

நம்பினுன் றன்னை நடுவணையி லேயிருந்து 78
குப்பிடா தார்க்குங் குறையுண்டோ?—நம்பிப்
பளிங்கொளிட போல் நெஞ்சே! பரந்திடலா மெங்கும்
விளங்கனலோ டேசேருமே.

ஏமன்வரு முன்நெஞ்சே எவ்வினையு மேவென்று 79
சாம நடுவதனில் சார்ந்ததிலே-சேமமுடன்
காலனையும் வென்றுசில காமனையும் வென்றுபின்பு
பாலிக்க லாமது நாம் பார்.

பாரயனும் மாலும் பரவவரு ருத்திரனும் 80
காரணைய வாரணத்தைக் கான்கண்டு—சீராய
நக்கத் திடைநடுவே நற்ககனப் பொற்பதியில்
சொற்கனகத் தற்பதியில் தோன்று.

தோன்றுமே யெல்லாச் சுகமுற் றதில்மனமே! 81
தோன்றுமே ஆனந்தச் சுந்தரர்பின்—தோன்றும்
அட்சரச்சு ருக்கினெடு மக்கரப்பெ ருக்கமுடன்
உச்சரித்து ரைக்கிறவுண் மை

உண்மையிது சாண்: ஒளியிருந்த வீடதுகாண்; 82
உண்மை சிவனிருக்கும் ஊருகாண்;—உண்மை
கருமை ஒளியேழ் கதியுள் பதங்கள்
மருவுதங்கி நீ வருந்து மாறு.

வருந்தும் பொழுதுகாண் மாயையாய் நெஞ்சே! 83
வருந்தும் குணமாக வந்து—வருந்தும்
இருவினைத்தொ டக்கறும் ஏழ்வகைப்பி றப்பாம்
கருமலத்தி ருக்கறுங் காண்.

காண்மனமே! சத்திசிவம் ஒன்றான காரணத்தை; 84
காண்மனமே மாலயனுங் காணரிதை;—காண் மனமே!
செம்பொன்னி னம்பலத்துள் சேருஞ் செஞ் சொல்லென்றும்,
அம்பலத்தில் ஆடுநடனம்.

நடனமது பார்மனமே! நயனத் திடையே 85
நடனமது நாலாம் பதங்காண்—நடனம்
பதிமதிவித் தாய்மனமே! பலகதிவித் தாயெனவே
அதிவிதசித் தாந்தமா டும்

ஆடும் பதிமனமே! அம்பலத்தைச் சுட்டுநடம் 86
ஆடும் பரமகுரு ஆனந்தம்—ஆடுகின்ற
கூத்தனைக் கூற்றிற்ற கூத்தபிரா னையகத்துப்
[illegible] சித்தம்வைத்து நில்.

87

நில்லு நிலவறமாய் நேசமுடனேபதியில்
நில்லு பிறவியற நீ நெஞ்சே;—நில்லு
கனல்மதியும் கார்மிடறும் கதிரும் மதியும்
புனலொடுசெஞ் சடையும்போற்றி.

88

போற்றித் தினமனமே! பொல்லாக் குலங்கள் விட்டுக்
காற்றங் கனலுங் கருத்தொன்ருய்ப்—பார்த்தறிவால்
சுத்தமலப் பித்தையற்றுச் சுற்றறழி சுற்றிலுற்றுச்
சத்தமறித் துற்றதிலே தங்கு.

89

தங்குநீ சென்று சதாசிவத்தி லேமனமே!
மங்குங் கருக்குழிக்குள் வாராமல்—தங்கும்
கருவும் புனலும் கதியும் கெதியும்
விதியும் திருத்தான வெளி.

90

வெளியில் வெளியாகி விண்ணவன் ருனுய்
வெளியி லொளியா யிருக்க—வெளியிற்
கரியுரித்துப் போர்த்தவனைக் கார்மதிசென் ருனைக்
கருவறுத்துப் பார்த்தலே காண்.

91

காணு மனமே! கரிகா லனைவதைத்துக்
காணு மூலகமெல்லாம் காணுருவாய்த்—தாணு
மனவிரக மானபுலி மன்றுள நடனப்
பணவரவின் உற்றபா தம்.

92

பாதத்தான் அஞ்செழுத் தானபர மன்சிங்க
நாதத்தா னென்று நெஞ்சே! நன்ருகப்—போதத்தான்
ஆரணத்தி னே. டைந் தண்டமெல்லாம் சுட்டதிரு
நீறணிந்து கொண்டிருநித் தம்.

93

நித்தனுய் நிர்மலனுய் நின்றுலகம் மூன்றுக்கும்
கர்த்தனுய் அஞ்செழுத்தின் காரணமாய்ப்—பெற்ற
குருவன்றிற் பாதங் குளிர நினைநீ
தருமதுபற் ருமனமே தான்.

94

தானவனு காவிட்டால் சண்டாள னிற்றடிவான்
தானவனு மங்கை தரிசகொட்டான்—மானுர்
கலங்கும கலவிக் கருத்திற்ருல் தான்கொடுப்பான்
இலங்கும் அடிதேர்நெஞ் சேசே!

95

செஞ்செ! உனக்கு நிலவறமாய்ச் சொன்ன வெலாம்
எஞ்சாவென் சொல்லேன் நிகழாதே;—நெஞ்சே!
கருத்திச்சை தள்ளிச் கருதேன்று செப்பின்
கருத்திச்சை தள்ளுகருத் துள்.

உள்ளிருந்து நெஞ்சே! உலவுஞ் சிவகுருவை
வெள்ளெருக்கின் பூச்சூடும் வேணியனை—உள்ளே 96
மன முருகப் பார்த்தால மலைசிலையாகச் சென்றால்
உனதறிவால் பார்த்துநீ ஓது.

ஓதி! நெஞ்சே! கேள்; ஓரெழுத்து மந்திரத்தால்
ஆதியாய் எங்கும் அமர்ந்தானை—ஓதில் 97
கடிய மிடியுப் கடிய பிணியும்
கடியவணு காமல்காக் கும்.

காக்குந்தினமே கடிய பிறப்பறுத்துக்
காக்கும் பலபிணிநோய் காட்டாமல்—நோக்குமந்தி 98
வந்து பகல்வெளியில் வாராது மன்மதனை
உந்து மதையுணர்ந்தில் வாழ்.

வாழுநீ நெஞ்சே! மயங்கித் திரியாதே
ஏழெழுத்துக் கப்பா லிருப்பானை—ஏழை 99
வருத்தந்தீர்த் தன்பன் மன்மதனில் தங்கு
பருத்தரத்தி னத்தைப் பணி.

பணிந்து துதிமனமே! பல்லுயிர்கட் கெல்லாம் 100
அணுவிலணு வாங்கியிருந் தானைத்—துணிவாய்ப்
பிறவா திருக்கவும் பேரின்ப வாழ்வைத்
திறமாக நம்பிச் செலுத்து.





## நூல்: முப்பத்தாறு

# காயக் கப்பல்

ஏலேலோ ஏகரதம் சர்வரதம்
பிரமரதம் ஏலேலோ ஏலலிலோ.

பஞ்சபூதப்பலகை கப்பலாய்ச்சேர்த்து
பாங்கான ஓங்குமரம் பாய்மரம் கட்டி
நெஞ்சு மனப்புத்தி ஆங்காரஞ்சித்தம்
மானாபிமானங் கயிருகச் சோத்து

ஐந்தெழுத்தைக் கட்டிசாக்காகயேற்றி
ஐம்புலன் தன்னிலே சுக்கானிறுத்தி
நெஞ்சுகடாட்சத்தால் சீனிப்பாய் தூக்கி-
சிவனுடைய திருப்பொருளை சிந்தையில் நினைந்து

தஞ்சலான வெள்ளத்தில் தானே அகண்டரதம் போகுதடா-
ஏலேலோஏலேலோ.

களவையுங்கேள்வையுந் தள்ளுடா தள்ளு-
கருணைக்கடலிலே தள்ளுடா கப்பல்

திற்குணந்தன்னிலே தள்ளுடா தள்ளு-
திறைந்த பரிபூரணத்தால் தள்ளுடா கப்பல்
மூக்கணைமூன்றையுந் தள்ளுடா தள்ளு-
முப்பாழுசுகப்பாலே தள்ளுடா கப்பல்

திக்குதிசையெங்கும் தள்ளுடா தள்ளு-
திருமந்திரஞ்சொல்லி தள்ளுடா கப்பல்
பக்சமுடன் கீழ்மேலும் தள்ளுடா தள்ளு-
பரவெளிக்கப்பாலே போகுதடா கப்பல் ஏலேலோ [ஏலேலோ]

தந்தை தாய் சுற்றமும் சகலமுமறந்து-
தாரம் சகோதரம் தானதும் மறநது
பந்தமும் நேசமும் பாசமும்மறந்து-
பதினாலு லோகமும் தனையும்மறந்து

இந்திரியர்கள் இரட்சித்த கப்பலிலேறி-
ஏகாந்தமான தொரு கடலிலே தள்ளி
அந்திரமானவெளி அருளானந்த வெள்ளத்தில்-
அழுந்துதையோகப்பல் ஏலேலோ ஏலேலோ.

—முற்றிற்று—



# பொருள் அகராதி

(அருஞ்சொற்கள், தத்துவ பதங்கள், தொகை முதலான வற்றின் பொருள் விளக்கங்கள் அகர வரிசையில் தரப்பட்டுள் ளன. இவை தவிர இப்புத்தகத்திலுள்ள ஞானசர நூல், குரு ஞானசம்பந்த சுவாமிகளின் சிவபோக சாரம், அருணாசல குரு வின் நிஜானந்த போதம் முதலியனவற்றிலும் தத்துவ விளக்கங் களைப் படித்துணரலாம்.)

அகக் கரணம்—மனம் [காண்க: அந்தக் கரணங்கள்]

அகக் கூத்து (2)—சாந்திக் கூத்து, வினோதக் கூத்து.

அகச் சமயப்—உட் சமயம்; சைவத் தின் உட்பிரிவுகள் ஆறு: அவை பாஷாண வாதம்; பேதவாதம்; சிவசமய வாதம்; சிவசத்துவிதம் எனவும், வேறு சிலர் அவை சைவம், பாசுபதம், மாவிரதம், காளாமுகம், வாமம், வைரம் எனவும் கூறுவர்.

அகப் பகை 6—காமம்; குரோதம் உலோபம்; மோகம்; மதம், மாற் சரியம்.

அகப் புறச் சமயம் 6—ஐக்கிய வாத சைவம், பாசு பதம், மாவி சதம், காபாலம், வாமம், வைர வம்.

அகப் பேய்—மனம் எனும் பேய்.

அகம் பிரமன்—நானே பிரமம்.

அகிதம்-நன்மையில்லாமை, தீமை

அகிர்த்தியப்—தகாத செய்கை.

அக்கமணி: அக்க மாலை—உருத்தி ராட்ச மாலை.

அக்கினி 3—ஆகவனீயம்; காருக பத்தியம்; தாட்சணக்கினி.

அக்கு—எலும்பு; கண்.

அங்கி—அக்கினி சட்டை.

அங்கிசம்—அமிசம்

அங்குளத்து—தோன்றி.

அங்கை-அழகிய கை, உள்ளங்கை.

அசும்பு—கசைவு, கசிவு

அசரம்-அசைவில்லாதது; தாவரம்.

அசவை—அசுபா மந்திரம்

அஷ்ட கஜங்கள்—ஐராவதம், புண் டரீகம்; வாமனம்; குமுதம், அஞ் சனம், புஷ்பதந்தம், சார்வபௌமம், சுப்ரதீபம் எனும் எட்டு ஆண் யானைகள். அப்பிரமை, கபிலை, பிங்களை, அனுபமை, தாமிர பருணி, சுதந்தி அஞ் சனை அஞ்சாவதி என்னும் எட்டு பெண் யானைகள். இவை அஷ்ட திக்கு யானைகள் எனக் கூறுவர்.

அஷ்ட சித்திகள் பெற்ற பதினெண் சித்தர்கள்-1 அகத்தியர்: 2 போ கர்; 3 கைலாயநாதர்; 4. கோ ரக்கர்; 5. திருமூலர்; 6. சட்டை முனி; 7 கொங்கணர்; 8. கன் கணர்; 9. இடைக் காடர்; 10. நந்தீஸ்வரர்; 11. புண்ணாக் கீசர்; 12 உரோமரிஷி;13. மச்ச முனி; 14. கூர்மமுனி; 15. சமல முனி; 16. வாசமுனி; 17. பிரம முனி; 18. சுந்தரானந்தர் இவர் களைத் தவிர, கருவூரார், புலஸ் தியர்; புசுண்டர்; இராமதேவர்; தன் வந்திரி; கபிலர் முதலானோ ரையும் அட்ட சித்திகள் பெற்ற தாகக் கூறுவார்கள்.

அஷ்டதிக்குப் பாலகர்—இந்திரன் அக்கினி, யமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன்.

அஷ்டமா நாகங்கள்—காண்க எட்டு நாகம்.

அஷ்டாங்க யோகம்—இயமம், நியமம், ஆதனம், தாரணம்,

பிராணயாமம், பிரத்தியாகாரம்: தியானம்: சமாதி.
அஞ்சக்கரம்—பஞ்சாக்ஷரம் [விளக்கம் பஞ்சாக்ஷரம் என்னும் தலைப்பின் கீழ் காண்க.]
அஞ்செழுத்து—சிவாயநம.
அடலை—சாம்பல், நீறு, துன்பம்.
அட்டகசங்கள்—திக்குயானைகள். [காண்க: அஷ்டகஜங்கள்.]
அட்ட சித்தி [அஷ்டமா சித்திகள்]-எட்டு வகைப் பெரும் பேறுகள். 1. அணிமா, 2. மகிமா 3. இலகிமா, 4, கரிமா, 5. பிராப்தி 6. வசித்துவம், 7, பிராகாமியம், 8. ஈசத்துவம். [இவற்றின் விளக்கங்களை அவ்வவற்றின் தலைப்பின் கீழ் காண்க.]
அட்ட மூர்த்தம்—பூமி, நீர், தேயு, வாயு, ஆகாயம், சூரியன். சந்திரன். ஆன்மா.
அட்டாங்க யோகம்—[காண்க: அஷ்டாங்க யோகம்.]
அணிமா—அணுவைப் போலச் சிறிதாதல். [நுண்மை]
அண்டர்கோன்—இறைவன்.
அதர்—தலைப் பொடுகு, சக்கை.;
அதள்—தோல்; மரப்பட்டை,
அதிட்டானம்—நிலைக்களம்.
அத்தம்—பொருள்
அத்தன்—பிதா, கடவுள். உயர்ந்தோன்,
அத்துவிதம்—இரண்டறக் கலந்தது. ஜீவாத்மாவும் பரமாத்மாவும் ஒன்றெனல்.
அந்தக் கரணம்—மனம். புத்தி' அகங்காரம். [இம்மூன்றோடு சித்தம் என்பதனையும் கூட்டி நான்கு எனக் கொள்வதும் உண்டு]
அப்பிட்ட வேணியன்—கங்கை தங்கிய சடையுடைய பெருமானன சிவன்
அப்பு—நீர்
அப்புப்பிறை—மணி பூரகம்
அமரி—சிறுநீர்
அமுரி—சிறுநீர் உப்பு
அமலன்—கடவுள், குற்றமற்றவன்
அம்பு—நீர்; பாணம்; மேகம்
அம்புயன்—பிரமன்
அம்போருகம்—தாமரை மலர்
அயன்—பிரமன், சிவன்
அரணம்—அரண், கோட்டை
அரன்—சிவன்
அருக்கன்—சூரியன்
அருந்தாமுலை—உண்ணமுலை
அருவ வடிவம நான்கு—சிவம், சத்தி. விந்து, நாதம்,
அலகிடுதல்—பெருக்குதல், கணித்தல், சீ பிரித்தல்
அலகு—அளவு; கொதுகு
அலகை—பேய், கற்றாழை
அலகைத் தேர் — பேய்த்தேர், கானல் நீர்
அல்—இருள், மயக்கம்
அல்குல்—பெண்குறி
அல்குற்பை—கருப்பை
அவத்தை இரண்டு—கேவலாவத்தை: சகளாவத்தை
அவத்தைகள்-ஐந்து—சாக்கிரம்: சொப்பனம்; சுழுத்தி, துரியம்; துரியாதீதம்
அவஸ்தை ஏழு—கர்ப்பாவஸ்தை; ஜன்மாவஸ்தை; பாலியா வஸ்தை யௌவனவஸ்தை; ஜராவஸ்தை; மரணவஸ்தை; நரகாவஸ்தை.
அவம்—வீண், தீமை
அவ்வெழுத்து—ஆன்ம எழுத்து
அழற்சி—எரிச்சல்
அழுங்கினை— அலைந்தாய். துன்புற்றாய்;
அழுந்தகளை—ஆழ்ந்தாய்
அளைதல்—கலத்தல், அனுபவித்தல் குழைதல்
அறுகு—புல்
அறுபது பேர்—அறுபது தத்துவங்கள்
அனன்னியம்—வேறு அல்லாத் தன்மை
அனாகதம்—(இருதயம்) மணிபூரகத்துக்கு மேல் இருதய வெளியில்

12 இதழ் தாமரை போல இருக்கும் சக்கரம்

அநாதி கேவலம்— படைப்பு முன் தனி நிலை

அணு மூன்று—அணு, பரமாணு, இலேசம்

அனுராக மயக்கம்—காம மயக்கம்

அனுபூதி—மெய்யறிவு

ஆகம்—உடம்பு, மனம், மார்பு.

ஆகாமியம்—வரும் கருமம்; இந்தப் பிறவியில் செய்யும் புண்ணிய பாவங்கள்.

ஆக்கை—உடம்பு, கழிகளைக் கட்டும் கயிறு.

ஆஞ்ஞை— ஆக்கினை [நெற்றி]: இரண்டு புருவங்களின் மத்தியில் இருக்கும் இரண்டு இதழ்தாமரை போன்ற சக்கரம்

ஆசம்—சிரிப்பு. இருக்கை

ஆசயம்—உடலின் உட்பை, உறைவிடம்

ஆசுசம்—அழுக்காறு. தீட்டு

ஆசைகள் —மூன்று: 1. மண்ணாசை 2. பெண்ணாசை; 3. பொன்னாசை.

ஆதாரங்கள் ஆறு —மூலாதாரம் (குதம்); 2. சுவாதிட்டானம் (குய்யம்); 3. அநாகதம் [இதயம்] 4. மணிபூரகம் (நாபி): 5. விசுத்தி [அடி நா]; 6 ஆக்கினை [நெற்றி] (இவற்றின் விளக்கங்களை அவ்வவ் தலைப்பின் கீழ் காண்க.)

ஆதாரஸ்தலம்—ஆறு: 1 [மூலாதாரம்]—திருவாரூர்; 2 [சுவாதிட்டானம்]— திருவானைக்கா; 3. [மணிபூரகம்]—திருவண்ணாமலை; 4. [அநாகதம்]—சிதம்பரம்; 5. [விசுத்தி]— திருக்காளத்தி; 6. [ஆக்கினை]—காசி.

ஆதார தேவதைகள் — ஆறு, 1 [மூலாதாரம்]—விநாயகர்: 2. [சுவாதிட்டானம்]— பிரமன் 3. [மணிபூரகம்]—விஷ்ணு 4. [அநாகதம்] — ருத்திரன்; 5. [விசுத்தி]—மகேசுவரன்; 6. [ஆக்கினை]—சதாசிவன்

ஆதார மூலம்—மூலாதாரம். [அத்தலைப்பின் கீழ் காண்க]

ஆத்தும தத்துவங்கள்—ஞானேந்திரியம் கன்மேந்திரியம். அந்தக்கரணம், தன் மாத்திரை, பூதம். (காண்க; ஆன்ம தத்துவங்கள்.)

ஆரியன்— ஆசிரியன், குரு, பூசிக்கத் தக்கவன்

ஆலவாய் —தென்மதுரை

ஆலன்—ஆலவன், விஷ்ணு

ஆறு ஆதாரங்கள் —[காண்க: ஆதாரங்கள் ஆறு.]

ஆனனம்—முகம், தேவதாரு

ஆன்ம தத்துவம் 24— பிருதிவி, அப்பு; தேயு: வாயு; ஆகாயம், மெய், வாய்; கண், மூக்கு: செவி; சத்தம், பரிசம், உருவம், ரசம் கந்தம், மனம்; புத்தி; சித்தம்' அகங்காரம் வாக்கு பாதம் பாணி, பாயு, உபத்தம்

ஆன்மா வகை மூன்று—விஞ்ஞான கலர்; பிரளயா கலர்; சகலர்.

இகல்—பகை, வலி, மாறுபாடு

இச்சா ஞானக்கிரியை— விழைவு. அறிவு. செயல்.

இடும்பை—தீமை. துன்பம். அச்சம்

இடைகலை—சந்திர கலை; இடமூக்கு மூச்சு

இடைகலை பிங்கலை—சந்திர கலை சூரிய கலை (இடமூக்கு மூச்சு; வலமூக்கு மூச்சு.)

இந்தனம்—விறகு. வாசனைப் புகை

இந்தியம்—இந்திரியம்

இந்திர சாபம் —வானவில்

இந்திரிய கோசரம் — புலனுக்கு எட்டியது

இந்திரியம்—சுக்கிலம். பொறி

இந்திரிய வகை இரண்டு—ஞானேந்திரியம். கன்மேந்திரியம்.

இந்து—சந்திரன், எட்டி

இமிழ்தல்— ஒலித்தல், ஊதுதல்

இராஜச குண விருத்தி எட்டு—யான் என தென்னும் செருக்கு. வீரம். பெருமுயற்சி. கொடுமை, வஞ்சகம், [illegible] இரக்கமின்மை, போகம், இடம்பம்.

இராசதகுணம் — மன வூக்கம், வீரம், ஞானம், தவம், தருமம், தானம் கல்வி, கேள்வி
இருமை—இம்மை, மறுமை
இருவினை— நல்வினை தீவினைகள் (புண்ணியம், பாவம்)
இருவினைக் கூடு—இரு வினைக்கு உறையுள்ளாக இருக்கும் உடம்பு
இரேசகம்—உள்ளிழுத்த காற்றை [வாயுவை] வெளி விடுதல்
இலகிமா—காற்றைப் போல் இலேசாதல் [மென்மை]
இலிங்கம் ஐந்து—பிருதவி லிங்கம் காஞ்சியில்; அப்பு லிங்கம் திருவானைக்காவில். தேயுலிங்கம் திருவண்ணாமலையில்: வாயுலிங்கம் ஸ்ரீகாளத்தயில்; ஆகாயலிங்கம், சிதம்பரத்தில்; இவையே பஞ்சபூத வடிவங்களான பஞ்சலிங்கம்
இவறுதல்— ஆசையுறுதல், உலோபம் கொள்ளுதல்
இறைவனின் ஐந்தொழில்கள்— சிருஷ்டி திதி சங்காரம், திரோபவம், அனுக்கிரகம் இவை தமிழில் முறையே படைத்தல், காத்தல், அழித்தல் மறைத்தல், அருளல் எனப்படும்.
இனக்கரணம்— அகக் கரணங்களுக்கு இனமான கை கால் போன்ற உறுப்புகள்.
இன்பு—இன்பம், விருப்பம்
ஈசத்துவம்— விரும்பியதை யெல்லாம் செய்து முடித்து அனுபவித்தல் [ஆட்சியுறுதல்]
ஈசானன்—துயக்கம்
ஈசுரன் முகம் ஐந்து—ஈசானம். தற்புருடம்: அகோரம்: வாமம்] சத்தியோ சாதம்

உகிர்—நகம்
உச்சிவெளி—சிதாகாசம்
உஞற்றுதல்—செய்தல், முயலுதல், தூண்டுதல்
உடக்கு—தத்துவம்
உடுபதி—சந்திரன
உட்பகை ஆறு—காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மாற்சரியம் இவை தமிழில் முறையே அவா, வெகுளி, இவறல், மயக்கம் செருக்கு, பொறாமை எனப்படும்.
உதகம்—நீர், பூமி
உதரம்—வயிறு; கருப்பம்
உத்தியம்—யாக வகை.
உப்பிட்ட பாண்டம்—உடம்பு
உரகம்—நாகம்
உருவுடம்பு—தூல சரீரம்
உழுவை—புலி; மீன்வகை
உறக்கு—உறக்கம்
உன்மாதம்—மயக்கம்
ஊழ்வகை மூன்று —பிராரப்தம் ஸஞ்சிதம், ஆகாமியம். [காண்க, கன்மங்கள்]
ஊன்—உடல் மாமிசம், கொழுப்பு
எட்டாப் பழம்பதி—சிவபதம்
எட்டு நாகம்—வாசுகி, தக்கன், அனந்தன், சங்கபாலன், குளிகன், பதுமன், மகாபதுமன். கார்க்கோடகன் என்னும் அஷ்டமா நாகங்கள்.

எருவாய்—மலத்துவாரம்.
எழுவகைத் தோற்றம்— தேவர், மக்கள், விலங்கு, பறவை, ஊர்வன, நீர் வாழ்வன, தாவரம் ஆகிய எழுவகைப் பிறவிகள்.
ஏகாந்தம்—தனிமை, தனியிடம்
ஏஷணை மூன்று—அர்த்த ஏஷணை; புத்திர ஏஷணை; லோக ஏஷணை.
ஏடணை—ஆசை; விருப்பம்.
ஏடு—பூ இதழ், பனையோலை, உடல்
ஐ—ஐயம், கோழை
ஐங்கரன்—கணபதி
ஐம்புலன்—சுவை; ஒளி; ஊறு; ஓசை; நாற்றம், [சுவைத்தல், பார்த்தல்; ஸ்பரிசித்தல்; கேட்டல்; முகர்தல்.]
ஐம்பூதகாரியம் 25 [பிருதிவியினால் தோல், எலும்பு, நரம்பு, தசை, மயிர், [அப்புவினால்] நீர், உதிரம், பசசை, மூளை சுக்கிலம்; [தேயுவினால்] ஆகாரம், நித்திரை, பயம், மைதுனம், சோம்பல்;
[வாயுவினால்] ஓடல், நடத்தல் நிற்றல், இருத்தல்

இடத்தல்; (ஆகாயத்தினல்) குரோதம், கோடம், மோகம், மதம், மாற்சரியம்,
ஐம்பூதம்— ஐம்பெரும்பூதம் நிலம்; நீர்; தீ; காற்று; விசும்பு [பிருதிவி; அப்பு; தேயு; வாயு; ஆகாயம்]
ஐம் பொறிகள்— பஞ்சேந்திரியங்கள் எனும் தலைப்பின் கீழ் காண்க
ஐம்மலம்—காண்க: மலம்
ஐவர்—ஐம்பொறிகள்
ஒருட்பாடு—ஒன்றி நிற்றல்
ஒக்கம்—உயர்ச்சி, பெருக்கம்,
ஓகை—மகிழ்தல்
ஓங்காரம்— பிரணவநாதம், ஓம்.
ஒம்பிலை—பாதுகாத்தாய். வளர்த்தாய்
கடிநடம்—பெண்குறி
கடும்பு—சுற்றம், சும்மாடு
கடுவெளி—பிரமம்
கண்ணுதலோன்— நெற்றிக் கண் உளள சிவன்.
கண்ணேறு—திருஷ்டி தோஷம்.
கமடம்— ஆமை
கமலை—திருவாரூர், இலக்குமி.
கரணம் நான்கு—மனம், புத்தி, சித்தம், அகங்காரம்;
கரிமா—பொன் போலக்கனமாதல். [விண்டன்மை]
கல்லாவின் பால்—ஆத்மா எனும் பசுவின் ஞானம் எனும் பால்.
கமு—கமுகு, சமுமரம்
கற்பம்—ஊழிக்காலம், மூப்பு நீக்கி ஆயுளை நீடிக்கச் செய்யும் மருந்து.
கன்மங்கள்— ஆன்மாக்கள் மனம் வாக்குச் காயம் என்னும் மூன்றினுலே செய்த புண்ணிய பாவங்கள். இவை எடுத்த பிறப்பிலே செய்யப்பட்ட போது ஆகாமியம் [நிகழ் வினை] எனப் பெயர் பெறும் பிறவிதோறும் இவ்வாறு ஈட்டப்பட்டுப் பக்குவமடையும் வரையில் புத்தி தத்துவத்தில் [illegible] மாயையிலே கிடக்கும்போது, சஞ்சிதம்(தொகை வினை அல்லது இருப்பு வினை) எனப் பெயர் பெறும். இவ்வாறு சஞ்சித கன்மங்களுக்குள்ளே பக்குவப் பட்டவை, மேல் எடுக்கும் உடலையும் அதன் மூலம் அனுபவிக்கப்படும் இன்ப துன்பங்களையும் தந்து பலன் விளைவிக்கிறபோது பிராரத்தம் [ஊவக்க வினை அல்லது நுகர் வினை] எனப் பெயர் பெறும்.
கன்னி வனம்—மதுரை மா நகரம்
காசை—நாணல் காயாமரம்.
காஞ்சிரங்காய்—எட்டிக்காய்
காட்டம்—விறகு. வெண்கலம்.
காண்டம்—உப்புநீர், கோல்
காமியம்— ஆசை, ஒன்றை வேண்டிச் செய்யும் பூசை, கன்ம மலம்
காயம்—உடம்பு. ஆகாயம்
காரண தன் மாத்திரைகள் ஐந்து—சத்தம், ஸ்பரிசம், ரூபம்; ரசம்; கந்தம்
கால காலன்—சிவபெருமான்
காலி—பசு, பசுக்கூட்டம்.
கிரியை—கடவுளை ஆகம விதிப்படி வழிப்படல் [சிவலிங்கப் பெருமானை அகத்தும் புறத்தும் பூஜித்தல்]
குக்குடம்—கோழி
குடிலை—சுத்த மாயை, பிரணவம், குடிசை
குடோரி—வெங்காரம், வெள்ளைப் பாஷாணம்.
குணக் கெடுத்தல்—கோணலை நிமிர்த்துதல்.
குண்டலி— மூலாதாரம், நாபிஸ்தானம், ஒரு நாடி.
குதம்—நீர்கழிவாயில்.
குத்திரம்— வஞ்சகம் இழிவு
கும்பகம்—வாயுவை உள்ளே அடக்குதல்
குயம்—மூலை, இளமை, தர்ப்பை
குய்யம்—மலங் கழி வாயில்.
குரம்பை—உடல், குடில், கூடு, முட்டை.
குரு [illegible] அபிஷேகம்,
குருமூர்த்தம்—தெய்வம் குருவாக வருவது

குருளை—குட்டி
குலாம—உலோபிகள், கீழோர், அடிமைகள்.
குறங்கு—தொடை
குறடா—சவுக்கு
கூதறை—முறைமையில்லாதவன், இழிவானது
கூத்தன்—உயிர், சிவன்
கோசம் ஐந்து—அன்னமயம், பிராணமயம, மனோமயம், விஞ்ஞானமயம், ஆனந்தமயம், இவை தமிழில் முறையே உணவுடம்பு, காற்றுவுடம்பு, மனவுடம்பு, அறிவுடம்பு இன்பவுடம்பு என ஐந்து உடம்புகள் எனப்படும்.
கொப்பம்—யானையைப் பிடிக்க வெட்டப்படும் பெருங்குழி.
கோரணி—கோளாறு, ஹாஸ்யம்
சகத்திரம்—ஆயிரம்.
சகலர்—ஆணவம், கன்மம், மாயை ஆகிய மும்மலமுடைய ஆன்மாக்கள்.
சகளம்—உருவம்,
சக்திகள்—இச்சா சக்தி, கிரியா சக்தி, ஞான சக்தி, டரிக்கிரக சக்தி, திரோதான சக்தி, சிற்சக்தி. இவை முறையே விழைவாற்றல், செயலாற்றல், அறிவாற்றல், வைப்பாற்றல் மறைப்பாற்றல் அறிவாற்றல் எனப்படும்.
சடக்கு—உடல், வேகம், சட்டை, செருக்கு
சட்சமய பேதங்கள்—ஆறு மத பேதங்கள்.
சட்சமயம்—ஆறு வகைச் சமயங்கள். [காணக: அகச் சமயங்கள்.]
சட்டகம்—உடம்பு, வடிவு, பிணம்,
சண்முகி முத்திரை—ஸ்நானம் செய்யும் முறைப்படி, ஆசமனம் பண்ணிச் சகளீகரணம் செய்து கொப்பூழளவு ஜலத்தில் இறங்கி, இரண்டு காதுகளையும் இரண்டு பெருவிரல்களினாலும், இரண்டு கண்களையும் இரண்டு சுட்டு விரல்களினாலும்; இரண்டு நாசிகளையும் இரண்டு நடு விரல்களினாலும் மூடிக் கொண்டு இறைவனைச் சிந்தித்து ஸ்நானம் செய்யும்போது அவ்வாறு கைவிரல்களினால் மூடுவது சண்முகி முத்திரை எனப் பெயர் பெறும்.
சத்தாது—இரசம், உதிரம், எலும்பு, தோல், இறைச்சி, மூளை, சுக்கிலம் என்னும் ஏழு வகைப் பொருள்கள்.
சத்தி மூன்று—இச்சா சத்தி; கிரியா சத்தி; ஞான சத்தி,
சத்துவ குணம்—ஞானம், அருள் தவம், மேன்மை, பொறுமை, வாய்மை, மோனம், ஐம்பொறி அடக்கல்.
சரியை—கடவுளைக் கோவிலில் வைத்து வழிபடுதல் [சிவாலயத்திற்கும் சிவனடியார்களுக்கும் தொண்டு புரிதல்.]
சர்ப்பணை—வஞ்சகம்.
சழக்கு—குற்றம்
சாகை—கிளை, பிரிவு. தங்குமிடம். சாதல்,
சாதம்—உண்மை, இன்மை, பிறப்பு, சுகம்.
சாத்திரம் ஆறு—வேதாந்தம், வைசேடிகம், பாட்டம்; பிரபாகரம், பூர்வ மீமாஞ்சை, உத்தர மீமாஞ்சை.
சாமீபம்—இறைவனை நெருங்கியிருக்கும் நிலை.
சாயுச்சியம்—இறைவனோடு இரண்டறக் கலத்தல்; ஜீவாத்மா பரமாத்மாவோடு ஐக்கியமாகும் நிலை; மோட்சம்.
சாரூபம—இறைவன் உருப் பெற்று விளங்கும் பேறு.
சாலோகம்—இறைவன் உலகத்தில் இருக்கும் பேறு [இறைவனோடு ஒரே இடத்தில் இருக்கும் நிலை.]
சாலிகை—பணப்பை.
சிங்கி—குறத்தி.
சிந்து—கழியும்.
சிக்ஷை—வேதங்களை உதாத்தம் அநுதாத்தம் முதலான சுரபேதவறு

பாடுகளினால் உச்சரிக்கும் முறைமையை அறிவிப்பது.
சிதாகாசம்—ஞானாகாசம்
சிந்தூரம்—நீறு, சிவப்பு, செஞ் சுண்ணம்.
சிம்புள்—சரவம் என்னும் பறவை
சிவசத்தி—அக்கினியோடு உஷ்ணம் போல் சிவத்தோடு பிரிவின்றி இருக்கும் வல்லமை.
சிவ சின்னம் இரண்டு—உருத்தி ராக்கம்; விபூதி.
சிவ தத்துவம் ஐந்து—சுத்த வித்தை, ஈச்சுரம், சாதாக்கியம், சத்தி, சிவம்.
சிவதீக்ஷை—சிவபெருமானை சிவா கம விதிப்படி வழிபடுவதற்கு யோக்கியதையை பிறப்பிப்பது.
சிவபெருமான் தொழில்கள் ஐந்து—படைத்தல், காத்தல்; அழித்தல்: மறைத்தல்; அருளல்.
சிவன் உருவங்கள் மூன்று—அருவம், அருவுருவம், உருவம்.
சிவன் தன்மைகள்—நித்தியர் (என்றும் உள்ளவர்); சருவ வியாபகர் [எங்கும் நிறைந்தவர்.] அநாதிமல முத்தர் [இயல்பாகவே பாசங்களின் நீங்கின வர்], சருவஞ்ஞர் [எல்லாம்; அறிபவர்]; சருவ கர்த்தா [எல்லாம்; செய்பவர்]; நித்தியானந்தர் [என்றும் ஆனந்த மயமானவர்]; சுவதந்திரர். [தன் வயமுள்ளவர்.]
சிவன் வகை மூன்று—அதிகார சிவன். போக சிவன்; இலய சிவன்.
சிவாகம பாதம் நான்கு—1 சரியா பாதம் [சமயாசாரம், சமய விசேட நிருவாண ஆசாரியா பிடேக விதிகள்]. 2. கிரியா பாதம் [மந்திரங்களின் உத்தாரம் சந்தியா வந்தனம், பூஜை.] ஜபம், ஹோமம், முதலியன. 3. யோக பாதம் [பிராணயாமம் முதலான யோக முறைகள்] 4. ஞான பாதம் [பதிபசு பாசம் இலக்கணம் பேசப்படும்.]
சிவாயம்—நமசிவாயம்.
சிவ்வெழுத்து—சிவவெழுத்து
சின்மய நோக்கு—ஞான நோக்கு
சின்மயம்—ஞான மயம்; அறிவு வடிவமான கடவுள் நிலை
சீவதேகம் மூன்று—தூலம்; சூக்குமம்; காரணம்.
சீவன் முக்தி—உயிரோடு வாழும் போதே உலகப் பற்றைக் கடந்து மோட்ச மடைதல்
சுகாதீதம்—இன்ப மயம்.
சுடர் மூன்று—சூரியன்; சந்திரன்; அக்கினி.
சுத்த வித்தை ஐந்து—வித்தை, சிவம், சத்தி. சக்கரம். கிரியை
சுவாதிட்டானம்—[குய்யம்] மூலாதாரத்திற்கும் நாபிக்கும் [கொப் பூழிற்கும்] நடுவே ஆறு இதழ் தாமரை போல இருக்கும் தானம்.
சுழி முனை—நடு நாடி.
சூதானம்—எச்சரிப்பு, சேமம்
செழுந்து—செழிப்பு
செறந்தான்—செறிந்தவன்.
சொடக்கு—கைநொடிப் பொழுது, சோம்பேறித்தனம்.
சோடகம்—பதினாறு
சோத்திரம்—செவி.
சோமன்—சந்திரன். சிவன்.
ஞாளி—நாய், கள்
ஞானம்—பதிபசு பாசம் என்னும் முப்பொருள்களின் இலக்கணங்களை அறிவிக்கும் ஞானநூல்களைக் கேட்டுச் சிந்தித்துத் தெளிந்து நிட்டை கூடல்.
ஞான வகை நான்கு—கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிட்டை கூடல்.
ஞெப்தி—நினைவு
ஞேயம்—அறியப்படும் பொருள், கடவுள்
தசநாடி—இடைகலை. பிங்கலை; சுழுமுனை; காந்தாரி, அத்தி சிங்குவை; சங்கினி; பூடா, குருகன்னி. அலம்புடை என்னும் பிராணவாயு இயங்கும் பத்து நாடிகள்.

தசவாயு—பிராணன், அபானனன், உதானன், வியானன், சமானன், நாகன், கூர்மன், கிருகரன் தேவதத்தன், தனஞ்செயன் என்னும் பத்து வாயுக்கள். இதை தமிழில் முறையே உயிர்க்காற்று மலக்காற்று, ஒலிக்காற்று, தொழிற்காற்று, நிரவுக்காற்று, தும்மற் காற்று, விழிக்காற்று, கொட்டாவிக் காற்று, இமைக் காற்று வீங்கற்காற்று எனபர்.

தத்துவங்கள் 96— ஆன்மதத்துவம் 24, நாடி 10, அவத்தை 5, மலம் 3, குணம் 3, மண்டலம் 3, பிணி 3, விகாரம் 8, ஆதாயம் 6, தாது 7, வாயு 10, கோசம் 5, வாயில் 9.

தண்டிகை—பல்லக்கு

தவிசு—ஆசனம், இருக்கை, பீடம்.

தற்பரம்—சுழிமுனை ஸ்தானம்.

தன் மாத்திரைகள்—ரசம், ரூபம், பரிசம், சத்தம், கந்தம், இவை தமிழில் முறையே சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என ஐந்து நுண்ணிய பொருட்கள் எனப்படும்.

தனுகரண புவன போகம்—தனு என்பது உடம்பு, கரணம் என்பது மனம் முதலான கருவி புவனம் என்பது உடம்புக்கு ஆதாரமாகிய உலகம், போகம் என்பது அனுபவிக்கப்படும் பொருள்.

தாமச குணம்—பெருண்டி, பெரும் உறக்கம், சோம்பல், நீதி பிறழ்தல், ஒழுக்கத் தவறு, வஞ்சகம், மறதி, கோபம், பொய்மை, காமம், கொலை

தாரகம்: ஆதாரம் பிரணவம்,

தாரணை: நினைவொழி நலம

தாரை—வழி, நீர் ஒழுக்கு.

தாலம்—பூமி

தானவர்—அசுரர், வித்தியாதரர்.

திரமா—என்று மிருப்போனே.

திரயம்—மூன்று.

திரி கரணம்-மனம், வாக்கு, காயம்.

திரிதோஷம்— வாதம், பித்தம், சிலேஷ்மம் [கபம்]

திரிமலம்—காண்க மலம்.

திருக்கப்—வளைவு, வஞ்சகம்:

திருக்கு—மயக்கம்

திரோதாயி— ஆணவம், கன்மம், மாயை என்னும் மும் மலங்களையும் தொழில் படுத்திப் பாகம் வருவிக்கும் சிவசக்தி.

திவாகரம்—ஒளி.

தீவகப்—மானைக் காட்டி மற்றொரு மானைப் பிடிப்பது போல் ஒரு பொருளை அதன் இனமான பொருளைக் கொண்டே பிடிக்கும் முறை.

துங்கப்-பெருமை, அகலம், வெற்றி

துரிசு—குற்றம், துன்பம்,

தெக்குதல்—கொள்ளுதல்

தேயு—தீ, மயக்கம்:

தொடக்கு—தீட்டு, கட்டு, பற்று.

தொண்ணூற்றறுவர்-தொண்ணூற்றாறு தத்துவங்கள். (காண்க; தத்துவங்கள் 96.)

தொழில் ஐந்து—தேவ, தானம், விசர்க்கம், ஆனந்தம், பயம்

தோஷம் மூன்று—வாதம் பித்தம், சிலேத்துமம்

தோற்றங்கள் ஏழு—[காண்க: ஏழு வகைத் தோற்றங்கள்.]

நசை—விரும்புதல், ஈரம், குற்றம், அன்பு.

நடலை-வருத்தல், வஞ்சனை, பொய்,

நடுவர்—யமன்,

நந்தாத— அழியாத.

நரலை—ஒலி, கடல், மதில் உறுப்பில் ஒன்று.

நறை—தேன், வாசனை, கள்.

நாடி—பிராண வாயு இயங்கும் பத்து நாடிகளாவன: இடைகலை, பிங்கலை, சுழுமுனை, காந்தாரி, அத்தி, சிங்குவை, அலம்புடை, புருடன், சங்கினி, குரு, ஒலி [தச நாடிகள் ]

நாதவிந்த—ஒலி, முதல்

நாலாம் பதம்-சிவசாயுச்சிய பதவி.

நாவி—நாபி கொப்பூழ்

நால்க்கமலம்—மணிபூரகம்.

நான்கு பதம்—சரியை கிரியை, யோகம், ஞானம்.

நான்கு பதம் பலன்கள்—சரியை

யினுல் அடையும் பலம் சிவசாலோக்கியம். கிரியையினுல் அடையும் பலம் சிவசாமீப்பியம்; யோகத்தினுல் அடையும் பலம் சிவசாரூபியம், [இவை மூன்றும் பதமுத்தி. ஞானத்தினுல் அடையும் பலம் சிவசாயுச்சியம் இது பரமமுத்தி

நான்கு வகைக் கரு—முட்டையிற் பிறப்பது அண்டசம், வியர்வையிற் பிறப்பது சுவேதசம், வித்து வேர் முதலியவற்றில் தோன்றுவது உற்பீசம், நீரிற் பிறப்பது சராயுசம்.

நிட்களம்—உருவம் அற்றது.

நிமலன்—இறைவன்.

நிராமயம்—நோயின்மை.

நெடியகம்—அகங்காரம்

நேதி—முறை.

பசை—அன்பு, ஈரம், சாரம்

பஞ்சாவஸ்தைகள்—சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம் துரியாதீதம். இவை தமிழில் முறையே நனவு, கனவு, உறக்கம், பேருறக்கம், உயிர்ப்படக்கம் எனப்படும்.

பஞ்ச கோசங்கள்—காண்க கோசங்கள்

பஞ்சபூதம்—மண்; நீர்; தீ; காற்று; ஆகாயம் [காண்க; ஐம்பூதகாரியங்கள்.]

பஞ்சரம்—கூடு; உடம்பு

பஞ்சரித்தல்—விரித்துப் பேசுதல்; கொஞ்சிப் பேசுதல்; கெஞ்சிக் கேட்டல்

பஞ்சசிவ தத்துவங்கள்—சுத்த வித்தை, ஈசுரம், சாதாக்கியம், சத்தி, சிவம், அகக்கரணம், இவை தமிழில் முறையே தூய நினைவு, தலைமை அருள் நிலை, அன்னை, அத்தன் உட்கருவிகள் என ஐந்து சிவ நிலைப் பொருள்கள் எனப்படும்.

பஞ்சாக்ஷரம்—சைவர்களால் இஷ்ட காம்ய சித்திகளை விரும்பியும் முக்தியை விரும்பியும் ஜெபிக்கப்படும் மகாமந்திரம், போக பஞ்சாக்ஷரம்: முக்தி பஞ்சாக்ஷரம்; ஸ்தூல பஞ்சாக்ஷரம்; சூட்சும பஞ்சாக்ஷரம் எனவும் இது பல வகைப்படும். இவற்றின் அக்ஷரங்களை மாறி ஜெபிப்பதால் பலன்கள் வேறுபடும். விரும்பும் பலன்களுக்கு ஏற்ப ஞானசிரியர்கள் கூறும் முறையில் மாறி ஜெபிக்க வேண்டும். இந்த மகா மந்திரத்தைப் பிரணவத்துடனும், பீஜாக்ஷரத்துடனும் சேர்த்தும் அதில்லாமலும் ஜெபிப்பதுண்டு.

பஞ்சஞானேந்திரியங்கள். தொக்கு சுங்குலவ, சட்சு, ஆக்கிராணம், சோத்திரம், இவை தமிழில் முறையே மெய், வாய், கண், மூக்கு, செவி என ஐம்பொறிகள் எனப்படும்.

பஞ்ச கன்மேந்திரியங்கள்: பாணி, பாதம், வாக்கு, பாயுரு, உபத்தம், இவை தமிழில் முறையே கை, கால், வாய், எருவாய், கருவாய் என மூன்று தொழிலுறுப்புக்கள் எனப்படும்.

பஞ்சாசயங்கள்—அமர்வாசயம், பகிர்வாசயம், சலவாசயம், மலவாசயம், இவை தமிழில் முறையே இரைக் குடல், செரிகுடல். நீர்க்குடல். மலக் குடல், வெண்ணீர்க் குடல் எனப்படும்.

படி—பூமி: முறைமை

படிறு—பொய்; களவு

படைத்தல்—ஆன்மாக்களுக்குத் தனுகரண புவன போகங்களை முதற்காரணத்தினின்றுதோற்றுவித்தல்

பட்டோலை—விடுக்கும் ஓலை

பணத்தி—ணிப் பெண்

பணிக்கன்—வைத்தியன்; உபாத்தியாயன்; நாவிதன்

பண்டி—வயிறு; வண்டி

பதணம்—மதிலுள் மேடை.

பதம்—[காண்க: நான்கு பதம்.]

பதவி நான்கு—சாலோகம், சாமீபம், சாரூபம், சாயுச்சியம். [காண்க: நான்கு பதம்

கள்.]

பதி, பசு, பாசம்—பதி என்பது சிவன்; பசு என்பது ஆன்மா; பாசம் என்பது ஆன்மாவைப் பந்தித்து நிற்கும் மலங்கள்,

பதினாலுலோகம்—பூலோகம்; சுவர் லோகம், அபர் லோகம், சன லோகம், தபோலோகம், மகா லோகம், சத்தியலோகம் எனும் மேல் லோகங்கள் ஏழும் அதலம் விதலம், சுதலம், ராததலம், மகாதலம் இராசாதலம், பாதாலம் எனும் கீழ் லோகங்கள் ஏழும் சேர்ந்து பதினாலு லோகங்களாகும்.

பதினெண் சித்தர்கள்— திருமூலர், இராமதேவர், கும்பமுனி, இடைக்காடர், சட்டைமுனி, குதம்பைச் சித்தர் கோரக்கர், வால்மீகி சுத்தானந்த தேவர், தன்வந்திரி கமலமுனி, போக நாதர். மச்சமுனி. கொங்கணர், பதஞ்சலி நந்திதேவர், போத குரு, பாம்பாட்டி

பத்தம்—கட்டு; குவியல்

பத்தியம்—பாட்டு; நன்மை.

பத்துத் திசை—எட்டுத் திசைகளும் ஆகாயமும் பூமியும்

பம்பை—முல்லைப்பறை

பவம்—பிறப்பு; பாவம்: உலகம்.

பவுரி—ஒருவிதக் கூத்து

பற்பம்— ஸ்பம்: தாமரை; நாள்.

பாசம்—ஆன்மாக்களைப் பந்தித்து நிற்பவைகள். பாசத்தை மலம் எனவும் கூறுவர். இதன் வகைகள்: ஆணவம், கன்மம், மாயை எனும் மும்மலங்கள். இம்மூன்றோடு மாயேயம். திரோதாயி என இரண்டையும் சேர்த்து பாசம் அல்லது மலம் ஐந்து எனக் கொள்வதும் உண்டு.

பாணன்—தையற்காரன்; பாட்டுப் பாடிப் புகழ்பவன்; வீணன்.

பாதம்— [காண்க: சிவாகம பாதம் ]

பாம்பு—[illegible], பரம்பு, பிறை

பாற்றுதல்— நீக்குதல்; ஓட்டுதல்,

பானு—சூரியன்

பிங்கலை— சூரியகலை, வலமூக்கு மூச்சு

பிணி மூன்று—வாதம், பித்தம், கபம்.

பிரஞ்ஞை—முன் நிகழ்ச்சியை அறியும் அறிவு.

பிரத்தியாகாரம்—ஐந்தவித்தல்.

பிராகாமியம்—கூடு விட்டுக் கூடு பாய்தல் [நிறைவுண்மை]

பிராப்தி— எல்லாவற்றையும் ஆளுதல் (விரும்பியதெய்தல்)

பிருதிவி—மண்; பூமி.

புங்கம்—உயர்ச்சி. மெல்லாடை, குவியல்

புரியட்டகாயம்—சூக்கும தேகம்

புலன் ஐந்து—சுத்தம், பரிசம் ரூபம். ரசம் கந்தம்.

புற்கலன்—உயிர்

பூதங்கள்—(காண்க: ஐம் பூதங்கள்.)

பூதி—திருநீறு, சிங்காரம். செல்வம்

பூதியம்—பஞ்ச பூதங்கள், உடல்

பூரகம்: மூச்சை உள்ளிழுத்தல்

பொதும்பு: பொந்து, குகை. குறுங்காடு

பொருள் மூன்று: பதி, பசு, பாசம்.

பொள்ளல்: தொளைத்தல், உள் வைரம் இல்லாதது.

பொறியிலி: புலன்களைக் கடந்த இறைவன்

போதம்: அறிவு. ஞானம்

மகத்தான வஸ்து: மகத்துவமான வஸ்துவையும் [மகத்துவமான பொருள்கள்; மேலுலகத்தில் உள்ள சிந்தாமணி, கற்பகம், காமதேனு ரம்பை.]

மகிமா: மேருவைப் போலப் பெரிதாதல், [பருமை]

மசகம்: கொசு நீர்த்துருத்தி

மஞ்சனம்: அபிஷேகம். முழுகல்

மண்டலங்கள் ஏழு: வாயு; வாருணம்; சந்திரன்; சூரியன்; நட்சத்திரம்; அக்கினி; திரிசங்கு.

மண்டலம் மூன்று: அக்கினி மண்டலம், ஆதித்த மண்டலம், சந்திர மண்டலம்.

